தமிழ் வெளியீட்டுக் கழக வரிசை எண்–139

ஆக்ஸ்ஃபோர்டின்

# இந்திய வரலாறு–III

(THE OXFORD HISTORY OF INDIA)

ஆசிரியர்
காலஞ்சென்ற வின்சென்ட் ஏ. ஸ்மித், சி.ஐ.இ.

மூன்றாம் பதிப்பு
பெர்சிவல் ஸ்பியரால் திருத்தியமைக்கப்பட்டது.

தமிழாக்கம்
க. த. திருநாவுக்கரசு, எம்.ஏ., எம்.லிட்.,
தமிழ்த் துணைப் பேராசிரியர்,
மாநிலக் கல்லூரி,
சென்னை.






தமிழ் வெளியீட்டுக் கழகம்
தமிழ்நாடு—அரசாங்கம்

First Edition—April 1967

B.T.P. No. 139



THE OXFORD HISTORY OF INDIA

VINCENT A. SMITH

*Translation*

K. D. THIRUNAVUKKARASU

**Price Rs. 10-50**

This translation of the Oxford History of India by Vincent A. Smith is published by arrangement with the Clarendon Press, Oxford.

*Printed by*

AVVAI ACHUKKOODAM
96, P. V. Koil St., Madras-13.

# அணிந்துரை

(திரு. இரா. நெடுஞ்செழியன், தமிழகக் கல்வியமைச்சர்)

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கி ஆறு ஆண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் பி.ஏ., வகுப்பு மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும் தமிழிலேயே கற்று வருகின்றனர். தொடக்கத்தில் இருந்த இடர்ப்பாடுகள் மெல்லமெல்ல மறைந்து வருகின்றன; நாடு முழுதும் பரந்துள்ள மாணவர்களின் ஆர்வம், 'தமிழிலேயே கற்பிப்போம்' என முன்வந்துள்ள கல்வி ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறைகளிலும் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித் தர முன்வந்த நூலாசிரியர்கள் தொண்டுணர்ச்சி, இவற்றின் காரணமாக இத் திட்டம் நம்மிடையே மகிழ்ச்சியும் மனநிறைவும் தரத்தக்க வகையில் நடைபெற்றுவருகிறது.

பல துறைகளில் பணிபுரியும் பேராசிரியர்கள் எத்தனையோ நெருக்கடிகளுக்கிடையே குறுகிய காலத்தில் அரிய முறையில் நூல்கள் எழுதித் தந்துள்ளனர்.

வரலாறு, அரசியல், உளவியல், பொருளாதாரம், புவியியல், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல், தத்துவம் ஆகிய பல துறைகளில் தனி நூல்கள், மொழி பெயர்ப்பு நூல்கள் என்ற இருவகையிலும் தமிழ் வெளியீட்டுக் கழகம் நூல்களை வெளியிட்டு வருகிறது.

இவற்றுள் ஒன்றுன 'ஆக்ஸ்ஃபோர்டின் இந்திய வரலாறு—III' என்ற இந்நூல் தமிழ் வெளியீட்டுக் கழகத்தின் 139ஆவது வெளியீடாகும். கல்லூரித் தமிழ்க் குழுவின் சார்பில் வெளியான 35 நூல்களையும் சேர்த்து இதுவரை 174 நூல்கள் வெளிவந்துள்ளன.

கணக்கிலடங்காத் தடைகளை எல்லாம் அகற்றித் தமிழன்னை கல்லூரிக் கலை மண்டபத்தில் கொலுவீற்றிருக்கிருள். எனவே, இவ் அன்னையை வாழ்த்துவோமாக! உழைப்பின் வாரா உறுதிகள் இல்லை; ஆதலின், உழைத்து வெற்றி காண்போம். தமிழைப் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெறவேண்டும்; அதுவே தமிழன்னையின் குறிக்கோளுமாகும். சென்னைப் பல்கலைக் கழகத்தின் பலவகை உதவிகளுக்கும் ஒத்துழைப்புக்கும் நம் மனம் கலந்த நன்றி உரித்தாகுக.

இரா. நெடுஞ்செழியன்

# படங்களின் அட்டவணை

## படங்கள்



## புகைப் படங்கள்

# தோற்றுவாய்

1757ஆம் ஆண்டு நடைபெற்ற பிளாசிப் போரிலிருந்து பிரிட்டிஷாரின் ஆட்சிக்காலம் இந்திய வரலாற்றில் தொடங்குவதாகக் கருதுவது வழக்கமாக இருந்து வருகிறது. ஆயினும், சிற்சில சமயங்களில் பிரிட்டிஷாரின் ஆட்சி பிளாசிப் போர் நிகழ்வதற்குப் பல ஆண்டுகளுக்கு முன்பே தொடங்குவதாகவும் சிலர் கூறுவர். அவர்கள் ஆஸ்திரிய அரசுரிமைப் போர் தொடங்கிய 1740ஆம் ஆண்டிலேயே பிரிட்டிஷாரின் ஆட்சி இந்திய மண்ணில் கால்கொள்ளத் தொடங்கியது என்று கருதுகின்றனர். இந்திய நாட்டில் ஆங்கிலேயர்களுக்கும் ஃபிரெஞ்சுக்காரர்களுக்கும் இடையே பேராதிக்கத்தைப் பெறுவதற்காகக் கடுமையான போராட்டத்தை ஆஸ்திரிய அரசுரிமைப் போர் தூண்டிவிட்டது. எனவே, அவர்கள் ஆஸ்திரிய அரசுரிமைப் போரின் தொடக்கம்தான் பிரிட்டிஷாரின் ஆட்சி இந்தியாவில் அரும்பத் தொடங்கிய காலம் என்று கருதுகின்றனர்போலும். மற்றும் சிலர் பானிப்பட்டுப் போர் நிகழ்ந்த 1761ஆம் ஆண்டில்தான் ஆங்கிலேயரின் ஆட்சி இந்தியாவில் தொடங்கியதாகக் கூறுவர். ஒழுங்குமுறைச் சட்டத்தின்படி (Regulating Act) புதிய கவர்னர் ஜெனரலாக வாரன் ஹேஸ்டிங்ஸ் கம்பெனியின் ஆட்சிப் பொறுப்பை ஏற்ற கி.பி. 1744ஆம் ஆண்டையே ஆங்கிலேய ஆட்சி இந்தியாவில் தோன்றத் தொடங்கிய காலமாக வேறு சிலர் கூறுவர். இந்தியாவில் உண்டான அரசியல் நிலைமாற்றுக் காலத்தை எவ்வாண்டிலேனும் தொடங்கியதாக நாம் குறிப்பிடலாம். ஆனால், அவ்வாறு குறிப்பிடப்படும் ஆண்டு அதைக் குறிப்பிடுவோருடைய விருப்பிற்கும் மனப்போக்கிற்கும் ஏற்ப அமைகிறது எனில், அது மிகையாகாது. ஏனென்றால், அக்காலத்தில் ஆங்கிலேயரின் ஆட்சி நன்கு வேரூன்றுவதற்கு உண்மையில் எண்பதாண்டுகள் தேவைப்பட்டன. எனவே, குறிப்பிட்ட ஓராண்டில்தான் ஆங்கிலேயரின் ஆட்சி தொடங்

கியது என்று அறுதியிட்டு உறுதியாகக் கூறுவதற்கு இல்லை. கி.பி. 1453ஆம் ஆண்டு கான்ஸ்டான்டிநோபிள் வீழ்ச்சியுற்றது. இந் நகரின் வீழ்ச்சி நாகரிகப் பண்பாட்டுத் துறையிலும், அறிவுத்துறையிலும் ஒரு மாபெரும் புரட்சியை உண்டாக்கியது என்று பதினைந்தாம் நூற்றாண்டில் ஐரோப்பாவில் வாழ்ந்த மக்கள் கருதினர். இதைப்போன்றே பிளாசிப் போர் நிகழ்ச்சி அக்காலத்து மக்களுக்கு ஓர் அரசியல் புரட்சியைத் தோற்றுவித்ததாகவே தோன்றியது. இப் போருக்குப் பிறகு சிறு பூசல்களிலிருந்து முக்கியமான மதிப்புடைய மாபெரு மாறுதல்கள் வேறுபாட்டை எளிதில் உணரத்தக்க வகையில் வளர்ச்சியுறலாயின. எனவே, மேற்கண்ட இரு ஆண்டுகளும் காலமெனும் அலைகடலில் எழுந்து மடியும் எண்ணற்ற அலைகளுள் சிறப்புமிக்க ஓரலையைக் குறிப்பிடுவதற்கு வசதியுடையதாகக் காணப்படுகிறது எனலாம். கி.பி. 1740ஆம் ஆண்டிற்கு முற்பட்ட காலத்தில் இந்திய அரசியல் பார்வையாளர் ஒருவர் முகலாயப் பேரரசின் அரசியலிலும், முகலாயர்களின் நிறையுறுப்பான மராட்டியர்களின் எழுச்சிமிக்க வீரச் செயல்களிலுமே ஈடுபட்டிருந்ததைக் காணுகின்றோம். வட இந்தியாவில் முகலாய—ஆஃப்கானிய—மராட்டியச் செயல்முறைகளிலும், தென்னிந்தியாவில் ஆங்கிலேய ஃபிரெஞ்சுப் போராட்டங்களிலும் அவ்வரசியல் பார்வையாளர் கி.பி. 1740ஆம் ஆண்டிற்கும் 1757ஆம் ஆண்டிற்கும் இடைப்பட்ட காலத்தில் அக்கறைகொண்டிருந்தமை இங்குக் குறிப்பிடத்தக்கதாகும். பிளாசிப் போருக்குப் பிறகும் அவ்வரசியல் பார்வையாளர் இந்தியாவில் பிரிட்டிஷ் பேரரசு கால்கொள்ளத் தொடங்குவதைக் கண்ணுற்றுவந்தார். கி.பி.1761ஆம் ஆண்டு (மூன்றாம்) பானிப்பட்டுப் போர் நடைபெற்றது. அவ்வாண்டிலேயே தென்னிந்தியாவில் ஃபிரெஞ்சுக்காரர்கள் ஆங்கிலேயர்களால் இறுதியாகத் தோற்கடிக்கப்பட்டனர். இவ்வரலாற்றுச் சிறப்புமிக்க போர் நிகழ்ச்சிகளுக்குப் பிற்பட்ட காலத்திலும் அவ்வரசியல் பார்வையாளர் ஆங்கிலேயப் பேரரசின் எழுச்சியைக் கூர்ந்து நோக்குவதில் தம் கருத்தைச் செலுத்திவந்தார். அதே சமயத்தில் அவர் மராட்டியரின் வீரதீரச் செயல்களையும், ஐதர் அலியின் அஞ்சா நெஞ்சத்தின் அரும் செயல்களையும் காணத் தவறவில்லை. இத்தகைய காலத்தில்தான் மக்களுடைய உள்ளங்களிலெல்லாம் வெறும் அரசியல் மாற்றத்தைப்பற்றி எண்ணும் எண்ணத்திற்கு மாறாக, அரசியல் புரட்சியைப்பற்றிய புத்தம் புதுக் கருத்துகள் பூத்துக் குலுங்கத் தொடங்கின.

இந்திய வரலாற்றில் பிரிட்டிஷாரின் ஆட்சிக்காலமாகிய இப் பகுதியில் எதிர்காலத்து நிகழ்ச்சிகளை அளவுகோலாகக் கொண்டு இறந்த காலத்தை மதிப்பிட்டுரைக்கும் தவற்றினைச் செய்யாமல் காக்க வேண்டியது நமது முக்கியக் கடமையாகும். எதிர்காலத்தின் விளைவுகளைக்கொண்டு கடந்த காலத்தைப்பற்றி விளக்கம் தருவது மாபெருந் தவறாகும். எனவே, அத்தகைய தவற்றினைச் செய்யாமல் தவிர்க்க வேண்டியது இன்றியமையாததாகும். கடந்த காலத்தில் நிகழ்ந்தவற்றை நாம் அழித்துவிட முடியாது. ஆனால், இவ்வாறு கூறுவதனால் இதைத் தவிர வேறொன்றும் நடந்திருக்க முடியாது என்பது கருத்தன்று; அல்லது தொடர்ந்து நிகழ்ந்த சில நிகழ்ச்சிகள்தாம் செயல்முறையில் நடைபெறுவதற்குச் சாத்தியமானவை என்பதும் பொருளன்று; அல்லது வரலாற்றுச் சக்திகளுக்கும் முக்கியத் தலைவர்களுக்கும் இடையே நிகழ்ந்த மோதல்களின் விளைவாக வெளிப்பட்ட நிகழ்ச்சிகளே நிகழக் கூடியவை அல்லது நிகழவேண்டியவை என்றும் நாம் உறுதியாகச் சொல்லுவதற்கில்லை. முகலாயப் பேரரசு இதற்கு முன்பே மரணப்படுக்கையில் உயிருக்காகப் போராடிக் கொண்டிருந்ததை நாம் தெளிவாகக் காணுகின்றோம். ஆனால், கி.பி. 1756–61ஆம் ஆண்டுகளுக்கு முற்பட்ட காலத்திய இந்தியப் பார்வையாளர்களுள் பெரும்பாலோருக்கு முகலாயப் பேரரசின் அழிவுக்காலம் நெருங்கிக்கொண்டிருப்பது புலனாகாமல்போயிற்று. மீர்சா நவாப்புகான் ஆட்சியின்கீழ் அப் பேரரசு அரைகுறையாகப் புத்துயிர்ப்புப் பெற்றமை, அது மரணத்தின் வாயிலை அடைந்துவிட்டது என்னும் உண்மையை உணரவொட்டாமல் மறைத்தது. மராட்டிய அரசியல் கூட்டிணைப்பு (Confederacy) கட்டாயம் சிதையப் போகிறது என்பதும், பிரிட்டிஷாரின் பேராதிக்கம் தவிர்க்க முடியாதது என்பதும் அவ்வரசியல் பார்வையாளருக்குத் தெளிவாகத் தோன்றவில்லை. பல்வேறு காரணக் கூறுகள் உள்ளடங்கி இருப்பதனால் வெளிப்படும் சக்தியின் போாற்றலை அக்காலத்திய மக்கள் அறியவில்லை. எனவே, எல்லா நிகழ்ச்சிகளும் தெளிவற்றனவாகவும் நம்பிக்கையற்றனவாகவும் அவர்களுக்குத் தோன்றியதோடு, எது வேண்டுமென்றாலும், எப்பொழுது வேண்டுமென்றாலும் திடீரென்று தோன்றலாம் என்றும் அவர்களுக்குத் தோன்றியது.

எனவே, ஐயப்பாட்டிற்குரியது என்று தெளிவாகத் தோன்றும் துறையில் பிரிட்டிஷாருக்கு நிலையான பெரு வெற்றியைத் தேடித்தந்த காரணங்கள் எவையென்பதை நாம்

ஆராய்ந்தறிய முயலுவது பயன்தரக்கூடியதாகும். ஆங்கிலேயர்கள் இந்தியாவில் பெற்ற வெற்றிக்கு இடையூருக இருந்த சக்திகள் மிகச் சிலவேயெனில் அது மிகையாகாது. அன்றைய இந்திய அரசியல் வானில் பிரிட்டிஷ் பேரரசாகிய விண்மீன் விரைவாக வான்முகட்டை நோக்கிச் செல்லுவது சிறிது தொலேவில் தோன்றினுலும், அது விண்வெளியில் இயங்கும் ஒரு கோளத்தின் அமைதியான இயக்கத்தைப் போன்று காணப்பட்டது.

இந்தியாவில் பிரிட்டிஷார் பெற்ற வெற்றிக்குக் காரணமாக, அவர்களுடைய படைக்கலங்களின் மேம்பாடும் போர்க்கலேயின் சிறப்பும் அமைந்தன என்று பொதுவாகக் கூறப்படுவது ஓர் அளவிற்கு உண்மையேயாகும். முதலாவதாக ஆங்கிலேயர்கள் (ஃபிரெஞ்சுக்காரர்கள் தோல்விக்குப் பிறகு) கடலாதிக்கத்தில் தன்னிகரற்ற தனி முதலாண்மையுடையவர்களாக இருந்துவந்தனர். அவர்கள் விரும்பிய வண்ணம் கடல் வழியாக இந்தியாவிற்கு வருவதும் திரும்பிப் போவதுமாக இருந்தனர்; தங்களுக்கு உண்டான இழப்புகளே ஈடு செய்வதிலும். உள்நாட்டுப்பகுதியின் பல இடங்களே த்தாக்குவதிலும் அவர்கள் விருப்பம்போல் செயலாற்றி வந்தனர். அமெரிக்க விடுதலேப்போர் நடைபெற்றபொழுது, இங்கிலாந்திலிருந்து இந்தியாவிற்குத் துணேப்படைகள் அனுப்பப்படுவது சிறிது காலத்திற்குத் துண்டிக்கப்பெற்றது. அதனுல் இந்தியாவில் ஆங்கிலேயருக்குப் பெருந் துன்பங்கள் உண்டாயின. பிரிட்டிஷார் கடலாதிக்கத்தைக் கைப்பற்ருமல் போயிருந்தால், அவர்கள் தன்னிகரற்ற பேராதிக்கத்தை இந்தியாவில் பெற்றிருக்க முடியாது என்று உறுதியாகக் கூறலாம். எனவே, இவ்வகையில் பிரிட்டிஷ் பேரரசு இந்தியாவில் வேரூன்றுவதற்குக் கடலாதிக்கமே காரணமாக இருந்தது என்று கூறுவது தவருகாது. இத்தகைய நல்ல வாய்ப்பினேப் பயன்படுத்திக்கொள்ளும் நாட்டு வளனும், அறிவாற்றலும், துணிவுடன் செயலாற்றும் திறனும் பிரிட்டிஷாருக்கு இல்லாமற்போயிருந்தால், அவர்களுடைய கடலாதிக்கம் மட்டும் எத்தகைய பயனேயும் அளித்திருக்க முடியாது என்பது இங்குக் குறிப்பிடத்தக்கதாகும். கடலாதிக்கம் என்பது வெற்றிக்கு இன்றியமையாது தேவைப்படும் முன்னேற்பாடாகுமே ஒழிய, அவ்வெற்றிக்கு அதுவே காரணமாகாது.

படைக் கருவிகளிலும், போரியல் சூழ்ச்சித் திறனிலும் பிரிட்டிஷார் சிறிதும் ஐயத்திற்கு இடமின்றி மேம்பாடுடையவர்களாக இருந்தனர். இந்தியாவில் பொதுவாகப் பயன்

படுத்தப்பட்டுவந்த படைக்கலன்களைக் காட்டிலும், அவர்களுடைய பீரங்கிகளும், சிறு படைக் கருவிகளும் சிறப்புடையனவாகக் காணப்பட்டன. மேலும், பிரிட்டிஷாரின் அதிகாரிகள் அனைவரும் போரியல் சூழ்ச்சித் திறனிலும், படைகளுக்குத் தலைமை தாங்கி அவற்றைப் போர்க்களத்தில் நடத்தும் முறைகளிலும் நன்கு பயிற்சி பெற்றவர்களாக இருந்தனர். இந்தியப் படைவீரர்களை ஆங்கிலேயப் படை வீரர்களோடு ஒப்பிட்டுப் பார்ப்போமானால் ஓர் உண்மை புலனாகும். பொதுநிலைப் படைவீரர்களாக இருந்தாலும் சரி, படைத்தலைவர்களாக இருந்தாலும் சரி, இந்தியப் படை வீரர்கள் முறையாகப் படைக்கலப் பயிற்சி பெற்ற போர் வீரர்களாக விளங்கவில்லை என்பது புலனாகும். அவர்களுள் சிலர் வேண்டுமானால் பேராற்றலும் பெருந்திறனும் வாய்க்கப் பெற்றவர்களாக இருந்திருக்கலாம்; முறையாகப் படைக் கலப் பயிற்சி பெறாதவர்கள் மிகச் சிறந்த படைத்தலைவர்களாகச் சிறப்புற்றிருக்கலாம். ஆலிவர் கிராம்வெல் இத் தகைய படைத்தலைவராகச் சீரும் சிறப்பும் பெற்று விளங்கியமை வரலாறு கண்ட உண்மையாகும். ஆனால், புதிய முறையில் பயிற்றுவிக்கப்பட்ட படையைத் தம்முடைய கருவியாகப் பயன்படுத்தும் வரையில், அவர் பெற்ற வெற்றிகள் மிகச் சிலவேயாகும். இவ்வாறு மனிதர்களுக்குள்ளே மதிநுட்பம் வாய்ந்த ஐதர் அலி போன்றோர்க்குப் பயிற்சி பெற்ற துணைத் தலைவர்களும், தங்கள் திட்டத்தைச் செயற்படுத்துவதற்குத் தேவையான பொருள்களும் குறைபாடுடையனவாக இருந்தமையால், அடிக்கடி அவர்கள் செயல் குலைந்தனர். ஐரோப்பியப் போரியல் கலையைக் கண்மூடிப் போற்றிப் பின்பற்றும் முறையை இந்தியத் தலைவர்கள் தொடக்கநிலையிலேயே மேற்கொண்டனர். இத்தகைய முயற்சிகள் அனைத்தும் இறுதியில் தோல்வியுற்றமை உண்மையாகும். ஆனால், சீக்கியர் பிரிட்டிஷ் இந்தியாவில் காணப்பட்ட போரியல் படைக் கருவிகளைக் காட்டிலும் சிற்சில வகையில் சிறப்புமிக்க இராணுவ தளவாடங்களையும் கருவிகளையும் உற்பத்தி செய்தனர். அக் கருவிகளைப் பயன்படுத்துவதற்கு முன்பே இந்தியரின் போரியல் முயற்சிகள் அனைத்தும் தோல்வியுற்றுவிடவில்லை என்பது இங்குக் குறிப்பிடத்தக்கதாகும். இந்தியரின் கையில் ஐரோப்பியரின் போரியல் கலை தோல்வியுற்றமைக்குப் போரியல் முறை காரணமன்று. இந்தியர்கள் பின்பற்றிய ஐரோப்பியரின் போரியல் கலை, வேறு பல காரணங்களே தோல்வியைத் தேடித்தந்தன எனலாம். பிரிட்டிஷாரின் வெற்றிக்கு உதவியாக இருந்த பல காரணங்களுள் ஐரோப்

பியரின் போரியல் கலை முறையும் ஒன்றாகும். ஆனால், அம் முறையே ஆங்கிலேயர்களுக்கு முடிவான வெற்றியைத் தேடித் தந்தது என்பது பொருத்தமற்றதாகும்.

படைகளுக்குத் தலைமை தாங்கி நடத்தும் பேராற்றல் போரில் பெறும் வெற்றிக்குரிய காரணமாக அடிக்கடி வற்புறுத்தப்பட்டு வருகின்றது. பிரிட்டிஷார், ஃபிரெஞ்சுக் காரர்களைப் போன்று காண்பதற்கரிய அருந்திறல் வாய்ந்த மாபெரு வீரர்களையும், மாண்புமிக்க மனிதர்களையும் உருவாக்கினர் என்பது உண்மை. வெற்றிவீரனுக்குரிய பண்புகள் அனைத்தும் நிறைந்திருந்த கிளைவ் முதற்கொண்டு, போரியல் மதிநுட்பமும் போர்க்கலையில் நுண்ணிய அறிவும் சூழ்ச்சித் திறனும் வாய்ந்த வெலிங்டனைப் (Wellington) போன்றவர்களையும் ஆங்கிலேயர் பெற்றிருந்தனர்; அரசியல் வல்லமையும் கூர்த்த மதியும் படைத்த வாரன் ஹேஸ்டிங்ஸ் முதலாகப் பேரரசை நிறுவுவதில் பேராவலும் பெருந்திறனும் வாய்க்கப் பெற்ற வெல்லெஸ்லியையும் ஆங்கிலேயர் பெற்றிருந்தனர். இத்தகைய அரிய ஆற்றல்களையும், பெறற்கரிய பண்புகளையும் பெற்ற இம் மாபெருந் தலைவர்கள் தோன்றாமல் இருந்திருந்தால், ஆங்கிலேயரின் பேரரசை நிறுவுதல் என்னும் இம் மாபெருந் துணிகர முயற்சி வெற்றி பெற்றிருக்க இயலாது. ஆனால், அவர்கள் தோன்றியமை மட்டும் இவ் வெற்றிக்குப் போதிய காரணமாகாது. பேராற்றலும் பெருந்திறமையும் வாய்ந்த புகழ்மிக்க தலைவர்களை இந்திய இராச்சியங்களும் கூடப் பெற்றிருந்தன. மாதுராவ் சிந்தியா, ஐதர் அலிகான், மீர்சா நாசஃப் கான், நானாபட்னவிஸ் போன்றவர்களும், பேஷ்வாக்களில் பலரும், ரஞ்சித் சிங்கும் வீரர்கள் குழுவிலும் அரசியல் விரகர் குழுவிலும் முதன்மையான இடத்தைப் பெறத்தக்கவராவர். இந்தியர்களைக் காட்டிலும் பிரிட்டிஷார் துணைத் தலைவர்கள் படிநிலையிலும் திறமைமிக்க வீரர்களையும் ஆட்சியாளர்களையும் பெற்றிருந்தமை அவர்களுடைய நற்பேறேயாகும். இந்தியர்களிடத்து இணையாகக் காண முடியாத அளவிற்கு அவர்களிடத்துத் திறமையும் ஆற்றலும் குறிப்பிடத்தக்க வகையில் போதிய அளவிற்குச் சிறப்புற்று விளங்கியமை இங்குக் குறிப்பிடத்தக்கதாகும். இவர்கள் எல்லாரும் அறிவியல் முறைப்படி போர்க்கலையில் பயிற்சி பெற்றிருந்தமையே இதற்குக் காரணமாகும். ஆனால், இந்த முன்வாய்ப்பு ஒன்றே பிரிட்டிஷாரின் வெற்றிக்குக் காரணமாக இருந்தது என்று கூறுவதற்கில்லை. ஏனென்றால், இந்திய அரசர்கள் பெரிதும் ஐரோப்பியர்களின் உதவியால்

தம் படைவீரர்களுக்குக் கொடுத்துவந்த பயிற்சியின் பெருக்கத்தால் இம் முன்வாய்ப்பும் பையப்பையக் குறைந்து போயிற்று.

ஆங்கிலேயர்களுக்கு அவர்களுடைய இராணுவக் கட்டுப்பாடும் ஒழுங்கு முறையுமே பேருதவியாக இருந்தது என்பதைப் பலர் வற்புறுத்திக் கூறிவருகின்றனர். அலக்சாண்டர் காலம் முதல் அஞ்சாநெஞ்சம் படைத்த படைவீரர்கள், எண்ணிக்கையில் மிகுதியாகக் கட்டுப்பாடும் ஒழுங்குமற்றவர்களாக இருப்பதைக்காட்டிலும் கட்டுப்பாடும் ஒழுங்குமுடைய பயிற்சி பெற்ற படைகள், நெருக்கடியான நேரங்களில் உறுதியான நிலையான முடிவை அடைவதற்குரிய வாய்ப்பினை அளித்திருப்பதைக் காணுகின்றோம். அவ்வாய்ப்பும் நன்மை பயப்பதாகவே அமைந்ததையும் நாம் அறிவோம். படைவீரர்களுக்கிடையே கட்டுப்பாடு மிக்க ஒழுங்குணர்வை வளர்ப்பதற்குரிய பயிற்சி ஆங்கிலேயப் படைவீரர்களுக்கு நன்கு அளிக்கப்பட்டிருந்தமை உண்மையாகும். அதிகாரிகளுக்குக் கீழ்ப்படிந்து நடக்கும் பழக்கமும், கட்டளைக்கு இணங்கி இன்னல்களையும் இடையூறுகளையும் எதிர்த்துப் போரிடும் உள்ள உரமும், துன்பங்களை மனங் கலங்காது பொறுத்துக்கொள்ளும் பண்பும், உணர்ச்சிகளை அடக்கிவைத்துக்கொள்ளும் ஆற்றலும், ஒழுங்கு முறையைப் பேணி வளர்க்கும் உள்ள ஒருமைப்பாடும் படைவீரர்களுக்கிடையே கட்டுப்பாடு மிக்க ஒழுங்குணர்வை உருவாக்குகிறது. தனிப்பட்ட மனிதரின் பற்றுறுதியையும் அல்லது குறுகிய தனிப்பற்றுடைய குலத்தினரின் பற்றுறுதியையும், துணிகரச் செயலாற்ற வேண்டும் என்னும் மனப்பான்மை அல்லது தனி மனிதரின் தறுகண்மை உண்டாக்க முடியாத ஒரு பெரு மேம்பாட்டையும் செயல் திறனையும் இக் கட்டுப்பாடும் ஒழுங்குணர்வும் உண்டாக்குகின்றது. போர்ச்சுகீசியர் மிகக் குறைந்த அளவினையுடைய படையினைக் கொண்டே இந்தியாவில் தங்களுக்குரிய பகுதியைப் போட்டிக்கு இடையே முயன்று பெற்றதோடு, அதைக் கட்டிக்காக்கவும் செய்தனர் என்பது இங்கு நினைவுகூரத்தக்கதாகும். அவர்களுடைய படைகள் பெற்றிருந்த பயிற்சியும் ஒழுங்குணர்வுமே இதற்குக் காரணம் என்று கூறத் தேவையில்லை. ஆனால், இவர்களைக் காட்டிலும் கட்டுப்பாடும் ஒழுங்குணர்வும் செம்மையாகப் பெற்றிருந்த படைகளினால் போர்ச்சுகீசியர் விரட்டியடிக்கப்பட்டனர். தொடக்க காலத்தில் ஆங்கிலேயர்களும் ஃபிரெஞ்சுக்காரரும் உலகமே கண்டு வியக்கத்தக்க

வெற்றிகளைப் பெற்றமைக்குக் காரணம் படைவீரர்களிடையே காணப்பட்ட கட்டுப்பாடும் ஒழுங்குணர்வுமே என்று கூறின் அது தவருகாது. ஒருவர் கட்டளையிட்ட உடனே பல குழுக்களாக உள்ள மனிதர் ஒற்றுமையும் ஒருமைப்பாடும் உடையவர்களாக, ஒரே சீரான நிலையில் உள்ள உறுதியுடன் செயலாற்றுவதைத்தான் கட்டுப்பாடும் ஒழுங்குணர்வும் குறிப்பதாகக் கருத வேண்டா. ஒழுங்குணர்வு என்பது இதற்கு மேலாகத் தலைமைப் பதவியில் உள்ளவர்கள் திறமை வாய்ந்தவர்களாக இருந்ததோடு, நம்பத் தகுந்தவர்களாகவும் இருந்தனர் என்பதையும், எல்லாச் செயல்களும் ஒரே இடத்திலிருந்து வரும் கட்டளைகளினுல் ஒருமுகப்படுத்தப்பட்டு இருந்தன என்பதையும் உணர்த்துவதாகும். ஒருவன் எத்துணைக் காலம் பற்றுறுதியுடன் இருக்கின்ருனே அத்துணைக் காலம் அவனைப் பேணி வளர்க்கும் பொறுப்பினை ஏற்றுக்கொள்ளுவதாக அளிக்கப்படும் உறுதிமொழி அவனிடத்து நம்பிக்கையையும் நேர்மையுணர்வையும் வளர்க்கின்றது. அதைப்போன்றே, ஒருவனுடைய பதவி உயர்வு அவனுடைய தொழில் துறை நடத்தையையும் ஒழுங்குணர்வையுமே பொறுத்திருக்கிறது என்பதை அடிப்படையாகக் கொண்டிருக்கும் எந்த முறையும் நம்பிக்கையையும் நேர்மையான நடைமுறையையும் வளர்ப்பதாகும். எதிர்பாராத இன்னல்களும் இடையூறுகளும் உண்டானபோதிலும், தோல்விகளை அடைந்தபோதிலும் நிலைகுலையாத ஐரோப்பிய அதிகாரிகளின் எதையும் தாங்கும் இதயமும், பழக்கப்பட்ட பற்றுறுதியும் போர்ச்சுகீசியர் காலம் முதற்கொண்டே இந்திய மக்களால் போற்றிப் பாராட்டப்பட்டு வந்தமை இங்குக் குறிப்பிடத்தக்கதாகும். மொகலாயப் பேரரசர் காலம் முதல் தனிப்பட்ட வகையில் பற்றுறுதியும் ஈடுபாடும் உடையவர்களாக நடந்துகொள்ளும் முறை இந்தியாவில் இருந்துவந்ததைக் காணுகின்ருேம். இப் பற்றுறுதி மான்சப்தாரி **(Mansabdari)** முறையினுல் ஒருசிறிது புத்துருவம் பெற்றது எனலாம். ஆயினும், அம் முறை வீறுடன் விளங்கிய காலத்திலும் பற்றுறுதி என்பது தனி மனிதர் ஒருவர் அரசரிடத்தோ, பிரபுவிடத்தோ, தலைவரிடத்தோ தனிப்பட்ட வகையில் காட்டும் ஈடுபாடாகவே இருந்துவந்தமை இங்குக் குறிப்பிடத்தக்கதாகும். இந்திய நாட்டில் பற்றுறுதி என்பது இத்தகைய முறையில் இருந்துவந்தமையால் அது தனி மனிதரின் தலைவிதியையும், அதிருஷ்ட சக்கரத்தின் சுழற்சியையும் பொறுத்தே அமைந்தது எனலாம். அடிக்கடி தனிப்

பட்ட வகையில் தனியுரிமையுடன் செயலாற்றும் தூண்டுதலே மிகுதியாக இருந்துவந்திருக்கிறது. ஆணைக்கு அடங்காத பண்பும், ஐயுறவு கொள்ளப்படாத பணிவும் நெருக்கடியான நேரங்களில் பேரின்னல் இழைத்தன.

ஆனல், படைத் துறையைச் சாராத கம்பெனி ஊழியர்களிடையே காணப்பட்ட ஒழுங்குணர்வும் கட்டுப்பாடுமே பிரிட்டிஷாருக்கு இதைவிடப் பெரும் பயன்மதிப்பு உடையதாக விளங்கியது. தனிப்பட்ட அரசப் பற்றுகிய சிக்கலான முறையை மட்டுமே ஆதாரமாகக் கொண்டிருக்கின்ற ஓர் அரசிற்கு உண்டாகக்கூடிய இன்னல்களையும் இடர்ப்பாடுகளையும்காட்டிலும், ஒழுங்குமுறையற்ற அரசிடத்து ஒழுங்கும் கட்டுப்பாடும் வாய்ந்த படைகள் இருப்பது அரசழிவிற்குரிய வாய்ப்புகளை மிகுதியாக அளிப்பதாக அமையும். இதனைச் சீக்கிய அரசுக்குண்டான பெருங்கேடு உண்மையென்று உலகிற்கு அறிவிக்கிறது. பேராற்றல் வாய்ந்த சீக்கிய அரசு நிறுவப்பட்ட பத்தாண்டுகளுக்குள்ளாகவே, சீக்கியத் தலைவர்கள் சிலர் ஒரு குழுவினராகக் கூடி அதை அழித்தொழித்தனர். மிகச் சிறந்த படைத்துறை அமைப்பைப் பெற்றிருந்தும் உள்ளார்ந்த ஒருமைப்பாடு சீக்கியர்களிடையே இல்லாமையினுல், தவிர்க்க முடியாத மாபெரு வீழ்ச்சி அதற்கு உண்டாயிற்று. மான்சப் முறையில் மொகலாயர் படைத்துறையும் பொதுத்துறையும் இணைந்த ஒரு பணித்துறையைப் பேரரசின் நலங்கருதி அமைத்தனர். மேற்கண்ட பேராபத்தினை மொகலாயப் பேரரசிற்கு உண்டாகாதவாறு இம்முறை தவிர்த்தது எனலாம். ஆனல், நெடுங்காலமாக இருந்துவரும் தனிப்பட்ட அரசப் பற்றின் அடிப்படையில் அரசு இயங்கி வரும் முறையினை மொகலாயர் மாற்றியமைக்கவில்லை. இதற்கு நேர்மாருகக் கம்பெனியிடத்துப் படைத்துறையைச் சாராத பொதுத் துறை (சிவில்) அதிகாரிகளின் அமைப்பு ஒன்று இருந்துவந்தது. கம்பெனியின் படைத்துறைச் சக்திகளைப் போலவே அதற்குரிய வழியில் இப்பொதுத் துறையும் ஆற்றல் வாய்ந்ததாகவும், ஒழுங்குணர்வும் கட்டுப்பாடும் உடையதாகவும் விளங்கி வந்தது. தங்களுடைய வளமிக்க வாழ்க்கைக்குரிய வாய்ப்பு வசதிகளுக்காகக் கம்பெனியின் ஆதரவை நாடி., அதன் உதவியையே நம்பி வாழ்ந்த மக்கள் குழுவினரை பிரிட்டிஷார் பெற்றிருந்தனர். அதனுடன் அதிகாரிகளுடைய ஆணைக்கு அடங்கிப் பணியாற்றுவதில் பயிற்சி பெற்ற மக்களையே கம்பெனி பெற்றிருந்தமை குறிப்பிடத்தக்கதாகும். மேலும் தேவையான அளவிற்கேனும்

ஒழுங்குணர்வையும் கட்டுப்பாட்டையும் சிறந்த முறையில் கடைப்பிடிக்கும் மனிதர்களைக் கம்பெனி பெற்றிருந்தது. கம்பெனியின் ஊழியர்கள் பணி புரிவதில் பெருமைப்படுபவர்களாகவும், குழு மதிப்புணர்ச்சி உடையவர்களாகவும் இருந்தனர். இந்தப் பொதுத் திட்ட அளவு—தரம்—பதினெட்டாம் நூற்றாண்டின் இடைப்பட்ட பகுதியில் சில ஆண்டுக் காலத்திற்கு மிகவும் நெகிழ்ச்சியுடையதாக இருந்ததை அப்பொழுது நிகழ்ந்த நிகழ்ச்சிகள் சில மெய்ப்பித்தது எனலாம். ஆனால், அச் சோர்வின் விளைவு கம்பெனியின் படைத் துறையைச் சாராத ஊழியர்களின் கட்டுப்பாடும் ஒழுங்குணர்வும் மொத்தத்தில் எத்துணை இன்றியமையாதன என்பதை மெய்ப்பித்தது. பதினெட்டாம் நூற்றாண்டின் அறுபதுகளின் தொடக்கத்தில் நிலவிய சீர்கேடான நிலை திருத்தியமைக்கப்படாமல் இருந்திருந்தால், கம்பெனி இந்தியாவில் நிலைபெற்று விளங்க முடியாமற்போயிருக்கும். பத்தொன்பதாம் நூற்றாண்டில் பிரிட்டிஷார் பேராதிக்கம் பெறுவதற்கு இந்த ஒழுங்குணர்வும் கட்டுப்பாடும் மீண்டும் மீட்பளிக்கப்பட்டமையும், வலுப்படுத்தப்பட்டமையும் காரணமாக அமைந்தன. ஊழியர்களுக்குப் படிநிலை முறையில் பதவிகளை வழங்குவதும், ஒழுங்காகத் தொடர்ந்து ஊதியத்தைப் பணமாக அளிப்பதும் படைத் துறையைச் சாராத ஊழியர்களிடையே ஒழுங்கையும் கட்டுப்பாட்டையும் நிலைநாட்ட முடியுமெனக் கருத வேண்டா. கம்பெனியின் ஊழியர்களுக்குக் காரன்வாலிஸ் காலம் வரையில் பணமாகக் கொடுக்கப்பட்டுவந்த ஊதியம் மிகச் சிறிய அளவினதேயாகும். எல்லோராலும் உயர்ந்தவர் என்று ஏற்றுக்கொள்ளப்படும் நிலையில் அதனுடைய ஆணைகளைக் கட்டாயமாகச் செயற்படுத்தும் திறமை வாய்ந்த மேலதிகாரி ஒருவர் இருந்தாக வேண்டும். அதைப்போன்றே பொதுத் திட்ட முறைகளையும் கொள்கைகளையும் கொண்ட குழுவின் மேலாண்மையைச் சிறிதளவேனும் எல்லாரும் ஏற்றுக்கொள்ளுமாறு செய்யும் ஒரு குழு கட்டாயம் இருக்க வேண்டும். பொதுத் துறை ஒழுங்கு முறைக்கு அறநெறி உள்ளுணர்வும், ஆற்றல் மிக்க சட்ட ஆதரவும் இருக்க வேண்டும். கம்பெனி ஊழியர்கள் இவ்வகையில் மிகச் சிறந்தவர்களாக விளங்கினர். அவர்கள் ஆங்கிலேயச் சட்டத்தையும், ஆங்கிலேயரின் வாணிக மனப்பான்மையையும் தங்களுடன் கொண்டுவந்திருந்தனர். அவற்றுடன் ஆங்கிலேயரின் நாட்டுப் பற்றையும் தனிநிலைக் கொள்கையையும் போற்றும் பண்பு உடையவர்களாக விளங்கினர். இத்தகைய இயல்பு

களைக் கம்பெனியின் ஊழியர்கள் பெற்றிருந்தமையால் பொதுத்துறை நிர்வாகத்தில் ஆங்கிலேயர் பேராற்றல் உடையவர்களாக விளங்கினர்.

ஆனால், பணமும் மக்கள் சக்தியுமாகிய வளமிக்க ஆதாரம் ஆங்கிலேயருக்கு இல்லாமல் இருந்திருந்தால், பொதுத் துறையினர், படைத்துறையினர் ஆகியோரின் ஒழுங்குணர்வும் கட்டுப்பாடும் பயனளித்திரா; படைத்துறை மேம்பாடும் கடலாதிக்கமும் எத்துணை உதவியாக இருந்திருந்தாலும் பிரிட்டிஷார் வெற்றி பெற்றிருக்க முடியாது. பதினாறும் நூற்றாண்டில் போர்ச்சுகீசியர் அடைந்த வெற்றிகளைக்காட்டிலும் ஆங்கிலேயர் சிறிது அதிகமான வெற்றிகளைப் பெற்றிருக்கலாம்; அல்லது நம் காலத்து டச்சுக்காரர்களைப்போல் அவர்கள் வாழ்ந்திருக்கலாம். ஒழுங்குணர்வும் கட்டுப்பாடும் உடைய ஒரு வீரனுக்குரிய சாதனைகளுக்கு ஒரு வரையறை இருப்பதைப் போலவே, கட்டுப்பாட்டையும் ஒழுங்கு முறையையும் கடைப்பிடிக்கும் ஆட்சியாளரின் சாதனைக்கும் ஒரு வரையறை உண்டு. ஆனால், பிரிட்டிஷாரிடத்து மக்கள் சக்தியில் எப்பொழுதும் பற்றுக்குறை இருந்துவந்தது. ஆனால், அவர்கள் அதை நிதி நிலைமையாகிய வள ஆதாரத்தைக் கொண்டு ஈடுசெய்துகொண்டனர். அவர்களுக்குண்டான இழப்பீடுகளை மனவமைதியுடன் மீண்டும் மாற்றீடு செய்து கொள்ளுவதற்குரிய ஆற்றல் உடையவர்களாக அவர்களுடைய நிதிநிலைமை அவர்களுக்கு உதவிபுரிந்தது. மேலும், இந்தியத் துணைப்படையைச் சேர்ந்த வீரர்களைக் கவருவதற்கும், அப் படையை நெறியோடு கட்டிக் காப்பதற்கும் இந் நிதிநிலைமையாகிய வளமிக்க ஆதாரம் பேருதவியாக இருந்தது எனலாம். எனவே, வீரர்களுள்ளும், ஊழியர்களுள்ளும் பெரும்பாலோர் தாங்கள் பெறுகின்ற பணத்திற்குத் தகுந்த பணியைச் செய்வதில் நாட்டமுடையவர்களாக இருந்தனர். மேலும் தேவையான அளவிற்குத் தேவைகளை அவ்வப்போது கம்பெனியார் நிரப்பீடு செய்துவந்தமையும் உண்மையாகும். பதினெட்டாம் நூற்றாண்டில் இந்திய அரசியல் வீரருக்கு நீடித்த மன உளைச்சலாகவும், நாள்பட்ட பெருந் தடையாகவும் பண வசதியின்மை இருந்துவந்தது. அரசுகள் தம் நாட்டிலுள்ள மக்களுள் உழவர்களை மட்டும் தேர்ந்தெடுத்து வேண்டுமென்றே அவர்களைக் கசக்கிப் பிழியவில்லை. ஆனால், இன்றியமையாத தேவையின் காரணமாகவே அரசுகள் இவ்வாறு உழவர்களை வற்புறுத்தி வரி தண்டியதைப் பார்க்கிறோம். மராட்டியருடைய இயற்கைவள ஆதாரம் அவர்களுடைய

தேவைகளுக்கு ஈடுகொடுக்கக்கூடிய அளவிற்குப் போதிய தாக இல்லாமையால்தான் அவர்கள் 'கொள்ளையடிக்கும் பாங்குடையவராக' இருந்தனர். பகைவரைத் தோற்கடிப்ப தற்காக அடிக்கடி அவர்களுடைய படைகள் இங்கும் அங்கு மாக அணிவகுத்துச் சென்று அரசிறையைத் தண்டிவந்தன; மராட்டியப் படைத் தலைவன் ஒருவன் போரிடுவதைப்பற்றித் திட்டமிடுவதற்கு முன்பு, கலகத்தினை உண்டாக்குவதற்கு முதலில் அவன் முயலவேண்டி இருந்தது. இதன் விளைவாகப் பிரிட்டிஷாரின் உள்ளார்ந்த ஒற்றுமையும், மீட்டெழுச்சியும் அவர்கள் காலத்து இந்திய மக்களுக்கு முதலில் வியப்பையும், பின்னர் மனச் சோர்வையும் அளித்தது. பிரிட்டிஷாரைப் போரில் வெல்ல முடியாது என்ற கட்டுக்கதை இழப்புகளை மாற்றீடு செய்யும் திறமையையும், படை வீரர்களுக்கு ஒழுங் காக ஊதியம் அளிக்கும் ஆற்றலையும் அடிப்படையாகக் கொண்டு கட்டப்பட்டனவாகும். பதினெட்டாம், பத்தொன்ப தாம் நூற்றுண்டுகளில் பிரிட்டிஷார் வளர்ச்சியுறும் வாணிகத் திளுல் விரிவடையும் பொருளாதார வாய்ப்பினைப் பெற்றிருந் தனர். அதனுல், அவர்களுடைய தேவைக்கு மேற்பட்ட வள ஆதாரம் அவர்களுக்குக் கிடைத்துவந்தது. அதைக்கொண்டு அவர்கள் இந்தியாவில் தங்களுக்குண்டான இழப்புகளை உடனடியாக மாற்றீடு செய்துகொள்ளவும், படைவீரர்களுக்கு ஒழுங்காக ஊதியம் அளிக்கவும் முடிந்தது. இவ் வளர்ச்சி யைத் தொழிற்புரட்சியின் கடுமையான தாக்குதல் விரைவு படுத்தியது. ஆனுல், இம்முறை இதற்கு முன்பே ஒழுங்காகக் கடைப்பிடிக்கப்பட்டு வந்தது. பணித்துறைச் சார்பான கணக்குப் பதிவேட்டிலிருந்து 1605ஆம் ஆண்டு அக்பருடைய வருமானம் 17,500,000 பவுன்கள்[1] என்று தெரியவருகிறது. 1792ஆம் ஆண்டு கம்பெனியின் மொத்த வருமானம் 8,225,000 பவுன்கள் என்பதும், போரினுல் துன்புற்று வளம் குன்றிய சிறு பிரதேசத்திலிருந்து இவ் வருமானம் பெறப் பட்டது என்பதும் இங்குக் குறிப்பிடத்தக்கதாகும்.[2] மேற்

[1] டே லேயட் (De Laet's) என்பவர் கணக்கிட்டுள்ளமையாகும். வின்சென்ட் ஸ்மித் அவர்களின் 'Akbar the Great Mogul' என்னும் நூலினைப் பார்க்க: பக். 379 (2 பதி.). ஒரு ரூபாய் நாணயம் அக்காலத்தில் இரண்டு ஷில்லிங்குகளுக்கு மேல் மதிப்புடையதாக இருந்திருக்கலாம்.

[2] காமன்சு சபையினரின் 1855ஆம் ஆண்டின் ஜூன் 22ஆம் நாள் கட்டளைப்படி' வெளியிடப்பட்ட மொத்த வருமானப் பட்டியலில் காணப்படுவது. R. தத்தரின் (Dutt), Economic History of India', பக். 399 பார்க்க (5ஆம் பதிப்பு).

கூறிய படைத் துறை, பொதுத் துறைத் தொழில்நுட்ப வேறுபாடுகளோடு இந்தியப் பொருளாதார முறைகளில் இருந்து வந்த ஏற்றத்தாழ்வுகளும் சேர்ந்து பிரிட்டிஷாருடைய வாய்ப்பு வசதிகளை மிகுதிப்படுத்தின.

இந்தியா உழவுத் தொழிலையே உயிர் வாழ்க்கைக்குரிய தொழிலாகக் கொண்டிருந்தமையால் இந்தியப் பொருளாதாரம் மேலைநாட்டு வாணிகப் பொருளாதாரத்தோடு போட்டியிட முடியவில்லை. பிரிட்டனுடைய மக்கள் எண்ணிக்கையில் சிறுபான்மையினராக இருந்தனர். எனினும், வள ஆதாரத்தில் இந்திய அரசுகளுள் தனிப்பட்ட ஒவ்வொன்றைக் காட்டிலும் கம்பெனி ஆற்றலுடையதாகவும், இந்திய அரசுகள் எல்லாவற்றினுடைய வள ஆதாரத்தையும் சேர்த்து மதிப்பிட்டால் அதற்கு ஆங்கிலேயரின் வள ஆதாரம் ஒப்புமையுடையதாகவும் இருந்துவந்தது இங்குக் குறிப்பிடத்தக்கதாகும். இந்திய அரசுகள் என்றுமே ஒற்றுமையுடன் இருந்ததில்லை என்பதை நினைவுகூருகின்றபொழுது, பிரிட்டிஷாருடைய வெற்றிக்குக் காரணம் கூற முடியாது என்னும் கருத்தும், அவர்களுடைய வெற்றி இயற்கைக்கு மாறான தனிச் சிறப்புடையது என்னும் கருத்தும் பொய்யாய்ப் பழங்கதையாய்ப் போய்விடுகிறது.

பிரிட்டிஷார் பெற்ற வெற்றிக்கு உறுதுணையாக அவர்களுடைய குறிக்கோள்களின் இயல்புகள் அமைந்திருந்தன என்று கூறலாம். அவையே அவர்களுடைய வெற்றிக்கு இறுதித் துணைக் காரணமாக இருந்தன. இந்திய சமுதாயத்திற்கும், பிரிட்டிஷ் பேரரசுக் கோட்பாட்டிற்கும் இடையே நேரடியான மோதுதல் ஒன்றும் உண்டாகவில்லை. இதன் விளைவாக உயிர் இருக்கும் வரை, அல்லது இறக்கும் வரை பிரிட்டிஷ் பேரரசினை எதிர்த்துப் போரிடுவதற்குரிய போராட்டம் ஒன்றும் தேவை இல்லாமற் போயிற்று. இந்திய சமுதாயம் இருவகைப்பட்டனவாக இருந்தது. இந்து சமுதாயம், இஸ்லாமிய சமுதாயம் என்ற வடிவில் இந்திய சமுதாயம் காட்சியளித்தது. அவை சமயத்தை நடுமையமாகக் கொண்டு இயங்கும் சமுதாயங்களாக விளங்கின. தற்காலத்தில் நாம் உணரும் பொருளில் 'அரசியல் தேசியத்தின்' (political nationalism) அறிகுறி சிறிதளவும் அவற்றுள் காணப்படவில்லை. இந்திய மக்களுடைய பாசமும் பற்றும் சமுதாய இலட்சியங்களிடத்திலும் சமயக் குறிக்கோள்களிடத்

திலும் பிணைப்புண்டு கிடந்தனவேயொழிய, அரசியல் சுதந்திரம்பற்றி நினைத்துப் பார்க்கும் எண்ணங்கூட இந்திய மக்களிடத்து இருந்ததாகத் தோன்றவில்லை. அவர்கள் அரசியல் சுதந்திரம்பற்றிக் கவலைப்பட்டதாகவே தெரியவில்லை. இந்துக்களுக்குச் சுதந்திரம் என்பது ஆன்மீக விடுதலைபற்றியதாக இருந்து வந்தது; இஸ்லாமியருக்குச் சுதந்திரம் என்பது உண்மையான கடவுளை நல்ல முறையில் வழிபடும் உரிமையாகவே தோன்றியது. அவர்கள் வழிபாட்டு உரிமையைத் தனிப் பெருஞ் சுதந்திரமாகக் கருதினர். ஆயினும், அயலாருடைய ஆட்சியைவிடத் தத்தம் சமயத்தைச் சார்ந்தவர்கள் ஆளுவதையே இந்துக்களும் முஸ்லீம்களும் விரும்பினர் என்பதில் ஐயமில்லை. இரு திறத்தினரும் தங்களுடைய சமய இலட்சியங்களுக்காகவும், சமுதாய அமைப்பு முறைகளுக்காகவும் உயிர்விடத் தயாராக இருந்தனர். மொகலாயப் பேரரசு எத்துணைக்காலம் ஆற்றல் உடையதாகவும், சமய சமரச மனப்பான்மை உடையதாகவும் இருந்துவந்ததோ அதுவரை இந்துக்கள் அதனை ஏற்றுக்கொண்டனர். போர்ச்சுகீசியர்கள் இந்தியாவில் பெரு முன்னேற்றத்தைக் காண முடியாமல்போனமைக்குக் காரணம் அவர்கள் இந்துக்களையும் இஸ்லாமியர்களையும் மிகக் கடுமையாகத் தாக்கிவந்தமையேயாகும். சமயத்துறையில் போர்ச்சுகீசியரின் தாக்குதலை அவ்விரு சமயத்தினரும் மிகக் கடுமையான தாக்குதலாக உணர்ந்தனர். பிரிட்டிஷார் இந்தியாவிற்கு வாணிகத்தின் பொருட்டே வந்தனர். அவர்களுடைய வாணிகத்தைக் காப்பதற்காகவே அவர்கள் இந்திய நாட்டின் அரசியலில் தலையிட்டனர். ஆனால், அவர்கள் இந்திய மக்களின் சமய வாழ்வில் தலையிடாமல் விலகி நின்றனர். எனவே, இந்துக்களுக்கு ஆங்கிலேயர் முஸ்லீம்களைக் காட்டிலும் விரும்பத்தக்கவர்களாக விளங்கினர்; முஸ்லீம்களுக்கு அவர்கள் இந்துக்களைக் காட்டிலும் ஏற்றுக்கொள்ளத் தக்கவர்களாகத் தோன்றினர். பொதுவாக பிரிட்டிஷாரின் பழக்க வழக்கங்களும், பிரிட்டிஷாருள் பல தனி மனிதர்களும் இந்திய மக்களால் வெறுக்கப்பட்டபோதிலும், பிரிட்டிஷாரின் ஆட்சியை இந்திய மக்கள் விரும்பியதற்கு இதுவே காரணமாகும். பிரிட்டிஷாருடைய தாக்குதல் பட்டும் படாமலும் விரைந்தோடுவதாக இருந்தது. அத்தாக்குதல் இந்திய மக்களுடைய வாழ்வின் உயிர்நாடியைத் தொடாமலேயே நடைபெற்றமை இங்குக் குறிப்பிடத்தக்கதாகும். கம்பெனியாரின் காசுகளைவிட, படைவீரர்களின் துப்புர்க்கியைவிட, சமய சமரச நோக்கமும் சமுதாயத்

துறையில் தலையிடாக் கொள்கையுமே ஆங்கிலேயரின் பேராற்றல்மிக்க படைக் கருவிகளாக விளங்கின.

இப்பொழுது இந்தியாவில் பிரிட்டிஷாருடைய ஆட்சிக் காலம் முடிவுற்ற முழு நிலையை அடைந்துவிட்டது. எனவே, 1947-க்கு முன்பு இருந்ததைவிட இப்பொழுது பெரிதும் பற்றற்ற நிலையில், நடுநிலை பிறழாது அவ்வாட்சிக் காலத்தைப் பற்றிக் கருதவும் ஆராயவும் உரிமையும் வசதியும் நாம் பெற்றிருக்கிறோம். பத்தொன்பதாம் நூற்றாண்டின் வரலாற்றாசிரியர்கள் இந்திய வரலாறு முழுவதும் பிரிட்டிஷாரின் ஆட்சிக் காலமாகிய கொடுமுடியை அடைய மெல்ல நகர்ந்து சென்று கொண்டிருந்ததாகக் கருதியதைப்போன்று நாம் அதை நோக்கவில்லை. ஆனால், இந்தியாவின் நீண்ட நெடுங்கதையுள் காணப்படும் பல கிளைக்கதைகளுள் ஒன்றாகவே பிரிட்டிஷாரின் ஆட்சியை நாம் கருதுகிறோம். இதனால், பிரிட்டிஷாரின் ஆட்சிக் காலத்திற்குரிய சிறப்பினைக் குறைத்து நாம் மதிப்பிடுகிறோம் என்பது பொருளன்று. இதற்கு முன்பு இந்திய மண்ணில் வெளிநாட்டவரின் ஆதிக்கங்கள் பல மலர்ந்து, மணம் பரப்பி, வாடி வதங்கி, உலர்ந்து உதிர்ந்து போயின. அவற்றைப்போன்று பிரிட்டிஷாரின் ஆட்சியும் விளங்குவதோடு, அவற்றிற்குச் சிறந்ததோர் எடுத்துக்காட்டாகவும் அது விளங்குகிறது என்பது ஓர் அளவிற்குத்தான் பொருந்துவதாகும். ஆனால். 1947ஆம் ஆண்டில் இந்தியா இருந்த நிலையை, 1757ஆம் ஆண்டு இந்தியா இருந்த நிலையோடு ஒப்பிட்டுப் பார்ப்போமானால், மேற்கூறிய கருத்தில் காணப்படும் குறைபாட்டினை நாம் நன்கறியலாம். பாபர் காலத்து அல்லது அல்பிருனி காலத்து இந்தியாவைக் காட்டிலும், பிளாசிப் போர் நடந்த காலத்து இந்தியா மிகவும் வேறுபட்டதாகவே இருந்தது. பிரிட்டிஷார் விட்டுச் சென்ற காலத்து இந்தியா, வங்காளத்தை பிரிட்டிஷார் கைப்பற்றிய காலத்து இந்தியாவைக் காட்டிலும் பெரிதும் வேறுபட்டிருந்தது. இவ் வேற்றுமைகள் பிளாசிப் போர் நடைபெற்ற காலத்து இந்தியாவில் காணப்பட்ட வேற்றுமைகளைக் காட்டிலும் மாண்புமிக்கனவாகவும், மேன்மை வாய்ந்தனவாகவும் காணப்படுகின்றன. முதலில் பிரிட்டிஷ் குடியேற்ற நாட்டின் தோற்றம், மொகலாயப் பேரரசின் தோற்றத்தைப் போன்று அடையாளங் கண்டுணரத்தக்க ஒப்புமைப் பண்புடையதாகத் தோன்றியது. பரபரப்பூட்டுகின்ற வகையில் எழுச்சியுறத் தொடங்கிய பிரிட்டிஷாரின் ஆதிக்கம் உடனடியாகப் பல தடைகளால் முன்னேற்றமடையாது இடர்ப்பா

டுற்றது. நிலைபேறற்ற தன்மையும் அரசியல் குழப்பமும் தடைக்கற்களாக அமைந்தன. இங்நிலையினை அடுத்து வீறு மிக்க தலைவர்கள் பிரிட்டிஷாரின் ஆற்றலை ஒருமுகப்படுத்தி, அவர்களுடைய ஆதிக்கத்தை விரைவில் வலுப்படுத்த முயன் றனர். 1818ஆம் ஆண்டு மீண்டும் இந்தியா ஒன்றுபட்ட ஒரு நாடாக ஆக்கப்பட்டிருந்தது. அக்பருடைய ஆட்சியின் பிற்காலத்து இந்தியாவோடு பல வகையில் ஒப்பிட்டுப் பார்க்கக்கூடியதாக 1818ஆம் ஆண்டுக் காலத்து இந்தியா இருந்தது. புதிய பேரரசின் வெண்கொற்றக் குடையின் கீழ், பழைய வாழ்க்கை மீண்டும் கொண்டுவரப்பட்டது. முன்பு ஆட்சி புரிந்த வெளிநாட்டவர்களைக் காட்டிலும் இப் புதிய ஆட்சியாளர்கள் மிகவும் அயலார்களாகக் காணப்பட்டார்கள் என்பது உண்மை. இவர்களுடைய பழக்க வழக்கங்கள் மிக்க புதுமை வாய்ந்தனவாகவும், அவர்களுடைய வாழ்க்கை முறை மிக வேறுபட்டதாகவும், அவர்களுடைய ஆணவம் குறிப்பிடத் தக்கதாகவும் காணப்பட்டது. ஆனல், அப்பொழுது ஏதோ நடந்தது. புதிய ஆட்சியாளர்கள் முன்பிருந்ததைக் காட்டிலும் மிகத் திறமையாக இந்திய நாட்டினைப் புதிய வகையில் திருத்தியமைத்தனர். அவர்கள் தன்முனைப்புடையவர்களாக இருந்தபோதிலும் சகிப்புத் தன்மையுடையவர்களாக இருந் தமை சிறப்புமிக்க செய்தியாகும். அவர்கள் இந்நாட்டினைக் கட்டிக் காப்பாற்றுவதற்காகவே, எதையும் கூர்ந்து கவனித்து ஆராய்ந்தனரேயொழிய, அதனை அழிப்பதற்காக அன்று. ஆனல், அவர்களுடைய முயற்சியால் புதிய எண்ணங்களும், புதிய கருத்துகளும், புதிய வாழ்க்கை முறைகளும் இந்நாட் டிற்கு வந்து சேர்ந்தன. அவற்ருல் உண்டான விளைவுகள் பல. அவற்றின் பரப்பையும் ஆழத்தையும் மதிப்பிட்டுரைப்பது அரிய செயல் என்பதை அவை மெய்ப்பித்துவிட்டன. இந்தியா வோடு பிரிட்டிஷார் கொண்ட தொடர்பின் மாட்சியினை நாம் இங்குதான் காண முடியும். மேலைநாட்டினரின் நாகரிகத் தினை இந்தியாவில் கட்டியங் கூறி வரவேற்றவர்கள் ஆங்கிலேய ராவர். சில சமயங்களில் நனவிலி நிலையிலும், சில சமயங் களில் இன்மகிழ் நலமார்ந்த ஆர்வத்துடனும், வேறு சில சமயங்களில் ஆர்வமற்ற மனத்தோடும் வெறுப்புற்ற உள்ளத் தோடும் அவர்கள் மேலைநாட்டினரின் நாகரிகப் பண்பாட்டின் கூறுகள் இந்தியாவில் செல்வாக்குடன் பரவுவதற்குரிய ஊர்தி களாகப் பயன்பட்டனர். இதனல்தான் அவர்களுடைய செல் வாக்கு இந்தியாவில் படைப்பாற்றல் வாய்ந்ததாக விளங்க முடிந்தது; இதனல்தான் பிரிட்டிஷாரின் ஆட்சிக் காலம் பிற் காலத்தில் உருவாகப்போகும் இந்தியாவின் அடிப்படையை

அமைத்துத்தந்த காலமாகப் பிற்காலத்து மக்களால் நோக்கப் படுகிறது. மொகலாயர்களின் ஆட்சிக் காலமாகிய இடைக் காலத்தைக் கடந்து, அறிவியலும் மக்களின் நலக் கோட்பாடும் (humanism) நிறைந்த புது யுகத்தினுள் இந்தியா அடியெடுத்து வைப்பதற்குரிய பாலத்தினை பிரிட்டிஷார் அமைத்துத் தந்தனர் என்று கூறின், அது மிகையாகாது.

பண்பாட்டின் உயிரணுக்களை எடுத்துச்செல்லுவதே பிரிட்டனின் தலையாய கடமையாக இருந்தது. ஆனால், இதுவே பிரிட்டனின் தலைசிறந்த பணியென்று எக் காரணத்தினாலும் கருதவேண்டாம். இந்தியாவின் ஒற்றுமையைப் பண்டை நிலைக்கு மீட்பித்ததும், நாட்டிலே அமைதியையும் ஒழுங்கையும் நிலைநாட்டியதுமே பிரிட்டனின் முதற்பெருஞ் சாதனையாகும். அவை தாமே உருவாகக்கூடியனவாகத் தோன்றினாலும், பிற்காலத்தில் தொடர்ந்து நிகழப்போகின்ற அனைத்திற்கும் அவை இன்றியமையாத முன்னேற்பாடுகளாக அமைந்தன என்று கூறலாம். ஆங்கில மொழி இந்தியாவினுள் புகுத்தப் பட்டது. அதனால் மேனாட்டு மக்களின் எழில்மிகு எண்ணங் களையும், கவினுறு கருத்துகளையும் இந்தியர் அறிவதற்குரிய கருவியாக ஆங்கிலம் அமைந்தது. ஆங்கிலேயச் சட்டம் இந்தியாவிற்குக் கொண்டுவரப்பட்டது. அதனால் பிரிட்டி ஷாரின் சட்ட நடைமுறை ஒழுங்கின் சிறப்புமிக்க நிலையை இந்தியர் அறிவது எளிதாயிற்று. ஆங்கிலேய இலக்கியத் தோடு மேனாட்டு ஒழுக்கநெறிக் கொள்கைகளும் சமயக் கோட்பாடுகளும் இந்தியாவிற்கு வந்தன. சமயத்தைப் பரப்புவோராகிய கிறித்துவ சமயத் தொண்டர் குழுக்கள் இந்தியாவிற்குள் நுழைவதற்கு இசைவளிக்கப்பட்டது. அக் குழுக்களின் அரும்பெருந் தொண்டு மேனாட்டு அறவியல், நல்லொழுக்க போதனைகள் செயற்படும் முறைக்குச் சிறந்த எடுத்துக்காட்டாக விளங்கியது. பொருளாதாரத் துறை யிலும் பிரிட்டிஷார் 'கொண்டுசெல்வோராக'ப் (carriers) பணி யாற்றினர். இந்தியாவினுள் புதிய இயந்திர யுகத்தைக் கொண்டுவந்து புகுத்தும் பிரதிநிதிகளாக அவர்கள் விளங் கினர். அவர்கள் இந்தியாவில் இருப்புப்பாதை முறையினை நிறுவினர். அதன்மூலம் அவர்கள் இந் நாட்டின் புதிய பொரு ளாதார வாழ்வின் நரம்பு மண்டலத்தை அமைத்தனர் எனலாம். இந் நாட்டின் பண்டைக் கைத்தொழில் முறைகளின் நலிவிற்கு ஆங்கிலேயர்கள் காரணமாக இருந்தார்களென்றால், இயந்திரத் தொழிற்சாலைகளை இந்தியாவில் புகுத்தி வளர்த்த வர்கள் ஆங்கிலேயர்கள் என்பதை நாம் மறந்துவிடக்கூடாது.

மேலும், உலகின் புதிய பொருளாதார வாழ்வு வளையத்திற்குள் இந்தியாவினை அவர்கள் கொண்டுவந்தனர் என்பதும் இங்குக் குறிப்பிடத்தக்க செய்தியாகும். மேனாட்டு நாகரிகத்தை முழுவதும் தழுவிப் பின்பற்றும் நாடாக இந்தியா மாறிவிடாது என்பது பிரிட்டிஷாரின் ஆட்சிக் காலத்திலேயே தெளிவாகப் புலனாயிற்று. சுதந்திரம் அடைந்ததுமுதல் இன்றுவரை இந்தியா முழுவதும் கீழ்நாட்டுப் பண்புடையதாகத் தொடர்ந்திராது என்பதைக் கழிந்த சில ஆண்டுகள் தெளிவாக விளக்குகின்றன. இந்தியப் பண்பாடு இறுதியில் கொள்ளத்தக்க வடிவம் யாதாக இருப்பினும், அவ் வடிவம் தற்பண்பு வாய்ந்ததாகவும் தனிச் சிறப்புடையதாகவும் விளங்கும் என்பதில் ஐயமில்லை. இத்தகைய பண்பாட்டினை உருவாக்குவதற்குப் பயன்படுத்தப்பட்ட செயற்பாங்கு பெரிதும் பிரிட்டிஷாரின் செல்வாக்காகிய முத்திரையைப் பெற்றதாகவே காணப்படும்.

இத்தகைய வளர்ச்சிகளும் முன்னேற்றங்களும் 1740ஆம் ஆண்டில் எதிர்காலம் என்னும் திரைக்குப் பின்னால் நெடுந்தொலைவில் மறைந்திருந்தன எனலாம். அவ்வாண்டுவரை 'இடைக்காலம்' என்னும் இன்னல் மிகுந்த யுகமானது முடிவடையப்போகிறது என்பதை இந்தியா உணரவே இல்லை. இதற்கு முந்தைய ஆண்டில் நாதிர் ஷாவின் திடீர்த் தாக்குதல்களால் வட இந்தியாவில் மொகலாயப் பேரரசு ஆட்டங்கொடுக்கத் தொடங்கியது. ஆயினும், அது இன்னும் ஆட்சிபுரியும் ஓர் அரசாகவே இருந்துவந்தது. தில்லி மாநகர்வரை நாதிர் ஷா முன்னேறிவந்தமை முறையான ஒரு படையெடுப்பாகத் தோன்றவில்லை. ஆனால், திட்டமிட்டுப் பேரளவில் சூறையாடும் கொள்ளைக் கூட்டத்தினரின் செயலாகவே அப் படையெடுப்புக் காணப்பட்டது. இவ்வாறு நாதிர் ஷாவின் படையெடுப்பு அமைந்தமையால், அதனால் உண்டான விளைவுகள் அழிவுத் திறத்திலும் சீர்குலைவிலும் குறைந்த அளவினவாக இருந்தன. பதினெட்டாம் நூற்றாண்டின் முதல் இருபதாண்டுகளில் வட இந்தியாவில் 'பல்குழுவும் பாழ் செய்யும் உட்பகையும்', குழப்பங்களும், கலகங்களும் தோன்றின. அதன் விளைவாக மொகலாயப் பேரரசு ஓரளவிற்கு உறுதிப்பாட்டினைத் திரும்பப் பெற்றதைப்போன்று காட்சியளித்தது உண்மையாகும். பதின்மூன்றாண்டுகளில் முழுமை நிறைவு கொண்ட நான்கு உள்நாட்டுப் போர்கள் திடீரென்று தோன்றின. இவை இன்னும் பன்னிரண்டு ஆண்டுகளுக்குத் திரும்பத் திரும்பத் தொடர்ந்து நடைபெறுமற்

போயிற்று. மொகலாயப் பேரரசு இக்காலத்தில் காபூலை இழந்தது. எனினும், பஞ்சாப், சிந்து, காஷ்மீர் மாநிலங்களை அது உறுதியாகக் கைக்கொண்டிருந்தது. இதைப்போன்றே குஜராத் மாநிலமும், வங்காள விரிகுடாக் கடல்வரையில் பரவியிருந்த கங்கைச் சமவெளியும் மொகலாயர்களால் ஆளப்பட்டு வந்தன. வங்காளம்மட்டும் பாதியளவிற்குச் சுதந்திரம் பெற்றிருந்தது. எனினும், அது பேரரசின் மேலாண்மையை ஏற்று, அவருக்குத் திறைப்பொருள் செலுத்திவந்தது. இராஜபுத்திர அரசுகள் செயலற்றுக் கிடந்தன. மொகலாயப் பேரரசு கம்பீரமான தோற்றத்துடன் இன்னும் உலகிற்குக் காட்சியளித்தது. ஆனல், அதற்கு அருகில் நெருங்கிச் சென்ற பார்வையாளர்களே அதனுடைய உண்மையான வடிவத்தைக் கண்டறிந்தனர். அவர்கள் அப்பேரரசு ஆற்றலின்றிச் சீரழிவுற்றிருப்பதைக் கண்டனர். மேலும், அது தவிர்க்க முடியாத வகையில் வீழ்ச்சியினை நாடி விரைந்து சென்றுகொண்டிருப்பதையும் கண்டு அவர்கள் ஐயுற்றனர். அப் பேரரசில் அரசியற் சூழ்ச்சித்திறன் பெறவேண்டிய இடத்தைச் சந்தர்ப்பவாதம் கைப்பற்றிக்கொண்டது. தலைமைப் பதவிக்கிடையே இளக்காரவாதம் இடம்பெற்றது. பேரரசரிடத்துக் கொண்டிருந்த அரசப் பற்றுறுதி தனிப்பட்ட மனிதரின் பேராசைக்கு இடம் தந்தது. பேரரசின் இடத்தைக் கைப்பற்ற வேறு எத்தகைய புதிய செயல்முறைக் கொள்கையோ, தத்துவமோ தோன்ருமற்போயிற்று. வடமேற்குப் பகுதியில் உண்டான தொல்லைகளாலும் துன்பங்களாலும் புதிதாகப் படைக்கு ஆள் சேர்ப்பதற்கு உதவும் ஊற்று வறண்டுபோயிற்று. பேரரசரின் சலுகையினுலேயே அவர்களுடைய வாழ்வு வளம்பெற்று விளங்கியது. அவர்களுடைய ஆற்றலே, பேரரசு பெருஞ்சுமைகளைத் தாங்கி நிலைகுலையாது நிற்க உதவியது. ஆனல், இப்பொழுது அவ்வூற்றே வற்றத் தொடங்கியமை பேரரசிற்குப் பேரதிர்ச்சியைத் தந்தது.

நெடுந்தொலைவிலுள்ள தென்னுட்டில் காணப்பட்ட அரசியல் நிலை மொகலாயப் பேரரசிற்கு நன்மை பயப்பதாகவோ, நம்பிக்கையளிப்பதாகவோ இல்லை. அவுரங்கசீப்பின் அதிகாரிகளுள் கடைநிலையில் இருந்தவரும், முதல் நைசாமாகச் சிறப்புற்று விளங்கியவருமான ஆஸப்ஜா என்பவரின் தலைமையின்கீழ், மொகலாயப் பேரரசின் தெற்குப் பகுதியாகிய தக்கண மாநிலங்கள் பேரரசிலிருந்து பிரிந்து சென்றன. அவை ஆஸப்ஜாவின் தலைமையின்கீழ்த் தனிப்

பட்ட ஓர் அரசாகத் திகழத் தொடங்கியமை இங்குக் கருதத் தக்கதாகும். நடு இந்தியாவிலிருந்த இடைவெளிகள்மூலமாக மராட்டிய அலைகள் பாய்ந்தோடிக்கொண்டிருந்தன. அவ் வலைகள் வடக்கில் இரஜபுத்திரர்களையும், மேற்கில் குஜராத் தினையும், கிழக்கிலுள்ள வங்காளத்தையும் ஒரிசாவையும் அச்சுறுத்திக்கொண்டிருந்தன. ஐதராபாத்மட்டும் இரண்டு பக்கங்களிலும் அச்சுறுத்தப்பட்டுவந்தது. திடீரென வந்து சூறையாடிவிட்டு உடனே மறைந்துவிடுதல், பாகுபாடற்ற முறையில் கொள்ளையடித்தல், விரைவிலேயே அவ்விடத்தை விட்டுத் திரும்பிச் செல்லுதல்போன்ற முறைகளை மராட்டியர் பின்பற்றிவந்தனர். இம் முறைகளால் நாட்டுப்புறப் பகுதிகள் அல்லோலகல்லோலப்பட்டன. வருவாயில் நான்கில் ஒரு பங்கை மராட்டியர் காப்புரிமை வரியாகத் தண்டி வந்தனர். அவ் வரிக்கு 'சௌத்' என்பது பெயராகும். மக்களைப் பகைவர்களிடமிருந்து காத்துவருவதற்காக அவ் வரியை மராட்டியர் தண்டிவந்தனர். மக்கள் தங்கள் காப் புரிமைக்காகச் செலுத்திவந்த இவ் வரி நாட்டின் நிதிநிலையைப் பாழ்படுத்தியது. அவுரங்கசீப்பு தக்கணத்தின்மீது அடிக்கடி படையெடுத்துவந்தமையால் உண்டான பேரழிவுகளினால் தக்கண மாநிலங்களின் அரசியல் அணைக்கரைகள் அழித் தொழிக்கப்பட்டன. அதுமுதல் தக்கணம் முழுவதும் பொரு ளாதாரச் சீரழிவில் சிக்கிச் சிதையத் தொடங்கியது.

மேற்குப் பகுதியில் மராட்டியர் ஆதிக்கம் பூனாவை நடு மையமாகக்கொண்டு சிறந்தோங்கியது. பேஷ்வாக்கள் பூனா விலிருந்து மராட்டிய மாநிலத்தை ஆண்டுவந்தனர். மராட்டி யரின் ஆட்சிக்குட்பட்ட நாட்டின் பரப்பெல்லை தெளிவாக வரையறுக்கப்படாமல் இருந்துவந்தது. அவர்களுடைய ஆட்சியமைப்பு ஆற்றல்மிக்க ஒருமைப்பாடுடையதாக இல்லை. ஆனால், மராட்டியரின் ஆட்சிக்குட்பட்ட பகுதிகள் முழுவதிலும் பேஷ்வாவின் ஆதிக்கம் பரவியிருந்தமை இங்குக் குறிப்பிடத் தக்கதாகும். இன்னும் அங்கு மராட்டியக் கூட்டிணைப்புக்குப் பதிலாக மராட்டியப் பேரரசே இருந்துவந்தது. மராட்டி யரின் ஆதிக்கம் நாளுக்கு நாள் வளர்ந்துகொண்டுவந்தமை வெளிப்படையாகவே தோன்றலாயிற்று. அவ்வாதிக்கம் நன் முறையில் அமைக்கப்பட்டதாகவும் காணப்பட்டது. இந்திய மக்களின் சார்பில் அக் காலத்தில் இயங்கும் சக்தியாக இருந்தது மராட்டியரின் எழுச்சியேயாகும். அவ்வெழுச்சி உண்டாகாமல் இருந்திருந்தால், இந்திய வரலாற்றில் ஒரு தேக்கநிலைதான் உண்டாகியிருக்கும்; வேறு எத்தகைய

செயல்நிலையையும் காணமுடியாமற்போயிருக்கும். ஆனால், மராட்டியர் தெளிவான நம்பிக்கையுடையவர்களாகவும் வலியத் தாக்கிப் போரிடுபவர்களாகவும் இருந்தார்களே யொழிய, பேரரசை நிறுவவேண்டும் என்பதைக்குறித்து அவர்கள் தெளிவான கருத்துடையவர்களாக இருக்கவில்லை. அவர்கள் மொகலாயப் பேரரசிற்குப் போட்டியாக விளங்காது, மொகலாயரின் பேராதிக்க உரிமையினைப் பறிக்கும் அச்சுறுத்துவோராகவே இருந்தனர்.

கிருஷ்ணை ஆற்றிற்குத் தெற்கே, கருநாடகத்தின் கடற்கரையோர மாநிலம் தஞ்சாவூர்வரையில் பரவியிருந்தது. இக்காலத்தில் தஞ்சை மராட்டியரால் ஆளப்பட்டுவந்த சிற்றரசாக இருந்தது. அவ்வரசு நைசாமினுடைய ஆதிக்கத்திற்குட்பட்ட ஒரு சிற்றரசாக இருந்துவந்தது. இந்நிலை 1748ஆம் ஆண்டு நைசாம் இறக்கின்றவரை தொடர்ந்திருந்துவந்தது. மலபார் கடற்கரைப் பகுதி இதுவரை இந்தியாவின் மற்றப் பகுதிகளிலிருந்து பெரிதும் மேற்கு மலைத்தொடரினால் பிரிக்கப் பட்டிருந்தது. இங்குக் கள்ளிக்கோட்டையைத் தலைநகராகக் கொண்டு சமோரின் (Zamorin) என்னும் அரசர்கள் ஆண்டு வந்தனர். அதற்கப்பால் தெற்கே இருந்த பகுதியைக் கொச்சி அரசரும் திருவாங்கூர் அரசரும் தங்களுக்கிடையே பகிர்ந்துகொண்டு ஆட்சிபுரிந்துவந்தனர். இக்கேரளப் பகுதி பன்னெடுங்காலமாகக் கீழைநாடுகளுக்கும் மேலைநாடுகளுக்கும் இடையே நடைபெற்றுவந்த நறுமணப் பொருள்களின் சந்தையாக இருந்துவந்தது. மேலைநாட்டவர்கள் தங்கள் பொன்னையும் பொருளையும் கொண்டுவந்து இங்குக் கொடுத்துவிட்டு, அதற்கு ஈடாக நறுமணப் பொருள்களைப் பெற்றுச் செல்லுவது வழக்கம். ஆனால், இப்பொழுது மலபார்ப் பகுதி மேலைநாட்டவரும் கீழைநாட்டவரும் தங்கள் வாணிகப் பொருள்களைக் கொண்டுவந்து குவித்து, தங்களுக்கு வேண்டிய பொருள்களைப் பண்டமாற்றாகப் பெறும் வாணிக நிலைக்களனாக விளங்கவில்லை. ஏனென்றால், கிழக்கிந்தியத் தீவுகளிலிருந்து நறுமணப் பொருள்களை ஏற்றிக்கொண்டு வந்த கப்பல்கள் நன்னம்பிக்கை முனைக்கும் ஐரோப்பாவிற்கும் செல்லுகின்றபொழுது மலபார் பக்கத்தே உள்ள கடல்வழியாகச் செல்லத் தொடங்கின. மேலும், புதிதாக வாணிகத்திற்குப் பயன்பட்ட பொருள்களான துணிகள், சாயப் பொருள், வெடியுப்பு முதலியன வேறிடங்களில் கிடைத்தமையால், மலபார் கடற்கரை பெற்றிருந்த வாணிகச் சிறப்பு மெல்ல மறைந்தொழிந்தது. கட்டுப்பாட்டிற்குட்பட்ட உள்

நாட்டு வாணிகமே மலபார் பகுதியில் அக்காலத்தில் நறுமணப் பொருள்களில் செய்யப்பட்டுவந்தது. அதையும் ஐரோப்பியக் கம்பெனிகளின் ஆதிக்கத்திற்குட்பட்டு இயங்கிய சிறு வாணிகக் குழுக்கள் செய்துவந்தன. மலபாருக்கும் கருநாடகத்திற்கும் இடையே இந்து இராச்சியமான மைசூர் இருந்து வந்தது. விஜயநகரப் பேரரசின் அழிவினை அடிப்படையாகக் கொண்டும், மொகலாயருக்கும் மராட்டியருக்கும் இடையே நடைபெற்றுவந்த போர்களினால் உண்டான நிலைமாற்றத்தை அடிப்படையாகக்கொண்டும் மைசூரரசு தோன்றியது. அது என்றும் வரம்புக்குட்பட்ட ஆதிக்கத்தினை உடையதாகவே இருந்துவந்தது. ஆனால், அவ்வரசு தன்னாட்டுப் பற்றாகிய உயிர்த்துடிப்பற்றதாகவும், அயல்நாட்டு ஆட்சியாளரின்கீழ்க் குறிப்பிட்ட சிறிது காலத்திற்கு நிலையற்ற புகழைப் பெறக் கூடியதாகவும் இருந்துவந்தமை இங்குக் குறிப்பிடத்தக்கதாகும்.

ஐரோப்பியரின் கம்பெனிகளைப்பற்றியும், அவர்களுடைய குடியிருப்புகளைப்பற்றியும் சில சொற்கள் சொல்லவில்லை யென்றால், அன்றைய இந்தியாவின் நிலையை முழுவதும் படம் பிடித்துக் காட்டியதாகக் கூறமுடியாது. பதினாரும் நூற்றாண்டின் பழம்பொருட்காட்சிச்சாலையாகப் போர்ச்சுகீசியரின் கோவா (Goa) காட்சியளித்தது. அந் நகரத்தில் வாணிக வளத்தைக் காட்டிலும் திருச்சபைகளின் வளப்பத்தையே காண முடிந்தது. வேறு எத்தகைய வளமும் அந் நகரில் இருந்தது என்று கூறவே முடியாது. அந் நகரின் தெருக்களில் படை வீரர்களைக் காட்டிலும் துறவிகளே பெரும்பான்மையினராக உலாவிக்கொண்டிருந்தனர். பம்பாய் பிரிட்டிஷாருடைய நகரமாக இருந்தது. ஆயினும், பம்பாய் செல்வம் கொழித்த சூரத்தின் வழிவந்த வளமார்ந்த நகரமாக விளங்கவில்லை. அதற்கு மாறாக, சட்டப்படி உறுதியான உரிமை பெற்ற நகரமாகவே அது விளங்கலாயிற்று. மதராசிலும் கல்கத்தாவிலும் இருந்த பிரிட்டிஷாரின் குடியிருப்புகள் இயற்கை வளத்தாலும் செல்வத்தாலும் சிறப்புற்றிருந்தன; அதனுடன் மக்கள் நெருக்கடியுடையனவாகவும் இருந்தன. ஆனால், அவை அரசியல் ஆதிக்கத்தின் நிலைக்களங்களாக விளங்காமல் வாணிகத் தலங்களாகவே தழைத்தோங்கின. ஃபிரெஞ்சுக்காரர்களின் புதுச்சேரியும் இத்தகைய செயல் முறைகளைக் குறைந்த அளவில் செய்துவரும் நகரமாக விளங்கியது. ஃபிரெஞ்சுக்காரர்களுடைய சந்திரநாகூரும், டச்சுக்காரர்களுடைய சிஞ்சுராவும் (Chinsura) நாகப்பட்டின

மும், டேனியர்களுடைய தரங்கம்பாடியும் இந்தியாவில் ஐரோப்பாவைச் சேர்ந்த மற்ற நாடுகளின் குடியிருப்புத் தலங்களாக இருந்துவந்தன. அவையனைத்தும் அரசியல் முக்கியத்துவமற்ற வாணிகத் தலங்களாகவே இருந்துவந்தன.

அயல்நாட்டு வாணிகம் ஆதாயம் மிக்கதாகவும் ஊற்றமுடையதாகவும் நடந்துகொண்டிருந்தது. ஆனால், அவ்வயல்நாட்டு வணிகம் இந்தியாவின் முழுப்பொருளாதார வாழ்வின் ஒரு சிறு பகுதியையே உருவாக்கியது என்பது இங்கு நினைவு கூரத்தக்கதாகும். உள்நாட்டில் கிடைத்த பொருள்கள், போக்குவரத்து வசதிகள் நன்கு அமைந்திருந்த துறைமுகங்களுக்கே பேரளவில் கொண்டுசெல்லப்பட்டன. அக்காலத்துப் போக்குவரத்து வசதிகளுள் ஆற்றுவழிப் போக்குவரத்து முக்கியமானதாகும். இந்தியாவின் பொருளாதார வாழ்வு அக் காலத்தில் தேக்கநிலை அடைந்திருந்தது அல்லது நலிந்து கொண்டிருந்தது என்று பொதுவாகக் கூறலாம். அக் காலத்தில் பொருள்களை உற்பத்தி செய்வதற்காகச் செய்யப்பட்ட செலவு மிகச் சிறிதளவினதேயாகும். இந் நாட்டில் கிடைத்துவந்த வருவாயின் எஞ்சிய பகுதி முழுவதும் படைத்துறை நிர்வாகத்திற்கே செலவழிக்கப்பட்டுவந்தமையால், சிறிதளவு பொருள்கூட உற்பத்திக்காகச் செலவழிக்கப்படவில்லை. மிகப் பரந்த இந்தியாவின் பல பகுதிகளில் படைத்துறைப் பாதுகாப்புச் செயல்களைச் செய்யவேண்டியிருந்தமையால், உற்பத்தி உண்மையிலேயே குறைந்துகொண்டுவந்தது. மேலும், போரும் பூசலும் உண்டாக்கிய பாதுகாப்பின்மையும், போரினால் உண்டான அழிவுகளும் உற்பத்தியைப் பெருக்குவதற்கு இடையூறாக அமைந்தன. எனவே, உற்பத்திப் பெருக்கம் நாளடைவில் குன்றிப்போயிற்று. இக் காரணத்தினாலேயே மக்கள் வாழ்க்கையின் பொதுநிலைத் தரம் பையப் பையக் குறையத் தொடங்கியது எனலாம். அக் காலத்திலிருந்துவந்த நிலையைச் சீர்திருத்துவதைப்பற்றியும், முன்னேற்றமடையுமாறு செய்வதற்குரிய நடவடிக்கைகள் எடுப்பதைப்பற்றியும் கருத்தைச் செலுத்தாது, அக் காலத்து நிலைமை சீர்குலைந்துபோகாமல் காப்பதற்காகவே பெரிதும் கருத்துச் செலுத்தப்பட்டுவந்தமை குறிப்பிடத்தக்கதாகும். அவுரங்கசீப்பினுடைய ஆட்சியின் இறுதிக் காலத்தில் மக்கள் ஷாஜகானுடைய வளமிக்க ஆட்சிக் காலத்தை நினைந்து நினைந்து, 'அந்த நாளும் வந்திடாதோ!' என்று எண்ணி ஏங்கினர். 1740ஆம் ஆண்டளவில்தான்—அவுரங்கசீப்பின் ஆட்சிக் காலத்தில்தான் கடந்த காலத்து ஆட்சியைப்பற்றி

மக்கள் எண்ணுத எண்ணமெல்லாம் எண்ணி ஏங்கி நின்றனர். அவுரங்கசீப்பின் ஆட்சிக் காலத்தில் உயிருடன் வாழ்ந்தவர்களுள் நைசாம்-உல்-முல்க் போன்றவர்கள், மாண்புமிக்க பொற்காலத்தைச் சேர்ந்த பேராற்றல் வாய்ந்த பெரிய மனிதர்களாக மக்களால் போற்றப்பட்டனர்.

நாட்டின் பொதுவான நாகரிகப் பண்பாட்டு நிலை, நாட்டிற்குண்டான சீர்கேடுகளால் பெரிதும் பாதிக்கப்பட்டிருந்தது. பண்பாட்டின் வளர்ச்சி போற்றி வளர்ப்பாரைப் பொறுத்திருந்தது. சான்ருண்மைமிக்க பெரிய மனிதர்கள்கூட அக் காலத்தில் அதிகாரத்தைக் கைப்பற்றவேண்டும் என்னும் ஆர்வத்தோடு அரசியலில் ஈடுபட்டிருந்தமையாலும், வாழ்க்கைப் போராட்டமே மக்களுடைய நேரத்தைப் பெரிதும் கவர்ந்துகொண்டமையாலும் கலைகளைப் போற்றி வளர்ப்பதற்குரிய வாயில்கள் அடைபட்டுப்போயின. அக் காலத்தில் எத் துறையிலும் சிறிதளவு வளர்ச்சியைக்கூடக் காணமுடியவில்லை. ஆனல், அக் காலத்து மக்களுடைய வாழ்க்கையின் பல்வேறு துறைகள் பையப்பைய வீழ்ச்சியை நோக்கி விரைந்து சென்றுகொண்டிருந்தன. மொகலாயருடைய கட்டடங்கள் பழைய பாணியும் கலைமுறைக் கருத்துகளும் தொடர்ந்து பின்பற்றப்பட்டுவந்ததைக் காட்டுகின்றன. ஆனல், அவற்றிடையே அழகு நுகர்ச்சியில் நலிவும், பயன்படுத்திய பொருள்களில் தரக்குறைவும், பல்வேறு குறைபாடுகளும் காணப்படுவது இங்குக் குறிப்பிடத்தக்கதாகும். இதற்குச் சான்ருக, தில்லியில் 1756ஆம் ஆண்டில் கட்டப்பெற்ற சஃப்தார் ஜங்கினுடைய கல்லறையைக் குறிப்பிடலாம். இக் கல்லறையை, இதற்கு நூருண்டுகளுக்கு முன்னர் கட்டப்பெற்ற ஜும்மா மசூதியோடு ஒப்பிட்டுப்பார்த்தால், இந் நலிவையும் தரக்குறைவையும் நாம் நன்குணரலாம். ஆயினும், அக் காலத்திலும் தலைசிறந்த கொத்தனர்களும், கட்டடக் கலைஞர்களும், கைத்தொழில் வினைஞர்களும் இந்தியாவில் வாழ்ந்துவந்தனர் என்பதில் சிறிதும் ஐயமில்லை. ஆனல், அவர்களுக்குத் தேவையான அளவிற்கு நாட்டிலே ஆதரவு கிடைக்கவில்லை. மேலும், அவர்களுக்கு அறிவுத்திறன்மிக்க தலைவர்களும், அறிவுரை கூறி நெறிப்படுத்தும் கலையுலகச் சுவைஞர்களும் இல்லாமற்போயினர் என்றே கூறலாம். ஓவியக் கலைக்கும் இவ்வுண்மை முற்றிலும் பொருந்துவதாகும். நேர்த்தியான எழில்நலமிக்க பொருள்களைப் படைக்கும் கைவண்ணம் வாய்க்கப்பெற்ருேர் அக் காலத்திலும் இருந்தனர். ஆனல், அவர்களைப் போற்றி ஆதரித்த முறை, ஒழுங்

கற்றதாகவும் நெறிபிறழ்ந்ததாகவும் இருந்தது. மதிநுட்பத்தின் பேரொளி இமைப்பொழுதில் மறைந்துவிடும் நிலை பேறற்ற தன்மையுடையதாக அக் காலத்தில் இருந்தது. இந்து சமயச் சார்பான கலையும் இஸ்லாமியக் கலையும் மக்களின் புறக்கணிப்பால் பெரிதும் இடர்ப்பாடுற்றன. அவ்விரு கலைமரபுகளையும் பயிலுவதற்காகப் பொருள் செலவிடப் பெறாததால், அவ்விரு கலைகளையும் பயிலுவதில் மக்களுடைய ஆர்வம் குன்றியது. அதனால் அவை வளர்ச்சியற்றுப் போயின. நெடுந்தொலைவிலுள்ள தென்னாட்டில்தான் மாபெருங் கட்டடங்களைக் கட்டும் கலைமரபு இன்னும் அழிந்து விடாது குற்றுயிராகக் கிடந்தது. வட இந்தியாவின் மலைப் பகுதிகளிலும் பாலைவனப் பகுதியிலும்மட்டுமே நேர்த்தி வாய்ந்த ஓவியக் கலை தொடர்ந்து போற்றிப்பட்டுவந்தது. அறிவாராய்ச்சித்துறையிலும் சமயத்துறையிலும் இந் நிலையே நிலவிவந்தமை குறிப்பிடத்தக்கதாகும். இஸ்லாமிய சமயத்தில் அறிவுநலம் சான்ற அறிஞர்கள் இருந்தனர். ஆனால், புதிய கொள்கைகளோ, கோட்பாடுகளோ அச் சமயத்திலும் தோன்றியதாகத் தெரியவில்லை. இந்து சமயத்தினுள்ளே பதினைந்தாம் நூற்றாண்டுமுதல் பதினேழாம் நூற்றாண்டுவரை தோன்றிய பக்தி இயக்கத்தினைப்போன்றோ, வேறு சமய வழிபாட்டு மரபுகளோ இக் காலத்தில் தோன்றவில்லை. சீக்கிய சமயத்தை நிறுவிய குருநானக்கு அவர்களின் சமய நெறியினைப்போன்றனவும், கபீர்தாசரைப் பின்பற்றிய கபீர் நெறியினர் போற்றிய சமயக் கோட்பாடுகளைப்போன்றனவுமான (சமய) சமரச சன்மார்க்க இயக்கங்களும் காலப் போக்கில் வேறு வகையாக மாறத் தொடங்கின. 'தாங்கள் ஏந்திய வாளே தங்கள் சமய நெறி' என்று கருதத்தக்க படைத்துறைக் கழகங்களாகவோ அல்லது பெற்றதைக் கொண்டு 'போதுமென்ற' உள்ள உணர்வுடன் வாழ்க்கையில் அமைதி காண விழையும் துறவுள்ளம் வாய்ந்தவர்களின் கழகங்களாகவோ அவை நாளடைவில் மாற்றமுற்றன. இதன் விளைவாக இச் சமய இயக்கங்கள் புதிய சாதிகளாக மாற்றப் பட்டன. ஆயினும், துறவிகள் ஒன்றுபட்ட உள்ளம் உடையவர்களாகக் கூடிப் படைக்குழுக்களை அமைத்த மனநிலையாகிய ஒரேயொரு சிறப்புமிக்க வளர்ச்சியைத்தான் அக் காலத்துச் சமயத்துறையில் நாம் காணுகின்றோம். சிறப்பாக வட இந்தியப் பகுதிகளில் படைக்கலம் ஏந்திய துறவிகளின் குழுக்கள் பல தோன்றின. அக் குழுக்களின் உறுப்பினர்கள் தங்கள் தலைவனாகிய இறைவனுக்காக வீரதீரம் உடையவர்களாக நாடெங்கும் சுற்றித் திரிந்தனர். அவர்களைக் கண்டு

நாட்டுப்புறத்து மக்கள் திகிலடைந்ததைத் தவிர வேறொரு பயனும் விளைந்ததாகத் தெரியவில்லை.

பொதுவாகச் சமுதாயத்தில் உண்டான கட்டுதிட்டங்களால் சமுதாய வாழ்வும் சீர்குலையலாயிற்று. நிலைபேறுடைய வாழ்க்கைநிலை இருந்துவந்த காலத்தில் இந்துக்களுடைய வாழ்வினை நலியச் செய்த அல்லது தன்னம்பிக்கை இழக்கச் செய்த பண்புகள் அனைத்தும் இக் காலத்தில் பெருகி வளர்ந்ததைக் காணுகின்றோம். மொகலாயர்களால் அருவருப்புடன் வெறுக்கப்பட்ட 'உடன்கட்டை'யேறுதலாகிய 'சதி', அவர்களுடைய ஆதிக்கம் நலியத் தொடங்கியவுடனே, மீண்டும் புத்துயிர் பெற்றது. மக்களுக்கு அளிக்கப்பட்டுவந்த பாதுகாப்புக் குறைந்தமையாலும், பொருளாதார நெருக்கடியின் விளைவாகப் பணமுடை உண்டானமையாலும் குழந்தைகளைக் கொலைசெய்யும் முறை போற்றி ஆதரிக்கப்பட்டமை இங்குக் கருதத்தக்கதாகும். இக் காரணத்தை அடிப்படையாகக்கொண்டே இந்துக்களிடையிலும் முஸ்லீம்களிடையிலும் மகளிர் முகமூடி அணியும் 'பர்தா' (Purdah) எனப்படும் 'ஒதுக்கிவைப்பு' முறை பெருவழக்காயிற்று. அடிப்படைக் கல்வியான நெடுங்கணக்கு அறிவும், எண்சுவடி அறிவும், கலைகளைப் போற்றி வளர்க்கும் அடிப்படை அறிவும் தவிர, மற்ற உயர்நிலைக் கல்வி அனைத்தும் மேன்மேலும் செல்வமும் செல்வாக்குமுடைய பெரிய மனிதர்களின் பிள்ளைகளுக்கே உரியதாயிற்று. இந்திய மக்கள் வாழ்க்கையின் பல்வேறு துறைகளில் எல்லாம் வரவரப் பெரிதும் கடந்த காலத்து அடிப்படையின்மீது வாழ்வதே பெருகிவரலாயிற்று. பண்பாட்டுத்துறையில் குறிக்கோளும் ஆற்றலுமற்ற குறைபாடு பெருகலாயிற்று. இதைப்போன்றே பொருளாதாரத்துறையிலும் நம்பிக்கையும் துணிச்சலும் இல்லாத அலவநிலை உண்டாயிற்று. பொதுவாழ்வில் அச்சுறுத்தும் நேர்மையற்ற நோக்கங்கள் அணியணியாகத் தோன்றின. அன்றைய இந்தியாவில் ஆற்றலும், திறமையும், மதிநுட்பமும் பேரளவில் இருந்தன. ஆனால், அவை அவற்றுக்கிடையே காணப்பட்ட மாறுபட்ட இலட்சியங்களுக்காகப் பயன்படுத்தப்பட்டன; அல்லது பயனற்ற பெரு முயற்சிகளில் அவையனைத்தும் வீணாக்கப்பட்டன. இந்தியாவில் தந்நிகரற்று விளங்கிய மொகலாயர்களுக்கு அக் காலத்திலும் 'நல்லதோர் எதிர்காலம்' காத்துக்கிடப்பதை அறிவுறுத்தும் அறிகுறிகள்

மிகப் பலவாகத் தோன்றின. ஆனால், 'ஆண்டவனின் கட்டளை வேறு வகையாக இருந்தது'* என்று கூறலாம்.

## ஆதாரங்கள்

ஜேம்ஸ் மில் (James Mill). 'History of British India' (1817). *1835* வரை முற்றுப்பெறுமாறு H. H. வில்சன் *(1840)* செய்துள்ளார். பழைய வரலாற்று நூல்களில் இந் நூல் முதன்மையானதாகும். மெக்காலே, கிப்பனின் 'ரோமப் பேரரசின் நலிவும் வீழ்ச்சியும்' என்னும் நூலுடன் இதை ஒப்பிட்டுக் கூறியுள்ளார். இந் நூலில் ஒருதலைச் சார்பான கருத்துகளும், சில தவறான முடிவுகளும் காணப்படுகின்றமையால் கிப்பனின் நூலிற்குரிய பெருஞ் சிறப்பு இந் நூலிற்குக் கிடைக்கவில்லை. இவ் வரலாற்றைக் கூறும் சிறு நூல்களை E. தார்ன்டன் (E. Thornton), J. C. மார்ஷ்மன் (J. C. Marshman), W. பெவிரிட்ஜ் (W. Beveridge) என்போர் எழுதியுள்ளனர்.

தற்காலத்தில் தலைசிறந்து விளங்கும் நூல் H. H. டாட்வெல் (H. H. Dodwell) என்பவரால் பதிப்பிக்கப்பெற்ற 'கேம்பிரிட்ஜ் இந்திய வரலாறு'—தொகுதி *5, 6 (1929-1932)* என்பன. இந் நூல்கள் சீரான தரத்தோடு இல்லாமலிருந்தாலும், முறையாகத் திட்டமிட்டு எழுதப்படாமலிருந்தாலும், பொதுவாக நோக்குகின்றபொழுது ஆதாரங்கள் நிறைந்தனவாகவும், விரிவான நூல் அட்டவணைகளையுடையனவாகவும் காணப்படுகின்றன. இந் நூல்களில் பதினெட்டாம் நூற்றாண்டைப்பற்றிய பகுதியும், ஆட்சிமுறையைப்பற்றிய பகுதியும் மிகச் சிறந்த அதிகாரங்களாகும்.

அக் காலத்து வரலாற்றைச் சுருக்கமாகக் கூறும் பொது வகையான வரலாற்று நூல்களில் பின்வருவன சிறப்புமிக்கனவாகும்:

*(1)* B. E. இராபர்ட்ஸ் (B. E. Roberts). 'History of British India' *(3ஆம் பதி., 1952)*. இந் நூல் ஆராய்ச்சித் திறனுடையதாகவும், நடுவுநிலை பிறழாததாகவும் எழுதப்பட்டுள்ளமை இங்குக் குறிப்பிடத்தக்கதாகும்.

*(2)* E. தாம்ப்சனும் (E. Thompson) G. T. காரெட்டும் (G. T. Garret). 'Rise and Fulfilment of British Rule in India' *(1934)*. இந் நூல் உணர்ச்சியைத் தூண்டி அதிர்ச்சி தரத்தக்க நூலாகும். இந் நூலில் பொருளாதார வளர்ச்சியும், பண்பாட்டு வளர்ச்சியும், இந்தியத் தேசிய உணர்வின் எழுச்சியும் முக்கியமான இடத்தைப் பெற்றுள்ளன.

*(3)* சர் A. லயால் (Sir A. Lyall), 'Rise of British Dominion in India' *(3ஆம் பதிப்பு, 1896)*. நேர்மையான உள்ளத்

* சீனப் பழமொழி.

துடன் பேரரசுக் கோட்பாட்டின் அடிப்படையில் இந் நூல் எழுதப்பெற்றுள்ளது.

*(4)* L. S. S. ஓ'மலே (L. S. S. O'Malley) பதிப்பித்த 'Modern India and the West' *(1941)*. பலருடைய கூட்டு முயற்சியால் உருவாக்கப்பட்ட இந் நூல் பண்பாட்டின் வளர்ச்சியைச் சித்திரிக்கிறது. இப் பதிப்பாசிரியர் 'Indian Civil Service' பற்றி எழுதிய நூல் சிறப்பு மிக்கதாகும்.

இந்தியாவின் பொருளாதார வரலாற்றைப்பற்றிய நூல்கள் தற்காலத்தில் ஒன்றும் வெளிவரவில்லை. R. C. தத்தரின் (R. C. Dutt) இரண்டு தொகுதிகளாலான 'இந்தியப் பொருளாதார வரலாறு' ஐம்பதாண்டுகளுக்கு முன்பு எழுதப் பட்டதாகும். V. ஆன்ஸ்டே (V. Anstey) அவர்களின் 'இந்தியப் பொருளாதார வளர்ச்சி' (Economic Development of India) *(3ஆம் பதி., 1949)* என்னும் நூல் ஆராய்ச்சி நூலே யன்றி வரலாற்று நூலாகாது.

அக்காலத்து வரலாற்றை இந்தியர்களும் எழுதியுள்ளனர். அவற்றுள் 'இந்தியாவின் சிறப்பு வரலாறு—மூன்றும் பகுதி' (An Advanced History of India – III Part) R. C. மஜூம்தார், H. C. ராய்சௌத்திரி, K. K. தத்தர் ஆகியோரால் எழுதப்பட்டிருக்கிறது *(1946)*. பிரிட்டிஷாரின் ஆட்சிக்காலத்தை இந்திய மக்களின் கண்கொண்டு அறைகூவியழைக்கும் விளக்கங்களுடன் மூலநூலாகக் காணப்படுவது K. M. பணிக்கர் எழுதியுள்ள 'Asia and the Western Dominance' என்பதாகும்.

இறுதியாக 29 தொகுதிகளைக்கொண்ட 'Rulers of India' வரிசை வரலாற்று நூல்கள் இங்குக் குறிப்பிடத்தக்கன. இவை காலத்தால் பழமையானவையாக இருந்தாலும், இன்றும் பேரளவிற்குப் பயன்படத்தக்க செய்திகளும் கருத்துகளும் இவற்றுள் காணப்படுகின்றன.

W. W. ஹன்ட்டரின் (W. W. Hunter) 'Gazetteer of India' என்னும் வெளியீட்டின் முதல் நான்கு தொகுதிகள் பெரிதும் பயன்படுவன. இவை தேவையான கருத்துகளைத் தேடிப் பார்ப்பதற்கே பயன்படுவன. பாராளுமன்ற நிகழ்ச்சிக் குறிப்புகளைக் காண்பதற்கும், பாராளுமன்ற அறிக்கைகளைப் பற்றி அறிவதற்கும் சர் C. V. அயிட்செஸ்ஸன் (C. V. Aitcheson) எழுதிய 'Treaties, Sanads & c.' *(14 தொகுதிகள், பதி., 1931)* என்பதையும், 'கேம்பிரிட்ஜ் இந்திய வரலாற்றை'யும் காண்க.

பகுதி VII

# பிரிட்டிஷாருடைய குடியேற்ற நாடுகளின் தோற்றம்

## 1740 — 1818

## 1. ஆங்கிலேயரும் ஃபிரெஞ்சுக்காரரும்

இந்தியாவில் புதியதொரு யுகத்தினை மிக விரைவில் தோற்றுவித்த சக்தி, அந் நாட்டுடன் சிறிதுகூடத் தொடர்புடையதன்று. கி.பி. 1740ஆம் ஆண்டு பேரரசர் ஆறும் சார்லசு இறந்தார். பேரரசரின் தனிக்கட்டளையை (Pragmatic Sanction) ஐரோப்பிய அரசுகள் அனைத்தும் ஒப்புக்கொண்டன. அதனால், அப் பேரரசரின் மூதாதையரின் மரபுவழி இராச்சியமான ஆஸ்திரியாவிற்கும், உலகின் பிற பகுதிகளிலுள்ள குடியேற்ற நாடுகளுக்கும் அவருடைய மகள் மெரியா தெரிசா (Maria Theresa) அரசியாக முடிசூட்டப் பெற்றாள். ஆனால், புதிதாகப் பிரஷியாவின் அரசுகட்டில் ஏறிய ஃபிரடெரிக்கு என்னும் அரசர், பேராவலையூட்டும் சைலேசிய மாநிலத்தைக் கைப்பற்றுவதற்கு இதுதான் தக்க சமயம் என்று கருதினார். அதன்மீது 1740ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் அவர் படையெடுத்துச் சென்றார். அதைக் கண்டு வியப்புற்ற ஹாப்ஸ்பர்க்கு (Hapsburg) எதிர்பார்த்ததைவிட நிலைமைக்குத் தக்கபடி மாறும் இயல்புடையது அது என்பதை அதனுடைய செயல் மெய்ப்பித்தது. அதன் விளைவாக 'ஆஸ்திரிய அரசுரிமைப் போர்' (War of Austrian Succession) தொடங்கியது; 1748ஆம் ஆண்டுவரை, ஐலா ஷாப்பெல் (Aix-la-Chapelle) உடன்படிக்கையாலும் முடிவடையாது அப் போர் தொடர்ந்து நடைபெற்றுவந்தது. ஐரோப்

பாவில் 'உண்மை அரசியலே'த் தொடங்கிவைத்த சட்டமே, இந்தியாவில் புது யுகத்தைப் புகுத்தியது எனலாம். ஃபிரான்சு பிரஷியாவை ஆதரித்தது. இதற்கு முன்னரே பிரிட்டன் ஸ்பெயினேடு 'ஜெங்கின்சினுடைய காதுப்போர்' **(War of Jenkins' Ear)** என்னும் குடியேற்ற நாட்டுப் போரிலே ஈடுபட்டிருந்தது. எனவே, இதன் காரணமாக 1742ஆம் ஆண்டு பிரிட்டன் ஃபிரான்சோடு போர் புரிய நேர்ந்தது. போர்பானிய வல்லரசுகளான இவ்விரு நாடுகளிடையே தோன்றிய கடுமையான போட்டியும் பூசலும் ஐரோப்பிய நாடுகளிடையே ஆதிக்கச் சமநிலையை நிலைநாட்டுவது இன்றியமையாத தேவை என்ற ஆவலை எழுப்பியது. இந்தியாவில் பிரிட்டனும் ஃபிரான்சும் முக்கியமான நிலைகளையும் அக்கறையையும் கொண்டிருந்தமையால், இப் போராட்டம் இயல்பாக அங்கும் சென்று பரவியது. இதற்கு முற்பட்ட போர்களின்பொழுது இரு கம்பெனிகளும் நடுநிலைமை வகிக்கப்போவதாக உடன்படிக்கை செய்துகொண்டது உண்மையாகும். ஆனல், அப்பொழுது ஃபிரான்சு பேரளவிற்குப் பொருமையைத் தூண்டுவதற்குரிய ஆற்றலற்ற நாடாக இருந்தது. அதுமட்டுமல்லாமல், கீழ்நாடுகளுக்குப் பெரும் போர்க்கருவிகளை அனுப்பிவைக்கும் நிலையில் ஃபிரெஞ்சுக்காரர்கள் அக் காலத்தில் வாழ்வும் வளனும் பெற்றிருக்கவில்லை என்பதும் இங்கு நினைவுகூரத்தக்கது. ஆனல், இப்பொழுது அவர்களுடைய இந்திய நாட்டு வாணிகம், ஃபிரான்சின் குடியேற்ற நாட்டு நலன்களின் அக்கறையில் முக்கியப் பங்கினைப் பெற்றிருந்தது. எனவே, பதினெட்டாம் நூற்றண்டில் குடியேற்ற நாடுகளின் நலன்களைக் காப்பதில் இவ்விரு நாடுகளும் காட்டிவந்த அக்கறையே இவ்விரு நாடுகளுக்கும் இடையே போரும் பூசலும் தோன்றக் காரணமாக அமைந்தது. எனவே, ஃபிரெஞ்சுக்காரர்கள் ஆற்றல் குறைந்தவர்களாக இருந்தமையால், நடுநிலைமைக் கொள்கையைக் கடைப்பிடித்தொழுகும் மரபினை இப்பொழுதும் தாங்கள் பின்பற்ற விரும்புவதாகத் தெரிவித்தனர். ஆனல், பிரிட்டிஷார் இதற்கு இணங்க மறுத்தனர்.

ஆங்கிலேயக் கம்பெனியின் நிலை வெளித்தோற்றத்தில் பெரிதும் மாற்றமுற்றுக் காணப்பட்டது. ஆனல், 1709ஆம் ஆண்டில் பழைய கம்பெனியும் புதிய கம்பெனியும் ஒன்ருக இணைக்கப்பட்டதற்குப் பிறகு சிறிதளவு மாற்றமே அடைந்திருந்தது எனலாம். அது தனியுரிமை வாய்ந்த மூன்று மாநிலங்களாக ஒழுங்குபடுத்தப்பட்டிருந்தது. அவை

பம்பாய், மதராசில் உள்ள செயின்டு ஜார்ஜ் கோட்டை, வங்காளத்தில் உள்ள வில்லியம் கோட்டை என்பனவாகும். கி.பி. 1709ஆம் ஆண்டுமுதல் பம்பாயின் ஆதிக்கத்திற்குட்பட்ட வாணிகத் தலமாகச் சூரத்து விளங்கலாயிற்று. அதைப்போன்றே மதராசின் ஆதிக்கத்திற்கு உட்பட்ட வாணிகத் தலமாக செயின்டு டேவிட் கோட்டை விளங்கலாயிற்று. 1662ஆம் ஆண்டுமுதலே பம்பாய் பிரிட்டிஷாருடைய உடைமையாக இருந்துவந்தது. அங்கு பார்சிக்காரர்களால் பல தலைமுறைகளாகக் கண்காணித்துவரப்பட்ட கப்பல் துறை ஒன்று இருந்துவந்தமை குறிப்பிடத்தக்கதாகும். கோட்டைகொத்தளங்களுடன் அமைந்த தொழிற்சாலையை நடுமையமாகக்கொண்டு அதைச் சூழ்ந்து வளர்ந்த குடியிருப்புகளை உடையனவாக மதராசும் கல்கத்தாவுமாகிய வாணிகத் தலங்கள் விளங்கின. இவ்விரு குடியிருப்புகளின் சிறப்பு நிலை 1714ஆம் ஆண்டுமுதல் 1717ஆம் ஆண்டுவரை தில்லிக்கு சர்மனினுடைய (Surman) தூதுக்குழு சென்றுவந்ததன் விளைவாக ஒழுங்குபடுத்தப்பட்டது. ஒவ்வொரு குடியேற்றத்தோடும் இணைக்கப்பட்ட பல கிளைத்தொழிற்சாலைகள் இந்தியாவில் இருந்துவந்தன. அத்தகைய கிளைத்தொழிற்சாலைகள் பாட்னு, டாக்கா, காசிம் பஜார் என்னும் இடங்களில் இருந்தன. இவை யாவும் வங்காளத்தில் இருந்துவந்த தொழிற்சாலையின் கிளைகளாக விளங்கின. மதராசின் தொழிற்சாலையின் கிளைகளாக விசாகப்பட்டினத்திலும் கடலூரிலும் இரண்டு சிறிய தொழிற்சாலைகள் இருந்தன. பம்பாய்த் தொழிற்சாலையின் மேற்பார்வையின்கீழ் குஜராத்திலும் மலபாரிலும் இரண்டு சிறு தொழிற்சாலைகள் இயங்கிவந்தன. இம் மாநிலங்கள் அனைத்தும் உருவான இந்திய நகரங்களின் இடப்பரப்பாகும். பம்பாயின் மக்கள்தொகை நிலையாகப் பெருகிக்கொண்டே வந்தது. 1744ஆம் ஆண்டு அதன் மக்கள்தொகை எழுபதினுயிரமாக உயர்ந்தது. கல்கத்தாவில் ஓர் இலட்சம் மக்கள் வாழ்ந்துவரலாயினர். நெடுங்காலமாகத் தலைசிறந்த குடியிருப்பாக இருந்துவரும் மதராசில் பதினெட்டாம் நூற்றுண்டின் தொடக்கம்முதல் மூன்று இலட்சம் மக்கள் வாழ்ந்துவரலாயினர். 1709ஆம் ஆண்டுமுதல் வாணிகத்தில் கைமாறும் மொத்தப் பணத்தொகை பெருகத் தொடங்கியதன் பயனுகக் கம்பெனி நிலையான செழிப்பையும் வளத்தையும் பெற்றுச் சிறந்தது. ஆனுல், இன்னும் ஆற்றல்மிக்க பேரரசின் ஆதிக்கத்திற்குட்பட்ட அமைப்பாக அது இயங்கிவந்தமையால், அதனுடைய ஆற்றலும் உரிமைகளும் வரம்புக்குட்பட்டனவாகவே இருந்து

வந்தன. அதனுடைய வாணிகம் சிறுவரையில் விரிவாக்கப் பட்டதனால், அதனுடைய நிலை இன்னும் வலிமையுடையதாக்கப் பெற்றது. கம்பெனிகள் இரண்டும் ஒன்றாக இணைக்கப்பட்ட காலம்முதல் அதனுடைய ஆதாயத்தின் பங்கு வீதம் எப்பொழுதும் ஏழு விழுக்காட்டிற்குக் குறைந்ததில்லை; பத்து விழுக்காட்டிற்கு மிகுந்ததும் இல்லை. குஜராத்திலும் வங்காளத்திலுமிருந்து கிடைத்த அவுரிச் செடி (நீலச்சாயம்), பீகாரிலும் வங்காளத்திலுமிருந்து கிடைத்த வெடியுப்பு, மலபார் பகுதியில் கிடைத்த நறுமணப் பொருள்கள், பல வகைப்பட்ட பருத்திப் பொருள்கள் முதலியவற்றை வாங்கி ஏற்றுமதி செய்வதில்தான் கம்பெனி முக்கியமாக ஈடுபட்டிருந்தது. 'கம்பெனியின் ஊழியர்கள் இந்தியாவிற்குள் தங்களுடைய தனிப்பட்ட வாணிகத்தின்மூலம் தங்களுக்கு ஆதாரவைத் தேடிக்கொண்டனர். அவர்கள் கிழக்குப் பகுதிகளில் கடல்கடந்த நாடுகளோடு தனிப்பட்ட முறையிலும் வாணிகம் புரிந்துவந்தனர். அவ் வாணிகமும் அதிர்ச்சி தரத்தக்க முறைகளைக் காட்டிலும் நிலையான உள்நாட்டுச் சூழ்நிலைகளுக்கேற்பக் குறைக்கப்பட்டும் வந்தது. பகட்டுமிக்க பேராதாயத்தை அடைவதற்குரிய காலம் இன்னும் வரவில்லை.

இக் கம்பெனியின் இடையீடற்ற வளமான கதையுடன் ஃபிரெஞ்சு கம்பெனியின் வரலாற்றை ஒப்பிட்டுப் பார்ப்போமானால், அதனுடைய வரலாறு அளவானதாகவும் சீரமைதிக் குலைவுடையதாகவும் காணப்படுகிறது. நான்காம் ஹென்றியின் ஆட்சிக் காலத்தில் ஃபிரான்சு முதன்முதலாகத் தன்னுடைய கருத்தினைக் கிழக்கு நாடுகளிடை செலுத்தியது. அப்பொழுது, இங்கிலாந்தையும் நெதர்லாந்தையும்போலவே ஃபிரான்சும் ஸ்பெயினோடு பகைமை கொண்டிருந்தது. அக் காலத்தில் போர்ச்சுகலையும், அதனுடைய கீழ்நாட்டு உடைமைகளையும் ஸ்பெயின் தனதாக்கிக்கொண்டிருந்தமை இங்கு நினைவுகூரத்தக்கதாகும். ஆனால், அதனுடைய முதல் முயற்சிகள் புதிய நாடுகளைத் தேடி ஆய்கின்ற முயற்சிகளாகவே இருந்தன. அதன் பின்விளைவுகளான வாணிக முயற்சிகள் நிறைவேறாதுபோயின. கோல்பெர்ட்டின் (Colbert) மதிநுட்பம் கிழக்கு நாடுகளை நோக்கித் திரும்புவதற்கு முன்பே கோம்பேன் டே இன்டி ஒரியன்டேல் (Compagnie des Indes Orientales) 1664ஆம் ஆண்டு ஃபிரான்சினால் நிறுவப்பெற்றமை குறிப்பிடத்தக்கதாகும். 1674ஆம் ஆண்டு சோழமண்டலக் கடற்கரையோரத்தில் புதுச்சேரி என்னும் குடியிருப்புக்குரிய இடத்தைப் ஃபிரெஞ்சுக்காரர்கள்

அரிதின் முயன்று பெற்றனர். ஆனால், பதினான்காம் லூயியின் ஆட்சிக்காலத்தில் நடைபெற்ற ஐரோப்பியப் போர்களினால் இக் கம்பெனி நலிந்துபோயிற்று. செயல்திறன் வாய்ந்த தலைவர்கள் இக் கம்பெனியைத் தொடர்ந்து நிருவகித்துவந்தமையாலும், 1723ஆம் ஆண்டில் இக் கம்பெனி திருத்தி அமைக்கப்பெற்றமையாலும் நிலைமாற்றம் பெற்றது. 1740ஆம் ஆண்டு அளவில் இக் கம்பெனி ஒப்பு நோக்கிக் காணத்தக்க வகையில் போட்டியிடுவதற்குரிய ஆற்றலுடையதாக விளங்கியது. ஆயினும், ஆங்கிலேயக் கம்பெனியோடு ஒப்பிடக்கூடிய தகுதியற்றதாகவே அது காணப்பட்டது. புதுச்சேரி கோட்டை கொத்தளங்களால் நன்கு தற்காப்புமிக்க அரண்களையுடையதாக அமைக்கப் பெற்றது. இதன் ஆதிக்கத்திற்குட்பட்ட பண்டசாலைகள் வங்காளத்தில் சந்திரநாகூரிலும், சோழமண்டலக் கடற்கரைப் பகுதியில் மசூலிப்பட்டினத்திலும், மலபாரிலும் புதியனவாகத் தொடங்கப்பெற்றன. மொரீஷஸ் (Mauritius—the Isle de France) தீவிலும், தென்னிந்தியக் கடலில் இருந்த 'ரியூனியன்' (Reunion — the Isle de Bourbon) என்னும் தீவிலும் இருந்து வந்த ஃபிரெஞ்சு உடைமைகளால் போற்றி ஆதரிக்கப் பெற்றது. கோல்பெர்ட்டின் (பெர்னியரின் அறிக்கைகளினால் பேரூக்கத்தைத் தூண்டிய) அரசியலார்வம் நெடுங்காலமாக மறக்கப்பட்டுவிட்டது. எனவே, ஃபிரெஞ்சுக் கம்பெனி அது விரும்பியதைப் போலவே அமைதியுடையதாகவும், ஆங்கிலேயக் கம்பெனியைப்போலவே வாணிக நோக்குடையதாகவும் இருந்தது.

ஆங்கிலேயக் கிழக்கிந்தியக் கம்பெனியோடு ஒப்பிட்டுப் பார்க்கின்றபொழுது, ஃபிரெஞ்சுக்காரர்களின் வாணிகத் துணிகர முயற்சிகள் காளான் பூப்பதைப்போன்று திடீர் வளர்ச்சியாகக் காணப்பட்டது. அதனுடைய ஆற்றல் வாணிகத்துறையில் கட்டுறுதி உடையதாக இருப்பினும், வளம்மிக்க அதனுடைய போட்டியாளர்களோடு எவ்வகையிலும் ஒப்புமையுடையதாக இல்லை.

ஆங்கிலேயக் கம்பெனி இந்தியாவில் நன்கு நிறுவப்பெற்று மூன்று ஆற்றல்மிக்க நிலைக்களங்களை உடையதாக இருந்தது. அவற்றுள் ஒன்று சிறந்த துறைமுகத்தையும் கப்பல் துறையையும் பெற்றிருந்தது இங்குக் குறிப்பிடத்தக்கதாகும். ஃபிரெஞ்சுக்காரர்கள் காப்பற்ற சோழமண்டலக் கடற்கரைப் பகுதியில் ஒரேயொரு துறைமுகத்தை உடையவர்களாக

இருந்தனர். ஃபிரெஞ்சுக்காரர்கள் தங்கள் தலைமை நிலையமான மொரீஷஸ் தீவில் ஒரு துறைமுகத்தையும் கடல் தளத்தையும் பெற்றிருந்தனர். ஆனால், அது நெடுந் தொலைவில் இருந்ததோடு, போதிய அளவிற்குப் பொருள்களை அனுப்பப்பெறாத கிடங்குகளை உடையதாக இருந்தது. இவ் வசதிகள் அனைத்தைக் காட்டிலும் வசதிகள் மிகுந்த பம்பாயை பிரிட்டிஷார் தங்கள் உடைமையாகப் பெற்றிருந்த தால், இழப்பீட்டிற்கு மேலாக நன்மைகளைப் பெற்றிருந்தனர். அவர்கள் ஏராளமான வாணிகக் கப்பல்களையும், கடற்படை ஆதிக்கத்தையும் பெற்றிருந்தனர். இரண்டு கம்பெனிகளும் வாணிக வளமுடையதாக விளங்கினாலும், ஃபிரெஞ்சுக்கம்பெனி மிகக் குறைந்த அளவிலேயே வாணிகம் செய்துவந்தது. மேலும், இதற்கேற்பவே ஃபிரெஞ்சுக்காரர்களுடைய வள ஆதாரமும் ஆற்றல் குறைந்ததாகவே இருந்தது. கி.பி. 1728ஆம் ஆண்டிற்கும் 1740ஆம் ஆண்டிற்குமிடையே ஃபிரெஞ்சுக்காரர்கள் செய்துவந்த வாணிகத்தின் மதிப்புப் பத்து மடங்காகப் (89,000 பவுன்களிலிருந்து 8,80,000 பவுன்களாகப்) பெருகியது. ஆனால், அதே ஆண்டில் இந்தியாவிலிருந்து பிரிட்டிஷாரால் இறக்குமதி செய்யப்பெற்ற வாணிகத்தின் மதிப்பு, ஃபிரெஞ்சுக்காரர்களுடையதைக் காட்டிலும் இரண்டு மடங்கிற்கு (17,95,000 பவுன்கள்) மேலாகப் பெருகியிருந்தமை குறிப்பிடத்தக்கதாகும். நிதி நிலைமையில் வற்றாத வளம் பெருக்குவதற்காக ஆங்கிலக் கம்பெனி தனியுரிமை வாய்ந்த வாணிகக் கூட்டுக் கழகத்தின் மூலம் ஒன்றுபட்ட செயல்முறைத் தூண்டுதலைப் பெற லாயிற்று. அவ் வாணிகக் கூட்டுக் கழகத்தினை (Mercantile Corporation) ஆதாயத்தில் முக்கியமான அக்கறைகொண்ட லண்டன் மாநகரத்தார் பேணி வளர்த்தனர் எனலாம். அக் கழகம் நெடுங்காலமாகக் கடைப்பிடித்துவரும் வாணிக மரபுகளையும், பேரளவிற்கு வணிகத்துறை அனுபவத்தையும் பெற்றிருந்தது. மூலதனம் மிகுதியாகத் தேவைப்படுகிறபொழுது எல்லாம் மேலும் மேலும் பொருளைத் திரட்டும் ஆற்றலை உடையதாக அது இருந்தது. அதனுடன் தன்னுடைய செல்வாக்கை பிரிட்டிஷ் பாராளுமன்றம் உணருமாறு செய்த பெருமையுடையது அவ் வாணிகக் கழகம். இதற்கு நேர் மாறாக, ஃபிரெஞ்சு வாணிகக் கழகம் அரசின் முயற்சியாலேயே அமைக்கப்பட்டதாகும். 1723ஆம் ஆண்டு அக் கழகம் புத்துயிர் கொடுக்கப்பட்டபொழுது பன்னிரண்டு இயக்குநர் களையும், நான்கு ஆய்வாளர்களையும் உடையதாக விடப் பெற்றது. இவ்வதிகாரிகளை அரசே நியமித்துவந்தது. இதற்கு

மேலாகக் கம்பெனியில் முதலீடு செய்துள்ள பங்குரிமையாளர்களின் சார்பில் எட்டு வாணிகச் சங்க உரிமைப் பேராட்களை யும் (Syndics) அரசு அமர்த்தியது. எனவே, அக் கம்பெனி முக்கியமாக அரசாங்கத்தின் துணிவாண்மையினால் செயற்படும் ஓர் அமைப்பாகவே விளங்கியது. இதனால் இக் கம்பெனியின் நலம் அனைத்தும் மந்திரிகள் அதனிடத்துக் காட்டும் அக்கறையையோ அல்லது புறக்கணிப்பையோ பொறுத்ததாக அமைந்தது. இரு கம்பெனிகளும் ஐரோப்பாவோடு கடல் வழியாகக் கொண்ட தொடர்பினை நம்பியிருந்தன. இத் துறையிலும் பிரிட்டிஷாரே முதன்மைதாங்கி முன்னேறினர். ஒரு போராட்டத்தின் முடிவு இறுதியாகக் கடலாதிக்கத்தைப் பொறுத்தே அமைந்தது. பிரிட்டிஷாரின் கடற்படை ஆற்றல் ஃபிரெஞ்சுக்காரர்களின் கடற்படை ஆற்றலைக்காட்டிலும் சிறந்து இருந்ததோடு அல்லாமல், வளர்ந்துவரும் வளப்பமிக்க குழுவினராலும் அரசினராலும் போற்றி யாதரிக்கப்பட்டுவந்தமை அதனுடைய வளமிக்க வளர்ச்சிக்குக் காரணமாகும். ஃபிரெஞ்சுக் கம்பெனியின் தலைமைப் பதவியை வகித்தவர்கள், பிரிட்டிஷ் கம்பெனியின் தலைவர்களைவிட ஐயத்திற்கு இடமில்லா வகையில் மிகச் சிறந்தவர்களாகக் காணப்பட்டனர். இவ்வகையில்தான் ஃபிரெஞ்சுக் கம்பெனி, ஆங்கிலேயக் கம்பெனியைக்காட்டிலும் பேராற்றல் வாய்ந்ததாக இருந்தது. லெனுயரும் (Lenoir) தூமாவும் (Dumas) அக் கம்பெனியை நன்கு நிறுவியமைத்தனர். இவர்களை அடுத்து வந்த தியூப்ளே (Dupleix) அரசியல் சிக்கல்களைத் தெளிவுறுத்தும் நுண்ணறிவும், அரசியல் பிரச்சினைகளை முடிவு செய்யும் செயலாற்றும் திறனும் வாய்ந்த அறிவுலக மேதைகளுள் ஒருவராக விளங்கினர்.

1740ஆம் ஆண்டு தென்னிந்தியாவில் காணப்பெற்ற அரசியல் நிலை குழப்பமானதாகவும் உறுதியற்றதாகவும் இருந்தது. அவுரங்கசீப்பின் ஆட்சிமுறையில் பயிற்சி பெற்றவருள் இறுதியாக உயிர்வாழ்பவரும், அவ்வாட்சிமுறையில் பொதுக் கடமையையும் நேர்மையையும் நன்கு அறிந்தவருமான நைசாம் ஆஸப்ஜா முதுமைப் பருவத்தை அடைந்தவராகக் காணப்பட்டார். அதனுடன், மேற்குத் தக்கணத்தில் எழுச்சியுறும் மராட்டியரின் ஆதிக்கத்தை அடக்கியொடுக்க முயல்வதிலுமே அவருடைய வாழ்நாட்கள் கழிந்தன எனலாம். அவரது ஆட்சிக்குட்பட்டிருந்த குறுநில மன்னர்கள் இதற்குள்ளாகவே நைசாம் இறந்துவிட்டால் உண்டாகக்கூடிய விளைவுகளைப்பற்றிச் சிந்தித்தவண்ணம் வாழ்ந்துவரலாயினர். மிகப்

பெரிய ஐதராபாத்து இராச்சியத்திற்குத் தெற்கே அதனுடைய சோழமண்டலக் கடற்கரைப் பகுதியில் ஆதிக்கச் சமநிலையை நிலைநிறுத்தக்கூடிய இந்து அரசுகள் ஒன்றுகூட இல்லை என்பது இங்கு நினைவுகூரத்தக்கதாகும். இதற்குப் பதிலாக, உள் நாட்டுப் பகுதியான மைசூரில் பழைய விசயநகர்ப் பேரரசின் நிழலுருவமாக ஓர் இந்து இராச்சியம் இருந்துவந்தது. மேற்குக் கடற்கரைப் பகுதியில் கொச்சியையும் திருவாங் கூரையும் தலைநகரங்களாகக் கொண்ட மலபார் அரசுகள் சிறப்புற்று விளங்கின. அவற்றிற்குக் கிழக்கே திருச்சி, தஞ்சை, மதுரை ஆகிய சிற்றரசுகள் இருந்தன. நைசாமி னுடைய தள்ளாமை வயதும், அவரது ஆற்றலையும் நேரத் தையும் தொள்ளைகொண்ட மராட்டியரின் தாக்குதலும் நாட்டின் பிற பகுதிகளில் இருந்த குறுநில மன்னர்களிடையே பேராவலை வளர்த்துவந்தது. மேலும், இந்து அரசுகளின் வலு வற்ற தன்மை அயலார் தாக்குதலை வரவேற்றது. இவ்வாறு இஸ்லாமியரின் ஆட்சி எல்லை விரிவுக் கொள்கையின் இறுதிச் சுடரானது, ஐதராபாத்தின் வீழ்ச்சி எனும் முதல் அறிகுறி யோடு சேர்ந்து துணிகரச் செயல் புரிய விரும்பி, திட்ட மிடுவோருக்குத் தக்க வாய்ப்பை அளித்தது. இத்தகைய அரசியல் சூழலில் குறிப்பிடத்தக்க மற்றொரு பெருஞ் சக்தி யாக மராட்டியர் விளங்கினர். அவுரங்கசீப்பு காலத்தில் மராட்டியர் தமிழகத்தின்மீது படையெடுத்து வந்ததன் நினைவுச் சின்னமாகத் தஞ்சாவூரிலே மராட்டியரின் சிற்றரசு ஒன்று இருந்துவந்தது இங்குக் குறிப்பிடத்தக்கதாகும். இவ் வரசு தோன்றிய நாள்முதல் மராட்டிய மன்னருக்குத் தன் வருவாயில் நான்கில் ஒரு பங்கினை 'சௌத்' என்னும் வரி யாகச் செலுத்திவந்தது. இக் காரணத்தினால், பூனாவில் இருந்த பேஷ்வாவிற்குத் தமிழகத்தின் அரசியல் விவகாரத்தில் தலையிடுவதற்குரிய வாய்ப்புகள் கிடைத்தபோதும், அவர்கள், தஞ்சை மராட்டிய அரசு நமக்கு அடிபணிந்து இருப்பதால் நாம் அதன் உள்நாட்டு விவகாரத்தில் தலையிடுவது தவறு என்று கருதிவந்தனர்.

இக் காலத்தில் தோஸ்தலி என்பவர் கருநாடகத்தின் நவாபாக ஆட்சி புரிந்து வந்தார். அவர் நைசாம் இறந்த பிறகு தாம் விடுதலை பெறுவதற்கும், தம் ஆட்சி எல்லையைப் பெருக்குவதற்கும் உரிய வழிவகைகளை ஆராய்ந்து அறிவ திலேயே பெரிதும் ஈடுபட்டிருந்தார். திருச்சிராப்பள்ளியைக் கருநாடக நவாபின் மகனான சஃப்தார் அலியும் (Safdar Ali), மதுரையைக் கருநாடக நவாபின் மருமகனான சந்தாசாகிபும்


Miles
0
50
100
R. N. Penner
Nellore
Pulicat
BANGALORE
Arcot
Kaveripak
R. Palar
Vellore
Arni
Jinji
R. S. Penner
Cuddalore
Porto Novo
R. Kaveri
Trichinopoly
Tanjore
R. Vaigai
CEYLON

படம் 1. கருநாடகம்

கைப்பற்றிக்கொண்டனர். ஆனால், அவர்கள் மராட்டியரால் ஆளப்பட்டுவந்த தஞ்சாவூரைத் தாக்கியமை வெற்றியளிக்க வில்லை. கி.பி. 1740-41ஆம் ஆண்டுகளில் வடக்கேயிருந்து மராட்டியர் பெரும்படையுடன் கருநாடகத்தினுள் நுழைந்தனர்; தோஸ்து அலி கொல்லப்பட்டார்; திருச்சிராப்பள்ளியை அவர்கள் கைப்பற்றிக்கொண்டனர்; சந்தாசாகிபை மராட்டியர் சிறைப்பிடித்துச் சென்றனர். சஃப்தார் அலி சிங்கு தம் தந்தைக்குப் பிறகு கருநாடக நவாபாக முடிசூட்டிக்கொண்டார். ஆனால், மிக விரைவிலேயே 1742ஆம் ஆண்டின் இறுதிப் பகுதியில் அவருடைய பங்காளியான முர்தாசா அலி என்பவரால் கொலை செய்யப்பட்டார். இத்தகைய நெருக்கடியான சூழ்நிலையில் நைசாம் கருநாடகத்தின் அரசியல் சிக்கலில் தலையிட்டார். அவர் திருச்சியை மீண்டும் கைப்பற்றினார். கருநாடக நவாபு பதவியை வன்முறையில் கைப்பற்றிய முர்தாசா அலியைப் பதவியிலிருந்து நீக்கிவிட்டு, 1743ஆம் ஆண்டின் தொடக்கத்தில் தம்முடைய அதிகாரிகளுள் ஒருவரான அன்வர்-உத்தீன் கான் என்பவரைக் கருநாடக நவாபாக நைசாம் அமர்த்தினார். தென் இந்திய அரசியல் விவகாரங்களில் ஐரோப்பியர்கள் தலையிடத் தொடங்கிய காலத்தில் இத்தகைய சூழ்நிலை இருந்துவந்தது. அத்தகைய சூழ்நிலையில் தென் இந்திய அரசியல் விவகாரங்களில் ஐரோப்பியர்கள் தலையிடத் தொடங்கினர். கருநாடகத்தின் புதிய நவாபு போதிய பாதுகாப்பின்றி அரசு புரியவேண்டிய அவலநிலையால் அல்லலுற்றார். நைசாமினால் பதவியிலிருந்து நீக்கப்பட்ட முர்தாசா அலியின் கட்சிக்காரர்கள் புதிய நவாபிற்கு எதிராகக் கலகம் செய்துவந்ததோடு, அவரை ஒழித்துவிடவும் முயன்றனர். இதற்குப் பின்னணியில் இருபெரு வல்லரசுகளான நைசாமும் மராட்டியரும் இடைவிடாது நெருங்கி ஊடாடிக்கொண்டிருந்தனர். அவர்கள் இருவரும் கருநாடகத்தின் அரசியல் விவகாரங்களில் தலையிடுவதற்குரிய பேராற்றல் வாய்ந்தவர்களாக விளங்கினர். ஆனால், தொடர்ந்து தங்கள் பிரதிநிதிகளுக்குத் தேவையான உதவியை அளிக்க முடியாதவர்களாக அவர்கள் வேறு பல வேலைகளில் முன்பே ஈடுபட்டுவிட்டவர்களாக விளங்கினர். 'ஒரு மாபெரு நிகழ்ச்சியை எதிர்பார்த்து நாடு முழுவதும் குழப்பமடைந்து கிடந்தது. ஆனால், அம்மாபெரு நிகழ்ச்சி என்னவென்பதை யாரும் அறியாதவர்களாக இருந்தனர்.'

தியூப்ளே (Dupleix) புதுச்சேரியின் கவர்னராக வந்த சிறிது காலத்திற்கெல்லாம், 1742ஆம் ஆண்டின் இறுதிப்

பகுதியில் ஃபிரான்சுக்கும் இங்கிலாந்திற்கும் இடையே போர் மூண்டுள்ள செய்தியும் இந்தியாவிற்கு வந்துசேர்ந்தது. அத்தருணத்தில் ஃபிரெஞ்சுக் கடற்படை மீண்டும் வரவழைக்கப் பட்டமையால், தியூப்ளேயின் கை மேலோங்கியில்லை. எனினும், ஃபிரெஞ்சுக் கம்பெனியின் இயக்குநர்களின் விருப்பத்திற்கிணங்க, அவர் ஆங்கிலேயரின் மூன்று மாநிலங்களும் போரில் கலந்துகொள்ளாமல் நடுநிலைமை வகிக்குமானால் இங்குப் போர் நடைபெறாது என்று அறிவித்தார். ஆனால், அத்தகைய உடன்பாட்டை ஆங்கிலேய வணிகர்கள் மகிழ்ச்சியுடன் வரவேற்றிருந்தாலும், இரண்டு நாட்டு அரசர்களுடைய கப்பல்களை இவ்வுடன்பாடு கட்டுப்படுத்த முடியாமல் போனமையால், இந்தியாவிலும் ஆங்கிலேயக் கம்பெனியாரும் ஃபிரெஞ்சுக் கம்பெனியாரும் தம் தாய்நாடுகளில் தொடங்கியுள்ள போரோடு சேரவேண்டியவர்களானார்கள். ஆஸ்திரிய அரசுரிமைப் போர் இந்தியாவில் கடலாதிக்கத்தினையே முழுவதும் நம்பியிருக்க வேண்டியதாயிற்று. ஃபிரெஞ்சுக்காரர்கள் தியூப்ளே அல்லாமல், மொரீஷஸ் தீவின் கவர்னரான லா போர்தானே (La Bourdonnais) என்னும் மதிநுட்பம் வாய்ந்த மற்றொரு மாபெருந் தலைவரையும் பெற்றிருந்தனர். ஃபிரெஞ்சுக் கடற்படையின் பிரிவு இந்தியக் கடலில் இல்லாத சமயத்தில், லா போர்தானே ஃபிரெஞ்சு இந்தியர்களைக் கொண்ட ஒரு கடற்படையையும் நாட்டு மரக்கலங்களையும் கொண்ட ஒரு படையை நிறுவி, அவற்றை இயக்குவதற்குத் தங்கள் குடியேற்றப் பகுதிகளில் உள்ள கடலோடிகளையே பயன்படுத்திக்கொண்டார். இவ்வாறு அவர் ஒரு கடற்படையை நிறுவி, அதைச் சோழமண்டலக் கடற்கரையை நோக்கிச் செல்லுமாறு விடுத்தார். அங்கு அவர் பிரிட்டனின் கடற்படையைச் சந்தித்தார். அப்பொழுதுதான் துணிவாண்மையற்ற பேட்டன் (Peyton), பார்னட்டு என்னும் பிரிட்டிஷ் அதிகாரிக்குப் பதிலாகக் கடற்படைத் தலைவராகப் பதவியேற்றிருந்தார். 1746ஆம் ஆண்டு ஜூன் மாதத்தில் ஒரு முடிவிற்கும் வராத போரினால், தக்க வாய்ப்பினை எதிர் பார்த்து, இருதிறப் படையினரும் பின்வாங்க வேண்டியதாயிற்று. பேட்டன் தம்முடைய படையை இலங்கைக்குக் கொண்டு சென்றார். அதைப்போன்றே லா போர்தானே தம்முடைய படையைப் புதுச்சேரிக்குக் கொண்டுசென்று நிறுத்தினார். இலங்கையிலிருந்து திரும்பி வந்தபொழுது பேட்டன் ஃபிரெஞ்சுப் படையினரின் தோற்றத்தைக் கண்டு பெரிதும் மனநிறைவுகொண்டு, ஹூக்ளிக்குத் தன் படைகளைக் கொண்டுசென்று நிறுத்தி ஓய்வெடுத்துக்கொண்டார். இச்

செயலின்மூலம் எத்தகைய எதிர்ப்புமின்றிச் சென்னை நகரத்தை எளிதில் ஃபிரெஞ்சுக்காரர்கள் தாக்குவதற்கு அவர் இடமளித்தார். சென்னை நகரம், முற்றுகை இடப்பெற்றால் அதைச் சமாளிப்பதற்குரிய படைபலமோ, உள்ள உரமோ அற்றதாக இருந்தது. இந்நிலையில், ஃபிரெஞ்சுக்காரர்களால் மதராஸ் முற்றுகை இடப்பட்டது. ஒரு வாரத்திற்குள்ளாக செப்டம்பர் இருபத்தோராம் நாள் உடன்படிக்கையுடன் மதராஸ் சரணடைந்தது. இவ்வாறு ஃபிரெஞ்சுக்காரர்கள் எதிர்பாராத மாபெரு வெற்றியைப் பெற்றனர். ஆனால், அவ் வெற்றியை அடுத்து, ஃபிரெஞ்சுத் தலைவர்களுக்கிடையே உண்டான பூசலினால் அவ்வெற்றியின் விளைவுகளைப் பயன் படுத்திக்கொள்ள முடியாதுபோயிற்று. லா போர்தானே மீட்புப் பணம் பெற்றுக்கொண்டு முற்றுகையிட்ட நகரை ஆங்கிலேயரிடம் விட்டுவிடலாம் என்று முடிவு செய்தார். இவ்வாறு அவர் செய்வாரானால், தியூப்ளேயிற்கோ, அவரைச் சார்ந்த நண்பர்களுக்கோ ஆதாயத்தில் எத்தகைய பங்கும் கிடைக்காது என்பது உறுதியாயிற்று. இப்பூசல் பல நாட்களாகியும் ஒரு முடிவிற்கு வரவில்லை. இந்நிலையில் அக்டோபர் மாதத்தின் தொடக்கத்தில் எதிர்பாராத வகையில் ஒரு பெரும் புயல்காற்று வீசியது. அதனால் லா போர்தானேயின் கடற் படைகள் சிதறியோடின. இவ் வாய்ப்பை உடனடியாகப் பயன்படுத்திக்கொள்ள விரும்பிய தியூப்ளே சென்னை நகரத்தைக் கைப்பற்றிச் சூறையாடினார்.

அதன் பிறகு செயின்ட் டேவிட் கோட்டையைக் கைப் பற்றுவதன்மூலம் பிரிட்டிஷாரை வெளியேற்றுவதை முற்றுப் பெறச் செய்யவேண்டும் என்று தியூப்ளே முயன்றார். ஆனால், கிரிஃப்பின் (Griffin) என்பவரின் தலைமையின்கீழ் பிரிட்டிஷ் கடற்படை திரும்பிவந்தமையால், தியூப்ளேயின் முயற்சி வீணாயிற்று. 1748ஆம் ஆண்டின் இடைப்பகுதியில் சென்னை நகரத்தை ஃபிரெஞ்சுக்காரர்களிடமிருந்து திரும்பக் கைப் பற்ற வேண்டுமென்ற திட்டத்தோடு, பிரிட்டிஷார் செய லாற்றத் தொடங்கினர். எனவே, பாஸ்கவென் (Boscawen) என்பவரின் தலைமையின்கீழ்ப் புதியதொரு ஆங்கிலேயக் கடற்படை சோழமண்டலக் கடற்கரைப் பகுதிக்கு வந்து சேர்ந்தது. புதுச்சேரியை ஆங்கிலேயர் முற்றுகையிட்டனர். பிரிட்டிஷாரின் மடத்தனமான செயல்முறை, மீண்டும் ஒரு முறை ஃபிரெஞ்சுக்காரர்களின் துணிவாண்மைக்கு உறுதுணையாக அமைந்தது. எனவே, ஃபிரெஞ்சுக்காரர்கள் வெற்றி பெற்றனர். மீண்டும் ,எதிரெதிர் ஏற்ற இறக்க இயக்கம்

மாறுவதற்குள் மீண்டும் ஐலா ஷாப்பெல் (Aix-la-Chapelle) உடன்படிக்கையைப்பற்றிய செய்தி வந்தது. அவ்வுடன் படிக்கையின்படி அமெரிக்காவில் பிரிட்டிஷார் கைப்பற்றி யிருந்த கேப் பிரேட்டன் தீவினை (Cap Breton Island) ஃபிரெஞ்சுக் காரர்கள் திரும்பப் பெற்றனர். அதற்குப் பதிலாக ஃபிரெஞ்சுக்காரர்களிடமிருந்து ஆங்கிலேயர் மதராசைத் திரும்பப் பெற்றனர்.

தென் இந்தியாவின் அரசியல் வரலாற்றில் ஆங்கிலேயர் மதராசைத் திரும்பப் பெற்றமை ஆற்றல்மிக்க மாற்றங்களைத் தன்னகத்தே மறைத்துக்கொண்டிருந்தது. ஐரோப்பிய உடன்படிக்கையின்படி, சென்னையை பிரிட்டிஷார் தங்க ளுடைமையாக அப்பொழுது பெற்றனர். கருநாடக நவாபாகப் போட்டியிட்ட ஒருவருக்கு விரைவிலே ஆண்டிற்கு 1,200 வராகன்களைப் பழைய விடுவரி (quit-rent) செலுத்து வதிலிருந்து அவர்கள் விடுதலை பெற்றனர். ஃபிரெஞ்சுக் காரர்கள் துணிவாண்மைக்கும் படைத்துறைத் திறனுக்கும் தங்களுக்குத் தாங்களே நிகர் என்று கருதத்தக்க வகையில் நாட்டு மக்களிடையே மிகச் சிறந்த மதிப்பினைப் பெற்றனர். லா போர்தானே திரும்பிச் சென்றபொழுது அவருடைய கப்பற்படையினை இங்கேயே விட்டுவிட்டுச் சென்றார். இதனால் ஃபிரெஞ்சுக்காரரின் ஆதிக்கம் படைத்துறை அடிப்படையிலும் ஓரளவிற்கு வலுப்படுத்தப் பெற்றது எனலாம். மூன்றாவ தாக, கருநாடக நவாபு தென்னிந்திய அரசியலில் செய லூக்கத்துடனும் ஆற்றலுடனும் தலையிட முடியவில்லை. இதற்குக் காரணம் ஐரோப்பியர்கள் அவரை அரசியலில் தலையிடுமாறு வேண்டவில்லை என்பது பொருளன்று; அல்லது அவருக்குத் தமிழகத்தின் அரசியலில் தலையிட வேண்டும் என்ற உள்ளார்ந்த விருப்பம் இல்லை என்பதும் பொருளன்று. ஆங்கிலேயர், ஃபிரெஞ்சுக்காரர் ஆகிய இருதிறத்தினரும் தங்களுக்குகந்த சமயம் வாய்த்தபொழுதெல்லாம் நவாபினை அரசியல் விவகாரத்தில் தலையிடுமாறு மன்றாடி வேண்டிக் கொண்டனர் என்பது உண்மையாகும். தியூப்ளே பிரிட்டி ஷாரின் கடற்படைக்கு அஞ்சிக் கருநாடக நவாபின் உதவியை நாடினார். ஆங்கிலேயர்கள் மதராசினை ஃபிரெஞ்சுக்காரர்கள் தாக்கியபொழுது உதவிபுரியுமாறு கருநாடக நவாபினை வேண்டிக்கொண்டனர். வியக்கத்தக்க செயல்விரைவுடன் இவ் வேண்டுகோட்கிணங்கி நவாபு தம் படைவீரர்களை ஆங்கி லேயருக்கு உதவியாக அனுப்பிவைத்தார். ஆனால், அப்படை வீரர்களின் அணிவகுப்பு சென்னை நகரை அடைந்தபொழுது,

அந்நகர் ஃபிரெஞ்சுக்காரர்களினல் கைப்பற்றப்பட்டிருந்தது. சென்னை நகரின் கோட்டைச் சுவருக்கு முன்னரும், அடையாற்றிலும் நவாபின் படைகள் ஃபிரெஞ்சுப் படைகளோடு கைகலந்தன. இச் சிறு போர் ஐரோப்பியப் படைக்கலன்களின் ஆற்றலுக்கும், ஐரோப்பியரின் போரியல் சூழ்ச்சித்திறத்தின் மேம்பாட்டிற்கும் முதன்முதலாகச் செயல்முறையில் சிறந்த எடுத்துக்காட்டாக விளங்கத் தொடங்கியது. இவ்விரு பண்புகளும் அடுத்த ஐம்பதாண்டுக் காலத்திய இந்திய அரசியலில் அறுதி செய்து முடிக்கும் ஆற்றலுடையதாக விளங்கலாயிற்று.

தென்னிந்தியப் பேரரசை நிறுவ வேண்டும் என்னும் தியூப்ளேயின் துணிவுமிக்க முயற்சி அதைத் தொடர்ந்து தோன்றியது. சூழ்நிலைகள் ஒரு மனிதனுக்குகந்ததாக இருக்குமானல், அச் சூழ்நிலைகளைப் பெரிதும் பயன்படுத்திக்கொண்டு செயலாற்றுந் தகுதியுடைய ஒரு மனிதராக தியூப்ளே விளங்கினர். கிளைவினைப் போன்றே, தியூப்ளேயும் தம் வாழ்க்கையை வாணிகத்துறைப் பணியிலேயே தொடங்கினர். ஆனல், கிளைவினைப்போன்று இல்லாமல், காசுகளை எண்ணிப் பார்க்கும் வாணிகத்தைவிட்டுப் போர்க்களத்திற்கு வந்தமையால் அவர் புகழினைப் பெறவில்லை. ஃபிரெஞ்சுக்காரரின் கம்பெனியில் பணிமகனுக இருந்து முறையாக மேல்நிலைக்கு வந்தவர் தியூப்ளே. சந்திரநாகூரிலிருந்த கம்பெனியின் கிளை அலுவலகத்தில் அவர் முதலில் பணியாற்றிக்கொண்டிருந்தார். அங்கு அவர் பதவி உயர்வு பெற்ருர். அதனல், அவர் புதுச்சேரிக்கு மாற்றப்பட்டார். அவருடைய மதிநுட்பமும் அரசியல் சூழ்ச்சித் திறனும், அரசியல் அறிவும் மிக்கதாக விளங்கியதே ஒழிய, போரியல் சூழ்ச்சித்திறனற்றதாக இருந்தது என்றே கூறலாம். தியூப்ளே குழைந்த உள்ளமும் சுறுசுறுப்பான கற்பனைத் திறனும் வாய்ந்தவராக விளங்கினர். இவ்விரு இயல்புகளும் திறன்மிக்க வணிகராகிய அவரைச் சூழ்ச்சித் திறனும் அறிவுக் கூர்மையுமுடைய அரசியல்வாதியாக மாற்றின. ஆனல், அவர் ஓர் அரசியல்வாதியைவிட மேம்பட்டு விளங்கினர். அரசியல் சக்திகளின் சமநிலையினை மாற்றியமைப்பதற்குரிய வாய்ப்புகளும் வசதிகளும் இல்லாத சமயத்திலும், அவ்வரசியல் சக்திகளின் சமநிலையினைத் தம் விருப்பம்போல் மாற்றியும் திருத்தியும் அமைக்கும் பேராற்றலும் பெருந்திறனும் அவர் பெற்றிருந்தார். சுருங்கச் சொல்லுவதென்ருல், ஓர் அரசியல் விரகரின் மதிநுட்பத்தை தியூப்ளே இயல்பாகவே பெற்றிருந்தார் என்று கூறலாம்.

அவ்வியல்புதான், அவரைத் தென்னிந்திய அரசியல் அமைப்பின் உள்ளார்ந்த பண்பாக இருந்த ஆற்றலின்மையைக் கூர்ந்து நோக்கி ஆராய்ந்தறிய உதவியது. மேலும், அதன் விளைவாக ஐரோப்பியரின் குறைந்த ஆற்றல் தென்னிந்தியாவில் பெரு முக்கியத்துவத்தைப் பெறலாயிற்று. அக்காலத்திய இந்திய அரசியலில் சூழ்ச்சியும், தடியெடுத்தவன் தண்டல்காரனுகலாம் என்ற அதிகாரத்தைக் கைப்பற்றும் அரசியல் நோக்கும், தனிப்பட்ட சிலரின் பேராவலும் தலைவிரித்தாடியதைக் காணுகின்றோம். அயல்நாட்டினருடைய உதவியை நாடுவதை எதிர்த்துத் தடுக்கக்கூடிய நாட்டுப் பற்றினைப் போன்ற உணர்ச்சிப் பெருக்கால் உண்டாகும் எத்தகைய தடைகளும் இந்திய மக்களிடையே உண்டாகவில்லை என்பது இங்குக் குறிப்பிடத்தக்கதாகும். எனவே, அயல் நாட்டவர்கள் இந்திய அரசியல் விவகாரங்களில் எத்தகைய எதிர்ப்பும் தடையுமில்லாமல் அவரவருடைய விருப்பத்திற்கேற்ப தலையிடத் தொடங்கினர். ஐரோப்பியர் அடைந்திருந்த தொழில்நுட்ப மேம்பாடு அவர்களுக்குத் தனிச் சிறப்பினை இந்நாட்டில் அளித்தது. தங்களுக்குள்ளே போரிட்டுக்கொண்டிருக்கும் இந்திய அரசுகளுள் எதற்கு ஐரோப்பியர் உதவி செய்கிறார்களோ, அவ்வரசு போரில் வெற்றி பெறுவது உறுதி என்னும் கருத்து நடைமுறையில் மெய்ப்பித்துக் காட்டப் பெற்றது. இந்திய மக்களிடையே தேசிய உணர்விலும் சமய உணர்விலும் ஆழ்ந்த பற்றுறுதி இல்லாத காரணத்தினல், அரசியல் என்பது செல்வர்களுக்கும், அவர்களுடைய கொள்கையைப் பின்பற்றுவோருக்கும் மட்டும் உரிய முக்கியச் செயலாகக் கருதப்பட்டது. நெடுந்தொலைவிற்குக் குண்டுகளை வீசும் துப்பாக்கிகளும், மிக விரைவிலே குண்டுகளை வீசும் துப்பாக்கிகளும், நிலைகுலையாது உள்ள உறுதியுடன் போரிடும் வீரர்களுமே அரசியல் விவகாரங்களை முடிவு காண்பதற்கு உதவும் கருவிகளாகப் பயன்பட்டனர். அரசியல் சக்திகளின் சமநிலையை நிலைநிறுத்துவதற்கு அவ்வப்போது ஐரோப்பியரின் உதவியை நாடும் அவல நிலையில் அன்றைய இந்திய அரசுகள் இருந்துவந்தன. இதனல் உதவிபுரிய வந்தவர்கள் ஆற்றல்மிக்க தலைவர்களாக மாறுவதற்குரிய வாய்ப்பு உண்டாயிற்று.

ஆனந்தரங்கம் பிள்ளை என்பவர் தியூப்ளேயின் துவிபாஷியாகப் (அல்லது செயலாளராகப்) பல ஆண்டுகள் பணிபுரிந்தவராவர். அவர் தியூப்ளேயைப்பற்றித் தன் நாட்குறிப்பில் வரைந்துள்ள கருத்து இங்குக் குறிப்பிடத்தக்கதாகும் :

'இதெல்லாமிப்போது துரைத்தனம் பண்ணுகிற மூசே துய்ப்ளெய்க்சு குவெர்னேருடைய......ஊக்க மற்றக்காரர். அதினுலேயும் அவருடைய யோக அதிர்ஷ்ட அதிசயத்திஞலேயும் அவர் பிறகே வருகிற ஆள் ஒருத்தருக்கும் தோற்ருது. அது எதிஞலே யென்ருல், இவருடைய யுந்தி புத்தி ஒருவருக்கு மில்லை. எந்தெந்த விதமென்ருல் இவருக்கு......(ஒப்பாக) ஒருத்தருமில்லை. காரியத்திலே...இவர்போல ஒருத்தர் இல்லாமல் இருந்திருந்தால், பட்டணத்து சனங்கள் மிகுந்த துயரத்தையும், சேதத்தையும், நஷ்டத்தையும் அடைந்து அழிந்துபோயிருந்திருக்கும் என்று சொல்லிக்கொண்டார்கள். .........தாழ்த்தியில்லாமல் புத்தி சுவாமி இவருக்குக் கொடுத்தபடி.... ...இதல்லாமலும் இவருடைய தைரிய வீரியமும் இவருடைய குணமும் நடத்தையும் மேம்பாடு கொண்ட முகத்திலே இருக்கிற தந்திரமும் இதுகளையெல்லாம் பார்த்தால், அவுரங்கசீப்பு பாச்சாவுக்குச் சமானமென்றும், லூய்சு கத்தோர்சுக்குச் சமானமென்றும் சொல்ல வேண்டும். மற்றப்படிக்குப் பின்னையும் யோகராசாங்கத்திற்குச் சமமாய் சொல்லப்படுமேயல்லாமல் போகாது. ஆனல், இவருடைய அனந்த கலியாணத்திற்கு எத்தனை விதமென்று எழுதப் போதாதென்றும் என் புத்தி எவ்வளவோ அந்த மட்டுக்கும் தோற்றினது எழுதினேன். புத்தி விசாலமுள்ளவர்களானல் இன்னும் விஸ்தரித்து எழுதுவார்கள்.'[1]

அளவுகடந்த தன்னம்பிக்கையுடைமையும், பகைவரோடு போரிடும் காலத்துச் சிறு சூழ்ச்சிகளையே பெரிதும் மதித்துப் போற்றும் மனப்பண்பும் தியூப்ளேயிடத்துக் காணப்பெற்ற குறைகளாகும். அவருடைய அளவு கடந்த நம்பிக்கை நெருக்கடியான சமயங்களில் அடிக்கடி நெடுநேரம் தமக்குத் தக்க வாய்ப்புக் கிடைக்கும் என்று ஆவலோடு எதிர்பார்த்திருக்குமாறு செய்தமை அவருக்குப் பல சமயங்களில் பெருந்தீங்கினை விளைவித்தது. அவருடைய பகட்டுமிக்க ஆடம்பர வாழ்க்கை தென்னிந்தியர்களைக் கவர்ந்ததோடு, பலருடைய

[1] ஆனந்தரங்கம் பிள்ளையவர்களின் சொந்த லிகித தினப்படி சேதிக் குறிப்பு — முதற் புத்தகம், பக்கம் 235. புதுவை, 1948.

அன்பையும் ஆதரவையும் பெறுமாறு செய்தது. ஆனல், அவருடைய ஆணவமிக்க மனப்பான்மை அவருடைய தோழர்களோடு சேர்ந்து பணியாற்ற முடியாதவாறு செய்தது. அதனுல் பகையும் பூசலுமே உண்டாயின எனலாம். தியூப்ளே மற்றவர்களைத் திகைக்கச் செய்தார். ஆனல், அவரே பல முரண்பட்ட பண்புகளையுடையவராக இருந்தார். அவருடைய அரும் பணியைத் தொடர்ந்து செய்வதற்குரிய ஆற்றலும் பண்புமுடைய தலைவர்களை அவர் தோற்றுவிக்காமல் சென்ருர். அவருக்குப் பிறகு, மற்றவர்கள் யாரும் நிறைவு படுத்த முடியாத ஒரு பாழ்வெளியை உண்டாக்கிவிட்டு தியூப்ளே சென்ருர். அவருடைய செயல்களின் விளைவு, வெள்ளப் பெருக்கானது பொருள்களை அழித்தொழிப்பதைப் போன்றது; மழையானது பொருள்களைச் செழிப்புற்று வளரச் செய்வதைப் போன்றதன்று.

இந்திய அரசுகளுள் ஒன்றைத் தம்முடைய விருப்பத்திற்கேற்றவண்ணம் இணங்கி நடக்குமாறு செய்வதில் தியூப்ளேயின் அரசியல் சூழ்ச்சித்திறனும், படையாற்றலும் பயன்படுத்தப்பட்டதைக் காணுகின்ருேம். இவ்வாறு செயலாற்றுவதே அவருடைய திட்டத்தின் முக்கிய நோக்கமாகும். அவ்வழிகளில் அவர் பிரிட்டிஷாரின் வாணிகத்தைப் பாழ்படுத்தி, ஃபிரெஞ்சுக் கம்பெனியாரை மகிழ்ச்சியுறச் செய்வார்; இந்திய அரசுகளைத் தமக்குக் கீழ்படியுமாறு செய்து, நடைமுறையில் தாமே தென்னிந்தியாவின் ஆட்சியாளராக ஆட்சிபுரிவார். வெல்லஸ்லியின் காலத்தில் ஆங்கிலேய — கிழக்கிந்தியக் கம்பெனி இருந்ததைப் போன்று, தியூப்ளே காலத்தில் ஃபிரெஞ்சுக் கம்பெனி அமைதியான வாழ்க்கையை நாடுவதைத் தவிர வேறு எத்தகைய விருப்பமும் உடையதாக இல்லை. ஆனல், பிற்காலத்தில் நிகழ்ந்ததைப்போல அக்கம்பெனியின் பிரதிநிதிகள் பெற்ற வெற்றிச் சிறப்புகள் அவர்களுடைய ஐயுறவுகளைச் சிறிது காலத்திற்குப் போக்கியது எனலாம். சமாதான உடன்படிக்கை செய்துகொள்ளும் சமயத்தில் தியூப்ளேவுக்கு நன்மை தரத்தக்க நிகழ்ச்சிகள் சில நடைபெற்றன. பழுத்த பழமாக இருந்த நைசாம் 1748ஆம் ஆண்டு இறந்தார். அவருக்குப் பிறகு அவருடைய இரண்டாவது மகன் நாசிர் ஜங் நைசாமாக அரசுகட்டிலேறினர். ஆனல், நாசிர் ஜங் அரசராவதற்கு அருகதையற்றவர் என்று காலம் சென்ற நைசாமின் பேரப்பிள்ளையான முசாபர் ஜங் கலகம் செய்யத் தொடங்கினர். நைசாமாவதற்குத் தமக்கே எல்லாவகையான உரிமைகளும் இருப்பதாக முசாபர் ஜங்

அறிவித்தார். இச்சமயத்தில் மராட்டியரால் சிறைவைக்கப் பட்டிருந்த சந்தாசாகிபு விடுதலை செய்யப்பெற்ருர். அவர் மராட்டியர்களுடைய ஆதரவுடன் கருநாடகத்தின் அரசியலில் தலையிடத் தொடங்கினுர். தியூப்ளே மேற்கண்ட இரண்டு உரிமை வேட்பாளர்களையும் போற்றி ஆதரித்தார். அதனுடன் 1749ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதத்தில் வேலூருக்கு அருகிலுள்ள ஆம்பூர் என்னுமிடத்தில் அன்வாருத்தீன் காலைத் தோற்கடித்து, கொலை செய்வதற்கு தியூப்ளே தன்னுலியன்ற உதவியினைச் செய்தார். இப்போரில் உயிர் பிழைத்த அன்வாருத்தீனின் மகன் முகமது அலி திருச்சிராப்பள்ளிக்கு ஓடியொளிந்தார். அக்டோபர் மாதத்தில் பிரிட்டிஷார் திருச்சிராப்பள்ளியில் அடைபட்டுக்கிடந்த முகம்மது அலிக்கு உதவிசெய்யத் தொடங்கினர். இந் நிகழ்ச்சிகள் நடைபெறுவதற்குச் சில மாதங்களுக்கு முன்பே மதராஸ் அரசாங்கம் தஞ்சை அரசியலில் தலையிட்டது. ஆனுல், ஆங்கிலேய அரசு அக்டோபர் மாதத்தில் எடுத்துக்கொண்ட நடவடிக்கையே இந்திய அரசியல் செயல்களில் ஆங்கிலேயர்கள் பேரளவில் தலையிடுவதற்குரிய வாய்ப்பினை அளித்தது.

இப்பொழுது முசாபர் ஜங், நாசிர் ஜங்கின் படைகள் முழுவதையும் நேருக்குநேர் எதிர்த்து நின்று போரிடவேண்டியதாயிற்று. 1750ஆம் ஆண்டின் பெரும் பகுதியை நாசிர் ஜங் கருநாடகத்திலேயே கழித்தார். இறுதியாக முசாபர், நைசாமிற்குக் கீழ்ப்படிந்து நடப்பதாக அவரிடம் புகலடைந்தார். இருவருக்கும் இடையே ஓர் உடன்படிக்கையைச் செய்து வைக்க தியூப்ளே முயன்றுகொண்டிருந்தார். அந் நிலையில் நாசிர் கொலை செய்யப்பட்டார். இந் நிகழ்ச்சிகளைத் தமது அறிவுத் திறமையாலும் சூழ்ச்சித் திறத்தாலும் தமக்கு நன்மை பயக்கும்படி மாற்றியமைத்துக்கொள்ள தியூப்ளே அரிதின் முயன்ருர். அவர் முசாபர் ஜங்கினை நைசாமாக்கியதோடு, மற்றவர்களையும் முசாபரை நைசாமாக ஏற்றுக் கொள்ளுமாறு செய்தார். முசாபருக்கு உதவியாக புஸ்ஸியின் தலைமையின்கீழ் ஒரு ஃபிரெஞ்சுப் படையினை ஐதராபாத்திற்கு தியூப்ளே அனுப்பிவைத்தார். இவ்வரிய செயல்களுக்கு ஈடாக அவர் முசாபரிடமிருந்து பெருமானியங்களைப் பெற்றதோடு, கிருஷ்ணு ஆற்றின் தெற்கேயுள்ள தென்னிந்தியாவின் ஆட்சியாளர் எனும் பட்டத்தையும் அவர்

பெற்றார்.[1] முசாபர் மிக விரைவில் கொலை செய்யப்பட்டார். ஆனால், புஸ்ஸியின் படைகள் உடனடியாக சலபத் ஜங்கை ஐதராபாத்தின் அரியணையில் ஏற்ற முயன்று, அதில் வெற்றியும் பெற்றது. சலபத் ஜங்கை நைசாமாக ஆக்கிய தோடு, அவரைப் பதவியிலிருந்து வேறு யாரும் அசைக்க முடியாதவாறு புஸ்ஸியின் படைகள் கண்காணித்துவந்தன. எனவே, நைசாம் ஃபிரெஞ்சியரின் ஆதரவைப் பெற்று வாழ வேண்டியவரானார். இந் நிகழ்ச்சிகள் தியூப்ளேயிற்குப் பேரும் புகழும் பெற்று விளங்க வாய்ப்பு அளித்தன. அவர் இப்பொழுது புகழ்க்குன்றின் கொடுமுடியில் வீறுடன் விளங்கினார். மேலும், தம்முடைய திட்டங்களைக் கருநாடகத்தில் செயற்படுத்தி முற்றுப்பெறச் செய்யும் முயற்சிக்கு யாதொரு தடையுமின்றி உரிமையோடு செயலாற்றினார்.

சென்னையில் இருந்த பிரிட்டிஷாரும், திருச்சியிலிருந்த முகமது அலியுமே தியூப்ளேயின் பேரரசை நிறுவும் திட்டத்திற்கு இடையூறாக இருந்துவந்தனர். முகமது அலியின் நிலையினைப் பலப்படுத்துவதற்காக பிரிட்டிஷார் ஜின்ஜென்ஸ் **(Gingens)** என்னும் தலைவரின்கீழ் ஒரு படையை அனுப்பி வைத்தனர். அப் படையோடு முதன்முதல் தியூப்ளே மோத நேர்ந்தது. இதுமுதல் தியூப்ளேயின் செல்வமும் செல்வாக்கும், பேரும் புகழும், சீரும் சிறப்பும் தேய்பிறையாயின. 1751ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் ஃபிரெஞ்சியர் திருச்சிக் கோட்டையை முற்றுகையிட்டனர். ஆனால், இதற்கிடையே கிளைவ் ஃபிரெஞ்சியரின் கருத்தினை வேறு பக்கத்தில் செலுத்துமாறு செய்தார். ஆகஸ்டு மாதத்தில் கிளைவ் 210 வீரர்களைத் துணையாகக்கொண்டு கருநாடகத்தின் தலைநகரான ஆர்க்காட்டை முற்றுகையிட்டுக் கைப்பற்றினார். இதனால் ஃபிரெஞ்சியருடைய திருச்சி முற்றுகை தளர்ச்சியுற்றது. செப்டம்பர், அக்டோபர் மாதங்களில் ஐம்பது நாட்கள் நடைபெற்ற வரலாற்றுச் சிறப்பு வாய்ந்த திருச்சிக் கோட்டையின் முற்றுகை ஃபிரெஞ்சியரின் முயற்சியில் பிளவினை உண்டாக்கியது. அதனால் முகம்மது அலி தமக்கு உதவிபுரியுமாறு மற்ற அரசுகளை வேண்டிக்கொள்ளுவதற்குப் போதிய காலமும் வாய்ப்பும் அவருக்குக் கிடைத்தன. மைசூரும்,

[1] இது ஒரு பட்டமேயொழியப் பதவியன்று. இப் பட்டம் மதுரை, தஞ்சை அல்லது மைசூர் அரசர்களின் பட்டங்களுக்கு மேலானதுமன்று; கருநாடகத்தின் ஆளுநரான சந்தாசாகிபின் பட்டத்தைக் காட்டிலும் சிறந்ததுமன்று.

தஞ்சையும், மராட்டியத் தலைவரான முராரி ராவும் முகம்மது அலிக்கு உதவிபுரிய முன்வந்தனர். இச் சூழ்நிலையைக் கிளைவும் சிடிரிங்கர் லாரென்சும் முற்றிலும் நன்மை பயக்கத் தக்க வகையில் பயன்படுத்திக்கொண்டனர். முதலில் திருச்சிராப்பள்ளி ஃபிரெஞ்சியரின் முற்றுகையிலிருந்து விடுவிக்கப் பெற்றது. ஃபிரெஞ்சியப் படைத்தலைவரான லாவும் சந்தா சாகிபும் ஸ்ரீரங்கத்திற்குள் ஓடி ஒளிந்தனர். ஆங்கிலேயரின் படை ஸ்ரீரங்கத்தை முற்றுகையிட்டது. ஃபிரெஞ்சுப் படைத் தலைவர் சொல்லெரணைத் துன்பத்திற்கு ஆளானுர். வேறு வழியின்றி 1752ஆம் ஆண்டு ஜூன் மாதத்தில் லாவும் சந்தா சாகிபும் ஆங்கிலேயரிடம் சரணடைந்தனர். உடனே முகம்மது அலி, சந்தாசாகிபைத் தூக்கிலிட்டுக் கொன்ருர். அவருடைய பிரிட்டிஷ் கூட்டாளிகள் இவ் வன்முறைச் செயலில் தலையிடத் தவறியமையால், முகம்மது அலி தம் திட்டத்தை நிறைவேற்றிவிட்டார். ஆனுல், தியூப்ளே தோல்வியை ஒப்புக் கொள்ளவில்லை. எனவே, எல்லையற்ற படைபலத்தோடு இப் போராட்டம் தொடர்ந்து நடைபெற்றது. 1753ஆம் ஆண்டில் இரண்டாவது முறையாக அவர் திருச்சிராப்பள்ளியை முற்றுகையிட்டார். ஆனுல், 1754ஆம் ஆண்டின் தொடக்கத்தில் பிரிட்டிஷாரோடு நட்புக் கொள்ளுவதற்குரிய முயற்சிகளில் தியூப்ளே ஈடுபடவேண்டிய நெருக்கடி உண்டாயிற்று. இதற்கிடையே ஃபிரெஞ்சுக் கம்பெனியின் உரிமையாளர்கள் தியூப்ளேயைத் தாயகத்திற்குத் திரும்பிவருமாறு அழைப்பது என்று முடிவு செய்தனர். ஆகஸ்டு மாதத்தில் ஃபிரெஞ்சுக் கம்பெனியின் இயக்குநர்களுள் ஒருவரான கோதயூ (Godeheu) என்பார் தியூப்ளேயின் பதவியில் அமருவதற்காக அனுப்பப்பட்டார். அமைதியை நிலைநாட்டுவதே அவருடைய முதன்மையான கடமை என்று அவர் கம்பெனியாரால் அறிவுறுத்தப்பட்டிருந்தார். ஃபிரெஞ்சு மக்கள் தங்களுடைய இராச்சிய உடைமைகளைச் சிறிதும் இழக்கவில்லை. அதைப் போன்றே ஐதராபாத்தில் அவர்கள் பெற்றிருந்த தனிப் பெருஞ் சிறப்பையும் செல்வாக்கையும் சிறிதுகூட இழக்கவில்லை; ஆனுல், கருநாடகத்தைத் தாங்களே அடக்கியாள வேண்டும் என்று முயன்ற முயற்சியிலும், பிரிட்டிஷாரோடு போட்டியிட்டு வெற்றிபெறவேண்டும் என்று முயன்ற முயற்சியிலும் படுதோல்வி அடைந்தனர். நடைமுறையில் இருந்த வற்றை மீண்டும் செயல்முறைக்குக் கொண்டுவரவேண்டும் என்பது கொள்கையளவில் காணப்பட்டதே ஒழிய, செயல் முறையில் வேறுபல விளைவுகள் உண்டானதைத் தடுக்க முடியவில்லை. முதலாவதாக, ஃபிரெஞ்சு மக்களின் பேராற்றலும்



(b) கிளைவ்



(a) சர் தாமஸ் ரோ

புகைப்படம் 28



வாரன் ஹேஸ்டிங்ஸ் (முதுமைப் பருவத்தில்)

பெருஞ் சிறப்புமாகிய பழம்பெருமை மாசுபடிந்து போயிற்று. இரண்டாவதாகத் தென்னிந்தியாவில் பிரிட்டிஷாரின் நிலையும் மதிப்பும் பேரளவிற்கு வலுப்படுத்தப்பெற்றது. இவை யாவற்றையும்விடத் தென்னிந்தியாவில் ஐரோப்பியரின் நிலைக்கும் இந்திய அரசுகளின் நிலைக்கும் இடையே இருந்து வந்த தொடர்பு இடர்ப்பாடுற்றது. இவ்விரு ஐரோப்பிய தேசிய இனங்களும் பேரார்வத்தோடும் சுறுசுறுப்புடனும் இந்திய அரசியலில் தலையிடலாயின. ஐரோப்பியரின் வெற்றிக்கு இந்திய அரசுகளின் ஆதரவு இனிமேல் தேவை இல்லை என்பது தெளிவாகத் தோன்றியது; இதற்கு மாறாக இந்திய அரசுகள் ஐரோப்பியரின் ஆதரவை நாடி, அவர்களுக்கு அடிபணிந்து நடக்கத் தொடங்கியதைக் காணுகின்றோம். கருநாடகத்தில் முகம்மது அலியும், ஐதராபாத்தில் சலபத் ஜங்கும் ஐரோப்பியரைப் போற்றி ஆதரிக்கும் புரவலர்களாக விளங்காமல், ஐரோப்பியரைச் சார்ந்து வாழும் கட்சிக்காரர்களாகவே காட்சியளித்தனர்.

தியூப்ளே போகூழினல் பெருந் துன்பப்பட்டார். அவருடைய படைத் தலைவர்கள் அவருடைய கட்டளைப்படி செயலாற்றவும் இல்லை; ஒத்துழைக்கவும் இல்லை. இதற்கு விதிவிலக்காகப் புஸ்ஸி என்னும் படைத் தலைவர் ஒருவரை மட்டும் குறிப்பிடலாம். அவர் ஒருவர்தாம் தியூப்ளேயின் கருத்தினை அறிந்து அதற்கேற்பப் பல்லாற்ருனும் ஒத்துழைத்தார். லாரென்சு என்னும் ஆங்கிலேய அதிகாரியின் அறிவையும், கிளைவின் மதிநுட்பத்தையும் அவர் எதிர்த்துப் போரிட வேண்டியிருந்தது. ஆயினும், அவருடைய தோல்விக்குரிய காரணங்கள் இதைக்காட்டிலும் ஆழ்ந்த கருத்துள்ளனவாகும். தொடக்க காலத்தில் அவர் பெற்ற வெற்றிதான் நம்மை வியப்பில் ஆழ்த்த வேண்டுமேயொழிய, அவர் பிற்காலத்தில் அடைந்த தோல்வியன்று. தியூப்ளே ஃபிரெஞ்சுப் பேரரசை நிறுவுவதற்குப் பின்பற்றிய முறைகளைத் தாயகத்திலிருந்தவர்கள் போற்றி ஆதரிக்கவில்லை. இதன் விளைவாக ஃபிரெஞ்சுக் கம்பெனி இயக்குநர்கள் எந்நேரமும் தம்மைப் பற்றிக் குறை கூறிக்கொண்டிருப்பதைத் தடுப்பதற்குத் தொடர்ந்து வெற்றிமேல் வெற்றி பெற்றுக்கொண்டிருக்க வேண்டிய இடர்ப்பாட்டிலே தியூப்ளே சிக்கிக்கொண்டு திண்டாடினர். பிரிட்டிஷாரைத் தோல்வியடையச் செய்வதற்கு மட்டுமல்லாமல், எப்பொழுதும் மாறிக்கொண்டிருக்கும் தென்னிந்திய அரசியல் நிலையை அடக்கியாளுவதற்கும் வெற்றி என்பது இன்றியமையாது தேவைப்பட்டது. பிரிட்டிஷார்,

ஃபிரெஞ்சியருடைய தாக்குதலைச் சமாளித்து வெற்றி பெற முடியும் என்ற நிலை உண்டான சிறிது காலத்திற்குள் தியூப்ளேயின் தென்னிந்தியக் கூட்டாளிகள் ஒழுங்கற்ற வகையில் அவரோடு கொண்டிருந்த நட்புறவை முறித்துக் கொண்டனர். இவை யாவற்றையும்விட நெடுங்காலம் போர் நடவடிக்கைகளில் தொடர்ந்து ஈடுபடுவதற்குத் தேவையான நிதி வசதியில்லாமல் தியூப்ளே அல்லற்பட்டார். அதைப் போன்றே அவருடைய கூட்டாளிகளுக்கு மிகுதியான பொருளைக் கொடுத்து மனநிறைவு அடையும்படி செய்வதற்கும் தேவைப்பட்ட அளவிற்குப் பணவசதியின்றி அவர் துன்புற நேர்ந்தது இங்குக் குறிப்பிடத்தக்கதாகும். இந்தியாவில் ஃபிரெஞ்சியரின் பேராதிக்கத்தை நிலைநிறுத்த வேண்டும் என்று தியூப்ளே முயன்ற முயற்சி ஓர் ஆற்றல் பரிசோதனையாகும். அத்தகைய அரும்பெருஞ் செயலைச் செய்வதற்கு அவரிடத்துள்ள மூலாதாரத்தின் உண்மையான அளவினை அவர் உணரத் தொடங்கிய உடனேயே அவருடைய பெரு முயற்சி தோல்வியுற வேண்டிய நிலையை அடைந்தது.

ஃபிரெஞ்சு மக்கள் சிறிது காலம் தென்னிந்திய அரசியலில் சீரும் சிறப்பும் பெற்று, ஒப்பாரும் மிக்காருமின்றி மேன்மையுற்று விளங்கினர். ஆனல், அப்பேரும் புகழும் சிறிது காலமே நிலைக்கக்கூடியனவாக இருந்தன. அவர்கள் பெற்ற சிறப்பெல்லாம் மூன்ருவது முறையாக மும்மரமாக ஆங்கிலேய—ஃபிரெஞ்சு மக்கள் போராட்டம் தொடங்கும் வரையில் பொலிவுற்று விளங்கியது எனலாம். 1756ஆம் ஆண்டு ஏழாண்டுப்போர் ஐரோப்பாவில் தொடங்கியது. சைலேசியாவை மீண்டும் கைப்பற்ற வேண்டும் என்று ஆஸ்திரியா விரும்பியதே இப்போருக்குக் காரணமாக அமைந்தது. ஆனல், அச்சமயம் எதிர்த்துப் போரிட நின்ற வல்லரசுகள் வேறுபட்டனவாக இருந்தபோதிலும், இங்கிலாந்தும் ஃபிரான்சும் மீண்டும் எதிர்க்கட்சிகளைச் சார்ந்தனவாகவே இருந்தன. இப்போர் தொடங்கிய காலத்தில் தென்னிந்தியாவில் இருந்த இரு திறத்தினரும் போராட்டத்தைப் புதுப்பிக்கும் ஆற்றலும் வசதியுமற்றவர்களாகவே இருந்தனர். ஃபிரெஞ்சுக் கம்பெனி இன்னும் தளர்ச்சியுற்றதாகவும், மானக்கேடுற்றதாகவும் இருந்துவந்தது. ஐதராபாத்திலுள்ள புஸ்ஸியைத் தாக்க வேண்டும் என்னும் திட்டத்துடன் 1755ஆம் ஆண்டு கிளைவ் மதராசிற்குத் திரும்பிவந்தார். பம்பாய் கிளைவோடு ஒத்துழைக்கத் தவறியதால், இம் முயற்சி சிறிது காலம் தாழ்த்தப்பட்டே தொடங்கப்பெற்றது. அத

னுடன் வங்காளத்திலிருந்த கம்பெனிக்கு உண்டான பேரழிவின் காரணமாகக் கிளைவ் குறிப்பிட்ட காலம்வரையில் வடநாட்டில் தங்கிச் செயலாற்ற வேண்டிய நெருக்கடியும் உண்டாயிற்று. இக் காரணங்களினுல் ஐதராபாத்திலிருந்த புஸ்ஸியைத் தாக்க வேண்டும் என்ற கிளைவின் திட்டம் 1755ஆம் ஆண்டுவரை செயலாற்றப்படாமல் காலம் தாழ்த்தப்பட்டு வந்தது. ஐரோப்பாவிலிருந்து படைத் தளவாடங்கள் வரும் வரையில் ஃபிரெஞ்சுக்காரர்கள் வாளா இருந்துவந்தனர். இவ்வமைதி வங்காளத்தில் தம்முடைய நிலையைப் படையாலும், பணத்தாலும் வலுவடையச் செய்துகொள்ளுவதற்குப் போதிய வாய்ப்பையும், வசதியையும், காலத்தையும் கிளைவிற்கு அளித்தது. போர் தொடங்குவதற்கு முன்பே, அப்போர் ஃபிரெஞ்சுக்காரருக்குத் தோல்வியைத் தந்தது என்று கூறினுல், அது ஒருவகையில் உண்மையேயாகும். இவ்விரு கம்பெனிகளையும் போரிடுமாறு ஐரோப்பாவிலிருந்து கட்டளையும் உதவியும் வந்தமையால், மீண்டும் கடலாதிக்கம் என்பது இப்போராட்டத்திலும் முதன்மையான இடத்தைப் பெறத் தொடங்கியது. எனவே, ஃபிரெஞ்சுக்காரர் வெற்றி பெற வேண்டுமென்ருல் இந்தியாவில் மட்டுமல்லாமல் ஐரோப்பியப் பெருங்கடலிலும் தங்கள் ஆதிக்கத்தை நிலைநாட்டவேண்டியவர்களாக இருந்தனர்.

1758ஆம் ஆண்டு பலத்த பாதுகாப்புடன் ஃபிரெஞ்சுக்காரரின் போர்க் கப்பல்கள் டி ஆச் (d'Ache) என்பவரின் தலைமையின்கீழ் இங்கு வந்து சேர்ந்தன. அக் கப்பல்கள் இங்கு நெடுநாட்கள் போரிடுவதற்குத் தேவையான போர்க் கருவிகளையும் போர் வீரர்களையும் கொண்டுவந்தன. அப் பெரும் படையின் சிறப்புமிக்க தலைவராக உடன்வந்தவர் கௌன்ட்-டி-லாலி (Counte de Lally) என்பவராவர். அவர் அஞ்சா நெஞ்சம் வாய்ந்த தறுகண்மைமிக்க வீர மறவராக விளங்கினுர். ஆனுல், அதே சமயத்தில் அவர் முரட்டுப் பிடிவாதமுள்ள மனிதராகவும் இருந்தார். விழிப்புணர்வோடு போரிட வேண்டிய சமயங்களில் அவர் எதைப்பற்றியும் கவலைப்படாது துணிச்சலாகப் போரிட்டார். அவ்விதம் போரிட வேண்டிய சமயங்களில் லாலி விழிப்புணர்வோடும் முன்னெச்சரிக்கையுடனும் தயங்கித் தயங்கிப் போரிட்டார். அவர் படைத் தளபதியாகவும், ஃபிரெஞ்சுக் கம்பெனியின் ஆளுநராகவும் (Governor) இந்தியாவிற்கு அனுப்பப்பட்டார். இதனுல், அவர் முழு அதிகாரத்தையும் தமக்கேயுரியதாகக் கொண்டிருந்தார். ஆனுல், அவரால் தம் கீழ்ப் பணியாற்றும்

பணியாளர்களிடம் பற்றுறுதியை ஆர்வத்தோடு வளர்க்க முடியாமல் போயிற்று. மேலும், அவர் அனுபவ அறிவும் போரியல் சூழ்ச்சித் திறனும்மிக்க புஸ்ஸியுடன் சேர்ந்து செயலாற்றும் திறனற்றவராக இருந்தார். இத்தகைய குறைபாடுகளை லாலி தம்முடைய ஒவ்வொரு செயலின்மூலமும் வெளிப்படுத்தினர். முதலில் எல்லாம் நன்மை பயக்கும் வகையிலேயே நடைபெற்றன. போகாக்கும் (Pocock), டி ஆச்சும் (d' Ache) இடையே தீர ஆலோசித்து ஒரு முடிவிற்கு வராது செயலில் ஈடுபட்டமையான் சோழமண்டலக் கடற்கரையில் பிரிட்டிஷ் கப்பல்கள் காவலாக ஒன்றுகூட இல்லாமற் போயிற்று. அங்கிலையில் லாலி உடனடியாகச் செயின்ட் டேவிட் கோட்டையை நோக்கிப் படையெடுத்துச் சென்றூர். லாலி எதிர்பார்த்த காலத்திற்கு முன்னதாகவே விரைவில் அக்கோட்டையை அவர் கைப்பற்றினர். அப்போர் நிகழ்ச்சி ஜூன் மாதம் 2ஆம் நாள் நடைபெற்றது. மதராசைத் தாக்குவதே அவருடைய அடுத்த முயற்சியாக இருந்தது. ஆனல், இங்குத்தான் அவருடைய முன்னேற்றத்திற்குத் தடையாக அமைந்த தொல்லைகள் தொடங்கின. கடற்கரையோரத்தில் போகாக்கு, தம்முடைய கடற்படையுடன் மீண்டும் தோன்றினர். டி ஆச் அவரை எதிர்த்துப் போரிட மறுத்துவிட்டார். எனவே, சென்னையைத் தாக்குவதற்குத் திட்டமிட்டுக்கொண்டிருந்த லாலி பருவ மாறுதலை எதிர்பார்த்துக்கொண்டிருந்தார். ஆங்கிலேயரின் கப்பற்படை சென்னையைவிட்டு நீங்குவதற்கு முன்பே பருவகாலம் தமக்கு நன்மை பயக்கத்தக்க வகையில் மாறுமா என்று அவர் ஆவலோடு காத்திருந்தார். இதற்கிடையே தஞ்சாவூரின் அரசர் கொடுக்கவேண்டியிருந்த பழைய கடன் ஒன்றை வன்முறையில் திரும்பப் பெறுவதற்காக லாலி தம்முடைய காலத்தையும் ஆற்றலையும் செலவழித்து வந்தார். அவர் தம்முடைய பீரங்கிப் படையணி வருவதற்கு முன்பே வீரர்களுடன் மும்மரமாக விரைந்து சென்று தஞ்சையை அடைந்தார். ஆனல், அவருடைய போர்த் தளவாடங்கள் வந்துசேர நாட்கள் பலவாயின. அதனல், அவர் பல நாட்களுக்கு முன்னரே தஞ்சையைச் சென்றடைந்தும் செயலில் இறங்க முடியாது தஞ்சையை முற்றுகையிட்டுக் காத்துக்கொண்டிருந்தார். அவர் இவ்வாறு வீணகத் தஞ்சைக்கு முன்னல் நாட்களைப் போக்கிக்கொண்டிருந்தபொழுது, நாட்டுப்புறத்து மக்களைப் பெரிதும் துன்புறுத்தினர். கோயில் பிராமணர்கள் ஆறுபேரை லாலி தூக்கிலிட்டுக் கொன்றூர். இதனல் கிராமப்புறத்து மக்கள் பெரும் பீதி அடைந்தனர். இதன் விளைவாக லாலியும், லாலி

யின் படைவீரர்களும் நாட்டுப்புற மக்களிடமிருந்து தங்களுக்கு நாள்தோறும் தேவைப்பட்ட உணவுப் பொருள்களைக் கூடப் பெறமுடியாமல் அல்லற்பட்டனர். கடைசியாகக் காரைக்காலுக்கு அப்பால் டிஆச் தோற்கடிக்கப்பட்டார் என்ற செய்தியைக் கேட்டறிந்த பிறகு, லாலி தஞ்சாவூரை முற்றுகையிடுவதைக் கைவிட்டார். இச் சமயத்தில் பருவகாலமும் மாற்றமுற்றது. லாலி சென்னையை முற்றுகையிடுவதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்துவந்தார். ஆனால், சென்னையின் ஆளுநராக இருந்த பிக்கட்டும் (Pigot) கர்னல் லாரென்சும் தங்கள் ஓய்வு நேரத்தைச் சென்னை நகரத்தின் தற்காப்பிற்காகப் பணிபுரிவதிலேயே கழித்துவந்தனர். அவர்களுடைய முன்னெச்சரிக்கையான தற்காப்பு முயற்சிகள் பின்னர்ப் பெரும்பயன் தந்தன. லாலி சென்னையைப் பெரும்படையுடன் முற்றுகையிட்டார். மேற்கண்ட இருவரும் 1758ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் முதல் 1759ஆம் ஆண்டு மார்ச்சு மாதம்வரையில் திட்டமிட்டுத் தற்காப்பு முயற்சியில் ஈடுபட்டு வந்ததன் விளைவாக, முன்பு வலுவற்றதாக இருந்த நிலையிலிருந்து பெரிதும் மாற்றமுற்றதாகச் சென்னை விளங்கியது. பிரிட்டிஷ் போர்க் கப்பல்களின் ஒரு தொகுதி கடலிலே காணப்பட்டபோதும், லாலி அவற்றைத் தாக்கிச் சிதறடிப்பதற்கு இன்னும் தயங்கிக்கொண்டிருந்தார். சென்னையை முற்றுகையிட்டதனால் எத்தகைய பயனும் விளையாததால், தன்னுடைய போரியல் சூழ்ச்சித் திறனைப் பிறர் கண்டு எள்ளி நகையாடுமாறு, லாலி சென்னை முற்றுகையைக் கைவிட்டுத் திரும்பிச் சென்றார்.

அதே சமயத்தில் ஃபிரெஞ்சுக்காரர் மற்றொரு படுதோல்வி அடைந்தனர். ஐதராபாத்திலுள்ள புஸ்ஸியைத் தமக்கு உதவிபுரிய வருமாறு லாலி அழைத்தார். ஆனால், இரண்டாவது முறை ஆழ்ந்து சிந்தித்து வட சர்க்காரில் இருந்த ஃபிரெஞ்சுக் கோட்டைப் பாதுகாப்புப் படையை அங்கேயே விழிப்புணர்வோடு இருக்குமாறு கட்டளையிட்டிருக்கலாம். சென்னை நகரைக் காப்பதில் எத்தகைய குறைவும் நேரா வகையில் தன்னுடைய படையின் ஒரு பகுதியைக் கர்னல் ஃபோர்டேயின் தலைமையின்கீழ் 1758ஆம் ஆண்டு கூதிர்ப் பருவத்தின்பொழுது விசாகப்பட்டினத்திற்குக் கிளைவ் அனுப்பிவைத்தார். இச்செயலின்மூலம் ஃபிரெஞ்சுக்காரரின் கவனத்தை வேறு பக்கம் திருப்பினால், சென்னையை அவர்களுடைய முற்றுகையில் இருந்து காப்பாற்றலாம் என்று கிளைவ் கருதினர். லாலி சென்னையின்முன் முற்றுகை

யிட்டுக்கொண்டிருந்த சமயத்திலே, ஃபோர்டே விசாகப்பட்டினத்தில் ஃபிரெஞ்சுக்காரர்களைப் படுதோல்வி அடையச் செய்தார். வடக்கு நோக்கித் தன் படையுடன் லாலி செல்லுவதற்கு முன்பே ஆங்கிலேயரின் படை மசூலிப்பட்டினத்தைக் கைப்பற்றிக்கொண்டதோடு, நைசாமுடன் சமாதான உடன்படிக்கை செய்துகொண்டதையும் தெரிந்துகொண்டார். 1759ஆம் ஆண்டு அக்டோபர் மாதத்தில் ஃபோர்டே வங்காளத்தைத் தாக்குதலிலிருந்து காப்பாற்றியவண்ணம் கல்கத்தாவிற்குத் திரும்பிச் சென்றார். இந்தியப் போராட்டத்திற்கு அனுப்பப்பட்ட படையினுள் பேராற்றலும் பெருந்திறனும் வாய்ந்த படைப் பகுதியை லாலி இழந்துவிட்டார். கடலாதிக்கத்தைச் சிறந்த முறையில் பயன்படுத்தினால், நிலப் படையின் தாக்குதலைக்காட்டிலும் இருமடங்கு வெற்றியைப் பெற முடியும் என்பதற்கு லாலியின் தோல்வி சிறந்ததோர் எடுத்துக்காட்டாகும். கூட் (Coote) போர்த் தளவாடங்களொடு இந்தியாவிற்கு வரும்வரையில் ஆங்கிலேய – ஃபிரெஞ்சுப் போராட்டம் ஒரு திட்டமான முடிவிற்கு வராமல் இழுத்துப் பறித்துக்கொண்டு இருந்தது. 1760ஆம் ஆண்டு ஜனவரி மாதத்தில் வந்தவாசி என்னுமிடத்தில் லாலியைக் கூட் படுதோல்வி அடையச் செய்தார். இப்போரில் புஸ்ஸி சிறை பிடிக்கப்பட்டார். இவ்வாறு புதுச்சேரியைத் தவிர ஃபிரெஞ்சுக்காரர்களின் உடைமைகள் அனைத்தும் பறிபோயின. புதுச்சேரியும் ஆங்கிலேயரால் முற்றுகையிடப்பெற்றது. எட்டு மாதங்கள் புதுச்சேரியினுள்ளே புஸ்ஸி அடைக்கப்பட்டிருந்தார். அம் முற்றுகையை அவர்கள் வீரதீரத்துடன் சமாளித்தனர். ஆனால், மிக்க நெருக்கடியான சூழ்நிலையில் எதிர்க் குற்றம் சாட்டத்தக்க வகையில் அவர்கள் முற்றுகையினால் அல்லலுற்றனர். எட்டு மாத முற்றுகைக்குப் பிறகு லாலி வேறு வழியின்றி ஆங்கிலேயரிடம் அடைக்கலம் அடைந்தார்.[1] இவ்வாறு இந்தியாவில் ஃபிரெஞ்சுக்காரரின் ஆதிக்கம் முடிவுறும் நிலையை அடைந்தது.

இந்தியாவில் ஃபிரெஞ்சுக்காரர் படுதோல்வி அடைந்ததற்கு லாலியின் பண்புநலன் ஓர் அளவிற்குக் காரணமாக அமைந்ததெனில் அது தவறாகாது. அவருடைய பொறுமையற்ற பண்பும், தம்முடைய தோழர்களோடு சேர்ந்து செய

[1] லாலி ஃபிரான்சிற்குத் திரும்பியபொழுது, ஃபிரான்சின் அரசாங்கம் அவர்மீது அரசத் துரோகக் குற்றம் சாட்டி வழக்கு விசாரணை செய்தது; முடிவில் அவரைத் தூக்கிலிட்டது.

லாற்றும் திறமையின்மையும் அல்லது படைத்துறை சாரா பொதுமக்களிடத்து நம்பிக்கை ஊட்ட முடியாத அவருடைய நடவடிக்கைகளும்தாம் ஃபிரெஞ்சுக்காரர்களின் மனவுறுதியை அடியோடு குலைத்தது ; ஒன்றைப்பற்றி முடிவிற்கு வருவதில் அவரிடத்துக் காணப்பட்ட குறைபாடுகளும், நாட்டு மக்களின் மன நிலையை அறிந்துகொள்ள அவர் தவறியமையும், அல்லது சுற்றுப்புறத்திருந்த நாட்டு மக்களிடத்து அமைதியான நட்புறவு கொள்ளாமையும் லாலியின் தோல்விக்குரிய முக்கிய காரணங்களாகும். ஆனால், இத்தகைய தனி மனிதன் செய்த தவறுகளுக்குப் பின்னணியாகக் கடலாதிக்கமும், பொருளாதார வசதியுமாகிய இரு காரணங்கள் குறிப்பிடத்தக்கன. வந்தவாசிப் போருக்குப் பிறகு லாலி இழந்தவற்றை மீண்டும் பெற முடியாமல்போனமைக்குக் காரணம், போதிய பண வசதி இல்லாமல் திண்டாடியதேயாகும். ஃபிரான்சிலிருந்து தேவையான பொருள் எதையும் பெற முடியாமல் போனமையால்தான், லாலி பண வசதி இல்லாமல் துன்புற்றார். இதற்கு நேர்மாறான வகையில் பிரிட்டிஷார் சென்னைக்குத் தாயகத்திலிருந்து தேவையான பொருள்களை அனுப்பிக்கொண்டிருந்தனர். அதனுடன் வங்காளத்திலிருந்த ஆங்கிலேயக் கம்பெனி சென்னையின் தேவைகளை உடனடியாகக் கவனித்து வந்தது. மேலும், அவர்களுடைய மனிதர்களைக் கப்பலில் அனுப்பிக்கொண்டிருப்பதன்மூலம் இரண்டு மனிதர்கள் செய்யக்கூடிய வேலையை ஒரு மனிதனே செய்யுமாறு செய்தனர். லாலி தவறு செய்தார் என்பது உண்மை. ஆனால், கடற்படையின் உதவியில்லாமல் இருந்திருந்தால் அவரை அழித்தொழித்திருக்க முடியாது என்பது மறுக்க முடியாத உண்மையாகும்.

இதற்குப் பிறகு இந்தியாவில் ஃபிரெஞ்சுக்காரரின் ஆதிக்கம் என்றுமே வெல்ல முடியாதவாறு பேராற்றல் உடையதாக விளங்கவில்லை. 1763ஆம் ஆண்டு நடைபெற்ற சமாதான உடன்பாட்டின்படி புதுச்சேரி ஃபிரெஞ்சுக்காரர்களுக்குத் திருப்பிக் கொடுக்கப்பெற்றது. ஆனால், புதுச்சேரி திறந்தவெளி நகரமாகத் திருப்பிக் கொடுக்கப்பெற்றது. 1782—3ஆம் ஆண்டுகளில் டி சஃப்பரேன் (de Suffren) பெற்ற கடல் வெற்றிகள் ஃபிரெஞ்சுக்காரரின் ஆதிக்கம் மீண்டும் புத்துயிர்ப்புப் பெறும் என்ற நம்பிக்கையை அச்சமயத்தில் அளித்தது. ஆனால், அவ் வெற்றிகளால் எத்தகைய பயனையும் ஃபிரெஞ்சுக்காரர் அடைவதற்கு முன்பே, சமாதான உடன்படிக்கை செய்துகொள்ளப்பட்டது. ஃபிரெஞ்சுக்காரர் செல்வாக்கு நிலைபெற்றிருந்தது. ஆனால், அது தனி மனிதர்களின்

அறிவையும் ஆற்றலையும் பொறுத்தே அமைந்தது. அச் செல்வாக்கினைக் கடற்படையோ, நிலப்படையோ போற்றி ஆதரிக்கவில்லை. ஐதராபாத்தில் ரேமாண்டும் (Reymond), சிந்தியாவோடு டி பாய்க்னே (de Boigne), பெர்ரோன் (Perron) ஆகியோரும் சேர்ந்துகொண்டு தொல்லை கொடுத்தனரே யொழிய, பிரிட்டிஷாரை அஞ்சி நடுங்குமாறு ஆட்டிப்படைக்க வில்லை. சிறிது காலத்திற்கு மின்ட்டோ பிரபுவின் உள்ளத்தை நெப்போலியனின் படையெடுப்பு என்ற பேய் ஆட்டிப் படைத்தது. ஆனல், நெப்போலியனின் மாஸ்கோ முற்றுகை, இந்தியாவில் ஒரு பேரரசை நிறுவ வேண்டும் என்ற ஃபிரெஞ்சுக்காரர்களின் கனவினைக் குழிதோண்டிப் புதைத்தது எனலாம்.

### ஆதாரங்கள்

இராபர்ட் ஆர்மி (Robert Orme) யினுடைய 'History of Military Transactions...in Indostan *(1803)* என்னும் நூல் அக் காலத்து வரலாற்றிற்கு அடிப்படை ஆதாரமாக இருந்துவரு கிறது. இதனுடன் ஆர். ஓ. கேம்பிரிட்ஜ் என்பவர் எழுதியுள்ள 'Account of the War in India *(1761)*' என்னும் நூல் ஒப்பு நோக்கத்தக்கதாகும். அப் போர்களைப்பற்றித் தற்காலத்தில் எச். எச். டாட்வெல் (H. H. Dodwell) இயற்றியுள்ள 'தியூப்ளே யும் கிளைவும்' என்ற நூல் சிறப்புமிக்கதாகும். கிளைவினுடைய வாழ்க்கை வரலாற்றைப்பற்றிய நூல்கள் அடுத்துவரும் இயல்களில் விரிவாகக் குறிப்பிடப்பட்டுள்ளன. கப்பற் படையின் வரலாற்றை ரிச்மாண்ட் (H. W. Richmond) என்பவர் எழுதியுள்ள 'The Navy in the War of *1739 - 48*' *(3 தொகுதிகள், 1920)* என்னும் நூலிலும், 'The Navy in India, *1763-83*' *(1931)* என்னும் நூலிலும், சர் ஜே. எஸ். கார்பெட் (J. S. Corbett) என்பவர் எழுதியுள்ள 'England in the Seven Years War' *(இரண்டு தொகுதிகள், 1907)* என்னும் நூலிலும் காணலாம்.

ஃபிரெஞ்சுக்காரருடைய வரலாற்றை பி. கல்ட்ரோ (P. Cultru) எழுதியுள்ள 'தியூப்ளே' *(1901)* என்னும் நூலிலும், இதைவிடச் சிறந்த வகையில் ஆல்ஃபிரட் மார்ட்டினே (Alfred Martineau) எழுதியுள்ள 'Dupleix et l' Inde francaise' *(நான்கு தொகுதிகள்)* என்னும் நூலிலும் காணலாம். மிக அண்மைக்காலத்தில் செய்யப்பெற்ற ஆராய்ச்சி நூல்களாகப் பின்வருவனவற்றைக் குறிப்பிடலாம்.

*(1)* வெர்ஜீனியா தாம்ப்சன் (Virginia Thompson) : 'Dupleix and his Letters' *(1933)*.

*(2)* டேக்ளீஷ் (W. H. Degleish) : 'Company of the Indies in the Time of Dupleix' *(1933)*.

*(3) ஆனந்தரங்கம்பிள்ளை: (1) நாட்குறிப்பு-12 தொகுதிகள் (சென்னை, 1904-28). பதிப்பாசிரியர்* J. F. Price and H. H. Dodwell. *(2) ஒரே தொகுதியாகப் பேராசிரியர்* C. S. *சீநிவாச ஆச்சாரியார், 1940-ல் பதிப்பித்துள்ளார். (3) தமிழ்ப் பதிப்பு—8 தொகுதிகள், புதுவை, 1948.*

*மிகச் சிறந்த ஆராய்ச்சி நூல்களாக மிக அண்மைக் காலத்தில் எஸ். பி. சென்* (S. P. Sen) *என்பவரால் (1)* 'The French in India: First Establishment and Struggle' *(1947) என்பதும், (2)* 'The French in India, *1763-1816*' *(1958) என்பதும் எழுதப்பட்டுள்ளன.*

## 2. பிரிட்டிஷார் கண்ட வங்காளம்

1650-1ஆம் ஆண்டுகளில் ஆங்கிலேயரின் கிழக்கிந்தியக் கம்பெனி வங்காளத்தில் முதன்முதலாக ஒரு தொழிற் சாலையை நிறுவியது. விரைவில் வளமான வாணிகத்தை ஆங்கிலேயர் அங்குச் செய்துவந்தனர். தவறுதலான அறிவுரையால் 1686ஆம் ஆண்டு மொகலாயப் பேரரசின் ஆதிக்கத்திலிருந்து விடுதலை பெற்றுத் தனியுரிமையுடன் வாணிகம் செய்ய வேண்டும் என்று கம்பெனி முயன்றது. மொகலாயப் பேரரசரின் மேலாண்மையைத் தகர்த்தெறியும் முயற்சியில் ஈடுபட்ட கம்பெனியார் சிட்டகாங்கைக் கைப்பற்ற முயன்றனர். அதன் விளைவாக ஜாப் சார்னக்கு (Job Charnock) என்பவர் 1690ஆம் ஆண்டு சுதாநதியின் சேற்றுப் பள்ளத்தாக்கில் உள்ள கல்கத்தா கம்பெனியை நிறுவினார். 1696ஆம் ஆண்டு அப்பகுதியில் உண்டான ஓர் உள்நாட்டுக் கலகம் கம்பெனியின் தொழிற்சாலையைச் சுற்றிலும் கோட்டை கொத்தளங்களை அமைத்துக்கொள்ளுவதற்கு ஆங்கிலேயருக்கு ஒரு பொய்க் காரணமாகப்போயிற்று. இவ்வாய்ப்பினை நழுவவிடாது அவர்கள் அங்குச் சிறந்த பாதுகாப்பினையுடைய கோட்டை ஒன்றைக் கட்டி முடிப்பதில் கருத்தைச் செலுத்தினர். அக்கோட்டை நான்கு ஆண்டுகளுக்குப் பிறகு வங்காளம் எனப்படும் மாநிலத்தின் தலைமை அலுவலகத்தின் இருப்பிடமாக 'வில்லியம் கோட்டை' என்னும் பெயரால் சிறப்புற்று விளங்கத் தொடங்கியது. இந்தியாவில் பிரிட்டிஷார் நிறுவிய வாணிகத் தளங்களுள் அது மூன்றாவதாக அமைக்கப்பெற்றதாகும். எனினும், வில்லியம் கோட்டை மிக விரைவில் பேரளவிற்கு ஆதாயம் அளிப்பதாகவும், முதன்மை வாய்ந்ததாகவும் சீரும் சிறப்பும் பெற்றுத் திகழத் தொடங்கியமை இங்குக் குறிப்பிடத்தக்கதாகும். கடற்கரைக்கும் ஆறுகளுக்கும் பின்புறமாக உள்ள வங்காளப் பகுதி வளமிக்கதாகவும், மிகுந்த பரப்பளவு உடையதாகவும் இருந்தது.

மேலும், அப்பகுதியில் போக்குவரத்திற்கு மிகச் சிறந்த வசதியுடைய அங்கிருந்த ஆறுகள் நீர்வழிகளாகப் பயன்பட்டன. இவை யாவற்றையும்விட ஐரோப்பாவில் மேலும் மேலும் மிகுதியாகத் தேவைப்படுகின்ற பலவகைப் பொருள்கள் வங்காளத்தில் பேரளவிற்குக் கிடைத்துவந்தன. எனவே, இங்குக் கம்பெனியின் கிளையை நிறுவிய ஆங்கிலேயர்கள், வங்காளத்தின் வளமிக்க பொருள்களை வழங்கும் ஊற்றுகளை மெல்லத் தட்டி உறிஞ்சினர். வங்காளத்தில் பருத்திப் பொருள்கள், பட்டு நூல், பட்டாடை, சர்க்கரை ஆகியவற்றில் செல்வம் கொழிக்கும் வாணிகம் பேரளவில் நடைபெற்றது. அவற்றுடன் வெடியுப்பும் மிகுதியாக ஐரோப்பாவிற்கு ஏற்றுமதி செய்யப்பட்டுவந்தது. ஐரோப்பாவில் தொடர்ந்து போர்கள் நடைபெற்றுவந்தமையால், வெடியுப்பிற்கு எப்பொழுதும் நிலையான தேவை இருந்துகொண்டே இருந்தது. அதனால் வெடியுப்பு ஏற்றுமதி செய்தல் நிலையான வளமிக்க வாணிகமாகப் போற்றப்பட்டது. மேலும், மதராசைப் போன்றோ, பம்பாயைப் போன்றோ, சூரத்தைப் போன்றோ வங்காளத்தின் அமைதியான வாழ்க்கை அடிக்கடி போரினால் பாதிக்கப்படவில்லை. பிற்காலத்தில் மொகலாயப் பேரரசின் ஆதிக்கம் நலியத் தொடங்கியதன் விளைவுகளை வங்காளம் உணரத் தொடங்கியது. 1717ஆம் ஆண்டு சூர்மன் (Surman) மொகலாயப் பேரரசரான ஃபருக்ஷையரின் அவைக்களத்திற்கு ஆங்கிலேயக் கிழக்குக் கூட்டுக் கழகத்தின் சார்பில் ஒரு தூதர் குழுவை அழைத்துச் சென்றார். அக் குழுவினர் பேரரசரிடம் சில சலுகைகளைப் பெற வேண்டும் என்ற நோக்கத்துடன் சென்றனர். அக் குழுவினர் அரசியல் தந்திரத்தில் மாபெரும் வெற்றி பெற்றனர் என்றே கூறலாம். வங்காளத்தில் பேரரசரின் தலையீடின்றி ஆங்கிலேயர் உரிமையுடன் வாணிகம் செய்வதற்குரிய உரிமைகளைப் பேரரசரின் ஆணைகள் (farmans) வழங்கின. அதற்கு ஈடாக ஆண்டுதோறும் கம்பெனியார் மூவாயிரம் ரூபாயைப் பேரரசருக்குத் திறைப் பொருளாகச் செலுத்த வேண்டும் என்னும் விதிக்குப் பிரிட்டிஷார் உடன்பட்டனர். இதைப்போன்றே ஐதராபாத் மாநிலத்தில் கம்பெனியார் பெற்றுள்ள நிலங்களுக்கு ஆண்டுதோறும் அரசிறை செலுத்த வேண்டும் என்றும், மதராசில் கம்பெனியாரிடமுள்ள நிலங்களுக்கு விடுவரி (quit-rent) மட்டும் செலுத்த வேண்டும் என்றும் பேரரசரின் ஆணைகள் அறிவித்தன. இதற்கு மேலாக கல்கத்தாவைச் சூழ்ந்திருந்த பெரு நிலப் பரப்பினைக் கம்பெனியார் குத்தகைக்குப் பேரரசரிடமிருந்து பெற்றனர். உள்நாட்டுப் பகுதிகளில் குடியிருப்புகளையும்

வாணிகத் தளங்களையும் நிறுவுவதற்குக் கம்பெனியார் பேரரசரின் இசைவினைப் பெற்றனர். சூரத்திலிருந்து பேரரசருக்குச் செலுத்த வேண்டிய அரசிறை நிலுவைகள் அனைத்திற்கும் மாற்றாக ஆண்டுதோறும் பத்தாயிரம் ரூபாய் அரசிறை செலுத்தினால் போதுமென்று முடிவு செய்யப்பெற்றது. கம்பெனியாருக்காகப் பம்பாயில் அச்சடிக்கப்பெற்ற ரூபாய்கள் யாதொரு தடையுமின்றி நாட்டில் செலாவணியில் புழங்குவதற்குரிய உரிமையைப் பேரரசர் அளித்தார். அடுத்த நாற்பது ஆண்டுகளுக்கு இவ் வேற்பாடுகள் அனைத்தும் கம்பெனியாருக்கும் பேரரசருக்கும் இடையே இருந்துவந்த தொடர்புகளை ஆட்சிபுரிந்துவந்தன. ஆனால், பேரரசரின் ஆதிக்கம் நலிவுற்றதும் கம்பெனியின் அதிகாரிகள் மேலும் மேலும் அவ் வட்டாரத்தின் தலைவராக இருந்த சுபேதாரோடோ, வங்காளத்தின் நவாப்போடோ நெருங்கிய தொடர்பு கொள்ளலாயினர். இதனால் பேரரசரோடு கம்பெனியார் கொண்டிருந்த தொடர்புகள் நாளடைவில் முறிந்துபோயின. 1716ஆம் ஆண்டில்தான் வில்லியம் கோட்டை கட்டி முடிக்கப் பட்டது. ஆனால், விரைவிலேயே அதனுடைய மதிற்சுவர்கள் பண்டசாலைகளாக மாற்றி அமைக்கப்பட்டன. மராட்டியர்களின் தாக்குதல் உண்டாகும் என்ற பேரச்சத்தினால் கம்பெனியார் 1742ஆம் ஆண்டு மராட்டிய அகழியைத் (தற்சமயம் 'சர்க்குலர்' சாலையாக இருப்பது) தோண்டுவதற்குத் தொடங்கினர். ஆனால், இதுவரையில் வில்லியம் கோட்டையின் ஆற்றல் பரிசோதனைக்குட்படாமை அதன் நற்பேறேயாகும். கம்பெனியின் ஊழியர்கள் சிடுசிடுப்பாகவும், வளமான வாழ்க்கையுடையவர்களாகவும் இருந்தனர். ஆனால், பெரிதும் போரை விரும்பாதவர்களாகவும் வீரம் அற்றவர்களாகவும் அவர்கள் இருந்தமை இங்குக் குறிப்பிடத்தக்கதாகும்.

அவுரங்கசீப்பு இறந்தபொழுது இளவரசர் அசீம்-உஷ்-ஷானுக்கு மூர்ஷித் குலிகான் (ஜஃபார் கான்) துணை ஆளுநராக இருந்தார். இளவரசரின் மகனை ஃபருக்ஷையர் 1713 ஆம் ஆண்டில் அரசு கட்டிலேறியவுடன், மூர்ஷித் குலிகான் அவருடைய பதவியில் நிலையாக உறுதிப்படுத்தப்பெற்றார். அவர் 1719ஆம் ஆண்டில் பீகாரைக் கைப்பற்றித் தன்னாட்சிக் குட்பட்ட மாநிலத்தோடு சேர்த்துக்கொண்டார். பிறகு 1727ஆம் ஆண்டு அவர் இறந்துவிட்டார். அவருடைய மகன் ஷுஜா-உத்-தௌலா 1738ஆம் ஆண்டில் இறக்கும்வரை தம்முடைய தகப்பனாரின் பதவியில் சிறப்புடன் விளங்கினார்.

அவருடைய ஆட்சிக்காலத்தில் ஒரிசாவைக் கைப்பற்றித் தம்முடைய மற்ற இரு மாநிலங்களோடு சேர்த்து ஒரு பெரு மாநிலத்தை அவர் உருவாக்கினார். அவருடைய காலம் முதல் வங்காளம், பீகார், ஒரிசா ஆகிய மூன்று மாநிலங்களையும் ஒருங்கு சேர்த்து ஆட்சிபுரிந்த அவருடைய மரபினர் ஒரு தனி அரச மரபைச் சேர்ந்தவர்களைப் போலச் செல்வமும் செல்வாக்கும் உரிமையும் உயர்வும் பெற்று அரசுபுரிந்து வந்தனர். தில்லியோடு அவர்கள் கொண்டிருந்த தொடர்புகளுள் ஒன்றைத் தவிர மற்றவை அனைத்தும் நாளடைவில் மறைந்து போயின என்றே சொல்லலாம். ஆண்டுதோறும் அவர்கள் பேரரசருக்கு 52 இலட்சம் ரூபாயைத் திறைப் பொருளாகச் (பேஷ்காஷ்) செலுத்திவந்த ஒன்றுதான் அவர்களுக்கும் மொகலாயப் பேரரசுக்கும் ஏதோ ஒரு வகையான தொடர்பு இருந்துவந்ததை நினைவூட்டுவதாக இருந்தது. இதனுடன் பேரரசரின் முடிசூட்டு விழாவில் அவர்கள் சிறப்புமிக்க பங்கைப் பெற்றமையும் அவர்களுக்கிடையே இருந்துவந்த பழைய தொடர்பினைச் சுட்டிக்காட்டியது. 1719ஆம் ஆண்டு முதற்கொண்டேனும் வங்காளம் பேரளவிற்குத் தனியுரிமை பெற்ற தனியரசாக இயங்கத் தொடங்கியது எனலாம். ஷுஜா-உத்-தெளலாவின் மகனான சர்ஃபாராஸ் ஆற்றலும் திறமையுமற்றவராக இருந்தார். எனவே, பீகாரில் அவருடைய உதவி ஆளுநராகப் பணியாற்றிய அலிவர்தி கான் என்பவர் 1740ஆம் ஆண்டு சர்ஃபாராஸைத் தோற்கடித்து, வங்காள மாநிலத்தின் ஆட்சியைக் கைப்பற்றினார். தில்லியில் இருந்த பேரரசர் அலிவர்தி கான் வங்காளத்தின் ஆளுநர் என்பதை ஏற்றுக்கொண்டு அரசியல் ஆணைகளை வழங்கினார். எனினும், இந்தப் பெரு மாநிலத்தின் உள்ளேயும் வெளியேயும் இருந்த வீரதீரச் செயல் புரிவதில் நாட்டம் கொண்டவர்களின் ஆசைக் கனவுகளைக் கிளர்ந்தெழச் செய்ததனால், அவர் நிலையான ஒரு அரசினை நிறுவ முடியாது அல்லற்பட்டார். அவர் பதினைந்து ஆண்டுகள் இப்பெரு மாநிலத்தை ஆட்சிபுரிந்தார். தன் நாட்டின் பல பகுதிகளில் உண்டான புரட்சிகளையும் கலகங்களையும் அடக்கியொடுக்குவதிலும், மராட்டியர்களின் படையெடுப்பை முறியடிப்பதிலுமே அவர் தம்முடைய பதினைந்தாண்டுக் கால ஆட்சியையும் கழிக்க வேண்டிய அவலநிலைக்கு ஆளானார். வங்காளத்தின் பொதுமக்களுடைய உள்ளங்களில் என்றுமே அழிக்க முடியாத எண்ணங்களை மராட்டியர்கள் பொறித்துவிட்டுச் சென்றனர். வங்காளத்தின் சிறப்புமிக்க கவிஞரான கங்காராம் மராட்டியர்களைப்பற்றித் தந்துள்ள கருத்துரைகள் இங்குக் குறிப்பிடத்தக்கனவாகும்.

"ஊர்களில் வாழ்ந்த மக்கள் 'பர்கிஸ்' (bargis) எனப்படும் குதிரை வீரர்களைக் கண்டு அஞ்சி ஓடினர். அவர்களை எல்லாம் குதிரை வீரர்கள் விரட்டிச் சென்று வளைத்துப் பிடித்தனர். அவர்கள் பிற பொருள்களை எல்லாம் உதறித்தள்ளிவிட்டுப் பொன்னையும் வெள்ளியையும் பறித்துச் சென்றனர். நாட்டு மக்களுள் சிலருடைய கைகளையும், சிலருடைய மூக்குகளையும், சிலருடைய காதுகளையும் அக்குதிரை வீரர்கள் அறுத்தெறிந்தனர். மற்றும் சிலரை அவர்கள் கொன்று குவித்தனர். அழகிய மங்கையரின் கைகளை அவர்களுடைய கழுத்தில் கயிற்றினால் சேர்த்துக் கட்டி, அவ்வாறணங்குகளை அவ்வீரர்கள் இழுத்துச் சென்றனர். ......திறந்தவெளிகளில் கொள்ளையடித்த பிறகு அக்குதிரை வீரர்கள் ஊர்களுக்குள்ளே நுழைந்தனர். மாளிகைகளுக்கும், குடிசைகளுக்கும், வாழும் உறைவிடங்களுக்கும், கோயில்களுக்கும் அவர்கள் தீ வைத்தனர். ஊர்களைத் தீயிட்டுப் பொசுக்கிய பின்னர், கொள்ளையடித்துக்கொண்டே அவர்கள் இங்குமங்குமாகத் திரிந்துகொண்டிருந்தனர். தங்களுக்கு முன் எதிர்ப்பட்ட மக்களைப் பிடித்து, அவர்களுடைய கைகளைப் பின்புறமாகத் திருப்பிவைத்துக் கயிற்றால் அவ்வீரர்கள் கட்டினர்; சிலரைத் தலைகீழாகக் கட்டித் தொங்கவிட்டனர். தங்களுடைய செருப்புக் கால்களால் அவ்வீரர்கள் தலைகீழாகத் தொங்கவிடப்பட்ட மக்களை உதைத்துச் சென்றனர்; சிலரை எடுத்து வீசியெறிந்தனர். அவ்வாறு அம்மக்களை வீசியெறியும்போது தங்கள் செருப்புக் கால்களால் உதைத்துத் தள்ளினர். அவ்வீரர்கள் 'எங்களுக்கு ரூபாயைக் கொடுங்கள்! ரூபாயைக் கொடுங்கள்! எங்களுக்கு ரூபாயைக் கொடுங்கள்!' என்று தொடர்ந்து கத்தினர். தங்களுக்குப் பணம் கிடைக்காதபொழுதெல்லாம், அவர்கள் தங்கள் கையகத்துச் சிக்கிய மக்களின் மூக்குகளில் 'தண்ணீரை ஊற்றி நிறைத்து, குளங்களில் அவர்களை மூழ்கடித்தனர். இன்னும் சில மக்களை மூச்சுத் திணறவைத்து அவ்வீரர்கள் சாகடித்தனர். பணம் வைத்திருந்த மக்கள் அக்குதிரை வீரர்களுக்குப் பணத்தைக் கொடுத்து உயிர் தப்பினர்; பணமற்றோர் தங்கள் உயிரையே அவ்வீரர்களுக்கு அளித்தனர்."

நெடுங்காலமாக நோய்வாய்ப்பட்டிருந்த அலிவர்தி கான் 1756ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 21ஆம் நாள் இறந்தார். அவருக்கு ஆண்பிள்ளைகள் யாரும் இல்லை. எனவே, அவர் சிராஜ்-உத்-தௌலா என்னும் தம்முடைய பேரப்பிள்ளையையே தமக்குப் பிறகு அரசராவதற்குரியவராகத் தேர்ந்தெடுத்திருந்தார். சிராஜ் அவருடைய கடைசி இளைய மகளின் மகனுவார். அலிவர்தி தன் கடைசி மகளைத் தன் தம்பி பிள்ளைக்கே திருமணம் செய்து கொடுத்திருந்தார். எனவே, தமக்கு ஆண் பிள்ளைகள் இல்லாமல்போனமையால், அலிவர்தி கான் தம்முடைய பேரப்பிள்ளையைத் தம்முடைய அரசுக்கு உரிமையாளனுகத் தேர்ந்தெடுத்திருந்தார். சிராஜ்-உத்-தௌலா ஆட்சிக்கு வரும்பொழுது இருபது ஆண்டுகள்கூட நிறையாத இளைஞராக இருந்தார். எனவே, அவர் அரசுகட்டில் ஏறியதும் பெருந் துன்பங்களுக்கிடையே தாம் சிக்கிக்கொண்டிருப்பதாக உணர்ந்தார். எதிர்காலத்தில் எண்ணற்ற இடையூறுகளும் இடர்ப்பாடுகளும் தமக்கு உண்டாகலாம் என்று அவர் அஞ்சினுர். அலிவர்தி கானுடைய சகோதரரின் பிள்ளைகள் மூவரும் அவருக்கு முன்பே இறந்துவிட்டனர். எனவே, இளைஞரான சிராஜ்-உத்-தௌலாவிற்கு உதவியாகப் பணி புரியும் நெருங்கிய உறவினர்கள் யாருமே இல்லாமற் போயினர். இதற்கு நேர்மாருக அவரிடம் பொருமைகொண்ட ஷௌக்கத் ஜங் என்ற பங்காளி ஒருவர் இருந்தார். அவர் பூர்ணியா என்னும் பகுதிக்கு ஆளுநராக இருந்தார். இதனுடன் சிராஜ்ஜினுடைய அத்தையொருத்தி இருந்தாள். அவளுடைய பெயர் கஸ்தி பேகம் என்பதாகும். அவளும் சிராஜ்ஜின் மீது பொருமையும் சீற்றமும் கொண்டிருந்தாள். அவளுடைய திவானுன இராசவல்லபன் என்பவன் அவளை வங்காளத்தின் ஆட்சியுரிமையைக் கைப்பற்றுமாறு தூண்டியதோடு, அதற்காக வேண்டிய உதவிகளை எல்லாம் செய்துவந்தான். இத்தகைய இடர்ப்பாடுகள்மிக்க குடும்பச் சிக்கல்களுக்கு இடையே வங்காளத்தில் அயல்நாட்டினர் அமைத்திருந்த குடியேற்றங்கள் தீராத பிரச்சினைகள் சிலவற்றை எழுப்பிய வண்ணம் இருந்தன. சிராஜ் ஆட்சிக்கு வந்த காலத்தில் ஐரோப்பா ஏழாண்டுப் போரைத் தொடங்கிக்கொண்டிருந்தது. ஃபிரெஞ்சுக்காரரும் ஆங்கிலேயரும் போரிடுவதற்குரிய ஏற்பாடுகளை வெளிப்படையாகவே செய்துவந்தனர். ஃபிரெஞ்சுக்காரர்களும், டச்சுக்காரர்களும், ஆங்கிலேயர்களும் எல்லாப் பொருளிடத்தும் ஐயுறவு கொண்டிருந்தனர். ஆனுல், அம்மூவருள் பிரிட்டிஷாரே பேராற்றலும் பெருந்திறனும்

உடையவர்களாக விளங்கினர். 1717ஆம் ஆண்டு மொகலாயப் பேரரசரிடமிருந்து பிரிட்டிஷார் பெற்ற ஆணைகளினால் கட்டுப்பாடற்ற வாணிகத்தைத் தன்னுரிமையுடன் செய்து வந்தனர். அவர்கள் தாங்கள் அனுபவித்துவந்த பரந்த உரிமைகளையும் சலுகைகளையும் மீறி வாணிகம் செய்யத் தொடங்கியுள்ளனர் என்னும் குற்றச்சாட்டிற்கு அவர்கள் ஓரளவிற்கு இடம் கொடுத்தனர். ஆங்கிலேயரும் ஃபிரெஞ்சுக்காரரும் ஒருவரையொருவர் எதிர்த்துப் போரிட நேரும் என்பதை எதிர்பார்த்துத் தங்கள் குடியேற்றங்களைச் சுற்றிப் பெருங் கோட்டை கொத்தளங்களை நிறுவிக்கொண்டனர். அலிவர்திகான் இறப்பதற்கு முன்பே ஃபிரெஞ்சுக்காரர் கோட்டை கொத்தளங்களைக் கட்டுவதைக் கைவிட்டனர். ஆனால், ஆங்கிலேயர் உண்மையை மறைத்து மழுப்பிப் பேசியதோடு, தப்பி ஓடிய அரசியல் குற்றவாளிகளுக்குத் தங்கள் கோட்டையில் புகலிடம் கொடுத்தனர். அதன்மூலம் சிராஜ் ஆங்கிலேயரிடத்துக் கொண்டிருந்த ஐயுறவினை மேன்மேலும் அவர்கள் வளர்த்துவந்தனர். தற்காலத்தில் முஸ்லீம்களின் தனியரசாக (கிழக்குப் பாகிஸ்தான்) இருக்கும் பகுதியில் அக்காலத்துச் சிறுபான்மையராக இருந்த முஸ்லீம்களுக்கும், பெரும்பான்மையராக இருந்த இந்துக்களுக்கும் இடையே ஒற்றுமையில்லாதிருந்தமையால் எந்நேரத்திலும் வகுப்புக் கலகம் தோன்றலாம் என்பதை அறிந்து சிராஜ் பெரிதும் அஞ்சிக்கொண்டிருந்தார்.

சிராஜ்-உத்-தௌலா எளிதில் உணர்ச்சிவயப்படுபவராக இருந்தார். ஆனால், ஊசலாடும் உறுதியற்ற உள்ளம் படைத்த இளைஞராக அவர் விளங்கினார். மேலும், அவர் சிற்றின்பத்தில் மிக்க நாட்டம் செலுத்திவந்தார். பொதுவாக அரசகுமாரர்களிடத்துக் காணப்பட்டதாகக் கூறப்படும் குறைகள் அனைத்தும் அவரிடமும் குடிகொண்டிருந்தன. அக் குறைபாடுகளை ஈடு செய்யக்கூடிய வகையில் அவரிடத்து ஆழ்ந்து சிந்தித்து முடிவிற்குவரும் பண்பாகிய எண்ணித் துணிதலும், துணிந்த பின் எண்ணுவது என்பது இழுக்கு என்றுணரும் பண்பும் அவரிடத்து இல்லாமற்போயின. அவருடைய குறைபாடுகளாகிய நோய்களைப் போக்கிக்கொள்வதற்கு அனுபவ அறிவில்லாத இளைஞராக சிராஜ் இருந்தமையால்தான் பெரிதும் அல்லற்பட நேர்ந்தது. காலம் தந்துதவக்கூடிய பாதுகாப்பும், கிடைக்க முடியாத சூழ்நிலையும் அவருக்கு எதிரியாக இருந்தன. இத்தகைய காரணங்களினால்தான், முரண்பட்ட ஊக்கிகள் பலவற்றால் தொடர்ந்து அவர் உந்தப்பட்டார்.

அவ்வூக்கிகளும் சேர்ந்து அவருடைய அழிவினை விரைவு படுத்தியது எனலாம். அவர் முதலில் கஸ்தி பேகத்தைக் கைது செய்தார். அதன் பிறகு பூர்ணியாவிலுள்ள தம் பங்காளியின்மீது படையெடுத்துச் சென்றார். ஆனால், அவர் போகும் வழியில் வில்லியம் கோட்டையின் ஆளுநராக இருந்த டிரேக்கிடமிருந்து கடிதம் ஒன்றைப் பெற்றார். உடனே, அவர் படையெடுத்துச் சென்ற வழியிலிருந்து திரும்பிவிட்டார். வரும் வழியில் காசிம் பசார் என்னுமிடத்தில் இருந்த ஆங்கிலேயரின் தொழிற்சாலையை சிராஜ் கைப்பற்றினார். அதற்கு மேல் கல்கத்தாவை நோக்கிப் படையுடன் அணிவகுத்துச் சென்றார். அப்பொழுது அக்கோட்டையில் புதிதாக அரண் முதலியவற்றைக் கட்டியமைபற்றி அவருக்குக் கிடைத்த குற்றச்சாட்டுகள் நகைப்பிற்கிடமான நன்னம்பிக்கைக் கோட்பாட்டைத் தெளிவாக்கியது. வலியத் தாக்குதலுக்கு நேர் மாறான வகையில் அக்கோட்டை இருந்ததை அவர் கண்டார். ஜூன் 16ஆம் நாள் கல்கத்தாவை சிராஜ் முற்றுகையிட்டார். மூன்று நாட்களுக்குப் பிறகு அக்கோட்டையின் ஆளுநரும், படைத்தலைவரும், ஆலோசனைக் குழுவின் உறுப்பினர்களுள் பெரும்பாலோரும் பெண்களுடனும் குழந்தைகளுடனும் ஆற்றிலிருந்த கப்பலில் புறப்பட்டுச் சென்றனர். அவர்கள் வில்லியம் கோட்டையின் சிதைவுற்ற பாதுகாப்புப் படையை அதன் தலைவிதியை நிர்ணயித்துக்கொள்ளுமாறு விட்டுவிட்டுக் கடலை நோக்கிக் கப்பலைச் செலுத்தினர். ஆலோசனைக் குழுவின் இளைய உறுப்பினரான ஹால்வெல் என்பாரின் தலைமையின்கீழ் முற்றுகையை எதிர்த்துப் போரிடும் செயல் ஒரு நாளைக்குமட்டும் தொடர்ந்து நடைபெற்றது. அதற்குப் பிறகு கல்கத்தா சிராஜ்-உத்-தௌலாவிடம் அடைக்கலமடைந்தது. இதைத் தொடர்ந்து கருவூலத்தைக் கொள்ளையடிப்பதற்கான ஆராய்ச்சியும், அதன்பின்னர் இருட்டறைத் துன்ப நிகழ்ச்சியும் (Black Hole) நடைபெற்றன.[1] தமக்கே இயல்பாகவுள்ள முரட்டுத்தனத்துடன் சிராஜ் தாம் பெற்ற வெற்றியைப் பயன்படுத்திக்கொள்ள எத்தகைய நடவடிக்கையும் அவர் எடுத்துக்கொள்ளவில்லை. ஃபுல்டாவில் (Fulta) டிரேக்கையும், மற்ற அரசக் குற்றவாளிகளையும் மனச்சோர்வடைந்திருக்கச் செய்ததைத் தவிர அவர் வேறொரு செயலையும் செய்யாது வாளா இருந்துவிட்டார். ஜூலை மாதத்துப் போரில் டிரேக்கிற்கு உதவியாக 230 படைவீரர்களே இருந்தனர்

[1] இவ்வியலின் இறுதியில் 'இருட்டறைத் துன்ப நிகழ்ச்சி' பற்றிய விளக்கவுரையைக் காணலாம்.

என்பது இங்குக் குறிப்பிடத்தக்கதாகும். இதற்கு மாருக அவர் தம்முடைய அரச மரபைச் சார்ந்தவரும், தமக்குப் போட்டியாகத் தம்மை எதிர்த்தவருமான ஷௌக்கத் ஜங்கை அழித்தொழிப்பதிலேயே ஈடுபட்டிருந்தார்.

சென்னையில் இருந்த ஆங்கிலேயப் படை ஐதராபாத்தில் ஃபிரெஞ்சுக்காரர் இருப்பதை எதிர்த்துப் படையெடுப்பதற்குத் தேவையான ஆயத்தம் செய்வதில் மும்முரமாக ஈடுபட்டிருந்தது. அச்சமயத்தில் கல்கத்தா கோட்டை கைவிடப்பெற்ற செய்தி மதராசிற்கு எட்டியது. அப்பொழுது மூத்த அரசாங்க அதிகாரியாகச் சென்னையில் இருந்தவர், விடாப்பிடியாகக் கிளைவையே வங்காளத்திற்குப் படைத்தலைவராக அனுப்பிவைக்க வேண்டும் என்று வற்புறுத்தினர். அவ் விடாப்பிடியான வற்புறுத்துதல் பெரு நன்மை பயந்தது எனலாம். அச்சமயத்தில் கிளைவ் செயின்ட் டேவிட் கோட்டையின் துணை ஆளுநராகப் பணியாற்றிவந்தார். போரினுல் உண்டாகக்கூடிய இடையூறுகளைப்பற்றிச் சென்னை ஆலோசனைக் குழுவினரிடையே உண்டான பூசல்களுக்கிடையே மகிழ்ச்சியோடு கிளைவ் வங்காளத்தை நோக்கிப் புறப்பட்டார். அவருக்கு வெற்றியைப்பற்றி ஐயுறவும் இல்லை; அதைப் போன்றே அவருக்குப் போரைப்பற்றி அச்சமும் இல்லை. அக்டோபர் மாதம் 16ஆம் நாள் 900 ஐரோப்பியப் படைவீரர்களையும், 1500 இந்தியப் படைவீரர்களையும் கடற்படைத் தலைவர் (அட்மிரல்) வாட்சன் நடத்திச் சென்ருர். அவர்களுடன் ஐந்து மனிதர்கள் போரைக் கவனிப்பதற்கும், போக்குவரத்திற்குரிய ஐந்து வண்டிகளையும் உடன்கொண்டு சென்ருர். டிசம்பர் மாதத்தில் ஃபுல்டா விடுவிக்கப்பெற்றது. 1757ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 2ஆம் நாள் கல்கத்தா திரும்பக் கைப்பற்றப்பெற்றது. நெடுங்காலத்திற்குமுன் தாம் மேற்கொண்டிருக்க வேண்டிய செயல்களைப்பற்றி நன்கறியுமாறு இவ் வீழ்ச்சி அறிவுறுத்தியது. ஆனல், திட்டவட்டமான முடிவிற்கு வாராது வீணுகப் போரிட்டுக்கொண்டிருப்பது சிராஜ்-உத்-தௌலாவிற்கு மீண்டும் மன உளைச்சலை உண்டாக்கிற்று. அவர் திடீரென்று தனது அரசியல் கொள்கையை மாற்றிக்கொண்டு ஃபிப்ரவரி 9ஆம் நாள் ஆங்கிலேயரோடு சமாதான உடன்படிக்கை ஒன்றைச் செய்துகொண்டார்; அதனுடன் நேச உறவு ஒப்பந்தம் ஒன்றையும் அவர் செய்துகொண்டார். அதனுல் கல்கத்தா மீண்டும் திருப்பிக் கொடுக்கப்பெற்றது; கம்பெனியின் பழைய உரிமைகளும் சலுகைகளும் புதுப்பித்துக்கொள்ளப்பெற்றன. மேலும் புதிதாகச் சில சலுகை

களைக் கம்பெனி கூடுதலாக இந்த உடன்படிக்கையின் மூலம் பெற்றது. கல்கத்தா நகரைச் சுற்றிலும் கோட்டை கொத்தளங்களை அமைத்துக்கொள்ளுவதற்கும், பணத்தை அச்சிட்டு வழங்குவதற்கும் ஆங்கிலேயர்கள் நவாபிடமிருந்து உரிமைகள் பெற்றனர்.

சிராஜின் செயலாற்றும் திறனற்ற போக்கினைப்பற்றிப் போதிய அளவிற்கு இதற்கு முன்பே சுட்டிக்காட்டப்பட்டது. இப்பொழுது அவருடைய வீழ்ச்சி, காலத்தை எதிர்நோக்கியதாக இருந்ததென்றே கூறலாம். சேட்டுகளின் நிதிநிலையங்களால் ஆதரிக்கப்பெற்ற துன்பத்திற்காளாகாத இந்து அதிகாரிகள் சிராஜைச் சூழ்ந்துகொண்டிருந்தனர். அதே சமயத்தில் சூழ்ச்சித் திறனும், உள்ள உரமும் படைத்த மனிதர்களின் எதிர்ப்பையும் அவர் சமாளிக்க வேண்டியவரானார். கிளைவ் முதலில் ஃபிரெஞ்சுக்காரரோடு எப்படி நடந்துகொள்ளுவது என்பதைப்பற்றியே கவலைப்பட்டார். இதற்கு முந்தைய ஆண்டு கல்கத்தா போதிய தற்காப்புக் காவல் இன்றி இருந்ததைப்போலல்லாமல், ஃபிரெஞ்சுக்காரருடைய வாணிகத்தளமான சந்திரநாகூர் சிறந்த முறையில் கோட்டைகொத்தளங்களைக் கொண்ட தற்காப்புடன் காணப்பட்டது. அப்பொழுது கல்கத்தாவிலிருந்து 200 மைல் தொலைவிலுள்ள வடசர்க்காரில் புஸ்ஸி எனும் ஃபிரெஞ்சுத் தளபதி இருந்து வந்தார். 1757ஆம் ஆண்டு ஜனவரி மாதம் தில்லியை அகமது ஷா துர்ரானி என்பவர் கைப்பற்றிவிட்டார் என்ற செய்தி கிளைவிற்குப் பேருதவியாக இருந்தது. தில்லி, ஆப்கானியரால் கைப்பற்றப்பட்டமை, சிராஜ்-உத்-தௌலாவை ஃபிரெஞ்சுக்காரரைத் துணிந்து ஆதரிக்கவொட்டாது தடுத்தது எனலாம். ஏனெனில், தில்லியைக் கைப்பற்றிய ஆப்கானியரைத் தாம் ஒருகால் எதிர்த்துப் போரிடவேண்டிய நெருக்கடி ஏற்பட்டால், தமக்கு ஆங்கிலேயருடைய உதவி இன்றியமையாது தேவைப்படும் என்று சிராஜ் கருதினார். எனவே, அவர் ஆங்கிலேயரைப் பகைத்துக்கொள்ள விரும்பவில்லை. இக் காரணத்தினால் அவர் ஃபிரெஞ்சுக்காரருக்கு உதவி செய்யத் தயங்கினார். மார்ச்சு மாத இறுதியில் வாட்சனுடைய கப்பற்படையின் உதவியால் சந்திரநாகூரை ஆங்கிலேயர்கள் கைப்பற்றிக்கொண்டனர். சிராஜ்-உத்-தௌலா இப்பொழுது தனித்து நிற்க வேண்டியவரானார். அவருடைய பாட்டனார் தம்முடைய அதிகாரிகளுடன் நெருங்கிய நட்புறவு கொண்டிருந்தார். ஆனால், சிராஜ் இதற்கு நேர்மாறாக இருந்தார். ஜெகத் ஜங் இறந்ததற்குப் பிறகு தமக்குத் தடைகளாக

இருந்த அனைத்தையும் அவர் அழித்தொழித்தார். அதே சமயத்தில் அவருடைய எதிரிகள் அமைதியான முறையில் தங்களுடைய குறைகளைக் கேட்டுத் தீர்ப்பு வழங்கப்படும் என்ற நம்பிக்கையை இழந்தனர். இதனால், ஆங்கிலேயத் தலைவர்கள் ஒரு சதித்திட்டத்தைத் தாங்களே உருவாக்க வேண்டிய நெருக்கடி உண்டாகாமல்போயிற்று. சிராஜ்-உத்-தௌலாவைக் கவிழ்ப்பதற்கு நாட்டிலே உருவாகியுள்ள சதித்திட்டங்கள் பலவற்றுள் எதைத் தாங்கள் போற்றி ஆதரிப்பது என்பதைப்பற்றிமட்டும் முடிவு செய்யவேண்டியவர்களாக அவர்கள் இருந்தனர். இன்னும் கிளைவினுடைய நிலை உறுதியற்றதாகவும், இன்னல்களும் இடர்ப்பாடுகளும் நிறைந்ததாகவும், அதனால் அஞ்சத்தக்கதாகவுமே இருந்துவந்தது. ஐதராபாத்தில் ஃபிரெஞ்சியர் ஆற்றல் மிக்கவர்களாகவே இருந்துவந்தனர். எனவே, எச்சமயத்திலும் கிளைவ் தம் படைகளுடனும், வாட்சன் தம் கப்பற்படையுடனும் தென்னாட்டிற்கு உண்டாகக்கூடிய இடையூறுகளைத் தடுக்கத் திரும்பி வருமாறு அழைக்கப்படலாம் என்று அவர் அஞ்சியவண்ணம் இருந்துவந்தார். நவாபினால் ஆங்கிலேயரிடம் நட்புணர்ச்சியுடன் நடந்துகொள்ள முடியவில்லை. அவர் எப்பொழுதும் பகைமை பாராட்டிவந்தார். அவருடைய படைவீரர்களின் எண்ணிக்கைக்கும், அவர்களுடைய ஆற்றலின் மதிப்பிற்கும் இடையேயுள்ள வேறுபாட்டை முற்றிலும் அவரால் உணர்ந்து கொள்ள முடியவில்லை. இக் காரணங்களால்தான் கிளைவ், நாட்டாட்சியிலே நல்லதொரு மாற்றம் உண்டாவது நலம் பயக்கும் என்று கருதினர். அப்படியானல் சிராஜை அரச பதவியிலிருந்து அப்புறப்படுத்த வேண்டும் என்று அவர் முடிவு செய்தார். அதற்காக வெளிப்படையாகப் போரிடுவதைக்காட்டிலும், நயவஞ்சகமான முறையில் தம்முடைய நோக்கத்தை நிறைவேற்றிக்கொள்ளுவதே சிறந்த முறை என்று கிளைவ் எண்ணித் துணிந்தார். இதனல், அவர் நேர்மையற்ற வழியில் வஞ்சனையால் நவாபைக் கவிழ்ப்பதற்குரிய செயல்களில் ஈடுபட்டார்.

சென்ற ஆண்டின் கூதிர்க்காலத்தில் பிரிட்டிஷார் ஃபுல்டாவில் இருந்தபொழுதே சிராஜைக் கவிழ்க்க சூழ்ச்சி புரியும் சூழ்ச்சிக்காரர்களோடு முதன்முதலாகத் தாங்களும் கலந்து பேசத் தொடங்கினர். அதற்குப் பிறகு அலிவர்தி கானின் வயது முதிர்ந்த மைத்துனரான மீர்ஜாஃபர் என்பவரை அவருடைய பக்ஷி (Bakshi) என்னும் பதவியிலிருந்து சிராஜ் நீக்கிவிட்டார். அதனல் சீற்றமும் வெறுப்புமுற்ற மீர்

ஜாஃபர் பழிவாங்கும் உள்ளத்தோடு உழன்றுகொண்டிருந் தார். அப்பொழுது சேட்டுகளும் இந்து அதிகாரிகளும் சேர்ந்து ஒரு சதித்திட்டத்தை வகுத்தனர். அத் திட்டத்தில் மீர்ஜாஃபரும் கலந்துகொள்ள முன்வந்தார். அந் நிலையில் கிளைவ், சிராஜ்-உத்-தௌலாவிற்கு எதிராகச் செயலாற்றத் தொடங்கினர். சதிக்குழுவைச் சேர்ந்தவர்களும் கிளைவும் ஓர் உடன்படிக்கை செய்துகொண்டனர். மீர் ஜாஃபர் தம்மை நவாபாக்கினல் கம்பெனியின் சலுகைகளைத் தாம் மீண்டும் உறுதிப்படுத்துவதாகவும், கல்கத்தாவிற்குண்டான இழப்புகளுக்கு இழப்பீடாகப் பத்து லட்சம் பவுன்களைக் கொடுப்பதாகவும், அங்கு வாழ்கின்ற ஐரோப்பியர்களுக்குண் டான இழப்பிற்கு ஈடாக ஐந்து லட்சம் பவுன்கிளை அளிப்ப தாகவும் வாக்குறுதியளித்தார். இவ்வுடன்படிக்கையல்லாமல் தனிப்பட்ட வகையில் மறைபொருளாகச் செய்துகொள்ளப் பட்ட மற்ருெர் உடன்படிக்கையில், கம்பெனியின் முதன்மை வாய்ந்த அதிகாரிகளுக்கு ஆறுதல் அளிக்கும் வகையில் பேரளவிற்குப் பொருளுதவி செய்வதாகவும் முடிவு செய்யப் பெற்றது.

நவாபினுடைய கருவூலத்தில் நாலு கோடி பெறுமான பொருள் இருப்பதாகக் கருதப்பட்டது. எனவே, சீக்கிய வட்டிக்காரரான அமீன்சந்த் (ஒமீன்சந்த்) நவாப்பினுடைய கருவூலத்தில் 5 சதவீதம் தமக்குச் சேரவேண்டும் என்று அவரே உரிமை கொண்டாடினர். அவர் கேட்ட அப்பெருந் தொகையைக் கொடுப்பது பொருத்தமற்ற செயலென்று கருதப்பட்டது. இதை அறிந்த அமீன்சந்த் தாம் கேட்ட அளவிற்குப் பொருள் தர மறுத்தால் இச்சதித்திட்டத்தை சிராஜ்-உத்-தௌலாவுக்குத் தெரிவித்துவிடுவேன் என்று அச்சுறுத்தினர். எனவே, அவருடைய அச்சுறுத்தலைத் தவிர்க்க, பழைய உடன்படிக்கையின் இரண்டாவது படி ஒன்று அவருடைய நலனைக் கருதி எழுதப்பெற்றது. ஆனல், எப்படியோ ஜூன் மாதத் தொடக்கத்திலேயே மறைவாகச் செய்யப்பெற்ற சதித்திட்டம் அம்பலமாயிற்று. ஆனல், நவாபு இறுதிவரையில் மனவுறுதியற்றவராக இருந்தமை யால், மீர்ஜாஃபரைச் சிறைப்படுத்துவதற்கு முயலாமல், இதற்கு மாருக அவரைத் தமக்கு உதவி செய்யுமாறு வேண்டிக் கொண்டார்.

ஜூன் 22ஆம் நாள் கிளைவ் கல்கத்தாவைவிட்டுப் புறப் பட்டார். 800 ஐரோப்பியர்களையும் 2,200 இந்தியர்களையும்

வீரர்களாகக் கொண்டிருந்த அவருடைய படை, பொருத்த மற்ற கலவைக் கூளமாகவும், நவாபிடத்து அரசப் பற்றுறுதி யற்றதாகவும் இருந்த 50,000 வீரர்களைக்கொண்ட நவா பின் படையை எதிர்த்துப் போரிட்டது. இதற்கு முன்னர் தென்னிந்தியாவில் பல போர்களில் ஈடுபட்டு அனுபவமும் வெற்றியும் பெற்றிருந்த கிளைவிற்கு இந்தப் போரின் முடிவு என்னவாகுமோ என்ற அச்சத்தைத் தந்தது. இப்போர் மூண்ட காலத்தில்தான், அவர் தம் வாழ்நாளிலேயே என்றும் காணப்படாத வகையில் பெரிதும் உள்ள உறுதியற்றவராக விளங்கினர். இப்போர் பெரிதும் பீரங்கிப் போராகவே இருந்தது எனலாம். இதற்குமேல் அவர்கள் போரிட்டது மிகக் குறைவேயாகும். முறைகேடான வகையில் கில் பாட்டிரிக்கு என்பவர் பகைவர் படையை அழித்து முன்னேறிச் சென்றமை முதன்முதலில் இப்போருக்கு ஒரு முடிவினைக் கண்டது. அதைக் கண்டு சிராஜ் தலைதெறிக்கப் புறங்காட்டியோடினர். பாஸ்வொர்த் போர்க்களத்தில் ஸ்டான்லி நெடுந்தொலைவில் இருந்து போர் நிகழ்ச்சிகளை ஆவலோடு கூர்ந்து கவனித் ததைப்போன்று மீர்ஜா∴பர் இப்போர் நிகழ்ச்சியைக் கருத் தாகக் கவனித்துவந்தார். மறுநாள் மிக்க முன்னெச்சரிக்கை யோடு தம்முடைய எச்சரிக்கைமிக்க சதித்திட்டத்தின் பெரு மதிப்பு வாய்ந்த விளைவுகளைப் பயன்படுத்திக்கொள்ளுவதற்கு அவர் வந்தார். ஜூன் மாதம் 28ஆம் நாள் கிளைவ் மூர்ஷிதா பாத்திலுள்ள அரசுகட்டிலில் மீர்ஜா∴பரை ஏற்றினர். அதற்குப் பிறகு நான்கு நாட்கள் கழிந்து, மீர்ஜா∴பரின் மகனை மீரான், சிராஜினைச் சிறைப்படுத்திக் கொண்டுவந் தான். சிராஜ்-உத்-தௌலாவை மீர்ஜா∴பர் தூக்கிலிட் டார். இவ்வாறு புதியதொரு யுகம் தொடங்கியது.

அப்பொழுது தொடங்கிய புரட்சியின் குறிக்கோள்கள் முழுவதும் இன்னும் செயல்படுத்தப்பட்டன என்று கருதுவது கூடாது. சட்டப்படியும், வெளித் தோற்றத்தில் பெரும் பான்மையும் பழைய வாழ்க்கை முறையும் பழக்கவழக்கங் களும் தொடர்ந்து செயற்பட்டுவந்தன. அதற்கு முன்பே அங்குப் புரட்சிகள் பல தோன்றியுள்ளன. அவற்றிற்குப் பயன்பட்ட அயல்நாட்டினரின் உதவியையும் மக்கள் நன் குணர்ந்திருந்தனர். வங்காளத்தின் அரசியலில் ஆங்கிலேயர் களே முதன்முதல் தலையிட்ட ஐரோப்பியர்கள் என்றும் சொல்லுவதற்கில்லை. ஏனெனில், அவர்களுக்கு நெடுங்காலத் திற்கு முன்பே போர்ச்சுகீசியர்கள் வங்காளத்தின் அரசியலில் தலையிட்டுள்ளமை இங்கு நினைவுகூரத்தக்கதாகும். போரசின்

பிரதிநிதியாக வங்காளத்தையும் பீகாரையும் நவாபு இன்னும் தொடர்ந்து ஆட்சி புரிந்துவந்தார். பேரரசரின் இசைவினைப் பெற்றே கம்பெனியும் தன்னுடைய வாணிகத்தைத் தொடர்ந்து செய்துவந்தது. அதனுடைய உரிமைகளும் சலுகைகளும் மிகுதிப்பட்டதோடு அதனுடைய பெருமையும் தன்மதிப்பும் பெருகியது. ஆனால், கம்பெனியாரின் கணநேர ஆதிக்கத்தை—பெற்ற பெரு வெற்றியை நிலையானதென்று இருதிறத்தாருள் யாருமே நினைக்கவில்லை. இவ்வாறு உணர்வதற்கு ஏழாண்டுகளுக்கு முன்பே இந்நிகழ்ச்சி நடைபெற்றதென்பது உண்மையாகும். கிளைவின் சமகாலத்து மக்களுக்கு அவர் ஓர் ஆங்கிலேயப் 'புஸ்ஸி'யாகத் தோன்றினர். தம்முடைய பண்புநலன்களாலும் மேம்பாடுமிக்க படையியல் மதிநுட்பத்தையும், தொழில்நுட்பக் கலையினையும் தொடர்ந்து பயன்படுத்தியமையாலும் அவர் பேராற்றல் பெற்றிருந்தார்.[1] அப்பேராற்றலைக்கொண்டே கிளைவ் இந்திய அரசுகளை எல்லாம் அடக்கியொடுக்கிக்கொண்டிருக்கிறுர் என்று அவருடைய சமகாலத்து மக்கள் கருதினர். அவர் இங்கிலையில் புஸ்ஸியைக்காட்டிலும் பெரிதும் நற்பேறு வாய்க்கப்பெற்றவராக விளங்கினர். ஏனென்றால், அவர் செயலாற்றத்தொடங்கிய பகுதி, இந்தியாவிலேயே வளமிக்க பகுதியாகும். மேலும், ஒப்புநோக்குகிறபொழுது, வெல்லுவதற்கரிய பகைவர்களால் கிளைவ் அல்லற்படவில்லை என்பது புலனுகின்றது. அதையடுத்துப் பத்தாண்டுக் காலத்திற்கு நடைபெற்ற நிகழ்ச்சிகள், புதிய நவாபின் அரசியல் விவகாரங்களில் எல்லாவற்றிற்கும் மேலான செல்வாக்கினைத் தேடித்தந்தன. தென்னிந்தியாவில் கடுமையாகப் போர் புரிந்து ஐரோப்பியப் படையினரின் பேராற்றலையும் மேம்பாட்டையும் நிலைநாட்ட வேண்டியிருந்தது. ஆனால், வங்காளத்தின் 'பல்குழுவும் பாழ்செய்யும் உட்பகையும்' மிக எளிதிலேயே ஐரோப்பியப் படையினரின் பேராற்றலையும் பெருந்திறனையும் உலகறியச் செய்தது எனலாம். எனவே, இதற்குரிய வாய்ப்பினை வருங்காலம்தான் அளிக்கவேண்டியிருந்தது.

மீர்ஜாஃபரை ஆட்சியில் அமர்த்துவதே கிளைவ் உடனடியாகச் செய்யவேண்டிய கடமையாக இருந்தது. அதன்மூலம்

[1] பாரசீக மொழிப் பட்டம் ஒன்றைக் கிளைவ் பெற்றிருந்தார். அப்பெயராலேயே அவர் இந்தியாவில் போற்றப்பட்டார். 'சபத் ஜங்' என்பது அவருக்கு வழங்கிய சிறப்புப் பெயராகும். அதற்குப் 'போரிலே தேர்ச்சி மிக்கோன்' என்பது பொருள். இப்பட்டத்தைப் பேரரசரிடமிருந்து மீர்ஜாஃபர் கிளைவிற்குப் பெற்றுத்தந்தார்.

வாணிகத்தை என்றும்போல் இடையூறின்றிச் செய்வதற்குரிய வாய்ப்பையும் வசதியையும் பெறுவதே அவருடைய நோக்கமாக இருந்தது. உடன்படிக்கையில் நிதி நிலைமையைப் பங்கிட்டுக் கொள்ளுவதைப்பற்றிக் குறிப்பிட்டிருந்த விதிகளால், தொடக்கத்தில் தப்பெண்ணங்களாலும் நேர்மையற்ற முறைகளாலும் நிலைமை மிகவும் குழப்பமுடையதாக இருந்தது. மூர்ஷிதாபாத்தின் கருவூலத்தைப்பற்றிய கட்டுக்கதை பொய்த்துப்போயிற்று. அக் கருவூலத்தில் 15 இலட்சம் பவுன்கள் மதிப்புடைய பொருள்களே இருந்தன. எனவே, மீர்ஜாஃபர் கொடுக்கவேண்டிய கடனைத் தவணைகளில் செலுத்துமாறு ஒப்புக்கொள்ளுவதைத் தவிர, கிளைவிற்கு வேறு வழியில்லை. ஆனால், இவ்வாறு பல தவணைகளில் கொடுப்பதற்குக்கூடத் தமது நிதிநிலை இடம் தராது என்பதை மீர்ஜாஃபர் அறிந்தார். இதனால் அவர் இந்து அதிகாரிகளோடு கொண்டிருந்த உறுதியான தொடர்பினை அறுத்துக் கொள்ள நேர்ந்தது. மீர்ஜாஃபர் மாநிலங்களிலுள்ள கருவூலங்களில் உள்ள பொருள்கள் மத்திய கருவூலத்தில் உண்டாகியிருக்கும் வெற்றிடத்தை நிறைப்பதற்கு என்று ஆவலோடு அவற்றை நோக்கினார். எனவே, கிளைவ் மூவகைப் பெரும் பணிகளை ஆற்றவேண்டிய நெருக்கடி நிலையில் மூழ்கிக் கிடந்தார். முதலாவதாக, முஸ்லீம் மேல் அதிகாரியான நவாபிடமிருந்து இந்து அதிகாரிகளைக் காப்பாற்றவேண்டியது அவருடைய கடமையாயிற்று; வெளியாரின் தாக்குதலிலிருந்து மீர்ஜாஃபரைக் காப்பாற்றவேண்டிய நெருக்கடி உண்டாயிற்று. மூன்றாவதாக, இச் செயல்களைச் செய்கின்ற அதே சமயத்தில் கிளைவ் ஐரோப்பியர்களின் தலையீட்டிலிருந்து தம்மைத் தாமே காத்துக்கொள்ளவேண்டியதாயிற்று. இம் மூவகைக் கடமைகளையும் அவர் பேராற்றலுடன் முற்றுப் பெறச் செய்தார். மீர்ஜாஃபரின் ஆதிக்கத்தை எதிர்த்துத் தோன்றிய கலகங்களை எல்லாம் கிளைவ் அடக்கியொடுக்கினார். இராமநாராயணன் என்னும் இந்து அதிகாரியிடமே பாட்னாவின் ஆட்சிப் பொறுப்புத் தொடர்ந்திருந்துவருமாறு செய்தார். மூர்ஷிதாபாத்தில் பணிபுரிவது தம்மால் இனி இயலாது என்று கிளைவிடம் அடைக்கலம் புகுந்த திவான் ராய் துர்லப் (Rai Durlabh) என்பவரைக் காப்பாற்ற வேண்டிய கடமை கிளைவைச் சேர்ந்தது. இதைப் போன்றே மிகுந்த மதிநுட்பத்துடன் மற்றொரு பேரிடர்ப்பாட்டையும் அவர் தவிர்த்தார். 1759ஆம் ஆண்டில் அலி கௌஹார் (Ali Gauhar) என்னும் மொகலாய இளவரசர் (பிற்காலத்தில் இரண்டாம் ஷா ஆலம்) பாட்னாவை முற்றுகையிட்டார். இம் முற்றுகை

யின் மூலம் பீகாரையும் வங்காளத்தையும் கைப்பற்றினால், தில்லியின் அரியாசனத்தில் ஏறுவதற்குரிய தம்முடைய உரிமையினை உறுதிப்படுத்தலாம் என்று அவர் நினைத்தார். இராமநாராயணன் இம்முற்றுகைக் காலத்திலும் ஆங்கிலேயரிடம் அரசப் பற்றுறுதியுடையவராக இருந்தார். கிளைவ் தமக்குதவியாகப் பெரும் படையொன்றை அனுப்பும்வரையில் அவர் பாட்னாவின் முற்றுகையை இயன்றவரையில் தற்காப்பு வசதிகளோடு சமாளித்துக்கொண்டார். அச் சமயத்தில் மொகலாய இளவரசர் அயோத்திக்குச் சென்றுவிட்டார். சிஞ்சூராவிலுள்ள (Chinsura) டச்சுக்காரர்களால் மூன்றாவது முறையாக ஆங்கிலேயர்களுக்குப் பெருந் தொல்லை உண்டாயிற்று. ஆங்கிலேயரின் வெற்றியால் பொறாமையும் பேரச்சமும் அடைந்திருந்த டச்சுக்காரர், நவாபு, கம்பெனியாருக்கு அடங்கிக்கிடப்பதைப் பயன்படுத்திக்கொள்ள நினைத்தனர். எனவே, அவர்கள் படேவியாவில் இருந்து படைக்கலன்களை அனுப்பிவைத்தனர். இங்கிலாந்து ஹாலந்தோடு அமைதியான நட்புறவு கொண்டிருந்தது. எனினும், கிளைவ் திறமையாகவும் துணிச்சலுடனும் தொடர்ந்து செயலாற்றினர். அதன் விளைவாக டச்சுக்காரர்களே வம்புச் சண்டைக்காரர்கள் என்று மற்றவர்கள் கருதுமாறு அவர் செய்தார். அதன் பிறகு அவர்களுடைய படையெடுப்பை அழித்தொழித்தார். அதற்கான இழப்பீட்டையும் அவர்களிடமிருந்து கிளைவ் பெற்றார். இது முதற்கொண்டு டச்சுக்காரர்கள் வாணிகம் புரிவதோடு தங்கள் செயல்முறைகளைக் கட்டுப்படுத்திக்கொண்டனர். இவ்வாறு இந்தியாவில் ஆதிக்கம் பெறப் போராடிய அரசியலில் இருந்து டச்சுக்காரர்கள் அடியோடு மறைந்துவிட்டனர்.

1760ஆம் ஆண்டு ஜனவரி மாதம் கிளைவ் தனிப்பெரும் புகழுடன் கல்கத்தாவைவிட்டுப் புறப்பட்டுச் சென்றார். புஸ்ஸியைக்காட்டிலும் அவருடைய துறையிலேயே கிளைவ் மேம்பட்டு விளங்கினார். ஒன்பதாண்டுகளாகப் பேரிடுக்கண்களுக்கிடையே புஸ்ஸி போற்றிக் காப்பாற்றி நிலைநிறுத்திய நிலையை, கிளைவ் மூன்றேயாண்டுகளில் தாக்க முடியாத ஆற்றலுடையதாக்கிவிட்டார். ஆனால், அந்நிலை ஒரு தனி மனிதரின் ஆற்றல்மிக்க ஆளுமையையும் மதிநுட்பத்தையும் சார்ந்திருந்தமை மிகவும் நிலைபேறற்ற ஒன்றாகும் என்பது தெளிவாகப் புலனாயிற்று. கிளைவ் இன்றியமையாத பேராற்றலாகப் பின்னணியில் கருதப்பெற்றார். சில சமயங்களில் அரியாசனங்களை எதிர்க்கும் பேராற்றலாகப் போற்றப்பட்டார்.

அவர் இந்திய அரசியலில் இருந்து விலகுவதனுல், இந்தியரின் எதிர்ப்புமிக்க கிளர்ச்சியோ, அடிமைப்படுத்தும் செல்வாக்கு வெளிப்படையான ஆதிக்கமாக மாற்றமுறுவதோ நடைபெற லாம். உண்மையில், கிளைவ் ஓய்வுபெற்றுத் தாயகத்திற்குத் திரும்பியவுடன் எதிர்பார்த்த இவ்விரண்டும் நடைபெறத்தான் செய்தன. இந்திய வரலாற்றின் பிரிட்டிஷார் ஆட்சிக் காலத் தில் அவ்வைந்து ஆண்டுகள் மிகுந்த குழப்பமும் கொந் தளிப்பும் உடையனவாக இருந்ததோடு மிக மோசமான நிலையையும் அடைந்துவிட்டமை இங்குக் குறிப்பிடத்தக்க தாகும். அரசியல் ஆதிக்கம், ஊழல் என்னும் சிலந்திக் கூட்டில் சிக்கிச் சீரழிந்ததை ஆராய்வதற்கு முன்னர் அரசிய லாதிக்கத்தின் இழையினைத் தேடிக் காண்பது எளிதாகும்.

வங்காளத்தின் நவாபான மீர்ஜாஃபரை பதவியி லிருந்து விலக்கி, அவருடைய மருமகனை மீர்காசிமை நவாபாக அமர்த்தியமை அரசியலாதிக்கத்தினைப் போற்றிக் காப்பதற்காக மேற்கொண்ட முதல் செயலாகும். கம்பெனி யாரின் வலையிலிருந்து தம்மை விடுவித்துக்கொள்ள வேண்டும் என்று எப்பொழுதும் மீர்ஜாஃபர் கருதிக்கொண்டிருந்தார். ஆனுல், கிளைவினை எதிர்த்துப் போரிடுவதற்கோ, தம்முடைய படைபலத்தைப் பெருக்கித் தம்முடைய ஆற்றலை வலுப் படுத்திக்கொள்ளுவதற்கோ அவர் உள்ள உரம் அற்றவராக இருந்தார். அவருடைய முயற்சிகளால், அவர் நம்பத் தகாதவர் என்னும் உள்ளார்ந்த உணர்ச்சியை ஆங்கிலேயர் களிடையே உண்டாக்கிவிட்டார். அவர்கள் அவரைக் கண்டு அஞ்சவில்லை. ஆனுல், அவரைத் தொல்லைகள் கொடுப்பவ ராகவே கருதிவந்தனர். நவாபிற்கும் கம்பெனிக்கும் இடையே உருவான நெருக்கடி நிலையைப் போக்குவதற்குரிய பேச்சுவார்த்தையில் ஈடுபடுவதற்குத் தகுதியும் திறமையும் வாய்ந்தோர் கம்பெனியில் யாருமே இல்லை. ஆனுல், நிலை பேறற்ற சூழ்நிலையில் தாங்கள் பணவகையில் யாதாகிலும் ஆதாயம் பெறுவதற்கு வாய்ப்பு இருக்கின்றதா என்று பலர் கூர்ந்து நோக்கினர். கம்பெனியோ பொருளாதார வசதியற்று பற்றுக்குறையான நிதிநிலையால் அல்லலுற்றது. இந்தியாவில் மிகுந்த தொழில்வளமிக்க மாநிலம் தங்களுடைய வள ஆதாரங்களை வீண்செலவு செய்ய விடக்கூடாது என்று கம்பெனியின் திகைப்புற்ற இயக்குநர்கள் கருதியமையால், போதிய பண உதவியற்ற நிலையில் கம்பெனி துன்புற நேர்ந் தது. இந்நிலையில் நவாபு தாம் ஆண்டுதோறும் செலுத்த வேண்டிய திறைப் பொருளையும் உதவித் தொகையையும்

செலுத்தத் தவறினர். எனவே, எளிதில் நவாபு கம்பெனி யாரின் தாக்குதலுக்குரிய இலக்கானர். கிளைவிற்குப் பிறகு நம்பத்தகுந்த, ஆனல், அறிவற்ற ஹால்வெல் கவர்னர் பதவி யில் அமர்ந்தார். ஹால்வெல்லுக்குப் பிறகு நேர்மையும் ஆற்றலுமுடைய, ஆனல், பயனற்றவரான ஹென்றி வான்சிட் டார்ட் (Henry Vansittart) என்பவர் பதவிக்கு வந்தார். அவர் இதற்கு முன்பு சென்னையிலுள்ள கிளை அலுவலகத்தில் பணி யாற்றிக்கொண்டிருந்தவராவர். உள்ளூரைச் சார்ந்த அவரது பேராவல், அவரை வன்முறைச் செயல்களில் உந்தி வலுச் சண்டையிடுமாறு செய்தது. உள்ளூரைச் சார்ந்து உண்டான பொருமைகள் அவருடைய நேர்மை நாடும் இயல்பூக்கத்தின் முனைப்பை அழித்தது. ஜூலை மாதத்தில் மீர்ஜாஃபரின் மகனை மீரான் காலமானர். இதன் விளைவாக அடுத்து யார் நவாபாக வருவது என்பதைக் குறித்து ஒரு சிக்கல் உண் டாயிற்று. மீர்காசிம் என்பவரை திவானக அல்லது அரசப் பிரதிநிதியாக அமர்த்த ஏற்பாடுகள் செய்யப்பெற்றன. இயல்பாகவே ஊசலாடும் உள்ளம் வாய்க்கப்பெற்றிருந்த மீர்ஜாஃபர், அவருடைய உறவினரிடத்து அதிகாரம் திணிக் கப்படுவதை எதிர்த்துக் கிளர்ச்சி செய்தார். அதன் விளைவாக அவர் ஆங்கிலேயக் காவலர்களால் கல்கத்தாவிலேயே காவலில் வைக்கப்பட்டார்.

புதிய நவாபு தன் மாமனைக்காட்டிலும் முற்றிலும் மாறுபட்ட மனிதராக இருந்தார். அவர் பேராற்றலும் பேரா வலும் பெருந் திறமையும் உடையவராக விளங்கினர்; ஆனல், அதே சமயத்தில் ஐயுறவு மிக்கவராகவும், போரை விரும்பாத வராகவும் இருந்தார். அக் காலத்திய, அருளுணர்வில்லா வஞ்சனையும் சூழ்ச்சியும் களிநடம் புரிந்த அரசியலில் அவர் மூழ்கித் திளைத்திருந்தார். அதனுடன் மிக விரைவில் தமக்குக் கிடைக்கக்கூடிய வாய்ப்பினைப் பயன்படுத்தித் தம்முடைய உரிமையை நிலைநாட்டுவதற்குத் துணிந்திருந்தார். அவரிடம் இந்தியரின் எதிர்த்துச் செயலாற்றும் பண்பு, திறமையோடு உருவாக்கப்பெற்றிருந்தது. ஆனல், அவர் தாம் பெற்ற பதவிக்குரிய விலையாக அவருடைய நற்பேற்றை அடகு வைத்துவிட்டிருந்தார். கம்பெனியாருடைய படை தமக்குப் பாதுகாவலாக நிறுத்தப்பட்டிருப்பதற்குரிய செலவிற்காக மீர்காசிம் வர்த்தமானபுரம், மிதுனபுரி, சிட்டகாங் ஆகிய மூன்று மாவட்டங்களை ஆங்கிலேயருக்கு உரிமைப்படுத்தினர். மேலும், மீர்ஜாஃபரால் செலுத்தப்படாது நின்றுபோன கடன் தொகைகளைத் திருப்பிக் கொடுக்கவேண்டிய இக்கட்

டான நிலையில் அவர் சிக்கிக்கொண்டிருந்தார். இதற்கு மேலாக, கல்கத்தாவிலுள்ள ஆலோசனைக் குழுவிற்கு 2,00,000 பொற்காசுகளைத் தொகையாக அவர் கொடுத்தார். அப்பொழுது வங்காளத்தில் இரு பெருஞ் சக்திகள் இருந்தன. அவை ஒவ்வொன்றும் தன்னுடைய மேலாண்மையை நிலை நாட்டுவதற்குரிய வாய்ப்பை எதிர்பார்த்துக்கொண்டிருந்தன. அதே சமயத்தில் அவ்விரு சக்திகளும் உடனடியாகப் பண வசதியைப் பெறவேண்டிய நெருக்கடியான நிலையில் இருந்து வந்தன. இப் பண வசதியைப் பெறவேண்டுமானால் இவ்விரு சக்திகளுள் ஒன்று மற்றொன்றை அழித்தாகவேண்டும் என்ற இடர்ப்பாடான நிலை இருந்துவந்தது. எனவே, அவ்விரு சக்தி களுக்கு இடையே உண்டாகக்கூடிய மோதுதல் தவிர்க்க முடியாததாக இருந்தது. ஆனால், அம் மோதுதல் உடனடியாக உண்டாகாது மூன்றாண்டுகள்வரை காலந்தாழ்த்தப்பட்டு வந்தது. இவ்வாறு காலந்தாழ்த்தப்பட்டுவந்தமைக்கு நவா பின் திறமையும், கல்கத்தா ஆலோசனைக் குழுவினரிடம் கருத்து வேற்றுமை இருந்துவந்தமையுமே காரணமாகும்.

நவாபு முதலில் மொகலாயப் பேரரசரிடம் மோதினார். பேரரசர் மீண்டும் பீகாரில் எதிர்த்து விரட்டப்பட்டார். அவரைத் திரும்பத் தில்லியின் தலைவராக்குவதற்குக் கல்கத்தா கம்பெனியார் உதவி செய்வதற்கு முன்வந்தனர். இவ்வாறு பேரரசருக்கு ஆங்கிலேயர்கள் உதவி செய்தால், அதன் விளைவாகத் தன்னாட்சிக்குட்பட்டுள்ள வங்காளத்தைப் பரிசாக ஆங்கிலேயர்கள் பேரரசரிடமிருந்து பெற்றுவிடுவார் களோ என்று அவர் ஐயுறவு கொண்டார். (அவர் ஐயுற்ற தைப்போலவே ஐந்தாண்டுகளுக்குப் பின்னர் நடைபெற்றது.) எனவே, அவர் வருமுன் காக்கும் முன்னறிவுமிக்க அரசியல் சூழ்ச்சித்திறத்தோடு பேரரசர் ஷா ஆலத்திடமிருந்து தம் முடைய பதவியினை உறுதிப்படுத்திக்கொண்டதோடு, அவரை பீகாரைவிட்டுப் போகுமாறும் செய்தார். அதன் பிறகு மீர் காசிம் வான்சிட்டார்ட்டின் உதவியைப் பெற்று பாட்னாவி லிருந்த கிளைவின் காவல்படையினரை அப்புறப்படுத்தினார். மேலும், இராமநாராயணனையும் பாட்னாவைவிட்டு அவர் விரட்டி விட்டார். இவ்வாறு அவர் பீகாரின் வள ஆதாரங்களையும் நிதியையும் தமக்கேயுரியதாக்கிக்கொண்டார். அடுத்து அவர் ஒழுங்கும் கட்டுப்பாடும் மிக்க படை ஒன்றைத் திரட்டினார். அப் படை விலைபேசும் துறைகளுள் மிகவும் விரும்பிய பயனை விளைவிப்பதாக இருந்தது. இப் படையின் துணையைக் கொண்டு கல்கத்தாவின் தேவையற்ற தலையீடுகளிலிருந்து

தம்மைத்தாமே காத்துக்கொள்ள அவர் விரும்பினார். எனவே, அவர் தம்முடைய தலைநகரை மூர்ஷிதாபாத்திலிருந்து மங்கீருக்கு மாற்றிக்கொண்டார். இத்திட்டங்கள் அனைத்தையும் செயற்படுத்துவதற்குப் பெருந்தொகை தேவைப்பட்டது. மேனாட்டு நிறுவனத்தோடு முதன்முதலாக ஒத்த நிலையில் இயங்குவதற்கு இந்திய அரசு மேற்கொண்ட முயற்சி இதை அடித்தளமாகக் கொண்டிருந்தது. அவருடைய செலவுகளுக்காக நவாபு வங்காளத்தின் வாணிகத்திலிருந்து கிடைக்கும் வாணிக வழிச் சுங்கவரியின் பயனை முழுவதும் பயன்படுத்திக் கொள்ள முயன்றார். இதனால், தாங்கள் இங்கிலாந்திற்குச் செலுத்திவந்த கட்டணத்தைத் தவறாது செலுத்துவதற்காகக் கல்கத்தா வாணிகர்கள் தங்கள் வருவாயைப் பெருக்கிக் கொள்ள வேண்டியவர்களானார்கள். தனிப்பட்டோர் தங்கள் செல்வத்தை வரையறையின்றிப் பெருக்கிப் பெருஞ்செல்வர்களாக முயன்றனர். கிளைவின் வெற்றிகள், தனிப்பட்டோர் பெருஞ் செல்வர்களாவதற்கு எதிர்பாரா வகையில் வழி வகுத்துக் கொடுத்தது எனலாம். அவ்வளமிக்க வாணிகர்கள் புதிதாகத் தாங்கள் பெற்ற பொருளாதார உரிமைகள் நவாபினால் குறைக்கப்படுவதை—சுருக்கப்படுவதை விரும்பவில்லை. 1717ஆம் ஆண்டு மொகலாயப் பேரரசர் கம்பெனியாருக்கு வழங்கிய ஆணைகள், வெளிநாட்டு வாணிகத்தில் கம்பெனியாரின் இறக்குமதி ஏற்றுமதிக்குரிய பொருள்களுக்கு எத்தகைய சுங்க வரிகளும் விதிக்கப்படுவதில்லை என்னும் சலுகையை அளித்தமை இங்குக் குறிப்பிடத்தக்கதாகும். ஆனால், கம்பெனி ஊழியர்கள் தனிப்பட்ட முறையில் செய்யும் வாணிகத்திற்கு வழிச் சுங்க வரி செலுத்தவேண்டும் என்ற விதிமுறை நடைமுறையில் இருந்துவந்தமை இங்குக் கருதத் தக்கதாகும். 1757ஆம் ஆண்டு, கிளைவ் தனிப்பட்டோர் செய்யும் வாணிகத்திற்கு வரி விதிப்புக் கிடையாது என்னும் உரிமையை உடன்படிக்கையில் வெளிப்படையாகக் குறிப்பிடாமலிருந்தபோதிலும், நடைமுறையில் பின்பற்றும் உரிமையை மீர்ஜாஃபரிடம் பெற்றிருந்தார். இதன் விளைவாகக் கம்பெனியைச் சார்ந்த ஊழியர்களின் தனிப்பட்ட வாணிகம் மிக விரைவில் செழிப்புற்று வளரத் தொடங்கியது. ஆனால், அதே சமயத்தில் இந்திய வாணிகர்கள் பன்னெடுங் காலமாகச் செய்துவந்த வாணிகம் நலிந்து சீர்கேடுற்றது. இவ்வாறு மீர்காசிம் தம்முடைய வருவாயைப் பெருக்கிக் கொள்ள வேண்டுமென்று நினைத்த சமயத்தில், அவருடைய வருவாய் குறைந்துகொண்டுபோவதைக் கண்டார். 1762ஆம் ஆண்டின் தொடக்கத்தில் ஐரோப்பியர் தனிப்பட்ட வகையில்

செய்துவந்த வாணிகத்திற்குரிய பொருள்கள்மீது 40 சதவீதம் வாணிகப் பொருள் வரி விதிக்கப்பட்டதற்கு மாருகப் பெறு மான விகிதமாக 9 சதவீதம் வாணிகப் பொருள்கள்மீது வரி விதிக்கப்படுவதற்கு வான்சிட்டார்ட் இசைந்தார். அதனுடன் இவ் வரி விதிப்புக் காரணமாக உண்டாகும் வழக்குகளை அவ்வவ் வட்டாரங்களைச் சார்ந்த காவலர்களே ஆராய்ந்து தீர்ப்பளிப்பதற்கும் வான்சிட்டார்ட் உடன்பட்டார். இவ்வாறு அவர் மீர்காசிமிற்கு நன்மை பயக்கத்தக்க வகையில் உடன் படிக்கை செய்துகொள்ளுவதைக் கல்கத்தாவில் இருந்த ஆலோசனைக் குழுவினர் எதிர்த்தனர்; கிளர்ச்சியும் செய் தனர். இதன் விளைவாக வாணிகப் பொருள்களின்மீது விதிக்கப்பட்டிருந்த வரிகளில் உப்பு வரிமட்டும் 9 சதவீதத்தில் இருந்து $2\frac{1}{2}$ சதவீதமாக குறைக்கப்பட்டது. மேலும், இவ் வரி விதிப்பினுல் உண்டாகும் வழக்குகளில் நவாபின் அதிகாரிகள் தலையிடுவதற்கு இருந்துவந்த உரிமை ஆங்கிலேயரால் மறுக்கப்பட்டது. நவாபு இச்செயலைக் கண்டு சீற்றமுற்ருர். அவர் பழிக்குப் பழி வாங்கக் கருதி வாணிகப் பொருள்கள்மீது விதிக்கப்பெற்றிருந்த வரிகள் அனைத்தையும் அடியோடு நீக்கி விட்டார். 'தாங்களே நீதி வழங்க வேண்டும்' என்னும் கம்பெனி ஊழியர்களின் முடிவிற்கும், தம்முடைய வீட்டிற்குத் தாமே தலைவராக இருக்க வேண்டும் என்ற விடாப்பிடியான மனவுறுதிக்கும் இடையே உடன்பாடு உண்டாவது அரிதா யிற்று. இதனுல் போரிடுவது இருதிறத்தினராலும் தவிர்க்க முடியாததாயிற்று. பாட்ளுவில் முன்கோபியான ஓர் ஆங்கி லேயத் தலைவரும் மனக் கசப்படைந்து இருந்த நவாபும் பொறுத்துக்கொள்ள முடியாத அளவிற்கு ஒருவரையொருவர் சீற்றமுறச் செய்தனர். இதன் விளைவாகப் பாட்ளுவில் ஆங்கி லேயருக்கும் நவாபிற்குமிடையே போர் மூளுவது விரைவு படுத்தப்பட்டது எனலாம். 1763ஆம் ஆண்டின் கோடைக் காலத்தில் ஒழுங்கான போரே தொடங்கியது. அப் போரில் நவாபின் புதிதாகத் திரட்டப்பட்ட படைகள் நான்கு இடங் களில் நடைபெற்ற மிகக் கடுமையான தாக்குதல்களில் தோல்வியுற்றன. மீர்காசிம் எல்லா வகையான கட்டுப்பாடு களையும் இழந்து, தம்முடைய தளபதியைத் தூக்கிலிட்டார். மேலும், அவர் பாட்ளுவிலிருந்த இராமநாராயணனையும், சேட்டுகளையும், சிறைப்படுத்தப்பட்டிருந்த பிரிட்டிஷாரையும் கொன்று குவித்தார். அதன்பிறகு அயோத்திக்குத் தப்பிப் பிழைத்தால் போதுமென்று அவர் ஓடினுர். மீர்ஜாஃபர் ஆங்கிலேயர்களால் மீண்டும் நவாபாக்கப்பட்டார். ஆனுல், போர்மட்டும் இன்னும் ஓய்ந்தபாடில்லை. அயோத்தியின்

நவாபினுடைய அமைச்சராக இருந்த ஷுஜா-உத்-தௌலா வின் ஆதரவையும் உதவியையும் மீர்காசிம் நாடினார். அவர்களோடு அங்குமிங்குமாக அலைந்துகொண்டிருந்த முகலாயப் பேரரசரும் சேர்ந்துகொண்டார். இவ் விடைவேளையில் இரு திறத்தினரும் தத்தம் படையாற்றலைப் பெருக்கிக்கொண்டதோடு வலுப்படுத்தியும் கொண்டனர். ஆங்கிலேயப் படைத் தலைவரான ஆடம் கல்கத்தாவில் காலமானார். அவருக்குப் பிறகு அப் பதவிக்கு வந்த ஹெக்டர் மன்ரோ, இந்தியப் படையினரின் முதல் கலகத்தைக் கடுமையான முறைகளைப் பின்பற்றி அடக்கியொடுக்கினார். 1764ஆம் ஆண்டு கூதிர்ப் பருவத்து மீண்டும் போர் தொடங்கப்பட்டது. அக்டோபர் மாதம் 22ஆம் நாள் பக்சார் (Baksar) என்னுமிடத்தில் ஆங்கிலேயர் தொடர்ந்து பல முறை வெற்றி பெற்றதோடு போர் முடிவுற்றது. அயோத்தியினை ஆங்கிலேயர் கைப்பற்றியவுடன் ஷா ஆலம் மீண்டும் ஆங்கிலேயர் கட்சியில் சேர்ந்து கொண்டார்; ஷுஜா-உத்-தௌலா ரோகில்கண்டிற்குத் தப்பியோடினார்; மீர்காசிம் இருக்கும் இடம் தெரியாது மறைந்து போனார். பிளாசிப் போர் தொடர்ந்து பீரங்கிகளைச் சுடுவதாக அமைந்தது. ஆனால், பக்சார் அறுதியிட்டு முடிவினைத் தெரிவித்த போராட்டமாகும். இப் போரில்தான் முரட்டுத்தனமாகப் போர் உச்சநிலையை அடைந்ததைக் காணுகின்றோம். மேலும், பக்சார் போரே வங்காளத்தில் பிரிட்டிஷாரின் ஆதிக்கத்தை முடிவு செய்தது. இதுவரையில் வங்காளத்தில் ஆதிக்கத்தில் இருந்துவந்தவர்களுக்குப் போட்டியாளர்களாகவும், தங்கள் செல்வாக்கைப் பயன்படுத்திக் காரியத்தைச் சாதித்துக் கொள்ளுபவர்களுமாகவே ஆங்கிலேயர்கள் இருந்துவந்தனர். அவர்களுடைய ஆதிக்கம் தற்செயல் நிகழ்ச்சியாகவும், அது நிலைத்து நிற்குமா என்பது ஐயப்பாட்டிற்கு உரியதுமாகவே இருந்துவந்தது. அவர்களுடைய ஆதிக்கம் இப்பொழுதுதான் தன்னிகரற்ற ஒன்றாக வெளிப்பட்டது. மற்றவர்கள் யாருமே ஆங்கிலேயர்களுடைய ஆதிக்கத்தோடு போட்டியிட முடியாது என்பது அப் போரின் விளைவாகப் புலனாயிற்று. மேலும், அப் போருக்குப் பிறகே முகலாயப் பேரரசர் ஆங்கிலேயர்களுடைய ஆதிக்கத்தை ஏற்றுக்கொண்டார். அதற்குப் பிறகு அவர்களுடைய ஆதிக்கத்தின் பரப்பு சிறிது காலம் நாட்டில் நிலவிவந்த சட்டமுறையின் தவறான நம்பிக்கைகளால் மறைக்கப்பட்டுவந்தது. வங்காளத்தில் பிரிட்டிஷாரின் ஆட்சிப் பரப்பினுடைய விரிவின் தொடக்கத்தைப் பிளாசிப் போர் குறிப்பிட்டது. அத் துணிகரச் செயலில் வெற்றியை அளித்தது பக்சார் போர்

எனலாம். 1765ஆம் ஆண்டு மீர்ஜாஃபர் மாண்டதோடு அக்காலம் ஒரு முடிவிற்கு வந்தது. பிரிட்டிஷ் வாணிகர்களின் உப்பு வாணிகத்தின்மீது 2½ சதவீத வரியும், இந்திய வாணிகர்களின்மீது பழைய வரிகள் அனைத்தையும் திரும்ப விதிக்க வேண்டும் என்ற ஆங்கிலேயரின் கட்டளைக்கு இணங்கி மீர்ஜாஃபர் நடப்பதாக வாக்குறுதி அளித்த பிறகே, அவரை மீண்டும் ஆங்கிலேயர்கள் வங்காளத்தின் நவாபாக்கினார்கள். அதனுடன் கல்கத்தாவின் கவர்னருக்கும் ஆலோசனைக் குழுவினருக்கும் பரிசுகள் பல அளிப்பதாகவும் மீர்ஜாஃபர் ஒப்புக்கொண்ட பிறகே, அவர் நவாபு ஆக்கப்பட்டார் என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது. இஸ்லாமிய சட்ட நெறிக்கு மாறாக, ஆலோசனைக் குழு மீர்ஜாஃபரின் பேரப்பிள்ளைக்குப் பதிலாக அவரது இரண்டாம் மகனை நாசிம்-உத்-தௌலாவையே நவாபாக முடிசூட்டியது. அதன்மூலம் ஆங்கிலேயர் தங்கள் நிலையை நன்கு பலப்படுத்திக் கொண்டனர். அதைச் செயல் முறையில் நிலைநாட்டுவதற்காகத் தங்கள் பிரதிநிதி ஒருவரை நவாபின் அரசியல் செயல் முறைகளைக் கண்காணிக்கும் அதிகாரியாக நவாபின் அவைக்கு ஆங்கிலேயர் அனுப்பிவைத்தனர். இவ்வாறு அனுப்பப்பெற்ற ஆங்கிலேயரின் பிரதிநிதி முகமது ரசாகான் என்பவராவர். அவர் பதவியில் அமர்த்தப்பட்டமை, வங்காளத்தில் பேரரசருடைய தனியுரிமை ஆட்சிக்குச் சமாதி கட்டியது எனலாம்.

மிகக் குறுகிய காலத்தில் குறிப்பிடத்தக்க அளவிற்கு வெற்றியுடன் பல பணிகள் புரிந்த ஆங்கிலேய ஆட்சிமுறையின் இயல்பினை நாம் இப்பொழுது காணலாம். 'ஆங்கிலேய அரசின்மீது மன்னிக்க முடியாத பெரும் பழியைச் சுமத்திய காலம் இதைப்போன்று வேறொன்றும் இருக்க முடியாது' என்று சர் ஆல்ஃபிரட்டு லையால் (Lyall) அக்காலத்தைப்பற்றி வருணித்துள்ளார். கிளைவ் இதைவிட இன்னும் தெளிவாக ஒளிமறைவின்றி 'அரசியல் குழப்பமோ, கலகமோ, கையூட்டு வாங்குதலோ, ஊழலோ, வன்முறையில் கைப்பற்றுதலோ வங்காளத்தில் அன்றி அதைப்போன்று வேறெந்த நாட்டிலும் காண முடியாது; கேட்கவும் முடியாது. அதைப்போன்றே நேர்மையற்ற வழிகளில் பலவகைச் செல்வங்களைச் சேர்ப்பதற்கும், பெரும் பொருளைக் கொள்ளையடிப்பதற்கும் உரிய வாய்ப்பு வசதிகள் வேறெங்கும் வாய்க்க முடியாது என்பது திண்ணம்' என்று மொழிந்துள்ளமை இங்குக் கருதத்தக்கது. எவ்வாறாயினும், வங்காளத்தில் இருந்த பொதுத்துறை

ஊழியர்களுடைய (civilians) ஒழுக்கக்கேடான நேர்மையற்ற நடத்தையைத் தொடங்கிவைத்தவர் நம்முடைய கிளைவ் என்பதை நாம் மறக்க முடியாது. 1756ஆம் ஆண்டிற்கு முன்பு கல்கத்தாவைச் சேர்ந்த பொதுத்துறை ஊழியர்கள் மற்ற நாடுகளில் இருந்தவர்களைக்காட்டிலும் சிறந்தவர்களாகவோ, இழிந்தவர்களாகவோ இல்லை. அவர்கள் கம்பெனியின் வாணிகத்தைத் திறமையாகவும் துணிச்சலுடனும் செய்துவந்தனர். ஆனால், அவர்களுடைய கடமைகளும் பொறுப்புகளும் மிகக் குறைவாகவே இருந்துவந்தன. எனவே, அவர்கள் தங்களுடைய எஞ்சிய சக்தியைத் தங்களுடைய தனி நலனுக்குப் பயன்படக்கூடிய வகையில் தனிமுறை வாணிகத்திற்குப் பயன்படுத்திவந்தனர். கம்பெனி கொடுத்துவந்த மிகக் குறைந்த ஊதியத்தைக்கொண்டு அவர்கள் அன்றாட வாழ்க்கையை நடத்த முடியாது அல்லற்பட்டு வந்தனர். அக் காரணத்தினால், தனிப்பட்ட வகையில் வயிற்றைக் கழுவிக்கொள்ள அவர்கள் வாணிகம் செய்வது வரவேற்கப்பட்டது என்றே கூறலாம். ஆனால், அவ் வாணிகம் கட்டுக்கடங்காத ஒன்றாகப் பெருகிவிடாமல் கண்காணிக்கும் பொறுப்பினை உள்துறை அரசாங்கமும் பேரரசின் ஆதிக்கமும் ஏற்றுக்கொண்டிருந்தன. உள்துறை அரசாங்கம் தம்முடைய வாணிகர்கள், உழவர்கள் ஆகியோருடைய நலத்தைப் பேணிக் காப்பதற்காக அயல்நாட்டுக் கம்பெனியைச் சேர்ந்த ஊழியர்கள் செய்யும் தனிப்பட்ட வாணிகத்தின்மூலம் நாட்டைச் சுரண்டிவிடாமல் கண்காணித்துவந்தது. முகலாயப் பேரரசு பாரசீகர்கள், மராட்டியர்கள், ஆப்கானியர்கள் ஆகியோரால் தொடர்ந்து தாக்கப்பட்டபோதிலும், அதனுடைய ஆதிக்கத்தினை நாட்டிலுள்ள பல்வேறு சக்திகளும் மதித்துப் போற்றிவந்தன. நவாபின் அறியமுடியாத அதிகாரமும், 1717ஆம் ஆண்டில் வழங்கப்பட்ட வாணிக உரிமைகளும், கம்பெனி ஊழியர்களின் தனிப்பட்ட வாணிகச் செயல்முறைகளை நேர்மையான வழியில் நடைபெறுமாறு கட்டுப்படுத்தி வந்தன. 1757ஆம் ஆண்டு நடைபெற்ற நிகழ்ச்சிகள் அவ் வாணிகச் சூழ்நிலையை அடியோடு மாற்றிவிட்டன. ஓயாது உழைத்துக்கொண்டிருந்த வாணிகர்கள் திடீரென்று வங்காளத்தின் அரசியலில், நடுநிலைத் தீர்ப்பாளர்களாக மாறியமை மலைப்பினை உண்டாக்கிற்று; இதற்கு முன்பே இழப்பினாலும் மதிப்பற்ற தன்மையினாலும் வருந்திக்கொண்டிருந்த சமநிலையற்ற மனிதர்கள், நலிவு நீங்கியவர்களாய்ச் செழிப்புற்று விளங்கத் தொடங்கினர். இதுவரை இருந்துவந்த இரண்டு வகையான கட்டுப்பாடுகளும் ஒரே

சமயத்தில் நீக்கப்பட்டன. பிரிட்டிஷாரின் செயல்முறைகளை ஒழுங்குபடுத்துபவராக இல்லாமல், பிரிட்டிஷாரின் ஆதரவைப் பெறுவதற்கு விண்ணப்பம் செய்யும் நிலையினை நவாபு அடைந்துவிட்டார். மராட்டியருக்கும் ஆப்கானியருக்கும் இடையே நடைபெற்ற போராட்டத்திஞல் பேரரசின் ஆட்சி கரைந்துபோயிற்று. அதன் விளைவாகத் தப்பியோடிய அரசிளங்குமரன், அதைப் பிற்காலத்தில் உயிர்ப்பிக்க வேண்டிய நெருக்கடி உண்டாயிற்று. வாணிகர்கள் இன்னும் வாணிகர்களாகவே இருந்தனர்; இதுவரையில் கனவில்கூடக் கண்டறியாத பெருஞ் செல்வத்தைப் பெறுவதற்குரிய வாயில்கள் பல அவர்களுக்கு முன்ஞல் திறந்துகிடப்பதைக் கண்டனர். அவர்களிடத்து நேர்மையைக் கடைப்பிடிப்பதற்கு இன்றியமையாத மனவடக்கமாகிய போதுமென்னும் மனம் இல்லாமற்போயிற்று. அவர்கள் விதிவிலக்கான வகையில் தீமை மிகுந்தவர்களாகவோ, இயல்பிற்கு மாருன வகையில் பலவீனம் உடையவர்களாகவோ இருக்கவில்லை. ஆஞல், அவர்கள் இதுவரை அறிந்திராத, ஆஞல், இப்பொழுது அவர்களைச் சுற்றிலும் சூழ்ந்துகொண்டு ஆசைகளை ஊட்டும் சூழ்நிலைக்குள் மூழ்கிக் கிடந்தனர்.

1757ஆம் ஆண்டு மீர்ஜாஃபரோடு உடன்படிக்கை செய்துகொள்ளுவதற்காகக் கிளைவே முனைந்து நின்ருர். பிளாசிப் போருக்கு முன்பு அதிகாரப்படி அளிக்கப்படும் இழப்பீட்டோடு, படைகளுக்கென்று ஆண்டுதோறும் 400,000 பவுன்கள் அளிப்பதென்றும், ஆறு உறுப்பினர்களைக்கொண்ட தேர்வுக் குழுவினருக்கு 150,000 பவுன்கள் அளிப்பதென்றும் தனிப்பட்ட வகையில் ஒப்புக்கொள்ளப்பட்டது. மன்றத்தின் உறுப்பினர்கள் ஒவ்வொருவரும் 50,000 முதல் 80,000 பவுன்கள் வரையில் பெற்றனர். அவை எல்லாம் சேர்ந்து கிளைவ்மட்டும் 234,000 பவுன்கள் பெற்ருர். இதற்குமேல், பேரரசின் பிரபு ஒருவருக்கு உரிய மதிப்பினை நிலைநாட்டுவதற்காகத் தமக்கு ஆண்டிற்கு 30,000 பவுன்கள் வருவாயுள்ள மானியம் ஒன்றை அவரே வேண்டிப் பெற்ருர். (கிளைவினை பிரபுவாக்குமாறு மீர்ஜாஃபர் பேரரசரிடம் பரிந்துரைத்தார் என்பதை முன்பு நாம் கண்டோம்.) இம் மானியங்களே கிளைவினைத் 'தாம் எவ்வளவு நடுத்தரமான நிலையிலிருந்தும் பெருஞ் செல்வத்தைப் பெற்றுவிட்டோமே' என்று வியப்படையுமாறு செய்தது. நவாபினுடைய கருவூலத்தில் 400 இலட்சம் பவுன்கள் இருப்பதாகக் கூறப்பட்ட கருத்திற்கு மாருக பதினைந்து லட்சமே இருப்பதைக் கண்ட பிறகும், கம்பெனியார்

தங்களுக்குச் செலுத்துமாறு முன்பு அறிவித்த தொகையில் சிறிதும் குறைத்துக்கொள்ளவில்லை. மீர்ஜா:.பர் செலுத் தாத நிலுவைத் தொகையைத் தாம் செலுத்திவிடுவதாக மீர் காசிம் உறுதிமொழி அளித்ததனுல், அவர் கல்கத்தாவின் ஆதரவைப் பெற்றூர். அவர் கம்பெனியின் மன்றத்திற்கு மேலும் ஒரு 200,000 பவுன்களைத் தந்தார். நாசிம்-உத்-தௌலா மன்றத்திற்கு மற்ருெரு 139,000 பவுன்களைச் செலுத்துமாறு வற்புறுத்தப்பட்டார். மேலிடத்திலேயே இத் தகைய எடுத்துக்காட்டுகள் அமைந்தமையால், சிறிய மனிதர்கள் விரைவிலே பெருஞ் செல்வத்தை ஈட்டுவதற்காகப் போராடிக்கொண்டு இருந்தனர். மிக எளிய மனிதர்களிட மிருந்து மிகவும் அடக்கமான பரிசுகளைப் பெறும் வழியை அவர்கள் முதலில் கடைப்பிடிக்கலாயினர். மிகவும் சிறப்பு மிக்கதாகக் கருதப்பட்டவை, உள்நாட்டு வாணிகப் பிரதி நிதிகள் பதவிகளாகும். அவற்றுள் மூர்ஷிதாபாத்தின் துணைக் காப்பரசின் ஆளுநர் பதவியும், பாட்னுவில் இருந்த தொழிற் சாலையின் தலைமைப் பதவியும் போன்றவை சிறப்புமிக்கதாகக் கருதப்பட்டன. இங்குச் செல்வர்களுள் பெரும்பாலோர், தம் முடைய செல்வத்தை ஊழல்மிக்க வகையில் பயன்படுத்திக் கொள்ளுவதற்குரிய ஆற்றல்மிக்க ஊக்கிகளையுடையவர்க ளாக இருந்தனர். ஆனுல், கம்பெனியின் புதிய அதிகாரம், கம்பெனியின் ஊழியர்கள் செய்துள்ள உதவிக்காகப் பரிசு களைப் பெறவில்லையென்ருலும், இனிமேல் செய்யப்போகும் உதவிகளுக்காகவும், காட்டப்போகும் சலுகைகளுக்காகவும் முன்கூட்டியே பரிசுகளைப் பெறுமாறு தூண்டியது. நாட்டின் உள்நாட்டு வாணிகத்தில் தனிப்பட்ட வகையில் கலந்து கொள்ளுமாறு உரிமையளித்தமை இரண்டாவது முறை யாகும். கம்பெனி ஊழியர்கள் அளவற்ற ஆதாயத்தைப் பெற்று மகிழ்ந்தனர். எத்தகைய மூலதனத்தை வேண்டு மானுலும் பெறக்கூடியவர்களாகவும், மதராசிலும் ஆண்டு தோறும் 5,000—6,000 பவுன்கள் அளவில் செலவழித்து வளமாக வாழ்வதற்குரிய வாழ்க்கை வசதிகளையுடையவர்க ளாகவும் அவர்கள் வாழ்ந்தனர். மீர்ஜா:.பரோடு கிளைவ் உடன்படிக்கை செய்துகொண்டதன் விளைவாக இம்முறை பேராதாயம் தரக்கூடியது என்பது நடைமுறையில் மெய்ப்பிக் கப்பட்டது. இதனுல், கம்பெனி ஊழியர்கள் போரினுல் உண்டாகும் இன்னல்களைத் தவிர்க்கவும் தயாராக இருந் தனர்; கம்பெனியே நொடித்துப்போவதென்ருலும், அவர்கள் தங்களுடைய தனிப்பட்ட வாணிகத்தை நிறுத்திக்கொள்ளு வதற்குத் தயாராக இல்லை. இந்திய வாணிகர்களோடு

போட்டியிடும் இத் தனிப்பட்ட வாணிகத்திற்காகக் கம்பெனி ஊழியர்கள் சுங்க வரி செலுத்தவேண்டிய தேவை இல்லை என்று அறிவிக்கப்பட்டமை, அவர்களுக்குப் பேருதவி புரிந்தது. ஆனால், இந்திய வாணிகர்கள் பொருள்களின் மதிப்பீட்டிற்கேற்ப 40% விழுக்காடு சுங்கவரி செலுத்திவந்தனர். எனவே, குமாஸ்தாக்களின்மூலமோ, பிரதிநிதிகளின் மூலமோ தனிப்பட்ட வகையில் செய்யப்படும் வாணிகம் கம்பெனி ஊழியர்களுக்கு வளம் கொழிக்கும் ஊற்றாக அமைந்தது. உள்நாட்டு வாணிகத்தைத் தனிப்பட்ட வகையில் செய்வதற்கு உரிமையைப் பெற்றிருப்பதைப்போலவே, பிரிட்டிஷார் நீதி வழங்குவதும் தங்களுக்கேயுரிய தனியுரிமையாகக் கருதினர். மீர்காசிம் தம்முடைய கிராம ஆட்சித் தலைவர்களைக்கொண்டு ஒழுங்கை நிலைநாட்ட முயன்றார். கம்பெனி அவருடன் கொண்டிருந்த தொடர்பினை முறித்துக்கொண்டது அதனால் உண்டான முதல் விளைவாகும். நவாபினுடைய பிரதிநிதிகளை அடக்குவதற்குப் பாட்னாவிலிருந்த எல்லிஸ் துரை 500-க்கு மேற்பட்ட போர்வீரர்களைப் பயன்படுத்தவேண்டிய நெருக்கடி உண்டாயிற்று. மேலும், பேரளவில் ஆதாயம் தரக்கூடிய வாணிக ஒப்பந்தங்களைச் செயற்படுத்தவேண்டியிருந்தது. இவ்வாறு வாணிகப் பேராசை என்னும் தீபம் எதிர்பாராத வகையில் உண்டான வாய்ப்புகளால் ஏற்றப்பட்டது. அது பொறுப்பில்லாததும் கட்டுக்கடங்காததுமான அதிகாரம் என்னும் விசிறியினால் கொழுந்துவிட்டு எரியுமாறு செய்யப்பட்டது. அவ்வாறு தோன்றிய, அழிக்கும் ஆற்றல்வாய்ந்த தீக்கொழுந்தினை இங்கிலாந்திலிருந்து தீவிரமான தலையீட்டினால்தான் அவிக்கமுடியும் என்ற நிலை உண்டாயிற்று. காரன் வாலிஸின் ஆட்சிக் காலம்வரையில் அது திறமையுடன் தணிக்கப்படவில்லை. அதற்குப் பிறகு எழுபதாண்டுகள் வரையில்—பென்ட்டிங்கு பிரபுவின் ஆட்சிவரையில் அது நீறு பூத்த நெருப்பாகவே இருந்துவந்தது. மனிதர்கள் பெருஞ் செல்வத்தைச் சேர்த்துக்கொண்டதும் இங்கிலாந்திற்குத் திரும்பிச் சென்றனர்; இங்கிலாந்தில் அவற்றை இழந்ததும் அவர்கள் மீண்டும் பெரும் பொருள் தேட இந்தியாவிற்குச் சென்றனர். அக்காலத்திய ஆர்வத் துடிப்புமிக்க சூழ்நிலையைப்பற்றி ஓரளவிற்கு நாம் ஜேம்ஸ் ரன்னல் என்பவருடைய அச்சாகாத இதழ்களிலிருந்து அறியலாம். ஜேம்ஸ் ரன்னல் தம்முடைய இருபத்திரண்டாவது வயதில்—1764ஆம் ஆண்டில் வங்காளத்தின் நில மதிப்பீட்டுக் கழகத்தின் தலைவராக அமர்த்தப்பட்டார். அவருக்கு 900 பவுன்கள் படியாகக் கிடைத்தது. ஆண்டிற்குக் குறைந்தது 1,000 பவுன்கள்

மேல்வருமானமாகக் கிடைத்தது. நான் என்னுடைய நண்பர்களோடு கலந்து அளவளாவுவதற்கும், மதுவினை அருந்தி மகிழ்வதற்கும், வாழ்க்கைக்குத் தேவையான பிற பொருள்களை வாங்குவதற்கும் 400 பவுன்கள் போதுமானவை. மேலும், இந்தியாவில் செய்யப்படும் தனிப்பட்ட வாணிகத்தில் ஈடுபடுவேனுனல், பலவகை நன்மைகளை அடைவதோடு ஒரு பெரு முதலாகச் செல்வத்தைச் சேர்த்து மகிழவும் முடியும்! சில ஆண்டுகளுக்குள் 5,000—6,000 பவுன்களைக் கைப்பணமாகக் கொண்டு தாயகம் திரும்ப முடியும் என்று அவர் நம்பினுர். தகுதியான வாய்ப்பும் சூழ்நிலையும் அமையுமானுல், முப்பது முதல் நாற்பதாயிரம் பவுன்கள்வரை சேர்த்துக்கொண்டு தாயகம் திரும்பலாம் என்று அவர் கருதினுர். இத்தகைய சூழ்நிலை, கிளைவ் தாயகம் நோக்கித் திரும்பிய காலத்து நிலவியது. 1769ஆம் ஆண்டு அவர் ஆண்டிற்கு 170 பவுன்கள் ஓய்வூதியம் பெற்றுக்கொண்டு ஓய்வு பெறலாம் என்று எண்ணினுர். 1771ஆம் ஆண்டு அளவில், அவர் 'இனிமேல் இங்கிருக்கவேண்டியதில்லை; கூடாரத்தைச் சுருட்டிக்கொண்டு தாயகம் திரும்புவதே சாலவும் பொருந்தும்' என்று கருதினுர். ஆனுல், அவர் 1777ஆம் ஆண்டு, தன்னுடைய முப்பத்தைந் தாம் வயதில்தான் ஓய்வு பெற்றுர். அதிர்ச்சிமிக்க வாழ்க்கைகளும், அகமகிழ்ச்சியினுல் சிதைவுற்ற வாழ்க்கைகளும் இறப்பினுல் இடையிலே துண்டிக்கப்பட்டதற்குச் சிறப்புமிக்க சான்றுகக் கல்கத்தாவின் இடுகாடுகள் இருந்துவருகின்றன. ஆனுல், செல்வத்தை ஈட்டுவதன் பின்னணியாக அமைந்த தனிப்பட்ட சோகக் கதைகளை—கம்பெனி ஊழியத்தில் நீதியும் நேர்மையுமற்ற போக்கினை உண்டாக்கின சோகக் கதைகளையும், வங்காளத்தைப் பெருந் துன்பத்திற்கு ஆளாக்கின சோகக் கதைகளையும் நாம் மறைத்துவிடக்கூடாது.

1758ஆம் ஆண்டின் தொடக்கத்திலேயே இயக்குநர்கள், வங்காளம் செலுத்திவந்த தொகையின் மதிப்புக் குறைந்து வருவதைக் கண்டனர். உடனே கம்பெனியின் இயக்குநர்கள் அச்சமுற்றனர். 1760ஆம் ஆண்டில் நடைபெற்ற புரட்சியைப் பற்றி அதிகப்படியாகக் குற்றங்குறைகள் கூறப்பட்டுவந்தன. ஆனுல், புதிதாக முக்கியத்துவம் பெற்ற உரிமையாளர் மன்றத்தின் உறுப்பினர்களுக்கிடையே உட்பகை இருந்து வந்தமை இயக்குநர்களுடைய கைகளைப் பேரளவிற்குக் கட்டிப் போட்டுவிட்டது என்றே சொல்லலாம். இந்திய மாநிலங்களிலே வளம் கொழிப்பதாக நம்பப்பட்ட வங்காளத்தின் அமைதியான கம்பெனிக் கூட்டம் இப்பொழுது இறுதித் தீர்ப்

பாளர் குழுவின் நடுவராக மாறியது. பதவிப்பித்து பதவிக் காலத்தைப்பற்றிய உறுதிப்பாட்டைக் குலைத்தது. அதனால் கருத்து வேற்றுமையும் குழு மனப்பான்மையும் ஊழியர்களிடையே வளர்ந்துவரலாயிற்று. கம்பெனி யாரைக் கட்டுப்படுத்திவைப்பது இன்றியமையாதது என்று கருதியதோடு, அத்தகைய மனிதர்களே தங்களுடைய செல்வாக்கைப் பயன்படுத்தியும், தாங்கள் புதிதாகப் பெற்றுள்ள செல்வத்தைக் கொண்டும் கம்பெனியின் இருப்புகளையும், அதனுடன் தொடர்புடைய வாக்குரிமைகளையும் விலை கொடுத்து வாங்கினர். இவ் வளர்ச்சி அக்காலத்தில் கிளைவிற்கும் அவருடைய பழைய நண்பரான சலிவனுக்கும் இடையே கைகலப்பினை உண்டாக்கியது. கிளைவ் தாம் பெற்ற புதிய செல்வத்தைக்கொண்டு கம்பெனியினைக் கட்டுப்படுத்தும் ஆற்றலைப் பெற முயன்றார். இவ்வாறு கம்பெனியை அடக்கியாளும் ஆற்றலைப் பெற்ற பிறகு அதனுடைய ஆட்சிமுறையைத் திருத்தியமைக்கலாம் என்பது கிளைவினுடைய கருத்தாகும். ஆனால், அவருடைய பழைய நண்பரும், புதிய எதிரியுமான சலிவன் என்பவர் கம்பெனியின் பதவிகள் அனைத்தையும் தம்மைச் சார்ந்தோருக்கு விலை கொடுத்து வாங்கிக் கொடுப்பதன்மூலம் கம்பெனியை அடக்கியாளக் கருதினார். இவ்வாறு அவர்கள் இருவரும் பூசலிட்டுக்கொண்டனர். மீர் காசிம் பதவியிலிருந்து விரட்டப்பட்டமை அச்சத்தைமட்டுமல்லாமல், பெருந் திகைப்பையும் கம்பெனியாருக்கு உண்டாக்கிற்று. மீர் காசிம் பதவி இழந்தமையால், கம்பெனிக்குக் கிடைக்கக்கூடிய ஆதாயம் மட்டுமல்லாமல் கம்பெனியே வங்காளத்தில் நிலைபெற்றிருக்க இயலுமா என்னும் பிரச்சினையும் உண்டாயிற்று. இச் செய்தி ஆட்சியாளர் மன்றத்தில் கிளைவிற்கு எதிராக இருந்துவந்த உறுப்பினர்களை எல்லாம் அவர் வென்றுவிட்டார் என்னும் செய்தியோடு இணைந்து வெளிவந்தது. அதன் விளைவாக ஒவ்வொருவரும் ஊக்கத்தோடு செயலில் ஈடுபட்டனர். கிளைவ் (இப்பொழுது அயர்லாந்தின் நிலப் பிரபு) வங்காளத்தின் கவர்னராகவும் படைத்தலைவராகவும் பதவியில் அமர்த்தப்பட்டார். தேவை ஏற்பட்டால் நான்கு உறுப்பினர்களைக் கொண்ட தேர்வுக் குழுவிற்கும், ஆலோசனை மன்றத்திற்கும் தலைமை தாங்கிச் செயலாற்றுவதற்குரிய அதிகாரங்கள் அவருக்கு வழங்கப்பட்டன.[1] அதே சமயத்தில் கம்பெனி

[1] கர்னல் கர்னக்கும் (Carnac) ஹென்றி வெர்லஸ்ட்டும் இதற்கு முன்பே வங்காளத்தில் இருந்தனர். சம்னரும் (Sumner) சைக்கிசும் கிளைவுடன் கப்பலில் வந்தனர்.

ஊழியர்கள் பரிசுப் பொருள்களைப் பெறுவது கடுமையாகக் குறைக்கப்பட்டது. பொது நன்மையைக் கருத்தில் கொண்டு மிகப் பிற்பட்ட காலத்தில் நவாபிடமிருந்து கைப்பற்றப்பட்ட உப்பு, பாக்கு, புகையிலை ஆகியவற்றின் வாணிகத்தை ஒழுங்கு படுத்துவதற்கு—முறைப்படுத்துவதற்கு உரிய அதிகாரம் கவர்னருக்கு அளிக்கப்பட்டமையும் இங்குக் குறிப்பிடத்தக்க தாகும்.

1764ஆம் ஆண்டு ஜூன் மாதத்தில் கிளைவ் இங்கிலாந்தி லிருந்து கப்பலில் புறப்பட்டார். அவர் 1765ஆம் ஆண்டு, மே மாதம் மூன்றும் நாள் கல்கத்தாவை வந்தடைந்தார். இரண்டு நாட்களுக்குள் அவருடைய தேர்வுக் குழு உறுப்பினர் களைப் பதவியில் அமர்த்தினர். இவ்வாறு அவர் குறிப்பிடத் தக்க ஊக்கத்துடன் தம்முடைய இரண்டாவது ஆட்சிக் காலத் தைத் தொடங்கினர். அரசியல் விரகர் என்னும் பொன்ருப் புகழினை அவர் பெறுவதற்குக் காரணமாக இருந்தது அவரது இரண்டாவது ஆட்சிக்காலமேயாகும். திருட்டு வேட்டையாடு பவர் ஊக்கத்தை இழக்காமலேயே, சூழ்ச்சி முறையைக் கைவிடாமலேயே வேட்டைக் காட்டைப் பாதுகாப்பவரானர். அத் தருணத்தில் அவர் அசைக்க முடியாத பேரதிகாரம் உடையவராக விளங்கினர். எத்தகைய கட்டுப்பாடும் இல்லா விட்டால் ஆர்வமும் பேராசையும் எவற்றைச் சாதிக்க முடியுமோ, அவற்றை அவருடைய முதலாவது கவர்னர் பதவி ஆட்சிக் காலத்தில் கிளைவ் சாதித்தார். அதைப்போன்றே தாயகத்து அதிகாரிகளும், உள்நாட்டு அதிகாரிகளும் உடன்பட்டு ஒத்துழைக்கின்றபொழுது பொதுத்தொண்டாற்றுவதில் ஆர்வமும் ஈடுபாடும் கொண்டவர்கள் எவற்றைச் சாதிக்க முடியுமோ, அவற்றை இரண்டாவது முறை கவர்னராக ஆட்சி புரிந்தபொழுது கிளைவ் சாதித்துக் காட்டினர்.

கிளைவ் கல்கத்தாவிற்கு வந்ததும், தம்மைப் பதவியில் மீண்டும் அமர்த்துவதற்குக் காரணமாக இருந்த நெருக்கடி நிலை மாறிவிட்டதை உணர்ந்தார். பக்சார் போர், பேரரசினல் உண்டாகக்கூடிய இடர்ப்பாட்டை நீக்கியது. ஆனல், அது பேரரசால் உண்டான பிரச்சினைக்கு ஒரு முடிவைக் காண வில்லை. வான்சிட்டார்ட் பேரரசருக்கு அயோத்தியை அளிப்ப தாக உறுதிமொழி அளித்திருந்தார். ஆனல், ஷுஜா-உத்-தௌலா பேரவாக் கொண்டிருந்தார்; அலகாபாத்தின் தலை விதி இன்னும் உறுதி செய்யப்படவில்லை. தம்முடைய தந்தை ஜாஃபருக்குப் பிறகு நாசிம்-உத்-தௌலா பட்டத்திற்கு

வந்தார். ஆனால், கம்பெனியார் வருவாய்த்துறை ஆட்சியைத் தாங்களே எடுத்துக்கொண்டனர். அதைக் கண்காணிப்பதற்கு அவர்கள் முகமது ரசா கான் என்பவரை உதவி நவாபாகப் பதவியில் அமர்த்தினர். கல்கத்தாவிலிருந்து தில்லி ஆற்றிடைவெளிவரையில் கம்பெனியின் படைகளை எதிர்த்து முன்னேறவொட்டாமல் தடுத்து நிறுத்துவார் யாருமே இல்லை. படையெடுப்பாளர்களை எதிர்த்துப் போரிடக்கூடியவர்கள் கம்பெனியாரைத் தவிர அன்றைய இந்தியாவில் வேறு யாருமில்லை என்றே கூறலாம். ஆயினும், எல்லா வகையான போராற்றலையும் பெருந்திறனையும் தனக்கேயுரியதாகப் பெற்றிருந்த கம்பெனி, இன்னும் ஒரு வாணிகக் கூட்டுக் கழகமாகவே இருந்துவந்தது. அது கல்கத்தாவையும் அதைச் சார்ந்திருந்த மற்ற மூன்று மாவட்டங்களையுமே நேரடியாகக் கண்காணித்துவந்தது. கிளைவினுடைய அயல்நாட்டுக் கொள்கையைப்பற்றி முதலில் ஆராய்ந்து, அதன் பின்னர் வங்காளத்தின் நிலத்தீர்வை நிர்ணயத்தைப்பற்றியும், இறுதியாகக் கம்பெனி பணித்துறைகளில் கிளைவ் செய்த சீர்திருத்தங்களைப் பற்றியும் காணலாம்.

கிளைவ் முதன்முதலில் செய்த முடிவானது, மற்ற எல்லாவற்றையும் காட்டிலும் செயலாற்றுவதற்கு மிகவும் கடினமானதாக இருந்தது. எங்கே நிறுத்திக்கொள்ளுவது என்பதைப்பற்றி அவர் முதலில் முடிவு செய்யவேண்டிய நெருக்கடி உண்டாயிற்று. அச்சமயத்தில் கண்ணுக்குப் புலனாகக்கூடிய வரம்பினையுடையதாக பிரிட்டிஷாரின் போராற்றல் விளங்கவில்லை. அவர் தில்லியின்மீது படையெடுத்துச் சென்று, ஷா ஆலத்தினை அரசப் பதவியிலிருந்து விரட்டியடித்து இருக்கலாம். அதன்பிறகு கம்பெனிக்கு 'மன்னர் பேராட்சியாளர்' (regent) அதிகாரத்தைக் கைப்பற்றியிருக்கலாம்; [பிற்காலத்தில் இந்தியா மன்னர் பேராட்சியாளர் (vakil-i-matlaq) பட்டத்தை வகித்தமை இங்குக் குறிப்பிடத்தக்கதாகும்.] அல்லது அமைச்சர் என்னும் பட்டத்தை வகித்திருக்கலாம். இவ்வாறெல்லாம் கிளைவ் செய்திருப்பாரானால், அவரைத் தடுத்து நிறுத்துவதற்குரிய ஆற்றல் உடையவர்கள் யாருமே இருந்திருக்கமாட்டார்கள். இத்தகைய செயல்களில் ஈடுபடுமாறு அவரைத் தூண்டியவர்களும் அக்காலத்தில் இல்லாமலில்லை. ஆனால், இத்தகைய குறுக்கு வழியில் பேரரசை நிறுவ முயன்றால், அது எளிதில் நிலைத்து நிற்காததோடு விரைவில் அழிந்துவிடலாம் என்று அவர் கருதினர். உண்மையிலேயே அவர் தில்லியின்மீது படையெடுத்துச் சென்றிருக்கலாம்.

ஆனால், கங்கைச் சமவெளி மக்களைக் காட்டிலும் பஞ்சாபைச் சேர்ந்த சீக்கியர்களும், ரோகில்லர்களுடைய உதவியைப் பெற்ற நாசிப்-உத்-தௌலாவும் கிளைவைக் கடுமையாக எதிர்த்துப் போரிட்டிருக்கலாம். அதைப்போன்றே பரத்பூரைச் சார்ந்த ஜாத்துகளும், தக்கணத்தைச் சேர்ந்த மராட்டியர்களும் அவரை எதிர்த்துக் கடும்போர் புரிந்திருக்கலாம். அதன் விளைவாகக் கிளைவின் திட்டங்களைச் செயற்படுத்துவதில் தடையோ, காலதாமதமோ, பேரழிவோ உண்டாகியிருக்கலாம். ஒரு மனிதன் வாழ்நாள் முழுவதும் ஓயாது ஒழியாது உள்ள ஊக்கத்துடனும் சுறுசுறுப்புடனும் செயலாற்றியமையும், கம்பெனியினால் பெரும்பாலும் பொறுத்துக்கொள்ள முடியாத பொருட் செலவும் கிளைவிற்கு வெற்றியைத் தேடித் தந்திருக்கலாம். அதன் பிறகு கல்கத்தாவை நிலைக்களனாகக் கொண்ட வாணிகப் பேரரசாக விளங்கியிருக்கலாம். ஆனால், அது எந்நேரமும் தக்கணத்தின் அரசியலிலும், வடமேற்கு எல்லைப் பகுதியின் அரசியலிலும் கருத்தைச் செலுத்திக் கொண்டிருக்கும் வட இந்திய அரசாக விளங்கியிருக்கலாம். கம்பெனியின் செல்வாக்கினைப் பழைய மாவட்டங்களாகிய வங்காளம், பீகார்வரையிலேயே கட்டுப்படுத்தி நிறுத்திக் கொள்ளுவதென்று கிளைவ் மதிநுட்பத்தோடு முடிவு செய்தார். அயோத்தியினைக் கம்பெனிக்கும் மராட்டியர்களுக்கும் இடைப்பட்ட தாக்குதலைத் தடுக்கும் நாடாக அவர் விட்டுவைத்தார். வடக்கேயிருந்து படையெடுத்துவரும் படையெடுப்பாளர்களும் நேரடியாகக் கம்பெனியின் ஆட்சிக்குட்பட்ட வங்காளத்தையும் பீகாரையும் தாக்காமல் தடுப்பதற்கு அயோத்தி ஒரு சிறந்த கருவியாகப் பயன்படுத்தப்பட்டது. இதனால் பேரரசருக்குத் தீர்க்க முடியாத பெரும் பிரச்சினைகள் உண்டாயின. தில்லிக்குப் பேரரசர் திரும்பிவருவதை கிளைவ் ஆதரிக்க முடியாமற்போயிற்று. ஆனால், அவரை முற்றிலும் கைவிட்டு விட்டால் கம்பெனி அவரிடமிருந்து சட்டப்படி பெற விரும்பிய உரிமைகளின் ஆதிக்கம் அனைத்தையும் அறுத்தெறிவதாக முடியும். பதினேழு ஆண்டுகளுக்குப் பின்னர் ஓர் ஆங்கிலேயப் பிரதிநிதி, 'நான் ஷாவின் அதிகாரத்தை எடுத்துக்கொள்ளுகிறேன்' என்று எழுதினார். 'ஆற்றல்மிக்க சக்தி ஒன்றினால் போற்றி ஆதரிக்கப்பட்டால் அவ்வதிகாரம் இங்கிலாந்தின் பாராளுமன்றத்தில் இயற்றப்படும் சட்டத்தைப்போன்று மிக முக்கியத்துவம் வாய்ந்ததாக இருக்கும்'[1] என்று அவர் எழுதி

[1] தில்லி நடைமுறை நிகழ்ச்சிகளின் நினைவுக் குறிப்பு—மேஜர் பிரவுன் தொகுத்தது; இந்திய அலுவலகம், உள்நாட்டுச் செய்தித் திரட்டு வரிசை, தொகுதி 336.

யுள்ளமை இங்குக் குறிப்பிடத்தக்கதாகும். பேரரசு முழுவதிலும் அவ்வதிகாரத்தைக் கிளைவ் பரவுமாறு செய்ய முடியவில்லையென்றால், வங்காளத்தில் அவ்வதிகாரத்தை அவர் புறக்கணிக்க வேண்டாமென்று தடுத்து நிறுத்த முடியாமல் போய்விடும். இதற்கேற்ப, அயோத்தியின்மீது பேரரசர் நேரடியாகக் கொண்டிருந்த உரிமைகளை ஆங்கிலேயர் ஆதரிக்க மறுத்தனர். ஆனல், அவருக்குக் கோரா (Kora) மாவட்டமும், அலகாபாத் மாவட்டமும் ஆங்கிலேயர்களால் அளிக்கப் பட்டன. அதனுடன் இருபத்தாறு இலட்சங்கள் திறைப் பொருளாக அல்லது உதவித் தொகையாகக் கொடுக்கப் பட்டது. அதற்குக் கைம்மாருக ஷா ஆலம் வங்காளத்தின் திவானி (diwani) என்று கம்பெனிக்குப் பட்டம் வழங்கிஞர். ஷுஜா-உத்-தௌலா இழப்பீட்டுத் தொகையாக ஐம்பது இலட்சங்கள் கொடுத்தவுடன், அவருக்கு அயோத்தி திரும்ப வழங்கப்பெற்றது. மேலும், ஒரு தற்காப்பு உடன்படிக்கையை ஆங்கிலேயரும் ஷுஜா-உத்-தௌலாவும் செய்துகொண்டனர். அவருடைய தற்காப்பிற்குத் தேவையான ஆங்கிலேயப் படைகளை அயோத்தியில் வைத்துக் காத்துவருவதற்குரிய செலவினை அவரே ஏற்றுக்கொள்ளவேண்டும் என்றும், அப்படி ஏற்றுக்கொண்டால் அவருக்குத் தேவையான தற்காப்பு வழங்கப்படும் என்றும் உடன்படிக்கை செய்துகொண்டனர். மராட்டியர்களுடைய தாக்குதலைக் கருத்திலே கொண்டிருந்த ஷுஜாவிற்கு இவ்வுடன்படிக்கை மிகவும் பொருத்தமாகத் தோன்றியது. ஆனல், காலப்போக்கில் தான் பகைவர்களாகக் கருதியவர்களைக்காட்டிலும் இப்புதிய நண்பர்கள் முடிவில் மிகக் கொடிய பகைவர்களாக மாறக்கூடும் என்பதை அவர் சிறிதும் எதிர்பார்க்கவே இல்லை. இந்திய அரசர்கள் தங்கள் பகைவர்களிடமிருந்து தங்களைக் காப்பாற்றிக் கொள்ளுவதற்காகத் தங்களைக் கம்பெனியாரின் சிலந்திக் கூண்டில் சிக்கிக்கொள்ளுமாறு செய்துவந்த முறையிலிருந்து தங்களைத் தாங்களே காப்பாற்றிக்கொள்ளுவதற்குப் பிற்காலத்தில் வெல்லஸ்லி பிரபு ஒரு முறையினைக் கையாண்டார். அம்முறையினுக்கு இவ்வுடன்படிக்கை நல்லதொரு முன்மாதிரியாக அமைந்தது எனலாம்.

அடுத்து நாம் வங்காளத்தின் நிலத்தீர்வை நிர்ணயத்தைப் பார்க்கலாம். 'திவானி'யை ஆங்கிலேயர்களைப் பெற்றுக் கொள்ளுமாறு வழங்கப்பட்ட உரிமை, நிஜாம்-உத்-தௌலா வோடு நிலவரியைப் பெறுவதைப்பற்றி ஓர் ஒழுங்குமுறையை உண்டாக்கியது. அதனுடன் வங்காளத்தினை நேரடியாகக்

கம்பெனி ஆட்சிபுரிவதன் முதற்பெரு நிலையை வரையறுத்தது எனலாம். இவ்வாட்சிமுறையின் உட்பொருளை அறிவதற்கும், பிற்காலத்தில் உண்டான வளர்ச்சியைத் தெளிவாகப் புரிந்துகொள்ளுவதற்கும் நாம் ஓரளவிற்கு மொகலாயர்களுடைய ஆட்சிமுறையின் அடிப்படைக் கொள்கைகள் சிலவற்றை விளக்கமாக எடுத்துரைப்பது இன்றியமையாததாகும். மொகலாய அரசினுடைய அதிகாரம் கொள்கையளவில் இரு வகையாகப் பாகுபடுத்தப்பட்டிருந்தது. 'திவானி' (diwani) என்பது ஒருவகை அதிகாரமாகும். நிலவரியினைத் தண்டும் உரிமையும், நாட்டிலே பொது நீதியை நிலைநாட்டுவதும் இவ்வதிகாரத்தின்பாற்பட்டதாகும். மற்றொன்று நிஸாமத் (nizamat) என்பதாகும். படைகளுக்குத் தலைமை தாங்கி நடத்தலும், குற்றத்துறையில் நீதியை நிலைநாட்டுவதும் இவ்வதிகாரமாகும். அக்பரின் காலம் முதற்கொண்டு இவ்வதிகாரங்களை வேறுபட்ட அதிகாரிகளிடத்து ஒப்படைப்பதும், அவர்களை அடிக்கடி ஒரு மாநிலத்திலிருந்து மற்றொரு மாநிலத்திற்கு மாற்றுவதும் மொகலாயர்களுடைய வழக்கமாக இருந்துவந்தது. அவுரங்கசீப்பினுடைய ஆட்சியின் பிற்காலத்திலிருந்து ஆளுநர்களாகிய அரசப் பிரதிநிதிகள் நிலையாக ஓரிடத்திலேயே பதவியிலிருந்துவருமாறு விடப்பட்டனர். அதுமட்டுமல்லாமல் தகப்பனுக்குப் பிறகு அவனுடைய மகன், அப்பதவிக்கு வருகின்ற வழக்காறும் தோன்றியது. இத்தகைய வளர்ச்சிமுறை விரைவிலே 'திவானி' என்னும் அதிகாரத்தையும், 'நிஸாமத்' என்னும் அதிகாரத்தையும் ஓரதிகாரியின் கையிலே கொண்டுவந்து சேர்த்தது. இதனால் அரசப்பிரதிநிதி ஒருவரிடமே நாட்டாட்சிக்குரிய எல்லா அதிகாரமும் சென்று குவிந்ததைக் காணுகின்றோம். அலிவர்தி கான் இத்தகைய இரு சிறப்புரிமைகளையும் பெற்று மகிழ்ந்தார். அவருக்குப் பின்வந்த அதிகாரிகள் எல்லாரும் இவ்விருவகை அதிகாரங்களையும் ஒருங்கே பெற்றவர்களாகப் பேராற்றலுடன் விளங்கினார்கள். இதனால்தான் அவர்கள் மூன்று மாநிலங்களையும் தாங்களே ஆட்சிபுரிகின்ற தனி அரசர்களாகக் கம்பெனியாருக்குத் தோன்றினர். அலகாபாத் உடன்படிக்கையின்படி கம்பெனியார் திவானி உரிமையைப் பெற்றதை முன்பு கண்டோம். எனவே, கம்பெனியார் மொகலாயப் பேரரசரின் 'திவான்களாக' மாறினர். நிலவரியைத் தண்டுவதற்கும் நீதி வழங்குவதற்கும் உரிய உரிமைகளை இதனால் கம்பெனியார் பெற்றனர். 'நிஸாமத்' அதிகாரம் பெயரளவில் நவாபினுடையதாக இருந்துவந்தது. ஆனால், உடன்படிக்கையின்படி நவாபு அவ்வதிகாரத்தைச் செயற்படுத்தும் உரிமையைக்

கம்பெனியார் குறிப்பிட்ட ரஸா கானிடத்து (Reza Khan) ஒப்படைத்தனர். கம்பெனியார் தங்களுடைய 'திவானி' அதிகாரத்தைச் செயற்படுத்தும் 'திவான்' வேலையையும் அதே முகமது ரஸா கானிடம் ஒப்படைத்தனர். இவ்வாறு ரஸா கான் நிலவரியைத் தண்டும் கடமையைச் செய்கின்ற பொழுது கம்பெனியாரின் பிரதிநிதியாகவும், படைகளைக் கண்காணிப்பதையும் குற்றவியல் நீதியை நிலைநாட்டுவதையும் செய்கின்றபொழுது நவாபின் பிரதிநிதியாகவும் காட்சியளித்தார். ஆனால், உண்மையில் அந்தப் பகுதியில் கம்பெனியே பேராற்றல் வாய்ந்த படைகளை உடையதாக இருந்தமையாலும், அப்படைகளைக் கண்காணிப்பதற்கு நவாபின் பிரதிநிதியை இவர்களே பதவியில் அமர்த்தியமையாலும் செயல் முறையில் அப் பகுதியின் முழுமையான ஆட்சிமுறைக்கு ஆங்கிலேயருடைய பிரதிநிதியாகவே விளங்கினார். இருவகைப் பொருளில் இம்முறை இரட்டை ஆட்சிமுறையாகத் தோன்றுகிறது. கொள்கையளவில் பேரரசரின் ஆதிக்கத்திற்குட்பட்டிருந்த அதிகாரத்தினை நவாபும் கம்பெனியாரும் தங்களுக்கு இடையே பங்கிட்டுக்கொண்டனர். ஆனால், செயல்முறையில் நாட்டாட்சியை ஆங்கிலேயக் கட்டுப்பாட்டு அதிகாரிகளும் இந்தியப் பிரதிநிதிகளும் பங்கிட்டுக்கொண்டதைக் காணுகின்றோம். இச் சிறப்புக் கூறே இரட்டை ஆட்சியின் அடிப்படைக் கொள்கையாக இருந்துவந்தது. ஏழாண்டுகளுக்குப் பிறகு இம் முறைக்கு ஹேஸ்டிங்ஸ் ஒரு முடிவு கண்டார். இந்தியப் பிரதிநிதி நேரடியாகக் கம்பெனியாருக்குக் கட்டுப்பட்டவராகவும், கம்பெனியார் தம் பிரதிநிதிக்காகப் பொறுப்பு ஏற்றுக்கொண்டவர்களாகவும் விளங்கியமை இம் முறையில் உண்டான ஒரு முன்னேற்றம் என்றே கூறலாம். கல்கத்தாவிலிருந்த ஆலோசனை மன்றத்தின் ஒருமைப்பாட்டையும் விழிப்புணர்ச்சியையும் பொறுத்தே எல்லா வகையான செயல் முறைகளும் அமைந்து இருந்தமையால் இம் முறை வீண்பழிகளுக்கெல்லாம் இடமளித்தது. பிற்காலத்தில் உண்டான மாறுதல்கள் பிரிட்டிஷார் நிலவரி தண்டுவதையும், நீதியை நிலைநாட்டுவதையும் பையப்பையத் தங்களுடைய பிரிட்டிஷ் பிரதிநிதிகளிடத்து ஒப்படைக்கத் தொடங்கியதனால் உண்டான விளைவுகளாகும். இரட்டை ஆட்சிமுறை என்பதை 'மறைமுக ஆட்சிமுறை' (Indirect System) என்று அழைத்தமை மிகப் பொருத்தமுடையதாகும். இம் மறைமுக ஆட்சிமுறை படிப்படியாக நேர்முக ஆட்சிமுறையாக மாற்றப்பட்டமை இங்குக் கருதத்தக்கதாகும்.

கம்பெனியின் உள்துறை ஆட்சியைச் சீர்திருத்துவதில் கிளைவ் பேரார்வம் காட்டினர். அவருடைய முந்தைய ஆட்சிக் காலத்தை நன்கு அறிந்தவர்கள் முதலில் இச் சீர்திருத்தம் எல்லாம் நெடுங்காலம் நிலைத்து நிற்காதென்றே கருதினர். ஏனென்றால், கிளைவ் தாம் முன்பு பேரளவிற்குத் தனிப்பட்ட வகையில் செல்வம் சேர்த்துக்கொண்டதைப்போன்று, இப்பொழுது கம்பெனி ஊழியர் யாருமே தனிப்பட்ட வகையில் செல்வத்தைச் சேர்க்கவொட்டாது தடுப்பதில் முரட்டுப் பிடிவாதமான கொள்கையைப் பின்பற்றினர். அதனல் கம்பெனி ஊழியர்கள் துன்புறுத்தப்பட்டதோடு, அவர்களிடையே மனக்கசப்பும் தோன்றியது. பரிசுப் பொருள்களைக் கம்பெனி ஊழியர்கள் பெறக்கூடாது என்பதை வெளிப்படையாக அவர் அறிவித்துவந்தார். பொது நன்மையைக் கருதி உள்நாட்டு வாணிகத்தை ஒழுங்குபடுத்துவதற்கும், கம்பெனி ஊழியர்கள் வாணிபம் செய்வதைத் தடுப்பதற்குமுரிய கம்பெனியின் அதிகாரத்தை பையப்பைய முன்னர் அழித்தொழித்தனர். ஆனல், இப்பொழுது கிளைவ் முதலில் கம்பெனியின் அவ்வதிகாரத்தை உறுதிப்படுத்தியதோடு, எல்லா ஊழியர்களும் அவ்வதிகாரத்திற்கு அடங்கிப்போகுமாறு வற்புறுத்தினர். கம்பெனியின் பொறுக்குக் குழுவிற்கு (select committee) முழு அதிகாரம் வழங்கப்பெற்றது. கம்பெனி ஊழியர்கள் அளித்த பதவி விலகல் விண்ணப்பங்கள் அனைத்தும் ஏற்றுக்கொள்ளப்பட்டன. சில ஊழியர்கள் பதவியிலிருந்து விலகுமாறு வற்புறுத்தப்பட்டனர். பதவி விலகலால் காலியான இடங்களுக்கு மதராசிலிருந்து ஆங்கிலேயர்கள் அழைக்கப்பட்டுப் பதவியில் அமர்த்தப்பட்டனர். இக் கட்டுப்பாட்டை மீறிய அதிகாரிகள் கிளைவின் ஆணைக்குக் கட்டுப்பட்டு நடப்பது அல்லது தாயகத்திற்குத் திரும்பிப்போவது ஆகிய இரு வழிகளைத் தவிர வேறு வழி ஒன்றுமில்லை என்பதை மிக விரைவிலே நன்குணர்ந்தனர். அடுத்து, பரிசுப் பொருள்களைப் பெறுவதைப்பற்றிய கட்டளைகள் செயற்படுத்தப்பட்டன. ஒவ்வோர் ஊழியனும் ஆயிரம் ரூபாய் மதிப்புள்ள பரிசுப் பொருள்களையும் அதற்கு மேற்பட்ட மதிப்புள்ள பரிசுப் பொருள்களையும் ஆலோசனைக் குழுவின் இசைவையும் அதனுடைய தலைவரின் இணக்கத்தையும் பெற்றே பெற்றுக் கொள்ள வேண்டும் என்றும், நாலாயிரம் ரூபாய்க்கு மேற்பட்ட மதிப்புடைய பரிசுப் பொருள்களைக் கம்பெனிக்குக் கொடுத்துவிட வேண்டும் என்றும் கிளைவ் ஒவ்வோர் ஊழியரிடத்தும் ஓர் உடன்படிக்கை செய்துகொண்டார். இவ்வுடன்படிக்கைக்குக் கட்டுப்பட்டு நடக்கிருர்களா என்பதையும் அவர்

கண்காணித்துவந்தார். உள்நாட்டு வாணிகம் பற்றிய சீர்திருத்தம் மிகக் கடுமையானதாக இருந்தது. கம்பெனி ஊழியர்களுக்கு அளிக்கப்பட்டுவந்த ஊதியம் மிகக் குறைந்த அளவினதாக இருந்ததும், அதைக்கொண்டே வாழ்க்கை நடத்துவது மிகவும் அரிய செயல் என்பதும் எல்லாரும் அறிந்த உண்மையாகும். தனிப்பட்ட வகையில் கம்பெனியின் ஊழியர்கள் வாணிகம் செய்வதற்குரிய உரிமையும், பரிசுப் பொருள்களைப் பெறும் உரிமையும் பறிக்கப்படுமானல், அவர்கள் வயிற்றுப் பிழைப்பிற்குத் தேவையான வருவாய் இல்லாமல் அல்லற்படுவர் என்பதையும் கிளைவ் அறிந்திருந் தார். இதனுல் எல்லாரும் தந்திரமாக இக் கட்டளைகளைக் கடைப்பிடிக்காது தப்பித்துக்கொள்ள முயல்வர். அதனுல், இறுதியில் முன்பிருந்த நிலையைக் காட்டிலும் மிகவும் சீர்கேடான அவலநிலையே உண்டாகும் என்பதையும் கிளைவ் அறிந்திருந்தார். எனவே, அவருக்கு ஒரேயொரு வழியிருப்ப தாகத் தோன்றியது. கம்பெனி ஊழியர்களின் தனிப்பட்ட வாணிகத்திற்குத் தடை விதிக்கின்றபொழுது, அவர்களுடைய ஊதியங்களைப் பேரளவிற்கு உயர்த்துவதைத் தவிர வேறு வழியில்லை என்ற முடிவிற்கு அவர் வந்தார். ஆனுல், ஊதி யத்தை உயர்த்துவதற்குக் கம்பெனியினுடைய இயக்குநர் களின் இசைவு தேவைப்பட்டது. கிளைவ் தம்மால் இயன்ற வரை முயன்று பார்த்தார். ஆனுல், கம்பெனியின் இயக்கு நர்கள் ஊதியத்தை உயர்த்திக் கொடுப்பதற்கு இசையவே இல்லை. எனினும், கிளைவ் எவ்வாருயினும் இந் நெருக்கடியைச் சமாளிப்பதென முடிவு செய்தார். தனிப்பட்ட வகையில் நடத்தப்படும் வாணிகத்தை முதலில் சட்டதிட்டங்களினுல் அவர் முறைப்படுத்திஞர். அதன் பிறகு அவர் ஒழுங்காக ஊதியம் அளிப்பதற்குத் திட்டமிட்டார். உப்பு உற்பத்தி முற்றுரிமையைக் கண்காணிப்பதற்குக் கிளைவ், வாணிகக் கழகம் ஒன்றை நிறுவினுர். இவ் உப்பு வாணிகத்திலிருந்து கம்பெனியின் ஊழியர்கள் அவரவர்களுடைய பதவிநிலைக் கேற்ப ஆதாயத்தைத் தத்தம் பங்காகப் பெற்றனர். இத் திட்டத்தினுல் ஆளுநர் (governor) 17,500 பவுன்களும், படைத் தலைவரும் ஆலோசனை மன்ற உறுப்பினரும் 7,000 பவுன் களும் ஆண்டுதோறும் ஊதியமாகப் பெறத் தொடங்கினர். மற்றவர்கள் அவரவர்களுடைய பதவிநிலைக்கேற்ற விழுக் காட்டில் ஊதியம் பெற்றனர். ஆனுல், இத் திட்டத்தைக் கம்பெனி இயக்குநர்கள் தங்கள் கட்டளைக்குக் கீழ்ப்படியாது செய்யப்படும் அடாத செயலென்றும், மற்ருெரு வகையாகக் கைக்கூலி வாங்கும் செயலென்றும் கருதினர். இரண்டு

ஆண்டுகளுக்குப் பிறகு இம்முறை கைவிடப்பட்டது. அம் மாநிலத்திலிருந்து வரும் நில வருவாயைக் கம்பெனி ஊழியர் களுக்குத் தரகாகக் கொடுக்கும் திட்டம் செயற்படுத்தப் பட்டது. இதனுல் பெரும்பாலான கம்பெனி அதிகாரிகள் முன்பு பெற்ற ஊதியத்தைவிட மிக அதிகமாகப் பெற லாயினர்.[1] இம்முறையினுல் மற்ெருரு குறைபாடு உண் டாயிற்று. ஆண்டுதோறும் அம் மாநிலத்திலிருந்து கிடைக்கும் நில வருவாய்க்கு ஏற்பவே கம்பெனி ஊழியர்களுக்குக் கிடைக்கக்கூடிய தரகு கூடுதலாகவோ குறைவாகவோ கிடைக்கலாயிற்று. இவ்வாறு ஏற்றத்தாழ்வு உண்டாவதைச் சீர்படுத்துவதற்கு வேறு வழியில்லாததால், மக்களைக் கசக்கிப் பிழிந்து நிலவரியைத் தண்டுவதற்குத் தூண்டுகோலாக இம் முறை அமைந்தது. இம்முறையோடு (கிளைவ் தாயகத்திற்குத் திரும்பிச் சென்றதற்குப் பின்னரேனும்) தனிப்பட்ட வகையில் வாணிகம் செய்வதில் கம்பெனி ஊழியர்கள் குறிப்பாக அனுமதி பெற்றுக் கள்ளத்தனமாக ஈடுபட்டமையும், மறை வாகப் பரிசுப் பொருள்களைப் பெற்றமையும் தொடர்ந்து நடைபெற்றுவருமாளுல் கம்பெனியின் பணித்துறை, நிதித் துறைச் சீர்திருத்தம் முழுமையுருது அரைகுறையாகவே இருந்துவரும் என்பதில் சிறிதும் ஐயமில்லை. இச் சீர்திருத்தத் திளுல் சீர்கேடுகளும் ஒழுங்கற்ற செயல்முறைகளும் பெரிதும் குறைக்கப்பட்டன. ஆளுல், அவை இன்னும் அடியோடு ஒழிக்கப்படவில்லை. எனவேதான், இருபதாண்டுகளுக்குப் பின்னர் வந்த காரன்வாலிஸ் இன்னும் எத்தனையோ சீர்திருத் தங்கள் செய்யவேண்டியிருப்பதைக் கண்டறிந்தார். கிளைவ் ஓரளவிற்குச் சீர்திருத்தம் செய்தும் அது முற்றிலும் வெற்றி பெருததற்குக் கம்பெனியின் இயக்குநர்களும் ஓரளவிற்குக் காரணமாவார்கள். ஏனெனில், கம்பெனியின் ஊழியர் களுடைய ஊதியத்தைப் போதிய அளவிற்கு உயர்த்தவேண்டு மென்று கொண்டுவரப்பட்ட தீர்மானத்தை அவர்களே மறுத்துத் தடையாணை விதித்தனர். அதனுடன் இரண்டு வகையான மாற்றுத் திட்டங்களில்—போதிய அளவிற்கு மன நிறைவை அளிக்க முடியாத திட்டத்தையே அவர்கள் மேற் கொள்ளச் செய்தனர். எனவேதான், கிளைவ் நிர்வாகத் துறையில் செய்த சீர்திருத்தங்கள் முழு வெற்றியளிக்காமல் போயின.

[1] Reports of the House of Commons, vol. iv, p. 460.

நிருவாகத்துறையில் செய்த சீர்திருத்தங்களைப் போன்றே படைத்துறையிலும் சீர்திருத்தங்கள் சிலவற்றைக் கிளைவ் துணிச்சலுடன் செய்தார். படைத்துறையினரின் படி (allowance) அளிக்கும் முறையில் அவர் செய்த சீர்திருத்தம் சிறப்புமிக்கதாகும். இத் துறையில் மிகவும் சீர்கேடான நிலைமை இருந்துவந்தது. இங்குச் செய்யவேண்டிய சீர் திருத்தம் ஒழுங்கற்ற முறையில் ஆதாயம் பெறுவதைத் தடுப்பதன்று. இதற்கு நேர்மாறான வகையில் நெடுங்கால மாகத் தொடர்ந்து நேர்மையற்ற வகையில் கொடுக்கப்பட்டு வந்த படைத்துறையினரின் மிகையான படியினைக் குறைப்ப தாகும். 'பேட்டா' (batta) என்று சொல்லப்படும் 'படி' சிறப்பாகச் செய்யப்படும் ஊழியத்திற்காக அளிக்கப்படுவ தாகும். முதன் முதலில் கோட்டையைப் பாதுகாக்கும் பணிக்குக் கொடுக்கப்பட்டதைவிட, போர்க்காலத்தில் படை வீரர்கள் போர்க்களத்தில் பணிபுரிகின்றபொழுது அதற்காகச் சிறப்பு வகையில் கொடுக்கப்பட்டதே இப் 'படி' ஆகும். எனவே, இது போர்க்காலத்தில் கூடுதலாகக் கொடுக்கப்பட்ட ஊதியம் என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது. சென்னையில் ஃபிரெஞ்சுக்காரர்களோடு போரிட்டபொழுது படி கொடுக்கும் வழக்கம் தொடங்கியது. பிரிட்டிஷ் படைகள் நவாபிற்கு உதவி யாகச் சென்றிருந்தபொழுது அவர் இவ்வகையில் உதவித் தொகை வழங்கிவந்தார். இவ் வழக்கம் மெல்ல வங்காளத் திலும் சென்று பரவியது. ஆனால், பகைமைகொண்ட நாடுகள் கம்பெனியின் கட்டுப்பாட்டின் கீழ் வந்தபொழுது, போரிடுவதற் காக இரட்டைப் படி (double batta) தொடர்ந்து வழங்கப் பட்டது. அது இப்பொழுது கோட்டைப் பாதுகாப்புக் கடமை யாக மாறிவிட்டது. எனவே, கிளைவ் பாளையக் குடியிருப்பு களில் தங்கியிருக்கும் அதிகாரிகளுக்கு அரைப் படியும், வங்காளத்திற்குள் போர்க்களப் பணியில் ஈடுபட்டிருந்தவர் களுக்கு முழுப் படியும், வங்காளத்திற்கு வெளியே சென் றிருந்த படைத்துறையைச் சேர்ந்தவர்களுக்கு இரட்டைப் படியும் பெறுவதற்கு அனுமதி அளித்தார்.[1] இதனால், அதிகாரிகள் கடுஞ் சீற்றங் கொண்டனர். படைத்துறையைச் சாராத அதிகாரிகளின் ஊதியத்தைக் காட்டிலும் தங்களுடைய ஊதியம் மிகக் குறைவாக நிர்ணயிக்கப்பட்டிருப்பதாக அவர்கள் வாதாடினர். மேலும், உயிர்வாழ்க்கைக்கு வேண்டிய உணவுப் பொருள்கள் அகவிலையாக விற்கின்ற இச் சமயத்தில்

[1] ஒரு படைத்துறைத் தலைவருக்கு (captain) முறையே ஒரு நாளைக்கு ரூ. 3, 6, 12 படியாகக் கொடுக்கப்பட்டது.

கம்பெனியின் படைத்துறையைச் சாராத அதிகாரிகள் எல்லாம் ஊதியத்தோடு தரகினைப் பெறுகின்றபொழுது படைத்துறையைச் சேர்ந்தவர்கள் பெரிதும் நெருக்கடியான நிலைக்கு நேர்மையற்ற முறையில் தள்ளப்பட்டதாகப் படைத் துறை அதிகாரிகள் குறைப்பட்டுக்கொண்டனர். படைப் பகுதித் துணைத் தலைவர்களுள் ஒருவரான சர் இராபர்ட் ஃபிளட்சர் தலைமையில் படைத்துறைக் கலகம் உண்டாகப் போவதற்குரிய சூழ்நிலைகள் உருவாயின. ‘வெள்ளைக்காரர் களின் கலகம்’ சிவில்துறை மக்களின் எதிர்ப்பைவிடக் கடுமையானதும் பேராபத்தானதுமாகும். ஆனால், அதையும் கிளைவ் தமக்கே சிறப்பாக வாய்க்கப்பெற்ற உள்ள உரத்துடன் எதிர்த்துச் சமாளித்தார். ஆனால், அதே சமயத்தில் மீர்ஜாஃபர் தமக்கு அன்பளிப்பாக வழங்கிய ஐந்து இலட்சம் ரூபாயை அவர் கம்பெனி ஊழியர்களின் நலத்தின்பொருட்டுச் செலவிட்டார். கம்பெனியின் பணித்துறையில் பணியாற்றும் அதிகாரிகள் ஓய்வுபெறும் காலத்திற்கு முன்னரே எதிர்பாரா வகையில் பணியிலிருந்து ஓய்வுபெறுமாறு கட்டாயப்படுத்தப் பட்டால் அவர்களுடைய தேவையை அறிந்து, அவர்களுக்கு உதவி செய்வதற்கென்று கிளைவ் தம்முடைய ஐந்து இலட்சம் ரூபாயைக்கொண்டு சேமநிதி ஒன்று நிறுவினார். இவ்வரும் பெருஞ் செயலே பிற்காலத்தில் வழங்கத் தொடங்கிய ஓய் வூதியத்திற்கு முன்னோடியாக அமைந்தது எனலாம்.

1767ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் கிளைவ் இரண்டாவது முறையாக கவர்னராகப் பணியாற்றிய பதவியிலிருந்து ஓய்வுபெற்றார். அவர் இந்தியாவைவிட்டுப் புறப்பட்ட பொழுது சட்டப்படி கம்பெனிக்கு உரியதாக ஓர் இராச்சி யத்தை நிறுவிவிட்டுச் சென்றார். அக்காலத்திய அரசுகளுள் ஒன்றுகூட அதைத் தாக்க முடியாத அளவிற்குப் பாதுகாப்பும் ஆற்றலும் உடையதாக அவர் அமைத்துவிட்டுச் சென்றார். பணிவுமிக்க படையொன்றைக் கம்பெனிக்குக் காவலாக அவர் விட்டுச் சென்றமையும் இங்குக் குறிப்பிடத்தக்கதாகும். மேலும், பண்புமிக்க படைத்துறையைச் சாராத ஆட்சி இயந் திரம் ஒன்றையும் அவர் செம்மையாக இயங்குமாறு அமைத் திருந்தார். அவர் ஊழலை அடியோடு ஒழித்துவிடவில்லை; அதைச் சிறிது அடக்கியொடுக்கினார். ஆனால், வங்காளத்தில் முதன்முதலாக ஒழுங்கும் உண்மையும் வாய்ந்த ஆட்சிமுறை அமைப்பினைச் செம்மையாக அமைப்பதற்குக் கிளைவ் அடி கோலினார். ஆயினும், அங்கு இன்னும் சீர்திருத்தி அமைக்க வேண்டிய கடமைகள் மிகப் பலவாக இருந்தன. எனினும்,

பதினெட்டாம் நூற்றாண்டின் அறுபதாம் ஆண்டுகளில் இருந்து வந்த குழப்பமும் கொந்தளிப்பும் மீண்டும் தலையெடுக்கவில்லை என்று கூறின் அது மிகையாகாது. அவர் தாயகத்திற்குத் திரும்பிச் சென்ற பிறகு இந்தியாவில் நிகழ்ந்த நிகழ்ச்சிகள் அவரால் எத்துணை அளவிற்கு இந்தியாவில் ஒழுங்கும் அமைதியும் நிலைநாட்டப்பட்டன என்பதை எடுத்துரைத்தன.

பெரிய மனிதர்களைப் பொதுவாகப் பின்தொடர்ந்து செல்லுகின்றது வஞ்சப் புகழ்ச்சி என்பர். அது கிளைவி னுடைய வரலாற்றிலும் பொய்த்துப்போகவில்லை. அவருடைய மாபெரும் சாதனையே அவருடைய புகழொளி மங்குவதற்குரிய முற்செயலாக அமைந்தது. 1772ஆம் ஆண்டில் கம்பெனி கடன் தீர்க்க வழியற்ற நிலையில் நொடிந்துபோகும் நெருக்கடி நிலையை அடைந்தது. அந்நிலையில் கம்பெனியார் கிளைவைப் பற்றிக் கூறிவந்த குறைகள் அனைத்தும் ஒன்றுசேர்ந்து குற்றச் சாட்டு என்னும் புயலாக வீசத் தொடங்கியது. உடனே இங்கிலாந்தின் பாராளுமன்றம் கம்பெனியின் சீர்கேட்டிற் குரிய காரணத்தை ஆராய்வதற்கு ஒரு குழுவினை நிறுவியது. அக் குழுவின் அறிக்கையினால் கிளைவ் முதன்முதல் ஆளுநராக இருந்த காலத்தில் செய்த செயல்களே கம்பெனியின் சீரழி விற்குக் காரணம் என்பதை நாட்டு மக்கள் எல்லாரும் அறிந் தனர். அதன் விளைவாக 1773ஆம் ஆண்டில் பர்கோய்னே (Burgoyne) என்பவர் பாராளுமன்றத்தில் கிளைவைத் தாக்கிப் பேசினார். ஆனால், அம் முயற்சி அடியோடு அழிந்துபோயிற்று. 'கிளைவ் பிரபு என்னும் அந்த இராபர்ட் அதே சமயத்தில் தம்முடைய தாய்நாட்டிற்காகச் சிறப்புமிக்க மாபெருந் தொண்டினை ஆற்றியிருக்கிறார்' என்னும் தீர்மானத்தைப் பாராளுமன்றம் ஒருமனதாக நிறைவேற்றியது. ஆயினும், பாராளுமன்றத்தில் குற்றம் சாட்டப்பெற்றதனால் கிளைவிற்குச் சொல்லொணாத அளவிற்கு மன வருத்தம் உண்டாயிற்று. அதனால் அடிக்கடி மனச்சோர்வடையும் பழக்கமுடைய கிளை விற்கு மானம் போன பிறகு வாழ்வதைவிடச் சாவதே சிறந்த தாகத் தோன்றியது. எனவே, 1774ஆம் ஆண்டு நவம்பர் இரண்டாம் நாள் அவர் தம்முயிரைத் தாமே மாய்த்துக் கொண்டார்.

ஒரு போர்வீரர், மாபெரும் அரசியல் வல்லுநராக மாறியவர் என்று கிளைவினைப் போற்றிப் பாராட்டுவது உலகறிந்த செய்தியாகும். உண்மையில் கிளைவ் மாண்புமிக்க அரசியல் வல்லுநருமன்று; அஞ்சா நெஞ்சம் படைத்த படை

வீரருமன்று. அவர் மக்களின் குறைகளையும் நிறைகளையும் நன்குணர்ந்து விரைவாக மாறுபட்டுக்கொண்டிருக்கும் இயல்புடைய மாபெரு மக்கள் தலைவராவார். இவ்வியல்பே அவருடைய பொன்றுப் புகழிற்குரிய காரணம் எனில் அது மிகையாகாது. அவர் 'குறிப்பிடத்தக்க சில முரட்டியல்பான ஆற்றலையும் சலியாத ஊக்கத்தையும் உடையவராக இருந்தார். அதனுல் அவர் பேரரசை நிறுவும் உண்மையான முன்னேடியாகப் பேரும் புகழும் பெற்ருர்' என்று இராபர்ட்ஸ் என்னும் வரலாற்ருசிரியர் மொழிந்துள்ளமை இங்குக் குறிப்பிடத்தக்கதாகும். மற்றவர்களிடையே ஊக்கத்தையும் ஆர்வத்தையும் ஊட்டும் அரிய பண்பாகிய நற்பேற்றையுடையவராகக் கிளைவ் விளங்கினர். அவர் சமயத்திற்கேற்பத் திறம்படச் செயலாற்றும் பெருந் திறமை வாய்க்கப்பெற்றிருந்தார்; எத்தகைய சூழ்நிலைகளிலும் மனம் தளராது விடாமுயற்சியுடன் பணியாற்றும் பேராற்றலை அவர் பெற்றிருந்தார். ஒரு செயலைச் செய்வதற்குரிய வழிகள் அவருக்கு அடிக்கடி முக்கியமற்றதாகத் தோன்றியபோதிலும், அச்செயலினுல் விளையக்கூடிய பயன் என்னவென்பதை அவருடைய கூர்த்தமதியினுல் தெளிவாகக் கண்டறியும் திறமையுடையவராக அவர் இருந்தார். பொதுவாக அவர் நேர்மையான, உண்மையுடைய மனிதராகவே இருந்தார். ஆனுல், அவருடைய உள்ளம் குறிப்பிட்ட ஒரு சமயத்தில் ஒரேயொரு பிரச்சினையைப்பற்றிச் சிந்திக்கக்கூடியதாக இருந்ததேயொழிய, ஒரே சமயத்தில் பல பிரச்சினைகளைப்பற்றியும் சிந்தித்து, சீர்தூக்கிப் பார்க்கும் பண்பற்றதாக இருந்தது. எனவே, அவருடைய உள்ளமும் அறிவும் ஒரு சமயத்தில் ஒன்றைப்பற்றி ஒரு கோணத்தில் காணக்கூடிய ஓரடிச்சுவடுடையதாகவே இருந்தது. மேலும், உடனடியான தேவைகளினுல் அவர் வகுத்துத் தந்த திட்டங்களில் காணப்படும் பொருத்தமற்ற போக்கினையும், குறைபாடுகளையும் காணவொட்டாதவாறு அவருடைய தன்முனைப்பான மனப்போக்குத் தடுத்தது எனலாம். நெருக்கடிகளைச் சமாளிப்பதற்குரிய வழிதுறைகளைக் கண்டுபிடிக்கும் மதிநுட்பமும், சர்வாதிகாரியாகச் செயலாற்றுவதற்குரிய அறிவாற்றலும் அவர் வாய்க்கப்பெற்றிருந்தார். அவரிடத்துப் பரந்த நோக்கங்களோ, வெற்றிபெற்றதைக் காப்பாற்றுவதற்கும் நிர்வகிப்பதற்கும் தேவையான நல்லதோர் அடிப்படையை நேர்மையான முறையில் அமைப்பதற்குரிய திறமையோ இல்லாமற்போயிற்று. ஆங்கிலேய வெற்றி வீரர்களுள் முதன்மையானவரும் மாண்புமிக்கவரும் கிளைவ் என்பதில் ஐயமில்லை. ஆனுல், அரசியல் சூழ்ச்சித்

திறமையை, அவருடைய மதிநுட்பம்மிக்க வழித்தோன்றலிடத்திலேயே நாம் நோக்க வேண்டும்.

## இருட்டறைத் துன்ப நிகழ்ச்சிபற்றிய குறிப்பு

இருட்டறைத் துன்ப நிகழ்ச்சியைப்பற்றிக் குறிப்பாகவே மூல நூலில் கூறப்பட்டது, அதைப்பற்றிய முழுக் கதையினை விரிவாக இங்கு விளக்குவதற்காகும்.

அந் நிகழ்ச்சியைப்பற்றிய கதைமரபினை V. Z. ஹால்வெல் என்பவர் விரிவாகச் சித்திரித்துள்ளார். கல்கத்தா கோட்டையை அச்சமயத்தில் காத்துவந்த படைப்பகுதிக்கு ஹால்வெல் தலைவராவார். அவரைத் தவிர அந் நிகழ்ச்சியைப் பற்றிய உண்மையை நம்பிக்கைக்குரிய வகையில் கூறுவோரில்லை. அந் நிகழ்ச்சி நடைபெற்று ஐம்பதாண்டுகள் கழியும் வரை அதனிடத்து யாரும் கருத்தைச் செலுத்தவில்லை. ஆனால், அதற்குப் பிறகு பிரிட்டானியப் பேரரசின் பழைய வரலாற்றைத் தொகுத்தவர்களுக்குச் சிறந்ததொரு வசதிமிக்க கருவியாக அந் நிகழ்ச்சி பயன்பட்டது. அந் நிகழ்ச்சிபற்றிய கருத்துகளின் வளர்ச்சியின் இடை மாறுபாட்டு நிலையினை H.H. வில்சன் என்பவர் எழுதியுள்ள 'இந்தியாவின் வரலாறு' (பதி. 1858), மூன்றும் தொகுதியில் பக்கம் 117—18-ல் பார்க்கலாம். அவர் மில்லின் (Mill) குறிப்புகளுக்கு விளக்கக் குறிப்பாக அதைப்பற்றி எழுதியுள்ளதில் காணலாம். காலப்போக்கில் இருட்டறைத் துன்ப நிகழ்ச்சி மிக முக்கியத்துவம் பெறலாயிற்று. இந்தியாவைப்பற்றி 'ஒவ்வொரு பள்ளிக்கூடத்து மாணவனும் அறிந்திருந்த' மூன்று செய்திகளுள்—நிகழ்ச்சிகளுள் ஈதொன்றாயிற்று. இருட்டறைத் துன்ப நிகழ்ச்சி, பிளாசிப் போர், சிப்பாய்க் கலகம் ஆகிய மூன்றும் ஒவ்வொரு பள்ளி மாணவனும் அறிந்திருந்த சிறப்புமிக்க நிகழ்ச்சிகளாகும்.

பல ஆண்டுகளாகவே இந் நிகழ்ச்சி சிராஜ்-உத்-தௌலா திட்டமிட்டுச் செய்த செயலன்று என்பதைப் பலரும் ஒப்புக் கொண்டுள்ளனர். அவருடைய பிரதிநிதிகளின் அறியாமையினாலும் பொறுப்பற்ற தன்மையினாலுமே இவ்வவல நிகழ்ச்சி நடைபெற்றதெனலாம். அவருடைய பிரதிநிதிகளின் பழி வாங்கும் மனப் பண்பினாலோ, துன்புறுத்த வேண்டும் என்னும் கொடுமை வாய்ந்த உள்ளத்தினாலோ நடைபெற்ற நிகழ்ச்சியன்று இது. உண்மை இவ்வாறிருப்பதால் நாம் அதை

வருந்தத்தக்க நிகழ்ச்சி என்று கருதவேண்டுமேயொழிய, திட்டமிட்டு வெளிப்படையாகச் செய்யப்பட்ட கொடுஞ் செயல் என்று நாம் அதைக் கருதக்கூடாது. இந் நிகழ்ச்சி உண்மையில் நடைபெற்றதே இல்லை என்று மெய்ப்பிக்க மேற்கொள்ளப்பட்ட முயற்சி நம்பத் தகுந்ததாகவோ, மன நிறைவை அளிப்பதாகவோ இல்லை. ஆயினும், ஹால்வெல்லி னுடைய விளக்கவுரையில் ஒரு பகுதியேனும் அவருடைய கற்பனையாற்றலால் எழுதப்பட்டது என்பதை நாம் ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும். கல்கத்தா கோட்டையைக் காத்துவந்த 123 வீரர்களின் நிலை என்னயிற்று என்பதற்குத் தக்க காரணத்தை நாம் கூறவேண்டியவர்களாக இருக்கின் றோம். அவர்கள் போரிலே இறந்தார்கள் என்பதற்குக் கிடைத்திருக்கின்ற சான்றுகளைக் காட்டிலும் இருட்டறைத் துன்ப நிகழ்ச்சியினுலேயே இறந்தார்கள் என்பதற்குக் கிடைத் திருக்கின்ற சான்றுகளே பேரளவினவாகவும் நம்பத்தகுந்தன வாகவும் உள்ளன. ஹால்வெல் விரிவாக விளக்கியுள்ள இருட்டறைத் துன்ப நிகழ்ச்சியைப் போன்ற ஏதோவொன்று நடைபெற்றிருக்க வேண்டுமென்பதே என்னுடைய முடிவாகும். ஆனல், அந் நிகழ்ச்சியைப்பற்றிக் குறிப்பிடப்படும் பல செய்திகளும், அந் நிகழ்ச்சியினுல் இறந்ததாகக் குறிப்பிடப் படும் வீரர்களின் எண்ணிக்கையும் உண்மையானவை என்று கூறுவதற்கில்லை. கோட்டையினைக் கைப்பற்றிய குழப்பமான சூழ்நிலையில் நவாபின் பிரதிநிதிகளின் அறியாமையும், அசட்டுத்தனமும் சேர்ந்து உண்டான குழப்பமிக்க மன நிலையின் விளைவாக நிகழ்ந்ததே இருட்டறைத் துன்ப நிகழ்ச்சி எனலாம்.

அந் நிகழ்ச்சியைப்பற்றி விரிவாக அறிய விரும்பும் ஆர்வம் மிக்க வாசகர்கள் 'பண்டைக் கல்கத்தாவின் எதிரொலிகள்' (Echoes of Old Calcutta) என்னும் நூலினைப் படிக்கலாம். இந் நூலாசிரியர் H. E. பஸ்டீட் (Busteed) அந் நிகழ்ச்சியைத் தெளி வாக விளக்கியுள்ளார். அந் நிகழ்ச்சி உண்மையில் நிகழ்ந்ததா அல்லது நிகழவில்லையா என்னும் வாத எதிர்வாதங்களின் சுருக்கத்தினை நீதிமுறைக்கு மாருத வகையில் தெளிவாக வர லாற்றுப் பேராசிரியர் H. H. டாட்வெல் (Dodwell) கேம்பிரிட்ஜ் இந்திய வரலாற்றினை ஐந்தாம் தொகுதியின் 156ஆம் பக்கத் தில் விளக்கியுள்ளார். இருட்டறை (Black Hole) என்னும் தொடர், காவல் அறைக்கு (lock-up) அல்லது தாற்காலிகச் சிறைச்சாலைக்கு அக்காலத்தில் வழங்கப்பட்டுவந்த பெய ராகும்.

## ஆதாரங்கள்

மீர்சா குலாம் ஹுசெய்ன் என்பவர் எழுதியுள்ள 'Siyar-ul Mutaqherin' என்னும் நூலின் முதலாம் தொகுதியில் (ஆங்கில மொழிபெயர்ப்பு பிரிக்ஸிஞல் செய்யப்பட்டது, 1832) இந்தியப் பின்னணியில் கம்பெனியின் வரலாற்றை விளக்கியுள்ளார். இந்நூலின் இரண்டாம், மூன்ரும் தொகுதிகளை ஹாஜி முஸ்தாபா எழுதியுள்ளார். இவற்றை ஆங்கிலத்தில் ரேமாண்டு (Raymond) மொழிபெயர்த்துள்ளார் (கல்கத்தா, 1789). இந் நூலில் இவை பெருந் திறமையுடன் எழுதப்பட்டிருக்கின்றன. மெக்காலே இந் நூலினைப் பர்னட் பாதிரியார் எழுதியுள்ள 'History of his own Times' என்னும் நூலுடன் ஒப்பிட்டுப் போற்றியுள்ளார். N. N. கோஸ் (Ghose) என்பவர் எழுதியுள்ள 'Memoirs of Nubkissen' (1901) என்னும் நூல் பிரிட்டிஷாரோடு வேலை செய்த இந்தியரைப்பற்றிக் குறிப்பிடுகிறது.

தற்காலத்தில் இயற்றப்பட்ட மிகச் சிறந்த நூற்களாவன: H. H. டாட்வெல் இயற்றியுள்ள 'தியூப்பிளேயும் கிளைவும்', P. E. இராபர்ட்ஸ் எழுதியுள்ள 'பிரிட்டிஷாரின் ஆட்சிக் காலத்திய இந்தியா' என்னும் நூல்களாகும். இந் நூல்களின் ஆசிரியர்கள் இருவரும் அக்காலத்திய வரலாற்று ஆராய்ச்சியில் தேர்ச்சி பெற்ற அறிஞர்களாவர். படையெடுப்பைப்பற்றிக் கூறுவதில் ஆர்மே (Orme) நிபுணராவர். வான் சிட்டார்ட்டின் (Vansittart) 'Narrative of the Transactions in Bengal from 1760—64' (1766) என்னும் நூல் அந்த ஆண்டுகளைப்பற்றிச் சிறப்பாக விளக்கும் சமகாலத்திய நூலாகும். 1756 முதல் 1757-க்கு இடைப்பட்ட ஆண்டுகளின் வரலாற்றை அறிய S. C. ஹில்லின் (Hill) பெரும்புகழ் வாய்ந்த '1756—7ஆம் ஆண்டுகளில் வங்காளம்' என்னும் நூலினைப் பார்க்கலாம். கிளைவினுடைய பங்கினை விரிவாகப் பின்வரும் ஆசிரியர்கள் கிளைவைப்பற்றி எழுதியுள்ள வாழ்க்கை வரலாற்று நூல்களில் காணலாம்.

சர் J. மால்கோம் (Malcolm) மூன்று தொகுதிகள் (1836).

சர் G. W. ஃபாரெஸ்ட் (Forrest) இரண்டு தொகுதிகள் (1918).

A. டேவிஸ் (Davies) 1939-ல் எழுதியுள்ளார். இவற்றுள் ஃபாரெஸ்ட் என்பவர் எழுதியுள்ள நூல் நுணுக்கமாகவும் விரிவாகவும் காணப்படுகிறது. ஆனல், அது திறனாய்வு முறையில் எழுதப்படவில்லை. டேவிஸ் எழுதியுள்ளதே மிகச் சிறந்த ஆராய்ச்சி நூலாகும்.

N. L. சாட்டர்ஜி மீர் காசிமைப்பற்றி 'Mir Qasim' (1935) என்னும் நூலும், 'Verelt's Rule in India' (1929) என்னும் நூலும் எழுதியுள்ளார்.

A. C. ராய் (Roy) என்பவர் 'Mir Jafar Khan' என்னும் நூலினை எழுதியுள்ளார் *(1953)*.

அக்காலத்துப் பொருளாதார வாழ்க்கையை S. C. சின்ஹா (Sinha) எழுதியுள்ள 'Early Economic Annals in Bengal' *(1927)* என்னும் நூலிலும், N. K. சின்ஹா (Sinha) எழுதியுள்ள 'Economic History of Bengal' *(1956)* என்னும் நூலிலும் காணலாம். சர் W. W. ஹன்டர் 'Annals of Rural Bengal' என்னும் நூலில் *1770*ஆம் ஆண்டு உண்டான பஞ்சத்தைப் பற்றி விளக்கியுள்ளார். கம்பெனியின் உள்துறை அரசியல் விவகாரங்களை மிகச் சிறந்த முறையில் லூசி சதர்லாந்து (Lucy Sutherland) என்னும் அம்மையார் எழுதியுள்ள 'East India Company in 18th Century Politics' *(1952)* என்னும் நூலில் காணலாம். இந் நூலில்தான் முதன்முதலாக லாரென்சு சலிவன் (Lawrence Sulivan) குற்றமற்றவராகப் பரிந்துரைக்கப்படுகிறார்.

மேலும், K. K. தத்தா (Datta) எழுதியுள்ள 'Studies in the History of the Bengal Subah, I, Social and Economic *(1936)*' என்னும் நூலையும் காண்க.

# 3. ஆப்கானியரும், மொகலாயரும், மராட்டியரும்

1760ஆம் ஆண்டு முதல் 1785ஆம் ஆண்டு வரை இந்தியாவின் வட பகுதியும் நடுப் பகுதியும் பெரும்பாலும் இந்தியர்களாலேயே (அல்லது ஐரோப்பியர் அல்லாதாராலேயே) ஆளப்பட்டுவந்தது. இங்கு அப் பகுதிகளில் நிலவிய அரசியல், சமூகப் பொருளாதார நிலைகளைப்பற்றி அறியவேண்டியது இன்றியமையாததாகும். எனவே, அப் பகுதிகளை ஆட்சி புரிந்த அரசுகளின் நிலையினை முதலில் காண்போம். அக் காலத்தில் அரசியல் ஆதிக்கத்தைக் கைப்பற்றுவதற்காக ஒரு மும்முனைப் போராட்டம் இந்தியாவின் வட பகுதியிலும் நடுப் பகுதியிலும் நடைபெற்றுக்கொண்டிருந்தது. அக்காலத்தில் நலக்கேடும், வளக்குறைவும், வறுமையும் கோரத் தாண்டவமாடின; நாட்டிலே அமைதியும் ஒழுங்கும் நிலவாது எங்கும் கிளர்ச்சிகளும் கலகங்களும் கோலோச்சின; நாகரிகத்தின் நறுமணத்தையே மக்கள் எல்லாரும் இழந்துவிட்டனரென்று கருதும் வகையில் காட்டுமிராண்டி மக்களுடைய கொடுஞ் செயல்கள் அன்றைய இந்தியாவில் தலைதூக்கின. பிறருடைய ஆதிக்கத்தை முறியடித்துத் தாங்கள் தனிப்பட்ட தன்னாட்சி அரசுகளாக இயங்குவதற்கு முயன்ற முக்கட்சியினராலும் அரசியல் நிலை மேலும் சிக்கலுடையதாக்கப்பட்டது. கொடிய வளர்ச்சியின் பண்புகளை அரசியல் சமூகம் படம்பிடித்துக் காட்டியது. சமூக அமைப்பில் 'பல்குழுவும் பாழ்செய்யும் உட்பகையும்' தோன்றி, நாட்டில் சமூக வாழ்க்கையினைச் சீரழிக்கும் அரசியல் குழப்பம் ஆட்சிபுரிந்தது. நாதிர் ஷா படையெடுத்துவந்த காலத்து இந்தியாவில் காணப்பட்ட பண்புகளும் சூழ்நிலைகளும் இக்காலத்தில் பெரிதும் மாறிவிட்டிருந்தன. இந் நூற்றாண்டின் இறுதியில் பிரிட்டிஷார் இந்தியாவினை மேற்பார்வையிட்டனர். அப்பொழுது மக்கள்தொகையிலும், வாழ்க்கை நிலையிலும், மனப்போக்கிலும் இந்தியா நாதிர் ஷா படையெடுப்புக் காலத்திலிருந்ததைக் காட்டிலும்

பெரிதும் மாற்றமடைந்திருப்பதை அவர்கள் கண்டனர். இக் காலத்தில் மொகலாயரின் உள்நாட்டுப் போர்களினாலும், மராட்டியரின் தாக்குதல்களினாலும் ஊதாரித்தனமாகச் செலவு செய்யும் முறை தொடங்கியது. இவ்வூதாரித்தனமாகச் செலவு செய்யும் முறை பதினேழாம் நூற்றாண்டின் சிறப்பு மிக்க செழிப்பையும் வளத்தையும், பதினெட்டாம் நூற்றாண் டின் பிற்பகுதியின் மாபெரும் அரசியல் குழப்பமாக மாற்றியது எனலாம். பத்தொன்பதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் பிரிட்டிஷ் ஆட்சிப் பொறுப்பாளர்கள் கடந்த காலத்தின் பகட்டுமிக்க வாழ்க்கை மேம்பாட்டின் அழிவுச் சின்னங்களையே மதிப்பிட்டுரைத்தனர். அவர்களுடைய மதிப்பீட்டறிக்கை எவ்வாறிருந்தது என்பதை மால்கோம் (Malcolm), மெட்கா:ப் (Metcalfe) போன்றவர்களும் நன் குணர்ந்து இருந்தனர். மில் (Mill), மெக்காலே (Macaulay) போன்ற மனிதர்கள் இத்தகைய இழிநிலை என்றுமே இந்தியாவில் இருந்துவந்ததாக யூகித்தனர். பிரிட்டனின் பொது மக்கள் தங்கள் பொதுப்பணித்துறை அதிகாரிகள் (மால்கம், மெட்கா:ப் போன்றோர்) கூறிய கருத்துகளை நம்பாமல், நடப்புச் செய்திகளைப்பற்றி எழுதுவோரின் கருத்துகளையே உண்மையெனப் பெரிதும் நம்பிவந்தனர். இதன் விளைவாகத் தான் 'விக்டோரியா அரசி காலத்து ஆங்கிலேய-இந்தியக் கட்டுக்கதை' (Victorian Anglo-Indian myth) தோன்றியது. இந்தியாவின் ஆட்சி அமைப்புகள் அனைத்தும் எல்லாக் காலத் திலும் ஊழல் நிறைந்தனவாகவும் திறமையற்றனவாகவுமே இருந்துவந்தன என்பதும், இந்தியர்கள் எல்லாருமே எக் காலத்திலுமே தன்னாட்சி நடத்துவதற்குத் தகுதியற்றவர்க ளாகவே இருந்துவந்துள்ளனர் என்பதும் இக்கட்டுக்கதையின் சாரமாகும். இந்தியாவில் அளவற்ற செல்வம் குவிந்து கிடந்த தாக ஒரு கற்பனைக் கதை பண்டைக்காலத்தில் மேனாடுகளில் வழங்கிவந்தது. அதைப்போன்றே இக்கட்டுக்கதையும் இந்தியாவைப்பற்றிய அரைகுறையான அறிவினையும், செய்தி களையும் அடிப்படையாகக்கொண்டு உய்த்துணர்ந்து அதன் மூலம் மிக எளிதில் ஆங்கிலேயர் சிலர் ஒரு முடிவிற்கு வந்ததன் விளைவாகத் தோன்றியதேயாகும். நாம் முதலில் குறிப்பிட்ட பண்டைக்காலத்தில் மேனாடுகளில் வழங்கிவந்த கற்பனைக் கதை இந்தியா ஒரு பரந்த நிலப்பரப்பு என்பதை அறியாதவர்கள், அரசரின் 'அவைக்களங்களும், அரண்மனை களுமே இந்தியா' என்று தவறுதலாக நிலவியல் அறிவு இல்லாத குறைபாட்டினால் கட்டிவிட்ட கதையாகும். நாம் இரண்டாவதாகக் கண்ட விக்டோரியா அரசியின் காலத்தில்

தோன்றிய கட்டுக்கதை மொகலாயரின் ஆட்சிகாலம் முழுவதையும் ஒருசேரக் கூர்ந்து நோக்காது, பதினெட்டாம் நூற்றுண்டின் இடைப்பகுதியையும் பிற்பகுதியையும் மட்டும் பார்த்துவிட்டுச் சிலர் விரைந்து ஒரு முடிவிற்கு வந்ததனுல் தோன்றிய நிலையற்ற குறைபாடுடைய கருத்தாகும்.

இம் மூன்று கட்சியினர் இடத்திலும் குவிமைய வளர்ச்சி சக்தியின் போக்குச் செயற்பட்டுக்கொண்டிருந்தது. பாரசீகர்களிடமிருந்து ஆப்கானியர் தனியே பிரிந்து நின்றனர். மேம்பட்டு விளங்கிய துரானியக் குடிகளைச் சேர்ந்தவர்கள் சில பிரிவுகளாகப் பிரிந்து, தனிக் குழுவினராகத் தனித்தியங்கத் தொடங்கினர். அத் துரானியத் தலைவர்கள் பிற்காலத்தில் தங்களுக்குள்ளே உட்பகையுடையவர்களாக வாழ்ந்து வந்தனர். அவர்கள் ஒருவரையொருவர் குத்திக் கொன்றனர். மாநிலங்களின் அரசப் பிரதிநிதிகளாகிய ஆளுநர்களின் பேராசையாலும் அரசினைக் கைப்பற்ற அரசக் குடும்பத்தைச் சார்ந்தோர் செய்துவந்த சதிச் செயல்களாலும் மொகலாயப் பேரரசு பெரிதும் அல்லற்பட்டுவந்தது. மேலும், புதிதாகப் பேரவாக்கொண்ட கொடிய சீக்கியர்களும், நாகரிகமற்ற ஜாத்துகளும் (Jats), ரோகில்ல ஆப்கானியரும் எழுச்சி பெற்றதனுலும் மொகலாயப் பேரரசு ஆட்டம் கொடுக்கத் தொடங்கியது. இம் மூவகைக் கட்சியினருள், சில வகைகளில் மராட்டியரே தங்களுக்குள் மிகவும் ஒன்றுபட்டவர்களாக—ஒற்றுமையுடையவர்களாக விளங்கினர் எனலாம். எல்லைப் புறங்களில் இருந்துவந்த படைத்தலைவர்களுடைய பேரவாவினுல் துன்புறுத்தப்படுவதற்கு முன்பே, பூனுவில் முரண்பட்ட பதவிப் போட்டியாளர்களுக்குள்ளே சதிச்செயல்கள் தோன்றுவதற்கு முன்பே, மராட்டியர் விரைவிலே பேரரசினை நிறுவுவதற்குரிய அடித்தளத்தினை நன்கு அமைக்கத் தொடங்கினர். தில்லியிலும் ஐதராபாத்திலும் பேரரசின் சிறப்புமிக்க மரபுப் பண்புகள் நிலைபெற்றிருந்தன. ஆனுல், அவற்றைப் பேணிக் காப்பதற்குரிய வழிவகைகளோ, ஊக்கமோ, ஆற்றலோ, ஆர்வமோ அவற்றிடத்து அமைந்திருக்கவில்லை. ஆப்கானிஸ்தானத்தில் வெற்றியைப் பெறுவதற்குரிய வீரமும் ஊக்கமும் ஆற்றலும் நிறைந்து காணப்பட்டது. ஆனுல், அவ் வெற்றியினுல் விளையக்கூடிய பயனை ஒன்ருகச் சேர்ப்பதற்குரிய வழிவகைகளோ, அறிவோ அவர்களிடமில்லை. மராட்டியரிடத்து ஒரு பேரரசினை நிறுவுவதற்குரிய ஆற்றலும் ஊக்கமும் நிறைந்திருந்ததோடு, அப் பேரரசை எவ்வாறு நிறுவுவது என்பதற்குரிய வழிவகைகளைப்பற்றித் தெளிந்த அறிவும் இருந்தமை




படம் 2. இந்தியா, 1761

குறிப்பிடத்தக்கதாகும். அதனுடன் கொரில்லாப் (guerilla) போர் புரியும் திறமையும் அவர்களிடம் மிக்கிருந்தது. வெற்றிச்செல்வியைக் கைப்பிடிக்கும் சமயத்தில் கூலிப் படைத் தலைவர்கள் (condottiere) ஒவ்வொரு முயற்சியிலும் இடையிலே புகுந்து செயலைக்குலைவித்தனர். குழப்பம் மிகுந்த போராட்டங்களிலும், வாழ்க்கையில் நன்மையும் தீமையும் மாறிமாறி வந்தபொழுதும் தோல்வியுற்றது பண்புநலனன்று; வீரமுமன்று; தலைமைப் பதவியுமன்று. ஆனால், மராட்டியரின் தோல்விக்குக் காரணம் ஒற்றுமையுணர்வு இல்லாமையும், நெருக்கடி நேரத்தில் ஒன்றுசேர்ந்து போரிடும் திறமையில்லாமையும், தம்மினத்தில் ஒருவருக்கு உண்டாகக்கூடிய இன்ப துன்பங்களைப் பொதுவாக, இனத்தவர் எல்லாரும் பகிர்ந்து கொள்ள வேண்டும் என்ற இனப்பற்றுமிக்க பொதுமை யுணர்வு இல்லாமையுமேயாகும். மாபெரும் அரசியல் குழப்பத்தின் விளைவாக முறையான செங்கோலாட்சியை நிறுவுவதற்குப் பேராற்றலும் பெருந்திறமையும் தேவைப்பட்டதோடு கட்டுப்பாடற்ற தனியுரிமைச் செயல்முறையும் இன்றியமையாததாக இருந்தது.

அரசியல், படைத்துறை வளர்ச்சியாகிய இக்காட்டிடையே உண்மையைக் கண்டறிவது என்பது எளிய செயலன்று. எனவே, நாம் செய்யக்கூடியது எல்லாம் அம்மூன்று கட்சியினரும் வளமிக்க வாழ்வு பெற்றதை மிக விரிந்த முறையில் ஆராய்ந்தறிந்து சுருக்கமாகக் கூறலாம்; எவ்வெக் காலங்களில் அல்லது மிக முக்கியமான சமயங்களில் அவர்களுள் ஒருவர் மற்றொருவருடைய வழியைக் கடந்து சென்றனர் என்பதைக் கண்டறியலாம்; இறுதிக் கட்டத்தில் ஒருவர் மற்றொருவரை எவ்வாறு நம்பிக்கையிழக்கச் செய்து செயலாற்றும் திறனற்றவர்களாக்கிவிட்டனர் என்பதையும் சுருக்கமாக எடுத்துரைக்கலாம். சுருங்கச் சொல்லுவதென்றால், இம்மூன்று கட்சியினரும் தங்களுக்காகப் பிரிட்டிஷார் செய்யவேண்டிய வேலைகளைச் செய்தனர். 1740ஆம் ஆண்டுக்குப் பின்னர் ஐம்பதாண்டுகளில் அவர்கள் தங்களுக்கிடையே உண்டான சச்சரவுகளினால் இந்தியாவின் சுதந்திரத்தை அழித்தொழித்தனர். அவ்வாண்டுகளில் இந்தியா தன்னைத்தானே தோற்கடித்துக்கொண்டது.

இவ்வாறு இந்தியாவின் உரிமையைப் பறித்த அம் மூவருள், முதன்மையானவர்கள் பாரசீகர்களும் ஆப்கானியர்களுமேயாவர். 1739ஆம் ஆண்டின் தொடக்கத்தில் நாதிர் ஷா

தில்லியைக் கைப்பற்றி, கொள்ளையடித்தும் தீயிட்டுக் கொளுத்தியும் பாழாக்கினார். பின்னர் பெறுதற்கரிய பெரு நிதியான மயில் சிம்மாசனத்தையும், தாம் மூன்று ஆண்டுகள் வருவாயாகப் பெறக்கூடிய அளவிற்குரிய கொள்ளையடித்த பொருள்களையும் வாரிக்கொண்டு அவர் பாரசீகத்திற்குத் திரும்பினார். அதுமுதற்கொண்டு அவருடைய முயற்சிகளில் எல்லாம் ஏமாற்றம் விடாது பின்தொடர்ந்து வந்தது. அவருடைய மனநிலை பழிக்குப் பழி வாங்கும் இழிந்த உணர்விலே தோய்ந்து நின்றது; இறுதியில் வெறியுணர்வுமிக்க விலங்காக—பித்துப்பிடித்த மனிதராக அவர் மாறினார். அவர் 1747 ஆம் ஆண்டிலே கொலை செய்யப்பட்டார். அவர் இறந்த காலத்தில், அவரைப் போன்ற கொடிய மனிதர், அன்றைய உலகில் வேறொருவருமில்லை என்று கூறும் அளவிற்குக் கொடுமை நிறைந்தவராக விளங்கினார் என்பது இங்குக் குறிப்பிடத்தக்கதாகும். பாரசீகப் பேரரசின் சிதைவிற்கு அவருடைய மறைவு ஓர் அறிகுறியாக அமைந்தது. கஜர் (Kajar) அரச மரபினர் ஆட்சிக்கு வந்தபொழுது மறைந்தொழிந்த இன்னல்களும் இடையூறுகளும் இச் சமயத்தில் தொடங்கின. எப்பொழுதுமே கலகக்காரர்களாகவும் கீழ்ப்படிந்து நடக்காதவர்களுமாக இருந்துவந்த ஆப்கானியர் தங்களுக்கென்று புதியதோர் அரசினை நிறுவுவதற்காகப் பாரசீகப் பேரரசிலிருந்து பிரிந்து சென்றனர். இதுமுதற்கொண்டு இந்திய ஓவியத்திரையின் ஊடு இழையில் பாரசீக இழைக்குப் பதிலாக ஆப்கானிய இழை ஓடுவதைப் பார்க்கலாம். நாதிர் ஷாவின் இந்தியப் படையெடுப்பினால் மொத்த விளைவு என்னவென்றால், காபூலை நிலையாக இந்தியா இழந்ததேயாகும்.

ஆப்கானியருக்கு மதிநலம் வாய்க்கப்பெற்ற அகமது ஷா அப்தாலி தலைவராக விளங்கினார். வறண்ட நாட்டில் சுறுசுறுப்புமிக்க மக்களுடைய தலைவராகவே அவர் இருந்திருப்பார். ஆனால், இந்தியச் சமவெளியில் உண்டான அரசியல் குழப்பமே அவரை இந்தியாவின் விவகாரத்தில் தலையிடுமாறு தூண்டியது எனலாம். கடந்த காலத்தில் இத்தகைய சூழ்நிலையில்தான் பாபர் இந்தியாவின்மீது படையெடுத்து வந்தார். அகமது ஷா அப்தாலியும் பாபரைப் போன்று படையெடுப்பதற்குரிய பேராற்றலும் பெருந்திறனும் வாய்க்கப்பெற்றிருந்தார். ஆனால், பெற்ற வெற்றியை நன்முறையில் பயன்படுத்திக்கொள்ளுவதற்குரிய அரசியல் சூழ்ச்சித் திறனையோ, திறமை வாய்ந்த பிரதிநிதிகளையோ அகமது ஷா பெற்றிருக்கவில்லை. துணிகரச் செயலாற்றும்

மனிதர்களைப் பாரசீகத்திலிருந்தும், துருக்கியிலிருந்தும், ஆப்கானிஸ்தானத்திலிருந்தும் பாபர் தேவையான பொழுதெல்லாம் வரவழைத்துக்கொள்ளும் வாய்ப்பையும் வசதியையும் பெற்றிருந்தார். பெரிதும் அவர்கள் வெறியுணர்விஞல் அல்லற்படவில்லை. மேலும், பலதிறப்பட்ட மக்களிடையேயும் சமயங்களிடையேயும் செயலாற்றுவதில் அவர்கள் பழக்கப்பட்டவர்களாகவும் இருந்தனர். மொகலாயர்கள் 'தொழிலிஞல் அரசர்களாக' இருந்தனர். அவர்களுடைய அதிகாரிகள் இயல்பூக்கத்திஞலேயே பேரரசுக் கோட்பாட்டுணர்வு உடையவர்களாக இருந்தனர். ஆஞல், ஆப்கானியர் கலகக்காரர்களாகவும், வெறிபிடித்த மலைவாழ் சாதியினராகவும் இருந்தனர். அவர்களுக்கு எப்படிப் பிற நாடுகளைக் கைப்பற்றுவது என்பதுதான் தெரிந்திருந்தது. ஆஞல், எப்படி வென்ற நாட்டு மக்களை தம்வயப்படுத்துவது என்பதை அவர்கள் அறியார். அவர்கள் ஒரு குறிக்கோளை அடைவதற்காக உயிரைவிடத் தெரிந்திருந்தார்களே ஒழிய, இருபுற விட்டுக்கொடுப்புடன் உடன்பாட்டைக் காணும் திறமையற்றவர்களாகவே இருந்தனர். மொகலாயப் பேரரசினை எதிர்த்து அகமது ஷா செய்த முதன் முயற்சி 1748ஆம் ஆண்டு சிர்ஹிண்டு (Sirhind) என்னுமிடத்தில் தோல்வியுற்றது. மொகலாயப் பேரரசு தொடர்ந்து பேராற்றலுடன் இருந்திருக்குமேயாஞல், சிந்துவிற்குக் கிழக்கே அகமதினுடைய பெயர் இதற்குமேல் என்றுமே கேள்விப்பட முடியாததாகப் போயிருக்கும். ஆஞல், அச்சமயத்தில்தான் மொகலாயப் பேரரசர் முகமது ஷா காலமாஞர். அதேயாண்டில் அவருடைய மகன் அகமது ஷா அரசராஞர். அவருடைய வலிமையற்ற ஆட்சியின்கீழ் தில்லியில் பல்குழுவும் பாழ்செய்யும் உட்பகையும் மீண்டும் தலையெடுத்தன. இந்த வாய்ப்பினைப் பயன்படுத்திக்கொள்ள அகமது ஷா அப்தாலி சிறிதும் காலம் தாழ்த்தவில்லை. 1749ஆம் ஆண்டில் அவர் மீண்டும் ஒரு படையுடன் இந்தியாவிற்குள் நுழைந்தார். ஆஞல், லாகூர் அரசப் பிரதிநிதியால் அவர் விலை கொடுத்து வாங்கப்பட்டார். ஆயினும், 1751—2ஆம் ஆண்டுகளில் அவர் மீண்டும் ஒரு முறை படையெடுத்துவந்தார். நான்கு மாத முற்றுகைக்குப் பிறகு அவர் லாகூரைக் கைப்பற்றிஞர். இம்முறை பேரரசரின் அரசாங்கமே, பஞ்சாபையும் முல்தானையும் கையூட்டாகக் கொடுத்து அகமது ஷா அப்தாலியை விலைக்கு வாங்கியது இங்குக் குறிப்பிடத்தக்கதாகும். 1756ஆம் ஆண்டிற்குள் பேரரசு உள்நாட்டுப் போர்களிஞலும், அரசியல் படுகொலைகளாலும் மேலும் நலிவுற்றது. அச் சமயத்தில் அகமது ஷா

அப்தாலி தில்லியைக் கைப்பற்றிப் பாழாக்கினர். புதிய பேரரசரின் காவலராக நாசிப்-உத்-தௌலா என்னும் ரோகில்லர் தலைவரான நாசிப்கானை அகமது ஷா அப்தாலி அமர்த்தினர். அதன்பிறகு இந்தியாவின் உள்நாட்டு சக்திகள் அனைத்தும் ஒருங்குதிரட்டப்பட்டன. வட இந்தியாவில் முஸ்லிம்களுக்கு உண்டாகியிருக்கின்ற இன்னல்களைப் போக்குவதற்கு உதவுமாறு தக்கணத்திலுள்ள இந்துக்களின் ஆற்றல்மிக்க சக்திகள் அழைக்கப்பெற்றன. 1759ஆம் ஆண்டு ஐந்தாவது முறையாக அகமது ஷா இந்தியாவின்மீது படையெடுத்துவந்தார். மொகலாய மன்னரோடு நேருக்கு நேராக எதிர்த்து நின்று போரிடவேண்டியதைக் காட்டிலும், மீண்டும் எழுச்சியுற்றிருக்கின்ற இந்துக்களின் பிரதிநிதியான மராட்டியரோடு கடும்போர் புரியவேண்டிய நெருக்கடி உண்டாகியிருப்பதை அவர் கண்டார். இப்படையெடுப்பைத் தொடர்ந்து பதினெட்டு மாதங்கள் நடைபெற்றுவந்த தாக்குதல்களும் எதிர்த் தாக்குதல்களும் இறுதியில் 1761ஆம் ஆண்டு ஜனவரி பதினான்காம் நாள் பானிப்பட்டுப் போராக முடிவுற்றது. திறமையான செயல்முறையினால் தெற்கேயுள்ள மராட்டிய தளத்திலிருந்து வட இந்தியாவிற்கு வந்துகொண்டிருந்த போர்த் தளவாடங்களை வரவொட்டாமல் அகமது ஷா அப்தாலி தடுத்து நிறுத்தினர். இவ்வாறு வட இந்தியாவிலிருந்த மராட்டியப் படை தாயகத்திலிருந்து துண்டிக்கப்பட்டது. இதனால் அவர்கள் செயலற்றுப்போன நிலையிலும், உண்ண உணவின்றிப் பட்டினியால் வாடிக்கிடந்த நிலையிலும் அவர்களைப் போரிடுமாறு ஓர் இக்கட்டான சூழ்நிலையை அகமது ஷா உருவாக்கினர். இந்நிலையில் மராட்டியப் படை எதிர்த்துப் போரிட இயலாது படுதோல்வி அடைந்தது. ஆப்கானியரின் தலைவர் பலமுறை வெற்றிமேல் வெற்றி பெற்றார். இதனால் இந்துஸ்தானமே அவருடைய அடிக்கீழ் அகப்பட்டுக்கொண்டதைப் போன்று தோன்றியது. மராட்டியர்கள் திகைப்புற்று சிதறியோடினர். உயிர் பிழைத்திருந்த மொகலாயப் படைத்தலைவர்கள் ஆற்றலற்றவர்களாகவும், ஒற்றுமையற்றவர்களாகவும் இருந்தனர். ஆங்கிலேயரின் கம்பெனி நெடுந்தொலைவிலுள்ள வங்காளத்திலே இருந்தது. ஆனால், அச்சமயத்தில் அகமது ஷா அப்தாலியின் படை வீரர்கள் தங்களுக்குச் சேரவேண்டிய ஊதியத்தின் நிலுவையைக் கொடுக்குமாறும், காபூலுக்குத் திரும்பிப் போக வேண்டும் என்றும் கூக்குரலிட்டனர். அவர்களிடத்து மொகலாய வீரர்களிடத்துக் காணப்பெற்ற விடாப்பிடியான உறுதிப்பாடு அறவே இல்லை. அதனுடன் பாபர் காலத்தில் இந்துஸ்

தானத்தில் குவிந்துகிடந்த செல்வ வளமும் இவர்கள் காலத்தில் அவ்வளவிற்கு இல்லாமற்போயிற்று. பேரரசு நலிவுற்ற அந்நிலையில் படையெடுப்பாளர்களுக்குக் கிடைக்கக்கூடிய ஆதாயம் ஒன்றுமே கிடைக்கவில்லை. மேலும், ஆப்கானியப் படை தில்லியில் தங்கியிருந்தால் அதற்குத் தரவேண்டிய ஊதியத்திற்குத் தேவைப்படும் பொருளைக்கூட மொகலாயப் பேரரசிடமிருந்து பெற முடியாத அளவிற்கு அவ்வரசு வறுமையுற்றிருந்தது. எனவே, இத்தகைய சூழ்நிலையில் ஆப்கானியர் தங்கள் மலைகளுக்குத் திரும்பிப்போவதைத் தவிர வேறு வழியில்லாமற்போயிற்று. அகமது ஷாவினால் கைப்பற்றப்பட்ட செங்கோலினைப் பக்கத்திலே வைத்துவிடுமாறு அவர் வற்புறுத்தப்பட்டார். அவருடைய படைவீரர்களுக்குத் தரவேண்டிய ஊதியத்திற்குத் தேவையான செல்வம் தில்லியில் அவருக்குக் கிடைக்காததனால், தாம் பேரரசராக முடிசூட்டிக்கொண்டு இந்துஸ்தானத்தை ஆட்சிபுரிவதற்குரிய அரிய வாய்ப்பினைப் பொருளாதார நெருக்கடி காரணமாகக் கைவிடவேண்டியதாயிற்று. அவர் ஒருவாறு தம்முடைய தன்மானத்திற்கு இழுக்குண்டாகாத வகையில் தில்லியின் அரசுகட்டிலில் ஷா ஆலத்தினை அமர்த்தியதோடு, அவரைத் தம்முடைய ஆதிக்கத்திற்குட்பட்ட குறுநில மன்னரென்றும் அறிவித்தார். பழையபடியே தம்முடைய நம்பிக்கைக்குரிய தலைவரான நாசிப்-உத்-தௌலாவை மொகலாயப் பேரரசரின் அமைச்சராக அகமது ஷா அமர்த்தினார். உண்மையில் அகமது ஷா அப்தாலி பேரரசின் உரிமையை வேண்டாமென்று முடிதுறந்தார் என்றே கூறலாம். எனவே, இதுமுதல் பஞ்சாப் மாநிலமும் சிந்து மாநிலமுமே அவருடைய ஆட்சிக்குட்பட்ட இந்தியப் பகுதிகளாக இருந்தன. இதற்குப் பிறகு அவர் மீண்டும் தில்லிக்குத் திரும்பிவரவே இல்லை. அரை நூற்றாண்டிற்குள் அவருடைய அரசு சிதைந்துபோயிற்று.

நாதிர்ஷாவின் தாக்குதலால் உண்டான அதிர்ச்சியிலிருந்து மதிப்பிலும் பரப்பிலும் எத்தகைய குறைவுமின்றி மொகலாயப் பேரரசு 1740ஆம் ஆண்டில் வெளிப்பட்டது. உணர்ச்சியறச் செய்யும் ஒரு பெருந் தாக்குதலுக்கு இலக்கான திமிங்கிலம் தன்னுடைய பருமனில் எத்தகைய குறைவுமின்றி மீண்டும் நீரின் மேற்பரப்பிற்கு வருவதைப் போன்று மொகலாயப் பேரரசு வெளிப்பட்டது. பேரரசர் முகமது ஷா இன்னும் தில்லி அரியணையில் மொகலாயப் பேரரசராக வீற்றிருந்தார். மராட்டிய மண்டலத்திற்குப் புறத்தே உள்ள இந்தியாவின் பிற பகுதிகளிலெல்லாம் பேரரசரின் ஆணைச்

சக்கரம் சுழன்றுவந்தது. மக்கள் பேரரசரின் அதிகாரத்தில் சிறிதும் ஐயுறவு கொள்ளவில்லை. மராட்டியர்களும்கூடப் பேரரசரின் ஆட்சியுரிமையைப் பாதியளவிற்கேனும் ஏற்றுக் கொண்டிருந்தனர் என்றே கூறலாம். அரசரின் அரண்மனையில் முரசுகள் முழங்கிக்கொண்டிருந்தன. பேரரசரின் அவைக்களத்தில் அரசவையினர் நாள்தோறும் அரசரைப் பணிந்து போற்றி வாழ்த்தி வணங்கிவந்தனர். அண்மையில் ஏற்பட்ட அதிர்ச்சியினால் உண்டான உட்காயங்கள் பேரளவிற்குப் புறத்தே புலப்படாதவாறு மறைக்கப்பட்டிருந்தன. சில ஆண்டுகள் இந்திய நாட்டு அரசியலில் மயங்கவைக்கும் அமைதி நிலவிவந்தது. மாளவத்தினைத் திரும்பக் கைப்பற்றுவதற்கு அலிவர்தி கான் மேற்கொண்ட முயற்சி தோல்வியுற்றது. ஆனால், மராட்டியர் வங்காளத்தின்மீது படையெடுத்துச் சென்றபொழுது அலிவர்தி கானால் அவர்கள் விரட்டியடிக்கப்பட்டனர். பேரரசின் வடமேற்குப் பகுதியில் காபூலை இழந்ததைத் தவிர, மற்றப் பகுதிகள் அனைத்தும் சேதமுறாது இருந்தன. தக்கணத்தில் நைசாம் தக்க பாதுகாப்புடன் நிலையான அரசினை நிறுவியிருந்தார். மாநிலத்தின் அரசப் பிரதிநிதிகளாக இருந்த ஆளுநர்களுள் பலர் தங்களுடைய வணக்கத்தைத் தெரிவிப்பதற்காகப் பேரரசரின் அவைக்களத்திற்குச் சென்றுவருமாறு தூண்டப்பட்டனர். இவ்வமைதி 1748ஆம் ஆண்டில் முகமது ஷா இறந்தமையாலும், ஆப்கானியர் டில்லியைத் தாக்கியதாலும் குலைந்தது. பேரரசர் உள்ள உரமற்றவராகவும் ஆற்றலற்றவராகவும் இருந்தபோதிலும், பெருந்தன்மை வாய்ந்த நுண்ணிய பண்புடையவராக விளங்கினார். அவர் எதைப்பற்றியும் ஆராய்ந்து முடிவிற்கு வரும் ஆற்றலற்றவராக இருந்தார் என்பது உண்மை. ஆனால், அவரிடத்துப் பெரிய மனிதருக்கு உரிய இனிய பண்புகள் சில இருந்தமை இங்குக் குறிப்பிடத் தக்கதாகும். அவருடைய உறுதியற்ற உள்ளப்பாங்கிற்கு இடையே ஒருவகையான பிடிவாதப் பண்பும் இருந்துவந்தமையால்தான், அவர் வெறும் கைப்பொம்மையாக இல்லாமல் தன்மானமிக்க அரசராக விளங்க முடிந்தது. ஆனால், அவருடைய மகன் அகமது அறிவற்றவராக இருந்ததோடு மதிப்பற்றவராகவும் இருந்தார். அதன் விளைவாகப் பேரரசினைச் சீரழித்த உள்நாட்டுக் கலகங்கள் பல தொடர்ந்து உண்டாயின.

முகமது ஷா இறந்த சில மாதங்களுக்குள் எல்லாம் சிர்ஹிந்திலிருந்த பிரதிநிதி குமர்-உத்-தீன் கான் கொலை

செய்யப்பட்டார்; பர்ஹாம்பூரில் நைசாம் உல்முல்க் கால மானூர். இவ்வாறு புதிய நாடகப் பாத்திரங்கள் தோன்றுவதற்காக இந்திய அரசியல் அரங்கு தூய்மைப்படுத்தப்பட்டது. அப் பாத்திரங்கள் இளைஞர்களாகவும், பேராற்றலும் பேரார்வமும் உடையவர்களாகவும் இருந்தனர். ஆனால், அவர்களைக் காட்டிலும் முதியோர்களாக இருந்தவர்களின் கருத்துப்படி அவர்கள் எத்தகைய ஆற்றலும் அற்றவர்களாகவே கருதப்பட்டனர்; அதனுடன் பேரரசுக் கோட்பாட்டிற்குப் பணி புரியும் கடமையுணர்ச்சியற்றவர்களாக அவர்கள் கருதப்பட்டனர். அயோத்தியின் ஆளுநராக இருந்த ச..ப்தார் ஜங் (Safdar Jang) புதிய அமைச்சரானார். அவருடைய மாமனர் 1739ஆம் ஆண்டில் இறந்தது முதல் இவரே ஆளுநராக இருந்துவந்தார். இவர் பேரரசருக்கு அறிவிக்காமலேயே பல அலுவல்களைக் கவனித்துவந்தார். இதையறிந்த பேரரசர் தம் அரசியின் தூண்டுதலால் இவருடைய செயல்களைக் கடுமையாகக் கண்டித்தார். பின்னர் பேரரசரும் அவருடைய அரசியும், பேடியாக இருந்த ஜாவித்கானோடு சேர்ந்து அரசரின் கட்சி ஒன்றை அமைத்தனர். ஜாவித்கான் கொலை செய்யப்பட்டார். எனவே, பேரரசர் பழைய நைசாமான காசி-உத்-தீன் இளைய பேரப்பிள்ளையின் உதவியை நாடினார். அவருக்கு இமாத்-உல்-முல்க் என்பது பெயராகும். அவர் துணிச்சல் மிக்க இளைஞராக இருந்தார். அவருக்கு அப் பொழுது பதினெட்டு வயதே ஆகியிருந்தது. அவர் அஞ்சா நெஞ்சமும், போற்றத்தக்க அளவிற்கு மதிநுட்பமும் உடையவராக விளங்கினார். ஆனால், அவர் தீமை செய்யத் தயங்காத உள்ளம் படைத்தவராகவும், குறிக்கோளற்றவராகவும், நெறி முறைகளைப்பற்றிக் கவலைப்படாதவராகவும் இருந்தார். இந்த நம்பிக்கையற்ற விமானியின் கைகளில் சிக்கிய முகலாயப் பேரரசு என்னும் ஆகாயவிமானம் இறுதியில் விபத்துக்குள்ளாயிற்று. 1753ஆம் ஆண்டு ஆறு மாதம் போரிட்டதற்குப் பிறகு ச..ப்தாரைத் தில்லியிலிருந்து விரட்டுவதில் இமாத் வெற்றி பெற்றார். அக்காலத்தில் ஷாஜகான்பாத்தை விடப் பழைய தில்லி[1] மக்கள்நெருக்கமுடைய நகரமாக விளங்கியது; இப் போரினால் அந் நகரம் அழிவுற்றது இங்குக் குறிப்பிடத்தக்கதாகும். சில மாதங்களுக்கெல்லாம் பேரரசரோடு அவரும் பதவியிலிருந்து விரட்டப்பட்டார். அரசர் விரட்டப்பட்டதோடு குருடாக்கவும்பட்டார். பின்னர் இமாத்,

[1] பழைய தில்லி என்பது தில்லி வாயிலிலிருந்து புராண குயில்லா என்பதுவரை உள்ள தற்காலப் பகுதியாகும்.

ஜஹாந்தர் ஷாவின் மூத்த மகனை இரண்டாம் ஆலங்கீர் என்னும் பட்டப் பெயருடன் தில்லியின் அரசராக முடி சூட்டினர். புதிய அரசர் பற்றுறுதியுள்ளவராகவும் கருத்தாழமுடையவராகவும் இருந்தார். ஆனால், அவர் பொது விவகாரங்களில் பழக்கம் இல்லாதவராக இருந்தார். எனவே, பேரரசினை நிர்வகிக்கும் முழுப் பொறுப்பினையும் இமாத்-உல்-முல்க் பெற்றதோடு, பேரரசரை முழுவதும் அடக்கியாளும் அரசியல் வீரகராகவும் அவர் முக்கியத்துவம் பெற்றார்.

இவ்வாறு தமக்குரிய அதிகாரத்தை அரிதின் முயன்று பெற்றதற்குப் பிறகு அவ்வமைச்சர் பேரரசின் செல்வத்தைப் பண்டை நிலைக்குத் திரும்பக் கொண்டுவருவதற்கு உரிய வழி வகைகளைப்பற்றிச் சிந்திக்கலானார். நான்காவது முறையாக அகமது ஷா அப்தாலி படையெடுத்துவந்தபொழுது, அவர் பஞ்சாபை மீட்க முயன்றார். அதன் விளைவாக 1757ஆம் ஆண்டு ஜனவரி மாதம் தில்லி தாக்கப்பட்டது. இதற்கு முன்னரே இமாத்-உல்-முல்க் தான் சஃப்தார் ஜங்குடன் போராட நேரிட்டமையால், மராட்டியரைத் தமக்கு உதவி புரியுமாறு அழைத்திருந்தார். அவர்களை இச் சமயத்தில் அகமது ஷாவிற்கு எதிராகப் போர் புரிய மீண்டும் வந்து உதவி புரியுமாறு அவர் வேண்டிக்கொண்டார். இந் நெருக்கடியான காலம் முதற்கொண்டு வட இந்திய ஆதிக்க அரசியலில் மராட்டியர் முதன்மையான பங்கு பெற்றனர். 1759ஆம் ஆண்டு அவர்களுடைய படையே லாகூரைத் திரும்பக் கைப்பற்றியது. மேலும், அகமது ஷா அப்தாலி ஐந்தாவது முறையாகப் படையெடுத்துவந்தபொழுது மராட்டியரே எதிர்த்துப் போரிட்டனர். தம்முடைய வஞ்சகச் செயல்களால் இமாத்-உல்-முல்க் மராட்டியரால் ஐயுறத்தக்கவரானார். அவருடைய கொடுஞ் செயல்களினால் அவருக்கு இருந்துவந்த மதிப்பினை இழந்தார். இதனால், அவர் பிறருடைய கைப்பாவையாக வேண்டிய அவல நிலை உண்டாயிற்று. 1759ஆம் ஆண்டில் குறைகூற முடியாத ஆலங்கீரை அவர் கொலை செய்ததனால், அவர் மக்களிடையே பெற்றிருந்த மதிப்பினை முற்றிலும் இழந்தார். இதற்கு முந்தைய ஆண்டில் ஆலங்கீரின் மகன் அலி கௌஹர் இத்தகைய கொடுஞ்செயலால் அழிக்கப்படுவதிலிருந்து உயிர்தப்பித் தில்லியிலிருந்து ஓடினார். பானிப்பட்டுப் போருக்குப் பிறகு அகமது ஷா தில்லியிலிருந்து ஒதுங்கித் தனிமையிடத்தை நாடிச் சென்ற பிறகு, அவருடைய ஆதரவாளரும், ரோகிலருடைய தலைவருமான நாசிப்-உத்-

தௌலா தில்லியின் ஆதிக்கத்தைக் கைப்பற்றினர். இதனால் இமாத்-உல்-முல்க் இருக்குமிடம் தெரியாது வாழ நேரிட்டது.[1]

இத்தகைய பூசல்கள், படுகொலைகள், நம்பிக்கைத் துரோகம் என்னும் சேற்றில் சிக்கிச் சீரழிந்த பேரரசு ஆற்றலற்ற ஒரு சக்தியாகப் போயிற்று. ஆயினும், அது இந்திய அரசியலுக்குச் சட்டப்படியான ஓர் அமைப்பினைத் தொடர்ந்து அளிப்பதாக இருந்துவந்தது. கருத்தளவில் அது ஒரு பேரரசாக, சிப்பாய்க் கலகம்வரையில் இருந்துவந்தது. முகலாயரின் ஆட்சி முடிவடைந்துவிட்டாலும், தில்லி மாவட்டத்தில் இருந்துவந்த முகலாய அரசு மேலும் ஒரு கால் நூற்றாண்டுக் காலத்திற்கு அழிந்தொழியாது எஞ்சியிருந்தது. பழைய பேரரசிலிருந்து இதனை வேறுபடுத்தி எளிதாக அறிவதற்காக இனிமேல் இதைத் 'தில்லி அரசு' என நாம் வழங்கலாம். பேரரசின் அமைப்பையும் பழக்கவழக்கங்களையும் தில்லியை ஆண்டவர்கள் போற்றிப் பின்பற்றிவந்தனர். ஆனால், அவர்கள் பெரிதும் குறுகிய அதிகாரவரம்பினையுடைய குறுநில மன்னர்களாகவே இருந்தனர் என்பது இங்குக் குறிப்பிடத்தக்கதாகும். இவ்வரசு இன்ப துன்பங்களுக்கிடையே நிலைத்துநிற்க முயன்றது. நெருக்கடியான நேரங்களில் ஓரளவிற்கு வெல்ல முடியாததாகவும் இவ்வரசு விளங்கியது எனலாம். இவ்வரசு 1788ஆம் ஆண்டில் ஷா ஆலம் குருடாக்கப்பட்டதுமுதல் அழிந்துபோனதாகக் கூறப்படுவது உண்மையானாலும், இதற்கு முன்பு 1785ஆம் ஆண்டு சிந்தியா அரசியல் அரங்கில் தோன்றிய அன்றே இவ்வரசு தன்னுடைய உரிமை வாழ்வினை இழந்துவிட்டது என்பது மறுக்க முடியாத உண்மையாகும்.

1761ஆம் ஆண்டு முதல் 1770 வரை நாசிப்-உத்-தௌலா தில்லியை ஆட்சி புரிந்தார். கொள்கை அளவில் அவர் அகமது ஷா அப்தாலியின் பிரதிநிதியாகவும், புதிய பேரரசரான ஷா ஆலத்தின் பிரதிநிதியாகவும் பணி புரிவதாகக் கருதப்பட்டார். ஆனால், நடைமுறையில் அவர் தம்முரிமை வாய்ந்த அரசிளங்குமரரைப்போன்றே ஆட்சி புரியலானார். எனினும், அவர் மேற்குறிப்பிடப்பட்ட இருவரிடத்தும் கொண்டிருந்த தொடர்பினை என்றுமே அறுத்துக் கொள்ளவில்லை. ஒரு பக்கத்தில் அகமது ஷா அப்தாலி மறைந்துவிட்டமையும், மற்றொரு பக்கத்தில் மராட்டியர்

[1] அவர் 1800ஆம் ஆண்டு இறந்துவிட்டதாகத் தெரிகிறது.

நலிவுற்றமையும் நாசிப்-உத்-தௌலாவிற்கு நல்லதொரு வாய்ப்பாக அமைந்தது. அவர் அவ் வாய்ப்பினைத் தம் முழு ஆற்றலையும்கொண்டு நன்முறையில் பயன்படுத்திக்கொண்டார். வடதிசையில் சீக்கியரின் தாக்குதல்களால் அவர் அடிக்கடி அல்லலுற்றார். அதைப்போன்றே தென்திசையில் ஜாத்துகளின் கிளர்ச்சிகளை அடக்க வேண்டிய நெருக்கடி அவருக்கு உண்டாயிற்று. அவ்விரு பகைவரையும் தோற்கடிக்கக்கூடிய ஆற்றல் உடையவராக அவர் விளங்கினார். ஆனால், அவர்களை அடியோடு அடக்கியொடுக்கும் ஆற்றலற்றவராக அவர் இருந்தமை இங்குக் குறிப்பிடத்தக்கதாகும். அவர் இறந்தவுடன் ஷா ஆலம் தில்லிக்குத் திரும்பிவந்தார். அதைத் தொடர்ந்து பாரசீகத் துணிகரச் செயல்வீரரான மீர்சா நசாஃப் கான் ஆட்சிபுரியத் தொடங்கினார். பீகாரில் அகதியாக இருந்தபொழுது 1759ஆம் ஆண்டில் ஷா ஆலம் பேரரசராக முடிசூட்டப்பெற்றார். பிற்கால முகலாயப் பேரரசர்களுள் பேரழகு வாய்ந்தவராகவும், சிறந்த மதிநலம் வாய்க்கப்பெற்றவராகவும் ஷா ஆலம் விளங்கினார். எனினும், எவ்வகையிலும் அவர் பொன்றாப் புகழ் பெறவில்லை. அவர் மகிழ்ச்சிக்குரிய அமைதியான நல்லதொரு காலத்தில் அரசராக ஆட்சிபுரிந்திருந்தால், சிறப்புமிக்க பேரரசராக அவர் பேரும் புகழும் பெற்றிருக்கலாம். ஆனால், அவருடைய ஊழ்வினை வேறு வகையாக இருந்தது. ஃபிரெஞ்சுநாட்டுத் துணிகரச் செயல்வீரரான ஜேன் லா (Jean Law) ஷா ஆலத்தை நன்கறிந்தவராவர். அவர்

"மிகச் சிறந்த கல்விப் பயிற்சி பெற்றவர்களுள் 'ஷாஸதா' அவர்களும் ஒருவராவர். அக் கல்வியினால் அவர் பெரிதும் பயனடைந்தார். அக் கல்விமுறை தனிச் சிறப்புடையதாக இருந்தது. சமய அறிவை ஊட்டுவதும், கீழைநாட்டு மொழிகளைக் கற்பிப்பதும் இக் கல்விமுறையின் முக்கியப் பகுதியாகும். மேலும், வரலாற்றைக் கற்பிப்பதும், கலைத்துறைப் பயிற்சிகளைச் செம்மையாக எழுதுவதற்குப் பயிற்றுவிப்பதும் அக் கல்விமுறையின் சிறந்த பணியாகும். அதன் விளைவாக நான் அவரைப்பற்றிக் கூறுவனவெல்லாம் அவருடைய நலன்களாகவே விளங்குகின்றன. அவர் அராபிய மொழியையும், பாரசீக மொழியையும், துருக்கி மொழியையும், இந்துஸ்தானி மொழியையும் நன்கு கற்றவராவர். அவர் நூல்களைப் படிப்பதில் பேரார்வம் கொண்டுள்ளார். குறைந்தது சில

மணி நேரங்களாகிலும் படிக்காமல் ஒரு நாளை அவர் கழிக்கமாட்டார்....அவர் எதையும் துருவித் துருவி ஆராயும் மனவியல்பு வாய்க்கப்பெற்றவர். இயல்பாகவே அவர் மகிழ்ச்சி பொங்கும் மனநிலை உடையவராவர். தனிப்பட்ட அவருடைய நட்புக் குழுவினரிடைத் தடையில்லாமல் பழகுவார். அந் நட்புக் குழுவினரிடை அவருடைய நம்பிக்கைக்கு உரிய இராணுவ அதிகாரிகளையும் அடிக்கடி அவர் சேர்த்துக்கொள்ளுவார்."[1]

பல ஆண்டுகள் ஷா ஆலம் போதிய பண வசதியோ, பற்றுறுதியும் நம்பிக்கையுமோ இல்லாத இடர்ப்பாடான நிலையில் பேரரசினைக் கட்டிக்காத்தார். பெயரளவிற்குத் தம்முடைய படைகளின் தலைவர்களாக இருந்தவர்கள் நம்பிக்கைத் துரோகம் செய்யும் வகையில் கிளர்ச்சி செய்தபொழுதெல்லாம், அவர் தமக்கென்று பிறரிடமிருந்து படைகளைக் கடன் வாங்கி அதைக்கொண்டு அவர்களை அடக்கியொடுக்கித் தம்முடைய மேலாண்மையை நிலைநாட்டினர். அயோத்தியை ஆண்ட சஃப்தார் ஜங்கிற்குப் பிறகு ஆட்சிக்கு வந்த ஷூஜா-உத்-தௌலாவின் உதவியுடன் அவர் வங்காளத்தினை மீண்டும் கைப்பற்ற முயன்றார். ஆனால், அம் முயற்சி 1764ஆம் ஆண்டில் நிகழ்ந்த பக்ஸார் போரினல் தோல்வியடைந்தது. அதன் விளைவாக அவர் கிளைவுடன் ஓர் உடன்படிக்கை செய்துகொண்டார். அதன்படி ஷா ஆலம் கோரா (Kora), அலகாபாத் பகுதிகளைத் தமக்குரியனவாகப் பெற்றதோடு, வங்காளத்திலிருந்து சிறிதளவிற்குத் திறைப்பொருளும் பெற்றார். 1770ஆம் ஆண்டில் நாசிப் காலமானர். அலகாபாத்தில் பிரிட்டிஷாரின் கண்காணிப்பின்கீழ்ப் பாதுகாவலாக இருந்து வருவதா அல்லது பேரரசின் ஆதிக்கத்தை நிலைநாட்டுவதற்குரிய இறுதி முயற்சியில் அதன் விளைவுகளை ஏற்றுக்கொள்ளும் மனவுறுதியுடன் ஈடுபடுவதா என்னும் இருவகைப் பிரச்சினைகள் அவர் முன்னர் தோன்றின. அவர் தில்லிக்குத் திரும்பிவந்துவிடுவது பிரிட்டிஷாருக்கு இக்கட்டாக இருந்தது. ஆனால், அச் செயல் அவருக்குப் பெருமையளிப்பதாகவும், அவர் மனப்போக்கிற்கு உகந்ததாகவும் இருந்தது. அவருடைய திட்டங்களுக்கு பிரிட்டிஷார் உதவி செய்யமாட்டார்கள் என்று தோன்றியதால் அவர் மராட்டியரின் உதவியை நாடினர். அதன் விளைவாக அவர் தனக்கு நாட்டி

[1] J. Law: Memoire Sur l'empire mogul, p. 329.

லிருந்த பற்றை இழந்தார். ஆனால், முன்கூட்டியே எதிர்பார்க்கப்பட்ட மராட்டியரின் பாதுகாப்பிற்குட்பட்ட நிலை உண்டாகவே இல்லை. அதற்குக் காரணம், 1772ஆம் ஆண்டு ஷா ஆலம் தில்லிக்குத் திரும்பிவந்ததுமுதல் தில்லி அரசினை மிகத் திறமையுடன் ஆட்சி புரிந்துவந்த மீர்சா நசாப் கானின் பேராற்றலேயாகும். அவர் 1782-ல் இறக்கும்வரை தில்லி அரசினை மிகத் திறமையாக ஆண்டுவந்தார். சீக்கியர்களை முதுகிட்டு ஓடுமாறு அவர் செய்தார். ஜாத்துகளை அவர் அடக்கியொடுக்கினார். அவர் ஆக்ராவினை மீண்டும் கைப்பற்றினார்; மராட்டியரைத் தில்லிக்கு அருகில் அணுகாதபடி செய்தார். அவர் இறந்தபொழுது சட்லஜ் முதற்கொண்டு சம்பல் (Chambal) வரையிலும், ஜெய்ப்பூர்முதல் ,கங்கைவரையிலும் பரவியிருந்த அகன்ற நிலப்பரப்பினைத் தம் ஆட்சிக்குட்பட்டதாகக் கொண்டிருந்தார் என்பது இங்குக் குறிப்பிடத் தக்கதாகும்.

1770ஆம் ஆண்டு வங்காளத்தில் உண்டான கொடிய பஞ்சத்தைப் போன்றதொரு மிகக் கொடிய பஞ்சம் 1782ஆம் ஆண்டு உண்டாயிற்று. அச் சமயத்தில்தான் நசாப் கான் காலமானார். கிராமப்புறத்தைச் சார்ந்த மக்கள் தொகையில் மூன்றில் ஒரு பங்கினர் பட்டினியால் மாண்டு மடிந்தனர் என்று சொல்லப்படுகிறது. தில்லி அரசின் வருவாய்பற்றி ஃபார்ட்டஸ்கியூ 1820ஆம் ஆண்டு அறிக்கையொன்றினை வெளியிட்டபொழுது, நாடு முழுவதும் பஞ்சத்தின் கொடும் பிடியிலிருந்து விடுபடவில்லை என்றே கூறலாம். பஞ்சத்தால் உண்டான வறுமையும் கொடிய துன்பமும் நாட்டிலே மீண்டும் கலகங்களும் கொந்தளிப்புகளும் உண்டாகுமாறு செய்தன. அச் சமயத்தில் பேரரசர் நம்பிக்கையுடன் உதவியை நாடக்கூடிய அளவிற்குத் திறமை மிக்க தலைவர்கள் யாருமே நாட்டில் இல்லை. எனவே, 1785ஆம் ஆண்டு மகத்ஜி சிந்தியா தில்லிக்கு அழைக்கப்பட்டார். பேரரசின் பகர ஆட்சியாளர் என்னும் பதவியில் அவர் அமர்த்தப்பட்டார். 1787-ல் அவர் இராசபுத்திரர்களை எதிர்த்துப் போரிட்டபொழுது லால்சன்ட்டில் (Lalsont) தோல்வியுற்றார். அதனால் வடக்குப் பகுதியில் அவருக்கு இருந்துவந்த செல்வாக்கு பலவீனப்பட்டது. அத் தோல்வியால் உண்டான அதிர்ச்சியிலிருந்து அவர் மீண்டும் வலிமை பெறுவதற்குள் நாசிப்-உத்-தௌலாவின் பேரப்பிள்ளை ரோகில்லா குலாம் காதர் தில்லியைக் கைப்பற்றினார். அவர் எதிர்பார்த்த அளவிற்கு அரண்மனையில் பொன்னும் பொரு

ளும் குவிந்துகிடக்காமையால் அவர் ஏமாற்றமடைந்தார். அதனால் வெறி பிடித்த மூர்க்கராக அவர் மாறினார். தம்முடைய ஏமாற்றத்தால் உண்டான அதிர்ச்சியைப் போக்கிக் கொள்ளுவதற்காக அவர் ஷா ஆலத்தினைக் குருடராக்கினார். இக் கொடுஞ்செயல் இந்தியா முழுவதிலும் பேரதிர்ச்சியை உண்டாக்கியது. சிந்தியா தம்முடைய பேராற்றலுடன் குலாமைத் தோற்கடித்துத் தூக்கிலிட்டார்; ஷா ஆலத்தை மீண்டும் பேரரசராக்கினார். 1803ஆம் ஆண்டு பிரிட்டிஷாரை வரவேற்பதற்காகவே ஷா ஆலம் உயிருடன் இருந்தார் என்று கூறலாம். ஆனால், அவர் இதுமுதல் ஓய்வுபெற்ற பேரரசராக, உதவிச் சம்பளம் பெற்றுவரும் பேரரசராக, இரக்கப்படத் தக்க பேரரசராக, மதித்துப் போற்றத்தக்க பேரரசராக, பிறரால் புறக்கணிக்கப்பட்ட பேரரசராகவே வாழ்ந்தார். தில்லி அரசு மராட்டியப் பேரரசின் ஒரு மாநிலமாயிற்று.

வட இந்தியாவில் அரசியலாதிக்கத்தின் மற்றொரு மையமாக விளங்கியது அயோத்தி. பேரரசின் போர்வையில் வங்காளத்தைத் திரும்பக் கைப்பற்றும் முயற்சியில் ஷுஜா-உத்-தௌலா தோல்வி அடைந்தார். எனவே, அவர் கம்பெனியாரின் உதவியை நாடினார். அவர்களிடமிருந்து அவர் அலகாபாத்தை விலை கொடுத்து வாங்கினார். அவர்களுடைய உதவியைக்கொண்டே அவர் ரோகில்லர்களை அடக்கியொடுக்கினார். இச் செயலின் பரிசாகவும், மராட்டியரிடமிருந்து தம்மைக் காத்துக்கொள்ளவும் அவர் தம்முடைய நாட்டின் எல்லைகளில் பிரிட்டிஷாரின் படைப்பிரிவு ஒன்றினை நிலையாகத் தங்கியிருக்குமாறு செய்ய வேண்டியதாயிற்று. இதன் விளைவாக அச் சமயத்தில் வங்காளத்தில் புதிதாக உருவாகிக்கொண்டிருந்த அரசியல் முறையின் அதிகார வரம்பிற்கு அயோத்தி உட்படவேண்டியதாயிற்று. அதனுடைய வடமேற்குப் பக்கத்தில் நன்கு வரையறுக்கப்பட்ட ஓர் அரசு யாண்டுமே இல்லை. சிந்து மாநிலம் ஆப்கானியருடைய மேலாதிக்கத்தை ஏற்றுக்கொண்டிருந்தது. குஜராத்தும் மாளவத்தினைப்போன்றே மராட்டியரின் ஆதிக்கத்திற்குட்பட்டிருந்தது. இரசபுத்திர அரசுகளின் தொகுதி முகலாயப் பேரரசின் மேலாதிக்கத்தை விரைவிலேயே உதறித் தள்ளிவிட்டது எனலாம். ஆனால், அது ஒற்றுமையற்றதாகவும் ஒழுங்குமுறையற்றதாகவும் இருந்ததோடு, மராட்டியரின் தலையீட்டால் கலக்கம் கொண்டதாக இருந்துவந்தது. ஆப்கானியரின் கொடிய பிடியிலிருந்து பஞ்சாப் மெல்ல நழுவிப்போயிற்று. ஆனால், தங்களுக்குள்ளே போரிட்டு

மடியும் கொள்ளைக் கூட்டத் தலைவர்களுக்கு அது இரையாயிற்று. வடமேற்குப் பகுதியில் இருந்த அரசியல் சக்திகளுள் சிறப்புமிக்கதாக விளங்கியது சீக்கிய அரசாகும். அது தற்பொழுது முகலாயரின் அச்சுறுத்துதலிலிருந்து தப்பித்துக்கொண்டதோடு, ஆப்கானியருடைய கொடும்பிடியில் சிக்காமலும் இருந்துவந்தது. பஞ்சாபில் உண்டான அரசியல் குழப்பம் பிற்காலத்தில் பல அரசுகள் தோன்றுவதற்கு வழிவகுத்துக் கொடுத்ததோடு அமையாமல், சீக்கிய சிங்கம் இரஞ்சித் சிங்கின் எழுச்சிக்கும் அடிகோலியது.

இந்தியாவின் அரசுகட்டிலிற்கு மூன்ருவதாக உரிமை கொண்டாடுபவரைப்பற்றி இப்பொழுது நாம் விரிவாகப் பார்ப்போம். பொதுவாக மராட்டியர் பேராற்றலும், பெருந்திறமையும், சிறந்த ஒற்றுமையும் உடையவர்களாகக் கருதப்பட்டுவருகின்றனர். பதினெட்டாம் நூற்ருண்டில் முகலாயர்களிடத்துக் காணப்பட்டதைவிட ஆற்றலிலும், திறமையிலும், ஒற்றுமையிலும் மராட்டியர்களே தலைசிறந்து விளங்கினர் என்பர். இது முற்றிலும் உண்மை. முகலாயர்களைக்காட்டிலும் இவர்கள் பேராற்றலும் பெருந்திறனும் வாய்க்கப்பெற்றவர்களேயாவர். இதனுல்தான் மிகச்சிறந்த தலைவர்கள் பலரை மராட்டியர் நாட்டிற்கு அளிக்க முடிந்தது. ஆனுல், அவர்களிடத்து நிலவியிருந்த ஒற்றுமையைக் காட்டிலும் இன்னும் சிறிதளவு அதிகமான ஒற்றுமையுணர்வு இருந்திருக்குமானுல் அவர்களுடைய வரலாறும், இந்தியாவின் வரலாறுமே வேறு வகையாக அமைந்திருக்கும் என்று கூறினுல் அது தவருகாது. அவர்களுடைய போட்டியாளர்களோடு அவர்கள் உள்ளவுரத்திலும் திறமையிலும் ஒத்து விளங்கினர். தேசிய உணர்வு அல்லது நாட்டுப் பற்று என்பதைப்போன்ற ஒருவகை உணர்வில் அவர்கள் தங்கள் போட்டியாளர்களையும் வென்றுவிட்டனர் அல்லது தலைசிறந்து விளங்கினர் என்றே கூறலாம். ஆனுல், அவர்கள் ஒன்று சேர்ந்து பணிபுரிதல், பொதுநலத்தின்பொருட்டுத் தங்கள் பேராவலைக் கட்டுப்படுத்திக்கொள்ளுதல்போன்ற பண்புகளில் முகலாயர்களையும், துணிகரச் செயல்வீரர்களான ஆப்கானியர்களையும்காட்டிலும் மராட்டியர் எவ்வகையிலும் சிறந்தவர்களல்லர். பேரரசு மரபுக்குரிய பண்புகளில் இம்மாபெருங் குறைபாடாகிய முட்டுக்கட்டையினை உடையவர்களாக மராட்டியர் இருந்தனர். அவர்களிடத்தில் காணப்பட்ட சில சிறந்த பண்புகள் அண்மைக் காலத்தில் பெற்ற அனுபவத்திலிருந்து பெற்றனவாகவோ, பகைவர்களிட

மிருந்து கற்ற பாடமாகவோ இருக்கவேண்டும். சிவாஜி, அவர்களுக்குப் படைத்துறைப் பெருமையைத் தேடித் தந்தார். அதனுடன் அவர் மராட்டிய மக்களுக்கு வீரவுணர்வு மிக்க தேசப்பற்றை ஊட்டி வளர்த்தார். ஆனால், பேரரசினை நிறுவிக் காப்பதற்கு உரிய ஒழுங்குமுறை விதிகளை அவர் வகுத்துத் தரவில்லை. அவுரங்கசீபின் அவையில் ஷாகூ (Shahu) நெடுங்காலம் தங்கியிருந்தமையால், முகலாயப் பேரரசின் ஒழுகலாற்றின் சில கூறுகளைத் தம்மரசினில் அவர் புகுத்தினார். ஆனால், அரசியல் கோட்பாடுகளை மாண்பு மிக்க வகையில் அவர் புகுத்தவில்லை. எனவே, பதினெட்டாம் நூற்றாண்டின் தொடக்கப் பகுதியில் அவர்கள் கொள்ளைக்காரர்களின் மனநிலையோடு பேரரசினை நிறுவுவதற்குரிய வாய்ப்புகளைப் பெற்றிருந்தனர். ஒரு தலைமுறைக்குப் பிறகு அவர்கள் இவ் அரும்பெரு முயற்சிகளில் அக்கறையோடு ஈடுபட்டபொழுது தங்கள் திட்டத்தின் முழுவமைப்பைக் காட்டிலும் ஒவ்வொரு பகுதியைமட்டும் பெரிதாகக் கருதும் ஆர்வம் அவர்களிடத்துப் பெருக்கெடுத்தமையால், அவர்களுடைய ஆற்றல் குன்றிப்போயிற்று.

சிவாஜி நன்கு வலுப்படுத்தப்பட்ட அரசினை அமைத்து விட்டுச் சென்றார். அது நெருக்கமாக அமைக்கப்பட்ட ஓர் இராச்சியமாகும். அவ் அரசு தன்னுரிமை பெறுவதில் வெற்றி பெற்றதோடு சிறப்புற்றும் விளங்கியது. சுற்றுப்புற மாவட்டங்களிலிருந்து அவ் அரசு தனக்குரியதாகப் பங்கு வரியைத் தண்டிவந்தது. சிவாஜிக்குப் பிற்பட்ட இருபதாண்டுகளில் விடுதலைக்காகப் போராடிவந்த மராட்டிய அரசு, தான் அழிந்தொழியாது நிலைபெற்று விளங்குவதற்காகப் போராட நேர்ந்தது. இவ்வாறு அதனுடைய இலட்சியத்திலேயே ஒரு மாபெரு மாற்றம் உண்டாயிற்று. இவர்களுடைய காப்பியச் சுவை நலம் கனிந்த இப் போராட்டத்தில் ஆற்றிய அரும்பெரு வீரச் செயல்கள் இந் நூற்றுண்டின் முப்பதுகளில் சீனக் கம்மியூனிஸ்ட்டுகள் புரிந்த வீரச்செயல்களை ஒத்தது எனலாம். பகைவர் மாநிலங்களில் குறுக்கிட்டுச் சென்று அவற்றின் அரசியல் விவகாரங்களில் தலையிட்டமையும், கருநாடகத்தில் செஞ்சி என்னுமிடத்தில் பகைவர்களுடைய தாக்குதல்களை எதிர்த்து முறியடிப்பதற்குப் புதியதொரு நிலைக்களனை நிறுவியமையும் மராட்டியரின் வீரதீரச் செயல்களுக்குரிய சான்றுகளாகும். பொதுவாக அவுரங்கசீபினுடைய பேரரசின் முதுகெலும்பை மராட்டியர் உடைத்தெறிந்த வீரச் செயலைச் சிறப்பித்துக் கூறுவது உண்டு.

ஆனால், அதே சமயத்தில் சிவாஜியினால் நன்கு நிறுவப்பெற்றதும் கச்சிதமாக அமைக்கப்பெற்றதுமான இராச்சியத்தினை அவுரங்கசீபு அழித்தொழிக்கும் முயற்சியில் பெரு வெற்றி பெற்றார் என்பதை நாம் மறந்துவிடக்கூடாது. இப்போராட்டத்திற்கு நெகிழ்ச்சிமிக்க அரசியல் அமைப்புகளும், படைத்துறையைச் சார்ந்த தலைவர்களின் பரந்துபட்ட தன் விருப்ப உரிமைகளும், பரந்துபட்ட பகுதிகளில் தலைவர்கள் இயங்குவதும் இன்றியமையாது தேவைப்பட்டன. அதன் விளைவாக மராட்டியரின் ஆட்சிமுறையின் இயல்பு நிலையான மாற்றங்களையுடையதாக மாறியது. பிற்காலத்தில் நெகிழ்ச்சிமிக்க தன்னைத் தானே அழித்துக்கொள்ளக்கூடிய மராட்டியக் கூட்டிணைப்பு அரசு தோன்றியது. பதினேழாம் நூற்றாண்டின் இறுதி ஆண்டுகளில் மராட்டியத் தலைவர்கள் வெல்லுவதற்கரிய வகையில் இந்தியாவின் பல பகுதிகளிலும் சுற்றித் திரிந்தமையால் தோன்றியதே இம் மராட்டியக் கூட்டிணைப்பு அரசாகும். அப்பொழுது ஒற்றுமை வாய்ந்த அரசியல் குறிக்கோள் இழக்கப்பட்டது. எழுச்சிமிக்க பேராற்றலும், துணிகரச் செயல்புரியும் தறுகண்மையும், குறிப்பிட்ட வட்டாரங்களில் சிறப்புமிக்க தலைமைப் பதவிகளுமே எஞ்சி நின்றன. கொரில்லாப் போரும், 'சௌத்' என்னும் வரி வாங்குதலும் சிவாஜிக்கு ஓர் அரசியல் சூழ்ச்சித்திறனாக அமைந்தன. ஆனால், அவருக்குப் பிறகு பதவியில் அமர்ந்தோருக்கு அவை வாழ்க்கைக்குரிய விதிமுறைகளாக விளங்கின. எப்பொழுதுமே அமைதியுடன் இல்லாத மராட்டியர் நிலப்பகுதியில் நடமாடும் இந்திய வைக்கிங்குகளாக (Vikings) விளங்கினர். ஆயினும், அவர்களுடைய சாதனைகள் என்றுமே நார்மானியரின் அரசுகள் ஆக்கத்துறையில் அடைந்த வெற்றிகளுக்கு ஈடாகா என்பதும் இங்குக் குறிப்பிடத்தக்கதாகும். அவுரங்கசீபு இறந்த பிறகு நூற்றாண்டுகள் கழிந்து மராட்டியக் கூட்டிணைப்பு அரசு தன்னிடையே உண்டான உட்பகையாலும் கருத்து வேற்றுமைகளாலும் தானே அழிவுற்றது. அவுரங்கசீபு இறந்த பின்னர் நூற்றாண்டுகள் கழிந்து அவர் பெற்ற இறுதி வெற்றியாக இவ் அழிவினைக் கூறலாம்.

1707ஆம் ஆண்டிற்குப் பிற்பட்ட காலத்தில் மாராட்டிய அரசு மறுமலர்ச்சியுற்றது. இவ்வாறு மராட்டிய அரசு திரும்ப எழுச்சியுறத் தொடங்கிய அதே சமயத்தில் மராட்டிய முதல் அமைச்சர்களான பேஷ்வாக்களும் எழுச்சியுறத் தொடங்கினர். 1749ஆம் ஆண்டுவரை சாகூ அரசர் ஆண்டுவந்தார். அவர் என்றுமே அரசாங்க விவகாரங்களில் ஆற்றலற்றவ

ராகவோ, முக்கியத்துவமற்றவராகவோ இருந்ததில்லை. ஆனால், அவருடைய காளைப் பருவத்தை முகலாயரின் பிணையாக நிறுத்தப்பட்டவராகக் கழித்திருந்தார். அவர் சுவையுணர்வில் புதிதாகப் பெற்றவை எவையோ அவற்றை அவர் ஆற்றலிலே இழந்துவிட்டிருந்தார். தாங்களே ஆட்சிபுரிவதற்குரிய ஆற்றல் அற்றவராக அவர் இருந்தபோதிலும், 'இதனால் இதனை இவன் முடிக்கும்' என்று ஆராய்ந்து அறியும் நுண்ணறிவும், பின்னர் அத்தகையோரைக்கொண்டு ஆட்சியினை நடத்தும் அறிவுத் திறனும் வாய்க்கப்பெற்ற அரசர்கள் பலர் உலகில் இருந்திருக்கின்றனர். அவர்களுள் நம்முடைய சாகூவும் ஒருவராவர். அவருக்கு ஒப்பாக ஏழாம் சார்லசை அல்லது ஃபிரான்சின் பதின்மூன்றும் லூயியையும் கூறலாம். இத்தகைய அரும் பணியைப் பெரு வெற்றியுடன் சித்பவனைச் சேர்ந்த பார்ப்பனர் குடும்பமொன்று மிகச் சிறப்பாகச் செய்துவந்தது. குறிப்பிட்ட சிறிது காலத்திற்கு இக் குடும்பத்தைச் சார்ந்தவர்களே பேரரசர்களாகிவிடுவார்களோ என்று ஐயுறத்தக்க சூழ்நிலை நிலவியிருந்தது. பாலாஜி விசுவநாதன் என்பவர் அக் குடும்பத்தின் முதல் தலைவராவார். அவர் சாகூவினைப் பகைவர்களிடமிருந்து காப்பாற்றினார். மராட்டிய நாட்டுக்குள் அவர் ஒழுங்கையும் அமைதியையும் நிலைநாட்டினார். அவருடைய மகன் முதலாம் பாஜிராவ் வட இந்தியாவின் அரசியல் விவகாரங்களில் தலையிடத் தொடங்கினார். பாலாஜி விசுவநாதன் தக்கணத்திலிருந்த ஆறு மாநிலங்களில் 'சௌத்' என்னும் வரியைத் தண்டிவந்தார். அவருடைய மகன் 1738-ல் மாளவத்தினை மொத்த ஒப்படையாகப் பெற்றார். இதைப் பெறுவதற்கு அவர் தொடர்ந்து படையெடுத்துச் சென்று வெற்றி பெற்றார். அதன் பின்னரே அதை ஒப்படையாகப் பெற்றார். அவர் துணிச்சலுடன் தில்லியின் வாயில்வரை படையெடுத்துச் சென்று கொள்ளையிட்டுத் திரும்பினார். குஜராத்திலே மராட்டியருக்கென்று நிலைக்களன் ஒன்றை அவர் தேடிக்கொண்டார். அக் காலத்தில்தான் மராட்டியப் பேரரசினைச் சிதைவுறச் செய்த சிறப்புமிக்க குடும்பங்களும், ஓரளவிற்கு மராட்டியப் பேரரசினை அழிந்தொழியாதவாறு காத்த குடும்பங்களும் முதன்முதலாகத் தலையெடுக்கத் தொடங்கின; அவற்றை வேறுபடுத்தி அறியும் வகையில் அவை எழுச்சி பெற்றன. மால்கார் ராவ் ஹோல்கார் (Malhar Rao Holkar) என்பவரும், ரானோஜி சிந்தியா என்பவரும் மாளவத்தில் சிறப்புற்று விளங்கினர். குஜராத்திலே தமாஜி கெய்க்வார் (Damaji Gaekwar) செல்வாக்குடையவராகத் திகழ்ந்தார். பீராரில்

ரகூஜி பான்ஸ்லே (Raghuji Bhonsla) என்பவர் சீரும் சிறப்பு முற்று விளங்கினர்.

1740ஆம் ஆண்டில் தம்முடைய நாற்பத்திரண்டாம் வயதில் பாஜிராவ் காலமானர். ஆனல், அவருடைய மகன் அவருக்குப் பிறகு முதலமைச்சராகப் பதவியேற்ருர். தந்தையைப்போன்றே தனயனும் ஒத்த ஆற்றலும் திறமையுமுடையவர் என்பதை அவர் மெய்ப்பித்தார். அவருடைய ஆட்சியில் மராட்டியரின் ஆதிக்கம் அரசியல் வானின் கொடுமுடியை எட்டிப்பிடித்தது எனலாம். இந்தியாவினுள்ளே அது ஒரு பேரரசாக விளங்கியது. அது இந்தியாவினுடைய பேரரசாக விளங்குவதற்குப் பல்லாற்ருனும் முயன்றுகொண்டிருந்தது; அம் முயற்சியிலும் போதிய அளவிற்கு வெற்றியும் பெற்றது. பீராரைச் சேர்ந்த ரகூஜி பான்ஸ்லேவுக்கும் பாலாஜிக்கும் இடையே உண்டான பகைமையுணர்வு பேரரசின் சிதைவிற்கு முதல் வித்திட்டதையும் நாம் காணலாம். அவ் வித்து முளைவிடத் தொடங்கியது இக் காலத்திலெனில் அது மிகையாகாது. ரகூஜி வங்காளத்தின்மீது படையெடுத்துச் சென்ருர். 1751 ஆம் ஆண்டு அவர் உண்மையிலேயே ஒரிசாவை மராட்டியப் பேரரசோடு இணைத்தார். ஆனல், அலிவர்தி கானின் ஆற்றல் மிக்க எதிர்ப்பாலும், அவருடைய மராட்டியப் படையின் பின்னணியின் அச்சுறுத்தலாலும், அவர் பெற்ற பெரும் பரிசு அவருடைய கைகளைவிட்டு நழுவிச் சென்றது. 1749ஆம் ஆண்டு சாகூ அரசர் இறந்தமையால் பாலாஜியின் திட்டங்களுக்கு இடையூறுகளும் இடர்ப்பாடுகளும் உண்டாயின. முகலாயரை அழிப்பதன்மூலம் வட இந்தியாவில் தங்கள் ஆட்சியினை நிறுவுவதற்குரிய திட்டத்தை சாகூ என்றுமே ஏற்றுக்கொள்ளவில்லை. அவர் என்றுமே முகலாயர்களின் அதிகாரத்திற்குட்பட்ட நிலமானியப் படைமுறைத் தலைவராக இருக்கவே விரும்பினர். எனவே, மராட்டிய அரசியல் அரங்கிலிருந்து அவர் மறைந்தமை மராட்டியப் பேரரசினை நிறுவ முயலும் கோட்பாட்டிற்கு ஓராதாயமாகும். ஆனல், அவர் மறைவு மற்ருெரு சிக்கலை—பிரச்சினையை எழுப்பியது. அவருக்குப் பிறகு ஆட்சிக்கு வருபவர் யார் என்பது குறித்துப் போராட்டம் உண்டாயிற்று. இப் பிரச்சினையால் அவர்களுடைய பேரரசை நிறுவும் பணி சிறிது காலத்திற்குத் தடைப்பட வேண்டியதாயிற்று. சிறிது காலத்திற்கு பாலாஜி தம் கருத்தைத் தக்கணத்தின்மீது செலுத்தினர். அச் சமயத்தில் தக்கணத்தில் ஆற்றல்மிக்க நைசாமின் ஆட்சி நிலைகுலைந்திருந்தது. கருநாடகத்திலே அரசியல் குழப்பம் மிகுந்திருந்தது;

இவ் அரசியல் குழப்பமும் கொந்தளிப்பும் பாலாஜியைக் கருநாடக அரசியலில் தலையிடுமாறு அழைத்தன. ஆனால், புஸ்ஸி (Bussy) நைசாம் சலபத் ஜங்கிற்குத் துணையாகப் படையுடன் ஐதராபாத்தில் தங்கியிருந்தார். எனவே, நைசாம் ஆட்சிக்குட்பட்ட பகுதியில் மராட்டிய அரசினைப் பரப்புவதற்கு முயன்றால் உண்டாகக்கூடிய விளைவைப்பற்றி உறுதியாக அவரால் முடிவு செய்ய இயலவில்லை. வட இந்தியாவிலேயே பாலாஜியின் முயற்சி தொடங்குவதற்குரிய சிறந்த வாய்ப்புக் கிடைத்தது. அயோத்தியை பங்காஷ் ஆப்கானியர்கள் தாக்கினர். அவர்களை எதிர்த்துப் போரிடுவதற்கு முதலில் சஃப்தார் ஜங்கு மராட்டியர்களை உதவிக்கு அழைத்தார். அவ்வாறே மராட்டியரும் ஆப்கானியரைத் தோற்கடித்து, ரோகில்கண்டைக் கைப்பற்றிக்கொண்டனர். பின்னர் இமாத்-உல்-முல்க் 1753-ல் சப்ஃதார் ஜங்கை எதிர்த்துப் போரிடுவதற்கு மராட்டியரை உதவிபுரியுமாறு வேண்டினார். அவ்வாண்டு நடைபெற்ற உள்நாட்டுப் போரில் மராட்டியர் புரிந்த உதவி அறுதியிட்டு முடிவு உரைக்கும் செயலாக அமைந்தது. 1757 ஆம் ஆண்டில் அகமது ஷா தில்லியை முற்றுகையிட்டபொழுது, இமாத் மீண்டும் மராட்டியரின் உதவியை நாடினார். 1758ஆம் ஆண்டில் இரகுநாத ராவ் லாகூரைக் கைப்பற்றிக்கொண்டார். அதனால் பூனாவில் இருந்த மராட்டியர் அவை பேரரசை விரிவுபடுத்தும் கனவுகளால் மதிமயங்கியிருந்தது. அவர்கள் தில்லியின் பேரரசைக் கைப்பற்றப்போவதாகப் பேசப்பட்டது. 1759-60ஆம் ஆண்டுகளில் அப்தாலியினை எதிர்த்துத் தாக்க வேண்டிய நெருக்கடி உண்டாயிற்று. இரகுநாத ராவ் பேரின்னல்களுக்கும் பேரிழப்பிற்கும் இடையே அப்தாலியை எதிர்த்துப் போரிட்டார். ஆனால், அப்தாலி மராட்டியர் படையை எளிதில் இராசபுதனத்திற்கு விரட்டியடித்துவிட்டுத் தில்லிக்குச் சென்று அதைக் கைப்பற்றினார். மராட்டியரின் மதிப்பும் பேரரசுக் கோட்பாடும் சோதனைக்கு உள்ளாயின. பானிப்பட்டுப் போருக்குரிய ஆயத்தங்கள் செய்யப்பட்டன. இதுவரை என்றுமே திரட்டப்படாத மிகச் சிறந்த படைகளை மராட்டியர் திரட்டினர். நைசாமை எதிர்த்து உதயகிரியில் போரிட்டு வாகை சூடியவரும், பேஷ்வாவின் மிக நெருங்கிய உறவினருமான சதாசிவராவ் என்பவரின் தலைமையின்கீழ் மராட்டியரின் மாபெரும் படையொன்று தில்லி நோக்கி அனுப்பிவைக்கப்பட்டது.

1761ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 14ஆம் நாள் பானிப்பட்டுப் போர்க்களத்தில் கடும்போர் நடைபெற்றது. மராட்

டியர் படுதோல்வியடைந்தனர். மேலும், அப்போர் மராட்டியரின் முன்னேற்றத்திற்கு முட்டுக்கட்டையாக அமைந்ததோடு, பெருங் கேடும் உண்டாக்கியது. பேஷ்வாவின் மூத்த மகனும், இளவரசனுமான பாலோ சாகிபும், சதாசிவராவும், மற்ற முக்கியமான படைத்தலைவர்களும் கொலை செய்யப்பட்டனர். ஆறு மாதங்களுக்குள் இந் நிகழ்ச்சியால் மன முடைந்துபோயிருந்த பேஷ்வாவும் காலமானார். வெளித் தோற்றத்திற்கு மராட்டியர் மீண்டும் புத்துயிர்ப்புப் பெறுவதைப்போன்று தோன்றியது. இளைஞராக இருந்த பேஷ்வா விரைவில் தம்முடைய அதிகாரத்தை நிலைநாட்டினார்; தம் முடைய தந்தையிடமிருந்த திறமைகள் தம்மிடத்தும் இருப்பதை அவர் மெய்ப்பித்தார். 1767 ஆம் ஆண்டளவில் மீண்டும் மராட்டியர் படை சாம்பலைக் கடந்து சென்றுகொண்டிருந்தது. ஆனால், பேஷ்வாவின் அதிகாரம் ஒரு பெருந் தாக்குதலால் நிலைகுலைந்தது. இதற்குப் பிறகு பேஷ்வாவின் அதிகாரம் அடியோடு அழிந்துபோயிற்று என்றே கூறலாம். இச்சமயம் முதல், படைத்தலைவர்களிடையே தாங்கள் பெருநிலப் பரப்புகளின் குறுநிலத் தலைவர்களாக விளங்க வேண்டும் என்ற எண்ணமும் மனப்போக்கும் பேராற்றல் வாய்ந்தனவாக விளங்கின. எனவே, அவ் வெண்ணத்தை எதிர்த்தழிப்பது மிகவும் கடினமாயிற்று. பூனா அரச மரபில் உண்டான 'பல் குழுவும் பாழ்செய்யும் உட்பகையும்' மத்திய அரசின் ஆணைகளை மாநிலத் தலைவர்கள் மதித்துப் போற்றாதவாறு செய்தன. ஆனால், குறுநில மன்னர்களான படைத்தலைவர்களிடையே பேரரசினை நிறுவ வேண்டும் என்னும் பேராவல் பெருகிக் கொண்டே வந்தது. அந் நிலையில் அவர்களுள் மகாத்ஜி சிந்தியா என்பவரே ஆட்சிபுரிவதற்குரிய ஆற்றலும் திறனும் உடையவர் என்பதை மெய்ப்பித்தார். ஆனால், அவர் 1794 ஆம் ஆண்டில் அகால மரணமடைந்தார். இத்தகைய பின்னணியில் தான் மராட்டியர் இந்தியாவின் மேற்குப் பகுதியில் குழவிப் பருவத்தில் தவழ்ந்துகொண்டிருந்த பிரிட்டிஷாரின் அதிகாரத்தோடு மோதினர்.

1761 ஆம் ஆண்டுமுதல், மராட்டியரின் செயல்முறைகளில் இரண்டு முக்கியக் கருத்துகள் காணப்பட்டன. முதலாவதாகப் பூனாவிலிருந்த பேஷ்வாக்களின் அதிகாரம் சிதறிப் போனமை குறிப்பிடத்தக்கதாகும். இளைஞரான முதலாம் மாதவராவ் அவருடைய பேராற்றலையும் பெருந்திறனையும் செயற்படுத்திக் காட்டினார். சிறிதுகாலத்திற்கு நானா பட்னாவிஸ் என்பவருடைய உதவியைப் பெற்று அவர் மத்திய அரசின்

அதிகாரத்தை நிலைநாட்டுவதில் வெற்றியும் அடைந்தார். 1772-ல் அவர் எதிர்பாரா வகையில் இறந்தமை, மீண்டும் அரசுரிமைச் சிக்கலை உண்டாக்கியது. இச்சிக்கலே ஆங்கிலேயக் கம்பெனியாரை மராட்டியர் அரசியலில் தலையிடுமாறு தூண்டியது. அக்காலத்திய மராட்டியர் அரசியல் அரங்கில் ரகோபா எனப்பட்ட இரகுநாதராவும் நானாவும் சிறப்புற்று விளங்கினர். ஆனால், இரகுநாதராவ் அரசியல் உலகிலிருந்து ஓய்வுபெற்று இருக்குமிடம் தெரியாது மறைந்தொழிந்த பின்னரும், நானாவினால் என்றுமே அசைக்க முடியாத ஆதிக்கம் பெற்று விளங்க முடியவில்லை. அவர் இறக்கும் நிலையில் சிந்தியா பேராற்றலும் பெருந்திறனும் உடையவராகத் தோன்றினர். அதற்குப் பிறகு நெறி திறம்பிய பேஷ்வாவான இரண்டாம் பாஜிராவ் நிலையான அமைதி வாய்ந்த ஆட்சியை நாட்டில் நிறுவவொட்டாமல் தடுத்துவந்தார். இவ்வாறு 1772ஆம் ஆண்டில் பேஷ்வா மாதவராவ் இறந்ததிலிருந்து அதற்குப் பிறகு முப்பது ஆண்டுகள் கழிந்து நடைபெற்ற பஸ்ஸீன் (Bassein) உடன்படிக்கைக் காலம்வரையில் பூனாவில் ஆற்றல்மிக்க அரசு இல்லாமற்போனமை இங்குக் குறிப்பிடத் தக்கதாகும்.

இரண்டாவதாகக் கருதத்தக்கது மராட்டியரின் மாநில அரசுகள் பல விரைந்து வளர்ந்தமையாகும். கெய்க்வார் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் பரோடாவைத் தலைநகராகக் கொண்டு குஜராத்தில் ஓர் அரசினை நிறுவினர். அதைப் போன்றே நாகபுரியைத் தலைநகராகக்கொண்டு பான்சலேக்கள் ஓர் அரசினை நிறுவினர். அவர்களுடைய அரசு கிழக்கே ஒரிசா மாநிலம்வரையிலும் பரவியிருந்தது. வடக்கே ஹோல்காரும் சிந்தியாவும் முதலில் தனித்தனியே அரசுகளை நிறுவினர். பின்னர் மராட்டியப் பேராதிக்கத்தைத் தமக்கே உரியதாகச் செய்துகொள்ளுவதற்கு அவர்களிருவரும் போராடி வந்தனர். 1761 முதல் 1795ஆம் ஆண்டுவரை அரசி அகல்யாபாய் நிலையான நாட்டுப்புற அரசினை இந்தூரில் நிறுவி ஆண்டுவந்தார். எல்லையற்ற பொறுமையுடனும், அளவிட இயலாத வள ஆதாரங்களுடனும் மகாத்ஜி சிந்தியா ஓர் அரசினை நிறுவினர். அவ்வரசு சிறிது காலம் வட இந்தியாவிலே தன்னிகரற்று விளங்கியது. முகலாயப் பேரரசின் எலும்புக்கூட்டை மராட்டியரின் ஆற்றலாகிய தசையைக் கொண்டு போர்த்தி முகலாயப் பேரரசிற்குப் புத்துயிரளிக்கும் பணியில் அது ஈடுபட்டிருந்ததைப்போன்று தோன்றியது. அவருடைய படையில் மராட்டியப் படையின் துணைத்

தலைவர்கள் இருந்ததோடு கூலிப்படையினரும், ஃபிரெஞ்சு அதிகாரியான டி பாய்னேயின் (de Boigne) தலைமையின் கீழ்க் கட்டுப்பாட்டிலும் ஒழுங்குமுறையிலும் தேர்ச்சி பெற்றிருந்த படைப்பிரிவுகளும் இருந்துவந்தன. பதினெட்டாம் நூற்றாண்டின் எழுபது ஆண்டுகளில் அவர் பூனாவின் ஆதிக்கத்திலிருந்து தம்மை விடுவித்துக்கொண்டார். அதுமுதல் தில்லியரசில் தாம் தன்னிகரற்று விளங்குவதற்காகப் போரிட்ட போராட்டங்களில் எல்லாம், தம்முடைய பயிற்சிமிக்க கட்டுப்பாடுடைய படைகளையே பயன்படுத்திவந்தார். இராசபுதனத்தில் தம்முடைய மேலாண்மையை அவர் நிறுவ முயன்றபொழுது அவருடைய படைகளே பேருதவியாக இருந்தன. அவருடைய பேராற்றல் லால்சன்ட்டினால் (Lalsont) பலவீனப்பட்டது. அதன் விளைவாக ஷா ஆலம் குருடராக்கப்பட்டார். ஆனால், அவர் மீண்டும் புத்துயிர்ப்புப் பெற்றார். அதன் பிறகு அவர் முன்பிருந்ததைக்காட்டிலும் பேராற்றலும் பெருந்திறனுமுடையவராகச் சிறப்புற்று விளங்கினார். அவருடைய அரசு சட்லெஜ் ஆறுமுதல் நருமதை ஆறுவரை பரவியிருந்தது. முகலாயப் பேரரசினால் சிறப்பாகப் போற்றப்பட்ட முகலாயப் பேரரசின் பிரதிநிதியாவார் அவர். அவரைப் பேரரசர் தம்முடைய துணைப்பகர ஆட்சியாளராக அமர்த்திக்கொண்டார். ஆனால், இன்னும் பூனாவைத் தம் விருப்பத்திற்கடங்கி நடக்குமாறு செய்யவேண்டும் என்பதே அவருடைய பேராவலாக இருந்துவந்தது. 1792ஆம் ஆண்டில் பூனாவில் செல்வாக்குப் பெற்றிருந்த ஹோல்காரும் பட்னாவிசும் தம்முடைய மேலாண்மையை ஏற்றுக்கொள்ளுமாறு செய்வதற்காகப் பெரும் படையுடன் அவர் அவ் இருவர்மீதும் படையெடுத்துச் சென்றார். அவர் 1794-ல் இறந்தார். அவருக்குப் பிறகு ஆட்சிக்கு வந்த தௌலத் ராவ், சிந்தியாவின் ஆற்றலில், அறிவில் கால்பங்கு கூடப் பெற்றிருக்கவில்லை. சிந்தியாவின் திறமைமிக்க படைகளும் அவருக்குப் பிறகு படிப்படியாகத் திறமையற்றுப் போயின. இவ்வாறு 1790ஆம் ஆண்டு அளவில் இந்தியாவில் இருந்து ஆப்கானிய அதிகாரம் வெளியேறிற்று; முகலாயரின் ஆதிக்கம் சீரழிந்துபோயிற்று; மராட்டியரின் ஆதிக்கம் சிதறுண்டு சிறு சிறு பிரிவுகளாயிற்று. அவற்றுள் பேராற்றல் வாய்ந்ததாகவும், பெருநம்பிக்கை அளிக்கக் கூடியதாகவும் இருந்துவந்த சிந்தியாவின் அரசு தன்னுடைய தலைமைப் பதவியை இழக்கும் காலம் நெருங்கிக்கொண்டிருந்தது.

## ஆதாரங்கள்

சியால்-உல்-முதாக்குரின் (Siyal-ul-Mutaqherin) என்னும் நூலின் முதல் தொகுதியும், மூன்றும் தொகுதியும் இக் காலத்து வரலாற்றிற்குச் சிறந்த அடிப்படை நூல்களாக உள்ளன. ஃபிராங்கிளின் என்பவர் எழுதியுள்ள 'ஷா ஆலத்தின் ஆட்சிக் காலத்து வரலாறு' என்னும் நூல் அவ்வரசருடைய காலத்தை ஒட்டி வாழ்ந்தவர் கூறும் விளக்கங்களையும் கருத்துகளையும் கொண்டதாகும். W. இர்வின் எழுதியதும் (1921-2), சர் J. சர்க்காரால் முடிக்கப்பெற்றதுமான 'பிற்கால முகலாயர்கள்' என்னும் நூல் (2 தொகுதிகள்) 1707 முதல் 1739 வரை முகலாயப் பேரரசின் வரலாற்றையும், நாதிர்ஷாவின் படையெடுப்பையும் மிக விரிவாக எடுத்துரைக்கிறது. சர் J. சர்க்காரின் 'முகலாயப் பேரரசின் வீழ்ச்சி' (4 தொகுதிகள், 1932-50) என்னும் நூல் 1803ஆம் ஆண்டு பிரிட்டிஷார் தில்லியைக் கைப்பற்றிய வரலாறுவரை விரிவாகவும் தெளிவாகவும் விளக்குகிறது. H. G. கீனே (Keene) என்பவர் எழுதியுள்ள 'முகலாயப் பேரரசின் வீழ்ச்சி' (1887) என்னும் சுருக்கமான நூல் பெரிதும் பயன்படக் கூடியதாகும். T. G. P. ஸ்பியர் (Spear) என்பவர் எழுதியுள்ள 'முகலாயப் பேரரசின் அந்தியொளி' என்னும் நூல் தில்லி அரசின் வரலாற்றையும், 1858ஆம் ஆண்டுவரை முகலாயரின் நிலையையும் சித்திரிக்கிறது.

ஆப்கானியர், பாரசீகர் அக்காலத்து இந்திய வரலாற்றில் பெற்ற இடத்தை சர் சைக்ஸ் (Sykes) என்பவர் எழுதியுள்ள 'பாரசீகத்தின் வரலாறு', 'ஆப்கானிஸ்தானத்தின் வரலாறு' (1920, 1940) என்னும் நூல்களில் காணலாம்.

மராட்டியரின் வரலாற்றை இலக்கியச் சுவை நலம் கனிய J. கிராண்ட் டஃப் (Grant Duff) என்பவர் எழுதியுள்ள 'மராட்டியரின் வரலாறு' (3 தொகுதிகள், 1826) என்பதும், தற்காலத்தில் C. A. கின்செய்டு (Kincaid) என்பவரும் D. B. பரஸ்னிஸ் (Parasnis) என்பவரும் சேர்ந்து எழுதியுள்ள 'மராட்டிய மக்களின் வரலாறு' (3 தொகுதிகள், 1918-25; முதல் தொகுதி 1931) என்னும் நூலும் குறிப்பிடத்தக்கனவாகும். மிக அண்மைக் காலத்தில் G. S. சர்தேசாய் என்பவர் 'மராட்டியரின் புதிய வரலாறு' (3 தொகுதிகள், 1946) என்னும் நூலினைத் திறம்பட எழுதியுள்ளார். M. G. ரானடே அவர்கள் எழுதியுள்ள 'மராட்டியரின் எழுச்சி' என்னும் நூலும் (1900), G. S. சர்தேசாய் எழுதியுள்ள 'மராட்டிய வரலாற்றின் முக்கிய நிகழ்ச்சிகளின் போக்கு (Main Currents of Maratha History) (1926) என்னும் நூலும் சிறப்புமிக்க வரலாற்று நூல்களாகும்.

ஐரோப்பியரின் துணிகரச் செயல்களை அறிவதற்கு, H. காம்ப்டன் (Compton) என்பவர் எழுதியுள்ள 'இந்துஸ்தானத்தில் ஐரோப்பியரின் துணிகரச் செயல் வீரர்கள்' (European Adventurers in Hindustan) (1892) என்னும் நூலினைப் பார்க்க.

# 4. மராட்டியரின் அரசியல் முறை

முகலாயர்களுக்குப் பிறகு பேரரசின் அதிகாரத்தைப் போற்றிக் காத்தவர்கள் மராட்டியர்களே என்பதை முன்னர் நாம் கண்டோம். மேலும், முகலாயர்களுக்குப் பிறகு இந்தியாவின் பேரரசுரிமையைப் பாரசீகர்களோ, ஆப்கானியர்களோ போற்றிக் காக்கவில்லை என்பதையும் நாம் கண்டோம். பாரசீகர்களின் முயற்சி புகழ்மிக்க கொள்ளைக்காரர்களின் தாக்குதல்களைவிட எவ்வகையிலும் வேறுபட்டு விளங்கவில்லை என்றே கூறலாம். ஆப்கானியரின் படையெடுப்புகளை நடத்திய அகமது ஷா அப்தாலியினிடத்துப் பெற்ற வெற்றியைப் போற்றிக் காக்கும் வள ஆதாரமோ, பெற்ற வெற்றியைத் தங்களுக்கு நன்மை பயக்கத்தக்க வகையில் பயன்படுத்திக் கொள்ளுவதற்குரிய மதிநலமோ அவர்களுக்கு இருந்ததாகத் தெரியவில்லை. மராட்டியர் பேரரசுரிமையைப் போற்றிக் காக்கும் பொறுப்பை ஏற்றமை முற்றிலும் முதிர்ச்சி பெறாத முயற்சி என்பதை மெய்ப்பித்தது. ஆனால், அவர்கள் ஆங்கிலேய-முகலாய ஆட்சி இடையீட்டுக் காலத்தில் மற்றவர்கள் யாருமே அடக்கியாளாத பெருநிலப் பரப்பினை நெடுங்காலம் தங்கள் ஆட்சிக்குட்படுத்தியிருந்தனர் என்பதுமட்டும் மறுக்க முடியாத உண்மையாகும். எனவே, அவர்கள் இந்திய வாழ்க்கை நெறிக்கு வழங்கிய பண்புகளை நாம் ஆராய்ந்தறிய வேண்டுவது இன்றியமையாததாகிறது.

மாவீரன் சிவாஜியின் எழுச்சியை முன்போர் அதிகாரத்தில் விரிவாகக் கண்டோம்.[1] இங்கு நாம் மராட்டியரின் ஆட்சி முறையின் இயல்புகளைக் காணலாம். மராட்டியரின் இயக்கம் முழுவதுமே முஸ்லீம்களின் ஆதிக்கத்தின் எல்லை மீறிய செயல்

[1] இந் நூலின் ஆறும் பிரிவின் ஆறும் அதிகாரத்தில் பார்த்தோம்.

களை எதிர்த்த இந்து சமயத்தினரின் எழுச்சியாகவே கருதப் பட்டுவருகிறது. எனவே, மராட்டியரின் நிலையங்களும் இவ் வுணர்வாலேயே உருவாக்கப்பட்டதாகக் கூறப்படுகிறது. ஆனால், மராட்டியரின் வீரவுணர்வு சமயத்தைக் காப்பதற்குப் போரிடவேண்டும் என்ற ஆழ்ந்த உணர்ச்சிகளால் வளர்க்கப் பட்டது; மக்கள் எல்லாரும் சமயத்தின் பெயரால் ஒன்றுபட வேண்டும் என்பதை வலியுறுத்திய பக்தி இயக்கத்தால் மக்கள் உள்ளங்களிலே சமயப்பற்று ஆழப் பதியுமாறு செய்யப்பட்டது. உண்மையில் மராட்டியரின் வீரவுணர்வு மறுமலர்ச்சியின் வெளிப்பாடாகவும், போரில் ஈடுபாடு கொண்ட இந்து சமயத்தின் புறத்தோற்றமாகவும் தோன்றி யது எனலாம். எவ்வெந் நிலையங்கள் இவ் உணர்வினால் அலங் கரிக்கப்பட்டிருந்தனவோ, அவையெல்லாம் அவை தோன்றிய இடங்களிலிருந்து வந்த வழக்காற்று மரபுகளாலும், அவை தோன்றிய காலத்தின் சூழ்நிலைகளாலும் செல்வாக்காலும் பெரிதும் பாதிக்கப்பட்டுள்ளன. எனவே, சிவாஜியின் தன் னுணர்ச்சிமிக்க இந்து சமயம் குறிப்பாகத் தெரிவிப்பதைப் போன்று மராட்டியரின் ஆட்சிமுறையின் வரைச்சட்டம் முற்றிலும் இந்து சமய அடிப்படையில் அமைந்ததன்று என்பதை மாணவர்கள் எளிதில் அறியலாம். மராட்டியர் என்றுமே செயல்முறைக் கோட்பாட்டினராவர். ஒரு பொருள் பயன்தரத்தக்கது என்பதை அறிந்துவிட்டால், அவர்கள் அதை விருப்பத்தோடு பயன்படுத்துவதற்கு முயலுவர். ஒன்று எவ்விடத்துக் காணப்பட்டாலும் அது பயன்மதிப் புடையதாகத் தோன்றுமானால், அதை அவர்கள் கடன் வாங்கிக்கொள்ளவும், புதிதாகத் தாங்கள் அதைப் பின் பற்றவும் தயங்கமாட்டார்கள்.

பதினேழாம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் இந்தியா வின் மேற்குப் பகுதியில் அரசியல் ஆதிக்கம் அடியோடு அழிந்துபோயிற்று. அவ் வழிவுச் சின்னங்களை அடிப்படை யாகக்கொண்டு மராட்டியரின் அரசு எழுச்சிபெற்றது. 1632 ஆம் ஆண்டில் நைசாம் சாகியின் அகமது நகர் அரசு முக லாயப் பேரரசிற்குள் சேர்த்துக்கொள்ளப்பட்டது. பீஜபூர் இராச்சியம் மேன்மேலும் பலவீனப்பட்டுக்கொண்டுவரு வதனைத் தெரிவிக்கும் அறிகுறிகள் பல அதனிடத்துத் தோன் றின. மத்திய அரசின் ஆற்றல்மிக்க கட்டுப்பாடு இல்லாமற் போனமையால், சிறு தலைவர்களின் கொடுஞ்செயல்கள் கோர தாண்டவம் புரிந்தன; தடியெடுத்தவன் தண்டல்காரனானான்; ஒருவன் மற்றொருவனைத் தாக்கித் துன்புறுத்துவது அன்றாட

நிகழ்ச்சியாயிற்று. அக்காலம் வஞ்சனையும் சூழ்ச்சியுமே வடிவமான மனித ஓநாய்களும் குள்ளநரிகளும் கோலோச்சிய காலம்; கொள்ளையும் கொலையும் கொஞ்சி விளையாடிய காலம்; குடும்பச் சண்டைகளும் பரம்பரைப் பகைமையும் பழிக்குப் பழிவாங்கும் பாவச்செயல்களைச் செய்யத் தூண்டிய காலம். இவை எல்லாவற்றிற்கும் மேலாகக் குறுநிலத் தலைவர்களைக் கட்டுப்படுத்தும் ஆற்றல் வாய்ந்த தனிப்பெருந் தலைவர்கள் மறைந்துபோன காலம். அக்காலத்தில் ஓநாய்கள் பூனாவில் இரை தேடிச் சுற்றிக்கொண்டிருந்தன.

'மாவல் பள்ளத்தாக்கில் வாழ்ந்த மக்கள் பல வகையில் கொடிய விலங்குகளைக் காட்டிலும் மிக இழிந்தவர்களாக இருந்தனர். குடும்பச் சண்டைகள் அந்நாளைய நாள்வண்ணமாக இருந்தது. கொள்ளை யடிப்பது அக்காலத்துப் பொழுதுபோக்காகும். ஒவ்வொரு தலைவரையும் எதிர்த்து இரண்டுமூன்று பேர்களாகிலும் உரிமை கொண்டாடிப் போரிட்டுவந்தனர். மராட்டியர்களின் தலைவன் தன் குருட்டுத்தனமான மூர்க்கத்தனத்தால் தன்னை எதிர்க்கும் தலைவனின் விதவையிடத்தும், அனாதையாகிவிட்ட பிள்ளைகளிடத்தும்கூடக் கருணை காட்டுவது இல்லை. சில சமயங்களில் அக்குடும்பம் முழுவதுமே அழிந்தொழிந்தாலும்கூடப் பகைமைகொண்ட எதிரியினுடைய மூர்க்கத்தனம் குறைவதில்லை; குடும்பச் சண்டைகள் ஒரு முடிவிற்கு வருவதில்லை. வயது முதிர்ந்த பற்றுறுதிகொண்ட ஒரு பற்றாளன் கருவுற்ற மகளிரையும், அடுத்துத் தலைவராக வருவதற்குரிய பச்சிளங் குழந்தைகளையும் அவர்கள் ஊரிலிருந்து நெடுந் தொலைவிலுள்ள மலையரண்களுக்குக் கவர்ந்து கொண்டுபோய்க் காப்பாற்றுவதே அடிக்கடி நாம் கேள்வியுறும் செய்தியாகும். தன்னுடைய குடும்பத்தினர் செய்த தவற்றை ஒரு குழந்தையும் மறப்பதற்கு அனுமதிக்கப்படுவதே இல்லை. அக்குழந்தை வளர்ந்து இளைஞனானவுடன் தன் உறவினர்களைத் துன்புறுத்தியவர்களைப் பழிக்குப் பழி வாங்குவதையும், தன் வீட்டைக் கொள்ளையடித்தவர்களைப் பழிவாங்குவதையும் அவன் தவறாமல் செய்துவந்தான். பழைய ஊராட்சித் தலைவர்களான தேஷ்முக்குகளின் (deshmukhs) குடும்பத் தாள்களில் அக்காலத்து அரசழிவுக் குழப்பத்தின் அழியாத அடிச்சுவடுகள் பொறிக்கப்பட்

டுள்ளதைக் காணலாம். அவற்றுள்ளும், மகுரைச் சேர்ந்த ஐக்தலேக்களின் வீட்டுத் தாள்களிலும், ரோகித்கோரைச் சேர்ந்த ஐக்டேக்களின் வீட்டுத் தாள்களிலும்தாம் அக்காலத்திய குடும்பச் சண்டைகளினால் உண்டான கொடுஞ் செயல்களைப்பற்றியும், இரத்த ஆறு ஓடியதைப்பற்றியும் காண முடியும். ஐக்டேக்கள் தங்கள் குடும்பத்தில் நெடுங்காலமாகப் பணிபுரியும் வேலைக்காரர்களைக்கூட நம்பமுடியாத நிலையில் அல்லற்பட்டனர் என்பது இங்குக் குறிப்பிடத் தக்கதாகும்.'[1]

ஆகவே,, ஷாஜியின் எழுச்சியும், அவர் நிறுவிய அரசினை சிவாஜி திடப்படுத்தியமையும் உள்ளூரப் பாழ்பட்டிருந்த நிலையினைத் திருத்தி ஒழுங்கையும் அமைதியையும் திரும்பவும் நிலைநாட்டியதைப்போன்று தோன்றும். முதலில் மராட்டிய இராச்சியம் அரசழிவுக் குழப்பத்திலிருந்து மீட்கப்பட்டது. அதன்பிறகு மையக் குவிமுக ஆட்சியினையுடைய உறுதிப்பாடுடைய அரசாக அமைக்கப்பட்டது. மிராசுதார்கள் என்று பொதுவாக அழைக்கப்பெற்றுவந்த, பண்டைக் காலம்முதல் மரபுரிமைவழி ஊர்காவல் அதிகாரிகளாக இருந்துவந்த தேஷ்முக்குகளையும், வருவாய்த்துறை அதிகாரிகளாக இருந்துவந்த தேஷ்பாண்டேக்களையும் நேரடியான கண்காணிப்பின் கீழ்க் கொண்டுவந்து அவர்களுடைய அதிகாரத்தை அடக்கியொடுக்குவதே சிவாஜியினுடைய முதல் நோக்கமாக இருந்தது எனலாம். அவர்கள் அழித்தொழிக்கப்படவில்லை. அதற்கு மாருக, அவர்களுடைய உரிமைகளும் அவர்களுக்குச் சேரவேண்டிய கடமைகளும் வரையறுக்கப்பட்டு நிர்ணயம் செய்யப்பட்டன. அவர்களுடைய கடமைகள் புதிய அரசரின் அதிகாரிகளான கற்கண்களின் (karkuns) கண்காணிப்பிற்கு விடப்பட்டது. அவ் உள்நாட்டுத் தலைவர்கள் சிலருடைய கோட்டைகள் இடித்து மண்மேடாக்கப்பட்டன. அவர்கள் மாறிக்கொண்டிருக்கும் காட்சிகளின் உரிமைமிக்க பார்வையாளர்களாகக் கீழ்ப்படுத்தப்பட்டனர். இவ்வடிப்படையிலேயே சிவாஜி தம்முடைய அரசினை ஒருமுகப்படுத்தப்பட்ட அரசாக அமைத்தார். மத்திய அரசின் தலைமை இடத்தை அரசர் எட்டு வகையான தலைமை அதிகாரிகளுடன் அலங்கரித்துவந்தார். அவ் எட்டு வகையான தலைமை அதிகாரி

[1] S. N. சென், மராட்டியரின் ஆட்சிமுறை, 2ஆம் பதிப்பு, பக்கங்கள் 29-30.

களும் 'அஷ்டப் பிரதானிகள்' என்று அழைக்கப்பெற்றனர். இக் குழுவினிடத்து சிவாஜி புதிதாகச் சில மாறுதல்களைச் செய்தார். அவர் அவ் எட்டு அதிகாரிகளையும் கொண்ட அக் குழுவினை அரசருக்கு அறிவுரை கூறும் ஆலோசனை மன்றமாக மாற்றியமைத்தார். அதை அரசப் பிரதிநிதியின் (Viceroy) செயற்குழுவோடு ஒப்பிடுவதைக்காட்டிலும் அல்லது தற்காலத்திய அமைச்சரவையுடன் ஒப்பிடுவதைக்காட்டிலும் டியூடர் அரசமரபினர் காலத்திய இங்கிலாந்தில் சிறப்புற்று விளங்கிய 'பிரிவி கவுன்சிலோடு' ஒப்பிட்டுரைக்கலாம். பிரிவி கவுன்சில் மதியுரைஞர்களை உறுப்பினர்களாகக் கொண்டு இருந்ததைப்போன்று 'அஷ்டப் பிரதானிகள்' என்னும் அமைப்பும் அமைந்திருந்தது எனலாம். முதல் அமைச்சர் முக்கியப் பிரதானி என்று அழைக்கப்பட்டார். அவருக்கு வழங்கிய பட்டப் பெயர் 'பேஷ்வா' என்பதாகும். அவர் நாட்டின் பொது ஆட்சிமுறையைக் கண்காணிக்கும் தலைமையதிகாரியாகவும், அரசரின் இலச்சினை பொறிக்கப் பெற்ற முத்திரையை வழங்கும் அதிகாரியாகவும் விளங்கினர். அவ்வாலோசனைக் குழுவில் சேனைபதி எனப்படும் தலைமைப் படைத்தலைவரும், ஒருவகையில் நிதிமந்திரியைப் போன்ற 'மஜும்தார்' எனப்படும் அமைச்சரும், 'சுமந்தர்' எனப்படும் அயல்நாட்டுத்துறைச் செயலாளரும், 'நியாயாதிபதி' (Nyayadhish) எனப்படும் தலைமை நீதிபதியும், 'பண்டித ராவ்' எனப்படும் சமயத்துறைத் தலைமை அதிகாரியும் உறுப்பினர்களாக இருந்துவந்தனர். சிவாஜியின் ஆட்சிக் காலத்தில் அவ்வதிகாரிகள் அனைவரும் அரசருக்கு நேரடியாகக் கட்டுப்பட்ட கீழ் அதிகாரிகளாக இருந்துவந்தனர். அக் காலத்தில் அவர்களுக்கு அப் பதவிகள் மரபுரிமையாக்கப்படவில்லை; அவர்களுக்கு அப் பணிபுரிவதற்காக மானியங்களோ, ஜாகீர்களோ வழங்கப்படவில்லை. அவர்களுக்குதவியாகச் செயலாளர்களைத் தலைவர்களாகக்கொண்ட அலுவலகப் பணித்துறைகள் இயங்கிவந்தன. அச் செயலாளர்களும் பணித்துறை ஊழியர்களுமே நாட்டின் மையக் குவிமுக ஆட்சிக் கருமுதலாக இருந்துவந்தனர்.

இந்தியாவின் அரசினைத் தொன்றுதொட்டுத் தாங்கிவரும் தூண்கள் மூன்றாகும். நாட்டினுடைய வருவாயுள் முதன்மையானதான நிலவரியைச் செலுத்திவந்த உழவர்கள் முதற் பெருந் தூணைக் கருதப்படத்தக்கவராவர். நாட்டிலே நீதியையும் ஒழுங்கையும் நிலைநாட்டிய நீதிநிர்வாகத்தினர் இரண்டாவது பெருந் தூணைப் போற்றப்பட்டுவந்தனர். சமுதா

யத்தை அயலார் தாக்குதல்களிலிருந்து காத்துவந்த படை மூன்றுவது தூணுகக் கருதப்பட்டது. வருவாய்த்துறையினரின் வசதிகளுக்காக—வரி விதிக்கப்படுவது எளிமையாகச் செயற் படுத்தப்படுவதற்காக மராட்டியரின் நாடு பல மாவட்டங்க ளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. அம் மாவட்டங்கள் 'பிராந்தி யங்கள்' என்று அழைக்கப்பெற்றன. அவை ஒவ்வொன்றும் பல உட்பிரிவுகளையுடையனவாக இருந்தன. அவற்றை முக லாயருடைய பர்காஞக்களோடும் சர்க்கார்களோடும் ஒப்புமையுடையனவாகக் கூறலாம். நிலவரித் தீர்வை விதிப்பு முறை அகமதுநகரைச் சார்ந்த மாலிக்அம்பரின் (Malik Amber) தீர்வை முறையை அடிப்படையாகக் கொண்டிருந்தது. அம் மாலிக் அம்பர் நான்கு வகையாக நிலங்களைத் தரம் பிரித் திருந்தார். அவர் கைப்பணமாகவே வரி செலுத்தவேண்டும் என்பதை அறிவித்ததோடு, வரி செலுத்தவேண்டிய தொகை எவ்வளவு என்பதையும் உறுதியாக வரையறுத்திருந்தார். மேலும், அவர் உழவர்களிடையே வரியைத் தண்டி, அதை அரசிடத்துச் சேர்க்கும் வருவாய்த்துறை அதிகாரிகளைப் போன்று இடையே தரகர்களாக இருந்துவந்த உழவர்களாகிய அதிகாரிகளை அடியோடு அழித்தொழித்தார். ஊர்களைச் சேர்ந்த தலைவர்களுக்கும் அரசாங்க அதிகாரிகளுக்கும் நேரடி யாகத் தொடர்பு இருக்கவேண்டும் என்பதற்காகவே அவர் இத் தரகு முறையை ஒழித்துக்கட்டினூர். ஊரினுடைய தலைவன் 'படேல்' என்று அழைக்கப்பெற்ருன். 1678ஆம் ஆண்டு அன்ஞஜி என்பவரின் தலைமையின்கீழ், சிவாஜி, நாட்டின் நிலங்களனைத்தையும் முறையாகவும் செம்மையாகவும் அளந்து நிலவுடைமைப் பேராய்வுக் கணிப்பேட்டை அமைத் தார். அதனுடன் அவர் பல சிறு கடமைகளையும் சிறு தீர்வை களையும் நீக்கிஞர். தரிசு நிலங்களைப் பல வகையில் பய னுடைய நிலங்களாக மாற்றுமாறு சிவாஜி மக்களை ஊக்கு வித்து வந்தார். உழவர்கள் அரசிஞல் போற்றிக் காக்கப் பட்டனர். 'அவ்வுழவர்கள் எவ்வளவு தொகையினை வரியாகச் செலுத்தவேண்டும் என்பதை அறிந்திருந்தனர்; அவர்கள் அத் தொகையைப் பெருஞ் சுமையாகக் கருதித் துன்பப் படாது எளிதில் செலுத்தக்கூடிய ஆற்றல் உடையவர்களாக வும் இருந்தனர்.'[1] நாட்டிலே நீதியையும் ஒழுங்கையும் நிலை நாட்டுவது ஊர்களின் பொறுப்பிலே விடப்பட்டது. ஊர்களைச் சேர்ந்த அதிகாரிகளும் பஞ்சாயத்தார்களும் அப் பணியைச்

[1] கென்னடி, 'மாண்புமிக்க முகலாயர்களின் வரலாறு' (History of the Great Mughals), II தொகுதி, பக்கம் 125.

செய்துவந்தனர். எல்லா வகையான உரிமை வழக்குகள் (civil cases) இம் முறையினாலேயே தீர்க்கப்பட்டுவந்தன. குற்ற வழக்குகள் அரசருடைய அதிகாரிகளால் ஆராயப் பட்டுத் தீர்ப்புகள் வழங்கப்பட்டுவந்தன. பட்டணங்களில் நியாயாதிபதிகளால் வழக்கு விசாரணை செய்யப்பட்டுவந்தன. முகலாயர் காலத்து வழக்கு விசாரணை அதிகாரிகளான குவாசிகளே (Qazi) மராட்டிய மொழியில் 'நியாயாதிஷ்கள்' என்னும் பெயரால் அழைக்கப்பட்டுவந்தனர். படைத்துறையில் இயங்குபடைப் பிரிவுகளும், நிலைப்படைப் பிரிவுகளும் இருந்தன. நிலைப்படைப் பிரிவினுள் மலைக்கோட்டைகளும் அடக்கப்பட்டிருந்தன. அத்தகைய மலைக்கோட்டைகள் 240 இருந்ததாகத் தெரிகிறது. அவ் வொவ்வொரு மலைக்கோட்டையிலும் சராசரி 500 படைவீரர்களைக்கொண்ட கோட்டைக் காவல்படை நிறுத்தப்பட்டிருந்தது. ஒரே சமயத்தில் அவை அனைத்தும் கோட்டைப் பாதுகாவல் படையினால் முற்றிலும் நிரப்பப்பட முடியாத நிலையில் இருந்துவந்தன. அவற்றுள் பல பெரும்பாலும் பெயரளவிற்குச் சில படைவீரர்களையுடையனவாகவே இருந்திருக்க வேண்டும். அக் கோட்டைகள் அனைத்தும் அமைதிக் காலத்தில் பொருள்களைச் சேகரித்துச் சேமித்துவைக்கும் களஞ்சியங்களாகப் பயன்பட்டன. போர்க் காலங்களில் அவை அடைக்கலமடைவதற்குரிய அரண்களாகப் பயன்பட்டன. அவை வியப்பிற்கு இடமளிக்காத வகையில் பாதுகாப்புடையனவாகச் செய்யப்பட்டிருந்தன. அவை அனைத்தும் மராட்டியரின் தற்காப்புத் திட்டத்தின் நடு நாயகமாக விளங்கின. அவுரங்கசீபினை எதிர்த்துப் போரிட்ட காலத்து அவை தலைசிறந்த அரண்கள் என்பது மெய்ப்பிக்கப் பட்டன. அவற்றைக் கண்காணித்துவருவதற்கு சிவாஜி பல சாதியினர் கலந்த பாதுகாப்பு முறை ஒன்றைத் தமது கூர்த்த மதியின் திறத்தால் நிறுவியிருந்தார். கோட்டை வாயில்களை மராட்டிய இனத்தைச் சேர்ந்த அவுல்தார்களைக் காத்துவருமாறு அவர் கட்டளையிட்டார். கோட்டையின் கணக்கு வழக்குகளையும், படைவீரர் பெயர்க் குறிப்பீட்டுப் பட்டியலையும் எழுதுவதை பிராமண சாதியைச் சேர்ந்த 'சப்னி'களிடம் (sabnis) அவர் ஒப்படைத்து இருந்தார். பண்டசாலையின் பொறுப்பினைப் பிரபு மரபைச் சார்ந்த கற்கண்களே (karkuns) ஏற்று நடத்திவந்தனர். இயங்கும் படையில் முதன்மையான பிரிவு நிலமானியப் படைமுறைக் குடும்பத் தலைவர்களைக் கொண்ட அணிவகுப்பாகும். இப் பிரிவு பொருத்தமற்ற பல வகையான இயல்புகளையுடைய மக்களை வீரர்களாகக் கொண்

டிருந்தது. இப்படைவீரர்களை அரசன் நம்புவதும் இயலாத ஒன்ருகவே இருந்துவந்தது. ஆனல், இவ் இயங்கும் படையின் முக்கியப் பகுதியாகக் குதிரைப் படையும் காலாட் படையும் இருந்துவந்தன. இவற்றை அரசே நேரடியாகக் கண்காணித்துவந்தது. அப்படைவீரர்கள் பல படிநிலைகளாகப் பிரிக்கப்பட்டு ஒரு குழுவினராகவும் சேர்க்கப்பட்டிருந்தனர் என்றும் சிறப்பாகப் போற்றத்தக்க கடுமையான விதிமுறைகளின்மூலம் அவ் வீரர்கள் அரசாங்கத்தால் கட்டுப்படுத்தப் பட்டுவந்தனர். இவற்றேடும் கூடுதலாக 'சிலகதார்' (silahdar) குதிரைப் படையும் இருந்துவந்தது. இப்படையைச் சேர்ந்தவர்கள் தாங்களே குதிரைகளையும் படைக்கலன்களையும் ஆயத்தம் செய்துகொண்டனர். அவர்களுடைய குதிரை உழவுத் தொழிலுக்குப் பயன்படுத்தப்பட்ட குதிரைகளைப் போன்றிருந்தன. அப்படைவீரர்கள் கடற்கொள்ளைக்காரர்களைப் போன்றவர்கள். அவர்கள் எந்தப் படையெடுப்பாக இருந்தாலும், அதில் கலந்துகொள்ளுவதற்கு அரசரால் அனுமதியளிக்கப்பட்டுவந்தனர். அவ் வீரர்களுக்கு மராட்டிய மொழியில் 'பெந்தராக்கள்' (pendharas) என்னும் பெயர் வழங்கியது. அவர்களே பிற்காலத்துக் கொடுமைமிக்க பிண்டாரிகளின் முன்னேடிகளாவர்.

நேரடியாக அரசரின் ஆட்சிக்குட்பட்ட தாயகம் மராட்டியர்களால் சுயராச்சியம் (Swarajya) என்று அழைக்கப் பெற்றது. அந் நாடு பதினறு மாவட்டங்களாகப் பிரிக்கப் பட்டிருந்தது. அயலாருடைய ஆட்சிக்குட்பட்டிருந்த பகுதிகள் புதிதாகக் கைப்பற்றப்பட்டு மராட்டிய் அரசோடு இணைக்கப் பட்டிருக்குமானல், அது 'மொகலேய்' என்று குறிப்பிடப் பட்டது. முகலாயர்களிடமிருந்து கைப்பற்றப்பட்ட நிலம் என்பது அதற்குப் பொருளாகும். இஸ்லாமியர் தொடக்க காலத்தில் தார்-உல்-இஸ்லாம் என்றும், தார்-உல்-ஹார்ப்பு என்றும் பாகுபாடு செய்திருந்தனர். அதைப்போன்றே மராட்டியரும் பாகுபாடு செய்திருந்தனர் எனலாம். இரண்டாவதாகக் கூறப்பட்ட 'மொகலேய்' மராட்டியரின் தாக்குதல்களுக்குட்பட்ட பகுதிகளாகும். இப்பகுதிகளில்தான் இருவகையான கொடுமை செய்து வரியைத் தண்டும் முறைகள் இருந்துவந்தன. அவை 'சர்தேஷ்முக்' என்றும், 'சௌத்' என்றும் பெயர்பெறும். 'சர்தேஷ்முக்' என்பது 'சர்தேஷ்முகி' யாக உள்ள—தனிப்பெருந் தலைவராக மேலாண்மை செலுத்தும் சிவாஜிக்குச் செலுத்தப்பட்டுவந்த வரியாகும். இவ் வரி நிலவருவாய்த் தீர்வையில் பத்தில் ஒரு பங்காகச் செலுத்தப்

பட்டுவந்தது. பகைவர்களாலும் படைகளாலும் துன்புறுத்தப் படாமல் காப்பாற்றப்படுவதற்காக, மக்கள் வருவாய்த் தீர்வையில் நான்கில் ஒரு பங்கைக் கட்டணமாகச் செலுத்தி வந்த வரியே 'சௌத்' என்றழைக்கப்பட்டுவந்தது. அது 'ஆற்றல்மிக்கவர் ஆற்றலற்ற பலவீனமான மக்களிடமிருந்து வற்புறுத்தி வாங்கப்பட்ட வரியாகும்' என்று டாக்டர் சென் கூறுவது இங்குக் குறிப்பிடத்தக்கதாகும். அது ஆங்கிலே யர்கள் வாங்கிய டேன்கெல்டு (danegeld) என்னும் வரியோடு பெரிதும் ஒப்புமையுடையதாகக் காணப்பட்டது.[1] இராச்சி யத்தின் எல்லைகள் வரையறுக்கப்படாமல் குழம்பிக் கிடக் கின்ற பகுதிகளிலும், ஆற்றல் அற்ற அரசு நிலவிவரும் பகுதி களிலுமே இவ்வரிகளிடையே வேறுபாடு செய்யப்பட்டும், வரிகள் வற்புறுத்தித் தண்டப்பட்டும் வந்தன. இவையே சிவாஜியின் நிதி நிலைமை வெற்றிக்குரிய மறைபொருளைத் தெரிவிக்கின்றன. இத்தகைய முறைகளில் தண்டிய பொருளைக்கொண்டுதான் அவர் போர்ச்செலவுகளை எல்லாம் சரிக்கட்டிவந்தார் எனலாம். இத்தகைய வருவாய் இல்லாமற் போயிருந்தால் தொடர்ந்து போரில் ஈடுபட்டிருந்த சிவாஜி பொருள் தட்டுப்பாட்டாலும் பணமுடையாலும் பெரிதும் அல்லற்பட்டிருப்பார்.

இச் சிறு விளக்கத்திலிருந்து புதிய மராட்டிய அரசின் சிறப்பியல்புகள் எவை என்பதை நாம் எளிதில் கண்டறிய லாம்; அவற்றின் தன்மைகள் எவை என்பதையும், அவற்றால் உண்டான விளைவுகள் எவை என்பதையும் இப்பொழுது காண்போம். மிகச் சிக்கலான ஷாஜகானுடைய பேரரசின் ஆட்சிமுறையோடு மராட்டியருடைய ஆட்சிமுறையை ஒப்பிட்டுப் பார்ப்போமானால், மராட்டியருடைய ஆட்சிமுறை மிக எளிமையானதாகவும் அடிப்படையானதாகவும் இருந் தது என்பது தெளிவாகப் புலனாகின்றது. ஆனால், அம் முறையில் பிற்காலத்தில் சிறப்புற்று விளங்கக்கூடிய சிறப்

[1] நீதிபதி ரானடே அவர்கள் 'சௌத்' என்னும் வரி மராட்டி யர்களின் தாக்குதல்களிலிருந்தும், பகைவர்களுடைய தாக்குதல்களிலிருந்தும் மக்களைக் காப்பாற்றுவதற் காகவே வாங்கப்பட்டது என்று கூறும் கருத்தினை டாக்டர் சென்னோ, சர் J. சர்க்காரோ ஒப்புக்கொள்ளவில்லை என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது. பிற்காலத்தில் 'சௌத்' வரி செலுத்திவந்த மக்களை மராட்டியப் படை களே துன்புறுத்திவந்தமையால், அவர்களுக்குப் பாது காப்பு அளிக்கப்பட்டது என்பது பொருத்தமற்றதாகும்.

பியல்புகள் பல இருந்தன என்பது மறுக்க முடியாத உண்மையாகும். மராட்டியரின் அரசு அரசழிவுக் கலகத்திலே கருக்கொண்டது; போரிலே பிறந்தது; பகைமையுணர்விலும் பூசல்களிலும் போற்றி வளர்க்கப்பட்டது. எனவே, தெளிவான கொள்கைகளின் அடிப்படையில் நாட்டாட்சிமுறையை அமைப்பதற்குத் தேவையான நேரமும் வாய்ப்பும் மராட்டியருக்குக் கிடைக்கவில்லை என்றே கூறலாம். ஆகவே, சிவாஜியிடத்துத் தன்னுணர்வுமிக்க இந்து சமய மறுமலர்ச்சிக்குரிய கருத்துகள் எல்லாம் சேர்ந்திருந்ததாகக் கருதப்பட்டாலும், மராட்டியரின் நிலையங்களின் அடிப்படை அல்லது தோற்றம் இஸ்லாமியப் பண்புகள் கலந்த ஒன்ருக இருப்பதைக் கண்டு நாம் வியப்புடையத் தேவையில்லை. ஊராட்சி அமைப்புத் தொன்றுதொட்டு நாட்டிலே இருந்துவருகின்ற வழக்காற்று நெறியை அடிப்படையாகக்கொண்டதாக இருந்தாலும், நிலவரித் தீர்வை முறை பெரிதும் அகமதுநகரில் மாலிக் அம்பர் செயற்படுத்திய திட்டத்திலிருந்து கடன் வாங்கப்பட்டவை என்பதை நாம் முன்னரே பார்த்தோம். மாவட்ட அதிகாரிகளும், மத்திய அரசின் தலைமை அதிகாரிகளும் முகலாயர் ஆட்சிமுறையில் சிறப்புற்று விளங்கிய அதிகாரிகளின் மறுவடிவமாகவே காணப்படுகின்றனர். முதலமைச்சருக்கு வழங்கப்பட்ட சமஸ்கிருதப் பெயரான 'முக்கியப் பிரதானி' என்னும் பட்டம், காலப்போக்கில் பெருஞ் சிறப்புடையதாக விளங்கிய 'பேஷ்வா' என்னும் பட்டப் பெயருக்கு இடங் கொடுத்து மெல்ல மறைந்துபோய்விட்டமை இங்குக் கருதத்தக்கதாகும். மராட்டியர் நிலையங்கள் என்றுமே முழுவதும் இந்து சமயப் பண்புடையனவாக இருந்ததில்லை. எனவே, கடந்த காலத்திய இந்துப் பண்பாட்டின் மறுமலர்ச்சிக் கூறுகளாக அவற்றை நாம் கருத இயலவில்லை. இஸ்லாமியரின் நுழைவினை—தலையீட்டினை எதிர்த்து உண்டான சமயப் புத்துயிர்ப்பால் உந்தப்பட்ட நிலையங்கள் என்று நாம் அவற்றைக் கூற இயலாது. 1674 ஆம் ஆண்டில் சிவாஜியின் முடிசூட்டு விழா நடைபெற்றபொழுது பயன்படுத்தப்பட்ட அரச சின்னங்கள் அனைத்தும் கருத்துக் கலவை வாய்ந்தவை என்பதைப் பல அறிஞர்கள் தெளிவாக விளக்கியுள்ளனர்.

'அரசருடைய சிம்மாசனத்தின்மீது இடம்பெற்றிருந்த பொருள்கள் பண்டை இந்து சமயத்தின் துறவு நெறிக்குரியனவும், தற்கால முகலாயரின் ஆடம்பர ஆரவாரத்திற்குரிய பகட்டுப் பொருள்களும் கலந்த விசித்திர உருவங்களாக இருந்தன. புலித்தோலுக்கு

மேல் பகட்டுமிக்க 'வெல்வெட்டு' என்னும் மென்பட்டு சிம்மாசனத்தின் மீது போர்த்தப்பட்டிருந்தது. சிம்மாசனத்தின் இருபுறங்களிலும் மெருகிடப்பட்ட ஈட்டி முனைகளிலிருந்து அரசருக்கும் அரசாங்கத்திற்கும் உரிய சின்னங்கள் பல தொங்கவிடப்பட்டிருந்தன. வலப்பக்கத்தில் பொன்னால் செய்யப்பட்ட பெரிய பற்களைக்கொண்ட இரண்டு பெரிய மீன்களின் தலைகள் நின்றுகொண்டிருந்தன; இடப்பக்கத்தில் பல குதிரைகளின் வால்கள் தொங்கவிடப்பட்டிருந்தன. (இவை படைத்தலைவரின் வரிசைத் தகுதிகளைக் குறிக்கும் துருக்கிய அரசரின் இலச்சினையாகும்.) மேலும், இடப்பக்கத்தில் பொன்னால் செய்யப்பட்ட 'துலாக்கோல்' ஒன்று நிறுத்தப்பட்டிருந்தது. அது 'சமன்செய்து சீர்தூக்கும் கோலாக' விலையுயர்ந்த ஈட்டி முனையில் தொங்கவிடப்பட்டிருந்தது. (இது நீதி வழங்கும் நேர்மையின் சின்னமாகும்.) இவை அனைத்தும் முகலாயருடைய அவையைப் பார்த்து அமைக்கப்பட்டனவாகும். அரண்மனையினுடைய தலைவாயிலின் இருபுறங்களிலும் இருபெருஞ் சாடிகள் நீரால் நிரப்பப்பெற்று வைக்கப்பட்டிருந்தன. அந்நீரை இலைகளின் கொத்துகள் மறைத்துக்கொண்டிருந்தன. வாயிலின் இருபுறங்களிலும் இரண்டு இளம் யானைகளும், இரண்டு அழகிய குதிரைகளும் நிறுத்தப்பட்டிருந்தன. அக்குதிரைகளுக்குப் பொன்னால் செய்யப்பெற்ற கடிவாளங்கள் பூட்டப்பட்டிருந்தன; கண்கவர் வனப்புமிக்க சேணங்கள் இடப்பெற்றிருந்தன. இந்து சமயத்தின் கொள்கைப்படி இவை நற்குறியின் அடையாளச் சின்னங்களாகும்.'[1]

இதற்கு அடுத்து அக்காலத்துச் சூழ்நிலைகளுக்கு ஏற்ப ஆட்சிமுறை ஆட்சியாதிக்கக் கொள்கையினைப் பின்பற்றும் முறையில் அமைக்கப்பட்டிருந்தது என்பது தெளிவாகப் புலனாகின்றது. எனினும், தாயகத்தில் அல்லது 'சுயராச்சியம்' எனப்படும் மராட்டிய நாட்டுப் பகுதியில் நடைபெற்ற ஆட்சி, 'காவல் குழவி ஓம்பும் தாயினைப்போன்று' அரசன் மக்களின் நலன்களைக் கண்ணுங் கருத்துமாகக் கவனித்துவந்தான். மேலும், அவ் ஆட்சிமுறை மிகவும் திறமைமிக்கதாகவும்,

[1] சர் J. சர்க்கார், 'சிவாஜி', பக். 248-9, 2ஆம் பதிப்பு.

செம்மையாகச் செயலாற்றப்படுவதாகவும் இருந்தது. அவ் ஆட்சி மக்களுக்குப் பெரும் பளுவாகத் தோன்றவில்லை. மக்களைக் கசக்கிப் பிழியாது அவர்கள் நலத்தையும், அமைதியான இன்ப வாழ்க்கையையும் அளிப்பதாக அது அமைந்திருந்தது. அவ் ஆட்சிமுறை அக் காலத்திற்கேற்ற வகையில் மலைக்கோட்டைகளையும் காவற் படைகளையும் உடையதாக இருந்தமையால், தற்காப்பிற்குச் சிறந்த முறைகளைக் கையாண்டுவந்தது. பொதுவாக இந்தியாவில் இருந்துவரும் தனி மனிதனின் முடியாட்சியாகமட்டும் மராட்டியரின் ஆட்சியமைப்பு இயங்கவில்லை. அதைவிடப் பல வகையில் மேம்பாடுடையதாகவே அது விளங்கியது. நாட்டிலே நிலவிய பல்வேறு சாதியினரிடையே ஓர் ஒருமைப்பாட்டை உண்டாக்குவதற்கு உண்மையிலேயே அரசு முயன்றதைப் பார்க்கிறோம். மேலும், அரசரிடத்துக் காட்டப்படும் தனிப்பட்ட பற்றுறுதிக்கு மேலாக, மக்களிடையே நடத்தை ஒழுங்கமைதியை வளர்ப்பதன்மூலம் நாட்டிலே ஒழுங்கையும் அமைதியையும் நிலைநாட்ட அரசு முயன்றது என்று கூறினால் அது மிகையாகாது. மலைக்கோட்டையின் நிர்வாகத்தில் சிவாஜி முக்கியச் சாதிகளைச் சேர்ந்த அதிகாரிகளைப் பயன்படுத்திய மதிநலம் வாய்ந்த செயலே இதற்குப் போதிய சான்றாகும். மேலும், சிவாஜி சமயக் கோட்பாட்டு முறைகளைப் போற்றியாதரித்ததையும் இதற்குச் சான்றாகக் கூறலாம். அச் சமயக் கொள்கை சமய நம்பிக்கையுடையவர்களிடையே ஒருவகை ஆன்மீக ஒற்றுமையை வற்புறுத்திவந்தது; அவர்களிடையே சாதியடிப்படையில் வேற்றுமை கிடையாது என்று அச் சமய இயக்கம் எடுத்துரைத்துவந்தது. அத்தகைய சமய இயக்கத்தினை சிவாஜி போற்றியாதரித்ததன்மூலம் தம் நாட்டு மக்களிடையே சமயத்தின் பெயரால் ஒற்றுமையுணர்வையும் கட்டுப்பாட்டுணர்வையும் வளர்க்கத் தலைப்பட்டார். ஆயினும், அறிவுக் கூர்மையும் சிறப்புரிமையும் வாய்ந்த பிராமணர்களுக்கும், வீரவுணர்வுமிக்க மராட்டியருக்கும், முரட்டாற்றல் உடைய பிரபுக்களுக்கும் இடையே பொறாமையும் பூசலும் அழிந்தொழியாது நிலைத்திருந்தமையும் சிவாஜியின் ஒருமைப்பாட்டுத் திட்டத்திற்கு ஓர் எல்லையை வரையறுத்தது எனலாம். எனவே, இத்தகைய சூழ்நிலையில் மக்களுக்கிடையே உணர்ச்சி ஒருமைப்பாட்டை உண்டாக்குவதற்கு நாட்டுப்பற்று என்னும் கருவி நன்கு பயன்பட்டது. அயலாரது படையெடுப்பிலிருந்தும் அழிவுச் செயல்களிலிருந்தும் தாய்நாட்டையும், தங்கள் சமயத்தையும் போற்றிக் காக்கவேண்டும் என்னும் ஆர்வத்தின் அடிப்படையில் ஊற்றெடுத்த நாட்டுப்பற்று,

ஓரளவிற்கு நாட்டு மக்களிடையே ஒருமைப்பாட்டுணர்வை வளர்க்கலாயிற்று. இவ்வாறு சிவாஜி நாட்டையும் சமயத்தையும் அயலாருடைய தாக்குதல்களிலிருந்து காக்கும் தற்காப்புப் படைத்தலைவராக விளங்கினர். திடீர்த் தாக்குதல்களின்மூலம் பிற நாட்டுப் பகுதிகளில் கொள்ளையடிப்பதாகிய திட்டத்தில் பொதிந்து கிடந்த உட்கிடையாகிய பேராவல் ஓரளவிற்கு மராட்டிய மக்களிடையே ஒற்றுமையுணர்வை எழுச்சியுறச் செய்தது. 'சௌத்' என்னும் வரியும், 'சர்தேஷ்முகி' என்னும் வரியும் இவ் வுட்கிடையினைக் கருத்தில்கொண்டு தான் தண்டப்பட்டுவந்தன. ஆனல், நாட்டிலே நிகழ்ந்த நிகழ்ச்சிகள் மையக் குவிமுக ஆட்சியை நிறுவுவதற்குக் கையாளப்பட்ட முறைகள் மட்டும் மராட்டிய மக்களை ஒற்றுமைமிக்க ஒரு சமூகத்தினராக்கப் போதவில்லை என்பதை அறிவுறுத்தின. நாட்டினை விரிவுபடுத்தும் திட்டத்திலேயே பேரளவிற்கு நம்பிக்கை வைக்கப்பட்டது. இவ்வாறு அயல்நாடுகளைக் கைப்பற்றுவதற்கு மக்கள் கருத்தைத் திருப்புவதன்மூலம், அவர்கள் தங்களுக்குள்ளே இருந்துவந்த பூசல்களைச் சிறிது காலத்திற்கேனும் மறக்குமாறு செய்யப்பட்டுவந்தனர்.

ஆனல், சமயப் பற்றுடன் ஆட்சி நடத்துவதனல் இந்துக்களிடமிருந்து பெற்ற ஆதரவும் கருணையும், இந்துக்கள் என்றும் முஸ்லீம்கள் என்றும் பாராது அருளுணர்வின்றிக் கொடுஞ் செயல்கள் பல புரிந்த மராட்டிய அரசு கொள்ளையடித்துவந்தமையால் சிதறுண்டுபோயின என்று கூறலாம். அமைதியை நாடும் வங்காளிகளும், போரியல்பு வாய்ந்த இராசபுத்திரர்களும் எத்தகைய வேறுபாடுமின்றி மராட்டிய அரசின் கொள்ளையடிக்கும் கொடுஞ் செயலுக்கு ஆளாகி அல்லற்பட்டனர். எனவே, அவ் விருவகை மக்களும் மராட்டியர் ஆதிக்கத்திலிருந்து விடுதலை கிடைக்குமா என்று எண்ணி ஏங்கிக்கொண்டிருந்தனர். மராட்டியரின் கொள்கையில் காணப்பட்ட இக் குறைபாடே குறுகிய மாநிலப் பற்றுடையவர்களாகச் செய்தது. அதனல் பிற்காலத்தில் அவர்களுக்குக் கிடைத்த வாய்ப்புகளைப் பயன்படுத்தி அவர்கள் மேம்பட்டு விளங்க இயலாமற்போயிற்று. அவர்கள் படையியல் துறையில் பேரரசு நோக்கத்தொடு சிந்திக்க முடிந்தது. ஆனல், ஆட்சிமுறையில் அவ்வாறு சிந்திக்க அவர்களால் முடியவில்லை. அவர்களால் வழிவகைகளைக் காட்டவும், பெரு வெற்றிகள் பெறவும் முடிந்தது; ஆனல், அவர்களால் சமரச உடன்பாட்டைக் காண முடியாமற்போயிற்று. கொள்ளை

யடிக்க வேண்டும் என்னும் உள்ளார்ந்த உணர்வு மராட்டியரின் ஆட்சிமுறையின் அகத்தே காணப்பட்ட குறைபாடாகும்; மராட்டியர்களை ஒன்றுசேர்க்க முடியாமற்போனது பிற்காலத்தில் மராட்டியர் ஆட்சிமுறையின் புறத்தே உண்டான குறைபாடாகும்.

1680ஆம் ஆண்டு சிவாஜி விண்ணுலகடைந்தார். அதையடுத்து அவர் அரும்பாடுபட்டு நிறுவிய ஒற்றுமைவாய்ந்த அரசு விரைவிலே சிதைந்துபோயிற்று. அவருடைய மகனும், அவருக்குப் பிறகு ஆட்சிக்கு வந்தவருமான சம்பாஜி அஷ்டப் பிரதானிகள் குழுவினைக் கலைத்துவிட்டுத் தம் விருப்பப்படி ஆட்சி செய்யத் தொடங்கினர். 1689ஆம் ஆண்டு அவர் சிறைபிடிக்கப்பட்டுக் கொலைசெய்யப்பட்டதோடு இம்முறையும் முழுமைத் தன்மையை அடைந்தது. பல ஆண்டுகள் வரையில் நெடுந்தொலைவில் இந்தியாவின் தெற்குப் பகுதியிலுள்ள செஞ்சியிலிருந்து இராஜாராம் என்பவர் மராட்டிய அரசினை அபாயகரமான முறையில் இயக்கிவந்தார். அவுரங்கசீபின் தக்கணப் படையெடுப்புகளின் நீடித்த விளைவாக சிவாஜி அரும்பாடுபட்டு நிறுவிய அரசு சிதைந்து சுக்குநூறுகியது. ஒக்கப்பண்ண முடியாத அளவிற்கு அவ்வரசு சிதைந்து போயினமை இங்குக் குறிப்பிடத்தக்கதாகும். முகலாயப் பேரரசர் பகதூர் ஷாவோடு ஓர் உடன்பாட்டிற்கு வந்த பிறகு, சாகூ தம்முடைய பாட்டனுரின் சிம்மாசனத்தினை அலங்கரித்தார். அதுமுதல் சூழ்நிலைகளிலும் உள்ளுணர்ச்சிப்பாங்கிலும் மாற்றமுண்டாயின. சாகூ முகலாயரின் அரசவையில் வளர்க்கப்பட்டவராவார். எனவே, அவர் முகலாயப் பேரரசரின் மேலாதிக்கத்தை ஏற்றுக்கொண்டார். முகலாயர்களுக்கு எதிராகப் புரட்சி செய்யும் புரட்சிக்காரனுக இருப்பதை அவர் என்றுமே வெறுத்துவந்தார். அவர் 10,000 படைவீரர்களைக்கொண்ட மான்சப்தாராக முகலாயப் பேரரசரிடத்துப் பணிபுரிந்துவந்தார். மேலும், அவர் தாம் கைப்பற்றிய மாளவத்தைத் தில்லியிடமிருந்து உதவித்தொகைக்காகப் பெற்று ஒழுங்குமுறைப்படுத்துவதில் மகிழ்ச்சியடைந்தார். இந்துப் பேரரசை நிறுவவேண்டும் என்ற கனவினை அவர் என்றுமே கண்டதில்லை. இதற்கு மாருக சிவாஜி நிறுவிய மையக் குவிமுக ஆட்சியமைப்புப் பையப்பைய சிதைந்துபோயிற்று. எனவே, சாகூ நிலமானியப் படைத்தலைவர்களாக இருந்த படைத்துறைத் தலைவர்களின் கையில் சிக்கிக்கொண்டிருந்தார். இந்நெருக்கடியான சூழ்நிலையில் 'பட்' குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் அரசரையும்

அரசினையும் காக்க முன்வராமல்போயிருந்தால், மராட்டிய அரசு அடியோடு அழிந்துபோயிருக்கும். அப் 'பட்' குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் பரம்பரைப் பேஷ்வாக்களாகவும், புதிய மராட்டிய அரசின் தலைவர்களாகவும் பணிபுரிந்தனர். 1714ஆம் ஆண்டில்தான் முதன்முதலாக அதிகாரம் அரசரிடம் இருந்து பேஷ்வாவிடம் மாறியது என்று கூறலாம். 1714ஆம் ஆண்டில்தான் பாலாஜி விஸ்வநாத பட் பேஷ்வாவாக அமர்த்தப்பட்டார். அக்காலத்தில் 'பிராந்தியப் பிரதிநிதி' பதவியைக்காட்டிலும் பேஷ்வா பதவி மதிப்புக் குறைந்ததாகவே கருதப்பட்டுவந்தது. பிராந்தியப் பிரதிநிதி என்னும் பதவியைச் செஞ்சியிலிருந்துவந்த இராஜாராம் என்பவர்தாம் முதன்முதலாகத் தோற்றுவித்தார். பேஷ்வா வடக்குப் பகுதியிலே மராட்டிய அரசை விரிவுபடுத்த வேண்டும் என்று அரசருக்கு அறிவுரை கூறினர். ஆனல், பிராந்தியப் பிரதிநிதியோ தெற்குப் பகுதியிலே மராட்டிய அரசை விரிவுபடுத்துவதற்கு முயல வேண்டும் என்று சொன்னர். இவ்விருவருடைய அறிவுரைகளுள் பேஷ்வாவின் அறிவுரையே அரசருக்குச் சாலச் சிறந்ததாகத் தோன்றியது. எனவே, அவர் வட இந்தியப் பகுதிகளில் தம்முடைய அரசை விரிவுபடுத்த முயன்ருர். அம் முயற்சியில் சாகூ பெருவெற்றியும் பெற்ருர். இவ் வெற்றியே பேஷ்வாவின் நிலையினையும் பதவியையும் மிக உயர்த்தியதோடு ஆற்றல்மிக்கவொன்ருக விளங்குமாறு செய்தது எனலாம். இதுமுதல் 'பட்' குடும்பத்தைச் சேர்ந்தவர் பரம்பரை உரிமையோடு பேஷ்வாக்களாகத் தொடர்ந்து பதவியில் அமர்த்தப்பட்டனர். தொடர்ந்து மூன்று தலைமுறைக்குப் பேராற்றலும் பெருந்திறனும் வாய்க்கப்பெற்றவர்களே தொடர்ந்து பேஷ்வாக்களாகப் பதவியேற்றமை அப் பதவிக்கும் அவர்களுடைய குடும்பத்திற்கும் தனிப்பெருஞ் சிறப்பைத் தேடித் தந்தது என்று கூறின் அது மிகையாகாது. சாகூ இறந்த பின்னரும் அவர்கள் அரும்பெருந் தொண்டாற்றியுள்ளனர். இறுதியில் சாகூவிற்குப் பின்னர் ஆட்சிக்கு வருவதற்குரிய ஆண் மகவு இல்லாமற்போனமையாலும், அவர் தம்முடைய உடன்பிறந்தாரின் பேரனை இராமராசனிடத்து அவநம்பிக்கை கொண்டிருந்தமையாலும், பிற்காலத்தில் அவர் நெருக்கடிகளை எதிர்த்துப் போரிடும் ஆற்றலற்றுப் போனமையாலும் சிவாஜியின் குடும்பத்ினருக்கேயுரிய ஆட்சியுரிமையாகிய ஆதிக்கம் பேஷ்வாக்களின் கைக்கு மாறியது. 1750ஆம் ஆண்டளவில் பேரரசர் சிவாஜியின் இராச்சியம் பேஷ்வாவினைத் தலைவராகக்கொண்ட நாடுகளின் கூட்டிணைப்பாக விளங்கலாயிற்று.

இப் புதிய அமைப்பாகிய நாடுகளின் கூட்டிணைப்பிற்குப் பெயரளவில் சிவாஜியின் மரபில் வந்தவர்களே தலைவராக இருந்துவந்தனர். ஆனால், அவ்வரசன் மதிப்பற்ற வகையிலும் ஆற்றல் ஒடுங்கிய நிலையிலும் சதாராவில் (Satara) தனித்து வாழத் தலைப்பட்டான். ஆயினும், பேஷ்வாக்களைப் பதவியில் அமர்த்தும்பொழுது அவர்களுக்குப் 'பதவி உடையை அணி விக்கும் பணியை அரசர் தொடர்ந்து செய்துவந்தார். வேறு சில முக்கியக் கடமைகளையும் செய்துவந்தார்'. ஓரளவிற்கு அரசர் பொதுமக்களின் மதிப்பினைப் பெற்றவராகவே இருந்து வந்தார். ஆனால், அவருக்கு என்று எத்தகைய அதிகாரமும் இல்லை. அவருடைய அன்றாட வாழ்க்கைக்கு இன்றியமை யாதனவாகத் தேவைப்படுகின்ற பொருள்களை அவர் விருப்பம்போல் பெறுவதற்குரிய உரிமையோ, அதிகாரமோ அற்றவராக அவர் இருந்தார். அவற்றைக்கூட அவர் பேஷ்வாவின்மூலம்தான் பெறவேண்டியிருந்தது. எனவே, இப்பொழுது உண்மையான தலைவராகச் சிறப்புற்று விளங்கு கிறவர் பேஷ்வாவே ஆவார். அவருக்கும் அரசருக்கும் இடையே இருந்துவந்த தொடர்பிலும் இருமை நிலை மிக விரைவில் வளர்ந்துவந்தது. கொள்கையளவில் அவர் சதாரா வில் உள்ள அரசரின் பிரதிநிதியாகப் பதவியிலிருந்தார். ஆனால், உண்மையில் பேஷ்வாவே மராட்டிய மண்டலத்தின் தனிப்பெரும் தலைவராக விளங்கினார். பழைய அமைச்சர் களுக்கும் அதிகாரிகளுக்கும் அவர் சமநிலைக் குழுவின் முதல்வ ராகவே தோன்றினார். அக் குழுவினருள் பேராற்றலும் பெருந் திறனும் வாய்ந்தவராக இருப்பதனால் அவர் சிறப்புமிக்கவராக விளங்குகின்றாரே ஒழிய, அவருடைய பதவியின் உரிமையினா லன்று என்று அவர்கள் கருதினர். அவ் வுணர்வு இரண்டாம் பாஜிராவ் ஆட்சியின் இறுதிக்காலம் வரையில் நீடித்திருந்தது. அவ் வுணர்வு மராட்டிய மண்டலத்தில் பேஷ்வாக்களின் அதிகா ரத்தைக் கட்டுப்படுத்தும் ஆற்றலுடையதாக இருந்தது. பிற் காலத்து பேஷ்வாக்கள் தங்கள் கீழதிகாரிகளான சிந்தியா வும், ஹோல்காரும் தனித்துப் பிரிந்துபோனபோது அவர்களை அடக்கியாள இயலாதுபோன நிலையில் பேஷ்வா ஆற்றலற்றுப் போனதோடு, உதவியற்றவராகவும் போனார். ஆனால், அவ ருடைய கீழ்நிலை அதிகாரிகளுக்கு அவரே தலைமை அதிகாரி யாகவும், எதேச்சாதிகாரியாகவும் விளங்கினார். அவருடைய ஆணைக்குக் கீழ்ப்படிந்த அதிகாரிகளே பேஷ்வாவின் கட்டளைப் படி வடக்கிலும் கிழக்கிலும் மராட்டிய அரசினை விரிவுபடுத் தினர். அவ்வதிகாரிகளை எவ்வளவு காலம் அவர் அடக்கி யாள முடிந்ததோ அதுவரையில் அவருடைய பதவி, தெற்கே

இருந்த சிறப்புப் பட்டம்பெற்ற பழைய அதிகாரிகளின் பதவிகளைக் காட்டிலும் வீறுடன் விளங்கியது. எத்துணைக்காலம் அவர் தம்முடைய அதிகாரிகளை அடக்கியாள முடிந்ததோ அதுவரையில் தென்னாட்டில் தொன்றுதொட்டு உரிமையுடையவர்களாக இருந்துவந்தவர்களைத் தம்முடைய ஆற்றலுக்குள் மறைந்து வாழுமாறு செய்துவந்தார். ஆனால், உண்மையில் அவர்களே பெருவெற்றி பெற்றனர். நெடுங்காலம் மத்திய அரசின் நேரடியான கண்காணிப்பு இல்லாமல் இருந்தது அவர்களுக்குத் தங்கள் விருப்பப்படி செயலாற்றும் உரிமையைத் தவறாது அளித்தது. மேலும், புதிதாகப் பெருநிலப் பரப்புகளாகிய நாடுகளைக் கைப்பற்றித் தத்தம் ஆளுகைக்கு அவர்கள் கொண்டுவந்தமை பிறரை எதிர்பார்க்க வேண்டாத அளவில் அவர்களுக்கு வள ஆதாரத்தை அளித்தது. இவ்வாறு பேஷ்வாவின் அதிகாரத்தோடு சிந்தியாக்களும், ஹோல்கார்களும், கெய்க்குவார்களும், பான்ஸ்லேக்களும் பையப்பையப் போட்டியிடத் தொடங்கினர். ஆயினும், அவர்கள் எப்பொழுதுமே பேஷ்வாவின் சிறப்புமிக்க முதன்மை நிலையைப் போற்றிவந்தனர். இத்தகைய மாற்றங்களினால், பல படைத் தலைவர்களின் தனிப்பெருந் தலைவராகவும் இயக்குநராகவும் விளங்கிவந்த பேஷ்வா, தற்சமயம் ஒத்த பண்பும், ஆற்றலும் உடைய இராச்சியங்களின் தலைவர்கள் பலரைக்கொண்ட படையியல் நாடுகளின் கூட்டமைப்பின் தலைவராகத் திகழலானார். அந்நாடுகளின் கூட்டமைப்பின் தலைவர் பேஷ்வா என்பதை 1761ஆம் ஆண்டில் பானிப்பட்டில் நடந்த போர் முடிவு செய்தது. பேஷ்வாவினுடைய பதவிக்குரிய இளவரசரும், பேஷ்வாவின் மிக நெருங்கிய உறவினர்களும் பானிப்பட்டுப் போர்க்களத்திலே கொல்லப்பட்டனர். போரில் உண்டான பேரழிவைப்பற்றிக் கேள்வியுற்ற பேஷ்வாவும் மனமுடைந்து இறந்தார். முதலாம் மாதவராவினால் உண்டாக்கப்பட்ட மறுமலர்ச்சி 1772-ல் அவர் இறந்தவுடன் உண்டான அரசுரிமைக் கலகங்களாலும் குழப்பங்களாலும் அவரோடு மறைந்துபோயிற்று. பேஷ்வாவின் மதிப்பிற்கு உண்டான பெருங்கேட்டிலிருந்து பிழைத்து மீண்டும் புத்துயிர்ப்புப் பெற முடியாது போனதோடு, மராட்டியப் படைகளும் முன்பு இருந்த நிலையில் பயிற்சியும் பண்பும் உடையனவாக இல்லாமற் போயின. பானிப்பட்டுப் போர்க்களத்தில் இலட்சக் கணக்கான மராட்டிய வீரர்கள் மாண்டு மடிந்துபோயினர். இதுமுதல் மராட்டியப் படைப் பிரிவுகளில் துணைப் படையினருடைய எண்ணிக்கையும் கூலிப்படையினருடைய எண்ணிக்கையும் குறிப்பிடத்தக்க அளவிற்கு மிகுதிப்படலாயிற்று.

அதே சமயத்தில் அதற்கேற்றவாறு மராட்டியப் படைவீரர் களிடையே தேசிய உணர்வும் ஒருமைப்பாடும் குலைந்து வரலா யிற்று. நாட்டின் பல்வேறு பகுதிகளில் இருந்த மராட்டியத் தலைவர்கள் அவ்வவ் வட்டாரங்களிலுள்ள படைகளைத் தங்க ளுக்குத் தேவையானபொழுது பயன்படுத்திக்கொண்டதோடு, அவ்வப்பொழுது அப் படைகளுக்கு உதவித்தொகையும் நன் கொடையும் அவர்கள் அளித்துவந்தனர். இதனால், நெடுந் தொலைவிலுள்ள பேஷ்வாவின் ஆணைக்குப் படைகள் அடங்கி நடப்பது குறைந்துகொண்டேவந்தது எனலாம். 1772ஆம் ஆண்டிற்குப் பின்னர் வட இந்தியாவிலிருந்த மராட்டியத் தலைவர்கள் பேஷ்வாவின் பிரதிநிதிகளாகவே இருந்துவந் தனர். எனினும், அவர்கள் செயல்முறையில் சுதந்திரமிக்க குறுநில மன்னர்களாகவே விளங்கினர். பேஷ்வா மராட்டிய நாடுகளின் கூட்டமைப்பின் தலைவராக இருந்துவந்ததோடு சிற்சில சமயங்களில் அவர்களுடைய உள்நாட்டு விவகாரங் களில் தலையிட்டும் வந்தார். மொகலாயப் பேரரசருக்குத் துணைப்பகர ஆட்சியாளராக அமர்த்தப்பட்ட மகதாஜி சிந்தியா, தாம் கைப்பற்றிய நாட்டுப் பகுதிகளைத் தமக்கே யுரிமையாக்கிக் கொள்ளுவதற்கு முகலாய அரசரின் அங்கீ காரத்தை அடைவதற்காக முயன்றமை பேஷ்வாவிற்கும், மராட்டியத் தலைவர்களுக்கும் இடையே எத்தகைய தொடர்பு இருந்துவந்தது என்பதையும், பேஷ்வாவின் ஆதிக்கம் எந் நிலையில் இருந்தது என்பதையும் அறிவதற்குப் போதிய சான்றாகும். முகலாயப் பேரரசர் இளைஞரான பேஷ்வாவின் ஆதிக்கத்திற்குட்பட்டவராக இருக்க வேண்டும் என்பதில் அவர் அளவுகடந்த அக்கறை காட்டினர். ஆனால், இதற்காக அவர் பின்பற்றிய முறை அவர் பூனாவின் ஆதிக்கத்திற் குட்படாது உரிமை பெற முயலுகிறார் என்பதைச் சுட்டிக் காட்டியது என்றே கூறலாம். சிவாஜியின் அரசினைச் சிதைத்த தன்மூலம் அவுரங்கசீபு மையக் குவிமுக ஆட்சியினையுடைய மராட்டிய இந்துப் பேரரசை நிறுவும் நம்பிக்கையைச் சின்னா பின்னமாக்கினர். அதைப்போன்று, அகமதுஷா அப்தாலி பேரரசுக் கோட்பாடுடைய பேஷ்வா பதவியின் சிறந்ததோர் எதிர்காலத்தை அடியோடு அழித்தொழித்தார். முகலாயரும் ஆப்கானியரும் தங்களுக்குள்ளாகவே போட்டி போட்டுக் கொண்டு புத்துயிர்பெற்ற இந்து அரசினை அழித்தொழிக்கும் வேலையில் ஈடுபட்டு வெற்றியும் கண்டனர்.

சிந்தியாவும் ஹோல்காரும் நன்கு பயிற்றுவிக்கப்பட்ட கட்டுப்பாடுமிக்க படையொன்றைக் கட்டிக்காத்து வந்தனர்.

அப்படையில் பீரங்கிப் படையொன்றை அவர்கள் புதிதாக அமைத்து இருந்தனர். அப்பீரங்கிப் படையின் அதிகாரிகளாகப் பேரளவிற்குத் துணிகரச் செயலில் நாட்டம்கொண்ட ஐரோப்பியர்களை அவர்கள் அமர்த்தியிருந்தனர். இத்தகைய செயல்முறை ஆற்றலில் நலிந்துபோயிருந்த பேஷ்வா பதவியின் ஆற்றலை மேலும் நலிவுறச் செய்தது. பீரங்கிப் படையில் அமர்த்தப்பட்டிருந்த ஐரோப்பிய அதிகாரிகள் பூனாவின் அதிகாரத்திற்கு அடங்கி நடக்க வேண்டிய தேவை இல்லாமற் போயிற்று. இவ்வாறு பீரங்கிப் படையினர் தங்கள் தலைவர்களுக்கு அவர்கள் விரும்பிய துறைகளில் அவர்கள் விருப்பப்படி செயலாற்றும் உரிமையை நல்கினர்; பூனாவின் விவகாரங்களில் தலையிட்டு முடிவு உரைக்கும் உரிமையையும் இதன்மூலம் அவர்கள் தங்கள் தலைவருக்கு அளித்தனர். பேஷ்வாவின் ஆதிக்கம் நலிந்துபோனதற்குரிய இறுதியான காரணம் நெடுங்காலமாகச் சிறுபான்மையோரே மந்திரியொருவருக்கு உரிய அதிகாரங்களை மாற்றிக்கொண்டு வந்தமையேயாகும். பதினெட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதிக்கு நாம் செல்லுவோமானால், நானாபட்னாவிஸ் காலத்திற்கு நாம் செல்லுவோமானால், இவ்வாறு அரசரின் பிரதிநிதி நமக்கொரு பிரதிநிதியை உடையவராக இருப்பதைக் காணலாம். ஆனால், இப்பிரதிநிதிகள் நாட்டின் பெரும்பான்மையான மக்களின் ஆதரவையோ, படைத்துறையினரின் ஆதரவையோ பெற்றுச் செயலாற்றுபவராக இருக்கவில்லை. எனவே, நெருக்கடி உண்டாகும் காலத்தில் அவர்கள் அரசியல் சூழ்ச்சித் திறத்துடன் யாருடைய ஆதரவையும் பெற முடியாமற்போயிற்று. ஒன்றுபட்டுச் செயலாற்றும் திட்டத்தினுள்ளே போரும் பூசல்களும் அவர்களிடையே மலிந்து கிடந்தன. ஆதிக்கத்தைக் கைப்பற்றுவதற்காக அவர்களுக்குள்ளேயே இடையறுது போராடிவந்தனர். ஆனால், இதற்கு விதிவிலக்காக ஒன்றைக் கூறலாம். 1795ஆம் ஆண்டில் கார்டா (Kharda) என்னும் இடத்தில் அவர்கள் எல்லாரும் ஒன்று சேர்ந்து நைசாமை எதிர்த்துப் போரிட்டு வெற்றியும் பெற்றனர். அவர்களுடைய பதவிப் போராட்டத்திற்கிடையே நிகழ்ந்த இந்நிகழ்ச்சியை ஓர் இடைக்காட்சியாகவே கூற வேண்டும். இந்த இறுதிப் போராட்டத்திலே ஒரு முடிவிற்கு வருவதற்குரிய உரிமையை மராட்டியர் பெற்றிருக்கவில்லை. இப் போட்டியாளர்களிலே வெற்றிபெறும் பெரு நம்பிக்கைக்குரியவராக மகதாஜி சிந்தியா விளங்கினார். அவர் 1792ஆம் ஆண்டு ஹோல்காரைத் தோற்கடித்தார். அந்நிலையில் மராட்டிய மண்டலத்தையே சிந்தியா ஒருகுடைக்கீழ்க்

கொண்டுவருவார் என்ற நம்பிக்கை உண்டாயிற்று. ஆனால், அவர் 1794ஆம் ஆண்டு இறந்துபோனார். அதனால் மராட்டியத் தலைவர்களுக்கு இடையே ஆதிக்கச் சமநிலை உண்டாயிற்று. சிந்தியாவிற்குப் பிறகு பதவிக்கு வந்தவர் ஆற்றலும் திறமையு மற்றவராக இருந்தார். ஹோல்கார் நடுநிலை அற்றவராக இருந்தார். 1802ஆம் ஆண்டு ஜஸ்வந்த் ராவ் ஹோல்கார் பேஷ்வாவை வெற்றி கண்டார். ஹோல்காரின் வெற்றி மராட்டிய அரசியலில் ஆங்கிலேயரை உடனடியாகத் தலையிடுமாறு தூண்டியது.

தொடக்ககாலத்துப் பேஷ்வாக்கள் ஒருமைப்பாட்டினால் உண்டாகக்கூடிய இடுக்கண்களை நன்கு உணர்ந்திருந்தனர். எனவே, அவற்றால் உண்டாகக்கூடிய அழிவினைத் தடுக்க முன்னெச்சரிக்கையாக அவர்கள் பல முறைகளைக் கையாண்டனர். எனவே, எல்லா வகையான சன்னத்துகளையும் (Sanads), மானியங்களையும் சாகூவின் பெயராலேயே அவர்கள் வழங்கி வந்தனர். இதன்மூலம் எல்லாத் தலைவர்களும் 'நாட்டின் தலைவர்' என்று பெயரளவிற்குப் பதவி வகிக்கும் அரசருக்குக் கீழ்ப்பட்டவர்கள் என்பதை பேஷ்வாக்கள் வலியுறுத்தி வந்தனர். மேலும், நிலங்களை மானியமாக அளிக்கின்ற பொழுது இடத்தாலும், அந் நிலங்களிலிருந்து பெறுகின்ற பொருளாலும் எந்தத் தலைவரும் தனிப்பெருஞ் செல்வாக்குப் பெறவொட்டாமல் விழிப்புணர்ச்சியோடு நேர்மையான வகையில் தேர்ந்தெடுத்துவந்தனர். அதன்மூலம் ஆதிக்கச் சமநிலையைப் பேஷ்வாக்கள் போற்றிக் காத்துவந்தனர். இயன்றவரையில் தனிப்பட்ட தலைவரின் அதிகாரத்திற்குத் திரண்ட ஒருபெரு நிலப்பரப்பை அடிமையாகாதவாறு காத்துவந்தனர். 'சௌத்' என்னும் வரியையும், 'சர்தேஷ்முகி' என்னும் வரியையும் தண்டுவதற்குரிய உரிமையைத் தலைவர்களுக்கு வழங்குவதிலும் கட்டுப்பாடுகள் இருந்துவந்தன. அவ் வரிகளைத் தண்டுவோரே அவற்றைப் பயன்படுத்திக்கொள்ள முடியாது. ஆனால், அவற்றைப் பேஷ்வா, பிராந்தியப் பிரதிநிதி, பந்த் சசிவ் (Pant Sachiv) என்போர் தங்களுக்குள்ளே பங்கிட்டுக் கொண்டனர். நெடுந்தொலைவில் உள்ள படைத்தலைவர்களுக்கு 'சுயராச்சியம்' எனப்படும் தாயகத்தில் நிலங்கள் மானியங்களாக வழங்கப்பட்டன. எந்தத் தலைவராகிலும் பேஷ்வாவிற்குக் கீழ்ப்படிந்து நடக்க மறுக்கும் நிலை உண்டாகுமானால், உடனே அவருக்கு அளிக்கப்பட்டுள்ள மானியத்தைப் பறிமுதல் செய்வர். மராட்டியப் படைகளோடு மத்தியக் கருவூலக் கணக்குத் தணிக்கை அதிகாரிகள் பயணம் செய்து

வந்தனர். மாநிலங்கள் அனைத்தினுடைய கணக்குகளையும் இறுதியில் பூனா ஆராய்ந்து ஏற்றுக்கொள்ள வேண்டும். எவ்வளவு காலம் பேஷ்வாக்கள் பேராற்றலும் பெருந்திறமையும் உடையவர்களாகவும், பிறரால் வெல்ல முடியாத ஆற்றலுடையவர்களாகவும் இருந்தார்களோ அதுவரை இத்தகைய கட்டுப்பாடுகளும், தடுப்பு நடவடிக்கைகளும் உண்மையானவையாக இருந்துவந்தன. பானிப்பட்டுப் போருக்குப் பிறகு இவ்விதிமுறைகளைப் பின்பற்றுவது ஒரு சடங்கியல்பாகவே பெரிதும் மாற்றமுற்று, இறுதியில் அடியோடு அழிந்துபோயிற்று.

நாம் பிற்காலத்து மராட்டியரின் ஆட்சிமுறையைப் பற்றிப் பேசுகின்றோம் என்றால், பிற்காலத்து மராட்டிய அரசியலமைப்புகளைப்பற்றி ஆராய்கின்றோம் என்பது பொருளாகும். அவ்வரசியல் அமைப்புச் சட்டங்கள் திட்டவட்டமாகத் தீட்டப்படாமையால், நெடுந்தொலைவிற்குப் பரவியிருந்த பேரரசின் திறமைமிக்க தலைவராகப் பேஷ்வா விளங்கினார் என்றோ, தனியுரிமை சக்திகளாக இயங்கிய ஐந்து மராட்டியத் தலைவர்களின் குழுவினுள்ளே வழிகாட்டும் தலைவராக இருந்தார் என்றோ கருதுவது எளிமையான செயலாகும். உண்மையில் குறுகிய சிறிது காலத்திற்குத்தான் அவர் இவ்விரு முறையிலும் தலைவராக இருந்திருக்கிறார். மராட்டிய ஆட்சிமுறையின் புதுமைப் பண்பாகிய தனிச் சிறப்பியல்பும், அதனுள் பேஷ்வாவின் நிலையும் சிறப்புற்று விளங்கத் தொடங்கிய காலத்தில் மராட்டிய ஆட்சிமுறையில் மராட்டியரின் பேரரசுக்குட்பட்டிருந்த மராட்டிய அரசான தாயகத்தில் மட்டும்தான், மராட்டியரின் அறிவாற்றல் வெளிப்படத்தக்க தனிச் சிறப்பு வாய்ந்த மராட்டிய ஆட்சிமுறை அமைந்திருந்தது. 'சுயராச்சியம்' எனப்படும் மராட்டியரின் தாயகத்திற்குப் புறத்தே இருந்துவந்த மராட்டியரின் ஆதிக்கத்திற்குட்பட்டிருந்த நாட்டின் பகுதிகளில் எல்லாம் ஒன்று 'சௌத்' என்னும் வரி வன்முறையில் தண்டப்பட்டுவந்தது அல்லது தொன்றுதொட்டு உள்ளூரைச் சார்ந்த மராட்டிய ஆட்சியாளர்களால் கடைப்பிடிக்கப்பட்டுவந்த ஆட்சிமுறை நடைமுறையில் இருந்து வந்தது. பெரும்பாலான மராட்டியத் தலைவர்கள் தத்தம் இராச்சியப் பரப்பினை விரிவுபடுத்துவதிலேயே மும்மரமாக ஈடுபட்டிருந்தமையால், அவர்களுக்குப் புதியதோர் ஆட்சிமுறை அமைப்பினை உருவாக்குவதற்குத் தேவையான ஓய்வு கிடைக்கவில்லை என்றே கூறலாம். வட இந்தியப் பகுதியில் முகலாய ஆட்சிமுறை மரபுகள் பேராற்றல் வாய்ந்தனவாக

இருந்தமையால், அவற்றை அப்படியே பின்பற்றுவதில் ஒரு வகை நாட்டம் ஆட்சியாளர்களிடை இயல்பாகவே இருந்து வந்தது. முற்காலத்து முகலாயருடைய ஆட்சிக்குட்பட்டிருந்த பகுதிகளில் மராட்டியரின் செல்வாக்குச் சிறப்புற்றோங்கியதை எவ்வாறு தெளிவாகக் கண்டறிய முடிகிறதோ அவ்வாறே, மராட்டியரின் நாட்டிலே முகலாயரின் ஆட்சி முறை பழக்கவழக்கங்கள் பெற்ற செல்வாக்கினை எளிதில் கண்டறியலாம்.

மராட்டிய நாட்டிற்குள்ளேயே முக்கிய நிகழ்ச்சிகள் நடைமுறையில் வேறுபட்டனவாக இருந்தன. எலிஃபின்ஸ்டன் (Elphinstone) என்பவர் பூனாவில் துணைக்காப்பரசின் ஆளுநராகப் பணிபுரிந்தார். அவர் பாஜிராவ் காலத்தில் அங்கு அப்பதவியில் அமர்ந்திருந்தார். 1818ஆம் ஆண்டிற்குப் பிறகு மராட்டிய மாநிலத்தின் நிலங்களையெல்லாம் அளந்து மதிப்பிட்டு நிலவுடைமைப் பேராய்வுக் கணிப்பேட்டு அறிக்கையை அவர் ஆங்கிலேய அரசாங்கத்திற்கு அளித்தார்.[1] இவ் எலிஃபின்ஸ்டன் மராட்டிய மண்டலத்தில் துணைக் காப்பரசின் ஆளுநராக அமர்ந்திருந்த காலத்தில் நேரில் கண்டறிந்த அனுபவத்தைக்கொண்டு, பேஷ்வாவின் நேரடியான ஆட்சிக்குட்பட்டிருந்த மராட்டிய மாநிலத்தின் ஆட்சிமுறையைப்பற்றி அவர் விரிவாக எழுதியுள்ளார். அவர் கூறும் கருத்துகளைக் கூர்ந்து நோக்குவோமானால் பொதுவகையில் மராட்டிய மாநிலத்தின் ஆட்சிமுறை சிவாஜி காலத்தில் இருந்ததைப்போன்று பேஷ்வாக்களின் காலத்தில் விளங்கவில்லை என்பது புலனாகின்றது. கிராமச் சமூகங்கள் செழிப்புற்று விளங்கின; மரபுரிமையாக வரும் அதிகாரிகள் அதிகாரத்தைக் கைப்பற்றுவதிலிருந்து விலக்கப்பட்டனர். ஆயினும், அவர்களுக்குரிய கடமைகளைத் தவறாமல் பெற்றுவந்தனர். மாவட்ட அதிகாரிகள் இப்பொழுது ‘மம்லத்தார்’ (Mamlatdars) என்று அழைக்கப் பெற்றனர். ஆட்சியியல் அதிகாரத்தையுடைய பேஷ்வாக்களின் அதிகாரிகளுக்கு இடையேயும், தேஷ்முக்குகள், தரக்தார்கள் (darakhdars) போன்ற மரபுரிமை அதிகாரிகளுக்கு இடையேயும் பண்டைய கட்டுப்பாடுகளும், தடுப்பு நிறுத்தங்களும் இருந்துவந்தன. சதாராவில் உள்ள அரசரின் நேரடியான நிலமானியப் படைமுறைத் தலைவர்களாக இருந்துவந்த

[1] எம். எலிஃபின்ஸ்டன் : பேஷ்வாக்களிடமிருந்து மிகப் பிற்பட்ட காலத்தில் கைப்பற்றப்பட்ட இராச்சியங்களைப் பற்றிய அறிக்கை, 1822.

தென் மராட்டிய மண்டலத்தின் தலைவர்களாக இருந்துவந்தவர்கள் தங்களைப் பேஷ்வாவோடு சரிநிகர் சமானமாகக் கருதியதோடு, பொறாமைப்பட்டும் வந்தனர் எனலாம். மேலும், அப்பெருநிலக் கிழார்களிடத்து இறுதியில் வந்த பேஷ்வா மிகவும் கடுமையாக நடந்துகொண்டார். ஆனால், படைத்துறைப் பணிக்காக அளிக்கப்படும் மானியமான 'ஜாகீர் முறை' பேரளவிற்கு மிகுதிப்பட்டு விளங்கிற்று. இம்முறையினால், உள்ளூர் ஆட்சிமுறை பேஷ்வாவின் பிரதிநிதிகளின் கையிலிருந்து ஜாகீர்தார்களின் கைக்கு மாறியது. இரண்டாம் பாஜிராவின் நடைக்கோளாற்றுக்கு அப்பால் இம்முறை நன்கு செயற்பட்டுவந்ததாகவும், அம்முறையின் பல இயல்புகளை இன்னும் சில ஆண்டுகளுக்கு நடைமுறையில் இயன்றவரையில் பின்பற்றி வந்ததாகவும் எலி∴பின்ஸ்டன் குறிப்பிடுகிறார்.

மராட்டியரின் அரசியல் ஆட்சிமுறை அமைப்புகளை முழுவதுமாகக் கூர்ந்து நோக்குவோமானால் பின்வரும் உண்மைகளை ஒளிவுமறைவின்றி ஏற்றுக்கொள்ள வேண்டிய நிலையில் வற்புறுத்தப்படுவோம். மராட்டிய மண்டலத்தில் இம்முறை திறமையுடையதாகவும் ஆற்றலுடையதாகவும் இருந்ததோடு குறிப்பிடத்தக்க அளவிற்குப் பரந்த உள்ளமும் நற்செயலாற்றும் விருப்பமும் உடையதாக இருந்துவந்தது. அது முற்றிலும் மராட்டியப் பண்பாடுடையதாகவோ, குறிப்பிடத்தக்க அளவிற்குத் தற்பண்பு உடையதாகவோ இருக்கவில்லை. மிகச் சிறந்த வகையில் முகலாய ஆட்சிமுறை மரபுகளுக்கு மாறாக வேறொன்றையும் மராட்டியரின் ஆட்சிமுறை அளிக்க முன்வரவில்லை. இவ்விரு ஆட்சிமுறைகளும் கிராமங்களையே அடிப்படையாகக்கொண்டு இருந்தன; கண்ணும் கருத்தாகத் தீர்வைகளை விதிப்பதில் கருத்தைச் செலுத்தின; நடுத்தரமாக வரிகளைத் தண்டுவதில் அக்கறை காட்டின; ஆட்சி இயந்திரத்தைத் தடுத்து நிறுத்தும் கட்டுப்பாடுகளையும் விதிமுறைகளையும் பின்பற்றிவந்தன. புரட்சிகரமானதாக இல்லாமையால், அம்முறை நல்லமுறையாகப் போற்றப்பட்டுவந்தது. மராட்டியரின் ஆட்சிமுறை அமைப்பு அதிகாரத்தைப் பகிர்ந்து அளிக்கும் முறையால் ஆற்றல் குன்றுமாறு செய்யப்பட்டது. முதலில் அரசருக்கும் பேஷ்வாவிற்கும் இடையே அரசியல் அதிகாரம் பகிர்ந்தளிக்கப்பட்டது. பின்னர் பேஷ்வாவிற்கும் அவருடைய படைத்தலைவர்களுக்கும் இடையே அதிகாரம் பங்குபோடப்பட்டது. மராட்டியர் தற்காப்பு உணர்வோடு ஓர் அரசை நிறுவ முயன்றனர்.

அதனல் அவர்களிடத்துப் பேரரசுக் கோட்பாடு உருவாக வில்லை. அவர்கள் ஒழுங்கான போர்முறையினல் சீரும் சிறப்பும் பெறவில்லை; கொரில்லாப் போர்முறைத் தந்திரங் களாலேயே அவர்கள் புகழ்பெற்று விளங்கினர். இக்காரணங் களால் மராட்டியரிடையே பேரரசுக் கோட்பாட்டு உணர்வு அரும்பாமற்போயிற்று. அவர்கள் பின்பற்றிய முறைகள் இழிந்தனவாக இருந்தன. மேலும், மராட்டியர் தாங்கள் ஒரு கொள்ளைக்கூட்டத்தினர் என்பதை மறக்க முடியாதவர்களாக இருந்துவந்தனர். எனவே, வாய்ப்புக் கிடைக்கின்றபொழுது தங்களால் எவ்வளவு பொருள்களை எடுத்துக்கொள்ள இயலுமோ அவ்வளவு பொருள்களை எடுத்துக்கொண்டோடும் கொள்ளைக்கூட்டத்தினராகவே மராட்டியர் வாழ்ந்துவந்தனர். அவர்கள் ஓர் அரசினை நிறுவிய பின்னர் ஒழுங்கான முறையில் வரிகளை விதித்து, அவற்றைத் தண்டவேண்டிய காலத்தில் மக்களால் வெறுக்கப்பட்ட 'சௌத்' என்னும் வரியைத் தள்ளி விட்டிருக்க வேண்டும். ஆனல், அவர்கள் இதற்கு நேர்மாருக அவர்களுடைய வருவாய்த்துறையின் இன்றியமையாத பகுதி யாக 'சௌத்' என்னும் வரியைப் போற்றி விதித்தனர். பேரரசை நிறுவ வேண்டும் என்னும் கொள்கையும் ஆர்வமும் கொண்டவர்கள் கொள்ளைக்காரர்களாகவும் திருடர்களாகவும் நடந்துகொள்ளுவார்களானல், அவர்களுடைய வல்லாட்சி மக்களிடையே புகழும் செல்வாக்கும் பெற வேண்டும் என்பதை எதிர்பார்க்கக்கூடாது. இந்நிலையே மராட்டியரின் வரலாற்றில் காணக்கிடக்கிறது. அவர்களுடைய அரசு சிதைந்தபொழுது, மராட்டிய மண்டலத்திலிருந்த மராட்டிய மக்களைத் தவிர, அவர்களுடைய ஆதிக்கத்திற்குட்பட்டிருந்த மற்றப் பகுதிகளைச் சார்ந்த மக்கள் சிறிதுகூட வருத்தப்பட வில்லை; இரக்கம் காட்டவில்லை. முஸ்லீம்களுக்கும், வெளி நாட்டவர்களுக்கும் எதிராகச் சமயமும், சமுதாயச் சட்டத்துக்குட்பட்ட தன்னுரிமையும் அழிந்தொழியாத வாறு முன்னெச்சரிக்கையுடன் காப்பதற்குரிய தற்காப்புச் செயல்களில் மராட்டியர் ஈடுபட்டமையே அவர்களுக்குச் செல்வாக்கினையும் புகழையும் தேடித்தந்தது எனலாம். அவர் களுடைய இவ் அரும் பணியை இந்தியாவின் எஞ்சிய பகுதி சிறிது தொலைவிலிருந்தே போற்றிப் பாராட்டியது. இந்திய வரலாறு என்னும் பெருங்கடலில் எழுந்த பேரரசு என்னும் பேரலையின் சிறு திவலையே மராட்டியரின் ஆட்சிக்காலம் என்ருல் அது மிகையாகாது.

## ஆதாரங்கள்

இக்காலத்து வரலாற்றை வரைவதற்குப் பயன்படும் ஆதாரங்கள் பிரிட்டிஷ் இந்தியாவின் பதிவேடுகளில் மட்டுமல்லாமல், பூனாவிலுள்ள பேஷ்வாவின் ஆவணக்களரியிலும், மற்ற மராட்டிய நிலையங்களிலும் பேரளவிற்குள்ளன. இவற்றுள் முக்கியமானவற்றைத் தேர்ந்தெடுத்து, திருவாளர்கள் வி. கே. ராஜ்வாதே (Rajwade), டி. ஆர். பரஸ்னிஸ், பி. வி. மவுஜி, ஜி. சி. வாட் என்போர் மராட்டிய மொழிகளில் நூல்கள் பல வெளியிட்டுள்ளனர். இந் நூல்கள் விரிவாக இருந்தாலும், தேவையானவற்றை முற்றிலும் அறிவிப்பனவாக இல்லை. இவற்றை சர் G. W. ஃபாரஸ்ட் (Forrest) ஆங்கிலத்தில் வெளியிட்டுள்ளார்.

இவற்றைப்பற்றி விரிவாக அறியவேண்டுமென்றால் கேம்பிரிட்ஜ் இந்திய வரலாற்றின் நான்காம், ஐந்தாம் தொகுதிகளைக் காண்க. இவற்றோடு எலிஃபின்ஸ்டனின் 'பேஷ்வாக்களின் இராச்சியங்களைப்பற்றிய அறிக்கையையும்' (1822), ஜெங்கின்ஸ் என்பவரின் 'நாகபுரி இராச்சியத்தைப் பற்றிய அறிக்கையையும்' குறிப்பிடலாம்.

மராட்டியரின் ஆட்சியைப்பற்றி முதன்முதல் ஆராய்ந்து எழுதியவர் நீதிபதி எம். ஜி. ரானடே என்பவராவர். அவருடைய பின்வரும் மூன்று நூல்கள் இன்றும் சிறப்புடையனவாகப் போற்றப்படுகின்றன.

எம். ஜி. ரானடே: (1) மராட்டியரின் எழுச்சி (Rise of the Maratha Power), பூனா, 1900. (2) பல்பொருள் கட்டுரைகள் (Miscellaneous Writings), பூனா, 1900. (3) பேஷ்வாவின் நாட்குறிப்புகளுக்கு முன்னுரை (Introduction to the Peshwa's Diaries), பூனா, 1900.

இத் துறையைப்பற்றி இக்காலத்தில் எழுதப்பட்ட சிறந்த ஆராய்ச்சி நூற்களாவன:

(1) S. N. சென்: மராட்டியரின் ஆட்சிமுறை அமைப்பு (Administrative System of the Marathas), 1925.

(2) N. S. தகாகேசாவும், K. A. கேலூங்கரும் 'சிவாஜி மகராசன்' என்னும் நூலில் ஓரதிகாரத்தில் ஆட்சிமுறையைப் பற்றி எழுதியுள்ளனர் (1921).

(3) S. M. எட்வர்ட்சினுடைய கட்டுரை ஒன்று கேம்பிரிட்ஜ் இந்திய வரலாற்றின் ஐந்தாம் தொகுதியில் 23ஆம் அதிகாரமாக இடம்பெற்றிருக்கிறது.

# 5. ஹேஸ்டிங்ஸின் ஆட்சிக்காலம்

வங்காளத்தை 1767ஆம் ஆண்டுமுதல் 1769ஆம் ஆண்டு வரை வெரெல்ஸ்ட் (Verelst) என்பவரும், 1769 முதல் 1772 வரை கார்ட்டியர் (Cartier) என்பவரும் கவர்னர்களாக ஆட்சி புரிந்தனர். அவர்களுடைய ஆட்சிக்காலத்தில் ஆட்சிமுறையில் எத்தகைய மாறுதல்களும் உண்டாகவில்லை. 1769ஆம் ஆண்டில் வருவாய்த்துறையைக் கண்காணிக்க 'மேற்பார்வையாளர்கள்' (supervisors) அமர்த்தப்பட்டனர். கிளைவ் அடியோடு நசுக்கிவிட வேண்டும் என்று முயன்ற ஊழல்கள் பல அறிவுக் கூர்மையான வடிவங்களில் இம் மேற்பார்வையாளர்களுடைய காலத்தில் மீண்டும் பையப்பையத் தலையெடுக்கலாயின. ஆனல், வங்காளத்தின் வாழ்க்கையில் 1769-70 ஆம் ஆண்டுகள் ஒரு திருப்பு மையத்தை உண்டாக்கின. இவ்வாண்டுகளில் வங்காளத்தில் மிகக் கொடிய பஞ்சமொன்று கோர தாண்டவமாடியது. மக்கள் தொகையில் மூன்றில் ஒரு பகுதியினர் இறந்தனரெனவும், பயிரிடப்பட்டுவந்த நிலத்தில் மூன்றில் ஒரு பங்கு பாழ்நிலமாகப் போனதாகவும் சொல்லப் படுகிறது.[1]

> 'உழவர்கள் தங்கள் கால்நடைகளை விற்றனர்; உழவுத் தொழிலுக்குரிய கருவிகளையும் அவர்கள் விற்றுவிட்டனர்; விதைக்காகச் சேமித்துவைத்திருந்த தானியங்களையும் அவர்கள் விழுங்கிவிட்டனர்; குழந்தைகளை விலைகொடுத்து வாங்குகின்றவர்கள் இருந்தவரை, அவர்கள் தங்களுடைய ஆண்பிள்ளை

[1] சர் W. W. ஹன்ட்டர் எழுதியுள்ள 'வங்காளத்தின் சிற்றூர்களின் வரலாறு'—பக். 53-54. கல்கத்தா ஆலோசனைக் குழு உறுப்பினர்களிடமிருந்தும், தலைவரிடமிருந்தும் இயக்குநர்களின் கழகத்திற்கு வந்த கடிதங்கள், நவம்பர் 3, 1772, பத்தி 6.

களையும் பெண்பிள்ளைகளையும் விலைகூறி விற்றனர்; அவர்கள் புல்லையும், பூண்டையும், மரத் தழைகளையும் உண்டனர்; 1770ஆம் ஆண்டு ஜூன் மாதம் அவைக் களத்திலிருந்த துணைக்காப்பரசின் ஆளுநர் இன்னும் உயிருடன் இருக்கும் மக்கள் இறந்தவர்களை உணவாக உண்பதாலேயே உயிர்வாழ்ந்துகொண்டிருக்கின்றனர் என்று தெரிவித்தார். பெரிய நகரங்களுக்கு இரவும் பகலும் பஞ்சத்தால் துன்புறும் நோய்வாய்ப்பட்ட இழிந்த மக்கள் சென்றுகொண்டே இருந்தனர். அவ்வாண்டின் முதற்பகுதியில் கொடிய கொள்ளை நோய் ஒன்று உண்டாயிற்று. மார்ச்சு மாதத்தில் மூர்ஷிதாபாத்தில் பெரியம்மை நோய் பரவியது. அரசுப் பிரதிநிதியின் குழுவினரும் அந்நோய்க்கு இரையாயினர். அதனால், இளவரசர் சைஃபுட் (Syfut) தமது அரண்மனையில் வெளித்தொடர்பு இல்லாமல் தன்னந்தனியாக அல்லற்பட்டார். இறந்தோரைப் புதைக்கும் தொழிலை விரைவாகச் செய்ய முடியவில்லை. நாய்களும் நரிகளும்கூட இவ் வேலையைச் செம்மையாகச் செய்ய முடியவில்லை. கீழை நாட்டைச் சேர்ந்த துப்புரவு செய்யும் தொழிலாளர்களால்கூட இப் புரட்சிமிக்க வேலையை—பிணங்களை எடுத்துச்சென்று புதைக்கும் அருவருப்புமிக்க வேலையைச் செய்து முடிக்க இயலவில்லை. எனவே, பிணக் குவியல்கள் தெருக்களிலே அழுகி நாற்றம் அடித்துக்கொண்டிருந்தன. இறுதியில் அழுகிப்போன பிணங்கள் குடிமக்களின் உயிர் வாழ்க்கைக்கு ஊறு விளைக்கும் நிலையை அடைந்தன.'[2]

அரிசியை வாணிகச் சூதாட்ட நோக்கத்தோடு வாங்கிக் குவிப்பதும், சில்லறையில் அதை அதிக விலைக்கு விற்பதும் அக்காலத்தில் இயல்பான செயலாக இருந்தது. இவ் வாணிகத்தில் ஈடுபட்டுக் கொள்ளை ஆதாயம் பெற விரும்பிய கம்பெனி ஊழியர்கள் பலர் இருந்துவந்தமையால் இவ் அவல நிலையினை அதிகாரிகளால் சீர்திருத்த முடியாமற்போயிற்று. இத்தகைய பேரிழப்பும் பெருந் துன்பமும் உண்டாகியிருந்த அக்காலத்தில் நிலவரி முதலியவற்றை 'மிகக் கண்டிப்பான முறையில் மக்களைக் கொடுமைப்படுத்தி'த் தண்டிவந்தனர். 1770ஆம் ஆண்டு உழவர்கள் செலுத்த வேண்டிய வரியில் 5 விழுக்காடு

[2] மேற்குறிப்பிட்ட நூல், பக்கம் 26.

குறைக்கப்பட்டது. அடுத்த ஆண்டு 15 விழுக்காடாகக் குறைக்கப்பட்டதாகத் தெரிகிறது. இத்தகைய பின்னணிக்கு மாறான வகையில் எழுபதுகளில் கல்கத்தாவின் வாழ்க்கை ஆடம்பர ஆரவாரமிக்கதாக இருந்தமைக்குக் காரணங் கூறியாக வேண்டும். இதையடுத்த சில ஆண்டுகளில் ஹிக்கேவும் அவருடைய நண்பர்களும் கேளிக்கைகளிலும் பகட்டுமிக்க வாழ்க்கையிலும் மூழ்கிக்கிடந்தமை எவ்வாறு என்பதை நாம் ஆராய்ந்தறிய வேண்டியவர்களாக இருக்கின்றோம். ஷுஜா, கிளைவோடு வாணிக ஒப்பந்தம் எதுவும் செய்துகொள்ள இயலாது என்று மறுத்தமைக்குக் காரணம் இல்லாமற் போகவில்லை. அவர் தம்முடைய நுண்ணறிவின்மூலம் கம்பெனி ஊழியர்களின் வளமிக்க வாழ்க்கைக்குரிய காரணம் யாதென்பதை நன்கு அறிந்திருந்தார். எனவேதான், பேராதாயம் மிக்க வங்காள வாணிகத்தின் நன்மைகளை ஆங்கிலேயர்களுக்கு அளிக்க விரும்பவில்லை. எனவே, அவர் மறுத்துவிட்டார்.

பஞ்சத்தால் பல முக்கியமான விளைவுகள் உண்டாயின. பல நூற்றுண்டுகளுக்குப் பிறகு முதன்முதலாக வங்காளமும் பீகாரும் இரண்டு தலைமுறைகளுக்கு மிகக் குறைந்த மக்கள் தொகையை உடையனவாகப்போயின. இம் மக்கள் தொகைக் குறைவு சமூக அமைப்பு முழுவதிலும் ஒரு பேரதிர்ச்சியை உண்டாக்கிற்று. ஜமீந்தார்களுள் பெரும்பாலோரும், வரி செலுத்திவந்த பெருநிலக்கிழார்கள் பலரும், எண்ணிக்கையில் குறைந்துபோன குடியானவர்களிடம் இருந்தும், நலிந்தும் மெலிந்தும்போன குடியானவர்களிடம் இருந்தும் முறையாகத் தண்டவேண்டிய தீர்வைகளைத் தண்ட முடியாமையால் அழிந்துபோயினர். இக் காலம் முதல் பண்டைப் பிரபுக்களின் குடும்பங்களுள் மூன்றில் இரண்டு பங்கு அழிந்துபோய்விட்டதாக ஹன்டர் குறிப்பிடுகிறுர்.[3] கைத்தொழில் வினைஞர்களும் உழவர்களும் பேரளவில் மாண்டு மடிந்துபோனமையால் கம்பெனிக்குக் கிடைத்துவந்த ஆதாயத்தில் நிலையான வீழ்ச்சி உண்டாயிற்று. மேலும், 1772ஆம் ஆண்டில் கம்பெனியின் நிதிநிலையில் நெருக்கடி உண்டாகுமாறு அது செய்தது எனலாம். இதன் விளைவாக கம்பெனியின் ஆட்சிமுறை நிகழ்ச்சிகளில் பிரிட்டிஷ் அரசாங்கம் தலையிட வேண்டிய நெருக்கடி உண்டாயிற்று.

[3] மேற்குறிப்பிட்ட நூல், பக்கம் 57.

1772ஆம் ஆண்டின் தொடக்கத்தில் வாரன் ஹேஸ்டிங்ஸ் வங்காளத்தின் கவர்னராகப் பதவியேற்ருர். அவருக்கு அப்பொழுது நாற்பது வயதுகூட ஆகவில்லை. இருபத்திரண்டு ஆண்டுகளுக்கு முன்பு அவர் முதன்முதலாக இந்தியாவிற்குச் சென்றிருந்தார். கிளைவினைப்போலல்லாமல், அவர் கம்பெனியின் எழுத்தர் நிலையிலிருந்து படிப்படியாக வேலை உயர்வுபெற்று, இப்பொழுது மிக உயர்ந்த பதவியாகிய கவர்னர் பதவியைப் பெற்ருர். 1756ஆம் ஆண்டில் மூர்ஷிதாபாத்தில் அவர் துணைக்காப்பரசின் ஆளுநராகப் பணிபுரிந்தார். வான்சிட்டார்ட்டின் ஆலோசனைக் குழுவில் ஹேஸ்டிங்ஸ் ஓர் உறுப்பினராகவும் இடம்பெற்ருர். அக்குழுவின் பெரும்பான்மையோர் கருத்தினையும் திட்டத்தினையும் அவர் என்றும் நிலையாக வன்மையாக எதிர்த்துவந்தார். 1773ஆம் ஆண்டு நார்த் என்னும் பிரபு 'அவர் மனிதப் பிறவியாக இருந்தும் பெரும் பேராசைகளை எல்லாம் அவர் கட்டுப்படுத்திக் கொண்டார்' என்று ஹேஸ்டிங்சைப் பாராட்டியுள்ளார். அவரிடம் என்றுமே ஊழல் இடம்பெறவில்லை; எனினும், பதினைன்கு ஆண்டுகள் பணிபுரிந்துவிட்டு அவர் தம்முடைய முப்பத்திரண்டு வயதில், 30,000 பவுன்கள் மதிப்புடைய செல்வத்தோடு இங்கிலாந்திற்குத் திரும்பிச் சென்ருர். இதைக் கண்ட அக்காலத்து மக்கள் அவர் செல்வம் சேர்த்த வழிவகைகளைப் பற்றிப் பல விளக்கங்கள் தந்தனர். 1769ஆம் ஆண்டில் அவர் மீண்டும் இந்தியாவிற்குத் திரும்பிவந்தார். இச்சமயம் அவர் மதராசிலிருந்த ஆலோசனைக் குழுவின் இரண்டாம் உறுப்பினராகப் பதவியில் அமர்த்தப்பட்டார். அங்கு அவருடைய நற்குணமும் நன்னடத்தையும் அவருக்குப் புகழைத் தேடித்தந்தன. அதன்பயனுக அவர் வேலை உயர்வு பெற்று வங்காளத்தின் கவர்னராகப் பதவியேற்ருர். அவர் தம்முடைய திறமையையும், மன உறுதியையும், நேர்மையையும் நாடறியச் செய்திருந்தார். ஆனல், இதுவரை ஆங்கிலேய—இந்திய வரலாற்றின் நிலையான புதிராகவும், கருத்து மாறுபாட்டின் நிலைக்களனுகவும் விளங்குவதற்குரிய பெருமையையும் மாண்பையும் அவர் இன்னும் அடையவில்லை. வங்காளத்தில் கம்பெனியாரின் ஆட்சியை வலுப்படுத்துவதே அவருடைய தலையாய பணியாக இருந்தது. இவ்வரும்பணியாற்றுவதில் அவர் தற்பெருமை சிறிதும் இல்லாமல் அரும்பாடுபட்டார். ஆனல், ஊழ்வினை அவருக்கு இதைக்காட்டிலும் மிகச் சிறந்த ஒன்றை ஒதுக்கிவைத்திருந்தது. பிரிட்டிஷாரின் உடைமைகளைப் பகைவர்களின் தாக்குதல்களால் அழிந்தொழியாதவாறு புறத்தே காத்தோம்புதலும், அவர்களுக்

குள்ளே மிகக் கொடிய பிளவுகளினாலும் உட்பகையினாலும் அழிந்தொழியாதவாறு அதைக் காத்தலுமே அவருக்கென்று சிறப்பாக ஒதுக்கிவைக்கப்பட்ட பணியாகும். வாணிகக் கூட்டுக் கழகமாகிய கம்பெனி, இந்தியாவில் நில வருவாயை நாடி நிற்கும் உழவனாக மாறிநிற்பதை அவர் கண்டார். இந்தியத் துணைக்கண்டத்தின் ஆற்றல்மிக்க சக்திகளுள் ஒன்றாக அவர் அதை விட்டுவிட்டுச் சென்றார்.

முதலில் ஹேஸ்டிங்ஸ் பின்பற்ற வேண்டிய செயல் முறைகள் எவை என்பது தெளிவாக விளங்கின. பன்னிரண்டு அல்லது பதின்மூன்று உறுப்பினர்களைக்கொண்ட ஆலோசனைக் குழுவின் தலைமை இடத்தில் அவர் வீற்றிருப்பதை உணர்ந்தார். அக் குழுவின் முடிவுகள் அனைத்தும் வாக்கெடுப்பின்மூலம் முடிவு செய்யப்படுவதையும், பெரும்பான்மையான வாக்குகள் பெறக்கூடியவையே முடிவுகளாகக் கருதப்படுவதையும் அவர் அறிந்தார். வெளிநாட்டு விவகாரங்கள் மட்டும் தானும், மற்றும் இரண்டு உறுப்பினர்களும் சேர்ந்து முடிவு செய்யவேண்டிய நிலையில் உள்ளதை அவர் உணர்ந்தார். ஆனால், கம்பெனியின் இயக்குநர்களுடைய ஆட்சியுரிமைக் கட்டளைகள் நன்கு வரையறுக்கப்பட்டனவாக இருந்தன. எனவே, புதிதாகப் பதவி ஏற்ற கவர்னரின் உள்ளம் தெளிவுடையதாகவும் ஊக்கமுடையதாகவும் இருந்தது. அவர் பின்பற்றிய முறைகள் செயல்நயனும், திறமையும் உடையனவாக இருந்தன. ஆனால், இங்கிலையில் ஒழுங்கு முறைகளுக்குக் கட்டுப்பட்டுச் செயலாற்றும் பணிமுறையினைக் கம்பெனியின் ஊழியர்கள் வெறுத்துவந்தனர். அவர்களுடைய எதிர்ப்பு நேரடியானதாக இல்லாமல், ஏமாற்றிச் சிக்கவைக்கும் சூழ்ச்சித்திறனுடையதாக இருந்தது. இவ்வாறு ஹேஸ்டிங்சின் முதலாண்டு ஆட்சிக்காலம் மிகவும் மென்மையாகக் கழிந்தது. பிளாசிப் போருக்குப் பிறகு அவ்வாண்டைப் போன்று மிக அமைதியாகக் கழிந்த காலம் வேறொன்றுமில்லை என்று கூறின் அது மிகையாகாது. இவ்வாறு சிறந்ததோர் அடிப்படை அமைக்கப்பட்டது. அவ் வடிப்படையின் மீது அவ்வாண்டைத் தொடர்ந்து தோன்றிய நெருக்கடி காலத்தில் ஹேஸ்டிங்சும், பிரிட்டிஷ் இந்தியாவும் நின்று நிலவ முடிந்தது.

கம்பெனி இயக்குநர்களின் அறிவிப்புகளையும் ஆணைகளையுமே வாரன் ஹேஸ்டிங்ஸ் தமக்குரிய வழிகாட்டியாகக் கொண்டார். அவை அவர் விருப்பப்படி பேரளவிற்குச் செய

லாற்றும் உரிமையை அளித்தன. அவ்வுரிமைகள் அனைத்தை யும் அவர் நன்முறையில் பயன்படுத்திக்கொண்டார். கம்பெனி இயக்குநர்கள், 'நாங்கள் இப்பொழுது முழு அதிகா ரங்களையும் அளித்திருக்கிறோம்; நீர் அவற்றைப் பயன்படுத்தி, கம்பெனி முழுவதையும் சீர்திருத்த வேண்டும்' என்று ஹேஸ்டிங்சிற்கு எழுதியிருந்தனர். அவர் முதலில் கண்ணும் கருத்துமாக நிலவருவாய்த்துறையினைச் சீர்திருத்த முயன்றார். நிலவருவாய் ஆட்சியினைக் கடந்த ஏழாண்டுகளாகக் கம்பெனி யின் பிரதிநிதிகளாக இருந்த முகமது ரசாக்கானும், ஷித்தாப் ராய் என்பவரும் கவனித்து வந்தனர். இக்காலத்தில் வங்காளம், பீகார் மாநிலங்களின் நிலவரியைத் தண்டும் திவானுகக் கம்பெனி, முகலாயப் பேரரசரிடம் சிறப்புரிமை பெற்றிருந்தது. எனவே, அது தனது பிரதிநிதிகளைக்கொண்டு அம் மாநிலங்களில் நிலவருவாயைத் தண்டிவந்தது. ஹேஸ்டிங்ஸ் முதலில் முகமது ரசாக்கானையும் ஷித்தாப் ராயையும் பதவியிலிருந்து நீக்கினர். மேலும், அவர் நில வருவாய்த்துறைப் பிரதிநிதிகள் பதவியை ஒழித்தார். அது முதல் 'கம்பெனியே நிலவருவாயைத் தண்டும் திவானுக'ப் பணிபுரிந்தது. நேரடியாகத் தன்னுடைய ஆட்களை அமர்த்தி, வரிப் பணத்தைக் கம்பெனி தண்டத் தொடங்கியது. நிலவரி யைத் தண்டுபவரே பொதுத்துறை நீதியை நிலைநாட்ட வேண்டும் என்னும் வழக்கம் இருந்துவந்தமையால், பொதுத் துறை ஆட்சி முழுவதையும் கட்டிக்காக்கும் பொறுப்பினைச் செயல்முறையில் கம்பெனியே மேற்கொண்டது எனலாம். ஒவ்வொரு மாவட்டத்திற்கும் ஆங்கிலேய இனத்தைச் சார்ந்த தண்டல்நாயகங்கள் அமர்த்தப்பட்டனர். கல்கத்தாவில் வருவாய்த்துறைக் கழகம் (Board of Revenue) ஒன்று நிறுவப் பெற்றது. இக் கழகம் மாவட்டத் தண்டல்நாயகங்களின் செயல்முறைகளைக் கண்காணித்து வந்தது. ஐந்து ஆண்டு களுக்கு மட்டும் முதல்நிலை நிலத் தீர்வை நிர்ணயம் செய்யப் பட்டது. பொதுமக்களுக்கு ஏலம் விடுவதன்மூலம் நிலமானது அச்சமயம் பயிரிடப்பட்டது. அம்முறை மிகுந்த குறைபாடுகள் உடையதாக இருந்தது. ஆயினும், அது ஒரு பணிச் சட்டத் தைக் குறைந்த அளவிற்கேனும் தந்துதவியது எனலாம். தேவையான செய்திகள் அனைத்தையும் அறிந்த பிறகு முழு அறிவுடன் இப் பணிச் சட்டத்தைச் சீர்திருத்திச் செம்மைப் படுத்துவதற்கு அம்முறை பயன்பட்டது என்று கூறின் அது தவருகாது. உடனடியாகப் புதிதாக அமர்த்தப்பட்ட தண்டல் நாயகங்கள் பேரிடுக்கண்களால் தடுமாறினர். ஒரு பக்கம் அரசாங்கத்திடமிருந்து பொருத்தமற்ற வகையில் வரி

தண்டப்படும் கொடுமையிலிருந்து ஜமீந்தார்களைக் காப்ப தற்கு இம்முறை பயன்படுத்தப்பட்டது. மற்றொரு பக்கம் ஜமீந்தார்களால் உழவர்கள் கசக்கிப் பிழியப்படுவதைத் தடுப் பதற்கும் இம்முறை பயன்பட்டது எனலாம். இச் சிக்கலின் சாரமாக இருந்தது 'ஜமீந்தார்களின் மறைபொருள்' என்ப தாகும். அதாவது, குடியானவர்களிடமிருந்து அவர்கள் தண்டிய பொருளுக்கும், அரசாங்கத்திற்கு அவர்கள் செலுத் திய தொகைக்கும் இடையே இருந்துவந்த வேற்றுமை எவ்வளவு என்பது புரியாத புதிராக இருந்தது. ஹேஸ்டிங்சின் மதிநலம் நிலவரித்துறையில் ஈடுபடவில்லை. அதனால், அவ ருடைய கூர்த்த மதிநுட்பம் இம்மறைபொருளாகிய வேற்று மைத் தொகையைப்பற்றி ஆராய்ந்தறிய முயலவில்லை. மற்ற இடங்களில் எல்லாம் புதிய முறைகள்—புதிய அமைப்புகளை நிறுவுவதற்கு வழிகாட்டிய காலம் வரையிலும் பட்டறிவு முறையே பல ஆண்டுகள் இங்குத் தொடர்ந்து பின்பற்றப்பட்டு வந்தது. புதிய தண்டல்நாயகங்களுக்கு அலுவலகங்கள் அமைக்கப்பட்டதோடு அவற்றுடன் பொதுத்துறை நீதிமன் றங்கள் மாவட்டங்கள்தோறும் அமைக்கப்பட்டன. அவற்றின் மேல்முறையீட்டு மன்றமாகக் கல்கத்தாவில் ஒரு நீதிமன்றம் நிறுவப்பட்டது. இவற்றோடு வேறுபல அமைப்புகளும் ஒன்று சேர்க்கப்பட்டு, ஓர் அமைப்பாக்கப்பட்டது. இச் சீர்திருத்தங் களால் வேறுபல துணை விளைவுகளும் உண்டாயின. முதலில் நவாபிற்கு அளிக்கப்பட்டுவந்த உதவித்தொகை 32 இலட்சத்தி லிருந்து 15 இலட்சமாகக் குறைக்கப்பட்டது.[1] நீதிமன்றத்தி லிருந்து நேரடியாக விடுக்கப்பட்ட ஆணை ஈதெனில் அது தவருகாது. ஆனல், அது ஹேஸ்டிங்சின் நிர்வாக முறையை யும், அதற்கு முன்பு இருந்துவந்த நிலைமைகளைப்பற்றியும் மிகுதியாகப் பேசுகிறது. பழைய முறையில் பெற்றுவந்த தைக் காட்டிலும் இப்புதிய முறையில் நவாபு தம்முடைய தனிவாழ்க்கைச் செலவிற்காக மிகுதியான தொகையைப் பெற்ருர் என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது. இரண்டாவ தாக மூர்ஷிதாபாத்திலிருந்துவந்த கருவூலத்தைக் கல்கத்தா விற்கு மாற்றினர். மூர்ஷிதாபாத்தில் கருவூலத்தை நிருவகித்து வந்தவர்கள் பொறுப்புமிக்க உயர்நிலை அதிகாரிகள் அல்லர். எனவே, பொறுப்புமிக்க உயர்நிலை அதிகாரிகளின் நேரடி யான கண்காணிப்பின்கீழ் அக்கருவூலத்தைக் கல்கத்தாவில்

[1] 1766ஆம் ஆண்டில் அவ்வுதவித் தொகை 53 இலட்சத்தி லிருந்து 41 இலட்சமாகவும், 1769ஆம் ஆண்டு 32 இலட்ச மாகவும் குறைக்கப்பட்டது.

அவர் அமைத்தார். இறுதியாக நவாபின் குடும்பம் திருத்தியமைக்கப்பட்டு, மீர்ஜாஃபரின் மனைவியான முன்னி பேகத்தின் பொறுப்பிலே விடப்பட்டமை இங்குக் குறிப்பிடத்தக்கதாகும்.

வாணிகத்துறையிலே வாரன் ஹேஸ்டிங்ஸ் செய்யவேண்டிய சீர்திருத்தங்கள் பல எஞ்சிநின்றன. கி.பி. 1773ஆம் ஆண்டு கம்பெனி ஊழியர்களின் வாணிகப் பொருள்கள் கட்டுப்பாடு இல்லாமல் நாடெங்கும் எடுத்துச் செல்லப்படலாம் என்பதற்கு வழங்கப்பட்டிருந்த அனுமதியை அடியோடு அவர் நீக்கினார். அதன் நினைவெச்சமாக இருந்துவந்தனவற்றையும் அவர் அடியோடு அழித்தொழித்தார். முக்கியமான ஐந்து வாணிகத்தலங்களில் மட்டும்[1] சுங்கச் சாவடிகள் தொடர்ந்து பணியாற்றிவருமாறு ஹேஸ்டிங்ஸ் செய்தார். ஆனால், அதே சமயத்தில் பிற பகுதிகளில் எல்லாம் இருந்துவந்த சுங்கச் சாவடிகள் அனைத்தையும் அடக்கியொடுக்கினார். இவ்வருஞ்செயலினால் வாணிகம் பெருக்கெடுத்தோடுவதற்கு அவர் ஆக்கமும் ஊக்கமும் அளித்தார் எனலாம். உப்பு, பாக்கு, புகையிலை ஆகிய விற்பனை முற்றுரிமை பெற்றிருந்த பொருள்கள் நீங்கலாக மற்றப் பொருள்களின்மீது விதிக்கப் பெற்றிருந்த தீர்வை ஒரே சீராக $2\frac{1}{2}$ விழுக்காடாக இந்தியப் பொருள்களுக்கும் ஐரோப்பியப் பொருள்களுக்கும் குறைக்கப் பெற்றது. இத்தகைய செயல் திட்டங்களினால் வாணிகம் போற்றி வளர்க்கப்பட்டது; நேர்மையற்ற போட்டிகள் தவிர்க்கப்பட்டன; கைப்பற்றுவதும் குறைக்கப்பட்டது.

மூன்றாண்டுகளுக்குள்ளாகவே வாரன் ஹேஸ்டிங்ஸ் இவ்வரும்பெருஞ் சீர்திருத்தங்களைச் செய்து பேரும் புகழும் பெற்றார். அவர் இவை அனைத்தையும் செயலில் செய்துகாட்டி வெற்றி பெற்றார் என்று கூறுவது மிக எளிதாகும். அவருடைய சீர்திருத்தங்கள் அனைத்தும் உண்மையிலேயே முற்றுப்பெற்றிருக்குமானால் காரன்வாலிசினுடைய அரும்பணி தேவைப்பட்டிருக்காது. ஆனால், அடுத்த தலைமுறையினரான மால்கோம் (Malcolm), எல்ஃபின்ஸ்டன் போன்றோர் எழுபதுகளிலும் எண்பதுகளிலும் இருந்துவந்த நிலையினையும் தரத்தையும் வெறுப்புடன் எள்ளிநகையாடினர். உண்மையில் மிகக் குறுகிய காலத்தில் ஹேஸ்டிங்ஸ் பேரளவிற்குச் செய

[1] கல்கத்தா, ஹுக்ளி, மூர்ஷிதாபாத், பாட்னா, டாக்கா என்னும் ஐந்து நகரங்களில் இருந்துவந்தனவாகும்.

லாற்றி வெற்றி பெற்ருர். அதுவும் மிகத் தாழ்ந்த நிலையி லிருந்து மிக உயர்ந்த நிலைவரையில் இருந்துவந்த சீர்கேடு களைப் போக்குவதற்குப் படிப்படியாகத் திட்டமிட்டுச் செயற் படுத்தி, அவற்றில் அவர் வெற்றி பெற்ருர் என்றே சொல்ல லாம். இடையருது தாயகத்திலிருந்து ஆதரவு கிடைத்துவரு மாஞல் உரமிக்க உள்ளமும், திறமையும் வாய்ந்த மனிதர் செய்யக்கூடியவை யாவை என்பதை அவர் அமைதியாகச் செயல்மூலம் வெளிப்படுத்திஞர். ஆஞல், அவருடைய அரும் பணி பெரும் பழிக்குள்ளாகிய காலத்தின் முடிவினைக் குறித்த அதே சமயத்தில், அதுதான் உண்மையான ஆக்கநிலையைச் சார்ந்த ஆட்சிமுறையின் தொடக்கமாகவும் அமைந்தது என்பது இங்குக் குறிப்பிடத்தக்கதாகும். கம்பெனியைச் சேர்ந்த ஊழியர்களின் ஊதியம் இதுவரை இவ்வளவுதான் என்பதை வரையறுத்து, நிலையாக நிர்ணயிக்கப்படாமலும் இருந்துவந்தது. தனிப்பட்ட முறையில் கம்பெனி ஊழியர்கள் வாணிகம் செய்வதும், பரிசுப் பொருள்களைப் பெற்றுக் கொள்ளுவதும் புறத்தோற்றத்தில் விதிமுறைகளுக்குக் கட்டுப்பட்டு நடப்பதுபோல் தோன்றினும், மறைவாகத் தொடர்ந்து அது நடைபெற்றுவந்தது. இன்னும் ஆட்சி யமைப்பிலிருந்து வாணிகத்துறை முழுவதும் வேறுபடுத்தப் படவில்லை. புதிய வருவாய்களும், நீதிமுறை அமைப்புகளும் தாற்காலிகமானவை. மேலும், அவை முழுமைத் தன்மை யுடையனவாக—குறைபாடில்லாதனவாக இல்லை. ஹேஸ் டிங்ஸ் தம்முடைய இயல்பான நுட்பமிக்க அறிவினைக் கொண்டு அக்காலத்தில் அவராற்றிய பணியினைக் கட்டி முடிக்கப்பெருத கட்டடத்தோடு ஒப்பிட்டுக் கூறியுள்ளார். மற்றுமோர் ஐந்தாண்டுகள் தொடர்ந்து அரிதின் முயன்று ஆக்கவேலை அவர் செய்திருந்தால், காரன்வாலிசின் வாழ்க்கைப் பணி தேவையற்றதாகப் போயிருக்கும். ஆஞல், பொதுவாழ்வில் அடிக்கடி நடைபெறுவதைப் போன்று, கால மெனும் நாடோடி மனிதன் காத்துக்கொண்டிருக்கவில்லை. இவ் வரும் பணிகளைச் செய்வதற்கு நேர்மாருக ஹேஸ்டிங்ஸ் மராட்டியர்களை எதிர்த்துப் போரிடவேண்டிய நெருக்கடி உண்டாயிற்று. மேலும், ஆலோசனைக் குழுவின் உறுப்பின ரான பிலிப்பு ஃபிரான்சிஸ் என்பவருடைய தாக்குதல்களுக்கு அவர் ஈடுகொடுக்க வேண்டியதாயிற்று.

இத்தகைய குழப்பமானதும் திகைப்புறச் செய்வதுமான காலத்திற்கு 1773ஆம் ஆண்டில் இயற்றப்பட்ட ஒழுங்கு முறைச் சட்டம் (Regulating Act) கட்டியம் கூறியது. கம்பெனி

பிரிட்டனுடைய அரசுடன் கொண்ட தொடர்பினை அடுத்த இயலில் விரிவாகக் காணலாம். இந்தியாவின் ஆட்சிமுறையினையே பாதித்த அச் சட்டத்தின் விதிகள் சிலவற்றைத் தெளிவு கருதி இங்குச் சிறிது விளக்குகின்றேன். அவ்வொழுங்குமுறைச் சட்டம் வங்காளத்தில் வில்லியம் கோட்டையில் கவர்னர்-ஜெனரல் எனப்படும் புதியதொரு பதவியையும் நான்கு உறுப்பினர்களைக் கொண்ட ஓர் ஆலோசனை மன்றத்தையும் அமைத்தது. மற்ற இரு மாநிலங்களையும் கண்காணிக்கும் உரிமையினை கவர்னர்-ஜெனரலுக்கு அச் சட்டம் வழங்கியது. இவ்வாறு பிரிட்டிஷ் இந்தியாவின் ஆற்றல்மிக்க நிலைக்களனாகக் கல்கத்தா மாறியது. இவற்றுடன் கல்கத்தாவில் உச்ச நீதிமன்றம் (Supreme Court) ஒன்றை நிறுவுவதற்கு உரிய உரிமையினை பிரிட்டிஷ் அரசுக்கு அச் சட்டம் அளித்தது. அந் நீதிமன்றத்தில் தலைமை நீதிபதி ஒருவரும், மூன்று துணை நீதிபதிகளும் நியமிக்கப்படுவதற்கு அச் சட்டம் உரிமை நல்கியது. தாராளமான வகையில் ஊதியம் அளிப்பதற்கு அச் சட்டம் வழிசெய்தது.[1] முதலாவது கவர்னர்-ஜெனரலான வாரன் ஹேஸ்டிங்ஸும் அவருடைய ஆலோசனை மன்றத்தைச் சேர்ந்தவர்களாகச் சட்டத்தில் குறிப்பிடப்பட்ட நால்வரும் ஐந்தாண்டுகள்தான் பதவியில் இருக்கலாம் என்றும் அச் சட்டம் குறிப்பிட்டது. அரசின் தலைவருடைய (கவர்னர்-ஜெனரலின்) மதிப்புதான் உயர்ந்ததே ஒழிய, அதிகாரத்திலும் ஆதிக்கத்திலும் எத்தகைய பெருக்கமும் உண்டானதாகத் தெரியவில்லை. ஆலோசனை மன்றத்தில் கவர்னர்-ஜெனரலுக்கு ஒரே ஒரு வாக்குதான் இருந்தது. மன்றத்தின் நடவடிக்கைகளில் சிக்கல் உண்டாகின்றபொழுது, அச் சிக்கலைத் தீர்ப்பதற்கு கவர்னர்-ஜெனரலுக்கு மற்றொரு வாக்குரிமை அளிக்கப்பட்டிருந்தது. இன்னும் அரசாங்கம் என்பது கவர்னர்-ஜெனரலும், ஆலோசனை மன்றமும் சேர்ந்த ஒன்றாக இருந்ததே தவிர, ஆலோசனை மன்றத்தினுள் உள்ள கவர்னர்-ஜெனரலே அரசாங்கம் என்னும் நிலை இன்னும் உண்டாகவில்லை.

ஹேஸ்டிங்ஸிற்குக் கம்பெனியின் உள்துறை ஆட்சியில் உண்டான இன்னல்களும் இடையூறுகளும் ஒழுங்குமுறைச் சட்டத்தின் நேரடி விளைவுகளாகும். அவருடைய வெளிநாட்டுக் கொள்கையையும், உள்துறை திட்டங்களையும்

[1] The Governor-General, £ 25,000, Councillors, £ 10,000, The Chief Justice, £ 8,000.

பற்றி விரிவாக ஆராய்வதற்கு முன்பு, ஒழுங்குமுறைச் சட்டம் செயற்படுத்தப்பட்டதனல் உண்டான விளைவுகள் எவை என்பதை இப்பொழுது தொடர்புகாட்டி விளக்குவது எளிதாகும். ஆலோசனை மன்றத்தின் உறுப்பினர்களாகச் சட்டத்தில் குறிப்பிடப்பட்டவர்கள் ஜெனரல் சர் ஜான் கிளாவெரிங்கு, கர்னல் மான்சன், பிலிப்பு ஃபிரான்சிஸ், ரிச்சர்டு பார்வெல் என்பவராவர். இந் நால்வருள் இறுதியில் குறிப்பிடப்பட்ட ரிச்சர்டு பார்வெல் என்பவரே கம்பெனியில் வேலை பார்த்துவந்த அதிகாரியும், இந்தியாவில் நெடுங்காலமாக வாழ்ந்துவந்த அதிகாரியுமாவார். அவருடைய தந்தை வங்காளத்தின் கவர்னராகப் பணிபுரிந்தவர் என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது. தொடக்கத்தில் ஹேஸ்டிங்ஸ் அவர்மீது ஐயுறவு கொண்டார். ஆயினும், பின்னர் ரிச்சர்டு பார்வெல் ஹேஸ்டிங்ஸின் நிலையான ஆதரவாளராக விளங்கினர். சர் ஜான் கிளாவெரிங்கு நேர்மையானவர்; ஆனல், அவர் எளிதில் உணர்ச்சிவயப்படக்கூடியவர்; ஆழ்ந்த விருப்பு வெறுப்புகளுடையவராக அவர் இருந்தமையால், அவருக்குச் சில குறைபாடுகள் இருந்தன. மான்சன் என்பவர் மிகுந்த திறமையும், மிகுந்த அடக்கமும் உடையவராக விளங்கினர். தென்னிந்தியாவில் ஐந்தாண்டுகள் புகழ்ச்சிக்குரிய வகையில் அவர் பணியாற்றியிருந்தார். இந் நால்வருள் அவருடைய போக்கு மிகவும் பெருந்தன்மையுடையதாகவும் போற்றத்தக்கதாகவும் இருந்தது. பிலிப்பு ஃபிரான்சிஸ் என்னும் முரட்டுப் பண்புமிக்க அறிவாளியின் தூண்டுதலினலேயே இவர்களிருவரும் நிலையான மரபின் பழிப்புப் பண்புடையவர்களாக மாறினர். பிலிப்பு ஃபிரான்சிஸ் போற்றத்தக்க திறமைக் கூறுகளும், பண்புநலப் பேறுகளும் உடையவராக விளங்கியபோதிலும் பழிவாங்கும் கொடிய உள்ளம் வாய்க்கப்பெற்றவராக இருந்தார். அவ் உளப் பண்பினை வங்காளத்தின் தட்பவெப்ப நிலை மேலும் மேலும் ஊக்குவித்து வளர்ப்பதாக இருந்ததேயொழிய அதைக் கட்டுப்படுத்துவதாக இல்லை. மேலும், அண்மையில் இங்கிலாந்தில் இந்தியாவைப்பற்றி நடைபெற்ற விவாதங்களிலிருந்து உய்த்துணரப்பட்ட ஆற்றல்மிக்க கருத்துகள் அவருடைய உள்ளத்தை ஆட்கொண்டது. அவர் 'பழியார்வத்தைப் பொது அறமாகத் தவருகக் கருதும் இயல்புடைய மனிதராக'[1]

[1] ஜூனியசின் கடிதங்கள் என்பவை ஃபிரான்சிஸால் எழுதப்பட்டவை என்பதை இன்னும் முடிவாக யாரும் மெய்ப்பிக்கவில்லை. ஆனல், பொதுவாக இலக்கிய உலகம் அக் கடிதங்களை எழுதியவர் ஃபிரான்சிஸ் என்றே நம்பி வருகிறது.

இருந்தார் என்று மெக்காலே அவரைப்பற்றி மொழிந்துள்ளமை இங்கு நினைவுகூரத்தக்கதாகும். அவர் வங்காளத்திற்குச் செல்லுகின்றபொழுதே வங்காளத்தின் ஆட்சிமுறை ஊழல் மலிந்து சீர்கேடுற்றிருக்கிறது என்னும் நம்பிக்கையுடன் சென்றார். அதனுடன் கவர்னர்-ஜெனரல் பதவியிலிருந்து ஹேஸ்டிங்ஸை நீக்கிவிட்டுத் தம்மை அப் பதவியில் அமர்த்துவார்கள் என்னும் மனக்கோட்டை கட்டிக்கொண்டு அவர் அங்குச் சென்றார். அவர் கவர்னர்-ஜெனரல் பதவியைப் பற்றிக் கொண்டிருந்த கருத்து எத்தகையது என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது. 'உலகிலே ஒரு குடிமகன் அடையக்கூடிய முதற்பெரும் பதவி கவர்னர்-ஜெனரல் பதவி என நான் நம்புகிறேன்' என்பது அவருடைய நம்பிக்கையாகும். எனவே, இத்தகைய எண்ணங்களையும் மனப்போக்கினையும் கொண்ட உறுப்பினர்களையுடையதாக இருந்த ஆலோசனை மன்றத்தினுள் போரும் பூசலும், பிளவும் உட்பகையும் இருந்து வந்ததைக் கண்டு வியப்படைவதற்கு இல்லை. கவர்னர்-ஜெனரலை அச்சுறுத்தி அடக்கியொடுக்குவதற்காகப் பழி வாங்கும் உள்ளத்தோடு பிலிப்பு ஃபிரான்சிஸ் தம்முடைய தோழர்களாகிய மற்ற இரு உறுப்பினர்களையும் தம்வயப் படுத்திக் கூட்டுச் சேர்த்துக்கொண்டமையும், அவருடைய முயற்சிகளை எல்லாம் எதிர்த்து இடையறாது உணர்ச்சிவயப் பட்டுப் போரிடுவதற்கு ஹேஸ்டிங்ஸ் வள ஆதாரங்களைப் பயன்படுத்தியமையுமே இப் போட்டியை நினைவிலிருந்து நீங்க வொட்டாமல் செய்துவிட்டது. இப் போராட்ட காலத்தில் இருதிறத்தினரும் மிக உயர்ந்த ஒழுகலாற்று நெறியிலிருந்து மிகத் தாழ்ந்து நடந்துகொள்ளாமல் இருந்திருந்தால், இருவருமே மனித இயல்பிற்கு மேற்பட்டவர்களாக விளங்கியிருப்பர். மனித இனத்தின் இயல்புகளை இருதிறத்தினரும் முழுமையும் பகிர்ந்துகொண்டனர் என்றே சொல்லலாம்.

இந்தியாவில் வாழ்ந்திராத ஆலோசனை மன்ற உறுப்பினர்கள் மூவரும் 1774ஆம் ஆண்டு அக்டோபர் திங்களில் கல்கத்தாவிற்கு வந்து சேர்ந்தனர். அவர்களை நல்ல முறையில் வரவேற்கவில்லை என்று, வந்தவுடனேயே அவர்கள் கவர்னர்-ஜெனரல்மீது குற்றம் சாட்டினர். இரண்டு ஆண்டுக் காலத்திற்கு ஆலோசனை மன்றத்தின் செயல்முறைகள் அனைத்தும் ஹேஸ்டிங்ஸுக்கு எதிராகவே நடைபெற்றன. அவருக்கு எதிராக வாக்கெடுப்புகள் நடைபெற்றன. எனவே, அவர் முடிவு செய்வதற்குரிய தம்முடைய வாக்கினைப் பயன்படுத்துவதற்குரிய வாய்ப்பு கிடைக்காமல் அல்லற்

பட்டார். அவருடைய திட்டங்களுள் பெரும்பான்மை யானவை தலைகீழாக மாற்றப்பட்டன. இத்தகைய மன உளைச்சல்மிக்க நெருக்கடியான நிலையில் எதிர்த்துத் தாக்கும் பண்பு குறைந்தவராகவோ, நுட்பமான உணர்ச்சி யுடையவராகவோ உள்ள மனிதர்கள் யாராக இருந்தாலும் அம் மனிதர் மனமுடைந்துபோவது உறுதியாகும். ஆனால், அவர் அதையெல்லாம் கடுகடுத்த உள்ளத்துடன் பொறுத்துக் கொண்டார். அதன் விளைவாக எதிரிகளைக் கடுமையாக எதிர்த்துத் தாக்கும் மனப் பண்பு அவரிடம் வளர்ந் தோங்கியது. 1776ஆம் ஆண்டு செப்டெம்பர் மாதத்தில் கர்னல் மான்சன் காலமானார். ஒவ்வொரு பிரச்சினையின் மீதும் கடுமையான வாதவிவாதங்கள் தொடர்ந்து நடந்து வந்தன. ஆனால், இறுதியாக கவர்னர்-ஜெனரலின் முடி வெடுக்கும் வாக்குரிமையைப் பயன்படுத்தியதன்மூலம் பிரச்சினைகள் தீர்மானிக்கப்பட்டன. 1777ஆம் ஆண்டின் தொடக்கத்தில் ஹேஸ்டிங்ஸின் பிரதிநிதியாக இங்கிலாந்தி லிருந்தவர், ஹேஸ்டிங்ஸ் அறிவுறுத்திய தெளிவில்லாத கருத்துகளைத் தவறுதலாகப் புரிந்துகொண்டு, ஹேஸ்டிங்ஸ் கவர்னர்-ஜெனரல் பதவியிலிருந்து விலகப்போவதாகத் தெரி வித்தார். ஹேஸ்டிங்ஸைத் தொடர்ந்து கவர்னர்-ஜெனரலாகக் கிளாவெரிங்கைப் பதவியில் கம்பெனியின் இயக்குநர்கள் அமர்த்தினர். ஆனால், ஹேஸ்டிங்ஸ் கடுஞ்சீற்றமுற்றார்; தம் முடைய பிரதிநிதியைக் கடுமையாகக் கடிந்துரைத்தார். உச்ச நீதிமன்றம் ஹேஸ்டிங்ஸிற்கு ஆதரவு அளித்தது. இந் நிகழ்ச்சி யால் உண்டான மன உளைவு கிளாவெரிங்கிற்குத் தாங் கொணு அதிர்ச்சியைத் தந்ததுபோலும். அதனால் அவர் அதே ஆண்டின் ஆகஸ்டு மாதத்தில் மனமுடைந்து இறந்தார். வீலர் என்பவர் மான்சனை அடுத்து அப் பதவியில் அமர்த்தப் பட்டார். முதலில் அவர் பொதுவாக ஃபிரான்சிஸோடு சேர்ந்தே வாக்கு அளித்தார். கிளாவெரிங்கும் அவ்வாறே இருந்துவந்தவராவார். 1779ஆம் ஆண்டில் சர் அயர் கூட் இம் மன்றத்தின் உறுப்பினரானார். அவர் இயல்பாகவே உறுதியான மனநிலையுடையவர். அவர் ஃபிரான்சிஸின் வலையில் வீழ்ந்துவிடாமல் தப்பினார். 1780ஆம் ஆண்டில் அவர் இணங்கிப்போவதற்கான முயற்சி நடைபெற்றது. அதன் விளைவாக இருவரும் கைகலந்தனர். இறுதியில் ஃபிரான்சிஸ் ஆற்றலற்றுப் போனார். சிறிது காலத்திற் கெல்லாம் ஃபிரான்சிஸ் பெரிதும் ஏமாற்றம் அடைந்தார். தான் கவர்னர்-ஜெனரலாக வரவேண்டும் என்று எண்ணிக் கொண்டிருந்த ஃபிரான்சிஸின் எண்ணத்தில் இடி விழுந்தது.

அதுமட்டுமல்லாமல் ஹேஸ்டிங்ஸையாகிலும் பதவியிலிருந்து விலக்க வேண்டும் என்று அவர் கட்டிய மனக்கோட்டையும் தவிடுபொடியாயிற்று. இவ்வாறு ஏமாற்றத்தினுல் உள்ளம் உடைந்த அவர் இங்கிலாந்திற்குத் திரும்பினுர். 1776ஆம் ஆண்டு மான்சன் இறந்தது முதற்கொண்டு ஹேஸ்டிங்ஸ் படிப் படியாகத் தம்முடைய அதிகாரத்தினைப் பொதுவாகத் திரும்பப்பெற்றுர். ஆனுல், ஃபிரான்சிஸ் இங்கிலாந்திற்குத் திரும்பிச் செல்லுகின்றவரை கடுமையான வாதங்களும், அதனுல் உண்டான மன வருத்தமும், பற்றுர்வத்தால் தொடர்ந்து இருந்துவந்த மனக்கவலையாகிய பெருஞ்சுமையும் ஹேஸ்டிங்ஸிற்குத் தீராப் பெருந் துன்பமாக இருந்து வந்தன. தம்முடைய பகைவர்கள் தம்மைப் பின்தொடர்ந்து இங்கிலாந்திற்கு வந்து பெருந் துன்பம் தருவார்கள் என்பது அப்பொழுதே ஹேஸ்டிங்ஸிற்கு நன்ருகத் தெரியும். இவ்வாறு அவருடைய கவர்னர் பதவிக் காலத்தின் இறுதி ஐந்தாண்டுகளில்தான் ஹேஸ்டிங்ஸ் தந்நிகரற்ற தலைமையும் மேலாண்மையும் உடையவராக இருப்பதை அவர் அனுப வத்தில் உணர்ந்தார். ஆனுல், அக் காலத்திற்குள் அவர் பெரிதும் மனச்சோர்வடைந்து இருந்தமையால், அப் பதவி யினுல் பெறக்கூடிய முழு இன்பத்தையும் அவரால் அனுப விக்க முடியவில்லை. அவர் தீயினூடே சிக்கினுலும், உயி ருடன் தப்பி வெளிவந்துவிட்டார். ஆனுல், தீயின் தணலினுல் அவர் தீங்குருமல் போகவில்லை. ஹேஸ்டிங்ஸின் செயல் முறைகளை முழுவதுமாகச் சேர்த்து மதிப்பிடுகின்றபொழுது, இவ்வுண்மைகளையெல்லாம் நாம் மறந்துவிடக்கூடாது. அப் போராட்டம் அரசர் நந்தகுமாரின் வழக்கினுல் உச்சநிலையை அடைந்தது. 1775ஆம் ஆண்டு மார்ச்சு மாதத்தில் முன்னி பேகத்திடமிருந்து ஹேஸ்டிங்ஸ் கையூட்டு வாங்கியதாக அரசர் நந்தகுமார், வாரன் ஹேஸ்டிங்ஸ்மீது குற்றம் சாட்டினுர். இளைஞராக இருந்த நவாப்பு முபாரக்-உத்-தெளலாவின் காப்பாளராக முன்னி பேகத்தை ஹேஸ்டிங்ஸ் அமர்த்தியதற்காக இக் கையூட்டுத் தரப்பட்டதாகக் (ரூ. 3,54,105) குற்றம் சாட்டப்பட்டது. இக் குற்றச்சாட் டினைப் பெரும்பான்மையோர் மகிழ்ச்சியுடன் வரவேற்றனர். அவர்கள் 'கவர்னர்-ஜெனரல் கையூட்டு வாங்காமல் இருப்ப தற்கே நியாயமில்லை. ஏனெனில், அவர் ஆலோசனை மன்றத் திற்கு வராமல் இருப்பதே போதிய சான்ருகும்' என்று தீர்மானித்தனர். ஹேஸ்டிங்ஸ் மன்றத்தில் தம்முடைய எதிரியைச் சந்திக்க விரும்பவில்லை; அவர் சந்திக்க

மறுத்தார். எனவே, அவர் கூட்டத்தைக் கலைத்தார். அதன் பிறகு பெரும்பான்மையினர் அப் பணத்தைக் கம்பெனியின் கருவூலத்திற்குத் திருப்பிக் கொடுக்குமாறு ஹேஸ்டிங்ஸிற்குக் கட்டளையிட்டனர். இந்நிலையில் நந்தகுமாரின்பேரில் ஒரு சதித் திட்டக் குற்றத்தினை ஹேஸ்டிங்ஸ் சாட்டினார். இவ் வழக்குத் தொடர்ந்து நடைபெற்றுக்கொண்டிருந்த சமயத்தில், இவ் வழக்கோடு தொடர்பில்லாத மற்றொரு வழக்குக் காரணமாக நந்தகுமார் சிறைபிடிக்கப்பட்டார். கல்கத்தாவில் வாழ்ந்துவந்த வணிகர் ஒருவர், நந்தகுமார் கள்ளக் கையெழுத்திட்டு, தம்மை ஏமாற்றியதாக ஒரு வழக்கினைத் தொடர்ந்தார். அதன் காரணமாக நந்தகுமார் சிறைபிடிக்கப்பட்டார். புதிய உச்ச நீதிமன்றம் அவ் வழக்கினை விசாரணை செய்தது. அம் மன்றம் நந்தகுமார் குற்றவாளி என்று தீர்ப்பளித்து, தூக்கிலிடுமாறு தண்டனை அளித்தது. நந்தகுமார் தூக்கிலிடப்பட்டார். அதன் பிறகு ஹேஸ்டிங்ஸ் மீது சாட்டப்பட்ட குற்றச்சாட்டுகள் அனைத்தும் கைவிடப்பட்டன. அவை என்றுமே புதுப்பிக்கப்படவில்லை.

அந்நாள் முதல் இவ் வழக்கு அறிவுத் திறன் மிகுந்த உரையாளர்களால் பெரிதும் ஆராய்ந்து விளக்கப்பட்டு வருகிறது. அதற்குரிய முழு விளக்கமும் என்றுமே வெளிவரவில்லை என்று சொல்லிவிட முடியாது. ஒன்று மட்டும் உண்மையென்று எளிதில் புலனாகின்றது. நீதி தவறாக வழங்கப்பட்டது என்பது மட்டும் மறுக்க முடியாத உண்மையாகும். ஆனால், இம் மாபெரும் தவற்றிற்குக் குறிப்பிட்ட தனி மனிதர் யாரையும் பொறுப்பாளியாக்குவது தவறாகும். இங்கு நாம் மிக முக்கியமான சில கருத்துகளை மட்டும் கூர்ந்து நோக்குவோம். இஸ்லாமிய சட்டதிட்டங்களை அடிப்படையாகக் கொண்டு வகுக்கப்பட்டதும் இன்று வங்காளத்தில் நடைமுறையில் இருந்துவருவதுமான குற்ற இயல் சட்டத்தின்படி கள்ளக் கையெழுத்திடுதல் என்னும் குற்றத்திற்கு மரண தண்டனை விதிப்பது என்பது பொருத்தமற்றதாகும். நன்கு நிறுவப்பெற்ற இந்திய நீதித் துறை மரபிற்கு முரணான வகையில் ஆங்கிலேயக் குற்ற இயல் தண்டனைகளை இந்திய நாட்டு வழக்கிற்கு விதிப்பது மாபெருந் தவறாகும். உச்ச நீதிமன்றம் இந்தியாவில் நிறுவப்பெற்று ஆறு மாதங்கள்கூட முடிவடையவில்லை. பெரும்பாலும் இந்திய நாட்டு நீதி முறை மரபினை அறிந்திராத நிலையிலேயே இத்தகைய தண்டனையை அளித்திருக்கலாம் என்று கருத இடமிருக்கிறது. இந்த வகையில் நந்தகுமார் நற்பேறு இல்லாதவராவர். நந்தகுமார்

ஹேஸ்டிங்ஸ்மீது குற்றம் சாட்டாமல் இருந்திருந்தால்கூட, அவர் கள்ளக் கையெழுத்திட்டதாகத் தொடரப்பட்ட வழக்கு அவர்மீது தவருமல் தொடரப்பட்டிருக்கும் என்பது மறுக்கமுடியாத உண்மையாகும். உச்ச நீதிமன்றத்தின் இன்னல்களையும் இடையூறுகளையும்பற்றி ஒன்றும் தெரியாத நந்தகுமார் பாதுகாப்பிற்காகப் பெரும்பான்மையோருடைய விளையாட்டினை உச்ச நீதிமன்றத்திற்கு எதிராக விளையாடினர் என்று வாதாடலாம். நந்தகுமாருக்குத் தண்டனை விதிக்கப்பட்ட பிறகு பெரும்பான்மையோர் அவருடைய சார்பில் ஒன்றும் செய்யாமல்போயினர். ஒரு முயற்சியும் அவர்கள் செய்யவில்லை. அவர் இறக்கப் போவதை அவர்கள் உணர்ச்சியற்ற மரக்கட்டைகளைப்போல் பார்த்துக்கொண்டிருந்தனர். உச்ச நீதிமன்றம் சிறப்புரிமை வாய்ந்த ஓர் அமைப்பு என்பது அதனுடைய மேற்கண்ட வழக்கின் விசாரணை முறைகளினுல் தெரியவருகின்றது. ஹேஸ்டிங்ஸ் நேர்மையற்ற முறையில் உச்ச நீதிமன்றத்தினரிடத்துச் செல்வாக்குடையவராக இருந்தார் என்பதை மெய்ப்பிக்க வேண்டும் என்ருல், முதலில் அவர் தலைமை நீதிபதி இம்பேயிடத்து (Impey) உரிமையின்றித் தலையிட்டு நேர்மையின்றி மாறுதல் செய்யுமாறு தூண்டினர் என்பதை மெய்ப்பிக்குமாறு செய்ய வேண்டும். மேலும், மற்ற மூன்று நீதிபதிகளையும் ஹேஸ்டிங்ஸ் தூண்டினர் என்பதை மெய்ப்பிக்க வேண்டும். அல்லது மற்ற மூன்று நீதிபதிகளும் தலைமை நீதிபதியாகிய இம்பேவிற்கு அடிமைபோல் நடக்கின்றவர்களாக இருந்திருக்க வேண்டும் என்பதையாகிலும் நாம் மெய்ப்பிக்க வேண்டும். ஆனல், இறுதியாகக் கூறிய முறையில் மற்ற மூன்று நீதிபதிகளும் தலைமை நீதிபதிக்குக் கட்டுப்பட்டிருந்தது இல்லை என்பது நாடறிந்த உண்மையாகும். நந்தகுமாருக்கு எதிராகத் தொடரப்பட்ட வழக்கில் ஹேஸ்டிங்ஸ் தலையிட்டார் என்பதற்கு யாதொரு சான்றும் கிடைக்கவில்லை. மேலும், மரண தண்டனையை ஆயுள் தண்டனையாக மாற்றுமாறு நந்தகுமாரின் சார்பில் பெருந்தன்மையான கோரிக்கை நீதிமன்றத்தில் முறையீடு செய்யப்பட்டதற்குரிய அறிகுறியின் சான்றுகள் ஒன்றுகூடக் கிடைக்கவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. இந்நாடகத்தில் நடித்த முக்கிய நடிகர்களுடைய மறைந்துகிடக்கும் ஊக்கிகள் வெளிப்படையாகத் தெரியும் வரையில் இந்தப் புதிர் விடுவிக்கப்படாத ஒன்ருகவே இருக்கும். எனவே, நாம் அதை இங்கே விட்டுவிட்டு மேலே செல்வோம். ஆங்கிலேய நீதித்துறை முறைகளை இந்தியச் சூழ்நிலைகளுக்கு உகந்ததாகப் பயன்

படுத்துவது முட்டாள்தனமானதும் நேர்மையற்றதுமான செயலாகும் என்பதற்கு வரலாற்று முறையில் இந் நிகழ்ச்சி மிகச் சிறந்ததோர் எடுத்துக்காட்டாகும். இந்திய மக்களின் உள்ளங்களில் கள்ளக் கையெழுத்திடுவது கடுமையான குற்றம் என்னும் கருத்து ஆழப் பதியுமாறு செய்யவேண்டும் என்பது உச்ச நீதிமன்றத்தின் விருப்பமாகும். கவர்னர்-ஜெனரலைத் தாக்குவது எவ்வளவு கொடுமையானது—பெருந் துன்பம் உண்டாக்குவது என்பதை மக்கள் எல்லாரும் நன்குணருமாறு செய்வதில் உச்ச நீதிமன்றம் இச் செயலின் மூலம் முழு வெற்றி பெற்றதென்றே கூறலாம்.

புதிய ஆலோசனை மன்றம் ஹேஸ்டிங்ஸிற்குப் பெருந் தொல்லையாக இருந்தது. ஆனால், உச்ச நீதிமன்றமும் அவருடைய பற்றுர்வத்திற்குக் காரணமாக இருந்துவந்தது. கம்பெனி ஊழியர்களுக்கு நீதி வழங்குவதற்கும், அவர்களுக்கெதிராகச் சாட்டப்படும் குற்றச்சாட்டுகளை ஆராய்ந்து பார்ப்பதற்குமே அந் நீதிமன்றம் நிறுவப்பெற்றது. ஆனால், அதனுடைய அதிகார வரம்பு வரையறுக்கப்படவில்லை. அதனுடைய பெருமதிப்புபற்றிய உணர்வும், அதனுடைய அதிகாரப் பசியும் ஆற்றல்மிக்கதாக இருந்தன. அதனுடைய உறுப்பினர்கள் தனிப்பட்ட புதிய சூழ்நிலைகளுக்கேற்பப் பணியாற்றுவதில் ஊடுருவமுடியாதவர்களாக இருந்தனர். இதன் விளைவாக இந்திய மக்களுக்கு அந் நீதிமன்றம் ஒருதலை முடிவானதாகவும், முன்னறிந்துகொள்ளமுடியாததாகவும் தோன்றியது. கம்பெனி அதிகாரிகளின் தலையீட்டுக்குட்பட்டதோர் அமைப்பாகவும், அவ்வதிகாரிகளின் மனம்போன போக்கிற்கு ஏற்பத் தாளம்போடும் அமைப்பாகவுமே அந் நீதிமன்றம் இந்தியர்களுடைய கண்ணிற்குத் தோன்றியது என்று கூறின் அது மிகையாகாது. 1777-9ஆம் ஆண்டுகளில் நடைபெற்ற பாட்னு வழக்கில் உச்ச நீதிமன்றத்திற்கும் அரசாங்கத்திற்கும் இடையே இருந்துவந்த மோதுதல் உச்ச நிலையை அடைந்தது. மேலும் இதற்கு ஊட்டம் அளிக்கும் வகையில் 1779-80ஆம் ஆண்டுகளில் நடைபெற்ற காசிஜூரா (Kassijura) வழக்கு அமைந்தது. காசிஜூரா அரசரின் வழக்கினை விசாரிக்க உச்ச நீதிமன்றத்திற்கு உரிமை கிடையாது என்று கூறியது ஆலோசனை மன்றம். உச்ச நீதிமன்றத்தின் அதிகார வரம்பினை அது ஏற்றுக்கொள்ள மறுத்தது. இதை எதிர்த்து அந் நீதிமன்றம் ஆலோசனை மன்றத்தின்மீது, அதனுடைய செயல் நீதிமன்ற அவமதிப்பு என்று குற்றம் சாட்டியது. இந் நெருக்கடிநிலையைப் போக்குவதற்கு விரும்பிய

ஹேஸ்டிங்ஸ் அதற்காக முயன்ருர். அவர் இம்பேயினை 'சாதர் திவானி அதலெட்' எனப்படும் கம்பெனியின் மேல் முறையீட்டு நீதிமன்றத்தின் தலைமையினை ஏற்றுக்கொள்ளு மாறு தூண்டினர். இவ் வமைப்பு நடைமுறையில் பல பெரும் நன்மைகளையுடையதாக இருந்தது. முதலில் இப் புதிய திட்டம் அதிகார வரம்புகளுக்கு இடையே உண்டான மோதல் களைத் தவிர்த்தது. மேலும், நாட்டில் ஏற்றுக்கொள்ளப்பட்ட சட்டத்திற்கு மேலாகப் பேராற்றல் உடைய ஆட்சித்துறைச் சட்டத்தைப் போன்றதொரு சட்டத்தை நிலைநாட்டுவதனல் உண்டாகக்கூடிய இன்னல்களையும் இடையூறுகளையும் இத் திட்டம் தடுத்தது. ஆனல், அது முரண்பாடுகளையும், செயல் முறையில் இடர்ப்பாடுகளையும் உண்டாக்கியது. இவற்றை இவ்விரு மனிதர்களின் பகைவர்களும் எதிரிகளும் சுட்டிக் காட்டத் தவறவில்லை. 1782ஆம் ஆண்டில் இம்பே இங்கிலாந் திற்குத் திரும்பி வருமாறு அழைக்கப்பெற்ருர். ஆனல், அவர் மறு ஆண்டில்தான் இந்தியாவைவிட்டுப் பிரிந்து சென்ருர். நான்கு ஆண்டுகளுக்குப் பின்னர் அவர்மீது துரோகக் குற்ற விசாரணை நடத்துவதற்கு முயற்சி செய்யப்பட்டது. ஆனல், அம் முயற்சி முதல் குற்றச்சாட்டிலேயே படுதோல்வியடைந் தது. இம்பே முரட்டுப் பிடிவாத குணம் படைத்தவராகவும், அசைக்கமுடியாத உறுதிப்பாடுடையவராகவும், கற்பனைத் திறனற்றவராகவும் இருந்தார். எனினும், அவர் பேராற்றலும் பெருந்திறனும் வாய்க்கப்பெற்ற மனிதராக இருந்ததோடு, நேர்மையும் வாய்மையும் உடையவராக விளங்கினர். இம்பே யின் கடுமையான மனநிலையாலும் செயல்முறைகளினலும் விளைந்த தீமைகளைச் சரிசெய்வதற்காகவே இம் முறை நேர்மையான வகையில் முயலப்பட்டது என்பது இம்பேயின் சார்பாளர்களுடைய கருத்தாகும். இரட்டை ஆட்சிமுறை மீண்டும் நடைமுறைக்குக் கொண்டுவரப்பட்டபோதிலும் மீண்டும் அத்தகைய முரண்பாடோ, மோதுதலோ உண்டாக வில்லை என்பது இங்குக் குறிப்பிடத்தக்கதாகும்.

நாம் இப்பொழுது ஹேஸ்டிங்ஸினுடைய வெளிநாட்டுக் கொள்கையைக் காண்போம். அவர் ஆட்சிக்காலம் முழு வதிலும் அவர் கடைப்பிடித்துவந்த வெளிநாட்டுக் கொள்கை தற்காப்பு முறைகளைக் கடைப்பிடிக்கும் கொள்கையாகவே இருந்துவந்தது. முதலில் அவர் வங்காளத்தையும் பீகாரை யும் பாதுகாப்பதற்குரிய நெறிமுறைகளில் கருத்தைச் செலுத் தினர். ஒழுங்குமுறைச் சட்டம் இந்தியா முழுவதிலும் உள்ள கம்பெனியின் குடியேற்ற நாடுகளுக்குப் பொறுப்புமிக்க

தலைவராக ஹேஸ்டிங்ஸை அமர்த்தியது. இந்த வகையில், அவர் மேற்கே மராட்டியரோடு போரிட நேரிட்டது; தெற்கில் நைசாமோடும், மைசூர் மன்னரோடும் போரிட வேண்டிய நெருக்கடி உண்டாயிற்று. இதற்கு முன்பு அவர்களோடு ஹேஸ்டிங்ஸிற்கு யாதொரு தொடர்பும் இல்லை. இப்பொழுது ஒழுங்குமுறைச் சட்டம் கவர்னர்-ஜெனரலுக்கு அளித்த உரிமைகளினாலும், விதித்த கடமைகளினாலும் அவர் அந்நாடு களின் விவகாரங்களில் தலையிட நேரிட்டது; கம்பெனியின் போக்கு எப்பொழுதுமே தற்காப்பினை அடிப்படையாகக் கொண்டு அமைந்திருந்தது. அவர்கள் போரினால், தங்க ளுக்குக் கிடைத்துவரும் வருவாய் அனைத்தும் கரைந்து போவதை நன்கு அறிந்திருந்தனர். அதனால், அவர்கள் ஆண்டுதோறும் முதலீடு குறைந்துபோகிறது என்பதையும் உணர்ந்திருந்தனர். புதிதாகக் கைப்பற்றப்பட்ட மாநிலங் களிலிருந்து கைப்பற்றிய பொருள்களைக்கொண்டு தங்க ளுடைய ஊழியர்கள் செல்வர்களாகிவிடுகின்றனர் என்ற நம்பிக்கையின்மையோடு அவர்களைப் பார்க்கத் தயாராக இருந்தனர். ஆனால், இக் கொள்கையைக் கடைப்பிடித்து வந்தமையால் இரண்டு உண்மையான இடர்ப்பாடுகள் உண் டாயின. அவற்றுள் முதல் இடர்ப்பாடு இந்திய அரசியல் குழப்பத்திலிருந்து தோன்றியதாகும். அதிகாரம் உறுதி யற்றதாக இருந்தது; அதிகார வரம்பு வரையறுக்கப்பட வில்லை; இந்தியா முழுவதிலும் அரசுரிமைக்குப் போட்டியும் போரும் இருந்துவந்தது. ஆப்கானியரின் திரும்பிவருதல் என்னும் நிழலின்கீழ் வடக்கு வாழ்ந்து வந்தது. பேரரசர் ஏறக்குறைய எல்லா உரிமைகளையும் உடையவராக இருந்து வந்தார். ஆனால், ஓர் அரசாங்கத்திற்கு—அரசிற்கு இருக்க வேண்டிய அதிகாரங்கள் ஒன்றுகூட அவரிடத்தில் இல்லை என்பது குறிப்பிடத்தக்கது. ஐதராபாத், மைசூர் மாநிலங் களும், மராட்டிய மாநிலமும் அரசுரிமைப் போட்டிகளாலும் போர்களாலும் அல்லலுற்றன. மேலும், அம் மாநிலங்களில் பொதுத்துறைக் குழப்பங்கள் நாட்டைப் பாழாக்கின. கம்பெனியின் ஆட்சிக்குட்பட்ட நாட்டுப் பகுதிகளின் எல்லை எங்குமே வரையறுக்கப்படவில்லை. இயற்கை எல்லைகளா லேயோ, அதிகார எல்லைக்கு அப்பால் நிலையான அரசுகள் இருப்பதனாலேயோ வரையறுக்கப்படவில்லை. எனவே, தங்கள் எல்லைக்குள்ளே அமைதியாக அமர்ந்திருப்பது என்பது கம்பெனியாருக்கு இயலாத காரியமாயிற்று. அதைப்போன்றே பிற அரசுகளின் விவகாரங்களில் தலை யிடாக் கொள்கையைக் கண்டிப்பாகப் பின்பற்றுவது

என்பதும் இயலாத ஒன்றாயிற்று. பக்கத்து வீட்டுக்காரன் என்ன செய்வானோ என்ற அச்சத்தால், விழிப்புடன் அவர்கள் நடவடிக்கைகளைக் கூர்ந்து கவனிப்பதைப் போன்று அயல் அரசுகளின் நடவடிக்கைகளையும் செயல்களையும் கவனித்து வரவேண்டிய நெருக்கடி உண்டாயிற்று. இரண்டாவது இடர்ப் பாடு முதலாவது இடர்ப்பாட்டின் நிறையுறுப்பாகும். இந்திய ஆட்சியாளர்கள் கம்பெனி எவ்வாறு பாதுகாப்பில்லாமல் இருக்கின்றதோ அதைப் போன்றே தாங்களும் பாது காப்பற்ற நிலையில் இருப்பதை நன்குணர்ந்திருந்தனர். மேலும் அவர்கள் கம்பெனியாரின் படையியல் திறமையிலும் ஆற்றலிலும் பெருமதிப்புக் கொண்டிருந்தனர். எனவே, ஒவ்வோர் ஆட்சியாளரும் கம்பெனியாரின் படை உதவியை அடைக்கலமாக அடைவதில் நாட்டம் உடையவர்களாக இருந்துவந்தனர். அவ்விந்திய அரசுகள் பகையரசுகளால் அச்சுறுத்தப்படுவதாகக் கருதிய காலத்திலும், அல்லது ஓர் அரசு தனது அயலரசுக்கு எதிராகப் பேரவாவுடன் திட்ட மிட்டுச் செயலாற்றுகிறது என்னும் எண்ணம் தோன்றுகின்ற பொழுதும் அவை கம்பெனியாரின் படைகளை அடைக்கலம் அடைந்தன. அயலரசுகளின் விவகாரங்களில் கம்பெனி தலை யிடுவதற்குக் காட்டிய ஆர்வத்திற்கு இணையாக அயலரசுகள் கம்பெனியின் ஆதரவைப் பெறுவதற்கு ஆர்வமும் இருந்து வந்தது என்றே கூறலாம். இத்தகைய இக்கட்டான சூழ்நிலை யில் இந்திய அரசியல் விவகாரங்களில் பேரளவிற்குச் சிக்கிக் கொள்ளாமல் கம்பெனியைக் காப்பதற்கு ஹேஸ்டிங்ஸின் ஆற்றல்மிக்க மதிநுட்பமும், தெளிந்த சிந்தனையும் தேவைப் பட்டிருக்கும் என்பது இங்குக் கருதத்தக்கதாகும். மற்ற வர்கள் உண்டாக்கிய சூழ்நிலைகளுக்கேற்றவகையில் அவர் எதிர்த்து நின்று சமாளிக்க வேண்டியவராக இருந்தார். மேலும், அவருடைய மேலாண்மையை விரும்பாத இரண்டு மாநிலங்களையும் கண்காணித்து வந்தார். அவ்விரு மாநிலங் களின் செயல்முறைகளில் லண்டன் மாநகரில் இருந்தே நேரடியாகவே இயக்குநர்கள் தலையிட்டுத் தொல்லை கொடுத் தும் வந்தனர். இதனாலும் அவ்விரு மாநிலங்களும் கவர்னர்-ஜெனரலின் தலையீட்டை விரும்பவில்லை. நெருக்கடியான நேரங்களில் அவர் ஐரோப்பியப் போர்களினால் உண்டாகும் சிக்கல்களையும் சமாளிக்க வேண்டியவரானார். மாபெரும் இன்னல்களுக்கும் இடையூறுகளுக்கும் இடையே பிரிட்டிஷ் இந்தியாவைச் சிதைந்து போகாதவாறு கட்டிக்காத்த பெருமையும் சிறப்பும் ஹேஸ்டிங்ஸிற்கு உரியதாகும். அத னுடன் இந்திய அரசுகளின் விவகாரங்களில் மேற்கொண்டு

தலையிட்டுக் குழப்பம் உண்டாக்காது அவர் வாளா இருந்தமை போற்றத்தக்க செயலாகும்.

1774ஆம் ஆண்டின் பிற்பகுதி வரையில் வங்காளத்தையும், பீகாரையும் கண்காணிப்பதே ஹேஸ்டிங்சின் பொறுப்பாக இருந்துவந்தது. 1765ஆம் ஆண்டில் கிளைவின் நிலத்தீர்வை நிர்ணயம் (settlement) சட்டமாக்கப்பட்டது. அதன்படி அயோத்தியை ஆண்ட ஷுஜா-உத்-தௌலாவும் அலகாபாத்தைச் சேர்ந்த ஷா ஆலமும் இடைப்படு நாட்டு இரட்டை ஆட்சியாளர்களாகக் கம்பெனியாருக்கும் மராட்டிய ஆப்கானியத் தாக்குதல்களுக்கும் இடையே இருந்துவந்தனர். இவ்வமைப்பு ஐந்து ஆண்டுகளுக்கு நன்முறையில் பயனளித்தது. ஆப்கானியர் ஒருவரும் படையெடுத்துவரவில்லை; பானிப்பட்டுப் போருக்குப் பின்னர் மராட்டியர் இழந்த ஆற்றலையும் வள ஆதாரத்தையும் திரும்பப் பெற்றுவந்தனர். 1769ஆம் ஆண்டில் எப்படியோ நருமதை ஆற்றை மீண்டும் அவர்கள் கடந்துசென்றனர். இரண்டு ஆண்டுகளுக்குப் பிறகு அவர்கள் தங்கள் பாதுகாப்பின்கீழ் ஷா ஆலத்தை தில்லிக்குத் திரும்பி வருமாறு தூண்டினர். தில்லியிலிருந்துவந்த நாஜிப்-உத்-தௌலா இறந்துவிட்டமையால், அங்கு ஓர் அரசியல் வெற்றிடம் உண்டாயிற்று. அவ்விடத்தை நிறைக்கவே மராட்டியர் ஷா ஆலத்தைத் தூண்டிவிட்டனர். இவ் வுதவிக்குப் பரிசாகக் கோராவையும், அலகாபாத்தையும் மராட்டியர் பெற்றனர். ஷா ஆலம் தம்முடைய நன்மையை நாடும் வகையில் இச் செயலைச் செய்துவிட்டார்.[1] ஆனால், அதே சமயத்தில் அச் செயல் அயோத்தியை மராட்டியரின் தாக்குதலுக்கு இரையாக்கியதோடு, கம்பெனியினைப் பக்கவாட்டில் தாக்குவதற்குரிய வழியையும் காட்டிக் கொடுத்தது. உடனடியாக மராட்டியர் ரோகில்கண்டைத் தாக்கினர். அப் பகுதியை ஆண்டுவந்த ஹாஃபீசு ரகமத்கான், ஷுஜா-உத்-தௌலாவை உதவிபுரியுமாறு வேண்டினார். இவ்வாறு ஹேஸ்டிங்ஸ் மிக்க உயிர்நாடியாக விளங்கிய ஒரு கோட்டையை நண்பர் ஒருவர் கையிலிருந்து இழந்தமையால் அச்சுறுத்தப்பட்டார். மேலும், தம்முடைய நேச நாடாகிய ஒன்று அதனுடைய நண்பனுக்கு உதவி செய்யவேண்டித் தம்முடைய உதவியை நாடுகின்றபொழுது மூவருக்கும் எதிரியான மராட்டியருக்கு எதிராகக் கம்பெனியார் போரில் இறங்குவது நேர்மையான செயலாகவே அவருக்குத் தோன்றியது. ஒரே அடியாகக் கம்பெனி

[1] T. G. P. Spear, 'Twilight of the Mughuls,' pp. 18-19.

யாரின் கருணையும் ஆர்வமும் கல்கத்தாவிலிருந்து 800 மைல்களுக்கு அப்பால் இருக்கின்ற ரோகில்கண்டு நாடுவரையில் சென்று பரவியது. இத்தகைய சூழ்நிலையிலிருந்து 1774 ஆம் ஆண்டு ரோகில்லாப் போர் வளர்ந்தது.

அயோத்திக்கு வடமேற்கே கங்கையாற்றிற்கும் குமோவான் மலைகளுக்கும் இடையே உள்ள செழிப்புமிக்க சமவெளியே ரோகில்கண்டாகும். அங்கு வாழ்ந்த மக்களுள் மிகப் பெரும்பான்மையோர் இந்துக்களேயாவர். ஆனால், 1740ஆம் ஆண்டுமுதல் அதைப் பல முறை படையெடுப்பாளர்கள் தாக்கியும் கடந்தும் சென்றனர். ஆனால், ஹேஸ்டிங்ஸ் காலத்தில் ஆப்கானிஸ்தானத்திலிருந்து வந்து குடியேறிய ஆப்கானியர், அங்கு நிறைந்து இருந்தனர். அவர்கள் 'ரோகில்லர்' எனப்படும் பழங்குடி மக்கள் இனத்தைச் சார்ந்தவர்களாவர். அவ்வினத் தலைவர்களே ஹேஸ்டிங்ஸ் காலத்தில் அதனை ஆட்சிபுரிந்துவந்தனர். அவர்களோடு நாதிர் ஷாவினால் நாடுகடத்தப்படுவதற்கு முன்பே தங்கள் தாயகத்தை விட்டுப் புறப்பட்டு இங்கு வந்து குடியேறியிருந்த பட்டாணியரும் வாழ்ந்துவந்தனர். 1772ஆம் ஆண்டில் ஷுஜா-உத்-தௌலா, மராட்டியர் தாக்குவார்களானால் தாம் உதவி புரிவதாக ஒப்புக்கொண்டார். அவ் உதவிக்காகத் தமக்கு 40 இலட்சம் தர வேண்டும் என்று தெரிவித்தார். அதற்கும் அவர்கள் இசைந்தனர். அடுத்த ஆண்டு மராட்டியர் திரும்பி வந்தனர். அவர்களை நவாபு பிரிட்டிஷாரின் துணைப்படை ஒன்றின் உதவியைக்கொண்டு எதிர்த்துப் போரிட்டார். மராட்டியர் திரும்பிச் சென்றனர். ஆனால், அவர்கள் முன்பு உடன்பட்டதைப்போன்று நவாபிற்குச் செலுத்த வேண்டிய தொகையைச் செலுத்தாது தந்திரமாகத் தப்பித்துக்கொண்டனர். 1773ஆம் ஆண்டு செப்டெம்பர் மாதத்தில் ஹேஸ்டிங்ஸ் ஷுஜாவோடு வாரணசி உடன்படிக்கையைச் செய்துகொண்டார். ஐம்பது இலட்சம் ரூபாயை மாற்றாகப் பெறுவதன் மூலம் அலகாபாத்தும் கோராவும் நவாபிற்குக் கொடுக்கப்பட்டன. இதற்கு மேலாக பிரிட்டிஷாரின் துணைப்படை ஒன்று நவாபிற்கு உதவியாக அனுப்பப்பட்டது. நவாபு தம்முடைய நாட்டின் எல்லைப் பகுதிகளைக் காத்துக்கொள்ளுவதற்காக இப் படையைப் போரில் பயன்படுத்துவாரானால், அதற்காக மாதந்தோறும் இரண்டு இலட்சம் ரூபாயைக் கம்பெனியாருக்குச் செலுத்த வேண்டும் என்று அறிவிக்கப்பட்டது. அவ் உடன்படிக்கையின் மறைபொருளான ஒரு விதியின்படி தேவைப்படும்பொழுது அத் துணைப்படை ரோகில்லாக்களுக்கு

எதிராகப் பயன்படுத்தப்படுமானால், மற்றுமொரு நாற்பது இலட்சம் ரூபாயைக் கம்பெனிக்குச் செலுத்த வேண்டும் என்று வாக்குறுதியளிக்கப்பட்டது. அதே சமயத்தில் பேரரசருக்கு வழங்கப்பட்டுவந்த உதவித் தொகை அல்லது திறைப் பொருள் நிறுத்தப்பட்டது.[1] அடுத்த பிப்ரவரி மாதத்தில் உதவிபுரியுமாறு அழைப்பு வந்தது. மிரான்பூர் கத்ரா என்னுமிடத்தில் ரோகில்லர்கள் தோற்கடிக்கப்பட்டனர். அவர்களுடைய அரசின் ஒரு சிறு பகுதி ராம்பூர் அருகில் தனித்து நிற்குமாறு விடப்பட்டது. மற்றப் பகுதிகள் அனைத்தும் அயோத்தியோடு இணைக்கப்பட்டது. இடைப்படு நாடாகிய அயோத்தியை நன்கு பலப்படுத்துவதன் மூலம் தம்முடைய கம்பெனிப் பகுதிகளைப் பாதுகாப்பு மிக்குடையதாகச் செய்து கொள்ள வேண்டும் என்பதே ஹேஸ்டிங்ஸின் நோக்கமாகும். இடைப்படு நாடாகிய அயோத்தியில் பிரிட்டிஷாரின் துணைப் படை ஒன்றை நிறுத்துவதன் மூலம் அந்நாட்டைத் தமக்குக் கட்டுப்பட்டதாகச் செய்ய முடியும் என்று அவர் கருதினார். ஷுஜா-உத்-தௌலா கம்பெனியாரின் உதவியைத் தந்நலத்திற்காகப் பயன்படுத்தித் தம்முடைய இராச்சியத்தை விரிவு படுத்த முயன்றார். இத்தகைய இருவகை ஊக்கிகளுக்கு இடையே ரோகில்லர்கள் பலியிடப்பெற்றனர். இதற்கு மேலாக மற்றொரு நிதிநிலை ஊக்கி ஹேஸ்டிங்ஸை ஆட்டிப் படைத்தமை தெளிவாகப் புலனாகின்றது. ஓராண்டில் அவர் ஒரு கோடி (1,125,000 பவுன்கள்) ரூபாய்களுக்கு மேலாகக் கம்பெனியின் கருவூலத்திற்குப் பெற்றார். அலகாபாத்தினை இழந்ததனால் அச்சுறுத்தப்பட்ட அவலநிலையை ஹேஸ்டிங்ஸ் ஈடுசெய்வதற்காக உள்ள உரத்தையும் வள ஆதாரத்தையும் காட்டினார். பேரரசரோ தமக்குச் செலுத்தப்படவேண்டிய திறைப்பொருள் செலுத்தப்படவில்லை என்று குறை கூற முடியாமல்போயிற்று. ஏனெனில், அவர் யாருக்கு அலகாபாத்தை முதலில் பரிசாகக் கொடுத்து இருந்தாரோ, அவர்களே அவருக்குத் திறைப்பொருள் செலுத்த வேண்டும். ஆனால், அவரே அவர்களிடமிருந்து அலகாபாத்தைப் பிடுங்கி அவர்களுடைய பகைவர்களான மராட்டியரிடம் கொடுத்து விட்டமையால், ஆங்கிலேயர் தமக்குத் திறைப்பொருள் செலுத்தவில்லை என்று குறைகூற முடியாத இக்கட்டான நிலையில் பேரரசர் இருந்தார். அயோத்தியை வலுப்படுத்துவதில் அவர் மீண்டும் உறுதியுடன் கருத்தைச் செலுத்தினார்.

[1] ஆண்டிற்கு இருபத்தாறு இலட்சம். 1770ஆம் ஆண்டுமுதல் அத்தொகை செலுத்தப்படவே இல்லை.

மேலும், ரோகில்லர்களை எதிர்த்துப் போரிடுவதற்கு ஷுஜா உதவி கம்பெனியாருக்குக் கிடைத்துவந்தது. கம்பெனியாரும் ஷுஜாவும் நேசவுறவு கொண்டிருந்தனர். தம்முடைய எதிரிகளான ரோகில்லர்களை அழிப்பதில் ஈடுபட்டுள்ள ஆங்கிலேயருக்கு உதவிபுரிவதில் அவர் ஆர்வம் காட்டினார். ஹேஸ்டிங்ஸின்மீது துரோகக் குற்றச்சாட்டு சாட்டியபொழுது இது ஒரு முதன்மையான குற்றச்சாட்டாக இடம்பெற்றது. இவ்வழக்கினுடைய தகுதியைப்பற்றி நாம் கவலைப்பட வேண்டியதில்லை. ஆனால், இச்செயல் சிந்துவில் பிற்காலத்தில் நடைபெற்ற நிகழ்ச்சிகளைப்போன்றே, வெல்லஸ்லியின் திட்டமிட்டுச் செய்யப்பட்ட சில செயல்களைப்போன்றே இது ஆணவத்தால் செய்யப்பட்ட செயல் என்று சொல்லுவதற்கு இல்லை. ஆங்கிலேய-இந்திய வரலாற்றில் ரோகில்லர்களின் போர் நிகழ்ச்சி பற்றிய வழக்கு சிறப்புமிக்க இடத்தைப் பெறவில்லை; பேரார்வத்தை ஊட்டவில்லை. ஆனால், அப்போரை நடத்திய கவர்னர்-ஜெனரலாகிய வாரன் ஹேஸ்டிங்ஸே வழக்குமன்றத்தினரின் கருத்தையும் நாட்டு மக்களின் ஆர்வத்தையும் கவர்ந்தார். அவரே ஆங்கிலேய - இந்திய வரலாற்றில் ரோகில்லர்களின் போர்க்காரணமாகச் சிறப்புமிக்க இடத்தைப்பெற்றார். 1775ஆம் ஆண்டு ஆலோசனை மன்றத்தின் பெரும்பான்மையோரின் உடன்பாட்டைப் பெற்று, அயோத்தி அரசரிடமிருந்து வாரணாசியைக் கம்பெனியார் பெற்றனர். இவ்வாறு ஹேஸ்டிங்ஸ் அயோத்தி அரசுடன் கொண்டிருந்த தொடர்பும், அரசியல் சூழ்ச்சித்திறன்மிக்க செயல்களும் முடிவடைந்தன.

அடுத்து ஹேஸ்டிங்ஸின் கருத்தை இந்தியாவின் மேற்குப் பகுதி கவர்ந்தது. ஹேஸ்டிங்ஸ் மிகவும் சிக்கலான மராட்டியரின் பிரச்சினையில் தலையிடத் தொடங்கினார். இப் பிரச்சினையில் அவர் தலையிடத் தொடங்கியபொழுது, பம்பாய் ஆலோசனை மன்றத்தினரின் தான்தோன்றித்தனமான போக்கினைக் கண்டார். அதேசமயத்தில் அவர் மராட்டியரின் முன்கூட்டி அறிய இயலாத உள்நாட்டு அரசியல் புரட்டுகளையும் அறிந்தார். ஒழுங்குமுறைச் சட்டத்தின் ஒரு பிரிவினைத் தவிர மற்றவற்றை எல்லாம் பம்பாயும் சென்னையும் ஏற்றுக்கொண்டன. ஆனால், கல்கத்தாவின் கண்காணிப்பின்கீழ் பம்பாயும் சென்னையும் இருந்துவரவேண்டும் என்ற ஒரே விதியை அவ் இரு நகரங்களிலும் இருந்த கம்பெனி அதிகாரிகள் ஏற்றுக்கொள்ள மறுத்தனர். இக் காரணத்தால், அவர்கள் லண்டன் மாநகரத்தோடு நேரடியான தொடர்பு வைத்துக்கொண்டிருந்தனர். கல்கத்தாவோடு கருத்து

வேற்றுமை உண்டாகுமானால், தாங்கள் நேரடியாக லண்டனிலுள்ள இயக்குநர்களுக்குத் தந்தி அடித்துத் தங்கள் குறையையும் கருத்துகளையும் அவர்கள் தெரிவித்துவந்தனர். இந்நிலையில் மராட்டியருக்கு இடையே 'பல்குழுவும் பாழ்செய்யும் உட்பகையும்' தோன்றி வளர்ந்தது. பூனாவின் முறுகிய சதியாலோசனைகள், போர்க்களத்தில் போரிடும் தலைவர்களின் சூழ்ச்சித் திறத்தாலும் நடுநிலை நிறுத்தும் ஆற்றலாலும் சரி செய்யப்பட்டுவந்தன. முகலாய ஆற்றலின் எழுச்சி குன்றியதால் உண்டான அரசியல் வெற்றிடத்தை நிறைப்பதற்கு, ஐம்பதுகளில் மராட்டியரின் ஆதிக்கம் முன்னோக்கி ஓடும் பெரியதொரு வெள்ளப் பெருக்காகத் தோன்றிற்று. ஆனால், அக் கனவு 1761ஆம் ஆண்டு பானிப்பட் போர்க்களத்தில் முடிவடைந்தது. அப் போர்க்களத்தில் பேஷ்வாவின் சிறப்பனைத் தலைவராகக்கொண்ட மராட்டியரின் பேரணி சின்னாபின்னமாக்கப்பட்டது. ஆப்கானிய அகமது ஷா பெருவெற்றி பெற்றார். அப் போரினால் மனம் உடைந்த பேஷ்வா, ஜூன் மாதத்தில் காலமானார். அவருடைய மகன் அப்பொழுது சிறு பிள்ளையாக இருந்தான். எனவே, பேஷ்வாவின் மறைவையொட்டிப் பதவிப் போட்டிகளும் பூசல்களும் தொடர்ந்து தோன்றின. இவ்வாறு மராட்டிய அரசியலில் தோன்றிய நெருக்கடியான சூழ்நிலை, பிரிட்டிஷாரை மராட்டிய அரசியலில் தலையிடுமாறு தூண்டியது. அடுத்த பத்தாண்டுகளில் பேஷ்வா வயதுவந்த இளைஞரானார்; பூனாவில் தாமே உரிமைமிக்க ஆட்சியாளர் என்று அவர் அறிவித்தார். அவர் ஆட்சிக்கு வந்ததும் தம்முடைய சிற்றப்பாவான இரகுநாதராவ்[1] என்பவரைப் பதவியிலிருந்து நீக்கினார். அதன் பிறகு நானா பட்னாவிஸ்[2] என்பவர், பையப்பையப் பெருஞ் செல்வாக்குப் பெற்று உயர் அதிகாரியானார். அவர் 1763ஆம் ஆண்டு முதல் மராட்டிய அரசின் கணக்காளராகப் பணியாற்றி வந்தவராவர். நானாபட்னாவிசின் ஆற்றல்மிக்க தலைமையின் கீழ் மராட்டியர் 1769ஆம் ஆண்டு சாம்பல் ஆற்றினை மீண்டும் கடந்து சென்றனர். ஆனால், மூன்றாண்டுகளுக்கெல்லாம் அவரும் காலமானார். அவர் இறக்கும்பொழுது இரகுநாதரைக் கருத்தாகப் பார்த்துக்கொள்ளுமாறு தம் உடன்பிறந்த

[1] இந்திய மக்களால் அவர் 'தாதா சாகிபு' என்று அழைக்கப் பெற்றார்.

[2] அவருடைய இயற்பெயர் பாலாஜி ஜனார்த்தனன் என்பதாகும். பட்னாவிஸ் அல்லது ஃபட்னாவிஸ் என்பது அவர் வகித்த பதவியின் பெயராகும்.

நாராயண ராவிற்கு அடைக்கலம் கொடுத்துவிட்டுச் சென்றார். இரண்டு ஆண்டுகளுக்குள்ளாகவே நாராயணன் கொலை செய்யப்பட்டான். இரகுநாதர் பூனாவிலிருந்து விரட்டியடிக்கப் பட்டார். நாராயணன் இறந்த பிறகு அவர் மனைவிக்குப் பிறந்த ஆண்பிள்ளையின் பேரால் நிறுவப்பட்ட ஆட்பேராட்சிக் குழுவினரே இரகுநாதரை விரட்டியடித்தனர். இரகுநாதர் உள்ள உரமும் திறுகண்மையும் உடையவர். ஆனால், அவர் தவறாக அறிவுரை வழங்கப்பெற்ற துரதிருஷ்டம் பிடித்த மனித ராவார். இந்நிலையில் ஒழுங்குமுறைச் சட்டமும் அவருடைய நட்சத்திரமும் ஒரே சமயத்தில் இணைந்தமை அவருடைய நற்பேறின்மையேயாகும். பூனாவிலிருந்து அவர் விரட்டியடிக் கப்பட்டதும், அவர் பம்பாயிலுள்ள பிரிட்டிஷாரின் உதவியை நாடினார். பம்பாய் ஆலோசனை மன்றம் தாங்கள் கல்கத்தா விற்குக் கட்டுப்பட்டவர்கள் என்பதைச் சிறிதும் சிந்திக்காது, இரகுநாதரிடம் தாங்கள் செய்யும் உதவிக்குக் கைம்மாறாகச் சால்செட்டையும் (Salsette), பஸ்ஸீனையும் (Bassein) தங்க ளுக்குக் கொடுக்குமாறு கூறினர். இரகுநாதர் அவற்றைக் கொடுக்க இயலாது என்று மறுத்துவிட்டார். போர்ச்சுகீசியர் செயல்களைக் காரணம் காட்டி பம்பாயில் இருந்த கம்பெனி யார் சால்செட்டைக் கைப்பற்றிக்கொண்டனர். 1775ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் பம்பாய் ஆலோசனை மன்றம் இரகு நாதரோடு ஓர் உடன்படிக்கை செய்துகொண்டது. அதற்கு சூரத் உடன்படிக்கை என்று பெயர். அவ் உடன்படிக்கை யின்படி பூனாவை இரகுநாதர் கைப்பற்றுவதற்கு உதவியாக 2,500 ஆங்கிலேயப் படைவீரர்களைத் தந்து உதவுவதாக பிரிட்டிஷார் உறுதிமொழி அளித்தனர். இதற்குக் கைம்மாறாக அவர் சால்செட்டையும் பஸ்ஸீனையும் பம்பாய் ஆலோசனை மன்றத்தினருக்கு அளிக்கவேண்டும் என்பதோடு, சால்செட் டைக் கைப்பற்றுவதற்கு ஆங்கிலேயருக்குச் செலவான 6 இலட்சம் ரூபாயையும் இழப்பீடாக அளிக்கவேண்டும் என்றும் முடிவு செய்யப்பட்டது. இவற்றுடன் வங்காளத்தின் மீதும், கருநாடகத்தின்மீதும் இரகுநாதர் படையெடுக்கக்கூடாது என்ற உறுதிமொழியையும் ஆங்கிலேயர் பெற்றனர்.

இத்தகைய நெருக்கடியான நிலையில், கல்கத்தா ஆலோசனை மன்றம் மராட்டியரின் அரசியலில் தலையிட்டது. அம் மன்றத்தின் உறுப்பினர்கள் வழக்கமற்ற வகையில் எல்லாரும் ஒன்றாகச் சேர்ந்து பம்பாய் மன்றத்தின் செயலினை வன்மையாகக் கண்டித்தனர். ஆனால், அம் மன்ற உறுப்பினர் களின் பெரும்பான்மையோர் இரகுநாதருக்கு உதவியாக

அனுப்பப்பெற்று ஓரளவிற்கு வெற்றியும் பெற்ற ஆங்கிலேயப் படையினரைத் திரும்ப அழைத்துக்கொள்ளுமாறு வற்புறுத்தினர். ஆனால், போர்க்களத்திலே ஈடுபட்டிருக்கும் மனிதரிடத்துத் தோழமையுணர்வு கொண்ட வாரன் ஹேஸ்டிங்ஸ், செய்துமுடித்துவிட்ட செயலைத் தாம் ஏற்றுக்கொண்டு, அதற்கு நன்மை பயக்கத்தக்க வகையில் செயலாற்றத் தொடங்கினர். கர்னல் அப்டனை (Upton) ஓர் உடன்படிக்கை செய்துவருமாறு அவர் அனுப்பிவைத்தார். 1776ஆம் ஆண்டு சூரத் உடன்படிக்கைக்குப் பதிலாகப் புரந்தர் உடன்படிக்கை செய்யப்பெற்றது. அதன்படி பன்னிரண்டு இலட்சம் ரூபாயை இழப்பீடாகப் பெறுவதன் மூலம் ஆங்கிலேயர் சமாதானம் செய்துகொள்ள இசைந்தனர். அதேசமயத்தில் ஆங்கிலேயர் கைப்பற்றிய சால்செட்டு ஆங்கிலேயருக்கே உரிமையுடையதாக அறிவிக்கப்பெற்றது. ஆனால், இரகுநாதரின் கோரிக்கை கைவிடப்பெற்றது. மேலும், அவருக்கு ஓய்வூதியம் அளிக்கப் பெற்றது. மீண்டும் மராட்டியர் அரசியலில் ஆங்கிலேயர் தலையிட்டனர். ஆனால், இம்முறை லண்டன் மாநகரமே நேரடியாகத் தலையிட்டது. ஆற்றலற்ற அரசுகளிடத்துத் தலையிடக் கூடாது என்று பலமுறை வன்மையாகக் கண்டித்துவந்த கம்பெனி இயக்குநர்கள், ஆற்றல்மிக்க அரசினுடைய விவகாரத்தில் தலையிடுமாறு பெரிதும் தூண்டிவந்தனர். சூரத் உடன்படிக்கையைப் புதுப்பிக்குமாறு ஹேஸ்டிங்ஸிற்கு அவர்கள் அதிகாரம் அளித்தனர். 1778ஆம் ஆண்டு கவர்னர்-ஜெனரல் தம்முடைய முடிவு வாக்கினைப் பயன்படுத்திப் புதிதாக இரகுநாதராவினைப் போற்றி ஆதரிப்பதென்று முடிவு செய்தார். இத்தகைய முடிவினைத் தவறுதலாகச் செய்ததனால், இந்தியாவில் பிரிட்டிஷாரின் ஆதிக்கம் பல வகையில் மிகக் கடுமையாகச் சோதிக்கப்படும் நிலையை அடைந்தது; ஹேஸ்டிங்ஸ் ஒரு முடிவிற்கும் வராத போரினைத் தொடர்ந்து நான்கு ஆண்டுகள் செய்யவேண்டிய நெருக்கடியில் சிக்கிக் கொண்டார். அளவுக்கு மீறிய தன்னம்பிக்கையுடன் பூனாவை நோக்கிப் படைகளை அனுப்பியமையால், அப் படையினை நான்கு பக்கங்களிலும் மராட்டியர் படை சூழ்ந்துகொண்டு தாக்கியதோடு, வாட்கானில் (Wadgaon) மானக்கேடான மனமொத்த உடன்பாட்டுக் கூட்டத்திற்கு (13 ஜனவரி, 1779) அவர் உடன்படவேண்டியதாயிற்று. புறமிட்டதன் விளைவாக வெற்றியுடன் கைப்பற்றியவை அனைத்தையும் ஆங்கிலேயர் திருப்பிக்கொடுக்கவேண்டியதாயிற்று. வங்காளப் படையினை நிறுத்திவைப்பதையும், பிணையாக நிறுத்தப்பட்டவரையும், கொடுக்கப்பட்ட பொருள்களையும் திருப்பித் தரவேண்டிய

அவலநிலை ஆங்கிலேயருக்கு உண்டாயிற்று. இத்தகைய விதிகளுக்கு உடன்படுவதற்குரிய அதிகாரம் கர்னாக்கிற்கோ (Carnac), காக்பர்னுக்கோ (Cockburn) கிடையாது. மேலும், அவர்கள் இத்தகைய மானக்கேடான உடன்பாட்டிற்கு இசைய மறுத்ததோடு தொடர்ந்து போரிட்டும் வந்தனர். ஆனால், இப் போரின் தீய விளைவுகளிலிருந்து பிரிட்டிஷார் என்றுமே இழந்தவற்றைத் திரும்பப் பெறவில்லை. முழு நிறைவான திட்டமோ, ஆற்றலும் தகுதியும் வாய்ந்த தலைவர்களுடைய நெறிமுறைப்படுத்துதலோ இன்றி, அப் போரானது மாற்றங்களும் திருப்பங்களும் உடையதாகத் தொடர்ந்து இறுதிவரை நடைபெற்றுவந்தது.

தொடக்கத்தில் லெஸ்லி (Leslie) என்பவரின் தலைமையின் கீழ்ச் சிறந்ததொரு படையினை அனுப்பிவைத்தார். அப் படை நடு இந்தியப் பகுதிகளைக் கடந்து செல்லவேண்டியிருந்ததோடு, அப் போரின் முடிவினை நிர்ணயிப்பதாகவும் இருந்தது.[1] அப் படை வெற்றிமிக்க முன்னேற்றத்தோடு 1779 ஆம் ஆண்டு பிப்ரவரி மாதத்தில் சூரத்திற்கு வந்து சேர்ந்தது. ஆனால், புகழினைத் தேடித்தந்த செயற்கருஞ் செயல்கள் போரிலே எப்பொழுதும் வெற்றியைத் தேடித் தருவதில்லை. ஒரு மாதத்திற்கு முன்பே வாட்கான் போர், கம்பெனியின் ஆதிக்கத்தைச் சின்னாபின்னமாக்கியதோடு, பம்பாய்க்கு இருந்துவந்த மதிப்பினை அழித்தொழித்தது. லெஸ்லிக்குப் பின்னர் அப் படைக்குக் கொட்டார்ட் (Goddard) என்பவர் தலைவராக்கப்பட்டார். அவருடைய படை, ஆதிக்க சமநிலையை நிலைநாட்டுவதாக இருந்ததே ஒழிய, போரினை முடிவிற்குக் கொண்டுவரும் ஒரு கருவியாக அது செயற்படவில்லை. இன்னும் இரண்டு ஆண்டுகளுக்குப் போர், அரசியல் சூழ்ச்சித் திறத்துடனும் தாக்குதல்களுடனும் தொடர்ந்து நடைபெற்று வந்தது. குஜராத்தில் நடைபெற்ற போர்களில் கொட்டார்ட் வெற்றிகள் பெற்றார். ஆனால், பூனாவை முற்றுகையிடத் திட்டமிட்டு அவர் முயன்றார். அப்பொழுது, பேரளவில் இருதிறப் படைகள் அழிந்தபோதிலும், அவரை முன்னேறவொட்டாது மாராட்டியரது படை தடுத்து நிறுத்தியது. குவாலியரைப் பாப்ஹாம் (Popham) முற்றுகையிட்டார். ஏணிகளைக்கொண்டு

[1] முதலில் தோன்றுவதைப் போன்று இராது, இது சிறிது இடையூறுகள் குறைந்ததாகவே தோன்றும். அலகாபாத்திற்குரிய வழி திறந்துகிடந்தது. அங்கிருந்து பிரிட்டிஷாரோடு நட்புறவு கொண்டிருந்த பான்ஸ்லேயின் இராச்சியத்தின் வழியாகச் சென்ற பெருவழி ஒன்றிருந்தது.

அக்கோட்டையின் அரண்களைத் தாக்கி மதில்களின்மீது ஏறி, உள்ளே சென்று போரிட்ட வரலாறு வீரகாப்பியமாகலாமே ஒழிய, அது ஆங்கிலேயர் மராட்டியர் போராட்டத்தினை முடிவடையுமாறு செய்யவில்லை. 1781ஆம் ஆண்டின் இடைப் பகுதியில் கொடுமையான தோல்விக்குப் பிறகு, மாதுராவ் சிந்தியா சமாதானம் செய்துகொண்டார். அதற்குப் பிறகு அவர் நானாவிற்கும் ஆங்கிலேயருக்கும் இடையே நடுவராகச் சமாதானம் செய்துவைப்பதற்கு ஊடாடிக்கொண்டிருந்தார். அவ்வாறு அவர் முயன்றுகொண்டிருந்தபொழுது, பூனா அரசின் எதிர்காலத்தைப்பற்றித் தம்முடைய விழைவுமிக்க எண்ணங்களை உடையவராக இருந்தார். மகிழ்ச்சியற்ற இந் நெடுங் காலப் போர் 1782ஆம் ஆண்டு மே மாதத்தில் நடைபெற்ற சால்பாய் (Salbai) உடன்படிக்கையோடு முடிவுற்றது. குஜராத்திலிருந்து கேக்குவாருக்கு உரிமையாக இருந்துவந்த நிலங்களையும், யமுனை ஆற்றிற்கு மேற்கே சிந்தியாவிற்கு உரிமையாக இருந்த பகுதிகளையும் பேஷ்வா திரும்பப் பெற்றார். இரகுநாதராவிற்கு பேஷ்வா ஓய்வூதியம் அளித்தார். மேற்குறிப்பிட்ட நிலப்பகுதிகள் அல்லாமல் புரந்தர் உடன்படிக்கைக் காலத்திலிருந்து தமக்கு உரிமையாகப் பெற்றிருந்த இராச்சியப் பகுதிகள் அனைத்தையும் பேஷ்வா இவ் உடன்படிக்கையின்மூலம் பெற்றார். வேறு வகையாகச் சொல்லுவதென்றால், பம்பாய் ஆலோசனை மன்றத்தினர், நாடு பிடிக்கவேண்டும் என்னும் பேரார்வத்தால் இந்திய அரசியலில் தலையிட்டதன் விளைவாகத் தொடங்கி, எட்டாண்டுகள் நடைபெற்ற அரசியல் சூழ்ச்சித் திறத்தோடுகூடிய போரினால் கம்பெனியாருக்குக் கிடைத்த ஆதாயம் சால்செட்டைத் தவிர வேறொன்றும் இல்லை. இத்தகைய திட்டமற்றதும், செயலாற்றலைக் கெடுத்ததுமான போரில் ஈடுபடுவதற்குக் காரணமாக இருந்தவர்கள் யார் என்பதைப்பற்றி ஆராய்ந்தவர்கள், இத்தகைய குழப்பத்திற்கு முழுப் பொறுப்பாளிகளாக இருந்தவர்கள் மிகப் பலர் என்ற முடிவிற்கு வந்துள்ளனர். பம்பாய் ஆலோசனை மன்றம், தன்னிடம் அடைக்கலம் அடைந்த மராட்டியத் தலைவருக்கு உதவிபுரிவதன்மூலம் யாதேனும் கைம்மாறு பெறலாம் என்ற எண்ணத்தோடு செயலாற்றத் தொடங்கியது. அவர்களுடைய திறமையற்ற திட்டங்களும் செயல்முறைகளுமே அவர்களுக்குப் பழியைத் தேடித்தந்தன எனலாம். இக்குழப்பத்தோடு இயக்குநர்களின் முரண்பாடான அறிவிப்புகளும் அறிவுரைகளும் சேர்ந்து பிரச்சினையைப் பெரிதாக்கின. இவற்றுடன் படைவீரர்கள் செய்த படையியல் பெருந் தவறுகள் கம்பெனியாருக்குப்

பழியை உண்டாக்கின. ஹேஸ்டிங்ஸ் போரினைப் புதுப்பிப்பதற்குரிய உரிமையை வழங்குவதாகிய தவருன தீர்மானத்திற்கு வந்தமை, இப் பிரச்சினையை மிகப் பெரியதாக்கியது. அவருடைய முடிவிற்குப் பிறகு, அவர் கொட்டார்ட்டின் படைகளையும் பாப்ஹாமின் படைகளையும் அனுப்பிப் பகைவருடைய படைகளை மிகத் திறமையாகப் பிரிக்கத் திட்டமிட்டுச் செயலாற்றியமை கம்பெனியின் போரையும் புகழையும் காப்பாற்றியது எனலாம். இந்தியாவில் அக் காலத்தில் நடந்த நிகழ்ச்சிகளைப்பற்றி இங்கிலாந்தில் நடைபெற்ற வாத விவாதங்களுக்குத் தரப்பட்ட முக்கியத்துவத்தை அடிப்படையாகக்கொண்டு இந்திய நிகழ்ச்சிகளைப்பற்றித் தீர்ப்பளிக்கக் கூடாது. ஒத்த வகையில் மிகவும் முக்கியமான நிகழ்ச்சிகளையும் கருத்துகளையும் புறக்கணித்துவிடுமாறு செய்வன சில. தப்பெண்ணம், பொருளாசை, தற்செருக்கு, கட்சி மனப்பான்மை ஆகிய அனைத்தும் சேர்ந்துகொண்டு சில சமயங்களிலும் சில இடங்களிலும் அவையே பெரு முக்கியத்துவம் வாய்ந்தனபோலத் தோற்றமளித்து மற்றவற்றை—முக்கியமானவற்றை ஒதுக்கிவிடுமாறு செய்வதுண்டு. சென்னை விவகாரத்தைக்காட்டிலும் வங்காளத்து அரசியல் குழப்பங்களும், கம்பெனியாரின் தலையீடும் பெரியனவாக்கப்பட்டன; அதற்குப் பேராதரவு தேடப்பட்டன. ஆனால், வங்காளத்திலிருந்த நிலைமையே சென்னையிலும் நெடுங்காலம் தொடர்ந்து இருந்துவந்ததும் அத்துணை முக்கியத்துவம் பெறவில்லை. மராட்டியப் போரைக்காட்டிலும் ரோகில்லர்களோடு புரிந்த போர், நாட்டு மக்களின் ஆர்வத்தைத் தூண்டியதோடுபெரிதும் விமரிசனம் செய்யப்பட்டு வந்தது. ஆனால், உண்மையில் மராட்டியரோடு நடைபெற்ற போர், ரோகில்லர்களோடு நடைபெற்ற போரின் காலத்தைக்காட்டிலும் பல மடங்கு மிகுதியானது; நெடுங்காலம் நடைபெற்றது. மேலும், மராட்டியப் போர் மன்னிக்கமுடியாத தவறுதலாகிய காரணத்தை அடிப்படையாகக்கொண்டு தொடங்கப்பெற்றது. ஆனால், ரோகில்லர்களை அழித்தொழிக்கத் தொடங்கிய போருக்குரிய காரணம் நேர்மையானதாகும். எனினும், இங்கிலாந்து மக்களுடைய கருத்தை ரோகில்லர்களுடைய போரே பெரிதும் கவர்ந்தது. அதைப்பற்றி அவர்கள் ஆழ்ந்து சிந்தித்து வாதங்களும் புரிந்தனர் என்பது இங்குக் குறிப்பிடத்தக்கதாகும். எனவே, பிரசாரத்தினுலும் கருத்து மாறுபாட்டாலும் திரிக்கப்பெற்ற உண்மைகளை இயலும்வரையில் முயன்று ஆராய்ந்து, உண்மைகளை உள்ளவாறு எடுத்துரைத்து, அவற்றை நிலைநாட்டுவதே வரலாற்றறிஞனுடைய அரும் பணியாகும். இத்

தகைய கண்கொண்டு ஹேஸ்டிங்ஸ் ஆட்சிக் காலத்தை நோக்குவோமானல், முதல் மராட்டியப் போர் தொடங்கப் பெற்றது தேவையற்றது என்றும், அதை நடத்தியவருக்கு நற்பேறில்லை என்றும் நாம் கருதவேண்டியவர்களாக இருக் கின்ருேம்.

மராட்டியப் போர் தேவையற்ற தொல்லை என்பது மெய்ப் பிக்கப்பட்ட அதேசமயத்தில், ஹேஸ்டிங்ஸ், தம் ஆட்சியிலே மாபெருஞ் சிக்கல் ஒன்றிலே சிக்கி மலைத்துப்போனர். மராட் டியர் விவகாரத்தில் அவராகச் சூழ்நிலையை உருவாக்காமல் மற்றவர்கள் செய்த தவற்றிற்காக ஹேஸ்டிங்ஸ் எவ்வாறு தலையிட நேர்ந்ததோ, அதைப்போன்றே இவ் விவகாரத்திலும் அவர் தலையிட வேண்டியதாயிற்று. அந்நிகழ்ச்சி எவ்வாறு நடைபெற்றது என்பதை நாம் ஓர் அளவுகோலாகக் கொள் ளாது, அதை அவர் எவ்வாறு சந்தித்தார் என்பதையும், அதைச் சமாளிப்பதற்கு எத்தகைய முறைகளை அவர் கையாண்டார் என்பதையும் அளவுகோலாகக்கொண்டு அவ ருடைய செயல்களை நாம் மதிப்பிட வேண்டும். 1775ஆம் ஆண்டு அமெரிக்க உரிமைப் போர் தொடங்கியது. 1778ஆம் ஆண்டு பிரிட்டிஷாரின் கடல் கடந்த ஆதிக்கத்தை அழிப்பதற் காக ஐரோப்பிய அரசுகள் கூட்டுச் சேர்ந்தன. அமெரிக்க அரசுரிமைப் போரினல் உண்டாகிய பொருட் சேதமும் ஆட் சேதமும் இந்தியாவைப் பலப்படுத்துவதற்குரிய வாய்ப்பு களைக் குறைத்தன. மேலும், இங்கிலாந்திற்கு எதிரிகளாக ஃபிரான்சும் ஸ்பெயினும் போரில் ஈடுபட முனைந்துவந்தமை யால், இங்கிலாந்திலிருந்து இந்தியாவிற்கு எத்தகைய உதவியையும் கடல் வழியாக அனுப்பிவைப்பது என்பது அரிய செயலாயிற்று. பிரிட்டனின் கடலாதிக்கமும் கடற் படையும் அமெரிக்க உரிமைப் போரினல் பேரளவிற்கு அல்ல லுற்றன. இத்தகைய சூழ்நிலை ஃபிரான்சிற்கு நல்லதொரு வாய்ப்பாக அமைந்தது. எனவே, இந்தியாவில் தான் இழந்த வற்றை மீண்டும் பெறுவதற்கு அது, இந்த வாய்ப்பினை நல்ல முறையில் பயன்படுத்திக்கொண்டது. இத்தகைய இக்கட் டான நெருக்கடி நிலையை ஹேஸ்டிங்ஸ் மிகச் சிறந்த முறையில் சமாளித்தார். மராட்டியப் போரைப்பற்றி ஹேஸ்டிங்ஸ் விவா தித்துக்கொண்டிருந்தபொழுது சாரடோகா (Saratoga) போர்க் களத்தில் தளபதி பர்க்காய்னே (Burgoyne) படுதோல்வி யுற்று அடைக்கலம் அடைந்தார் என்ற செய்தியை அவர் கேள்வியுற்ருர். உடனே அவர், 'மேற்கத்திய உலகில் பிரிட்டி ஷாரின் படைக்கல ஆற்றல் சிதைந்து, செல்வாக்குக் குன்றி

யது என்பது உண்மையானால், பிரிட்டனிடத்துப் பேரன்பும் பெருமதிப்பும் கொண்டு கிழக்கு நாடுகளில் உள்ளவர்கள், பிரிட்டனின் மதிப்பையும் சிறப்பையும் திரும்ப நிலைநாட்டுவதற்கு முயலவேண்டியது அவர்களுடைய புனிதமான கடமையாகும்' என்று மொழிந்தார். ஆனால், மிகவும் மோசமான தோல்விகள் பின்னர் உண்டாயின. சென்னை மாநிலம் பல ஆண்டுகள் தொடர்ந்து குறைபாடுமிக்க ஆட்சியினால் அல்லற்பட்டுவந்தது. அங்குக் கண்டிப்புடன் சீர்திருத்தங்கள் செய்வதற்கு மற்றொரு கிளைவ் என்றுமே தோன்றவில்லை; அல்லது வங்காளத்தில் செய்ததைப்போன்று இங்குச் சீர்திருத்தங்கள் செய்யவேண்டும் என்பதைப்பற்றிக் கம்பெனியின் இயக்குநர்களும் கவலைப்படவில்லை. குறைந்த அளவு குழப்பமும், குறைகளும், தீமைகளும் அங்கு இருந்துவந்தன என்று அவர்கள் கருதினர். ஆனால், அவை அங்கு நிலவியிருந்தன என்பது மட்டும் உண்மையாகும். 1775ஆம் ஆண்டில் பிக்கட் (Pigot) பிரபு தஞ்சாவூரைத் திரும்பக் கைப்பற்றுவதற்காகப் படையுடன் அனுப்பப்பட்டார். பணித்துறையில் சீர்திருத்தம் செய்வதற்காகவும் அவர் அனுப்பப்பட்டார். ஆனால், அடுத்த ஆண்டில் அவருடைய ஆலோசனை மன்றத்தினரே அவரைச் சிறைப்படுத்தினர். மைசூரின் புதிய அரசரோடு தேவையற்ற போர் ஒன்றினை மதராஸ் கம்பெனியார் இதற்கு முன்பே நடத்திவிட்டனர். நைசாமும், மராட்டியரும், ஐதர் அலியும் தங்களுக்குள்ளே ஐயுறவும் நம்பிக்கையின்மையும் உடையவர்களாக இருந்தபோதிலும், ஒருவரை ஒருவர் துன்புறுத்த ஆயத்தமாக இருந்தபோதிலும், சென்னை ஆலோசனை மன்றத்தின் சூழ்ச்சித்திறனற்ற போக்கு அவர்கள் மூவரும் ஒன்று சேர்ந்து ஒரு கூட்டணி அமைத்துக்கொள்ளுமாறு வாய்ப்பளித்தது. அதன் விளைவாகத் தோன்றிய நெருக்கடி நிலையைச் சமாளிப்பதற்கேற்ற வழிவகைகளைச் செய்யவும் அது தவறியது மாபெருங் குற்றமாகும். 1780ஆம் ஆண்டில் ஐதர் அலி கருநாடகத்திற்குள் பெரும் படையுடன் நுழைந்தார்; பெய்லியின் துணைப்படை அழித்தொழிக்கப்பட்டது; பஸ்கார் போரின் வெற்றிவீரரான மன்ரோ, பெரும்பழிக்கு ஆளாகிப் புறமுதுகிட்டோடினார்; சில மாதங்களுக்குள்ளாக ஆர்க்காடு வீழ்ச்சியுற்றது; சென்னை மாநிலம் முழுவதையும் ஐதரின் படைவீரர்கள் தாக்கிக்கொண்டிருந்தனர். ஆனால், ஹேஸ்டிங்ஸ் அதற்காகச் சிறிதும் அஞ்சவில்லை; மனச்சோர்வு அடையவில்லை. அவர் ஒரு பக்கத்தில் சென்னையைப் பலப்படுத்துவதில் தம் கருத்தைச் செலுத்திவந்தார். அதேசமயத்தில் மற்றொரு பக்கத்தில் அவர் தம்முடைய பகைவர்களின்

கூட்டணியைக் கலைத்து, அவர்களைப் பிரிப்பதற்குரிய செயல்களில் ஈடுபட்டிருந்தார். அவர் சென்னையில் கவர்னர் பதவியிலிருந்தவரைத் தற்காலிகமாகப் பதவியிலிருந்து நீக்கினார். அதுவரை வங்காளத்தில் படைத்தலைவராக இருந்துவந்த சர் அயர் கூட் என்பவரை ஹேஸ்டிங்ஸ் சென்னைக்கு அனுப்பிவைத்தார். அவருடன் தேவையான போர்த் தளவாடங்களையும் மற்றப் பொருள்களையும் பேரளவிற்கு ஹேஸ்டிங்ஸ் சென்னைக்கு அனுப்பிவைத்தார். அடுத்த ஜனவரி மாதத்தில் பியர்ஸ் (Pearce) என்பவரை வங்காளத்திலிருந்து சென்னைக்கு நிலவழியாகப் படையுடன் அவர் அனுப்பினார். அதேசமயத்தில் அவருடைய அரசியல் சூழ்ச்சித்திறன் சுறுசுறுப்பாக வேலை செய்துகொண்டிருந்தது. வட இந்தியாவில் சிந்தியாவும், நடு இந்தியாவில் பேரார் அரசரும் அக் கூட்டணியில் சேரவொட்டாது துண்டிக்கப்பட்டனர். 1782ஆம் ஆண்டில் நாம் முன்பு கண்டதைப்போல மராட்டிய அரசுகளின் கூட்டிணைப்போடு சமாதானம் செய்துகொள்ளப்பட்டது. அதற்குப் பிறகு ஐதர் அலி ஒருவர்தாம் ஆங்கிலேயர்களால் அடக்கி ஒடுக்கப்பட வேண்டிய ஆற்றல்மிக்க பகைவராக இருந்தார். நைசாம் என்றுமே வெல்லுதற்கரிய பகைவராக இருந்ததில்லை. 1781ஆம் ஆண்டு ஜுலை மாதத்தில் பறங்கிப்பேட்டையில், கூட் (Coote), ஐதரை முன்னேறவொட்டாது தடுத்து நிறுத்தினார். பின்னர் சென்னைக்கு வடக்கே அவர் பியர்சுடன் சேர்ந்துகொண்டார். மேலும், மைசூர் படைகளைப் போளூர், சோளங்கிபுரம் என்னும் ஊர்களில் எதிர்த்துக் கடுமையாகப் போர்புரிந்து அவர் பெருவெற்றி பெற்றார். அதன்மூலம் சென்னைக் கம்பெனியின் ஆதிக்கத்தைக் கருநாடகத்தில் அவர் மீண்டும் நிலைநாட்டினார். அப் போர் இச் சமயத்தில்தான் பெரிதும் சமநிலையுடையதாக விளங்கத் தொடங்கியது. ஐதர் அலி தமக்கு இணையான ஆற்றலுடைய படை ஒன்றை இப்பொழுதுதான் நிலத்தில் சந்தித்தார். ஆனால், இச் சமயத்தில் ஃபிரெஞ்சுக்காரர்களுடைய கப்பற்படை ஒன்று டே சஃப்ரேன் (de Suffren) என்னும் கடற்படைத் தலைவரின் தலைமையின்கீழ்ப் புதுச்சேரிக்கு வந்துசேர்ந்தது. அக் கப்பற்படை ஐதர் அலிக்கு உதவிபுரியத் தொடங்கியது. பதினாறு மாதங்களில் ஆற்றலும் உள்ள உரமும் வாய்க்கப்பெற்ற, ஆனால், சூழ்ச்சித்திறன் குறைவுடைய ஹக்கினோடு அவர் ஐந்து போர்கள் நிகழ்த்தினார். அவை முடிவான தீர்ப்பினை வழங்கவில்லை. எனினும், தென்னிந்தியக் கடலில் சில மாதங்களேனும் தடுத்து நிறுத்துவாரின்றி ஃபிரெஞ்சுக் கப்பல்கள் உரிமையுடன் உலாவ வாய்ப்பினை அளித்தது.

டச்சுக்காரர்களிடமிருந்து ஆங்கிலேயர்களால் புதிதாகக் கைப்பற்றப்பட்ட திரிகோணமலை என்னும் துறைமுகம் ஃபிரெஞ்சுக்காரர்களால் பிடிக்கப்பட்டது. நிலத்தில் இறங்கிய ஃபிரெஞ்சுக் கடற்படையின் ஒரு பிரிவு, ஐதரோடு சேர்ந்து கொண்டு கடலூரைக் கைப்பற்ற உதவி செய்தது. மாண்பு மிக்க புஸ்ஸி (Bussy) இந்தியாவை நோக்கி வந்துகொண்டிருந்தார். ஆனால், அவர் மாபெருந் தடைகளையெல்லாம் கடந்து பல மாதங்கள் காலதாமதமாக 1783ஆம் ஆண்டு ஏப்ரல் மாதத்தில் தென்னிந்தியாவிற்கு வந்து சேர்ந்தார். ஆனால், அதற்குள் முடிவினை வழங்குவதற்குரிய நெருக்கடியான தாக்குதலுக்குரிய காலமும் நேரமும் வாய்ப்பும் வசதியும் கடந்து போயின. கூட், ஐதர் ஆகிய இருவரும் இறந்து போயினர். அச்சமயத்தில் மேலைக் கடற்கரைப் பகுதியில் உள்ள மங்களூரை முற்றுகையிடுவதற்காகப் பெரும் படையுடன் ஐதரின் மகனை திப்பு அணிவகுத்துச் சென்றிருந்தார். அப்பொழுது சென்னையின் ஆட்சிப் பொறுப்பினை மாக்கார்ட்னே (Macartney) பிரபு ஏற்றிருந்தார். அவர் ஆற்றல் மிக்கவர்; திறமை வாய்க்கப்பெற்றவர். ஐரோப்பாவில் ஆங்கிலேயரும் ஃபிரெஞ்சுக்காரரும் போர் நிறுத்த உடன்படிக்கை செய்துகொண்டனர் என்ற செய்தி இந்தியாவினை அடைந்தபொழுதே, திப்பு இன்னும் போரிட்டுக்கொண்டிருப்பதனுல் பயனடைய முடியாது என்பதைத் தெளிவாக உணரச் செய்தது; எனவே, அவர் நம்பிக்கை இழக்க நேரிட்டது. இரு திறத்தினரும் போரினுல் களைப்பும் சோர்வும் அடைந்திருந்தனர். மேலும், முயற்சி செய்திருந்தால் இன்னும் சிறந்த விளைவுகளை அடைந்திருக்கலாம் என்று ஹேஸ்டிங்ஸ் கருதினுர். 1784ஆம் ஆண்டு மங்களூர் உடன்படிக்கை செய்யப்பெற்றது. இருதிறத்தினரும் தாங்கள் கைப்பற்றியவற்றைத் திருப்பிக் கொடுப்பதை — ஒப்படைப்பதை அடிப்படையாகக்கொண்டு சமாதானம் நிலைநாட்டப்பட்டது.

இவ்வாறு தெற்கிலும், மேற்கில் நடந்ததைப்போன்றே போர் எங்கு தொடங்கியதோ, சற்றேறக்குறைய அங்கேயே சென்று தெளிவாக முடிவடைந்ததைக் காணுகின்றோம். பிரிட்டிஷார் தங்களுடைய அதிகாரத்தைப் பேரிடர்ப்பாட்டிற்கும் இன்னல்களுக்கும் இடையே நிலைநாட்டியிருந்தனர். ஆனுல், உண்மையில் அது இதைக்காட்டிலும் வேறுபல விளைவுகளை உண்டாக்கின. முக்கியமான இங்கிலாந்தின் குடியேற்ற நாடுகளுக்குள்ளே இருந்துவந்த உட்பகையாலும் பூசலாலும் அல்லலுற்றபோதிலும், அமெரிக்காவில் பேரிழப்பிற்குக்

காரணமான போராட்டத்தில் ஈடுபட வேண்டிய நெருக்கடி உண்டாயிற்று; கூட்டணி ஒன்று ஐரோப்பாவில் அமைக்கப் பட்டதனுல் தாயகம் மிகக் கடுமையான துன்பங்களை அனு பவிக்க வேண்டியதாயிற்று. முதன்மையான இந்திய அரசு களின் கூட்டணியை எதிர்த்து நின்று பிரிட்டிஷார் ஒரளவிற்கு வெற்றியும் பெற்றனர். அதனுல் தொடக்கத்தில் இருந்ததைக் காட்டிலும் ஒரளவிற்கு அதிக ஆற்றலுடையவர்களாக ஆங்கி லேயர் விளங்கத் தொடங்கினர். மிகச் சாதகமான நிகழ்ச்சிகள் ஒன்ருகச் சேர்ந்து சிறந்ததொரு வாய்ப்பினை அளித்த காலத்தில், இந்திய அரசுகள் தம்மால் இயன்ற அள விற்கு அரும்பெரு முயற்சிகள் செய்துபார்த்து ஆங்கிலே யரைத் தோற்கடிக்க முடியாமல் அவை தோல்வியுற்றன. எல்லாக் குறைகளையும் தன்னகத்தே கொண்டிருந்த கம்பெனி, இந்திய அரசுகள் எல்லாவற்றையும்விடப் பேராற்றலும் பெருந்திறனும் உடையது என்பதை மெய்ப்பித்துவிட்டது. இதுமுதல் இந்தியாவில் உள்ள பல ஆதிக்க சக்திகளுள் ஒன்ருகக் கம்பெனி இல்லாமல், இந்தியாவின் அரசுகளுக் குள்ளேயே மிகப் பேராற்றல்வாய்ந்த சக்தியாக அது திகழத் தொடங்கியது. இம் முதன்மை நிலையிலிருந்து தலைமை நிலையை அடைவதற்கு ஒரேயொரு படிதான் இடையே இருந் தது.

மங்களூர் உடன்படிக்கை ஹேஸ்டிங்ஸ் தாம் ஆட்சிக்கு வந்தபொழுது கம்பெனியின் உடைமைகள் எவ்வாறு இருந்த தைக் கண்டாரோ, எவ்வளவு இருந்ததைக் கண்டாரோ அதை விட அமைதியுடையதாகவும் ஆற்றலுடையதாகவும் விளங்கு மாறு 1785ஆம் ஆண்டில் விட்டுச்சென்ருர். வட இந்தியாவில் அயோத்தியின் பேகங்களைப்பற்றிய வழக்கினையும், வாரணுசி யைச் சேர்ந்த செய்ட் சிங்கின் வழக்கினையும்பற்றி இன்னும் குறிப்பிடவேண்டிய செய்திகள் சில உள்ளன. ஹேஸ்டிங்ஸின் மீது சுமத்தப்பெற்ற துரோகக் குற்றச்சாட்டினுள் அவை எத்துணை முக்கியமான இடத்தைப் பெற்றனவோ, அத்துணை அளவிற்கு அவற்றைப்பற்றி விரிவாக நாம் காணவேண்டும். இங்கு அவை இரண்டும் சிக்கலான பிரச்சினைகள் என்பதை மட்டும் விளக்கினுல் போதும். அவை ஹேஸ்டிங்ஸின் பண்பு நலனில் படிந்திருந்த கறையினை நமக்குச் சுட்டிக்காட்டு கின்றன. அவ் வழக்குகளின் அடிப்படைக் காரணங்கள் அனைத்தையும் நாம் ஆராய்கின்றபொழுது, ஹேஸ்டிங்ஸ் பின் பற்றிய முறைகள், புரிந்த செயல்கள் நமக்கு வியப்பினை அளிக்கமாட்டா. ஆனல், இருந்தபோதிலும் அவை மறுக்க

முடியாதவை என்பதுமட்டும் இங்குக் குறிப்பிடத்தக்கதாகும். நிதி நெருக்கடியால் உண்டான தேவைகளோடு மங்கிக்கொண்டிருக்கும் நன்மை, தீமைபற்றிய அச்சத் தயக்கமும் சேர்ந்து காலம் கழிந்து சென்றாலும், நேர்மையானவை என்று எண்பிக்க முடியாத நிகழ்ச்சிகளை உருவாக்கின என்றே கூற வேண்டும்.

ஹேஸ்டிங்ஸின் கவர்னர் பதவிக் காலம் போரும் அரசியலும் நிறைந்த ஒன்றாகமட்டும் இல்லாமல் வேறு பல சிறப்பியல்புகளையும் கொண்டதாக இருந்தமை இங்குக் கருதத்தக்கதாகும். முகலாயப் பேரரசர்கள் போற்றி வளர்த்த பண்பாட்டு மரபின் நிழல் நிறைந்த வங்காளத்தில் அவர் நெடுங்காலம் வாழ்ந்துவந்தமையால், அவருடைய உள்ளத்திலே கீழைநாட்டுச் சுவையுணர்வுகள் எழுச்சி பெற்றதோடு, கீழைநாட்டு அறிவுக் கருவூலத்தைத் தமக்குரிய சொத்தாகப் பெறுவதில் அளவற்ற ஆர்வத்தையும் அவர் காட்டினார். ஹேஸ்டிங்ஸின் அதிகார மேம்பாடும், நீண்ட பணிபுரி காலமும், கலை, பண்பாடு முதலியவற்றில் அவர் கொண்டிருந்த ஆர்வமும், மக்களைப் புரிந்துகொள்ளும் பண்பும் அவரை இந்தியாவின் உள்ளத்தினை நன்கு புரிந்துகொள்ளுமாறு செய்தது. அவரைப்போன்று சிறந்த முறையில் இந்தியாவின் பண்பாட்டையும் மனப்போக்கையும் சிப்பாய்க்கலகத்திற்கு முன்பு புரிந்துகொண்ட ஆங்கிலேய அதிகாரிகளுள் இவரே தலை சிறந்தவராவர். அவருடைய பெயர், பாமர மக்கள் பாடல்களிலும் கதைகளிலும் சிறப்புமிக்க பெயராகப் பயன்படுத்தப் பட்டது. அவருடைய செயற்கருஞ் செயல்களைப் போற்றி உரைக்கும் நாட்டுப் பாடல்கள் பல தோன்றின. தொடக்க காலத்தில் இந் நாட்டை ஆண்ட ஆங்கிலேயர்களுள் வாணிகப் பிரச்சினையையும் அரசியல் பிரச்சினையையும் அவர் நன்கு புரிந்துகொண்டிருந்தார். பண்பாட்டுத்துறையில் உண்டாகும் பிரச்சினைகளையும் நன்கு புரிந்துகொண்டு அதற்கேற்ப செயலாற்றிய தனிப்பெருந் தலைவர் ஹேஸ்டிங்ஸ் எனில், அது மிகையாகாது. குறையற்ற இந்திய ஆட்சிமுறையை அமைப்பதற்கு, இந்தியப் பண்பாட்டைப் புரிந்துகொண்டால்தான் நல்லதோர் அடிப்படையின்மீது குறையற்ற இந்திய ஆட்சிமுறையை அமைக்க முடியும் என்பதை நன்குணர்ந்த ஹேஸ்டிங்ஸ், அதற்குரிய வழிமுறைகளை நாடலானார். ஹேஸ்டிங்ஸ் பாரசீக மொழியை நன்கு அறிந்திருந்தார். அக் காலத்தில் பாரசீக மொழி அரசியல் சூழ்ச்சித்திறத்திற்குப் பயன்படுத்தப்பட்ட மொழியாக இருந்துவந்தது. மேலும், அவர்

வட்டார மொழியாகிய வங்காளத்தைப் பேசவும் எழுதவும் கற்றிருந்தார். ஓரளவிற்கு அராபிய மொழி, உருது மொழி ஆகியவற்றையும் அவர் பேசக்கூடிய அளவிற்கு அறிந்திருந்தார். இந்துச் சட்டத்தைத் தொகுப்பதில் ஈடுபட்டிருந்த ஹால்ஹெட் (Halhed) என்பவருக்கு ஹேஸ்டிங்ஸ் ஆக்கமும் ஊக்கமும் அளித்துவந்தார். பத்து சமஸ்கிருதப் பண்டிதர்கள் சமஸ்கிருத மொழியில் தொகுத்துத்தந்த சட்டங்கள் பாரசீக மொழியில் மொழிபெயர்க்கப்பட்டிருந்தன. அவற்றை அடிப்படையாகக்கொண்டு அச் சட்டவியல் நிபுணர் ஆங்கிலத்தில் இந்துச் சட்டத்தைப்பற்றிச் சிறந்ததொரு நூலினை எழுதினர். வில்லியம் வில்கின்ஸ் என்பவர் சமஸ்கிருத மொழி இலக்கிய ஆராய்ச்சியில் ஈடுபட்டிருப்பதை ஹேஸ்டிங்ஸ் போற்றி ஆதரித்தார். அவ் அறிஞர் பகவத் கீதையை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து நூலாக வெளியிடுவதற்கு ஒல்லும் வகையெல்லாம் ஓயாது உதவிபுரிந்த பெருமை ஹேஸ்டிங்ஸையே சாரும். பாரசீக, அராபிய மொழிகளில் புலமை பெற்றிருந்த சர் வில்லியம் ஜோன்ஸ் என்பவர், ஹேஸ்டிங்ஸ் காலத்தில் தான் உச்ச நீதிமன்றத்தின் நீதிபதியாகப் பதவியேற்றார். அவர் சமஸ்கிருத மொழியைக் கற்பதில் தணியாக் காதல் கொண்டிருந்தார். அவருடைய அறிவுப் பசியை ஹேஸ்டிங்ஸ் ஆதரித்ததோடு, 1784ஆம் ஆண்டில், ஜோன்ஸ் வங்காளத்தின் ஆசிய சங்கத்தை நிறுவியதற்குப் பேராதரவு தந்து ஊக்குவித்தவர் ஹேஸ்டிங்ஸ் என்பது இங்குக் குறிப்பிடத்தக்கதாகும். எத்துணை அளவிற்கு இந்தியப் பண்பாட்டிலும் நாகரிகத்திலும் ஹேஸ்டிங்ஸ் ஈடுபாடு கொண்டிருந்தாரோ, அத்துணை அளவிற்கு அவர் இஸ்லாமியப் பண்பாட்டை அறிந்துகொள்ளுவதிலும் அதைப் போற்றி ஆதரிப்பதிலும் ஆர்வம் காட்டிவந்தார். அவர் கல்கத்தாவில் 1781ஆம் ஆண்டு முஸ்லீம் மதராஷா (Madrasah) எனப்படும் அராபிய மொழிக் கல்லூரி ஒன்றை நிறுவினர். ரென்னல் (Rennell) என்பவர் வங்காள தேசப்படத்தைத் தயாரித்தபொழுது (1781) அதற்கும் ஹேஸ்டிங்ஸ் பேராதரவு தந்தார். மேலும், அவர் திபெத் நாட்டைக் கண்டறிந்துவருமாறு இருமுறை இரண்டு குழுவினரை அனுப்பிவைத்தார். கல்வியையும் கலைகளையும் போற்றி ஆதரித்த முறையாலும், அவருடைய அரசியல் அறிவாற்றலாலும், மதிநுட்பத்தாலும், ஊழலைக் கட்டுப்படுத்தும் பண்டைக் கால ஆட்சிமுறை மரபுகளைப் போற்றிப் பின்பற்றிவந்தமையாலும், ஹேஸ்டிங்ஸ், இந்தியாவின் மாண்புமிக்க மன்னர்கள் வழிவந்தவரைப்போன்று சீரும் சிறப்பும் பெற்று விளங்குகின்றார். தாம் ஆளும் நாட்டின்



(a) செயிண்ட் ஜார்ஜ் கோட்டை, சென்னை.



(b) அரசினர் மாளிகை, கல்கத்தா.

இயல்பிற்கேற்ற வகையில் — நலத்திற்கேற்ற வகையில் ஒன்றிய உள்ள உணர்வோடு லாரென்சு பிரபுவிற்கு முன்பு ஆட்சிபுரிந்த பிரிட்டிஷ் ஆட்சியாளர்களுள் வாரன் ஹேஸ்டிங்ஸைத் தவிர வேறு யாரும் இருக்க முடியாது என்று கூறினால் அது மிகையாகாது. அதைப்போன்றே லாரென்சுக்கு முன்பு ஹேஸ்டிங்ஸே நாட்டு மக்களால் பெரிதும் அன்போடு போற்றப்பட்ட பெருந்தகையாவார்.

எடுத்துக்காட்டாக, உரைக்க முடியாத இன்னல்களும் இடையூறுகளும் நிறைந்த காலத்தில், கம்பெனி முன்னேற்றப் பாதையில் ஏறுநடை போட்டுச் செல்லத் தொடங்கியபொழுது, அதைக் கட்டிக்காத்த திறமைமிக்க காப்பாளர் என்பதைச் செயல்முறையில் மெய்ப்பித்த பெருமை ஹேஸ்டிங்சிற்கே உரியது என்பது மறுக்க முடியாத உண்மையாகும். ஹேஸ் டிங்சின் செயற்கருஞ் செயல்களைச் சுருக்கி உரைப்பதென்றால், இதைத் தவிர வேறு சொற்களால் சொல்ல இயலாது. அவர் தம்முடைய புறப்பகைவர்களை மனவுறுதிமிக்க துணிச்சலுடன், தோல்வியடையாத வள ஆதாரத்துடன் எதிர்த்துப் போரிட்டார். அவருடைய கம்பெனியின் உள்ளிருந்த அகப் பகைவர்களைப் பொறுமையுடனும் உறுதியுடனும் எதிர்த்துப் போரிட்டு வெற்றிபெற்றார். ஆட்சியியல் அமைப்பிற்கு உரிய அடிப்படையை வலுவாக அமைத்தவர் ஹேஸ்டிங்ஸேயாவார். அவர் அமைத்த அந்த அடிப்படையின்மேல்தான் அவருக்குப் பின்னர் வந்த ஆளுநர்கள் மாண்புமிக்க மாபெரு மாளிகையை எழுப்பினர். நெருக்கமான பல்வேறு அலுவல்களுக்கு இடையே அவர் பண்பாட்டுத்துறையில் கருத்தைச் செலுத்தி, ஆர்வத்தோடு இந்தியப் பண்பாட்டு ஆராய்ச்சியில் ஈடுபடுவதற்குப் போதிய நேரத்தை ஒதுக்கிவைத்தமை இங்குக் கருதத் தக்கதாகும். அவருடைய இவ் அரும்பெரும் பணியும் ஆர்வமும் பேரளவிற்கு இந்திய மக்களின் ஆதரவையும் பரிவையும் கம்பெனியாருக்குத் தேடித்தந்தது என்று கூறின், அது தவறாகாது. அவர் கல்கத்தாவிற்கு வந்தபொழுது, அது இலாப நட்டக் கணக்குப் பார்க்கும் கணக்கு நிலையமாக இருந்ததைக் கண்டார். அவர் கல்கத்தாவைவிட்டுத் தாயகம் திரும்பிச் செல்லும்பொழுது, கல்கத்தாவைப் பேரரசின் தலைமை நிலையமாக்கிவிட்டுச் சென்றார். ஆனால், இவ்வளவு சிறப்பாக அவருடைய சிறப்பியல்புகளை எடுத்தியம்பிய நாம், அவரிடத்துக் காணப்பட்ட சில தீய பண்புகளைப்பற்றியும் இங்குக் குறிப்பிடாமல் இருப்பதற்கில்லை. அவருடைய வருவாய்த்துறைத் திட்டங்கள் தாற்காலிகமாக மேற்கொள்ளப்பட்டவை; அவை

முழு வெற்றியளிக்கவில்லை என்பது வருந்தத்தக்க செய்தியாகும். அவருடைய அரசியல் சூழ்ச்சித்திறனைக் கடுமையான சண்டித்தனமும், அறநெறி பிறழ்ந்த செயல்முறைகளும் பாழாக்கிவிட்டன. காலப்போக்கிலே அவர் ஆங்கிலேயராக இல்லாமல்—ஆங்கிலேயருக்கு உரிய பண்புகளான எளிமையும், இனிமையும், மென்மையும், தண்மையும் உடையவராக விளங்காமல், பிரஷியருக்குரிய தறுகண்மையும் முரட்டுப் பிடிவாதமும் உடையவராக விளங்கினுர். அவருடைய கடிதப் போக்குவரத்துகளில் ஒருவகைப் போலிப் பகட்டும் நேர்மையற்ற போக்கும் மிகுதிப்பட்டு வரலாயின. காலப்போக்கில் அவை அவருடைய வழக்கமாய்ப்போய்விட்டன. நெகிழ்ந்துகொடுக்க முடியாத வகையில் அவருடைய நோக்கங்கள் அவரை ஆட்டிப் படைத்தன என்ருல், சில சமயங்களில் அவர் கடுமையான சீற்றம் கொண்டமை அவருக்குத் தீராப் பகையைத் தேடித் தந்தது. அவருடைய மெல்லிய சுருக்கங்கள் நிறைந்த உதடுகள், அறிவுக் கூர்மை வாய்ந்த புருவங்களை மேல்நோக்கி இறுகச் செய்திருந்தன. அவை அடக்கியொடுக்கப்பட்ட உணர்ச்சிகளைப்பற்றிய கதைகளையும், உள்ளூர வெந்து கொண்டிருக்கும் எரிச்சல்மிக்க எதிர்ப்புகளைப்பற்றிய கதைகளையும் எடுத்துரைப்பனவாக இருந்தன. அவர் எப்பொழுதுமே முட்டாள்தனமான சொற்களைச் சொல்லியது இல்லை என்பதும், அதைப்போன்றே அவர் எப்பொழுதும் தாராள மனப்பான்மையோடு எத்தகைய செயலையும் செய்தது இல்லை என்பதும் மறுக்கமுடியாத உண்மையாகும். அவருடைய தனித்து வாழும் பண்பும், தற்செருக்குமிக்க மனப்போக்கும் அவரைச் சந்தித்தவர்களுள் பெரும்பான்மையோருக்கு அவரைப்பற்றிய நம்பிக்கையின்மையும், அவரிடத்து ஐயுறவும் கொள்ளுமாறு செய்தது. பார்வெல்கூட முதலில் ஹேஸ்டிங்ஸோடு நம்பிக்கையில்லாமலேயே பழகத் தொடங்கினுர். அவருடைய தனிப்பட்ட ஆட்சிமுறைச் செயல்களில் பண்டைக்காலக் குழுவினைச் சார்ந்த ஆங்கிலேய-இந்திய வரலாற்ருசிரியர்களின் கண்டனங்களைப் பெறுவதற்குத் தகுதியுடைய செயல்கள் ஒன்றையும் செய்யவில்லை; பிற்காலத் தலைமுறையினரின் புகழ்மாலைகளைச் சூடிக்கொள்ளுவதற்கும் ஹேஸ்டிங்ஸ் தகுதியுடையவரல்லர் என்றே கூறலாம். பதினேழு வயது நிரம்பாத இளமைப் பருவத்தில் ஹேஸ்டிங்ஸ் இந்தியாவிற்குச் சென்ருர். அவருடைய பணியின் தொடக்க காலத்தின் பெரும் பகுதி உள்நாட்டுக்குரியதாகவே இருந்தது. அவர் பிளாசிப் போர் நடந்த காலத்திலும், மீர்ஜாபர், மீர் காசிம் தகராறுகள் நடைபெற்ற காலத்திலும் வங்காளத்திலே

பணிபுரிந்துவந்தார். அவருடைய மதிப்பீட்டின்படி அவருடைய வாழ்க்கைப் படித்தரம் மிக உயர்ந்திருந்ததாகக் கருதப்பட்டது. அக்காலத்து வாழ்க்கை நிலையினை அளவுகோலாகக் கொண்டு மதிப்பிட்டாலும், அவருடைய வாழ்க்கைத்தரம் மிக உயர்ந்ததாகவும் சிறந்ததாகவும் இருந்தது என்பது உண்மையேயாகும். ஆனால், அவை பத்தொன்பதாம் நூற்றுண்டின் ஆட்சியாளர்களின் வாழ்க்கை நிலையைப் பிரதிபலித்ததாகவும் இல்லை; அல்லது அவருடைய காலத்து இங்கிலாந்தில் பொதுவாழ்க்கையில் சிறப்புற்று விளங்கிய சிறப்புமிக்க மனிதர்களுடைய வாழ்க்கைத்தரத்தோடு ஒப்பிட்டும் கூற முடியாது. உண்மையை மறுப்பது மடமை நிறைந்த செயலாகும். அதைப்போன்றே அவரைப்பற்றி விதிவிலக்கான இழிகுணத்தாலும், தப்பெண்ணத்தாலும், பகைமையுணர்வாலும் கட்டிவிடப்பட்ட கதைகளை மீண்டும் நாம் நினைவுக்குக் கொண்டுவருவதும் நேர்மையற்ற செயலாகும். எத்தகைய கண்கொண்டு பார்த்தாலும், வாரன் ஹேஸ்டிங்சின் பண்புநலன் சிக்கல்மிக்கதும் புரியாத புதிராகவுமே தோன்றும் என்பது மறுக்க முடியாத உண்மையாகும். வங்காளத்தில் அவருடைய பெயரோடு சேர்ந்து கருத்துமாறுபாடுகளும் வெறுப்புணர்ச்சியும் பொங்கியெழுந்ததன் விளைவாக, அவருடைய பணியையும் பண்புநலனையும் விளக்கிப் பொருள் கூறுவது மிகவும் கடுமையான செயலாகப் போய்விட்டது. மெய்ப்பொருளானது எவ்வாறு மாயையினால் மறைக்கப்படுகிறதோ, அவ்வாறு இத்தகைய சொல்வன்மைக்கும் தப்பெண்ணத்திற்கும் பின்னால் உண்மையான மனிதர் மறைக்கப்பட்டுவிட்டார். ஹேஸ்டிங்சின் சாதனைகள் நன்கு நிறுவப்பெற்ற உண்மைகள்; அவருடைய பண்புநலன்தான் இன்றும் புரியாத ஒரு புதிராக இருந்துவருகிறது.

## வாரணாசியைச் சேர்ந்த செய்ட் சிங்கைப்பற்றியும் அயோத்தி பேகங்களைப்பற்றியும் அறியப்படும் குறிப்புகள்

ஹேஸ்டிங்சின் மீது சாட்டப்பட்ட துரோகக் குற்றச்சாட்டுகளில் மிக இழிவானதாகவும் கடுமையானதாகவும் குறிப்பிடப்பட்டவை வாரணாசியைச் சேர்ந்த செய்ட் சிங்கைப்பற்றியும் அயோத்தி பேகங்களைப் பற்றியும் குறிப்பிடப்படும் வழக்குகளாகும். அவை அக் குற்றச்சாட்டில் முதன்மையான இடத்தைப் பெற்றன. செய்ட்சிங்கின் வழக்குதான்

உண்மையில் பிட்டினுடைய (Pitt) மனத்தை மாற்றியது. அதுதான் வழக்கு விசாரணையைத் தலைகீழாக மாற்றியது. ஷெரிடன் என்னும் கவிஞர் 'பேகங்களின் உரை' என்று ஒரு கவிதையை இயற்றியுள்ளார். அது பாராளுமன்றத்தில் ஆற்றப்பெற்ற சிறப்புமிக்க சொற்பொழிவாகப் பொதுவாகக் கருதப்பட்டது. வழக்கு விசாரணை உண்மையில் நடைபெற்றபொழுது பொங்கியெழுந்த சீற்றமும், தப்பெண்ணமும், வெறுப்புணர்ச்சியும் ஒருவரையொருவர் மிக இழிவாகப் பழிப்பதற்கும் புகழ்வதற்கும் காரணமாக அமைந்தன. மேலும், அவ்வழக்கு விசாரணையில் கலந்துகொண்டவர்கள் இந்திய நாட்டு நிலைகளைப்பற்றித் தெளிவாக அறிந்தவர்களாக இல்லை. அதனால் இரு கட்சியினரும் ஒருவரையொருவர் வரம்புமீறி நாகரிகம் குறைந்த—பண்பற்ற நிலையில் பழித்துரைக்கவும், வரம்பின்றிப் புகழ்ந்துரைக்கவும் இடமளித்தது. அதனால் பின்வரும் தலைமுறையினர் குழம்பிய நிலையில்—தீர்ப்பளிக்க முடியாத நிலையில்— மலைத்துப்போக நேரிட்டது. மிகவும் நேர்மையான கருத்துகளைப் பின்வரும் ஆசிரியர்கள் தங்கள் நூல்களில் தெளிவாக எடுத்தியம்பியுள்ளனர். சர் ஆல்பிரட்டு லயால் என்பவர் 'வாரன் ஹேஸ்டிங்ஸ்' (இந்தியாவின் ஆளுநர்கள் வரிசை) என்னும் நூலிலும், H. H. டாட்வெல் என்பவர் 'கேம்பிரிட்ஜ் இந்திய வரலாற்றுச் சுருக்கம்' என்ற நூலிலும், பி. இ. இராபர்ட்ஸ் என்பவர் 'பிரிட்டிஷாரின் ஆட்சிக் கால இந்தியா' என்னும் நூலிலும், 'கேம்பிரிட்ஜ் இந்திய வரலாறு' ஐந்தாம் தொகுதியிலும் ஹேஸ்டிங்சைப்பற்றித் தெளிவாக விளக்கியுள்ளனர்.

வாரணசியின் அரசர் செய்ட் சிங்காவர். ஆனால், அவருடைய அதிகாரமும் பதவியும் ஏறக்குறைய ஒரு ஜமீந்தாரின் அல்லது வருவாய்த்துறைத் தண்டல் நாயகத்தின் நிலைக்கு ஒப்புடையதாகவே இருந்து வந்தது. ஆனால், அவர் ஓர் ஆட்சிபுரியும் அரசரல்லர். ஆனால், அவர் ஜமீந்தார் நிலையிலிருந்து சிறிது வேறுபட்டிருந்தார். அவருக்கு அடக்கமான நாட்டுப் பகுதியும், அப்பகுதியில் கணிசமான அதிகாரமும் இருந்துவந்தன. 1775ஆம் ஆண்டு வரை அவர்

அயோத்தி நவாபிற்குத் திறைப்பொருள் செலுத்தும் பெருநிலக்கிழாராக—குறுநில மன்னராக இருந்து வந்தார். ஆனால், அவ்வாண்டு கம்பெனியாருக்கும் அயோத்தி நவாபிற்கும் இடையே செய்துகொள்ளப் பட்ட உடன்படிக்கையின்படி, செய்ட் சிங்கு கம்பெனி யாரின் மேலாண்மைக்குக் கீழ்ப்பட்ட குறுநில மன்ன ரானார். அவர் ஆண்டுதோறும் செலுத்த வேண்டிய திறைப்பொருள் அல்லது வரி 22½ இலட்சம் ரூபாய் களாகும் (225,000 பவுன்களாகும்). இது உண்மை யிலேயே பெரிய தொகையாகும். பதினெட்டாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் வங்காள மாநிலம் தில்லிப் பேரரசிற்குச் செலுத்திவந்த 52 இலட்ச ரூபா யின் ஒரு பகுதி செய்ட் சிங்கு செலுத்திவந்தது என்பது இங்குக் குறிப்பிடத்தக்கதாகும். கம்பெனி யாருக்கு வாரணாசி உடைமையாக அளிக்கப்பட்ட உடன்படிக்கையில் ‘எத்தகைய சாக்குப்போக்கைக் காட்டியும்’ அதிகமான திறைப்பொருளைச் செலுத்து மாறு வாரணாசி அரசரை வற்புறுத்தக்கூடாது என்னும் ஒரு விதி சிறப்பிடம் பெற்றது. ஆனால், 1778ஆம் ஆண்டில் ஃபிரெஞ்சுக்காரரோடு செய்த போரோடு மராட்டியப் போரும் மைசூர் போரும் ஒன்றாகப் பின்னிப் பிணைந்து பிரிட்டிஷாருக்குப் பெரிய தொரு நெருக்கடியை உண்டாக்கியபொழுது, போர்ச் செலவிற்காக மேலும் ஓர் ஐந்து லட்சம் ரூபாயைத் திறைப்பொருளாகச் செலுத்துமாறு செய்ட் சிங்கைக் கேட்பது (வேண்டுவது அன்று) நேர்மையான செய லென்றே வாரன் ஹேஸ்டிங்ஸ் கருதினார். மீண்டும் 1779ஆம் ஆண்டு போர்ச் செலவிற்காக அப் பெருந் தொகையைக் கொடுக்குமாறு திரும்பவும் செய்ட் சிங்கை ஹேஸ்டிங்ஸ் வற்புறுத்திக் கேட்டார். அப்படி போர்ச் செலவிற்கு உதவித் தொகை தந்து உதவ வில்லை என்றால், அவர்மீது இராணுவ நடவடிக்கை எடுக்கப்போவதாக ஹேஸ்டிங்ஸ் சிங்கை அச்சுறுத் தினார். 1780ஆம் ஆண்டில் மீண்டும் உதவித்தொகை அளிக்குமாறு சிங்கை ஹேஸ்டிங்ஸ் வற்புறுத்தினார். இச்சமயம் அவ்வரசர் ஹேஸ்டிங்சிற்கு இரண்டு இலட்சம் ரூபாய் கைக்கூலியாகக் கொடுத்து அனுப்பினார். ஹேஸ்டிங்ஸ் அந்த இரண்டு இலட்சம் ரூபாயையும் வாங்கிக்கொண்டு அப் பணத்தைக் கம்பெனியின் படைகளுக்காகச் செலவழித்தார்.

ஆனால், தான் கோரிய உதவித்தொகையை மீண்டும் அனுப்பிவைக்குமாறு சிங்கை வற்புறுத்தினர். அரசரை 2,000 குதிரைப் படைவீரர்களை அனுப்பி வைக்குமாறு ஹேஸ்டிங்ஸ் கட்டளையிட்டார். பின்னர் அதை 1,000 ஆகக் குறைத்தார். அரசர் 500 குதிரைப் படைவீரர்களையும், 500 துப்பாக்கிப் படை வீரர்களையும் அனுப்பிவைத்தார். அதைக்கண்ட ஹேஸ்டிங்ஸ் சீற்றமுற்றார். உடனே அவர் படையுடன் வாரணசி நோக்கிப் புறப்பட்டார். 1,000 குதிரைப் படைவீரர்களை அரசர் அனுப்பிவைக்காததற்குத் தண்டமாக அவரிடம் 50 இலட்சம் ரூபாயைப் பறித்து வர வேண்டும் என்ற நோக்கத்தோடு ஹேஸ்டிங்ஸ் வாரணசியின்மீது படையெடுத்துச் சென்றார். அரசர் அவருடைய அரண்மனையிலேயே சிறைவைக்கப்பட்டார். அதைக் கண்ட அவருடைய படைகள் வீறு கொண்டு எழுந்தன. ஹேஸ்டிங்சோடு சென்றிருந்த பிரிட்டிஷ் படைவீரர்கள் படுகொலை செய்யப்பட்டனர். பிரிட்டிஷ் படைவீரர்கள் அனைவரும் கொலை செய்யப்பட்டதற்குரிய காரணம் விந்தையானது. தற்செயலாக பிரிட்டிஷ் படைவீரர்களுக்குப் போர்த் தளவாடங்கள் அளிக்கப்படாமையால் அவர்கள் பகைவர்களை எதிர்த்துப் போரிட முடியாமற்போய்விட்டது என்பர். அதுமுதல் ஹேஸ்டிங்ஸ் பெருஞ் சீற்றத்தோடு நடந்துகொண்டார். அவர் சூனருக்குச் (Chunar) சென்று ஓய்வுபெற்று இருந்த சமயத்தில் போர்த் தளவாடங்களை வரவழைத்துத் தம்மைப் பலப்படுத்திக் கொண்டார். பின்னர் வாரணசியை ஹேஸ்டிங்ஸ் கைப்பற்றினர்; செய்ட் சிங்கை நாட்டைவிட்டு விரட்டினர். செய்ட் சிங்கின் அரசினை அவருடைய நெருங்கிய உறவினர் (உடன்பிறந்தார் மகன்) ஒருவரிடம் ஒப்படைத்து, ஆண்டிற்கு நாற்பது இலட்சமாகத் திறைப் பொருளைச் செலுத்துமாறு அவர் ஏற்பாடு செய்தார். மிக இடர்ப்பாடான சூழ்நிலையில் இத்தகைய செயலைச் செய்யவேண்டிய நெருக்கடி ஏற்பட்டது என்பதை நாம் ஒப்புக்கொண்டாலும், கவர்னர்-ஜெனரலின் பகைவர்களாக ஆலோசனை மன்றத்தில் இருந்தவர்களோடு சேர்ந்துகொண்டு சிங்கு சதிச் செயல் புரியத் திட்டமிட்டிருந்தார் என்பதை அறிந்த ஹேஸ்டிங்சிடம், அவர் மழுப்பிப் பேசியதனல் சீற்றம் கொண்டார். கவர்னர்-ஜெனரல் என்பதை நாம் ஓரள

விற்கு ஒப்புக்கொண்டாலும், ஹேஸ்டிங்சின் செயல்கள் தான்தோன்றித்தனமான பழிவாங்கும் மனப்பண்புடையவை என்பதை நாம் அவ்வளவு எளிதில் புறக்கணித்துவிட முடியாது. கம்பெனியின் அதிகார உரிமை மெய்ப்பிக்கப்பட்டது. ஆனால், அதனுடைய நல்லெண்ணமும் நம்பிக்கையும் நிலைநாட்டப் படவில்லை. வெல்லஸ்லி, நேப்பியர் போன்ற மற்றவர்களும் தான்தோன்றித்தனமாக நடந்துகொண்டனர். ஆனால், அவர்கள்மீது துரோகக் குற்றம் சாட்டப்படவில்லை. எனினும், சமகாலத்து மக்கள் ஒருவரை அளவுகடந்த முறையில் வரையறையின்றிப் பழித்து உரைத்தபோதிலும், குற்றம் செய்யப்பட்ட பிரச்சினை வரலாற்றறிஞனைப் பொறுத்தவரையில் எக்காரணத்தாலும் பாதிக்கப்படாது என்பது இங்குக் குறிப்பிடத்தககதாகும்.

அயோத்தியின் பேகங்கள் அல்லது இளவரசிகள் என்று சொல்லப்படுகின்றவர் அயோத்தியில் நவாபின் அமைச்சராக இருந்த அசாப்-உத்-தௌலாவின் தாயும் பாட்டியுமாவார். அவர்களுக்கு விலைமதிப்பு மிக்க மானியங்கள் (ஜாகீர்) விடப்பட்டிருந்தன. அவற்றுடன் ஷுஜா-உத்-தௌலாவின் உயிலின்படி வேறு பல சொத்துகளும் அவர்களுக்குக் கிடைத்தன. கம்பெனிக்குச் செலுத்தவேண்டிய உதவித் தொகையை நவாபு நெடுங்காலமாகத் தொடர்ந்து செலுத்தாது நிலுவைத் தொகை பெருகிப்போயிருந்தது. எனவே, கம்பெனியாரின் பார்வை நவாபின் குடும்பச் சொத்துகளின்மீது சென்றது. 1775ஆம் ஆண்டில் ஷுஜாவின் மனைவி பிரிட்டிஷ் துணைக்காப்பரசின் ஆளுநரின் விருப்பத்தின்பேரில் முன்னர் தம்முடைய மகனுக்கு அளித்த 25 லட்சத்தோடு இன்னும் கூடுதலாக 30 லட்சம் ரூபாய் (5,60,000 பவுன்கள்) கொடுத்துதவினார். ஆனால், அத் தொகையைக் கொடுத்துதவுவதற்கு முன்னர் அந்த அம்மையார் ஒரு நிபந்தனை விதித்தார். இதற்குமேல் கம்பெனியோ, அந்த அம்மையாரின் மகனை நவாபோ இன்னும் பொருள் தருமாறு தொல்லை கொடுக்கக்கூடாது என்றும், அதற்கு அவர்கள் உடன்பட்டால்தான் இப்பெருந்தொகையை அளிக்க முடியும் என்றும் அவ்வம்மையார் அறிவித்தார். ஹேஸ்டிங்ஸ் இதற்கு

உடன்படுவதை வன்மையாக எதிர்த்தார். ஆயினும், அவருடைய கருத்திற்கு மாருக ஆலோசனை மன்றம் மிகுதியான வாக்குகளை அளித்து, உடன்பாட்டைத் தெரிவித்தது. 1781ஆம் ஆண்டு ஹேஸ்டிங்சிற்குப் பணமுடை உண்டானமையால், அவர் நவாபினைப் பொருளுதவி செய்யுமாறு கசக்கிப் பிழிந்தார். தொல்லை பொறுக்க முடியாத நவாபு தம்மை அப் பதவியிலிருந்து நீக்கிவிடுமாறு ஹேஸ்டிங்சிடம் சொல்லிவிட்டார். ஹேஸ்டிங்ஸ் உடனே அதற்கு இசைவு தந்தார். ஆனால், விரைவிலே நவாபு தாம் கொடுத்த வாக்கினை மீறி நடக்கத் தொடங்கினர். பேகங்களின் எதிர்ப்புகளால் உள்ள உரம் கொண்ட நவாபு தாமே தொடர்ந்து நவாபாக இருக்க விரும்பினர். நவாபினை அவருடைய நிலைக்குச் சிறிதும் குறையாத வண்ணம் அவரை நிலைநிறுத்துவதற்கு ஈவு இரக்கமற்ற வகையில் நவாபையும், அவருக்குத் துணைக்காப்பரசின் ஆளுநர்களாக இருந்த இருவரையும் ஹேஸ்டிங்ஸ் துன்புறுத்திவந்தமையே எஞ்சிய கதையாகும். அப்பொழுது மிட்டில்டன் என்னும் ஹேஸ்டிங்சின் பேராளும், பிரிஸ்டோ என்னும் ஃபிரான்சிஸியரும் துணைக்காப்பரசின் ஆளுநர்களாக இருந்துவந்தனர். நவாபிற்கு உதவியாகப் பிரிட்டிஷ் படைகள் அனுப்பப்பட்டன. சற்றேறக் குறைய ஓராண்டிற்குப் பேகங்களின் பேடிகளான மேற்பார்வையாளர்கள் சிறை வைக்கப்பட்டனர். அவர்கள் விலங்கிடப்பட்டனர்; பட்டினி போடப்பட்டனர்; கசையடி கொடுக்கப்போவதாக அச்சுறுத்தப் பட்டனர். 1782ஆம் ஆண்டு பிப்ரவரி மாதத்தில் 'இந்த நாட்டில் பெண்களுக்கு எதிராக நான் செய்த கொடுமைகளைத் தவிர இதற்கு மேலாக வேறொன்றும் செய்ய முடியாது' என்று மிட்டில்டன் எழுதினர். ஜூன் மாதத்தில் அங்குப் படைத்தலைவராக இருந்தவர் 'படைகளால் என்ன செய்ய முடியுமோ அவை எல்லாவற்றையும் செய்தாகிவிட்டது' என்று கூறிய கருத்தினைப் பிரிஸ்டோ எடுத்தியம்பினர். இத்தகைய முறைகளின்மூலம் நூறு இலட்சம் ரூபாய் (பத்து லட்சம் பவுன்கள்) முடிவாக நவாபிடமிருந்து வாங்கப் பெற்றது; நவாபின் கடன்கள் அடைக்கப்பெற்றன; கம்பெனியின் நிதி நெருக்கடி மறைந்தது; சேமநிதி அமைக்கப்பெற்றது.

பேகங்கள் ஒட்டாண்டிகளாக ஆக்கப்படவில்லை; அல்லது வறுமையில் வாடுமாறு விடப்படவில்லை. அவர்களுடைய பட்டத்திற்கு உரிய செல்வ வளம் உடையவர்களாக வாழுமாறு விடப்பட்டனரா என்பது தெளிவாகத் தெரியவில்லை. ஆனால், அவர்களுடைய நம்பிக்கை பாழ்படுத்தப்பட்டது என்பது மட்டும் மறுக்க முடியாத உண்மையாகும். நவாபினுடைய குடும்ப விவகாரத்தில் கம்பெனியின் அரசு தலையிட்டது நேர்மையற்ற செயலாகும்; பேகங்கள் மிகவும் கொடுமைப்படுத்தப்பட்டனர்; அவர்களைச் சார்ந்திருந்தவர்களும் கொடுமைப்படுத்தப்பட்டனர்; தவறான செயல்களுக்கெல்லாம் பயன்படுத்தப்பட்டனர். விருப்பமில்லாத பிரிட்டிஷ் துணைக்காப்பரசின் ஆளுநர்களை அல்லது அதிகாரிகளைத் தூண்டிப் பணத்தை வாங்குமாறு செய்துவந்தவர் ஹேஸ்டிங்ஸ் என்பதில் சிறிதும் ஐயுறவிற்கு இடமில்லை. அக்காலத்தில் ஹேஸ்டிங்சிற்கு உண்டாகியிருந்த இடர்ப்பாடு மிக்க பொருள் பற்றுக்குறையையும், பல வகையில் அவருக்கு உண்டான துன்பங்களையும் தொல்லைகளையும் நாம் கருதுவோமானால், ஓரளவிற்கு அவருடைய செயல்முறைகளின் கடுமையைத் தள்ளிக் கணக்கிடலாம். அவ்வாறு ஓரளவிற்குத் தள்ளுபடி செய்தாலும், இவ்விரு வழக்குகளிலும் ஹேஸ்டிங்ஸ் புதுமைக்கால ஒழுக்க விதிமுறைகளுக்கு மாறான வகையில் மிகத் தாழ்ந்த நிலையில் நடந்துகொண்டதுமல்லாமல், அக்காலத்து இந்திய மக்களால் ஏற்றுக்கொள்ளப்பட்டிருந்த—ஒழுகலாற்று முறைக்கு நேர்மாறான வகையில், மிக இழிந்த முறையில் அவர் நடந்துகொண்டார் என்பது மறுக்க முடியாத உண்மையாகும்.

## ஆதாரங்கள்

1772-74ஆம் ஆண்டுகளுக்கு இடைப்பட்ட காலத்தைப் பற்றி அறிய M. E. மான்க்டன் ஜோன்சு (Monckton-Jones) என்பவர் எழுதியுள்ள, 'வங்காளத்தில் வாரன்ஹேஸ்டிங்ஸ்—1772-74' (1918) என்னும் நூலைக் காண்க. அது தனிச் சிறப்பு வாய்ந்தது. சர் ஜான் ஸ்டிராச்சி (Strachey) என்பவர் 'ஹேஸ்டிங்சும் ரோகில்லர் போரும்' (1892) என்னும் நூலில் ரோகில்லர் போரைப்பற்றி விரிவாக விளக்கியுள்ளார்.

ஹேஸ்டிங்சின் கவர்னர் பதவிகாலம் முழுவதையும் அறிவதற்கு அரசாங்க அறிக்கைகளையும் கையெழுத்துச் சுவடிகள்

பலவற்றையும் பயன்படுத்தலாம். அவற்றுடன் பின்வரும் நூல்களையும் பார்க்க :

(1) Sir G. W. Forrest: 'Selections from the State Papers in the Foreign Dept. of Govt. of India, 1772-85' (3 vols., 1890).

(2) Sir G. W. Forrest: 'Selections from the State Papers of the Governor General: Warren Hastings' (2 vols., 1910).

வாரன் ஹேஸ்டிங்சின் வரலாற்றைப் பலர் எழுதியுள்ளனர். அவற்றுள் மிகச் சிறந்தனவும் விரிவாயுள்ளனவும் பின் வருவன :

(1) G. R. Gleig: 'Warren Hastings' (3 vols., 1841).

இந்நூல் மெக்காலேவிற்குக் கடுஞ் சீற்றத்தை உண்டாக் கியது.

அண்மையில் வெளியான நூல் :

(2) Keith Feiling: 'Warren Hastings' (1954).

இந்நூல் புதிய ஆதாரங்களை அடிப்படையாகக்கொண்டு ஆராயப்பட்ட அடக்கமான நூல்.

தற்காலத்தில் புதுமைப் பண்புகள் நிறைய எழுதப்பட்ட வாழ்க்கை வரலாறு :

(3) A. Davies: 'Biography of Warren Hastings' (1935).

வாரன் ஹேஸ்டிங்ஸைப்பற்றிய ஆராய்ச்சி நூல்களுள் இங்குக் குறிப்பிடத்தக்கன :

(1) Sir A. Lyall: 'Warren Hastings' (1908).

(2) Penderel Moon: 'Warren Hastings and British India' (1947).

அண்மையில் வெளிவந்த மிகச் சிறந்தனவும் ஆதாரங்கள் நிறைந்தனவுமான நூல்கள் :

P. E. Roberts: (1) 'History of British India'; (2) 'Cambridge History of India' vol. v.

S. C. Grier: 'The Letters of Warren Hastings to his Wife' (1905). H. H. Dodwell (1 ed.): 'Warren Hastings Letters to Sir J. Macpherson' (1927).

இவை இரண்டும் அவருடைய தனி வாழ்க்கையின் தன்மைகளை எடுத்தியம்புகின்றன.

நந்தகுமார் வழக்கினைப்பற்றி அறிவதற்குப் பின்வரும் நூல்களைப் பார்க்க :

(1) Sir J. Stephen : 'The Story of Nuncomar and the Impeachment of Sir Elijah Impey' (2 vols., 1905).

(2) H. Beveridge : 'Maharaja Nuncomar' (1886).

இவ்விரண்டு நூல்களும் இரண்டு கட்சிகளின் சார்பானவை.

அயோத்தி விவகாரத்தைப்பற்றியும், செயிட் சிங் வரலாற்றைப்பற்றியும் பின்வரும் நூலைப் பார்க்க :

C. C. Davies : 'Warren Hastings and Oudh' (1939). சர் பிலிப்பு ஃபிரான்சிஸின் வழக்கினை J. Parkes and H. Merivale : 'Memoirs of Sir Francis' (2 vols., 1867) என்னும் நூலில் காணலாம்.

மராட்டியரின் வரலாற்றினை 'Cambridge History of India or The History of Kincaid and Parasnis' என்னும் நூல்களில் காணலாம்.

துரோகக் குற்றச்சாட்டைப்பற்றி அறிய 'Lives of Governor-Generals' என்னும் நூலையும், 'Cambridge Modern History' என்னும் நூலின் ஐந்தாம் தொகுதி, பதினேழாம் அதிகாரத்தையும் காண்க.

அக்காலத்து வரலாற்றைக் கவர்ச்சியான முறையில் போற்றத்தக்க வகையில் H. E. Busteed என்பவர், 'Echoes of Old Calcutta' (4th ed., 1908) என்னும் நூலை எழுதியுள்ளார்.

அக்காலத்து பிரிட்டிஷாரின் சமூக வாழ்க்கையை T. G. P. Spear எழுதியுள்ள, 'The Nabobs' (1932) என்னும் நூல் சித்திரிக்கிறது. மேலும், W. Hickey : 'Memoirs' (4 vols., 1913) என்னும் நூலையும், Lucy Subherland : 'East India Company in the 18th Century Politics' என்னும் நூலையும் காண்க. இறுதியில் குறிப்பிடப்பட்ட நூல் லண்டன் மாநகரக் காட்சிகளை அறியப் பேருதவியாக இருக்கிறது. ஒழுங்கு முறைச் சட்டம், பிட்டு இந்தியச் சட்டம் ஆகியவற்றை அறிவதற்கு சர் C. Ilbert என்பவர் எழுதியுள்ள, 'The Government of India' (3rd ed., 1916) என்னும் நூலைக் காண்க.

# 6. கம்பெனியும் அரசும்

1757ஆம் ஆண்டு கிழக்கு இந்தியக் கம்பெனி வங்காளத்தின் ஆட்சித் தலைவனைச் சிறப்புற்று விளங்கியது. 'பழைய' கம்பெனி, 'புதிய' கம்பெனி எனும் இரண்டு போட்டிக் கம்பெனிகள் ஒன்றாக இணைக்கப்பட்டதன் விளைவாகத் தோன்றியதே கிழக்கிந்தியக் கம்பெனி. இவ் இணைப்பு வேலை 1702ஆம் ஆண்டு தொடங்கி 1708ஆம் ஆண்டு முடிவுற்றது. அந்தப் 'பழைய' கம்பெனியும் 'புதிய' கம்பெனியும் அரசரின் பட்டய உரிமை பெற்றுத் தொடங்கப்பட்டனவாகும். சிறிது காலத்திற்கு அவை இரண்டும் இந்தியாவில் ஆங்கிலேயர் வாணிகம் புரிவது குறித்துப் போட்டியிட்டுவந்தன. 1708ஆம் ஆண்டிற்குப் பிறகு 'கிழக்கு இந்தியத் தீவுகளில் வாணிகம் செய்யும் இங்கிலாந்து வாணிகர்களின் கூட்டுக் கழகம்' ஒன்றே ஆங்கிலேயரின் வாணிகத்தைச் செய்வதற்குரிய சிறப்புரிமை பெற்ற அமைப்பாக விளங்கத் தொடங்கியது. அக் கம்பெனியை லண்டன் மாநகரில் இருந்த 24 இயக்குநர்களைக் கொண்ட ஆட்சியாளர் மன்றம் நிர்வகித்துவந்தது. ஆண்டு தோறும் அக் கம்பெனியின் பங்குதாரர்களால் இயக்குநர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர். பங்குதாரர்களின் குழுவிற்கு 'உரிமையாளர் மன்றம்' (Court of Proprietors) என்ற பெயர் வழங்கிவந்தது. அக் கம்பெனியின் நடைமுறை முதலுக்கு (working capital) 'கிழக்கு இந்திய இருப்பு' என்னும் பெயர் வழங்கியது. உரிமையாளர்கள் கூட்டுப் பங்குத் திட்டப்படி வழங்கிய பங்குகளைக்கொண்டு இக் 'கிழக்கு இந்திய இருப்பு' என்னும் சேமிப்பு நிதி அமைக்கப்பட்டது. அக் கம்பெனியில் நிலையான ஆதாயம் கிடைத்துவந்தது. 1711ஆம் ஆண்டிற்கும் 1755ஆம் ஆண்டிற்கும் இடையே பங்குதாரர்களுக்கு ஆதாயத்தில் தரப்பட்ட பங்குவீதம் எட்டுமுதல் பத்து விழுக்காடாகும். கம்பெனியின் அன்றாட ஆட்சியை—நிர்வாகத்தைக் கம்பெனி இயக்குநர்களே கவனித்துவந்தனர். இந்த இயக்குநர் குழு

'ஆட்சியாளர் மன்றம்' என்னும் பெயரால் குறிப்பிடப்பட்டு வந்தது. அம் மன்றம் நிர்வாகத்தைச் செம்மையாகவும் விரைவிலும் செய்வதற்காகப் பல்வேறு குழுக்களாகப் பிரிக்கப் பட்டிருந்தன.

இந்தியாவில் கிழக்கு இந்தியக் கம்பெனி வாணிகம் புரிவதையே முதன்மையான குறிக்கோளாகக்கொண்டு இயங்கி வந்தது. எனவே, அதனுடைய அரசியல் சார்பான செயல் முறைகள் வாணிகத்தினைக் காக்கும்பொருட்டு எதிர்பாரா வகையில் நடைபெற்ற நிகழ்ச்சிகளாகும். கம்பெனிக்குப் பம்பாய் ஒன்றே பிரிட்டிஷாரின் உடைமையாக இருந்தது. அதனுடைய மற்றக் குடியேற்றங்களையும் தொழிற்சாலைகளையும் இந்திய நாட்டு அரசுகளிடத்து அனுமதி பெற்று, அல்லது மானியமாகப் பெற்ற பகுதிகளில் அமைத்துக் கொண்டது. மூன்று முக்கியக் குடியேற்றங்களான மதராஸ், கல்கத்தா, பம்பாய் ஆகிய கம்பெனி நிலையங்கள் ஒவ்வொன்றும் தனிப்பட்ட ஆலோசனை மன்றம் ஒன்றினால் ஆளப்பட்டு வந்தது. அம் மன்றங்கள் நேரடியாகத் தாயகத்திலுள்ள தலைமை நிலையத்தோடு தொடர்பு வைத்துக்கொண்டிருந்தன. ஒவ்வொரு குடியேற்றத்திலும் வாணிகர்களின் படிமரபு முறை இருந்துவந்தது. எழுத்தாளர்கள் என்ற கடைநிலையிலிருந்து தரகர்கள், முதல்நிலை வாணிகர்கள், இடைநிலை வாணிகர்கள் என்னும் பிரிவுகள் இருந்துவந்தன. ஆலோசனை மன்றத்தில் முதல்நிலை வாணிகர்கள் உறுப்பினர்களாக இருந்தனர். அவர்களுள் ஒருவர் அம் மன்றத்தின் தலைவராகப் பணியாற்றினர். அவர் பெரும்பாலும் அக் குடியேற்றத்தின் கவர்னராக இருந்தார். இந்த மன்றங்கள்தாம் எல்லா வகையான வாணிகச் செயல்முறைகளையும் கவனித்துவந்தன. ஆங்கிலேயரின் சரக்குகளை இந்திய நாட்டுச் சந்தைகளில் கொண்டுசென்று விற்பதும், அவ் விற்பனையால் பெற்ற தொகைகளைக் கொண்டும் இங்கிலாந்திலிருந்து ஏற்றுமதி செய்யப்பட்ட தங்கக்கட்டிகளைக் கொண்டும் இந்தியாவில் கிடைக்கும் பொருள்களை வாங்கி அவற்றை இங்கிலாந்திற்கு அனுப்பி வைப்பதும் கம்பெனி வாணிகர்கள் செய்துவந்த செயல்முறைகளாகும். கம்பெனி ஊழியர்களுக்குக் கொடுக்கப்பட்டுவந்த ஊதியம் மிகக் குறைவானதாகும்.[1] இதனால் கம்பெனி

[1] எழுத்தாளர் ஒருவரின் ஆண்டு ஊதியம் 65 பவுன்; தரகர் ஒருவருடைய ஆண்டு ஊதியம் 15 பவுன்; இடைநிலை வாணிகர் ஒருவரது ஆண்டு ஊதியம் 30 பவுன். 1774ஆம்

ஊழியர்கள் தங்கள் விருப்பப்படி உள்நாட்டு வாணிகத்தில் ஈடுபட்டுப் பொருளைச் சேர்த்துக்கொள்ளவோ, தூரக் கிழக்கு நாடுகளோடு வாணிகம் செய்து பொருளைச் சேர்த்துக் கொள்ளவோ உரிமை வழங்கப்பெற்றிருந்தனர் என்பது புலனாகின்றது. இங்கிலாந்திற்கு வாணிகப் பொருள்களை ஏற்றுமதி செய்யும் முற்றுரிமை கம்பெனிக்கே உரியதாகப் போற்றிக் காக்கப்பட்டது. கம்பெனி ஊழியர்கள் தனிப்பட்ட வகையில் தாயகத்திற்குப் பொருள்களை ஏற்றுமதி செய்வது தடுக்கப்பட்டுவந்தது. கம்பெனியின் ஊழியர்களையும் அதிகாரிகளையும் கம்பெனியின் இயக்குநர்களே தங்கள் விருப்பத்திற்கேற்பப் பதவியில் அமர்த்திவந்தனர். பதினைந்து வயது நிரம்பியவர்கள் எழுத்தாளர்களாக இந்தியாவிற்கு அனுப்பப்பட்டுவந்தனர்.

கம்பெனி வாணிகர்களின் ஒழுங்கான செயல்முறைகள் முதன்முதலாக 1744ஆம் ஆண்டில் தொடங்கிய ஃபிரெஞ்சுப் போர்களால் தடைப்படுத்தப்பட்டன. எதிர்பாரா வகையில் அரசியல் ஆதிக்கத்தினை வங்காளத்தில் பெற்றமையால், அம் முறை ஆட்டங் கண்டுவிடும் என்பது தெளிவாகப் புலனாயிற்று. அவ்வரசியல் ஆதிக்கம் இதற்கு முன்பு கனவுகூடக் காண முடியாத அளவிற்குச் செல்வத்தைச் சேர்ப்பதற்குரிய வாய்ப்பு வசதிகளை அளித்தது. வங்காள அரசுக்குள் தங்களுடைய அரசியல் ஆதிக்கத்தைத் தங்கள் பின்னணியாகக்கொண்டும், பெரிதும் தாங்களே முக்கியமான அரசியல் பதவிகளை வகித்து வந்த செல்வாக்கைக் கொண்டும் இம் மனிதர்கள் எளிதில் செல்வச் சீமான்களாவதற்கு உரிய மூன்று வழிகளைக் கண்டனர். தனிப்பட்ட வகையிலும் பொதுவான முறையிலும் செய்த நன்மைகளுக்காக, காட்டிய சலுகைகளுக்காகப் பரிசுப் பொருள்களைப் பேரளவில் அவர்கள் பெற்றுவந்தனர்; அல்லது எதிர்காலத்தில் செய்யப்போகும் நன்மைகளுக்கும் காட்டப்போகும் சலுகைகளுக்கும் அவர்கள் பரிசுகளையும் அன்பளிப்புகளையும் பெற்றனர்; உப்பு விற்பனை முற்றுரிமை அல்லது படைவீரர்களுக்குத் தேவையான உடுப்புகள் வருவித்து வழங்குவது போன்ற கொள்ளை கொள்ளையாக ஆதாயம் அளிக்கக்கூடிய ஒப்பந்தங்களைச் செய்துகொள்ளு

---

ஆண்டு டாக்காவில் இருந்த தலைவரின் ஆண்டு ஊதியம் 40 பவுன். L. S. S. O'Malley என்பவர் எழுதியுள்ள, 'The Indian Civil Service' என்னும் நூலின் 9ஆம் பக்கத்தைப் பார்க்க.

வதன்மூலம் பெருஞ் செல்வத்தைச் சேர்த்தனர். மீர் ஜாஃபரால் தொடங்கப்பெற்றதும், மீர் காசிமோடு போர்புரிந்து, வான்சிட்டார்ட்டின் ஆலோசனை மன்றம் கம்பெனி ஊழியர்களுக்குமட்டும் வரிச்சுங்கவரியை நீக்கியதன் விளைவாக, உள்நாட்டு வாணிகர்களோடு அவர்கள் நேர்மையற்ற முறையில் போட்டியிட்டனர். இவ்வாறு அவர்கள் பேரளவில் ஆதாயம் பெற்றுவந்தனர். 1757ஆம் ஆண்டிற்கும் 1766ஆம் ஆண்டிற்கும் இடையே வெளியிடப்பெற்ற பாராளுமன்ற அறிக்கைகள், கம்பெனி ஊழியர்களுக்குப் பரிசுப் பொருள்களாக 21,69,665 பவுன்கள் (கிளைவிற்குக் கொடுக்கப்பட்ட ஜாகீர் சேர்க்கப்படவில்லை) கொடுக்கப்பட்டதைத் தெரிவிக்கின்றன; மேலும், இவ் ஊழியர்களுக்கு உண்டான இழப்புகளுக்கு ஈடாக 3,770,833 பவுன்கள் கொடுக்கப்பட்டமையும் குறிப்பிடத்தக்கது.[1]

வங்காளக் கம்பெனியின் ஊழியர்கள் இவ்வாறு திடீரென்று செல்வச் செழிப்பு உடையவர்களாக மாறினமையால் பலதிறப்பட்ட விளைவுகள் உண்டாயின. அது இங்கிலாந்திற்கு நீரோட்டம்போன்று 'இந்தியர்களை'த் திரும்பிச் செல்லுமாறு செய்தது. (இந்தியாவில் பணிபுரிந்துவிட்டு இங்கிலாந்திற்குத் திரும்பிய ஆங்கிலேயர்கள் 'இந்தியர்கள்' என்று குறிப்பிடப்பட்டனர்.) அவர்கள் பதினெட்டாம் நூற்றுண்டுக் காலத்து இங்கிலாந்தின் 'நவாபுகளாக'ச் சீரும் சிறப்பும் பெற்று விளங்கினர். அவர்கள் தங்களுடைய புறப்பகட்டினுல் சமூகத்தை அவதூருகப் பேசிக்கொண்டிருந்தனர்; தங்களுடைய செல்வத்திஞல் சமுதாயத்தில் பொருமையையும் பூசலையும் உண்டாக்கிக்கொண்டிருந்தனர். 1760ஆம் ஆண்டளவிலேயே இப் புதுப் பணக்காரர்களின் செல்வாக்கினை ஆங்கிலேய மக்கள் சமுதாயம் உணரத் தொடங்கியது. 1767ஆம் ஆண்டளவில் அவர்கள் பாராளுமன்ற சக்திகளுள் ஒன்ருக விளங்கும் மேம்பாட்டை அடைந்தனர். 1770ஆம் ஆண்டு நாடக ஆசிரியரான ஃபுட் (Foote), 'நவாபு' என்னும் நாடகத்தில் அவர்களைப் போன்ற ஒரு நாடக மாந்தனைப் படைத்துள்ளார். இந்தப் புதிதாகக் கண்டுபிடிக்கப்பட்ட செல்வத்தில் அரசு ஏன் பங்கு பெறக்கூடாது என்று அரசியல்வாதிகள் கருதினர். அறநெறியாளர்கள் இந்தப் புதிய செல்வம் எத்தகைய வழிகளில் தேடப்பெற்றதோ என்னும் ஐயுறவு கொள்ளலாயினர். பிற்காலத்தில் பர்க்கு

[1] Reports of the House of Commons 1772, vol. III, pp. 31-112.

(Burke) அவர்களுடைய (அவருடைய குடும்பத்தினர் இந்திய நாட்டுப் பொருள்களில் சமைத்த உணவினைப் பெரிதும் விரும்பி உண்ணத் தொடங்கிய காலத்தில்) பிரதிநிதியானர். அதேசமயத்தில் அடிக்கடி போர் முற்றுகைகள் நடைபெற்று வந்தமையால் செலவுகள் மிகுதிப்பட்டுக்கொண்டுவந்தன; திறமையற்ற ஆட்சி வருவாயைக் குறைத்துவிட்டன. எனவே, தம்முடைய ஊழியர்களைப்போன்று செல்வ வளம் கொழிக்கும் சிறந்த நிலையில் கம்பெனி இல்லாததை இயக்குநர்கள் கண்டனர். ஆனல், ஆட்குறைப்பு முறையை நடைமுறைக்குக் கொண்டுவரக் கம்பெனி முயன்றபொழுது, கம்பெனிக்குள்ளேயே இரண்டு இடையூறுகளை அது எதிர்த்துப் போராட நேரிட்டது. கம்பெனியினுடைய ஆட்சிமுறையில் காணப்படும் ஒழுங்கின்மைக்குக் காரணம் தாங்கள் அமர்த்திய ஊழியர்களே என்பதை அறிந்த இயக்குநர்கள், ஆட்குறைப்பு செய்வதில் விருப்பமில்லாதவர்களாக இருந்தனர். ஏனெனில், கம்பெனி ஊழியர்களுள் பெரும்பாலோர் இயக்குநர்களுடைய உறவினர்களாகவும், நெருங்கிய தொடர்பு உடையவர்களாகவும் இருந்தனர்; அல்லது இங்கிலாந்தில் மிக உயர்ந்த பதவிகளில் இருந்தவர்களுடைய உறவினர்களாகவும் நண்பர்களாகவும் அவர்கள் இருந்தனர். எனவே, அந்தப் பெரிய மனிதர்களுடைய உள்ளங்களைப் புண்படுத்த இயக்குநர்கள் விரும்பவில்லை. இக் காரணங்களினல் கம்பெனியின் ஆட்குறைப்புத் திட்டத்தைச் செயற்படுத்துவதில் அவர்கள் கடுமையான நடவடிக்கை ஒன்றும் எடுக்கவில்லை. ஆகவே, இயக்குநர்கள் அறிவுகொளுத்துவதில் அஞ்சாமை மிக்கவர்களாக இருந்தனர். ஆனல், செயலாற்றுவதில் தயக்கம் மிக்கவர்களாக அவர்கள் இருந்தனர். இதைப்போன்றே இன்னும் அதிகமான அரசியல் பொறுப்பினை ஏற்றுக்கொள்ளுவதை அவர்கள் எதிர்த்துப் பேசுவதில் உறுதியாக இருந்தனர். ஆனல், புதிதாக அரசியல் பொறுப்புகளை ஏற்றுக்கொண்டதன் விளைவாகப் பேரளவிற்கு வள ஆதாரம் கிடைக்கும் என்பது உறுதிப்படுமானல், அத் தவற்றை அவர்கள் மன்னித்துவந்தனர். இரண்டாவதாக, கம்பெனியின் பங்குதாரர்களிடையே புதிய செல்வ வளத்தில் மிகுதியாகப் பங்கு பெற வேண்டும் என்ற விழைவு தலையெடுக்கலாயிற்று. எனவே, அவர்கள் கம்பெனியின் ஆதாயத்தில் அதிகமான பங்கு வீதத்தை அளிக்குமாறு வேண்டினர். 1766ஆம் ஆண்டு ஆதாயத்தில் தரப்படும் பங்கு வீதம் 10 விழுக்காடாக உயர்த்தப்பட்டது; மறு ஆண்டில் $12\frac{1}{2}$ விழுக்காடாக உயர்த்தப்பட்டது.

இந்தப் புதிய பணக்காரர்களின் செல்வாக்கின் மொத்த விளைவாக நிதிநிலை நெருக்கடி நாட்டில் உண்டாயிற்று. இந் நிதிநிலை நெருக்கடியே 1773ஆம் ஆண்டில் ஒழுங்குமுறைச் சட்டத்தை நிறைவேற்றுமாறு செய்தது. 1776ஆம் ஆண்டில் தான் முதன்முதல் பாராளுமன்றம் இந்தியப் பிரச்சினையைப் பற்றி ஆராயத் தொடங்கியது. அரசே கம்பெனியின் உடைமைகளை எல்லாம் எடுத்துக்கொண்டு நிர்வகிக்க வேண்டும் என்ற குரல் பாராளுமன்றத்தில் எதிரொலித்தது; அரசாங்கத்தைக் கிழக்கிந்தியக் கம்பெனியின் ஆட்சியைக் கைப்பற்றுமாறு பாராளுமன்றம் வற்புறுத்தியது. இந்த எதிர்ப்பினை 1767ஆம் ஆண்டு கம்பெனியின் இயக்குநர்கள் விலைகொடுத்து வாங்கிவிட்டனர். இங்கிலாந்தின் அரசுக்கு ஆண்டுதோறும் 400,000 பவுன்கள் திறையாகச் செலுத்துவ தாகவும், அதற்கு ஈடாகக் கம்பெனியின் புதிய உடைமை களையும், சொத்துகளையும், வருவாய்களையும் கம்பெனியே அனுபவித்துவருவதற்கு உரிமை அளிக்குமாறு கம்பெனியின் இயக்குநர்கள் அரசினை வேண்டிக்கொண்டனர்.[1] இந்தக் கூடுதலான பொறுப்புகள் கம்பெனியின் அன்றைய நிலைக்குப் பெருஞ்சுமையாகப் போயிற்று. இயக்குநர்கள் கம்பெனிக்கு உண்டாகக்கூடிய பேரழிவினைத் தடுப்பதற்குப் பல வகையில் வீணாக முயற்சி செய்தனர். இம் முயற்சியின் முதற்படியே 1760ஆம் ஆண்டு சென்னையிலிருந்த வான்சிட்டார்ட்டை அவர்கள் வங்காளத்திற்கு அனுப்பியதாகும். ஆனால், வங்காளத்திலிருந்த ஆலோசனை மன்றத்தின் பெரும்பான்மை யான உறுப்பினர்கள் அவரைத் தங்களுக்கு அடிமைப்படுத்தி விட்டனர். அடுத்தபடியாக 1765ஆம் ஆண்டில் இரண்டாவது முறையாகக் கிளைவினைக் கவர்னராக அனுப்பிவைத்தனர். ஆனால், அம் முயற்சியும் அவர் இங்கிலாந்திற்கு 1767ஆம் ஆண்டில் திரும்பிவந்த சிறிது காலத்திற்குள்ளாக மறைந் தொழிந்தது. 1769ஆம் ஆண்டில் வான்சிட்டார்ட், ஃபோர்டே, ஸ்கிராப்டன் என்னும் மூன்று ‘மேற்பார்வையாளர்கள்’ முழுமையான அதிகாரங்கள் வழங்கப்பெற்று இந்தியாவிற்கு அனுப்பப்பட்டனர். ஆனால், நன்னம்பிக்கை முனையைக் கடந்து சென்ற அவர்களுடைய கப்பல் என்ன ஆயிற்று என்பதே தெரியவில்லை. 1772ஆம் ஆண்டில் வங்காளத்தின் கவர்ன ராக வாரன்ஹேஸ்டிங்ஸ் அமர்த்தப்பட்டார். சீர்திருத்தங்கள்

[1] வங்காளத்தின் நிலவரியைத் தண்டும் உரிமையைக் கம்பெனி 1765ஆம் ஆண்டு கொடையாகப் பெற்றபொழுது ஆண்டு தோறும் கம்பெனியின் வருவாயில் 20 லட்சம் உபரித் தொகையாகக் கிடைக்கும் என்று கிளைவ் நம்பினர்.

செய்வதற்காக அவருக்கு உரிமை ஆணைகள் வழங்கப்பட்டன. ஆனால், அவர் இந்தியாவிற்கு வருவதற்குள் பொருளாதார நெருக்கடி கம்பெனிக்கு உண்டாகிவிட்டது. கம்பெனியின் ஆட்சி மன்றம், கம்பெனி நொடித்துப்போகாமல் தடுப்பதற்காக நார்த்து பிரபுவிடம் பத்து லட்சம் பவுன்களைக் கடனாகக் கொடுத்து உதவுமாறு வேண்டவேண்டிய நெருக்கடி உண்டாயிற்று. பொதுமக்களின் குற்றச்சாட்டுகள் நாளுக்கு நாள் பெருகிக்கொண்டு வரவே, கம்பெனியின் ஒழுங்கற்ற நிர்வாகத்தை ஆராய்ந்தறிய தேர்ந்தெடுக்கப்பட்டதும் மறைவடக்கமானதுமான பாராளுமன்றக் குழுக்கள் பல அமைக்கப் பெற்றன. அக் குழுக்கள் தங்களுக்கு இடையே எதிரானதும் முரண்பாடானதுமான பதினெட்டு அறிக்கைகளை வெளியிட்டன. கம்பெனியின் செயல்முறைகளைப் பாராளுமன்றத்தின் கட்டுப்பாட்டிற்குள் கொண்டுவருவதற்காக முயலும் முயற்சியின் முதல்நிலையே இப்பாராளுமன்றக் குழுக்களின் அறிக்கைகளாகும். அதன் வழியே படிப்படியாக 1858ஆம் ஆண்டில் அரசே கம்பெனியின் முழு மேலாண்மையைப் பெறுவதற்குரிய திட்டங்கள் செயற்படுத்தப்பட்டுவந்தன. இந்தச் செயல்முறையில் நாம் மூன்று வகையான கருமுதல்களைக் காணலாம். கம்பெனிக்குள்ளாகவே ஆட்சித்துறையையும் வாணிகத் துறையையும் வேறுவேருகப் பிரித்து வரையறை செய்தமை முதன்மையான செயலாகும். இந்தியாவிலுள்ள கம்பெனியின் அரசியல் தொடர்பான செயல்முறைகளைக் கட்டுப்படுத்தும் உரிமையை இங்கிலாந்தின் அரசாங்கம் படிப்படியாகப் பெற்றமை இரண்டாவது நிலை எனில் அது மிகையாகாது. இதைப்போன்றே லண்டன் மாநகரிலுள்ள கம்பெனியின் தலைமை அலுவலகத்தின் செயல்முறைகளைக் கட்டுப்படுத்தும் உரிமையைப் படிப்படியாகப் பெற்றமை மூன்ருவது நிலை எனலாம். இந்தச் செயல்முறைகளின் முக்கியப் படிநிலைகளாகப் பாராளுமன்றம் சட்டங்கள் இயற்றியதையும் கூறலாம். இப் பாராளுமன்றச் சட்டங்கள் 1773ஆம் ஆண்டில் இயற்றப்பட்ட ஒழுங்குமுறைச் சட்டத்தில் தொடங்கின; 1784ஆம் ஆண்டு இயற்றப்பட்ட பிட் (Pitt) இந்தியச் சட்டம் தொடர்ந்தது; அதற்குப் பிறகு பருவங்கள்தோறும் 1793, 1813, 1833, 1853ஆம் ஆண்டுகளில் நிறைவேற்றப்பட்ட பட்டயச் சட்டங்களாக அவை வளர்ந்தன; இறுதியாக 1858ஆம் ஆண்டில் இயற்றப்பட்ட சட்டத்தோடு அவை முடிவடைந்தன. முதலில் நாம் இத் திட்டங்களின் முதலிரண்டினை முறையாகப் பார்ப்போம். அதன் பின்னர் மேலே குறிப்

பிட்ட மூன்று கருமுதல்களின் வளர்ச்சியையும் முடிவையும் ஆராயலாம்.

1773ஆம் ஆண்டில் இரண்டு சட்டங்கள் இயற்றப்பட்டன. முதல் சட்டம் கம்பெனியின் நிதி நெருக்கடி நிலைமையைப் போக்கியது; அச் சட்டம் 4 வீத வட்டியுடன் 1,400,000 பவுன்களைக் கம்பெனிக்குக் கடனாகக் கொடுக்க அரசுக்கு உரிமை அளித்தது. இரண்டாவது சட்டம் ஒழுங்குமுறைச் சட்டம் (Regulating Act) என்பதாகும். இந்தியாவில் உள்ள கம்பெனியின் நிர்வாகத்தை ஒழுங்குபடுத்துவதற்காக இயற்றப்பட்ட சட்டமாகையால் அது 'ஒழுங்குமுறைச்' சட்டம் என்று பெயர்பெற்றது. அச் சட்டம் முதலில் இங்கிலாந்திலிருந்த கம்பெனியின் செயல்முறைகளைக் கண்காணித்து முறைப்படுத்தியது. உரிமையாளர்களின் பெருமன்றத்தின் குழப்பம் மிகுந்த செயல்முறைகளை அச் சட்டம் முதலில் தடைப்படுத்தியது. ஆண்டுத் தேர்தல்களில் போட்டியிடும் எதிர்க் கட்சிகள் பலரை இயக்குநர்களாக்கியும், வேறு சிலரை இயக்குநர் பதவியிலிருந்து நீக்கியும் வந்தன. வாக்குரிமை நல்கும் உரிமையைப் பெறுவதற்காகக் கம்பெனியின் பங்குகள் வாங்கப்பட்டன.[1] எத்தகைய பொறுப்பும் தொடர்பும் இல்லாத லண்டன் மாநகரத்துக் குழுக்கள் சிலவற்றின் சதியாலோசனைகளுக்கேற்ப இந்திய நாட்டுக் கொள்கைகள் மாற்றம் செய்யப்பட்டன; சில சமயங்களில் தீர்மானிக்கவும் பெற்றன. உரிமையாளர்களின் மன்றத்தில் வாக்களிப்பதற்குரிய தகுதியாக 500-ல் இருந்து 1,000 பவுன்களாக உயர்த்தப்பெற்றது. ஆண்டுதோறும் இயக்குநர்களைத் தேர்ந்தெடுக்கும் முறை மாற்றப்பட்டது. அதற்குப் பதிலாக நான்கு ஆண்டுகள் பதவிக்காலம் உடையவர்களாக ஆறு இயக்குநர்கள் ஆண்டுதோறும் தேர்ந்தெடுக்கப்பட்டனர். அவர்களுள் ஒருவர் இரண்டாவது முறை தேர்தலில் நிற்க வேண்டும் என்றால், ஓர் ஆண்டாகிலும் அவர் பதவியிலிருந்து விலகி இருந்திருக்க வேண்டும் என்னும் விதி கடைப்பிடிக்கப் பட்டது. இம் முறை பெரியதொரு நாட்டில் வணிகர்களாக இருந்த கம்பெனி பங்குதாரர்களே திட்டங்களை வகுத்துவந்த பழிப்பிற்கிடமான சீர்கேட்டிற்கு முடிவுகட்டியது. இதன்பிறகு

[1] உரிமையாளர்களின் மன்றத்தில் வாக்குரிமைகளை அதிகப் படுத்துவதற்காக, 'கிழக்கு இந்திய இருப்பு' வைப்புகளைப் பிரிக்கும் பழக்கத்திற்கு 'வாக்குரிமைகளைப் பிளப்பது' என்பது பெயராகும். பார்க்க: L. Sutherland: 'East India Co., and the State'.

அச் சட்டம் வங்காள அரசின் செயல்முறைகளை ஒழுங்கு முறைப்படுத்தியது. வங்காளத்தில் உள்ள வில்லியம் கோட்டையில் ஒரு கவர்னர்-ஜெனரல் ஐந்தாண்டுப் பதவிக் காலத்திற்கு அமர்த்தப்பெற்றார். அதனுடன் ஆலோசனை மன்றத்திற்கு நான்கு உறுப்பினர்கள் நியமிக்கப்பெற்றனர். அவர்களுடைய பெயர்கள் ஒழுங்குமுறைச் சட்டத்தில் குறிப் பிடப்பட்டிருந்தன. எதிர்காலத்தில் பதவியில் அமர்த்த வேண்டிய பொறுப்புக் கம்பெனிக்கு விடப்பட்டது. மற்ற இரு மாநிலங்களையும் மேற்பார்வையிடும் அதிகாரம் கவர்னர்-ஜெனரலுக்கு வழங்கப்பட்டது. இவ்வாறு ஒருமுகக் கட்டுப் பாடுடைய ஆட்சிக்குரிய முதற்படி தொடங்கப்பெற்றது. இறுதியாக ஓர் உச்ச நீதிமன்றம் அமைக்கப்பெற்றது. அதற்கு ஒரு தலைமை நீதிபதியும், மூன்று துணை நீதிபதிகளும் அமர்த்தப்பெற்றனர்.

கம்பெனியின்மீது பாராளுமன்றக் கட்டுப்பாட்டை முதன் முதலாக நிலைநாட்டினமையே ஒழுங்குமுறைச் சட்டத்தின் முக்கியத்துவமாகும். அதனுடன் இந்திய மக்களின் நல்வாழ் வினைப்பற்றிப் பாராளுமன்றம் கருத்தைச் செலுத்தத் தொடங்கியதைப் பொன்னெழுத்துகளால் ஒழுங்குமுறைச் சட்டத்தில் பொறித்துள்ளனர் எனலாம். ஆனால், அதை மட்டும் தனிப்பட்ட வகையில் ஆராய்வோமானால், அது குறைகள் மலிந்ததாகக் காலங்கடந்து இயற்றப்பட்ட திட்ட மாகத் தோன்றும். அச் சட்டத்தின் குறைபாடுகள் முதல் கவர்னர்-ஜெனரலாகப் பணியாற்றிய வாரன்ஹேஸ்டிங்சிற்கு உண்டான துன்பங்களுக்கும் தொல்லைகளுக்கும் மூலகாரண மாக இருந்தன. கவர்னர்-ஜெனரலுக்கு முடிவு வாக்கு அளிக்கும் உரிமை அளிக்கப்படவில்லை. எனவே, ஆலோசனை மன்றத்தின் உறுப்பினர்கள் தங்கள் விருப்பம்போல் கவர்னர்-ஜெனரலை ஆட்டிப்படைத்தனர். முதல் இரண்டு ஆண்டுகள் பிலிப்பு ஃபிரான்சிசும், அவருடைய நண்பர்களும் கவர்னர்-ஜெனரலை ஆட்டிப்படைப்பதில் வெற்றிபெற்றுவந்தனர். மற்ற இரு மாநிலங்களையும் மேற்பார்வையிட வேண்டும் என்று வழங்கப்பெற்ற அதிகாரம் தெளிவற்றதாக இருந்தது. அவ் வதிகாரத்தைக் கட்டாயமாகச் செயற்படுத்துவதற்குரிய முன்னேற்பாடுகள் ஒன்றும் செய்யப்படவில்லை. உச்ச நீதி மன்றம் எந்தச் சட்டத்தை அடிப்படையாகக்கொண்டு நீதி வழங்க வேண்டும் என்பதையும், யாருக்கு அது நீதி வழங்க வேண்டும் என்பதையும் ஒழுங்குமுறைச் சட்டம் வரையறுக்க வில்லை. ஒரு முறை இயந்திரத்தை இயங்குமாறு செய்துவிட்ட

பிறகு, மீண்டும் புதிய சட்டங்களின் மூலம்தான் இங்கிலாந்தில் உள்ள அரசினால் கம்பெனியின் செயல்முறைகளில் தலையிட முடிந்தது. பொறுப்பினை ஏற்றுக்கொள்ளும் கொள்கையை இவ் ஒழுங்குமுறைச் சட்டம் நிலைநாட்டியதோடு அல்லாமல், இந்தியாவோடு நெருங்கிய தொடர்பினை உண்டாக்கியது என்பதையும், அறிவு முதிர்ச்சியடைந்த நீதிபதிகளையும், மதியுரைஞர்களையும் கீழை நாட்டிற்கு அனுப்பியதன் மூலம் அந் நாட்டின் நிகழ்ச்சிகளைப் பற்றிய அறிவையும் பெற்றதே ஒழுங்குமுறைச் சட்டத்தினால் விளைந்த சிறப்புமிக்க பயனாகும்.

இருபதாண்டுகளுக்கு மேலாகப் பிரிட்டிஷ் பாராளுமன்றத்தில் இந்தியாவின் நிகழ்ச்சிகளே சிறப்புமிக்க பொருளாகப் பேசப்பட்டுவந்த காலத்தில், எடுத்துக்கொள்ளப்பட்ட முதல் நடவடிக்கையே ஒழுங்குமுறைச் சட்டமாகும். அதனுடைய குறைபாடுகள் விரைவிலே தெளிவாகப் புலனாயின. ஆனால், அக் குறைபாடுகளைப் போக்குவதற்குரிய செயல்முறைகளில் உடனடியாக ஈடுபடவொட்டாமல் காலந்தாழ்த்தச் செய்தது அமெரிக்க சுதந்திரப் போராகும். 1744ஆம் ஆண்டு செய்யப்பட்ட சட்டத்தினால் 1780ஆம் ஆண்டு கம்பெனியின் சிறப்புரிமைகள் பறந்துபோயின. ஆனால், இன்னும் சாரடோகா போர்க்களத்தே அடைந்த படுதோல்வியினால் தள்ளாடிக் கொண்டிருந்த நார்த்து பிரபுவின் அரசாங்கம், தீவிரமான திட்டங்கள் எதையும் புதிதாகப் பாராளுமன்றத்தின் முன்னர் கொண்டுவர விரும்பவில்லை. அதற்கு மாறாக அன்றைய நாளிலிருந்து மூன்றாண்டு அறிவிப்பின்பேரில் கம்பெனியின் சிறப்புரிமைகள் 1791ஆம் ஆண்டுவரை நீடிக்கப்பட்டன. அதே சமயத்தில் கம்பெனியின் ஆதாயத்தில் பங்குதாரர்களுக்குக் கொடுக்கக்கூடிய பங்கு வீதம் 8 விழுக்காடாக வரையறுக்கப்பட்டது. ஆனால், இவ்வாறு பாராளுமன்றம் அதை நீட்டித்துக் கொண்டு செல்ல விரும்பவில்லை. 1781ஆம் ஆண்டு இரண்டு பாராளுமன்றக் குழுக்கள் அமர்த்தப்பட்டன. பர்க்கின் தலைமையின்கீழ் நீதி நிர்வாகத்தை ஆராயுமாறு ஒரு குழு அமர்த்தப்பட்டது. டண்டாஸ் (Dundas) என்பவரைத் தலைவராகக்கொண்டு கருநாடகப் போருக்குரிய காரணங்களை ஆராய்வதற்காக மற்றொரு குழு அமைக்கப்பட்டது. சீர்திருத்தத்தைச் செய்யவேண்டும் என்று உரைத்த அறிஞரும், அச் சீர்திருத்தங்களை நடைமுறைக்குக் கொண்டுவர விரும்பிய மேலாளரும் தங்களுக்கு உகந்த பொருள்களையே தங்கள் உழைப்பிற்குரியனவாகக் கண்டனர். அதே சமயத்தில் அரசியல் நிலைபேறற்ற தன்மை நாட்டிலே உண்டானமையால்

நார்த் பிரபுவின் அமைச்சரவை கவிழக்கூடிய நெருக்கடி நிலையை அடைந்தது. அதையடுத்து 1784-ல் நடைபெற்ற பொதுத் தேர்தலில் பிட் (Pitt) வெற்றி பெற்றார். அதனுடன் அரசியல் குழப்பம் ஒருவாறு முடிவுற்றது. ஆங்கிலேயரின் அரசியலில் முதன்முதலாக இந்தியா முதன்மையான பிரச்சினையாக இடம்பெற்றது. 1783-ல் ஃபாக்ஸ்-நார்த் கூட்டு அமைச்சரவை அமைத்த காலத்து, அது முக்கியமான ஓர் அரசியல் பிரச்சினையைக் கிளப்பியது. அந்த ஆண்டின் இறுதியில் அவ் அமைச்சரவையை மூன்றும் ஜார்ஜ் மன்னர் கலைத்ததற்கு ஒரு முக்கியக் காரணமாக இருந்தது இந்தியப் பிரச்சினையேயாகும். பிட்டின் நீண்டகால அமைச்சரவையின் முதல் நடவடிக்கைக்குரிய பொருளைத் தந்துதவியதும் இந்தியப் பிரச்சினையேயாகும். பிட்டினைச் சிறந்ததோர் ஆட்சியாளராகவும், சட்டமியற்றுவோராகவும், பேரும் புகழும் பெற்றுச் சிறந்து விளங்குமாறு செய்ததும் இந்தியப் பிரச்சினையே எனில் அது மிகையாகாது. வாரன் ஹேஸ்டிங்சின் மீது துரோகக் குற்றச்சாட்டுச் சாட்டப்பட்ட காலத்தில் அது தொடர்ந்து பாராளுமன்றத்தைக் கிளர்ச்சியுறச் செய்துவந்தது. மேலும், அறநெறிக் கொள்கைகளை எடுத்து விரித்துரைப்பதற்குரிய வாய்ப்பினையும், அரசியல் கருத்துமுதற்கொள்கையின் வெளிப்பாட்டிற்குரிய வாய்ப்பினையும் அது அளித்தது எனலாம். இந்தியச் செல்வம் என்னும் மருந்தினை இங்கிலாந்து தன்னுடைய உடலுக்குள் ஊசியின்மூலம் செலுத்திக்கொண்டது. அதன் விளைவாக அதனுடலுக்குள் அரசியல் ஒருமைப்பாட்டிற்கு எதிரான மற்றோர் உடல் தோன்றலாயிற்று.

இக்காலத்திலிருந்து மூன்று உருப்படியான திட்டங்கள் வெளிப்பட்டன. டண்டாஸ் பாராளுமன்றத்தின் முன்னர் வைத்த சட்ட வரைவு முதலாவதாகும். அதில் இந்திய ஆட்சியினை மையக்குவிமுக ஆட்சியாக அமைக்க வேண்டும் என்னும் கருத்தினை அவர் தெரிவித்திருந்தார். அதைப் பாராளுமன்றம் என்றுமே கருத்துடன் ஆராய்ந்ததாகத் தெரியவில்லை. இரண்டாவது ஃபாக்சின் இந்தியச் சட்ட வரைவு குறிப்பிடத்தக்கது. உரிமையாளர்களுக்கும் இயக்குநர்களுக்கும் மேலாக ஏழு ஆணையர்களை அரசு அமர்த்த வேண்டும் என்று அவர் தெரிவித்திருந்தார். அந்த ஆணையர்களைப் பாராளுமன்றத்தின் இரு சபைகளின் இசைவைப் பெற்றுத்தான் பதவியிலிருந்து நீக்க வேண்டும் என்றும், முதன்மையான பங்குதாரர்களுக்குப் பிரதிநிதிகளாக ஒன்பது உதவி இயக்குநர்களை அமர்த்தலாம் என்றும் அவர் குறிப்பிட்டிருந்தார். இப் புதுத் திட்டத்தின்படி

இந்தியாவைப்பற்றி ஒன்றுமே அறிந்திராத ஏழுபேர்களிடம் கம்பெனியைப் போற்றிக்காக்கும் பொறுப்பையும், கொள்கைகளைத் திட்டமிட்டுச் செயலாற்றும் பொறுப்பையும் ஒப்படைத்தல் பொருத்தமற்ற செயலாகக் கருதப்பட்டது. மேலும், பதவியில் வீற்றிருக்கும் அவ் வேழுபேரும் அரசியலின் செல்வாக்குக் காரணமாக அமர்த்தப்பட்டவர்களாக இருக்கலாம். எனவே, அரசியல் நெருக்கடிக்கு அவர்கள் அடிமையாகலாம். இக் காரணங்களினால் இப் புதுத் திட்டத்தை வன்மையாக மக்கள் எதிர்த்தனர். அரசியல் ஆதரவினை இயக்குநர்களின் தனிப்பட்ட சிறுதொழில் தேட்ட ஊழல் ஈடு செய்திருக்கலாம்; இதற்கு முன்பு இருந்ததைவிட இந்தியா பேரளவில் ஊழல்கள் மலிந்த நாடாகக் காட்சி அளித்திருக்கலாம்.

மூன்றாவது பாராளுமன்ற நடவடிக்கை பிட் (Pitt) இந்தியச் சட்ட வரைவாகும். அது 1784ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் சட்டமாகப் பாராளுமன்றத்தில் நிறைவேற்றப்பெற்றது. கம்பெனியின் இந்திய உடைமைகள் முழுவதையும் உடனே அரசு எடுத்துக்கொண்டு அவற்றை நிர்வகிப்பதைப் பிட் மறுத்துவிட்டார். 1759ஆம் ஆண்டளவிலேயே கிளைவ் கம்பெனியின் உடைமைகளை அரசு எடுத்துக்கொண்டு நிர்வகிக்க வேண்டும் என்னும் கருத்தினை வெளியிட்டிருந்தார். பாராளுமன்றத்திற்குக் கம்பெனி மிகவும் கடுமையான முறையில் அடிமைப்பட்டிருக்கவேண்டும் என்று ஃபாக்ஸ் தெரிவித்த திட்டத்தையும் அவர் புறக்கணித்தார். இந்தியாவில் உள்ள கம்பெனியின் உடைமைகளின் இறைமையினைப் பற்றிய பிரச்சினையை அவர் தெளிவுபடுத்திவிட்டுச் சென்றார். ஆனால், அதே சமயத்தில் பிறருடைய உதவியும், கண்காணிப்பும் கிடைக்கவில்லையென்றால் கம்பெனி தன்னுடைய புதிய பொறுப்புகளை நிர்வகிப்பதற்குரிய திறமையற்றதாக இருந்தது. பிட் இதற்கு வழங்கிய மருந்து என்னவென்றால், அரசும் கம்பெனியும் சேர்ந்து இரட்டை அல்லது கூட்டு ஆட்சி நடத்த வேண்டும் என்பதேயாகும். இயக்குநர்கள் என்றும் போலவே உரிமையுடன் விடப்பட்டனர். அவர்கள் வாணிகத்தைக் கட்டிக்காக்கும் பொறுப்பையும், போற்றி வளர்க்கும் உரிமையையும் என்றும்போலவே பெற்றிருந்தனர். ஆனால், உரிமையாளர் மன்றம் இயக்குநர்களின் செயல்முறைகளைத் திருத்தும் உரிமையையும், தள்ளுபடி செய்யும் உரிமையையும் இழந்தது. அச் செயல்களைப் புதிய 'கட்டுப்பாட்டுக் கழகம்' (Board of Control) கவனிக்கலாயிற்று. இதனால், இந்தியாவின்

அரசியல் பிரச்சினைகளில் தீர்ப்பு வழங்கும் அல்லது மாற்றியமைக்கும் உரிமைக்கு இது ஒரு முடிவினைக் கண்டது எனலாம். இவ்வாறு உரிமையாளர்கள் இந்திய அரசியல் மேடையிலிருந்து போற்றுதலின்றி மறைந்துபோயினர். புதிய இரட்டை ஆட்சிமுறை அரசியல் துறையில் மிகவும் ஆற்றலுடையதாக விளங்கியது. தேர்தல் காலத்தில் மட்டும் அல்லாமல் மற்றச் சமயங்களில் உரிமையாளர்களின் மன்றத்தால் ஆட்டிப் படைக்கப்படாத நிலையில் இருந்த இயக்குநர்கள் கம்பெனியின் பங்குதாரர்களில் செம்பாதியாக இருந்தனர். கட்டுப்பாட்டுக் கழகம் கம்பெனியின் பங்குதாரர்களைக் கொண்ட மற்றொரு பாதியாக அமைக்கப்பெற்றது. இந்தக் கட்டுப்பாட்டுக் கழகத்தில் ஊதியம் பெறாத ஆறு பிரிவி கவுன்சிலர்கள் இடம் பெற்றனர். அவர்களுள் ஒருவர் முடிவு வாக்கினை நல்கும் உரிமையுடைய தலைவராக அமர்த்தப்பட்டார். உண்மையில் தலைமைப் பேறுமிக்க டண்டாசின் நெறிப்படுத்தும் பண்பினாலும், பிட்டினுடைய ஆதரவினாலும் இத் தலைவர் விரைவில் கிழக்கு இந்தியக் கம்பெனியின் செயல்முறைகளைக் கண்காணிக்கும் அமைச்சராக மாறினார். கழகத்திற்கு எத்தகைய ஆதரவும் கிடையாது. வாணிகச் செயல்முறைகளில் அது தலையிடுவதும் இல்லை. ஆனால், அதற்கு 'கம்பெனியின் எல்லாச் செயல்களையும், செயல்முறைகளையும், தொடர்புகளையும் கண்காணிக்கும் பொறுப்பும், நெறிப்படுத்தும் உரிமையும், கட்டுப்படுத்தும் அதிகாரமும் இருந்துவந்தன. அதாவது, பொதுத்துறை சார்பான அல்லது படைத்துறை சார்பான அரசாங்கச் செயல்களையும், கிழக்கு இந்தியத் தீவுகளில் உள்ள பிரிட்டிஷ் குடியேற்றநாட்டு உடைமைகளையும், அவற்றிலிருந்து கிடைக்கும் வருவாய்களையும் கம்பெனி நிர்வகிக்கும்பொழுது, அதைக் கண்காணிக்கும் பொறுப்பும், நெறிப்படுத்தும் உரிமையும், கட்டுப்படுத்தும் அதிகாரமும் அக் கழகத்திற்கு அளிக்கப்பட்டன.' கட்டுப்பாட்டுக் கழகம் எல்லா வகையான கடிதப் போக்குவரத்துகளையும் தானே ஏற்றுக் கவனித்துவந்தது. அவற்றைத் திருத்தவும் மறுக்கவும் அதற்கு அதிகாரம் கொடுக்கப்பட்டிருந்தது. இயக்குநர்களின் இசைவினைப் பெறுமலேயே அதனுடைய ஆணைகளை இந்தியாவில் உள்ள கம்பெனிக்கு அனுப்புமாறு வற்புறுத்தும் அளவிற்கு அக் கழகம் உரிமைகள் பெற்றிருந்தது. ஒளிமறைவான செயல்முறைகளைக் கண்காணிப்பதற்கு அக் கழகத்தில் மூன்று இயக்குநர்களைக்கொண்ட ஓர் இரகசியக் குழுவுடன் தொடர்பு கொண்டிருந்தது. அக் குழுவின் செயல்முறைகள்

மற்ற இயக்குநர்களுக்குத் தெரியவொட்டாமல் கருத்துடன் காக்கப்பட்டு வந்தன.

இந்தியாவிலும் நேர்முகக் கட்டுப்பாடாகிய இம் முறையே பின்பற்றப்பட்டது. அதைப்போன்றே அங்கும் இறுக்கமான ஆட்சியமைப்பு நிறுவப்பட்டது. இயக்குநர்களால், கவர்னர்-ஜெனரல் பதவியில் அமர்த்தப்பட்டார். ஆனால், அவரைத் திரும்பத் தாயகத்திற்கு அழைத்துக்கொள்ளும் உரிமை—அதாவது, பதவியில் இருந்து நீக்கும் உரிமை அரசுக்கும், இயக்குநர் மன்றத்திற்கும் வழங்கப்பட்டது. ஆங்கிலேயப் பொதுமக்களை கவர்னர்-ஜெனரலின் ஆலோசனை மன்றத்தின் உறுப்பினர்களாக அமர்த்தும் பரிசோதனை முறை கைவிடப்பட்டது. அந்த ஆலோசனை மன்றத்தின் உறுப்பினர் எண்ணிக்கையும் மூன்றாகக் குறைக்கப்பட்டது. அம் மூவருள் படைத்தலைவர் ஓர் உறுப்பினராவர். போர், வருவாய்த்துறை, அரசியல் சூழ்ச்சித்திறன் ஆகிய துறைகளில் பம்பாயும், சென்னையும் செயற்படும் முறைகளைக் கண்காணிக்கவும் கட்டுப்படுத்தவும் கல்கத்தாவிற்கு அதிகாரம் வழங்கப்பட்டது. மேலும், மாநில ஆலோசனை மன்றங்களின் உறுப்பினர்களும் மூவராகக் குறைக்கப்பட்டனர். அதே சமயத்தில் 'இந்தியாவில் நாடுகளைக் கைப்பற்றும் திட்டமும், கம்பெனியின் அரசினை விரிவுபடுத்தும் திட்டமும் மேற்கொள்ளப்படுமானால், அது இந்த தேசிய இனத்தின் விருப்பத்திற்கும், மதிப்பிற்கும், கோட்பாட்டிற்கும் ஊறு விளைவிப்பதாகும்' என்று அச் சட்டம் அறிவித்தது. கவர்னர்-ஜெனரலும், அவருடைய ஆலோசனை மன்றமும் இயக்குநர் மன்றத்தின் அல்லது ஒளிமறைவுக் குழுவின் வெளிப்படையான அதிகாரத்தைப் பெறுமல் போரிடத் துணிவதும், நாட்டைக் கைப்பற்றும் வன்முறைச் செயல்களில் ஈடுபடுவதும் தடை செய்யப்பட்டன. கவர்னர்-ஜெனரலுக்குத் தம்முடைய ஆலோசனை மன்றத்தின் கருத்தினைப் புறக்கணித்து நடப்பதற்குரிய அதிகாரத்தையும், ஒரே மனிதரிடத்து கவர்னர்-ஜெனரல் பதவியும், படைத்தலைவர் பதவியும் ஒன்றுக இணைந்து விளங்கக்கூடிய வாய்ப்பினையும் அளித்தது பிட் இந்தியச் சட்டத்தின் திருத்த மசோதாக்கள். இவ்வாறு பிட் இந்தியச் சட்டம் ஒரு முழுமை வடிவினைப் பெற்றது. இத் திட்டங்களின் முதல் விதியையே காரன்வாலிசு கவர்னர்-ஜெனரல் பதவியை ஏற்றுக்கொள்ளுவதற்கு ஒரு நிபந்தனையாக அறிவித்தார். அவ் வதிகாரம் பிரிட்டிஷ் இந்தியாவின் திறமைமிக்க ஆளுநராக கவர்னர்-ஜெனரலைச் சிறப்புற்று விளங்குமாறு செய்தது எனலாம். மேலும், வாரன்

ஹேஸ்டிங்ஸ் அனுபவித்த தொல்லைகளும் துன்பங்களும் மீண்டும் திரும்பாதவாறு அச் சட்டம் தடுத்தது. கவர்னர்-ஜெனரலும் ஆலோசனை மன்றமுமாக இருந்த நிலைமாறி ஆலோசனை மன்றத்தில் கவர்னர்-ஜெனரல் என்னும் நிலைமை உண்டாயிற்று. இந் நிலையே 1947 ஆம் ஆண்டுவரை நீடித்து வந்தது.

இவ்வாறு அமைக்கப்பட்ட இரட்டை ஆட்சி முறை 1857 ஆம் ஆண்டு சிப்பாய்க் கலகம் நடைபெற்ற வரையில் தொடர்ந்து நடைமுறையில் இருந்துவந்தது. இரட்டை ஆட்சியின் வெளிப்படையான குறைபாடுகளே நடைமுறையில் அம் முறையின் வெற்றிக்குரிய மறைபொருளாக அமைந்தன. அக்காலத்தில் இந்தியாவிற்குத் திறமைமிக்க ஆட்சியியல் பணித்துறையினைத் (Civil Service) தந்துதவக்கூடிய வசதி உள்துறை அமைச்சரவைக்கு வாய்க்கவில்லை; அதே சமயத்தில் கம்பெனிக்கு அரசு உதவி செய்யவில்லை என்றால், அதனுடைய ஊழியர்களிடத்து நேர்மையையும் திறமையையும் நிலைநாட்டுவதற்குரிய ஆற்றலற்றதாகவே கம்பெனி இருந்திருக்கும். ஆட்சிமுறையினை நன்கு அறிந்தவர்களிடத்து இவ் இரட்டை ஆட்சிமுறை ஆட்சியினை ஒப்படைத்தது. ஆனால், கட்டுப்பாட்டுக் கழகம் என்னும் வடிவில் பாராளுமன்ற ஆதரவைப் பெற்ற கண்காணிப்பாளர் ஒருவரைத் தாயகத்தில் அம்முறை அமர்த்தியது. அதே சமயத்தில் இந்தியாவிலும் ஒரு மேற்பார்வையாளர் அமர்த்தப்பட்டார். அவரே கவர்னர்-ஜெனரலாவார். அவருடைய அதிகாரம் உள்நாட்டாரின் செல்வாக்கினால் அசைக்க முடியாததாகவும், உள்நாட்டாரின் எதிர்ப்புகளைக் கண்டு அஞ்சாததாகவும் இருந்தது. வழக்குகளும் பூசல்களும் இருக்கத்தான் செய்தன. ஆனால், அவற்றைப்பற்றி இறுதியாக முடிவிற்கு வரும் உரிமை அமைச்சரவைக்கே உரியது என்று கருதும் நல்லெண்ணம் வாய்க்கப்பெற்றவர்களாக இயக்குநர்கள் இருந்தனர். அதனால் கருத்து மாறுபாடு உண்டாகுமானால், இறுதியில் அது விட்டுக்கொடுத்து உடன்பாடு காண்பதாலேயே வழக்கமாக முடிவதாயிற்று. கொள்கை அளவில் பகைமை இருந்து வந்தாலும் கூட்டமைப்பு நன்கு பணிபுரிந்தது. ஆனால், இந்தியாவில் பிரிட்டிஷாரின் ஆதிக்கம் வளர்ச்சியுற்றது; அரசாங்கத்தின் செல்வாக்குப் பெருகியது. அதற்கேற்ப இயக்குநர்களின் அரசியல் ஆதிக்கம் நலிந்தது. கவர்னர்-ஜெனரல் பதவிக்கு ஆட்களை அமர்த்துகின்றபொழுது அடிக்கடி கருத்து மாறுபாடு உண்டாவதும், பின்னர் ஒரு கட்சியினர் விட்டுக்

கொடுத்து உடன்பாடு காண்பதும் இயல்பாகப் போயிற்று. மெட்காப்பினை வேண்டாமென்று எதிர்த்து நின்றதைப் போன்று இயக்குநர்கள் தங்களுக்கு விருப்பமில்லாத மனிதர் கவர்னர்-ஜெனரலாக்கப்படுவதை எதிர்த்துவந்தனர். ஆனால், அவர்கள் பேரிடர்ப்பாட்டிற்கு இடையேதான் வெல்லஸ்லி யைப் பதவியிலிருந்து விலக்குவதற்கு—நாடு திரும்புமாறு அவரை அழைக்கும் உரிமையைப் பெற்றனர். 1844ஆம் ஆண்டு பீலின் (Peel) அமைச்சரவை எல்லன்பரோவின்மீது நம்பிக்கை இழந்த காரணத்தினால்தான், அவர்கள் எல்லன் பரோவைத் திரும்பிவருமாறு எளிதில் அழைக்க முடிந்தது. உள்துறை அரசுக்கு இந்திய நாட்டுக் கொள்கையில் தொடர்ந்து செல்வாக்கும், இறுதியில் கட்டுப்படுத்தும் அதிகாரமும் கிடைத்தமையே முதன்மையான விளைவு என நாம் கூறலாம். இந்தியாவைப் பொறுப்பற்ற முறையில் சுரண்டிக்கொண்டிருந்த நாட்கள் மறைந்துபோயின. அவ் விடத்தில் இந்திய அரசாங்கத்திற்காகப் பாராளுமன்றம் ஏற்கவேண்டிய பொறுப்பினையும், இந்திய மக்களுடைய நலனைப்பற்றிப் பாராளுமன்றம் கருத்தைச் செலுத்த வேண்டிய கடமையையும் நன்கு வரையறுக்கப்பட்டதோடு அல்லாமல், செயற்படுத்துவதற்கும் உரிய வழிவகைகளும் தெளிவாக வரையறுக்கப்பட்டன. பிட்டின் திட்டமிடும் மதி நுட்பமும், டண்டாசின் மேற்பார்வையிடும் செயல் திறனும், பர்க்கினுடையது என்று வெளிப்படையாகக் கூறப்பட்ட கருத்துமுதற்கொள்கையை ஆற்றல்மிக்கதாகச் செய்வதில் ஈடுபட்டிருந்த ஃபாக்சின் சரளமான பேச்சுத் திறனைக் காட்டிலும் பேராற்றல் வாய்ந்தனவாக இருந்தன.

வாரன்ஹேஸ்டிங்ஸ்மீது சாட்டப்பட்ட துரோகக் குற்றச் சாட்டில் இந்திய மக்களின் நலன்களைக் கருதவேண்டிய அறவியல் பொறுப்பினைப் பாராளுமன்றம் பெற்றதே வாதத்திற்குரிய தலைமைக் கருத்தாக இருந்துவந்தது. சர் ஃபிலிப்பு ஃபிரான்சிஸ்ஸின் வெறுப்பும், பர்க்கு அறப்போர் புரிவதில் கொண்ட ஆர்வமும் கலந்த உணர்ச்சிகளே அக் குற்றச்சாட்டை மேற்பார்வையிட்டவர்களை ஆட்டிப் படைத்தன. பர்க்கிற்குத் தனிப்பட்ட வகையில் இருந்துவந்த தீராப்பகையும் இதற்குக் காரணம் என்பது இங்குக் குறிப் பிடத்தக்கதாகும். இருந்தபோதிலும் ஆங்கிலேய மக்களின் பொது வாழ்க்கையில் ஒழுக்கநெறிக் கொள்கைகள் கடைப் பிடிக்கப்படுவதைப் போன்ற அளவிற்கு இந்திய மக்கள் வாழ்விலும் அவை நிலவவேண்டும் என்னும் நம்பிக்கை

வெறுப்புணர்ச்சிகளுக்கும் வசைமாரிகளுக்கும் பின்னல் படர்ந்திருந்தது. மேலைநாடுகளில் தவருனவை என்று கருதப் படுபவை, கீழைநாடுகளில் நல்லனவாக ஆகிவிடாது என்பதை அனைவரும் வலியுறுத்தி வந்தனர். ரோகில்லர் போர்பற்றிய வழக்கில் வாரன்ஹேஸ்டிங்சிற்கு ஆதரவு தந்துதவிய பிட்டு, வாரணுசியைச் சேர்ந்த செய்ட்சிங்கு வழக்கில் தம்முடைய ஆதரவை ஹேஸ்டிங்சிற்கு அளிக்காமல் போனதற்குரிய காரணமும் இதுவேயாகும். இத்தகைய அறவுணர்வே பிட்டை உதவி செய்யாதவாறு தடுத்தது. பிரபுக்கள் சபை யின் முன்னர் வாரன்ஹேஸ்டிங்ஸ் 23 குற்றங்கள் சாட்டப் பட்டு நிறுத்தப்பட்டார். 1787ஆம் ஆண்டு வெஸ்ட் மினிஸ்டர் மன்றத்தில் பெருங்கிளர்ச்சிக்கு இடையே விசாரணை தொடங்கப்பெற்றது. ஆறு ஆண்டுகளுக்கு வழக்கு விசாரணை இழுத்துச் செல்லப்பட்டது; இறுதியில் எல்லா வகையிலும் ஆராய்ந்து பார்க்கின்றபொழுது ஹேஸ்டிங்ஸ் குற்றவாளி யன்று என்று தீர்ப்பளிக்கப்பட்டு விடுதலை செய்யப்பட்டார். அதற்குள் நாடு நெடுங்காலமாகத் தொடர்ந்து நடைபெறும் ஃபிரெஞ்சுப் புரட்சியால் உண்டான போர்களில் ஈடுபட்டு விட்டது. எனவே, இவ் வழக்கு விசாரணையில் பொதுமக்கள் காட்டிய ஆர்வமும், கொண்டிருந்த ஈடுபாடும் நெடுங்காலத் திற்கு முன்னரே குன்றிப்போய்விட்டன. ஹேஸ்டிங்ஸ் குற்ற மற்றவர் என்று தீர்ப்பளிக்கப்பட்டாலும், பொருள் வசதி யற்றவராக அவர் அல்லற்படும்படி விடப்பட்டார். மேலும், வேலை வாய்ப்புகள் பெற்றுப் பணிபுரியும் வாய்ப்பையும், பொதுமக்களின் மதிப்பையும், சிறப்பையும் பெறவொட் டாமல் அவர் தடைசெய்யப்பட்டார். அவர் தம் எஞ்சிய வாழ்நாளின் நீண்ட பகுதியை, தாம் பெரிதும் விரும்பிய டேல்ஸ்ஃபோர்டு (Daylesford) என்னுமிடத்தில் ஓய்வுபெற்றவ ராகவே கழித்து வந்தார். இறுதியாக 1813ஆம் ஆண்டு இயற்றப்பட்ட பட்டயச் சட்டத்தின் விவாதக் கூட்டத்தில், மக்கள் சபைமுன்னர் அவர் சான்றுரைத்தார். உடனே, மக்கள் சபை அவருக்குப் பாராட்டுத் தெரிவித்துப் போற்றிப் புகழ்ந்தது. இவ்வாறு அவர் தம்முடைய வாழ்நாளின் இறுதிப் பகுதியில் பாராளுமன்றத்தின் பாராட்டுதலைப் பெற்ருர். முரட்டுத்தனமான முறையில் அல்லது கொடுமை யான முறையிலேயே அவருக்கு நீதி வழங்கப்பட்டது என்பதை நாம் ஒப்புக்கொள்ள வேண்டும். ஆனல், ஏதோ ஒரு வகையான நீதி வழங்கப்பட்டது என்பதை நாம் மறுப் பதற்கில்லை. ஹேஸ்டிங்சின் திறமை மற்ற மனிதர்களுடைய தைக்காட்டிலும் சிறப்புற்று விளங்கியதைப் போன்று சிறிய

மனிதர்கள் பலருடைய குற்றங்களைக் காட்டிலும் ஹேஸ்டிங்சினுடைய குற்றங்கள் சிறியதாக இருந்தபோதிலும், ஒழுங்கற்ற ஆட்சிக்குரிய பொறுப்பும், தான்தோன்றித்தனமான செயல்முறைகளுக்கு உரிய பொறுப்பும் தலைமைப் பதவியில் இருக்கின்றவர்கள்மீதுதான் சுமத்தப்படுமே ஒழிய, சிறு மனிதர்கள்மீது சுமத்தப்படுவது முறையாகாது. அதே சமயத்தில் அவருடைய தொண்டின் சிறப்பும், குறைபாடுகளின் மண்ணுலக மைய ஈர்ப்பும் அறிந்து போற்றப்பட வேண்டிய தேவை ஏற்பட்டது. அவருடைய அரசின் செயல் முறைகளினால் உண்டான குறைகள் அனைத்தையும் மன்னித்து விட்டமைக்கு அவரை முழுவதும் கண்டித்துரைப்பது நேர்மையற்ற செயலாகும். அவரைப் புகழ்ந்து பாராட்டவும் பழித்து ஒதுக்கவும் வேண்டும் என்று நீதி வேண்டியது. குற்றம் சாட்டப்பட்ட குற்றச்சாட்டு, பழிவாங்கும் நோக்குடையதாகவும், விசாரணையின் கால நீடிப்பு சொல்லொணாத் துன்பத்தை அவருக்குத் தந்தமையும் உண்மையிலேயே அவரைப் பழித்தும் புகழ்ந்தும் உரைக்கவேண்டும் என்று நீதி வேண்டியது என்று கூறினால் அது மிகையாகாது. நீதித் துறையின் வடிவங்களில் ஒன்றாக விசாரணைச் செயல்முறைகளைக் கருதுவோமானால் அவை மானக்கேடானவை; துரோகக் குற்றச்சாட்டினை ஒரு சட்டவியல் முறை என்பதற்கு அவ் வழக்கு விசாரணை சாவுமணி அடித்தது என்றே சொல்லலாம். ஆனால், வாரன்ஹேஸ்டிங்ஸ்மீது சாட்டப்பட்ட குற்றங்களும், மேலான வளமிக்க வாழ்க்கைக்குரிய வாய்ப்புகளை எதிர்காலத்தில் அவரை இழக்குமாறு செய்தமையும் பொதுவாகக் கம்பெனி ஊழியர்களுக்கு ஓர் எச்சரிக்கையாக அமைந்தது. ஒவ்வோர் ஊழியனும் தன்னுடைய செயல்கள் பிற்காலத்தில் ஆராயப்பட்டு, தான் செய்த தவறுகளுக்குச் சான்றுகள் காட்டிக் குற்றம் சாட்டப்படலாம் என்ற அச்சத்தோடு கம்பெனியில் பணிபுரியுமாறு தூண்டியது இவ் வழக்கு. பிற்காலத்தில் ஹேஸ்டிங்ஸ் விடுதலை செய்யப்பட்டதும், பாராளுமன்றம் அவரைப் போற்றிப் பாராட்டியதும் நாட்டிற்காகப் பணிபுரிவதால் பெறப்படும் மதிப்பும் திறமையும் எடுத்து விளக்கப்பட்டன. நாட்டிற்காக உழைக்கின்றபொழுது தான்தோன்றித்தனமாகச் சில செயல்களைச் செய்திருந்தபோதிலும், உண்மையாகப் பணியினைச் செய்திருந்தால் அதை நாட்டு மக்கள் கண்டால் போற்றாமல் இருக்க மாட்டார்கள் என்பது இதனால் புலனாகின்றது.

மூன்றுண்டுகளுக்கு முன்பே எச்சரிக்கப்பட்டதும் நடைமுறையில் இருந்துவந்ததுமான பட்டயச் சட்டம் 1794ஆம் ஆண்டில் காலாவதியாயிற்று. இப் பட்டயச் சட்டத்தைப் புதுப்பிக்கவேண்டும் என்பதற்காகக் கருதப்பட்ட நிபந்தனைகளால் இதற்குப் பின்னர் என்றுமே கேட்டிராத அளவிற்கு இந்தியச் செயல்முறைகளில் கருத்தைப் பாராளுமன்றத்தினர் ஒருமுகமாகச் செலுத்தினர். பாராளுமன்றக் குழுக்கள் சான்றுகளைத் திரட்டி, அவற்றை அடிப்படையாகக் கொண்டு அறிக்கைகளை இரு சபைகளின் முன் வைத்தன. இவற்றையடுத்து நடைபெற்ற வாதங்கள் மக்களுடைய அதிகமான காலத்தையும் கருத்தையும் கவர்ந்தன. அடுத்துக் கம்பெனி நிலைபெற்றிருந்த எஞ்சிய காலம் முழுவதிலும் இருபதாண்டுகளுக்கு ஒருமுறை பட்டயச் சட்டம் முறையாகப் புதுப்பிக்கப் பட்டு வந்தது. இந்தியச் செயல்முறைகள்பற்றியும், இந்திய அரசாங்கத்தைப்பற்றியும் நடத்தப்பட்ட மாபெரும் ஆய்வு இவ்வாறு பருவந்தோறும் நடைபெற்றுவரத்தொடங்கின. சட்டமன்ற நடவடிக்கைகளில் மாற்றங்களுக்காக இது முதல் நிலைப் பணியைச் செய்தது. சட்டமன்றச் சட்டங்கள் இவ்வாறு எளிதில் வேறுபடுத்தி உணருவதற்கு வாய்ப்பு அளித்தது. பிரிட்டனில் இந்திய நாட்டைப்பற்றிக் கொண்டிருந்த கருத்துகள் பையப்பைய மாறிவருவதற்குரிய எளிய சான்றுகச் சொற்போர்கள் அமைந்தன. அதனால் இந்திய நாட்டுக் கொள்கையிலும் அதனுடைய செல்வாக்கு ஆழப் பதிந்தது எனலாம். மற்றப் பட்டயச் சட்டங்கள் இயற்றப் பட்டதனால், அரசாங்கத்தின் பல்வேறு துறைகளிலும் உண்டான விளைவுகளைப்பற்றி ஆராய்வதற்கு முன்பு நாம் இதைத் தொடர்ந்து இயற்றப்பட்ட பட்டயச் சட்டங்களைப்பற்றி சுருக்கமாகக் காண்போம். பிட் தம்முடைய அதிகாரத்தின் உச்சநிலையில் இருந்த காலத்தில், 1793ஆம் ஆண்டின் சட்டம் இயற்றப்பட்டது. அச் சமயத்தில்தான் பிரிட்டன் ஃபிரெஞ்சுப் புரட்சிப் போர்களில் இறங்கிக்கொண்டிருந்தது; அப்பொழுதுதான் காரன்வாலிசு முதல் தடவை கவர்னர்-ஜெனரலாகப் பணிபுரிந்துவிட்டு ஓய்வுபெற்றுர். இச் சட்டத்தில் நம்பிக்கையில்லாத் தீர்மானம் கொண்டு வருவதற்கு உரிமை நல்கும் ஒரு விதி இப் புதிய முறையில் சேர்க்கப்பட்டிருந்தது. மற்றபடி இதில் செய்யப்பட்ட மாற்றங்கள் மிகச் சிலவேயாகும். புதிதாக அமைத்தல் என்பதற்குப் பதிலாக வலுப்படுத்துதல் என்பதே இச் சட்டத்தின் உயிர்நாடியாக இருந்தது. தடையிலா வாணிகத்தைப்போற்றி ஆதரித்தவர்களின் கருத்துகள் கம்பெனியால்

எதிர்க்கப்பட்டு வந்தன. கிறித்துவச் சமயத் தொண்டர்களின் மாநாட்டைக் கூட்டவேண்டும் என்று வில்பர்போர்சு வேண்டிக்கொண்டதைக் கம்பெனி மறுத்துவிட்டது. கம்பெனி தன்னுடைய வாணிகச் சிறப்புரிமைகளை நன்முறையில் பயன்படுத்தி வாணிகத்தைச் செம்மையாகச் செய்வதில் கண்ணும் கருத்துமாக இருந்துவந்தது.

1813ஆம் ஆண்டில் ஃபிரெஞ்சுப் போர்கள் தொடர்ந்து நடந்துவந்தன. ஆனால், போரின் முடிவு கண்ணுக்குப் புலனாகக்கூடியதாக இருந்தது. வெல்லஸ்லியின் நாடுபிடிக்கும் வன்முறைச் செயல்களினால் நாடு கிலியடைந்திருந்தது. மேலும், அதனால் உண்டான பொருளாதார எதிர் விளைவுகளும், ஆட்சித்துறை, நீதி நிர்வாகத்துறை ஆகிய இரு துறைகளிலும் உண்டான ஆட்சிமுறைக் குறைபாடுகளும் மக்களுடைய கருத்தைக் கவர்ந்தன. 1808ஆம் ஆண்டில் விசாரணை தொடங்கியது; இதற்கு முன்பு நடைபெற்றவற்றைவிட அது மிக விரிவானதாக இருந்தது; எனவே, அது நெடுங்காலம் இழுத்துப்பறிக்கப்பட்டு வந்தது. ஆனால், முன்னர் வெளியிடப்பட்ட அறிக்கைகளைக் காட்டிலும் இச்சமயம் வெளியிடப்பட்ட அறிக்கை விரிவானதாகவும் பலவகைப் பிரச்சினைகளைத் தெளிவாக எடுத்துரைப்பதாகவும் இருந்தது; இவ் அறிக்கையை அடிப்படையாகக்கொண்டு நடத்தப்பெற்ற வாத விவாதங்களில் உணர்ச்சிவயப்படுதல் குறைந்ததாகவே இருந்தது. வங்காளத்தின் வருவாய்த்துறை நீதி நிர்வாகத் துறைபற்றி 1812ஆம் ஆண்டில் வெளியிடப்பட்ட ஐந்தாவது அறிக்கை இந்திய ஆட்சிமுறைபற்றிய முதன்மையான பண்டை இலக்கிய நலம் உடையதாக விளங்கத் தொடங்கியது. போர்ச் சூழ்நிலைகளினால் உண்டான கொடிய நெருக்கடி இருந்தபோதிலும், இருபதாண்டுகளில் எவ்வாறு சூழ்நிலை மாறிவிட்டது என்பதை 1813ஆம் ஆண்டில் இயற்றப்பட்ட சட்டம் தெளிவாகக் காட்டியது. கம்பெனிக்கு இன்னும் இருபது ஆண்டுகள் குத்தகையாக உயிர் கொடுக்கப்பட்டது. இந்திய வாணிகத்தில் கம்பெனிக்கே இருந்துவந்த முற்றுரிமையைத் தடையிலா வாணிகக் கோட்பாட்டினர் உடைத்தெறிந்தனர். இதன்மூலம் இந்தியப் பொருளாதார வரலாற்றில் புதியதோர் இயலினை அவர்கள் தொடங்கி வைத்தனர். அதனால் உடனடியாக உண்டான விளைவு அத்துணைப் பெரியதாகத் தோன்றவில்லை. ஆனால், இம் மாற்றம் பிற்காலத்திய வாணிகத் தொழில்துறை முன்னேற்றங்களுக்கு அடிகோலியது எனலாம். இம்

முன்னேற்றங்களும் வளர்ச்சியும் இந்தியாவைத் தொழில்வள நாடுகளின் முன்வரிசையில் சிறப்புற்று விளங்குமாறு செய்தது. மீண்டும் வில்லியம் வில்பர்போர்சினுல் தலைமை தாங்கி நடத்தப்பெற்ற நல்வாழ்வின் வீரத்திருத் தொண்டர்கள், கிறித்துவ சமயத் தொண்டர்கள் இந்தியாவில் சென்று பணிபுரிவதற்குரிய உரிமையையும், ஒரு பாதிரி யாரின் தலைமையில் திருச்சபையை நிறுவுவதற்கும், அவருக் குத் துணையாக மூன்று துணைப் பாதிரிமார்கள் பணிபுரிவதற் குரிய உரிமையையும் அது வழங்கியது. 'இந்தியாவிலுள்ள பிரிட்டிஷ் குடியேற்ற நாட்டின் மக்களுடைய நல்வாழ்வினையும் ஆர்வத்தையும் போற்றியாதரிப்பது இந் நாட்டின் கடமை யாகும். அவர்களுக்குப் பயன் விளைவிக்கத்தக்க அறி வினையும், சமயத் துறையிலும் ஒழுக்கத் துறையிலும் முன் னேற்றத்தை அளிக்கத்தக்க கருத்துகளையும் கொள்கை களையும் புகுத்துவதற்குரிய திட்டங்களை நாம் மேற்கொள்ள வேண்டும்'[1] என்று ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. இங்கு உண்டான உடனடி விளைவு மிகச் சிறியதேயாகும். மிக முக்கியத்துவம்வாய்ந்த வளர்ச்சிகளுக்கும் முன்னேற்றங் களுக்கும் உரிய வழி இதனுல் வகுக்கப்பட்டது.

1833ஆம் ஆண்டு இயற்றப்பட்ட சட்டத்துக்குரிய வாதங்கள், முதல் பர்மியப் போரினுல் உண்டான செலவு களால் நிதிநிலை நெருக்கடி உண்டானதைப்பற்றியதாக அமைந்தன. அதைப்பற்றிக் கருத்தைச் செலுத்திய காலத்தில் இச் சட்டத்திற்குரிய அடிப்படைப் பிரச்சினைகள் ஆராயப் பட்டன. ஆனுல், பெண்டிங்கின் சிக்கனக் கொள்கை வெற்றி பெற்றமை, கம்பெனியைக் குறைகூறிவந்தோரின் வாய்களை அடைத்துவிட்டது. ஒருகால் அதனுடைய வாழ்நாளை நீட்டிப் பதற்கும் அது பயன்பட்டிருக்கலாம். அச் சட்டம் இயற்றப் படுவதற்கு முன்பு விக்குகள் (Whigs) ஆட்சிக்கு வந்தனர். அவர்கள் ஆட்சியுரிமையைக் கைப்பற்றியமை பிரிட்டனின் அரசியலில் புதியதொரு சகாப்தத்தைத் தொடங்கிவைத்தது. சிறப்புமிக்க சீர்திருத்தச் சட்ட வரைவு 1832ஆம் ஆண்டு சட்ட மாக்கப்பட்டது. விரிநிலைக் கொள்கையினரின் (Liberals) கருத்துகளும், பெந்தாமியக் கருத்துகளும் அச் சட்டத்தில் பேரிடம் பெற்றிருந்தன. இந்தியாவில் வாணிகத்துறை பிரதி நிதியாகக் கம்பெனி இருந்துவந்த நிலை மறைந்துபோயிற்று.

[1] 1813ஆம் ஆண்டுச் சட்டத்தின் அடிப்படையாக இருந்த இறுதியான பதின்மூன்ருவது தீர்மானம்.

ஆனால், அரசின் அரசியல் பிரதிநிதியாகவே கம்பெனி நிலைத்து நிற்கலாயிற்று. கம்பெனியின் உடைமைகள் அனைத்தும் 'மாண்புமிக்க அரசருக்காகவும், அவருடைய வாரிசுகளுக்காகவும், அவருக்குப்பின் அரசர்களாகப் பதவியேற்கப் போகின்றவர்களுக்காகவும், இந்திய அரசாங்கத்தின் பணிக்காகவும் பொறுப்பு நிறுவனமாக' அமைக்கப்பட்டது. மையக் குவிமுக ஆட்சியை நிறுவுவதில் மற்றொரு படி முன்னேற்றம் காணப்பட்டது. சட்டத்தின் புதிய கருத்துகள் வரையறுக்கப் பட்ட சட்ட உரிமைகளைச் செயற்படுத்தும் பயனை அளித்தது. நாட்டிலே நிலவிய ஐந்து வகையான சட்டமுறைகளைத் தொகுத்து, ஒரேவகையான சட்டத் தொகுப்பினை உண்டாக்குவதற்குச் சட்டவியல் ஆணைக் கழகம் (Law Commission) ஒன்று நிறுவப்பெற்றது.[1] அக் கழகத்தின் மிக முதன்மையான புகழ்மிக்க உறுப்பினராக மெக்காலே விளங்கினார். இக் கழகத்தினால் கிடைத்த மிகச் சிறந்த பயன் இந்தியக் குற்றத் தண்டனை விதித் தொகுப்பு (Indian Penal Code) ஆகும். அது 1860ஆம் ஆண்டு நடைமுறைக்குக் கொண்டுவரப்பட்டது. அதனுடன் சிவில் சட்டத் தொகுப்பும், குற்றவியல் சட்டத் தொகுப்புகளும் நடைமுறைக்குக் கொண்டுவரப்பட்டன. இன்றைக்கு இந்தியப் பொதுச் சட்டம் என்று போற்றப் படுகின்ற சட்டத்தின் வளர்ச்சிக்கு இச் சட்டம் இவ்வாறு தோற்றுவாய் செய்துவைத்தது. இவ்வாறே கவர்னர்-ஜெனரலுக்குச் சட்டமியற்றும் உரிமைகள் வழங்கப்பெற்றன. அவருடைய ஆலோசனை மன்றத்திற்குப் புதிதாக—நான்காவதாக—ஓர் உறுப்பினர் சேர்க்கப்பட்டார். அவர் சட்டவியல் உறுப்பினர் என்று அழைக்கப்பட்டார். மெக்காலே என்பவர் இவ்வகையில் முதல் உறுப்பினராக அமர்த்தப்பட்டார். இச் செயல் சட்டமன்ற நடவடிக்கைகளை இந்தியாவில் தொடங்கி வைத்தது எனலாம். இதன் வழி வந்தனவே இந்தியாவிலும் பாகிஸ்தானத்திலுமுள்ள இறைமைப் பண்புமிக்க பாராளு மன்றங்களாகும். கலகத்திற்கு முன்பு இறுதியாக இயற்றப் பட்ட சட்டம் 1853ஆம் ஆண்டில் இயற்றப்பட்டதாகும். அச் சட்டம் டல்ஹௌசியினுடைய ஆட்சியின் மாண்புமிக்க காலத்தில் இயற்றப்பட்டது. அதில் ஒரு சில மாற்றங்கள்தாம் செய்யப்பட்டன. கம்பெனி அரசினுடைய பிரதிநிதி என்பதைத் தொடர்ந்து அச் சட்டம் போற்றியாதரித்தது. அது சட்டவியல் ஆணைக் கழகத்தின் பணியினை முற்றுப்பெறச்

[1] C. P. Ilbert என்பவர் எழுதியுள்ள 'The Government of India' என்னும் நூலின் 83-84ஆம் பக்கங்களைப் பார்க்க.

செய்தது.[1] ஒப்பந்தப் பணிமுறையைக் கம்பெனிமட்டும் போற்றி ஆதரிப்பதை ஒழித்துவிட்டு, திறந்ததொரு போட்டி நடத்தி அதன்மூலம் ஆட்களைத் தேர்ந்தெடுக்கும் முறையினை அச் சட்டம் புகுத்தியது. அதுவே பழைய முறையினின்று வேறுபட்ட ஒன்றாகும். காரன்வாலிசினால் பொதுவகையாகத் தோற்றுவிக்கப்பட்ட இந்திய ஆட்சிப் பணியாளர் தொகுதி (I. C. S.) இவ்வாறு புதுமை வடிவத்தைப் பெற்றுச் சிறப்புற்றோங்கத் தொடங்கியது. கம்பெனியாகிய மரம் இப்பொழுது அதனுடைய உயிர் தரும் நீர்மத்தை இழந்துவிட்டது. அதனுடைய இந்திய அரசாங்கம் எனப்படும் அரசியல் பழம் நன்கு கனிந்து கீழே உதிர்வதற்குரிய நிலையில் கிளைகளில் தொங்கிக் கொண்டிருந்தது. ஒரு மெல்லிய பூங்காற்று அதை அரசினுடைய மடியில் உதிர்ந்து வீழுமாறு செய்யத்தக்க வகையில் அது மிகவும் கனிந்த பழமாகத் தொங்கிக்கொண்டிருந்தது.

முன்னர் நாம் குறிப்பிட்ட பரந்த கருத்துகளை இப்பொழுது ஆராயலாம். கம்பெனி வாணிகப் படிமுறை அமைப்பாக அமைக்கப்பட்டு இருந்தமையால், தொடக்ககால ஆட்சியாளர்கள் வெறும் வாணிகர்களாகவே இருந்தனர். அவர்களிடம் சில அரசியல் கடமைகள் ஒப்படைக்கப்பட்டன. உடனே பலர் இரண்டையும் செய்துவந்தனர். மிக அருகிய சிலரும் தங்களுடைய வாணிகத்தைப் பெருக்கவேண்டும் என்ற ஆர்வத்தைப் போதிய அளவு கருத்தைச் செலுத்த முடியாமல் வீணுக்கிவிடவில்லை. காரன்வாலிஸ் வாணிகத் துறையை வருவாய்த் துறையிலிருந்து பிரித்ததன்மூலம் சிறந்ததொரு திட்டத்தைச் செயற்படுத்தினர். அதன்பிறகு பணி புரிய வருகிறவர்கள், தாங்கள் வாணிகத் துறையில் பணி புரிய விரும்புகின்றனரா அல்லது வருவாய்த் துறையில் பணி புரிய விரும்புகின்றனரா என்பதைத் தெரிவித்தனர். அது முதல் அவர்கள் வாணிகர்களாகவோ, ஆட்சியாளர்களாகவோ பணிபுரிய வந்தனரே ஒழிய, இருவகைப் பணியையும் செய்ய வரவில்லை. வாணிகர்களின் குறிக்கோள் வாணிகத் துணைக் காப்பரசின் ஆளுநராகப் பணிபுரியவேண்டும் என்பதுதான். இது 1834ஆம் ஆண்டில் கம்பெனியின் இந்திய வாணிகம் முடிவடைந்த வரையில் தொடர்ந்து நடைமுறையில் இருந்து வந்தது.[2] இந்த மாண்புமிக்க வாணிக கோமான்கள்

[1] இந்திய ஆணைக் கழகங்களின் பணியினைத் தொகுப்பதற்கு பிரிட்டிஷ் ஆணையர்கள் அமர்த்தப்பட்டனர்.

[2] பிற்காலத்திய வாணிகத் துணைக்காப்பரசு பற்றி அறிவதற்கு W. W. Hunter இயற்றிய 'Annals of Rural Bengal' பார்க்க.

பண்டைக்கால 'நவாப்புகளை'ப் போன்ற மதிப்புடையவர்களாக இருந்தனர்; ஆனால், அந் நவாப்புகளுடைய கொள்ளையிடும் கொடுமைப் பண்பு அற்றவர்களாக இருந்தமை குறிப்பிடத்தக்கது. இத்தகைய நவாப்புகளின் கண்கவர் வனப்புடைய எழுச்சி கம்பெனியினுடைய பரிணாம வளர்ச்சியின் துணை விளைவாகும். 1813ஆம் ஆண்டுவரை கம்பெனி மொத்தத்தில் தன்னுடைய இந்திய, சீன வாணிகத்தின் முற்றுரிமையைத் தன்னுடையதாகக் கொண்டிருந்தது. ஆயினும், 1793ஆம் ஆண்டிற்குப் பிறகு சில தனி வாணிகர்கள் கம்பெனியின் உரிமை எல்லையினுள் நுழைந்து வாணிகம் செய்யத் தலைப்பட்டனர். 1813ஆம் ஆண்டில் அது இந்திய வாணிகத்தின் முற்றுரிமையை இழந்தது. ஆனால், சீனாவின் வாணிக முற்றுரிமையைத் தொடர்ந்து தனக்கே உரியதாகக் கொண்டிருந்தது. கம்பெனி சீனாவுடன் செய்து வந்த தேயிலை வாணிகம் நெடுங்காலம் அதனுடைய ஆதாயத்தின் பெரும் பகுதியை அளித்து வந்தது.[1] 1853ஆம் ஆண்டு இவ் வாணிக முற்றுரிமையையும் கம்பெனி இழந்துவிட்டது. அரசியல் உரிமையே சீனாவில் எஞ்சி நின்றது; அது அரசினுடைய அரசியல் கட்டுப்பாட்டைச் சிறிதுகூட மறைக்கவில்லை.

1783ஆம் ஆண்டிற்குப் பிறகு கம்பெனியின் அரசியல் தொடர்பான செயல்முறைகளில் அரசின் கட்டுப்பாடும் கண்காணிப்பும் நிலையாக வளர்ந்து வரலாயிற்று. இதற்குரிய முதற் காரணம் டண்டாசின் தனி ஆளுமையாகும். அவருடைய விடாமுயற்சியும் மனிதர்களை மேற்பார்வையிடும் திறமையும், அரசியல் முடிவுகளில் இறுதி நடுநிலைத் தீர்ப்பாளராகக் கட்டுப்பாட்டுக் கழகத்தினைச் சிறப்புற்று விளங்குமாறு செய்தது. 1786ஆம் ஆண்டு கவர்னர்-ஜெனரலை அமர்த்துவதற்கு அரசின் இசைவைப் பெறவேண்டும் என்ற உரிமை கைவிடப்பட்ட பிறகு, கட்டுப்பாட்டுக் கழகத்தின் அதிகாரம் நிலையாக வளர்ச்சியுறுவதை அது பாதிக்கவில்லை. 1813ஆம் ஆண்டு மீண்டும் அரசின் இசைவைப் பெற்றே கவர்னர்-ஜெனரலைப் பதவியில் அமர்த்தவேண்டும் என்ற உரிமையை அரசு மீண்டும் பெற்றது. அக் கழகத் தலைவர்களின் சீரிய அரசியல் அனுபவமும் மிகப் பரந்த நோக்கங்களும், மிக விரிந்த உள்நாட்டு அறிவினையுடைய இயக்குநர்களைக்

[1] W. W. ஹன்ட்டரின் 'Annals of Rural Bengal' என்னும் நூலைக் காண்க.

காட்டிலும் வீறுடையதாக விளங்கியது. அவர்கள் விரும்பிய மனிதர்களைப் பதவியில் அமர்த்துவதற்கு வலியுறுத்தும் அதிகாரத்தை இயக்குநர்கள் இழந்தனர். அதற்கு மாருக அவர்களுக்குப் பிடிக்காதவர்களை வேலையில் அமர்த்த வொட்டாமல் தடுத்து நிறுத்தும் அதிகாரத்தையே அவர்கள் நடைமுறையில் பெற்றிருந்தனர். 1813ஆம் ஆண்டில் வாணிக முற்றுரிமை முறிவுற்றமையாலும், 1833ஆம் ஆண்டில் இந்திய வாணிகம் அழிவுற்றமையாலும் இயக்குநர்களுக்கு இருந்துவந்த உரிமைகள் பறிபோயின. அவர்களுக்கு இதனுல் தனிப்பட்ட எந்தக் குழுவின் ஆதரவும் கிடைக்காமற் போயிற்று. 1853ஆம் ஆண்டில் இருபத்து நான்கு இயக்குநர்களில் ஆறு இயக்குநர்களை அரசு பெயர் குறித்து அமர்த்தியது. அப்பொழுது அவர்கள் உள்ளூர ஆற்றலற்றவர்களாக ஆக்கப்பட்டதோடு அவர்களுக்கு இறுதிக்காலம் வந்துவிட்டமையும் தெளிவாகப் புலனுயிற்று. எல்லா வகையிலும் அரசே இந்தியாவின் ஆற்றல்மிக்க ஆளுநராக இருந்தது. ஆனுல், 1834ஆம் ஆண்டு முதல்தான் அவ்வாறு பெயர் பெற்றது. கம்பெனி அரசின் உள்நாட்டு மேற்பார்வையிடும் செயலாண்மை நிலையமாக இருந்து வந்தது.[1]

இந்தியாவில் கம்பெனியின் செயல்முறைகளை அரசு கட்டுப்படுத்துவது முதன் முதலில் கவர்னர்-ஜெனரலைக் கட்டுப்படுத்துவதன்மூலம் தொடங்கியது. ஆலோசனை மன்றத்தின் உறுப்பினர்களை, படைத் தலைவரைச் சேர்த்து மூவராகக் குறைத்தமை இச் செயலின் முதற்படியாகும். மேலும், மற்ற இரு உறுப்பினர்களும் கம்பெனியின் ஊழியர்களாக இருக்கவேண்டும் என்னும் விதியும் நடைமுறைக்குக் கொண்டுவரப்பட்டது. அடுத்து மிக உயர்ந்த பதவிக்கு ஆங்கிலேயப் பொது வாழ்வில் மிகச் சிறந்த நிலையில் உள்ள மனிதர் ஒருவரை அமர்த்துவதும், அவர் தம்முடைய உடன் உறுப்பினர்களை அடக்கியாளும் (1786ஆம் ஆண்டு நிறைவேற்றப்பட்ட திருத்தச் சட்டம் அளித்த) அதிகாரமும் இங்குக் குறிப்பிடத்தக்கனவாகும். இவ்வாறு கவர்னர்-ஜெனரல் உள்ளூர் போட்டி பூசல்களுக்கும் விருப்பு வெறுப்புகளுக்கும் அப்பாற்பட்ட பேராற்றல் வாய்ந்தவராக்கப் பட்டார். மதிப்பிலும் சட்டவியல் அதிகாரத்திலும் அவர் தம்முடைய ஆலோசனை மன்ற உறுப்பினர்களைக் காட்டிலும்

[1] 1833ஆம் ஆண்டுச் சட்டம் 1834ஆம் ஆண்டில்தான் செயல்முறைக்குக் கொண்டுவரப்பட்டது.

உயர்ந்து விளங்குமாறு செய்யப்பட்டார். வாரன்ஹேஸ்டிங்சிற்கும் அவருடைய மன்றத்து உறுப்பினர்களுக்கும் இடையே இதற்கு நேர்மாறான நிலை இருந்துவந்ததை முன்பொரு பகுதியில் கண்டோம். எனவே, இச் சட்டத்தின்படி முன்பு கூட்டாளிகளாக இருந்தவர்கள் இப்பொழுது கவர்னர்-ஜெனராலுக்குக் கீழ்ப்பட்டவர்களாக்கப்பட்டனர்.[1] கவர்னர்-ஜெனரலே படைத்தலைவராகப் பணிபுரிந்தபொழுது—காரன்வாலிஸ், ஹேஸ்டிங்ஸ் பிரபு, பெண்டிங்கு (1833 முதல்) முதலியோர்களைப்போல — அவருடைய நிலை வெல்ல முடியாததாக இருந்தது. மற்ற இரு கீழ்ப்பட்ட மாநிலங்களின் மீது அவருடைய அதிகாரம் வளர்ச்சியுற்றதன்மூலம் கவர்னர்-ஜெனரலின் அதிகாரம் படிப்படியாக விரிவடைந்தது. 1793ஆம் ஆண்டு அவருடைய மேற்பார்வையிடும் அதிகாரம் வற்புறுத்தப்பட்டதோடு, மேலும் நன்கு வரையறுக்கப்பட்டது. தாமாகவே ஒரு கவர்னர் மற்றொரு மாநிலத்தைக் காணச் செல்வதைக் காட்டிலும் அவர் மேம்பட்ட சிறப்புடைய அதிகாரியாக விளங்கத் தொடங்கினர். இதற்கு எடுத்துக் காட்டாக 1798-9ஆம் ஆண்டுகளில் வெல்லஸ்லி மதராசில் தாற்காலிகமாகத் தங்கியிருந்ததைக் குறிப்பிடலாம். 1834ஆம் ஆண்டு அவருடைய பதவியின் பெயர் வங்காளத்திலுள்ள வில்லியம் கோட்டையின் கவர்னர்-ஜெனரல் என்பதற்குப் பதிலாக இந்தியாவின் கவர்னர்-ஜெனரல் என்று மாற்றப்பட்டது. அதன் விளைவாக அவருடைய முதன்மையான அதிகாரம் நன்கு வற்புறுத்தப்பட்டது. வங்காள மாநிலத்திற்குச் சட்டமியற்றும் அவருடைய அதிகாரம் 1834ஆம் ஆண்டு இந்தியா முழுவதற்கும் சட்ட மன்றம்மூலம் சட்டங்கள் இயற்றும் அதிகாரமாக உயர்த்தப்பட்டது. லண்டன் மாநகர அமைச்சரவையால் எத்துணைக் காலம் ஒரு கவர்னர்-ஜெனரல் ஆதரிக்கப்படுகின்றாரோ அதுவரை அவர் எத்தகைய தாக்குதலுக்கும் அசையாத பேராற்றல் வாய்ந்தவராக விளங்கினர். அதைப்போன்றே அவர் எத்துணைக்காலம் வருமுன்காக்கும் முன் மதியுடையவராக இருந்தாரோ அதுவரையில் அவரை யாரும் அசைக்க முடியவில்லை. பீலின் (Peel) அமைச்சரவையில் இருந்த

[1] ஷோர், பார்லோ ஆகிய இரு கம்பெனி ஊழியர்களும் நிலையாக கவர்னர்-ஜெனரல்களாக அமர்த்தப்பட்ட பொழுது இவ் விதிக்கு முற்றிலும் அவர்கள் விதிவிலக்காக விளங்கினர். அவர்களிடத்தில் அதிகாரம் செலுத்தும் பண்புக் குறைபாடு இருந்துவந்தது. உள்நாட்டுக் கண் கொண்டு அவர்கள் நிலைமைகளை நோக்கி வந்தனர்.

தம்முடைய தோழர்களின் நம்பிக்கையின்மையை எல்லன் பரோ பெருமல் இருந்திருப்பாராளுல், அவரைக்கூடத் திரும்பி வருமாறு அழைத்திருக்கமாட்டார்கள் என்பது இங்கு நினைவு கூர்தற்குரியதாகும்.

### ஆதாரங்கள்

தொடக்க காலத்தைப்பற்றி அறிவதற்கும், 1861ஆம் ஆண்டுவரை நிகழ்ந்த நிகழ்ச்சிகளை அறிவதற்கும் சர் சி. இல்பர்ட் (Ilbert) எழுதியுள்ள 'The Government of India' (1922) என்னும் தலைசிறந்த நூலினைப் படிக்கலாம். மேலும் கேம்பிரிட்ஜ் இந்திய வரலாற்றின் ஐந்தாம் தொகுதியில் 10, 18, 32ஆம் இயல்களைப் பார்க்க. முகலாயர்களுக்கும் ஆங்கிலேயர்களுக்கும் இருந்துவந்த தொடர்பினை அறிவதற்கு பெர்சிவல் ஸ்பியர் (இந்நூலாசிரியர்) எழுதியுள்ள 'Twilight of the Mughuls' என்னும் நூலைப் பார்க்க. ஏ. பி. கீத்தின் 'இந்திய அரசியலமைப்புச் சட்டங்களின் வரலாறு' என்னும் நூல் சிறந்த அரசியலமைப்பு வரலாருகும்.

கம்பெனியின் அரசியலையும், கம்பெனி இந்திய அரசுகளோடு கொண்டிருந்த தொடர்பையும் அறிய (1) L. Sutherland: 'East India Company and the State' (1952); (2) C. H. Philip: 'The East India Company 1784—1834' (1940) என்னும் நூல்களைப் பார்க்க. இவ்விரு நூல்களும் மிகச் சிறந்தனவாகும். மேலும் ஃபிலிப்பு பதிப்பித்துள்ள 'Correspondence of David Scott' (2 தொகுதி-1951) என்பது பல புதிய கருத்துகளைத் தந்துதவுகின்றன.

பி. ஆபர் (P. Auber) என்பவர் எழுதியுள்ள 'Analysis of the Constitution of the East India & Co.' (1826) என்னும் நூல் பயன்படும். L. S. S. ஓ'மல்லே (O'Malley) எழுதியுள்ள 'The Indian Civil Service, 1601—1930' (1931) என்னும் நூல் திருத்தமாகவும் கருத்துடனும் எழுதப்பட்டதாகும். பி. உட்ரஃப் (P. Woodruff) எழுதியுள்ள 'The Founders' (1953) சுவை மிக்கதும், தனி மனிதரின் வரலாற்றை உரைப்பதுமாகும். சர் W. W. ஹன்டரின் 'Annals of Rural Bengal' என்னும் நூல் பிற்காலத்தில் கம்பெனியின் வாணிக நிலையங்களைப் பற்றிய சிறந்ததொரு சொல்லோவியமாகும்.

பிரிட்டனின் நவாப்புகளை அறிவதற்கு ஜே. எம். ஹோல்ட்ஸ்மன் (J. M. Holtzman) எழுதிய 'The Nabobs in England, 1760—65' (1926) என்னும் நூலைப் பார்க்க.

# 7. காரன்வாலிஸ்

இந்தியாவில் பிரிட்டிஷாரின் துணிகரச் செயல்முறை வரலாற்றில் காரன்வாலிஸின் ஆட்சி, சிறப்புமிக்க சகாப்த மாகும். அவரது ஆட்சிக்காலத்தில் மனிதர்களில் மாற்றமும் முறைகளில் மாற்றமும் உண்டானதுமட்டுமல்லாமல்,கம்பெனி யாரின் நோக்கத்திலும் சூழ்நிலையிலும்கூட மாற்றங்கள் உண்டாயின. உள்ளூரக் கம்பெனியினுடைய அரசாங்கத்தின் வாணிகவண்ணம் இக் காலம் முதல் மங்கத் தொடங்கியது. அதனுடன் மொத்தமாக இருந்துவந்த ஊழல்களும் மறைந்தன. அவ் ஊழல்கள் கம்பெனியின் ஊழியர்களை மாசு படுத்திவந்த நிலை மாறியது. இயக்குநர் மன்றத்திலும் உரிமையாளர் மன்றத்திலும் இவ்வூழல்கள், மோதுதல் களையும் மறைமுகமாக உடந்தையாயிருத்தலையும் வளர்த்து வந்தன. அந்நிலை இப்பொழுது மறையத் தொடங்கியது. இதுவரை இந்தியாவில் கம்பெனியின் முதலீடுகளை மிகுதிப் படுத்துவதும், இராச்சியங்களிலிருந்து பெறக்கூடிய வருவாய் களை அதிகப்படுத்துவதுமே ஆட்சி முறைத் திட்டத்தின் கொள்கைகளாய் இருந்துவந்தன. ஆனால், காரன்வாலிஸ் ஆட்சிக்காலம் முதல் இந்திய நாட்டுக் குடிமக்களின் நலனைக் கருத்தாகக்கொண்ட சிறந்ததோர் அரசினை நிறுவுவதே கம்பெனியின் ஆட்சி முறைத் திட்டத்தின் உரைகல்லாக விளங்கத் தொடங்கியது. சிறந்த அரசாங்கத்தை நிறுவு வதற்குப் பண்டை ஆட்சி முறை மரபினைப் பின்பற்றி அமைக்கப்பட்டது உண்மையாகும். அது வரிகளைத் தண்டி யதே ஒழிய மக்களுக்காக ஒன்றும் செய்யவில்லை என்பது குறிப்பிடத்தக்கதாகும். ஆனால், இன்னும் 'நலவசதி நாட்டு'க் கொள்கையைப்பற்றிய தன்னுணர்ச்சி உண்டாகவில்லை யென்றாலும், கம்பெனியின் உள்துறை அரசு நீதி நெறி தவறாத அரசாக இக்காலம் முதல் விளங்கியது என்று கூறினால் அது தவறாகாது. இவ்வரசின் குறிக்கோளினை ஊர்

பேர் தெரியாத பார்வையாளன் ஒருவன் ஷாஜகான் ஊர் வலம் வந்தபொழுது 'வாழ்க அரசே! தங்கள் நாட்டில் அரசர் நேர்மையானவர்; அமைச்சர்கள் திறமையும் ஆற்றலும் உடையவர்கள்; செயலாளர்கள் உண்மையான வர்கள்; நாடு வளம் கொழிக்கிறது; மக்கள் மனநிறைவோடு வாழுகின்றனர். எனவே, நீங்கள் கடவுளுக்கு நன்றி செலுத்த வேண்டும்'[1] என்று புகழ்ந்து போற்றியமை இங்குக் குறிப் பிடத்தக்கனவாகும். காரன்வாலிஸின் ஆட்சி புறத் துறை யிலும் மாற்றங்களுடையதாகக் காணப்பட்டது. இம் மாற்றங்கள் வேறு திசையினை நோக்கிச் செல்லும் திருப்பு மையங்களாக இராமல், நிறுத்தும் இடங்களாகப் போயிற்று. ஆயினும், அது ஆற்றலுடையதாகவும் சிறப்புடையதாகவும் இருந்தது. இதற்கு முற்பட்ட ஒழுங்கற்ற விரிவுகள் நடை பெற்ற முப்பதாண்டுக் காலத்தில் உள்துறை அதிகாரிகளின் நிலையான உறுதியினால் அது மாற்றியமைக்கப்பட்டது. அதைக் களத்திலே இருந்த மனிதர்கள் போற்றியாதரித் தனர். அவர்கள் ஒப்படைப்புகளைக் குறைத்துக்கொள்வதிலும் பேரரசுக் கோட்பாட்டைத் தவிர்ப்பதிலும் கருத்தைச் செலுத் தினர். அடுத்த பன்னிரண்டு ஆண்டுகளுக்குக் கம்பெனியின் திட்டம் நாடுகளை வன்முறையில் கைப்பற்றும் கொள்கை யற்றதாகவே இருந்துவந்தது. தஞ்சாவூரைக் கைப்பற்றி யதை மன்னித்துவிட்டமையும், செயல்முறைக்கு உகந்ததாக எப்பொழுது வாய்ப்புக் கிடைக்குமோ அப்பொழுது பஸ்ஸீனையும் சால்செட்டையும் கைப்பற்றுமாறு பம்பாய் வற்புறுத்தியமையும், வன்முறைச் செயல் என்பதற்காக அல்லாமல் வாரன்ஹேஸ்டிங்ஸ் புரிந்த போர் என்பதனால் ரோகில்லாப் போரைக் கண்டித்தமையும் ஆகிய பழைய இயக்குநர்களின் வருவாய்க்காக வற்புறுத்தும் பழக்கத்தினை நன்கு நிறுவப்பெற்ற பிரிட்டிஷ் அரசாங்கம் மாற்றி யமைத்தது. அவ்வரசு கட்டுப்பாட்டுக் கழகத்தின் மூல மாகவும் திருத்தியமைக்கப்பட்ட இயக்குநர்களின் அலுவ லகத்தின் மூலமாகவும் செயற்பட்டு வந்தது. காரன் வாலிஸின் ஆட்சியில் நிதியியல், வாணிக இயல், செயல் முறைகள் உள்ளார்ந்த அரசியல் ஊக்கிகளினால் மாற்றி யமைக்கப்பட்டது. கம்பெனியின் குடியேற்றப் பகுதிகளைச் சேர்க்காமலேயே திட்டமிட்ட தனித்தன்மைக் கோட்பாட்டின்

[1] Ibn-i-Hasan : 'Central Structure of the Mughul Empire', p. 360.

படி தற்காலிகப் பேரரசுக் கோட்பாடும் பண்டைய முறைகளை மாற்றி அமைத்தது எனலாம்.

அரசாங்க மாளிகையின்மூலம் பசுமையான காற்று காரன்வாலிஸ் பதவியேற்றது முதற்கொண்டு வீசத் தொடங்கியது. அமெரிக்கப் பிரச்சினையின்மீது மக்கள் கொண்டிருந்த அக்கறை மறைந்த சிறிது காலத்திற்கெல்லாம், 1781ஆம் ஆண்டு தொடங்கிய நெடுங்காலத்திய தொடர்ச்சியான வாத விவாதங்களுக்குப் பிறகு, அதன் விளைவாகக் காரன்வாலிஸ் கவர்னர்-ஜெனரலாக நியமிக்கப்பட்டார். அப் பாராளுமன்றச் சொற்போர்களுள், இரண்டு இந்தியச் சட்ட வரைவுகள்மீது நடத்தப்பெற்ற சொற்போர்களே உச்ச நிலையை அடைந்தன. அவற்றால் உண்டான செயல்முறை விளைவுகள் 1784ஆம் ஆண்டில் நிறைவேற்றப்பட்ட பிட் இந்தியச் சட்டத்தில் பொறிக்கப்பட்டன. கம்பெனியின் குடியேற்ற நாடுகளுக்கு உரிய பொறுப்பினை பிரிட்டிஷ் பாராளுமன்றம் மேற்கொள்ளுவதற்கு அச் சட்டம் உறுதியான வழிவகைகளை எடுத்தியம்பியது என்று கொள்ளுவதே நம்முடைய நோக்கத்திற்குப் பொருத்தமாகும்.[1] இவற்றைச் செயல் முறையில் செம்மையாகச் செய்வதற்குத் தேவையான திட்டங்களை இச் சட்டம் வகுத்துத் தந்தது எனலாம். இச் சட்டத்தின் முதன்மையான கூறு, ஆங்கிலேயப் பொது வாழ்வில் சிறப்புற்று விளங்கும் ஒருவரை கவர்னர்-ஜெனரலாகப் பதவியில் அமர்த்துதலாகும். அவ்வாறு அமர்த்தப் படுபவர் உள்நாட்டு விவகாரங்களில் ஆர்வம் அற்றவராகவும் அதே சமயத்தில் தேவையான அளவிற்கு அதிகாரங்களைச் சட்டப்படி பெற்றவராகவும் இருக்கவேண்டும் என்று அச் சட்டம் அறிவித்தது. இறுதியாகக் காரன்வாலிஸ் ஒப்புக் கொள்ளுவதற்கு முன்பு இரண்டு முறை கவர்னர்-ஜெனரல் பதவியை ஏற்றுக்கொள்ளுமாறு இயக்குநர்கள் அவரை வேண்டிக்கொண்டனர்.[2] அவருடைய நன்மையைக் கருதி கவர்னர்-ஜெனரலும், படைத் தலைவருமாக ஒருவரே இருப்ப

[1] 1813ஆம் ஆண்டு இயற்றப்பட்ட பட்டயச் சட்டத்தில் இந்தியாவிலுள்ள கம்பெனியின் குடியேற்ற நாட்டுப் பகுதிகளின்மீது அரசினுடைய இறைமையைச் செலுத்துவதுபற்றிய கருத்து தெளிவுறுத்தப்பட்டிருக்கிறது.

[2] மாகார்ட்னே பிரபு தாம் கவர்னர்-ஜெனரலாகப் பதவியேற்பதென்றால் கம்பெனியும் அரசும் தமக்கு வழங்க வேண்டிய உரிமைகள் என்று அவர் விதித்த நிபந்தனைகளை

தற்காகச் சிறப்புமிக்க தனியானதொரு சட்டம் இயற்றப் பட்டது. மேலும், தேவைப்படுகின்றபோது தம்முடைய ஆலோசனை மன்ற உறுப்பினர்களின் கருத்துகளை அவர் புறக் கணித்து நடப்பதற்குரிய உரிமையையும் அச்சட்டம் அவருக்கு அளித்தது. காரன்வாலிஸ் இந்தியாவிற்கு வந்தபொழுது அவருக்கு நாற்பத்தெட்டு வயதாகியிருந்தன. அவர் இதற்கு முன்பே படைத் துறையில் பேரும் புகழும் பெற்றுச் சிறப்புற்றிருந்தார். 1781ஆம் ஆண்டில் நடைபெற்ற அமெரிக்கப் போரில் யார்க் டவுன் நகரை வீழ்ச்சியுறச் செய்த பெருமை அவருக்கே உரியதாகும். இவ்வாறு அனைவ ராலும் ஏற்றுக்கொள்ளப்பட்ட திடமான திறமையுடையவ ராக அவர்[1] விளங்கினர். இவை யாவற்றைக்காட்டிலும் அவரிடத்து நேர்மைப் பண்பு சுடர்விட்டுப் பிரகாசித்தது. அவ் ஒளியின் முன்னால் ஊழல்களும், சிறுமைப் பண்புகளு மாகிய இருள் நிற்க முடியாமல் மறைந்தன. அன்றைய பிரிட்டிஷ் முதலமைச்சர் பிட்டின் மிக நெருங்கிய நண்ப ராகவும், கட்டுப்பாட்டுக் கழகத்தின் தலைவரான டண்டாசின் மதிப்பிற்குரியவராகவும் காரன்வாலிஸ் சிறப்புற்று விளங்கினர். அவரைக் கடுகடுப்புடையவராகச் செய்யலாமே ஒழிய ஊழல் மலிந்தவராக மாற்றுவது மிகவும் அரிய செயலாகும். மதிநுட்பம் வாய்க்கப்பெறவில்லை என்றாலும், அவர் தெளிந்த அறிவினை உடையவராக இருந்தார். வெறும் பொது அறிவினை அடிப்படையாகக் கொண்டு அவர் புரிந்த ஆட்சியும், அவருடைய வளர்ச்சிக்குகந்த எளிமையும் எப்பொழுதும் குற்றமற்றதாகவோ, அறிவு நலத்தில் சிறந்த தாகவோ இருந்ததில்லை. ஆனால், அவை இந்தியாவில் பிரிட்டிஷாரின் செயல்முறைகளில் புதியதோர் உணர்ச்சி யையும் ஊக்கத்தையும் ஊட்டியது. அவ் உணர்ச்சியும் ஊக்கமும் என்றுமே முழுவதும் இழக்கப்படவில்லை.

ஹேஸ்டிங்ஸ் இந்தியாவைவிட்டுச் சென்றதற்கும் காரன் வாலிஸ் இந்தியாவிற்கு வந்ததற்குமிடையே பதினெட்டு மாதங்கள் இடைவெளி உண்டாயிற்று. இவ்விடைக்காலத்து அரசினை சர் ஜான் மாக்பர்சன் (Sir John Macpherson) என்பவர் கண்காணித்துவந்தார். அவர் பழங்காலப் போக் குடைய அதிகாரியாவார். அவருடைய ஆட்சியைப்பற்றி

---

[1] ஏற்றுக்கொள்ள முடியாமல் போனமையால், காரன் வாலிசை கவர்னர்-ஜெனரல் பதவியை ஏற்றுக்கொள்ளு மாறு அவர்கள் வேண்டினர்.

'கறை படிந்த வேலை வாங்கும் திட்டம்' என்று உழைப்பு மிக்க மிதவாதியான காரன்வாலிஸ் வருணித்துள்ளமை இங்குக் குறிப்பிடத்தக்கதாகும்.[1] வாரன் ஹேஸ்டிங்ஸைப் பற்றிக் குறைவாக எப்பொழுதுமே ஒரு சொல்லும் காரன் வாலிஸ் சொல்லியது இல்லை. ஆனால், பர்க்கின் பேச்சுத் திறன் ஹேஸ்டிங்ஸைப் பழித்ததைக்காட்டிலும் அவர் மேற் கொள்ளவேண்டி இருந்த திட்டங்கள் ஹேஸ்டிங்ஸை மிகவும் பழித்துரைப்பதாக இருந்தன. அவர் மேற்கொண்ட தூய்மைப்படுத்தும் பணிக்கும் சீர்திருத்தம் செய்யும் திட்டத் திற்கும் கம்பெனியின் ஊழியர்கள் மிகத் திறமையுடன் அவருக்கு உதவி புரிந்தனர். வருவாய்த் துறையின் துணைத் தலைவராக சர் ஜான் ஷோர் கம்பெனியில் பணி புரிந்து வந்தார். பிற்காலத்தில் பம்பாயின் கவர்னராகப் பணி புரிந்த ஜோனதன் டங்கன் என்பவரும் அப்பொழுது கம்பெனியின் அதிகாரிகளுள் ஒருவராக இருந்துவந்தார். காரன்வாலிசின் உள்ளத்தைக் கவர்ந்த இரண்டாவது அதிகாரி டங்கன் எனலாம். மேலும், சார்லஸ் கிராண்ட், ஜேம்ஸ் கிராண்ட் எனும் ஒரு குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் அதிகாரிக ளாகப் பணி புரிந்துவந்தனர். அவர்களுள் சார்லஸ் இயக்கு நர்கள் குழுவிற்குத் தலைவரானார். அவருடைய மகன் கட்டுப் பாட்டுக் கழகத்தின் தலைவராகப் பொறுப்பேற்றார். சார்லஸ் ஸ்டூவர்ட் வாணிகத் துறை வல்லுநராக விளங்கினார். இத்தகைய ஆற்றலும் திறமையும் வாய்க்கப்பெற்ற அதிகாரி களைத் துணையாகக் கொண்டு காரன்வாலிஸ் அரும்பெரும் செயல்களைச் செய்துள்ளார். அச் செயல்களைச் செய்யும் பொழுது அவர் தம்முடைய முடிவுகளையே நம்ப வேண்டியவ ராக இருந்தார். அதைப்போன்றே அவருடைய ஆற்றலி லேயே அவர் நம்பிக்கை கொண்டிருந்தார். அவர் நெடுங் காலமாக நிலைநாட்டப்பட்ட ஆள்குழு நலங்களுக்கு எதிராகத் திட்டமிட்டு வேலை செய்தபோதெல்லாம், அவர் தம்முடைய அறிவிலும் ஆற்றலிலுமே நம்பிக்கை வைத்திருந்தார். அவற்றைச் செய்கின்றபொழுது சிறிதளவுகூடக் கருத்து மாறுபாடும் மனக்கசப்பும் உண்டாகாதவாறு அவர் செய லாற்றியமை அவருடைய ஆளுமைக்கும், அவருக்கு அளிக்கப் பட்டிருந்த உரிமைகளுக்கும் சிறப்புமிக்க சான்றுகளாகும். அவருக்குண்டான தடைகளை அவரைப்போன்ற உள்ள உரமும் ஆற்றலுமற்ற மனிதராக ஒருவர் இருந்திருந்தால்

[1] 'Correspondence of Charles, first Marquess Cornwallis', ed. C. Ross, 3 Vols., Vol. I., p. 371.

சமாளிக்க இயலாமல் மனம் குழம்பிப்போயிருப்பார். ஆதிக்க மனப்பான்மையுடைய எல்லன்பரோ போன்றவர்களாக இருந்திருந்தால் குழப்பத்தை மிகப்பெரும் குழப்பமாக்கி, செயலினைப் பாழ்படுத்தி இருப்பர்.

காரன்வாலிஸிற்கு உறுதுணையாக அறிவிக்கப்பட்ட அறிவிப்புகள் உள்துறைச் செயல்முறைகளில் மூன்று முக்கியத் துறைகளைச் சார்ந்தனவாக இருந்தன. வீண் செலவுகளைக் குறைத்தும், ஊழல்களை அடக்கியொடுக்கியும் அவர் ஆட்சி முறையினை ஒழுங்கான அடிப்படையின்மீது நிறுவவேண்டிய பொறுப்புடையவராக இருந்தார்; வருவாய்களைத், தண்டும் முறையினை நடுத்தரமான வகையில், நிலையாக நிலைநாட்டவேண்டியவராக இருந்தார். மூன்றாவதாக நீதித் துறையில் அவர் பல சீர்திருத்தங்களைச் செய்யவேண்டியது இருந்தது. இந்தியச் சட்டவியல் அமைப்பினை அடிப்படையாகக் கொண்டு பிரிட்டிஷ் நீதித்துறை உணர்வினை அதனுள் புகுத்தி, அவர் சீர்திருத்தம் செய்தார். இந்தியருக்கும் ஐரோப்பியருக்கும் இடையே நீதி வழங்குவதில் ஒருதலைச்சார்பில்லாமல் ஒத்தவகையில் நீதி வழங்குவதற்குரிய வழிவகைகளை அவர் வகுத்துத் தந்தார்.

முதன்முதலாகத் தூய்மைப்படுத்தும் அரும்பணியை அவர் மேற்கொண்டார். அவர் இந்தியாவிற்கு வந்த சில மாதங்களுக்குள் வாணிகக் கழகத்தின் (Board of Trade) செயல்கள் எல்லாம் சிறிது காலத்திற்கு நிறுத்திவைக்கப்பட்டன. இதையடுத்து அதனுடைய உறுப்பினர்களுள் பெரும்பான்மையோர் நேர்மையற்ற செயல்களுக்காகப் பதவியிலிருந்து நீக்கப்பெற்றனர். ஏட்டளவிலேயே ஒரு படைப் பகுதி பல ஆண்டுகளாக இருந்துவருவதையும், அதற்காக ஆண்டுதோறும் முழு ஊதியம் செலுத்தப்பட்டுவரும் நேர்மையற்ற செயலையும் அவர் கண்டுபிடித்தார்.[1] கம்பெனியின் அலுவலில் இருந்த முப்பத்தைந்து தண்டல்நாயகங்களும் தடைசெய்யப்பட்ட தனிப்பட்ட வாணிகத்தில் பெரிதும் ஈடுபட்டிருப்பதாக அவர் நம்பினார். அவ்வாறு அவர் கருதியதற்குச் சிறந்த காரணங்கள் இல்லாமல் போகவில்லை. அத்தண்டல்நாயகங்கள் 'தண்டல்நாயகங்களாக இருக்கின்றமையால் பெற்றுள்ள செல்வாக்கையும், அதலத்தின் (Adalat) நீதிபதிகளாக இருப்பதனால் பெற்ற செல்வாக்கையும் தனிப்

[1] மேற்குறிப்பிட்ட நூலைக் காண்க.

பட்ட தங்கள் வாணிகத்திற்குப் பயன்படுத்தியமையால் கம்பெனியின் நலத்திற்கு எதிரான கொடிய பகைவர்களாக அவர்கள் மாறினர்.'[1] இங்கிலாந்தின் செல்வாக்குள்ள மனிதர்களாலும், வேல்ஸ் இளவரசராலும் 'பழிப்புக்குரிய நேர்மையற்ற வேலைகளைத் தருமாறு'[2] கவர்னர்-ஜெனரல் வற்புறுத்தப்பட்டார். எவ்வாறு அதிகாரிகளின் பதவிகள் விலைகொடுத்து வாங்கப்பட்டும் விற்கப்பட்டும் வந்தன என்பதை ஹிக்கே (Hickey) தம்முடைய இதழில் பதிவு செய்துள்ளார். நெறிகெட்டவர்களைக் குற்றஞ்சாட்டிக் கைவிடுதற்குரிய நேர்மையை உடையவராகக் காரன்வாலிஸ் விளங்கினர். பலமுறை கெஞ்சிக் கேட்கின்றவர்களை மறுப்பதற்குரிய உள்ள உறுதியும் மதிப்புமிக்க ஆளுமையும் உடையவராக அவர் இருந்தமையால்தான், அவருடைய பணியில் அவர் வெற்றி பெற முடிந்தது. அப்படி அவரைக் கெஞ்சிக் கூத்தாடியவர்கள் வாழ்நாளில் என்றுமே அவரிடம் தலைகுனிந்ததைப்போல் வேறு யாரிடமும் மானக்கேடுற்றிருக்கமாட்டார்கள். பணித்துறையின் பொதுக் கிளையில் தனிப்பட்ட வகையில் வாணிகம் செய்வதை மிகக் கடுமையாகத் தடை செய்து ஒழித்தார். தவறு செய்தவர்கள் தாயகத்திற்குத் திருப்பி அனுப்பப்பட்டனர். இத்தகைய தீமைகளுக்கு எல்லாம் காரணமாக இருந்த ஆணிவேரினைக் காரன்வாலிஸ் கண்டறிந்தார். கம்பெனி ஊழியர்களின் ஊதியம் மிகச் சிறிய தொகையாக இருந்துவந்தமையே இவற்றிற்கெல்லாம் மூல காரணம் என்பதை அவர் நன்குணர்ந்தார். எனவே, கம்பெனி ஊழியர்களின் ஊதியத்தைக் காரன்வாலிஸ் உயர்த்தி ஒழுங்குபடுத்தினர். அதனால், அவர் மேற்கொண்ட சீர்திருத்தங்கள் அனைத்தும் நிலைத்த பயன்தரத்தக்கதாக அமைந்தன. பிளாசிப் போருக்கு முற்பட்ட காலத்தில் கம்பெனி ஊழியர்களுக்குப் பெயரளவில் ஏதோ சிறு தொகை ஊதியமாகக் கொடுக்கப்பட்டது. கம்பெனியின் முதலீட்டு வாணிகத்தில் தலையிடாத வகையில், தனிப்பட்ட வாணிகத்தில் அவ்வூழியர்கள் ஈடுபட்டுப் பொருளீட்டுமாறு கம்பெனி ஊக்குவித்துவந்தது. தனிப்பட்ட வகையில் ஊழியர்கள் வாணிகம் செய்வதைத் தடுப்பதற்கு நினைத்த கிளைவ், அதற்கு மாற்றாக 'வாணிகச் சங்கத்தை' (Society of Trade) நிறுவினர். அதற்கு அதிகப்

[1] H. Beveridge: 'Comprehensive History of India', Vol. II, p. 575.

[2] 'Cornwallis Correspondence', Vol. II, p. 51.

படியான ஊதியமும், வருவாய்க்கு ஏற்றவகையில் நிலையான விழுக்காடு தரகும் தரப்பட்டது. அதன் விளைவாகக் கொடுக்கப்பட்ட ஊதியம் மிகக் குறைவாகவும், அளிக்கப் பட்ட தரகு மிக அதிகமாகவும் இருந்தது.[1] இதன்மூலம் உண்டாகக்கூடிய பழிப்புக்குரிய செயல்கள் எவை என்பது வெளிப்படையாகத் தோன்றத் தொடங்கியது. மேலும் கம்பெனி ஊழியர்கள் ஓய்வு பெறுங்காலத்து ஓய்வுக்கால ஊதியம் ஒன்றும் அளிக்கப்படவில்லை. இதன் விளைவாக ஓய்வு பெறவேண்டிய காலத்து ஊழியர்கள் யாருமே ஓய்வு பெறுவதில்லை. ஏனெனில், இங்கிலாந்தின் சமூக வாழ்க்கையில் மற்றவர்கள் எல்லாம் சீரும் சிறப்பும் பெற்று விளங்கு வதற்காகப் பெரும் பொருளைச் சேர்த்துக்கொண்டிருக்கின்ற பொழுது இவர்களும் தங்களுக்குக் கிடைத்த வாய்ப்பினை நழுவவிட விரும்பவில்லை. நேர்மையற்ற முறைகளில் எவ்வளவு விரைவில் பொருளைக் குவிக்க முடியுமோ அவ்வளவு விரைவில் பொருளைச் சேர்க்கும் அவாவினை மிகுதியாக உடையவர்களாக அவர்கள் இருந்துவந்தனர். தரகு தருவதை ஒழிக்க விரும்பாத கம்பெனியாரை, காரன்வாலிஸ் உறுதியாக இருந்து அதை ஒழித்துவிடச் செய்தார். அதற்கு மாற்றுகத் தாராளமாக ஊதியம் தருவதற்கு அவர் ஏற்பாடு செய்தார். குறைந்தது இத்தனை ஆண்டுகளாகிலும் பணி புரியவேண்டும் என்று வரையறுக்கப்பட்ட பதவிகளுக்கே ஊதியம் தருவதை முறையாகக் கொண்டனர். இவ்வாறு பெரும் பதவிகளை சிறுதரத்து ஊழியர்கள் வகித்துவந்த பழைய தீமைக்கு முடிவு கட்டப்பட்டது. இந்த அடிப்படையின்மீது இதற்கு முன்பே தடை செய்யப்படும் வகையில் இன்றும் பேரளவில் செய்யப் பட்ட தனிப்பட்ட வாணிகத்தைத் தடைசெய்ய அவர் ஆற்றல் மிக்க நடவடிக்கைகளை எடுத்துக்கொள்ளுவதில் திறமை யுடையவராக விளங்கினர். இவ்வாறு தாராளமாக ஊதியம் அளிக்கப்பட்ட ஆட்சிப் பணியாளர் தொகுதி ஒன்று தொடங்கப்பெற்றது. பொதுக் கடமையாற்றுவதில் உயர்ந்த கடமையுணர்வும், கவர்ச்சி மிக்க நேர்மையுமுடைய ஆட்சிப் பணியாளர் தொகுதி, பத்தொன்பதாம் நூற்றுண்டில்

[1] வாரணசியில் இருந்த துணைக்காப்பரசின் ஆளுநர் இதற்குச் சிறந்த எடுத்துக்காட்டாவார். ஆண்டிற்கு அவருக்கு 12,000 ரூபாய் ஊதியம் தரப்பட்டது. அதாவது 1,350 பவுன்கள் ஆண்டு ஊதியம். ஆனால், அவர் ஆண்டிற்கு 40,000 பவுன்களைத் தரகாகப் பெற்றுர். இவற்ருேடு காரன்வாலிஸின் கருத்துப்படி வேறு சில ஆதாயங்களும் கிடைத்து இருக்கவேண்டும்.

இந்தியாவை மிகச் சிறப்பாக ஆட்சி புரிந்தது. அதனுடைய பணியினைக் குறிப்பிடத்தக்க திறமையுடன் ஆற்றியது. சம கால உலகத்தில் அதனுடைய ஒழுங்கு முறையின் தரம் மிக மிக உயர்ந்ததாக இருந்துவந்தமை, சிறப்புமிக்க செய்தியாகும்.

பொதுப் பணித் துறையில் செய்யப்பட்ட சீர்திருத்தங்கள் பல முகப்புக் கூறுகளை உடையனவாக இருந்தன. அவை அவ்வளவு மனமகிழ்ச்சியைத் தருவதாக அமையவில்லை. பொதுப் பணித் துறைக்கு வேண்டிய ஊழியர்களைப் பொதுவாகத் தேர்ந்தெடுக்கும் பழக்கம் அக்காலத்தில் இல்லை. எனவே, இயக்குநர்களால் பெயர் குறிப்பிடப்படுகிறவர்களே கம்பெனி ஊழியத்திற்கு வருவதற்கு முடிந்தது. தாயகத்தின் துணையைக்கொண்டு இந்தியாவில் மிக உயர்ந்த நிலையில் பொதுத்துறைப் பணியை நிறுவியதன் மூலம் மிகக் கீழான வேலை முறைகள் தடுக்கப்பட்டன. இம் முறையினால் பொருத்தமற்றவர்கள் இனிமேல் செல்வம் சேர்க்கவும் முடியாது; செல்வத்தைச் சேர்த்துக்கொண்டவுடன் விரைவிலேயே தாயகத்திற்குத் திரும்பிவிடவும் இயலாது. பொருத்தமற்றவர் மிக விரைவில் ஒரு பொருளும் இன்றித் திரும்பிச் செல்லுவதற்குத்தான் வாய்ப்புண்டாயிற்று. ஆனால், குறைபாடுடைய முறையின்மூலம் ஊழியர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டமையால் பணித்துறைக்குள்ளே ஒரு வகையான சாதி முறையும் குடும்பப் பற்றுணர்ச்சியும் தோன்றத் தொடங்கியது. அதனுடைய ஆற்றலை 1853ஆம் ஆண்டிற்குப் பின்னர் 'போட்டிக்காரர்களின்' தோற்றத்தைப் போற்றி வரவேற்றதிலிருந்து மதிப்பிட்டு அறிந்துகொள்ளலாம். இந்தியப் பணித்துறையில் பின்பற்றப்பட்ட பரம்பரையாக வரும் மரபுகள், குடும்பங்களின் பணிக்குச் சிறப்புமிக்க எடுத்துக்காட்டுகளைத் தந்துதவின. மேலும், அது அப் பணிமக்களிடையே ஆழ்ந்த தனியுரிமை உணர்ச்சியையும், அசைக்க முடியாத பழமைப்பற்று உடைய நோக்கத்தையும் வளர்த்தது. இந்த உணர்வே, உயர்ந்த பதவிகளுக்கு இந்தியர்களை அனுமதிப்பதற்குத் தடையாக இருந்தது. அதனால், பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் தோன்றிய புதிய தேசிய உணர்வினைப்பற்றிச் சிறிதும் ஆட்சியாளர் பணித்துறையினால் அறிய முடியாமல் போயிற்று. காரன்வாலிஸ் கையாண்ட முறைகளின் மற்றொரு தீய விளைவு அரசாங்கத்தின் உயர்ந்த பதவிகளில் எல்லாம் இந்தியரை அமர்த்தக்கூடாது என்னும் விரும்பத்தகாத கொள்கை

யாகும். காரன்வாலிஸ் மற்ற பிரிட்டிஷ்காரர்களைப்போன்றே இந்தியர்கள் எல்லாரும் நேர்மையற்றவர்கள் என்று கருதினார். அதனால் அவருக்கு இந்தியர்களிடத்தில் நம்பிக்கை இல்லாமற்போயிற்று. அவர் 'இந்துஸ்தானத்தின் ஒவ்வொரு குடிமகனும் கைக்கூலி வாங்கும் ஊழல் மிக்கவனாக இருக்கின்றான் என்பதை நான் நம்புகின்றேன்' என்று எழுதினார். ஆனால், அவர் ஐரோப்பிய அதிகாரிகளின் தரத்தை உயர்த்துவதற்கு உரிய வழிவகைகளைக் கண்டபொழுதும், அவர்களுடைய சரிநேர் பகுதியான இந்தியத் துணைவர்களின் தரத்தை உயர்த்துவதற்கு அவர் ஒரு வழியையும் காணவில்லை. எனவே, பொறுப்பு வாய்ந்த பதவிகளில் இந்தியரை அமர்த்துவதைத் தவிர்த்தார். அல்லது வாய்ப்புக் கிடைக்கின்ற பொழுது அவர்களை அவ் உயர் பதவிகளில் இருந்து நீக்கி வந்தார். இதற்கு விதிவிலக்காக இருந்தவர் அலி இப்ராகிம் கான் என்பவராவார். அவரை யாரும் எளிதிலே ஏமாற்றி விட முடியாது. அவர் கையூட்டு வாங்காத சிறப்புமிக்க இந்தியராக ஆங்கிலேயர்களால் போற்றப்பட்டார். அவர் காரன்வாலிஸ் காலத்தில் வாரணாசியில் நீதிபதியாகப் பணி புரிந்துகொண்டிருந்தார். அந்தக் கொள்கை 1793ஆம் ஆண்டிலே இயற்றப்பட்ட சட்டத்தில் சேர்க்கப்பட்டதன் மூலம் அது சட்டமன்ற உடன்பாட்டினையும் பெற்றது. ஒவ்வொரு மாநிலத்திலும் பணித்துறைக்கு ஒப்பந்தம் செய்து தேர்ந்தெடுக்கப்பட்ட பணித்துறைப் பதவிகளில் ஆண்டிற்கு 500 பவுன்களுக்கு மேற்பட்ட பதவிகளின் பதவிக் காலத்திற்கு ஒரு வரம்பினை இச் சட்டம் அமைத்தது. ஒப்பந்தம் செய்யப்பட்ட பணித்துறை ஊழியர்களாக ஓர் இந்தியன்கூட இல்லாமையினால், அவர்கள் இப் பதவியில் அமர்த்தப்படுவதற்குத் தகுதியற்றவர்களாயினர். 1853ஆம் ஆண்டிற்குப் பிறகு ஒப்பந்தம் செய்யப்படும் பணித்துறைச் செயல்முறையில் குறைபாடுடையதாகவும் கொள்கை அளவிலும் குறைபாடுடையதாகவும் போயிற்று. பிற்காலத்தில் உயர்ந்த பதவிகளில் இந்தியரை அமர்த்துவதென்றால் அதற்கென்று சிறப்பான சட்டங்கள் செய்யப்பட்டன. இந்தியரைப் பணித்துறையில் சேர்க்காது ஒதுக்கி வைத்தமையால், சில மிக முக்கியமான விளைவுகள் உண்டாயின. கம்பெனியின் ஆட்சிக்குட்பட்ட குடியேற்ற நாடுகளில் பேரளவில் எழுத்தர்களாகப் பணிபுரிந்த இந்திய மக்களாகிய இந்துக்களும் முஸ்லீம்களும் பொதுவாழ்க்கையில் தாங்கள் ஒதுக்கி வைக்கப்பட்டுள்ளதை நன்குணர்ந்தனர். வாய்ப்பு என்னும் கதிரவன் தோன்றாத காரணத்தினால் பொதுமக்களின் திறமை

மலர்ச்சியுறுமல்போயிற்று. இவ்வாறு பொதுமக்களிடையே திறமையில்லை—என்றுமே இந்திய மக்களிடத்துத் திறமை இருந்ததில்லை என்னும் கட்டுக் கதைகள் தோன்றலாயின. புதிய இந்தியாவின் சாதனைகளுள் அத் திறமையே வாணிகத் திலும் சட்டத்துறையிலும் உச்ச நிலையை அடைந்துவிட்டதை நாம் காணுகின்றோம். பொதுவான செயல்களில் இந்தியர் களும் ஐரோப்பியர்களும் தோழமையுணர்வோடு ஒன்று சேர்ந்து செயலாற்றுதலும் படிப்படியாக அக் காலத்தில் மறைந்துபோனமை இரண்டாவது விளைவாகும். கம்பெனி யின் ஆட்சிக்குட்பட்ட இராச்சியப் பகுதியில் வாணிகத் துறைக்கு வெளியே மக்களிடையே இருந்துவந்த தொடர்பு காலப்போக்கில் ஆண்டானுக்கும் அடிமைக்கும், ஆளுவோருக் கும் ஆளப்படுவோருக்கும் இடையேயுள்ள தொடர்பைப் போன்று வளரத்தொடங்கியது. உள்நாட்டுக்குரிய சமத்துவ மதிப்பு தொடர்ந்து இருந்துவந்தது. அதனுடன் தோழமை யுணர்வும் ஒருவர் மற்றொருவரை மதித்துப் போற்றும் பண்பும் அவர்களிடையே காணப்பட்டன. எப்பொழுது மதிப்புநிலை சமத்துவமற்றதாகப் போய்விடுகின்றதோ, அப் பொழுது நடுநிலையற்ற கருத்துகளும் தோன்றி வளருவது இயற்கை. ஹேஸ்டிங்சின் ஆட்சிக் காலத்திலேயே இவ்வாறு இந்திய நாட்டுப் பொருள்களிடத்திலும், இந்திய நாட்டு மக்க ளிடத்திலும் ஒருவகையான வெறுப்புணர்ச்சி தோன்றி வளர்ந்தது. அவை மில்லினுடைய மொழிகளாகவும், மெக்காலேயினுடைய கருத்துகளாகவும் வெளிப்பட்ட ஆழ மற்ற அரை உண்மைகளைத் தோற்றுவித்தன ; மற்றச் சிறிய மனிதர்களின் தீர்மானமான வெறுப்பினையும் வளர்த்தது.

காரன்வாலிசின் ஆட்சிமுறைச் சீர்திருத்தங்களை அறி வதற்கு முன்னர், அவர் இந்தியாவிற்கு வந்தபொழுது கண்ட அரசியல் நிலைமைகளை நாம் தெரிந்துகொள்வது இன்றியமை யாத தேவையாகும். கம்பெனியின் ஆட்சி இருபெருங் கிளை களாப் பிரிக்கப்பட்டு இருந்தன. ஒரு பிரிவு வாணிகக் கிளை என்றும், மற்றொரு பிரிவு வருவாய்த்துறை என்றும் வழங்கப் பட்டு வந்தன. கம்பெனி ஆண்டுதோறும் வாணிகத்தில் முதலீடு செய்வதற்கு வாணிகக் கிளை பொறுப்புடையதாக இருந்துவந்தது. முன்பெல்லாம் பட்டு, கம்பளி, பருத்திப் பண்டங்கள், அவுரி முதலியவற்றில் கம்பெனி முதலீடு செய்து வந்தது. பின்னர் வெடியுப்பு வாங்குவதிலும், 1770ஆம் ஆண்டுமுதல் பதப்படுத்தப்படாத பஞ்சினை வாங்குவதிலும் கம்பெனி முதலீடு செய்தது. 1756ஆம் ஆண்டுவரை

16

இங்கிலாந்து காசுகள் வடிவில் அனுப்பிவந்த (specie) பணத்திற்கு இவ்விந்தியப் பொருள்கள் பகுதி பகுதியாக ஏற்றுமதி செய்யப்பட்டன; அதன்பிறகு வங்காளத்தின் வருவாயைக் கொண்டு வாணிகப் பொருள்களில் கம்பெனி முதலீடு செய்தது. இந்த முதலீட்டை வாணிகக் கழகம் கண்காணித்து வந்தது. இம் முதலீடுகள் உண்மையில் பல வாணிகத்துறைத் துணைக் காப்பரசின் ஆளுநர்களால் ஒப்பந்தங்களின் மூலம் செய்யப்பட்டுவந்தன. வருவாய்த்துறை அல்லது கம்பெனியின் பொதுக் கிளை, சிவில் ஆட்சி முறையினை நடத்திவந்தது. உண்மையில் வரிகளைத் தண்டுவதும், பொதுத்துறை நீதியை நாட்டுவதுமே அதனுடைய கடமைகளாக இருந்துவந்தன. (குற்றவியல் நீதியை நவாப்பு தம்முடைய பிரதிநிதியாகிய முகமது ரசாக்கானின் மூலம் நிலைநாட்டிவந்தார்.) வருவாய்த் துறைக் கட்டுப்பாட்டைக் கல்கத்தாவில் இருந்துவந்த வருவாய்த்துறைக் கழகம் கண்காணித்து வந்தது. நிலத் தீர்வைகளைத் தண்டுவதையும், உள்நாட்டுச் சுங்க வரிகளைத் தண்டுவதையும் பிரிட்டனிலிருந்து வந்து பணியாற்றும் தண்டல்நாயகங்கள் மேற்கொண்டிருந்தனர். அபின் வாணிகம் அரசாங்கத்தின் முற்றுரிமையாக இருந்துவந்தது. அது ஒப்பந்தத்தின்பேரில் இந்தியருக்கு விடப்பட்டிருந்தது; அதே சமயத்தில் 1780ஆம் ஆண்டுமுதல் உப்பு வாணிகம் கல்கத்தாவின் நேரடியான கண்காணிப்பில் இருந்துவந்தது. தலைமை ஆலோசனை மன்றத்தினால் ஆண்டுதோறும் உப்பின் விலை நிர்ணயிக்கப்பட்டுவந்தது. மாவட்டங்களில் ஐரோப்பிய அதிகாரிகள் இப்பொழுது நன்கு பழக்கப்பட்டவர்களாகி விட்டனர். பெரும்பான்மையான மாவட்டங்களில் ஒரு தண்டல்நாயகமும் ஒரு நீதிபதியும் தவறாமல் இருந்து வந்தனர். சில மாவட்டங்களில் வாணிகத் துணைக் காப்பரசின் ஆளுநர்களும் அவர்களுடன் இருந்துவந்தனர்.

இதுவரையில் அரசின் இருவகைத் துறைகளிலும் பணியாற்றுகின்றவர்கள் ஒரு துறையிலிருந்து மற்றொரு துறைக்கு மாற்றிக்கொள்ளலாம்; அல்லது மாற்றப்படலாம். வாணிகத்துறையில் முறையாகப் பெற்ற பழக்கங்களும் நோக்கங்களும் அரசியல் துறையில் நல்ல ஆட்சிமுறையினை எவ்வாறு நேர்மையற்ற வகையில் தப்பெண்ணம் கொள்ளச் செய்யும் என்பதை நாம் எளிதில் காணலாம். காரன்வாலிசின் முதல் கருத்துமிக்க செயல், இவை இரண்டையும் வேறுபடுத்துவதாக அமைந்தது. 1789ஆம் ஆண்டில் கம்பெனியின் எல்லா ஊழியர்களும் எந்தத் துறையில் வேலை செய்ய விரும்பு

கின்றனர் என்பதைத் தெரிவிக்குமாறு அறிவிக்கப்பட்டனர். அதன் பிறகு அவரவர்கள் விரும்பிய துறைகளிலேயே நிலைத்திருந்து பணிபுரியலாயினர். 1834ஆம் ஆண்டில் அதன் வாணிகச் செயல்முறைகள் நிறுத்தப்படுகின்ற வரையில் கம்பெனியின் வாணிகத்துறை அக் காலத்தில் பெற்ற வடிவத்தோடே இருந்துவந்தது. திருத்தியமைக்கப்பெற்ற வாணிகக் கழகம் அதனுடைய வாணிகச் செயல்முறைகளை இயக்கி வந்தது. வாணிகத் துணைக்காப்பரசின் ஆளுநர்கள் கையிலேயே ஆண்டுதோறும் முதலீடு செய்வது இருந்துவந்தது. வாணிகத் துணைக் காப்பரசின் ஆளுநர்களுக்கு அரசியல் அதிகாரங்கள் ஒன்றும் கிடையாது; அவர்கள் செயலாண்மைப் பிரதிநிதிகளாகப் பணிபுரிந்து வந்தனர். (ஆண்டுதோறும் அவர்களிடம் ஒப்படைக்கப்பட்ட பணத்தின் மதிப்பிற்கேற்ப) முதலீடு செய்யப்படும் தொகையின் மதிப்பிற்கேற்ப அவர்கள் கழிவுத் தொகையாகிய ஊதியத்தைப் பெற்றுவந்தனர். அவர்கள் தனிப்பட்ட வகையில் வாணிகம் செய்துகொள்ளுவதற்கு அனுமதிக்கப்பட்டனர். அவர்களைப் பொறுத்த வரையில் தனிப்பட்ட வகையில் வாணிகம் செய்துவருவது நிறுத்திக்கொள்ள முடியாததொரு பழக்கமாக எல்லாராலும் ஏற்றுக்கொள்ளப்பட்டிருந்தது என்பது இங்குக் குறிப்பிடத்தக்க செய்தியாகும். ஆனால், இப் பழக்கம் கடுமையானதொரு தீமையாக இருந்த நிலை மாறிவிட்டது. ஏனெனில், அவர்கள் தனிப்பட்டதொரு பதவியில் இருந்தாலும், பணிபுரியும் காலம் முழுவதிலும் அவர்கள் அரசியல் அதிகார உரிமையற்றவர்களாகவே விடப்பட்டனர். இம்பேவைப்பற்றி (Impey) மெக்காலே பயன்படுத்தியுள்ள சொற்களாவன: 'அவர்கள் செல்வர்களாகவும் அமைதியுடையவர்களாகவும் இருந்தனர். அவர்களுடைய அரசியல்துறைத் தோழர்களைப் புகழ்பெற்று விளங்குமாறு அவர்களிடத்து அதை விட்டுவிட்டனர்' என்பதாகும். அரசினுடைய பொதுத்துறையின் அரைப்பகுதி இப்பொழுது பொதுத்துறை (சிவில் செயல்முறைகளும் படைத்துறைச் செயல்முறைகளும்) என்றும், வருவாய்த்துறை என்றும் பிரிக்கப்பட்டன. வருவாய்த்துறையினைச் சார்ந்தே சிவில் நீதித்துறையும் வழங்கிவந்தது. இப்பொழுது நாம் இதற்குமேல் காரன்வாலிஸ் வருவாய்த்துறையிலும் நீதித்துறையிலும் சீர்திருத்தங்கள் செய்ததைப் பார்ப்போம்.

பெரிதும் வேளாண்மைச் சார்புடைய சமூகங்களில் எல்லாம் காணப்படுவதைப் போன்று இந்தியாவில் பொது

வருவாய்க்குரிய முதன்மையான வள ஆதாரமாக நிலமே இருந்துவந்தது. எனவே, நில உரிமை முறையும், தீர்வை நிர்ணயிக்கும் முறைகளும், நில வருவாயைத் தண்டும் முறையும் நாட்டு ஆட்சிமுறைக்கும் மக்களுக்கும் அடிப்படையில் முக்கியத்துவம் வாய்ந்ததாகும். பன்னெடுங்காலமாகக் கடைப்பிடித்துவரப்படும் பண்டை நிலவுரிமை முறைமையினுல் அது ஒழுங்குபடுத்தப்பட்டிருந்தது. அவர்களுடைய தீர்வை முறையே சிற்சில மாற்றங்களுக்கும் ஒழுங்குமுறைகளுக்கும் உட்பட்டு இருந்தது. மக்கள் கண்டிப்பில்லாத தீர்வை விதிப்பையும் நேர்மையான தண்டல் முறையையும் ஆவலோடு எதிர்பார்த்தனர். அரசு திருத்தமான செய்திகளையும் நம்பிக்கைக்குரிய தண்டல் முறையையும் அறிய விரும்பியது. உழவனுடைய விளைவார்வமும் நல்ல அரசாங்கத்தின் கருத்தும் பொருத்தமாக அமைந்தன. ஆனல், பணத்திற்கான பற்ருக்குறை கம்பெனிக்கு உண்டானல் அல்லது உள்நாட்டுப் பகைமைப் பூசல்களால் கம்பெனியின் கருத்து வேறு பக்கம் திருப்பப்படுமானல், நெடுங்காலத்திற்குரிய நீதி முறை, முதுமொழிகளைக் கடைப்பிடிக்கும் பழக்கம் தற்காலிகமாக ஒதுக்கிவைக்கப்பட்டது; மேற்பார்வையிடுவதில் கண்டிப்புக் குறைந்துவிடும்; வரிகளைத் தண்டும் பிரதிநிதிகள் கசக்கிப் பிழியப்படுவர் அல்லது நிலத்தை உழும் உழவர்களைக் கசக்கிப் பிழிந்து வரியைத் தண்டுமாறு அவர்கள் அனுமதி கொடுக்கப்படுவர். இவ் அனுமதியைப் பெற்றவுடன் அப் பிரதிநிதிகள் கடுமையான முறையில் வரி செலுத்து மாறு கொடுமைகள் செய்வதும், தண்டனை கொடுத்து வரி தண்டுதலும், அதனல் நாட்டுப்புற மக்கள் அல்லற்பட்டு ஆற்ருது அழுது கண்ணீர் வடிப்பதும் இயல்பாயிற்று.

1765ஆம் ஆண்டில் வங்காளத்தில் பிரிட்டிஷாருக்கு 'திவானி' (Diwani) உரிமை அளிக்கப்பட்டபொழுது நடைமுறையில் இருந்துவந்தது ஜமீன்தாரி முறையாகும். உழவர்கள் தம்முடைய விளைச்சலில் நிலையாக நிர்ணயிக்கப்பட்ட பங்கினைப் பொருளாகவோ, பணமாகவோ வரி தண்டுவோரிடம் செலுத்திவந்தனர். அவ்வாறு வரி தண்டியவர்களுக்குத் தாம் ஜமீன்தார்கள் (பெருநிலக்கிழார்கள்) என்ற பெயர் வழங்கியது. அவர்கள் செலுத்தவேண்டிய வரியின் பங்கு மொத்த விளைச்சலில் மூன்றிலொரு பங்காக இருந்துவந்தது; அல்லது அதற்குச் சிறிது கூடுதலாகவோ, குறைவாகவோ இருந்திருக்கலாம். அரசிற்காக உழவர்களிடமிருந்து ஜமீந்தார் பெற்ற பொருளில் பத்தில் ஒன்பது பங்கினை அவர்

அரசாங்கத்திற்குச் செலுத்திவந்தார். மற்ற ஒரு பங்கினைத் தம்முடைய உழைப்பிற்குரிய ஊதியமாக அவர் நிறுத்திக் கொண்டார். வழக்காற்றினால் ஜமீந்தார் மரபுவழி உரிமையைப் பெற்றார். அவர்கள் தங்கள் தந்தையை அடுத்துப் பதவிக்கு வருகிறபொழுது அரசிற்குத் திறைப்பொருள் செலுத்தி வந்தனர். ஆனால், அவருடைய உடைமையை அரசாங்கத்தின் இசைவைப் பெற்றே அவர் விற்கவேண்டும் என்னும் முறை கடைப்பிடிக்கப்பட்டுவந்தது. குறிப்பிட்ட காலத்திற்குள் தீர்வையைச் செலுத்த எந்த ஜமீந்தாராகிலும் தவறுவாரானால், அவர் தண்டம் செலுத்தவேண்டும் அல்லது சிறைப்பிடிக்கப்படுவார்; அல்லது கசையடி பெறுவார். ஆனால், அவருடைய உடைமைகளை அரசு பறிமுதல் செய்வது கிடையாது. இந்த வருவாய்த்துறை உரிமைகளோடும் கடமைகளோடும் கூடுதலாகச் சிற்சில சமயங்களில் மாநில அரசு விதிக்கும் கூடுதல் வரியை ஒழுங்குபடுத்தும் கடமையும் மேற்கொள்ளவேண்டிய பொறுப்பும் ஜமீந்தாரைச் சாரும். அவருடைய மாவட்டத்தின் பொதுவமைதியை நிலை நாட்டுவது அவருடைய பொறுப்பிலேயே இருந்துவந்தது. இவ்வாறு வங்காளத்தின் ஜமீந்தார்கள் அனைவரும் சேர்ந்து மாநில உயர்குடியாட்சி முறையினை அமைத்தனர். அவர்கள் வருவாய்களைத் தண்டுவோராகவும், குற்ற விசாரணை நீதிபதியாகவும், உள்நாட்டு வாணிகக் கோமான்களாகவும், செல்வர்களாகவும் விளங்கினர். ஆனால், பிரிட்டிஷாரின் கருத்துப்படி அவர்கள் நிலக்கிழார்களும் அல்லர்; நிலவுடைமைப் பிரபுக்களுமல்லர். தீர்வையைத் தண்டும் மரபுவழி அதிகாரிகளான உயர்குடியாட்சியினராகவும், குற்ற விசாரணை புரியும் நீதிபதியாகவும், பெருஞ்செல்வர்களாகவுமே பிரிட்டிஷார் அவர்களைக் கருதினர். தோற்றத்தில் அவர்களுடைய பண்ணைகள் பிரிட்டிஷ் நிலக்கிழார்களுடையதைப்போன்று தோன்றின. ஆனால், அமைப்பிலே அவர்கள் முதன்மையான வேறுபாடுடையவர்களாக விளங்கினர். இம்முறை அதற்கேயுரிய தடைகளையும் சமநிலைகளையும் உடையதாக இருந்தது. உழவன் தன்னால் செலுத்தக்கூடிய பொருளின் அளவினை ஏமாற்றிவிடுவானோ என்று அஞ்சி ஜமீந்தார் எப்பொழுதும் உழவர்களிடம் மிக நெருங்கிப் பழகிவந்தார். ஜமீந்தார் கொடுங் கொள்ளைக்காரனாக இருந்தால், உழவன் அந்த ஜமீந்தாரின் பண்ணையை விட்டுவிட்டு மற்றொரு ஜமீந்தாரின் பண்ணைக்குச் சென்று குடியேறிவிடுவான்; அல்லது உழவர்கள் பலர் ஒரு குழுவாகச் சேர்ந்துகொண்டு கொடுமையைப்

பொறுக்கமாட்டாமல் வேறு ஜமீந்தாருடைய பண்ணைக்குச் சென்றுவிடுவர். எனவே, ஜமீந்தார் தமக்குரிய வரிவிதிப்புகளையே நம்பி வாழவேண்டியவராக இருந்தார். எனவே, கடுமையான அடக்குமுறை அதனுடைய நோக்கத்தைத் தோல்வியடையச் செய்வதோடு, ஜமீந்தாரையும் பாழ்படுத்திவிடும்.

முதலில் பிரிட்டிஷார் இந்தியப் பிரதிநிதிகளின் மூலம் செயலாற்றிவந்தனர். அதுவரை அம் முறை யாதோர் இடர்ப்பாடும் இல்லாமல் இயங்கிவந்தது. 1772ஆம் ஆண்டு ஹேஸ்டிங்ஸ் அதைக் கண்காணிக்கும் பொறுப்பை ஏற்றுக் கொண்ட பிறகு, அவருடைய ஆட்சிமுறையின் மிகக் குறைந்த வெற்றியைத் தருவதாக அது அமைந்தது. ஐந்தாண்டு நிலத் தீர்வை நிர்ணயமுறை ஒன்று அவர் காலத்தில் பரிசோதிக்கப் பட்டது. யார் மிக அதிகமாக வரியைத் தண்டிக் கொடுப்பதாகச் சொல்லுகிறார்களோ அவர்களுக்கே நாடு முழுவதும் விடப்பட்டது. இத்தகைய பரிசோதனை, நாட்டிலே பெரும் பஞ்சம் உண்டாகி இரண்டு ஆண்டுகள் முடிவதற்குள்ளாகவே செய்யப்பட்டது. அதன் பிறகு ஆண்டுதோறும் நிலத்தீர்வை நிர்ணயமுறை பரிசோதிக்கப்பட்டது. அதன் விளைவாக நிலைத்த தீர்வைமுறை மறைந்தது; நம்பிக்கை இழக்கப் பெற்றது; நாட்டுப்புற மக்களிடையே சோம்பேறித்தனம் உண்டாயிற்று. வருவாய்த்துறை வேளாண்மை கல்கத்தாவிலிருந்த பண முதலாளிகளுக்கு இடையே ஒருவகை ஊக வாணிகமாக மாறியது. வருவாயை மிகுதிப்படுத்த வேண்டும் என்ற ஆவலினாலும், வரிகளை அரசுக்குச் செலுத்துவதில் பேரார்வம் காட்டிவந்தமையாலும் நிலத்தைப் பயிரிடுவோருக்கும் வரியைத் தண்டுவோருக்கும் இடையே இருந்து வந்த பண்டைத் தொடர்பு அறுந்தொழிந்தது. பண்டை மரபு வழிவந்த பிரதிநிதிகள் வேற்றிடங்களுக்கு மாற்றப்பட்டமையாலும், நாட்டின் நிலைமைகளைப்பற்றி ஒன்றும் அறியாதவர்கள் வரிதண்டும் அதிகாரம் பெற்றதனாலும் வங்காள மாநிலத்தின் நாட்டுப்புற வாழ்க்கை முழுவதும் பாதிக்கப் பட்டது. பிரிட்டிஷ் தண்டல்நாயகங்கள் அமர்த்தப்பட்டதனால் நாட்டு நிலைமையில் எத்தகைய முன்னேற்றமும் உண்டாகவில்லை. நாட்டுப்புறத்தைப்பற்றிய போதிய அறிவோ, அவற்றிடத்து அக்கறையோ அவர்களுக்கு இல்லை. அவர்கள் எல்லாரும் செல்வத்தைத் திரட்டும் கனவாகிய மந்திரத்தால் மயக்குற்றுக் கிடந்தனர். மொத்தத்தில் அவர்கள் கல்கத்தாவிலிருந்த கூட்டல் கழித்தல் கணக்குப்

பார்க்கும் மனிதத்தன்மையற்ற இயந்திரத்தின், உணர்ச்சியே இல்லாத பிரதிநிதிகளாக இருந்தனர்.

இப் பிரச்சினையைப்பற்றிக் கருத்தைச் செலுத்தத் தொடங்கிய பாராளுமன்றமும் நிலக்கிழார்கள் கூடியுள்ள மன்றமாகும். அவர்கள் ஜமீந்தார்களோடு ஒருவகையான தொடர்புடையவர்களாகத் தங்களைக் கருதிக்கொண்டனர். எனவே, வெப்பமண்டலத்தில் தங்களுடைய மறுபதிப்பே ஜமீந்தார்கள் என்று அவர்கள் கருதலாயினர். இக் காரணங் களினால்தான் 1784ஆம் ஆண்டு பிட் இந்தியச் சட்டம் நிறை வேற்றப்பட்டபொழுது ஜமீந்தார்களின் நன்மைக்காகப் பாராளுமன்ற உறுப்பினர்கள் சில விதிமுறைகளைச் சேர்த் தனர். ஆண்டுதோறும் குத்தகைக்கு விடுவதைக் கைவிடு மாறு அவர்கள் வற்புறுத்தி வந்தனர். வரிகளைத் தண்டு கின்ற ஜமீந்தார்களுக்கு 'நிலையான விதிமுறைகளை' நேரடி யாக வகுத்துத் தருமாறு அவர்கள் அறிவித்தனர். காரன் வாலிஸும்கூடப் பெரியதொரு நிலக்கிழாராவர். அவர் நல்ல தொரு நிலக்கிழார் மரபைச் சேர்ந்தவராவர். உண்மை நிகழ்ச்சிகளைப்பற்றி ஆராய்வதற்கு முன்பே அப் பிரச்சினைக்கு உரிய முடிவு முன்கூட்டியே முடிவு செய்யப்பட்டது. ஆயினும், உண்மை நிகழ்ச்சிகளும் ஆராயப்பட்டன. முதல் விசாரணை களை ஹேஸ்டிங்ஸே தொடங்கிவைத்தார். அவருடைய ஆதர வின்கீழ்தான் ஜான்ஷோரும் சார்லஸ் கிராண்டும் ஜமீந்தாரி முறையைப்பற்றி ஆராய்ந்து அறிக்கைகள் தயாரித்தனர். காரன்வாலிஸ் இச் செய்முறையினைச் செறிவார்வம் உடைய தாக்கினார். அவருடைய மாண்புமிக்க முற்பதவியாளரைக் காட்டிலும், நிலத்திடத்துத் தமக்கு உள்ள இயல்பூக்கத்தினால் பேரளவிற்குப் புரிந்துகொள்ளும் உணர்வினையுடையவராக அவர் விளங்கினார். 1789ஆம் ஆண்டில் ஷோரின் ஆராய்ச்சி யின் பயனாகப் பத்தாண்டுகளுக்கு நிலத்தீர்வை நிர்ணயம் செய்யப்பட்டது. காரன்வாலிஸினுடைய ஆட்சிக் காலத்தின் இறுதி நிலையில்—1793ஆம் ஆண்டு அந் நிலத்தீர்வை நிர்ண யத்தை நிலையாக்குமாறு டண்டாசை அவர் வற்புறுத்தினார். ஷோர் இச் செயல்திட்டத்தை எதிர்த்தார். ஆனால், விம்பின் டனில் பிட்டும் ஷோரும் ஒன்றாகச் சேர்ந்து பத்து நாட்கள் ஆராய்ந்த புகழ்மிக்க ஆராய்ச்சி, ஷோருக்கு எதிரான முடிவு களை எடுக்குமாறு செய்தது. 1793ஆம் ஆண்டு, மார்ச்சு மாதம் 22ஆம் நாள் நிலையான நிலவரி ஏற்பாடு (Permanent Settlement) சட்டமாக்கப்பட்டது. ஜமீந்தார்கள் நிலக்கிழார்க ளென்று ஒழுங்குமுறைப்படுத்தப்பட்டனர். அவர்கள்

தண்டல்நாயகங்களின் மூலம் முன்பெல்லாம் செலுத்திவந்ததைப்போலவே தண்டப்பட்ட வரித்தொகையில் பத்தில் ஒன்பது பங்கை அரசாங்கத்திற்குச் செலுத்தவேண்டும் என்றும், சிறிய நிலக்கிழார்கள் துணைத் தண்டல்நாயகங்களிடம் நேரடியாகச் செலுத்தலாம் என்றும் அச் சட்டம் அறிவித்தது. பிரிட்டிஷ் தண்டல்நாயகங்களுடைய கொடுமையிலிருந்து உழவர்கள் காப்பாற்றப்படவேண்டும் என்ற விதியும் அச் சட்டத்தில் இடம்பெற்றது.

இந்த நிலையான நிலவரி ஏற்பாடு பலவகையில் பழித்தும் புகழ்ந்தும் பேசப்படுகிறது. மூன்று மாநிலங்களின் வாழ்க்கையில் அச் சட்டத்தினுல் எத்தகைய விளைவுகள் உண்டாயின என்பதை நாம் மதிப்பிடவேண்டும். நடைமுறையில் இருந்துவந்த உழவுமுறைக்குப் புதிய தீர்வை மிகவும் அதிகமாக இருந்தமையால், இதனுல் உண்டான முதல் விளைவு மேலும் சிறிது காலத்திற்கு நிலத்தீர்வை முறையில் குழப்பத்தை உண்டாக்கியது. மிகப் பழமையானவர்களும் நன்கு சிறப்புற்று விளங்கியவர்களுமான ஜமீந்தார்களாலும் அவர்களுடைய புதிய கடமைகளைச் செம்மையாகச் செய்ய இயலாமற்போயிற்று. சிறைப்பிடிக்கப்படுவதற்கோ, கசையடி கொடுக்கப்படுவதற்கோ பதிலாக அவர்கள் மனிதப் பண்பினை மதித்துப் போற்றும் வகையில், ஆனுல், ஈவு இரக்கமற்ற வகையில் விலைகூறி விற்கப்பட்டனர். அவர்களுடைய இடங்களை எல்லாம் கல்கத்தாவில் பெரும் பொருளை வைத்துக்கொண்டிருந்தவர்கள் பிடித்துக்கொண்டனர். இவ்வாறு ஜமீந்தார் குழுவின் பண்பு நலன்கள் பெருமாறுதல்களுக்கு உள்ளாயின. 1800ஆம் ஆண்டு அவற்றிலிருந்து வெளிப்பட்டு நிலையாகத் தோன்றத் தொடங்கிய ஜமீந்தார்களின் குழு, 1765ஆம் ஆண்டில் இருந்துவந்த ஜமீந்தார் குடும்பங்களுக்குப் பெரிதும் வேறுபட்ட குடும்பங்களாக இருந்தன. தனிப்பட்ட வகையில் ஜமீந்தாருக்கும் உழவருக்கும் இடையே இருந்துவந்த பிணைப்புப் பல வழக்குகளில் முறிந்துபோயிற்று. தலத்தில் இல்லா நிலக்கிழார்கள் பேரளவில் பெருகிவிட்டனர். வங்காளத்தின் நாட்டுப் புறங்களில் நிலைபேற்றினை மீண்டும் நிலைநாட்டும் பிரச்சினை இதனுடைய அடுத்த விளைவாகத் தோன்றியது. பேரளவிற்கு ஜமீன்தார்களின் வகுப்புப் புதியதாக இருந்தது. ஆனுல், அது நிலையானதொரு வகுப்பாக இருந்தது. ஆளுகின்ற அரசோடு ஆர்வமென்னும் ஆற்றல் மிக்க பிணைப்பினுல் நன்கு கட்டுண்டிருந்தது. நிலையான நிலவரி ஏற்பாடு செய்யப்பட்ட காலத்தில் உழுது பயிரிடு

வதற்குரிய பேரளவான நிலம் தரிசாகக் கிடந்தது. மக்கள் தொகையின் பெருக்கமும் பாதுகாப்பு அளிக்கப்பட்டமையும் இந் நிலங்களையெல்லாம் உழுது பயிரிடுமாறு தூண்டியது. புதிய ஜமீந்தார் குடும்பங்களினுடைய பணப்பெட்டிகளை உயர்த்தப்பட்ட வரிப்பொருள்கள் சென்று நிறைத்தன. ஏனெனில், அரசாங்கத்தின் நிலத்தீர்வை நிலையானதாக நிர்ணயிக்கப்பட்டமையால், மிகுதியாகக் கிடைக்கும் பொருள் ஜமீந்தார்களின் பணப்பெட்டிகளை நிரப்பியது. இவ்வாறு பத்தொன்பதாம் நூற்றுண்டில் ஜமீந்தார்கள் வங்காளத்தின் வேளாண்மை உற்பத்திப் பெருக்கத்தின் பயனை நன்கு அனுபவித்தனர்; அதனுடன் அவர்கள் செல்வக் கோமான்களாகச் சிறப்புற்றதோடு பாதுகாப்புமிக்கவர்களாகவும் விளங்கினர். தாகூர்களின் குடும்பம், லாக்களின் (Laws) குடும்பம் போன்ற சில ஜமீந்தார் குடும்பங்கள் தங்கள் செல்வத்தைப் பொது நன்மைக்காகவும், கலைகளைப் போற்றி வளர்ப்பதற்காகவும் பயன்படுத்தின. மற்றவர்கள் அயர்லாந்து முறையினைப் போன்று தலத்தில் இல்லா நிலக்கிழார்கள் முறையைப் போற்றிப் பின்பற்றினர். ஜமீந்தார் சமூகத்தின் மதிப்பில் உயர்ந்த நிலையை எய்திய அதே சமயத்தில் உழவன் மிகத் தாழ்ந்த நிலையை அடைந்தான். ஏனெனில், அவர்கள் எல்லாம் இப்பொழுது சட்டப்படி வரிசெலுத்தும் குத்தகைக் குடிகளாகவே கருதப்பட்டனர். அதனால் அவர்கள் எச் சமயத்திலும் நிலத்திலிருந்து வெளியேற்றப்படலாம். அவர்களுடைய வழக்காற்றுத் தொழில் உரிமைகள் மறக்கப்பட்டன. இந்தப் புதிய செல்வ வளத்தில் அவர்கள் சிறு பங்குகூடப் பெறவில்லை. 1859ஆம் ஆண்டுவரை வங்காள நிலச்சட்டம் அவர்களுடைய நலன்களைக் காப்பதற்கு ஒன்றுமே செய்யவில்லை. பழைய குடும்பங்கள் சிதறிப்போனமையால் உழவர்களுக்கும் ஜமீந்தார்களுக்கும் இடையே இருந்துவந்த தனிப்பட்ட தொடர்பு முறிந்துபோனமையும், ஜமீந்தாருடைய காவலர் படையும் வருவாய்த்துறை அதிகாரமும் பறிக்கப்பட்டமையும் அவர்களிடையே இருந்துவந்த செயல் முறைத் தொடர்பினைப் பழுதுபடச் செய்தன. இதுமுதல் ஜமீந்தார் என்பவர் வரி தண்டுவோராக மட்டும் பணியாற்றி வந்தார். எனவே, உழவர்கள் வரி செலுத்துவோராக விளங்கினர். நிலையான நிலவரி ஏற்பாடு வங்காளத்தின் நாட்டுப்புறப் பகுதிகளில் ஒழுங்கையும் அமைதியையும் மீண்டும் நிலைநாட்டியது; வேளாண்மை தொழில் வளர்ச்சிக்குரிய சூழ்நிலைகளைத் தந்துதவியது. ஆனால், நாட்டுப்புறச் சமூகத்தின் இரு வகுப்பினரிடையே இருந்துவந்த உறுப்புகளுக்குரிய

பிணைப்பிற்குப் பதிலாகத் தனிமுறைச் சார்பற்ற கைப்பணத் தொடர்பினை உண்டாக்கியது. இதுமுதல் அவ்விரு வகுப்பினரும் தொடர்பற்றவர்களாகவும் பகைமையுணர்வு உடையவர்களாகவும் மாறினர். அமைதியும் முன்னேற்றமும் அரிதின் முயன்று பாதுகாவலுடன் பெறப்பட்டன. ஆனால், சமூக நீதி நிலைநாட்டப்படவில்லை. ஆண்டு நிர்ணயங்கள் மிகவும் நெகிழ்ச்சியுடையனவாக இருந்தன என்றால், நிலையான நிலவரி ஏற்பாடு மிகவும் உறுதியானதாக இருந்தது. இவ்விரு முறைகளுக்கும் இடையே நாற்பதாண்டுகள் கழிந்த பிறகுதான் முப்பதாண்டுகளுக்கு ஒருமுறை நீண்டகால நிலவரி நிர்ணய முறையாகிய புதுவழியைக் கண்டனர்.

வங்காளத்தின் மாவட்டங்களைக் காரன்வாலிஸ் திருத்தி அமைத்த சீர்திருத்தத்திலும், நீதித்துறை ஆட்சிமுறையிலும் நிலையான நிலவரி ஏற்பாடு புகுத்தப்பட்டது. 1786ஆம் ஆண்டின் சீர்திருத்தங்களை அடிப்படையாகக் கொண்டே மாவட்ட ஆட்சிமுறை அமைக்கப்பட்டிருப்பதைக் காரன்வாலிஸ் கண்டார். அச் சட்டம்தான் 35 மாவட்டங்களை அமைத்ததையும், ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு தண்டல் நாயகத்தைப் பதவியில் அமர்த்தியதையும், அவர்களை மேற்பார்வையிட ஒரு வருவாய்த்துறைக் கழகத்தை நிறுவியதையும் நாம் முன்பு கண்டோம். அவற்றை அடிப்படையாகக் கொண்டு, காரன்வாலிஸ் தம்முடைய திட்டங்களைச் செயலாற்றத் தொடங்கினார். வருவாய்த்துறைக் கழகம் திருத்தியமைக்கப்பட்டது. அதனுடைய உறுப்பினர்கள் முப்பத்தைந்திலிருந்து இருபத்துமூன்று பேராகக் குறைக்கப்பட்டனர். ஒவ்வொரு மாவட்டத் தண்டல் நாயகத்திற்கும் இரண்டு ஐரோப்பிய உதவியாளர்கள் அமர்த்தப்பட்டனர். இதற்கு முன்பு மாவட்டத் தண்டல் நாயகத்திற்கு ஊதியம் மாதத்திற்கு 1,200 ரூபாய் அளிக்கப்பட்டது. இதனால் உண்டாகும் பற்றாக்குறையைப் போக்கிக்கொள்வதற்காக அவர் தனிப்பட்ட முறையில் வாணிகம் செய்துகொள்ளுவதற்கு அனுமதிக்கப்பட்டார் என்பதை உய்த்துணரலாம்.[1] எனவே, அவருடைய ஊதியத்தைப் பிழைப்பூதியமாக மாதத்

[1] 1773ஆம் ஆண்டு நிறைவேற்றப்பட்ட ஒழுங்குமுறைச் சட்டத்தினால் தண்டல் நாயகங்களும், குறிப்பிட்ட அதிகாரிகள் சிலரும் தனிப்பட்ட வகையில் வாணிகம் செய்வதையும், பரிசுப் பொருள்களைப் பெறுவதையும் தடை செய்தனர். பார்க்க: Sir C. Ilbert: 'The Government of India,' 3rd ed., p. 49.

திற்கு ரூபாய் 1,500 ஆகக் காரன்வாலிஸ் உயர்த்தினர். இதற்குமேல் அவருக்கு அவர் தண்டிய வரிகளுள் ஒரு விழுக்காடு தரகு அளிக்கப்பட்டது. அது அவருக்குப் 'பரிசாக'க் கொடுக்கப்பட்டது. பர்துலான் போன்ற மிகப்பெரிய மாவட்டத்தில் 'இப் பரிசுத் தொகை' ஆண்டிற்கு 27,500 ரூபாய் அளவிற்குக் கிடைத்தது. ஆனால், அதே சமயத்தில் தண்டல்நாயகம் தனிப்பட்ட வகையில் வாணிகம் செய்வதைக் கண்டிப்பாகத் தடைசெய்தனர். அச் சட்டம் மிகக் கடுமையாகச் செயல்முறைக்குக் கொண்டுவரப்பட்டது. மாவட்டந் தண்டல்நாயகமே ஆண்டுத் தீர்வையை விதிப்பவராகவும், அவற்றைத் தண்டல் செய்பவராகவும் தொடர்ந்து இருந்திருப்பாரானல், இத் தரகுமுறை பழிப்பிற்குரிய சில விளைவுகளை உண்டாக்கியிருக்கலாம். ஆனல், விரைவில் தீர்வை எவ்வளவு என்பது உறுதிசெய்யப்பட்டது; மாவட்டத் தண்டல் நாயகம் எதிர்பார்க்கக்கூடியது எவ்வளவு என்பது ஒழுங்கு படுத்தப்பட்டது. தண்டல்நாயகத்தினுடைய நேர்மையான நடத்தைக்கு இடையூருக இருந்துவந்த இறுதித் தடையும் இவ்வாறு நீக்கப்பட்டது. இவ்வாறு சிறப்புமிக்க பிரிட்டிஷாரின் மாவட்ட ஆட்சிமுறை அமைப்பின் வரைசட்டம் இந்தியாவில் அமைக்கப்பட்டது.

குற்ற வழக்குகளை விசாரிக்கும் அதிகாரத்தைத் தண்டல் நாயகத்திற்குக் கொடுத்தனர். மேலும், முதலில் பழைய பொருள் வழக்கு நீதிமன்றத்திற்கும் புதிய வருவாய்த்துறை நீதிமன்றத்திற்கும் அவர் தலைமைதாங்கி நடத்திவைத்தார். ஆனல், இத் திருநிலைப்பாடு நெடுங்காலம் நிலைத்து நிற்கவில்லை. காரன்வாலிஸ் பட்டறிவுப் பரிசோதனை முறைமூலம் பொருள் வழக்குத் துறை நீதிநிர்வாகத்தையும், குற்றவியல் நீதிநிர்வாகத்தையும் திருத்தியமைத்தார். பொருள் வழக்குத் துறை நீதிக்கு மாவட்ட நீதிமன்றங்கள் நிறுவப்பட்டன. அவை பொருள் வழக்குகளையும் வருவாய்த்துறை வழக்குகளையும் கவனித்துவந்தன. அவற்றிற்கு மேலாக நான்கு மாநில நீதிமன்றங்கள் இருந்தன. அவை கல்கத்தா, மூர்ஷிதாபாத், டாக்கா, பாட்ன ஆகிய இடங்களில் அமைக்கப்பட்டன. இதற்குமேல் மிக முக்கியமான வழக்குகளை மேல்முறையீடு செய்வதற்காக உச்ச நீதிமன்றம் 'சதர் திவானி அதலத்' (Sadr Diwani Adalat) என்னும் பெயரில் அமைக்கப்பட்டது. அதே சமயத்தில் இவ்வகையிலேயே குற்றவியல் நீதித்துறையும் திருத்தம் செய்யப்பட்டது. இதுவரையில் இத்துறை நவாபின் கையில் இருந்துவந்தது. அவருடைய

பிரதிநிதியான முகமது ரசாக்கான் மூர்ஷிதாபாத்தில் இருந்து வந்த 'சதர் நிசாமத் அதலத்' என்னும் மாநில நீதிமன்றத்திற்குத் தலைமை தாங்கி வழக்குகளை விசாரித்து வந்தார். அவருடைய வட்டாரப் பிரதிநிதிகள் அவ்வவ் வட்டங்களில் சிறு சிறு நீதிமன்றங்களை நடத்திவந்தனர். இவ்விரட்டை அதிகாரச் சிக்கலைக் காரன்வாலிஸ் மெல்ல நீக்கினார். அவர் முகமது ரசாக்கானைப் பதவியிலிருந்து நீக்கிவிட்டு, தாமே அப் பதவியை ஏற்றுப் பணிபுரிந்தார். அந் நீதிமன்றம் மூர்ஷிதாபாத்திலிருந்து கல்கத்தாவிற்குக் கொண்டுவரப் பட்டது. அங்கு இந்திய மதியுரைஞர்களோடு கவர்னர்-ஜெனரலைத் தலைவராகக்கொண்ட அவருடைய ஆலோசனை மன்றம் அமர்ந்து வழக்குகளை விசாரித்தது. மாவட்டங்களில் இருந்த நீதிமன்றங்களுக்கு மேலாக மாநிலங்களின் தலை நகரங்களில் சுற்றுலா நீதிமன்றங்கள் (Courts of Circuits) நிறுவப்பெற்றன. ஒவ்வொரு நீதிமன்றத்திலும் இரண்டு ஆட்சிப் பணியாளர் தலைமை தாங்கினர். அவர்களுக்கு உதவியாக இந்திய மதியுரைஞர்கள் அமர்த்தப்பட்டனர். ஆண்டிற்கு இருமுறை அச் சுற்றுலா நீதிமன்றம் மாவட்டங்கள் தோறும் சென்று வழக்கு விசாரணை செய்துவந்தது. இத் தகைய ஏற்பாடுகளின் கீழ், தண்டல்நாயகத்திற்கு வரிகளைத் தண்டும் பணியையும், குற்ற விசாரணை புரியும் பணியையும் மட்டும் விட்டுவைத்தனர். மற்ற உரிமைகளையும் கடமைகளையும் இவ்வாறு குறைத்துவிட்டனர். பொருள் வழக்கு நீதிமன்றங்களுக்கு மாவட்ட நீதிபதிகள் தலைமை தாங்கினர். குற்றவியல் நீதிமன்றங்களுக்குச் சுற்றுலா நீதிமன்றங்களின் நீதிபதிகள் தலைமை தாங்கினர். இவ்வாறு முன்பு வாணிகத் துறைப் பணி வருவாய்த்துறைப் பணியிலிருந்து வேறு படுத்தப்பட்டதைப்போலக் கம்பெனியின் நீதித்துறையை ஆட்சித்துறையிலிருந்து வேறுபடுத்திப் பிரித்துவைக்கும் முறை முதன்முதலாகத் தொடங்கியது. சிறந்த அறிவாளிகளாகிய தண்டல்நாயகம், நீதிபதி என்னும் இருவரைக்கொண்ட வங்காள மாவட்ட அமைப்பினைப்போல மற்ற மாநிலங்களிலும் மாவட்ட ஆட்சிமுறை இயங்கத் தொடங்கியது. பிரிட்டிஷாரின் ஆட்சிக் காலம் முழுவதிலும் இம் முறை பெரு மாற்றங்கள் ஒன்றுமின்றி அப்படியே பின்பற்றப்பட்டு வந்தமை இங்கு நினைவுகூரத்தக்கதாகும். நீதித்துறை வகுப்பினரை ஆட்சித்துறை வகுப்பினரிடமிருந்து பிரிக்கும் முறை முற்றுப்பெறுமாறு செய்யப்பெற்றது. பிற்காலத்தில் அம் முறை வங்காளத்திலும் மற்றப் பகுதிகளிலும் சிறிது மாற்றம்

செய்யப்பட்டதென்றாலும், அது எப்பொழுதுமே உறுதியாகக் கடைப்பிடிக்கப்பட்டுவந்தது.

மேலும், இரு திட்டங்களினால் அம் முறை முழு நிறைவு அடையுமாறு செய்யப்பட்டது. தெளிவான சொற்களின் மூலம் சட்டநீதி எடுத்துரைக்கப்பெற்றது.

> வருவாயைத் தண்டும் தண்டல் நாயகங்களும், அவர்களுடைய அதிகாரிகளும் — அரசாங்கத்தின் எல்லா அதிகாரிகளும்—பதவியிலுள்ள காலத்தில் பணித்துறைச் சார்பில் செய்யப்படும் செயல்களுக்கு அவர்களே பொறுப்புடையவராவர். அச் செயல்களுக்காக அவர்கள் நீதிமன்றங்களினால் விசாரிக்கப்படுவர். உடைமை விவகாரத்தில் குடிமக்களோடு அரசும் ஒரு கட்சியாக இருக்குமானால், இந் நாட்டில் நடைமுறையிலுள்ள சட்டங்கள், ஒழுங்குமுறை விதிகளின்படி அதனுடைய உரிமைகளை விட்டுக்கொடுத்து இவ் வழக்குமன்றங்களின் தீர்ப்புகளுக்குக் கீழ்ப்படிய வேண்டும்.[1]

இவ் விதி என்றுமே கைவிடப்படாமல் பின்பற்றப்பட்டது. இது குடிமக்களின் 'மக்களுரிமை'க்குரிய (civil liberty) இன்றியமையாத அடிப்படையை அமைத்துத் தந்தது எனலாம். இதை அடிப்படையாகக்கொண்டே பிற்காலத்தில் தன்னாட்சி அமைப்பிற்குரிய அரசியல் உரிமையும் வளர்ச்சியுற்றது. மற்றத் துறைகள், செயல்முறைகள் முதலியவற்றைக்காட்டிலும், இக் கருத்தில் பழைய முகலாய இந்தியாவிலிருந்து புதிய பிரிட்டிஷ் இந்தியா வேறு வழியில் செல்லத் தொடங்கியது. பழைய பழக்கவழக்கங்கள் என்னும் செழிப்புமிக்க பயிருக்கு இடையே எதிர்காலத்திற்குரிய விதைகள் விதைக்கப்பட்டன. காவலர் படையினை (Police) நிறுவியது இரண்டாவது சிறப்புமிக்க செயலாகும். நாட்டிலே அமைதியையும் ஒழுங்கையும் நிலைநாட்டுவதற்காக முதலில் கல்கத்தாவிலும், பின்னர் மாவட்டங்களிலும் காவலர் படை நிறுத்தப்பட்டது. ஜமீந்தார்களுடைய கடமையாக இருந்துவந்த அமைதியை நிலைநாட்டும் வேலை அவர்களிடமிருந்து பிரிக்கப்பெற்றதால், இம் முறையினைக் காரன்வாலிஸ் மேற்கொண்டார். இம் முறை பட்டணங்களுக்கு நன்மை

[1] Cornwallis Correspondence, Vol. ii., p. 558.

வதற்கு அவர் நீதியையும் நேர்மையையும் ஆட்சிமுறையில் கடைப்பிடிப்பதற்கு வழிகோலினர்.

## ஆதாரங்கள்

காரன்வாலிஸின் வாழ்க்கை வரலாற்றை முழுவதும் விளக்கும் நூல் ஒன்றுகூட இல்லை. எனவே, W. S. Seton-Karr என்பவர் எழுதியுள்ள 'The Marquis of Cornwallis' (ஆட்சியாளர் வரிசை, 1898 வெளியீடு) என்னும் நூலைப் படிப்பதோடு மனநிறைவு கொள்ள வேண்டும். ஆனல், சி. ராஸ் (C. Ross) பதிப்பித்த 'Correspondence of Charles, First Marquis Cornwallis' (3 Vols., 1859) என்னும் நூல் மிகவும் பயன்தரத் தக்கது. சர் ஜி. ஃபாரஸ்ட்டு (Forrest) என்பவர் எழுதியுள்ள 'Selections from the State Papers of the Government of India' என்னும் நூல் குறிப்பிடத்தக்கது. 'Lord Cornwallis' (2 vols., 1926) என்னும் நூல் படைத்துறைச் செயல்முறைகளைப்பற்றி விரிவாக விளக்குகின்றது. காரன்வாலிஸின் பணிகளைப்பற்றிச் சுருக்கமாகத் தெரிவிக்கும் தற்காலத்துக் கருத்துகளைக் கேம்பிரிட்ஜ் இந்திய வரலாற்றின் தொகுதி v, 26ஆம் அதிகாரத்தில் காணலாம். அதை லிலியன் பென்சன் என்பவர் எழுதியுள்ளார். ஏ. ஆஸ்பினல் (A. Aspinall) என்பவர் எழுதியுள்ள, 'Cornwallis in Bengal' என்னும் நூலும் சிறப்புமிக்கதாகும். வருவாய்த்துறைச் செயல்முறைகளைப்பற்றி அறிய வேண்டுமானல், எஃப். டி. ஆஸ்கோலி (F. D. Ascoli) எழுதியுள்ள 'Early Revenue History of Bengal and the Fifth Report, 1812 (1917)' என்னும் நூலையும், டபிள்யூ. கே. ஃபர்மிங்கர் (W. K. Firminger) எழுதியுள்ள 'Fifth Report on East India Affairs' (3 vols., 1917) என்னும் நூலையும் காண்க. ஜே. மில் (J. Mill) என்பவர், அவருடைய 'வரலாறு' (History) என்னும் நூலில் இச்செய்திகளைத் தெளிவாக விளக்கியுள்ளார்.

# 8. தென் இந்தியா

## (1780—1801)

வடக்கிலிருந்து எப்பொழுதுமே ஓரளவிற்குத் தென் இந்தியா தொடர்பற்றுத் துண்டிக்கப்பட்டதாகவே இருந்துவருகிறது. வானவூர்திகளும், புகைவண்டிகளும், தந்திச் செய்தி முறைகளும் நிறைந்துள்ள இந் நாட்களிலும், தென் இந்தியா தனக்கே சிறப்புடையதாக விளங்கும் தனி வழிகளைப் பின்பற்றிவருகிறது. இறுதியில் வடக்கிற்குக் கீழ்ப்படிந்துபோனாலும், அது தன்னுடைய சிறப்புமிக்க பண்பு நலன்களைப் போற்றிக் காத்துவருகிறது. அதனுடைய சிறப்புமிக்க தனிப் பண்புகள் எப்பொழுதுமே தனியான வகையில் அன்பாதரவுடன் நடத்தப்படவில்லையென்றாலும், அதனுடைய சிறப்புமிக்க பண்புகள் அதற்குத் தேவைப் படுபவைகளாக இருந்துவந்துள்ளன. எனவே, பிரிட்டனின் குடியேற்ற நாடு உருவாகிக்கொண்டிருந்த அக் காலத்தில் எவ்வாறு அது இருந்தது என்பதை அதனுடைய கண் கொண்டே அதை நோக்குவது விரும்பத்தக்கதாகும்.

பதினான்காம் நூற்றாண்டில் துக்ளக்கு பேரரசு சிதறுண்ட பொழுது, தென்னாடு அதனுடைய ஆதிக்க அமைப்பினைத் தானே அமைத்துக்கொண்டது. கிருஷ்ணா ஆற்றிற்குத் தற்கே தோன்றிய விசயநகர இந்துப் பேரரசிற்கும், முஸ் லீம்களின் பாமனி அரசிற்கும் இடையே சமநிலைப்படுத்தும் இடத்தில் அது கால்கொள்ளலாயிற்று. பின்னர் அவற்றின் வழிவந்த வட இந்திய அரசுகளுக்கும் சமநிலையான இடத்தில் அது அமைந்தது. 1565ஆம் ஆண்டில் தலைக்கோட்டைப் போர்க்களத்தில் விசயநகரப் பேரரசு வீழ்ச்சியுற்ற இரு நூற்றாண்டுகள்வரை இந் நிலை நீடித்து வந்தது. அதற்குப் பிறகு பீஜப்பூர், கோல்கொண்டா என்ற இரு முஸ்லீம் அரசுகள் தக்கணத்தின் பெரும்பகுதியைத் தங்களுக்குள்ளே பங்கிட்டுக்

கொண்டன. அவை தெற்குக் கோடியில் இந்துக் குறுநில மன்னர்களுக்கு நாட்டின் ஓரப்பகுதியையும் மலபார் கொங்கணக் கடற்கரைப் பகுதிகளையும் மட்டும் விட்டுவைத்தன. வடக்கிலிருந்து வந்த முகலாயர்களின் தலையீட்டிலிருந்து—கைப்பற்றுதலிலிருந்து இந்து அரசுகள் தப்பிப் பிழைத்தன. அதைப்போன்றே மேற்கில் எழுச்சியுற்ற மராட்டியரின் தாக்குதல்களிலிருந்தும் அவை தப்பிப் பிழைத்தன. பதினேழாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் இவ்வமைப்பு முழுவதும் காலந்தோறும் நடைபெறும் வடநாட்டு ஆதிக்க நிலைநாட்டுதல்களுள் ஒன்றினால் எடுத்தெறியப்பெற்றது. அலாவுதீன் தக்கணத்தைக் கைப்பற்றியதைக் காட்டிலும், அவுரங்கசீபு தக்கண அரசுகளைக் கைப்பற்றியமை முழுநிறைவானதாக அமைந்தது எனலாம். ஆனால், அது நெடுங்காலம் அதைவிட அதிகமாக நிலைத்து நிற்கவில்லை. மேலைக் கணவாய்களில் உண்டான மராட்டியரின் செயல்முறைகள் என்ற புரையோடும் புண்ணினால் தொடக்க காலம்முதற்கொண்டே முகலாய ஆதிக்கம் அழுகிக்கொண்டு வந்தது. அதுவும் விரைவில் அரசுரிமைப் போர்களினால் ஆற்றலற்றுப் போயிற்று. மேலும், வடக்கு நோக்கி முன்னேறியமையும், வடமேற்குப் பகுதியில் அயல்நாட்டார் தலையிட்டமையும் முகலாயப் பேரரசினை ஆட்டம் கொள்ளச் செய்தது. 1720ஆம் ஆண்டுமுதல் முகலாயக் கோட்டைக் காவற் படைகளை அவற்றின் விருப்பம்போல் விட்டுவிட்டனர். அதனால் பதினான்காம், பதினைந்தாம் நூற்றாண்டுகளில் நிலவிய நாடுகளின் ஆதிக்கச் சமநிலை மீண்டும் தலைதூக்கிற்று. இச் சமயம் இரண்டு வல்லரசுகளுக்கு இடையேமட்டும் ஆதிக்கப் போட்டி உண்டாகவில்லை; மூன்று அரசியல் சக்திகளுக்கு இடையேயும் இப் போட்டி உண்டாயிற்று. நாடுகளின் ஆதிக்கச் சமநிலைக்கு இடையூறாகப் புதிதாகத் தோன்றிய அரசு, மேற்கிலுள்ள மராட்டியருடையதாகும். முகலாயர்களின் கடைசி ஆளுநரும் முதல் நைசாமுமான ஆஸப்ஜாவின் தலைமையின்கீழ் ஐதராபாத்து என்னும் உரிமை வாய்ந்த தனியரசை நிறுவுவதற்குத் தக்காணத்திலிருந்த முஸ்லீம்களின் அதிகாரம் பரவலாக மீண்டும் பரவியது. இச் சமயத்தில் பூனாவிலிருந்த பேஷ்வா வெல்லுவதற்கரிய பேராற்றல் வாய்ந்தவராக வளரத் தொடங்கினார்; தெற்கே மீண்டும் இந்துக்களின் ஆதிக்கம் மைசூர் அரசாகத் திடீரென்று தோன்றியது. ஒரிசாவிலிருந்து தஞ்சாவூர் வரையிலுள்ள கடற்கரைப் பகுதியைத் தன்னகத்தே கொண்டிருந்த ஐதராபாத்து மிகப் பெரியதோர் அரசாக அமைந்தது. புதிய

தொரு நிலத்தத்துவ அரசியல் வடிவம் தென்னாட்டில் தோன்றி வளருவதை அந் நூற்றுண்டின் இடைப்பகுதியில் நடைபெற்ற ஆங்கிலேய — ஃபிரெஞ்சுப் போராட்டங்கள் தடைப் படுத்தின. அந் நூற்றுண்டின் இறுதியில் அப் போராட்டங்கள் மற்றோர் அரசியல் சக்தியை உருவாக்கிவிட்டுச் சென்றது. அச் சக்தி கருநாடகச் சமவெளியையும் மேலைக் கடற்கரைப் பகுதியையும் கைப்பற்றி ஆட்சிபுரியத் தொடங்கியது. அதே சமயத்தில் இந்து அரசாக இருந்துவந்த மைசூர், துணிகரச் செயல்வீரர் ஐதர் அலியினுல் இஸ்லாமிய அரசாக மாற்றப்பட்டது. அவருடைய மதிநுட்பத்தால் அவ்வரசு வெல்லுவதற்கு அரியதாக அமைந்தது. அடுத்து இருபது ஆண்டுகள் நடைபெற்ற போர்கள், சிறு அரசுகளை மறைந் தொழியுமாறு செய்து, இந் நான்கு அரசுகளின் ஆதிக் கத்தையும் உறுதிப்படுத்தின. கம்பெனியிடத்துப் பெருங் கடன்காரனுகப் போன கருநாடக நவாபு அறிவுக்கூர்மை யற்றவராகப் போனுர். அவரைப் போன்றே தஞ்சாவூர் அரசும் கம்பெனியைச் சார்ந்திருக்கவேண்டிய நிலையை அடைந்தது. கள்ளிக்கோட்டையைச் சேர்ந்த சமோரின் (Zamorin) அரசர்களின் மூதாதையர் போர்ச்சுகீசியர்களை எதிர்த்துப் போரிட்டவர்களாவர். ஆனுல், அவர்களுட்பட்ட மலபாரின் பழைய அரசர்களின் அரசுகளை மைசூர் கைப் பற்றிக்கொண்டது. திருவாங்கூர் மட்டும்தான் இன்னல் களுக்கும் இடர்ப்பாடுகளுக்கும் இடையே தன்னுடைய ஆட்சி யுரிமையைப் போற்றிக் காத்துவந்தது.

1784ஆம் ஆண்டில் இரண்டாவது மைசூர்ப் போர் முடி வடைந்தபொழுது, கம்பெனியைத் தவிரத் தென்னுட்டில் முதன்மை மிக்க அரசாக மைசூரே விளங்கியது. இத்தகைய முதன்மை இடத்தை மைசூர் பெற்றதற்குரிய காரணங்கள் இரண்டாகும். முதலாவதாக, அதனுடைய காலஞ்சென்ற அரசர் ஐதர் அலியின் மதிநுட்பம், மைசூருக்குத் தக்கணத் தின் அரசியலில் முக்கியத்துவத்தைத் தேடித்தந்தது. இரண் டாவதாக, மைசூரின் நிலவியல் அமைப்புக் குறிப்பிடத்தக்க தாகும். தக்காணத்தில் மைசூர் அரசு நடுநாயகமாக அமைந் துள்ளமையால், அதனுடைய அரசர்கள் மிக எளிதில் உள் நாட்டினுள் நுழைந்து, மாறிமாறி மதராசில் உள்ள கம்பெனியை அச்சுறுத்த முடிந்தது; ஐதராபாத்திலுள்ள நைசாமைத் தாக்க முடிந்தது; பூனுவிலுள்ள பேஷ்வாவை ஆட்டிப்படைக்க முடிந்தது. மராட்டியர் மட்டும் ஒற்றுமை யுடன் ஒன்றுபட்டிருப்பார்களானுல், அவர்களே மைசூரைக்

காட்டிலும் பேராற்றல் வாய்ந்தவர்கள் என்பதை மெய்ப்பித்திருக்கலாம். ஆனால், அந் நூற்றாண்டின் முப்பதுகள் முதற்கொண்டு வட இந்தியாவில் பேரரசை நிறுவுவதற்கு மின்னல் போன்று வாய்ப்பு வசதிகள் கிடைக்கும்போல் தோன்றியமையால், அவர்களுடைய ஆற்றலின் பெரும்பகுதி அப்பணிக்காகத் திருப்பப்பெற்றது. மராட்டியர் ஒருகால் வட இந்தியாவில் பேரரசை நிறுவியிருக்கலாம்; அல்லது தென்னிந்தியாவில் சிறந்ததோர் அரசினைக் கட்டியாண்டிருக்கலாம். ஆனால், அவர்களுடைய ஆற்றல் அவ்விரு பணிகளையும் ஆற்றுவதற்குப் போதியதாக இல்லை என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது. மேலும், அவர்கள் சிறிது காலங்கூட ஒற்றுமையுடைய மக்களாக ஒன்றுபட்டிருக்கவில்லை; பிற அரசுகளைத் தாக்கிக் கைப்பற்றுவதில் எத்துணை அளவிற்கு அவர்கள் முரடர்களாக இருந்தனரோ, அத்துணை அளவிற்கு அவர்கள் (விரைவில் ஐந்து அரசுகளாகப் பிரிந்தவுடன்) தங்களுக்குள் ஒருவரையொருவர் அழுக்காற்றின் மிகுதியால் அடித்துக்கொண்டனர். திப்பு தம்முடைய தந்தையின் மதிநுட்பத்தில் ஏறக்குறைய எல்லாவற்றையுமே பெற்றிருந்தார். ஆனால், ஐதரின் நடுநிலை உணர்வும், முன்னெச்சரிக்கையுடன் நடந்துகொள்ளும் பண்பும் அவருடைய அருமைத் திருமகனிடத்துக் காணப்பெறவில்லை. எனினும், மைசூரின் மாண்பினைப் போற்றிக் காத்த பெருமை திப்புவிற்குரியதாகும். அவர் அமைதியற்றவராகவும் நெறிதிறம்பியவராகவும் இருந்தபோதிலும், அரசியல் சூழ்ச்சித் திறனில் தலைசிறந்தவராகவும், நெருக்கடிக்கேற்ற சூழ்வினைத் திறத்துடன் செயலாற்றும் செயல்வீரராகவும் அவர் விளங்கினர். இவ்வரும்பெரும் பண்புகளால் அவர் தென்னாட்டைத் தொடர்ந்து கிலியுடன் அச்சமுற்று இருக்குமாறு செய்தார்; அவர் இறக்கின்ற நாள்வரையில் கம்பெனியாரால் வெல்ல முடியாத ஒரு மாபெருஞ் சக்தியாகவே அவர் விளங்கினர். அவரிடத்தில் தனிப்பட்ட குறைகள் சில இருந்தன. அவற்றுள் அவருடைய பொறையுடைமையற்ற போக்கும், சிறைப்பட்டோரைத் துன்புறுத்தும் பண்பும் குறிப்பிடத்தக்கனவாகும். எனினும், இவற்றிற்கு மாறாகச் சில அரிய பண்புகள் அவரிடத்து அமைந்திருந்தன. ஓயாது ஒழியாது செயலாற்றும் திறனும் படையியல் மதிநுட்பமும் அவருக்கு வாய்க்கப்பெற்ற பெறற்கரிய பண்புகளாகும். அப்பண்புகளே பிரிட்டிஷ் படைத்தலைவர்களை மலைக்கச் செய்தன. திப்பு விரைவில் படைகளை இயக்கும் முறையும், போர் முனைகளைக் கணப்பொழுதில் அவர் மாற்றிவிடும் திறனும்

ஆங்கிலேயப் படைத்தலைவர்களுக்குப் புரியாத பெரும் புதிராகவே இருந்துவந்தன. அவருடைய ஆட்சித்திறன் போற்றத்தக்கதாகும். மிக நெருக்கடியான சோதனை காலங்களிலும் அவருடைய ஆட்சிக்குட்பட்ட பல்வேறு பகுதிகளும் அவரிடத்துப் பற்றுறுதி உடையனவாக இருந்தன. திறமையான ஆட்சிமுறையே அதற்குக் காரணமாகும். பிரிட்டிஷ் படையெடுப்பாளர்களே அவருடைய ஆட்சித்திறனைக் கண்டு வியப்புற்றுள்ளமை இங்கு நினைவுகூர்தற்குரியதாகும். அக்காலத்தில் எழுதப்பெற்ற நூல்களில் எல்லாம் திப்புவின் பெயர் பொன்னெழுத்துகளால் பொறிக்கப்பெற்றுள்ளன. அத்தகைய திப்புவை அழித்தமையால் வெல்லஸ்லியின் மதிப்பும் பெருமையும் தொடர்ந்து எதிரொலித்துக்கொண்டேயிருந்தன. அதனால், அவர் இன்னும் ஆறு ஆண்டுகள் போருக்கிடையே பணிபுரிய வாய்ப்புக் கிடைத்தது; பேரளவில் செலவினைப் பெருக்கியபோதிலும், பலதிறப்பட்ட குற்றச்சாட்டுகளுக்கு ஆளானபோதிலும், அவர் தொடர்ந்து கவர்னர் - ஜெனரலாகப் பணிபுரிவதற்குரிய வாய்ப்பை அளித்தது திப்புவை அழித்தமையேயாகும்.

காரன்வாலிஸ் இந்தியாவிற்கு வந்தபொழுது, பிட் இந்தியச் சட்டத்தினால் அவருடைய கைகள் கட்டப்பட்டிருந்தன. அவர் விருப்பப்படி போரைத் தொடங்கவோ, சமாதான உடன்படிக்கை செய்துகொள்ளவோ காரன்வாலிஸ் உரிமையற்றவராக இருந்தார். அவர் எதைச் செய்யவேண்டும் என்றாலும், லண்டன் மாநகரத்தின் இசைவைப் பெற்றாகவேண்டிய இக்கட்டான நிலையில் இருந்தார். ஆனால், இத்தகைய கட்டளைகளுக்குக் கீழ்ப்படிந்து நடப்பதில் காரன்வாலிஸைப்போன்று ஆர்வம் காட்டியவர்கள் வேறு யாருமே இல்லை எனலாம். ஆனால், அவருடைய முன்னோர்கள் அவரிடத்து ஒப்படைத்து விட்டுச் சென்ற சில சிக்கலான பிரச்சினைகளில் தலையிடாமல் தந்திரமாகத் தப்பித்துக்கொள்ள முடியாமல் அவர் திண்டாடினார். ஒழுங்குமுறைச் சட்டத்திற்கு முன்பு சென்னை, தனிப்பட்ட சட்டதிட்டங்களையுடையதாகவும், நடுநிலை திறம்பிய ஊழல் மலிந்த கம்பெனியின் கிளையாகவும் இருந்து வந்தது. அதே நிலை காரன்வாலிஸ் காலத்திலும் நீடித்திருந்தது. அதனுடைய பகிர்ந்து அளிக்கப்பட்ட கட்டுப்பாட்டிற்குக் காரன்வாலிஸ் பலியானார். 1765ஆம் ஆண்டில் வட சர்க்கார்களில் உள்ள குண்டூர், நைசாமின் உடன்பிறந்தவரான பசலத் ஜங்கிற்கு மானியமாக அளிக்கப்பட்டது. 1779ஆம் ஆண்டு சென்னையிலிருந்த அரசு அம் மானியத்தை

மீண்டும் புதுப்பித்தது. அந்த ஆண்டில் நைசாம் ஐதர் அலியோடு சேர்ந்துகொண்டதோடு, மராட்டியரையும் கூட்டுச் சேர்த்துக்கொண்டு சென்னையைத் தாக்கியதற்குரிய பல்வேறு காரணங்களுள் இது முதன்மையானதாகும். குண்டூரை நைசாமிற்குத் திருப்பிக் கொடுத்ததன்மூலம் ஹேஸ்டிங்ஸ், நைசாமை நடுநிலை வகிக்குமாறு செய்தார். 1782ஆம் ஆண்டு பசலத் ஜங் இறந்துபோனார். ஆனால், அம் மாவட்டத்தைக் கம்பெனியிடம் திருப்பித்தராமல் நைசாம் தந்திரமாகக் காலம் கடத்திவந்தார். 1765ஆம் ஆண்டின் உடன்படிக்கையின்படி அதைத் திருப்பிக்கொடுக்குமாறு காரன்வாலிஸ் நைசாமைக் கேட்டார். நைசாம் அதற்கு உடன்பட்டார். ஆனால், உடனே 1768ஆம் ஆண்டு செய்யப்பட்ட மசூலிப் பட்டின உடன்படிக்கையின்படி பாலக்காட்டு மாவட்டத்தைக் குறைப்பதற்காகப் படைகளை அனுப்பியுதவுமாறு நைசாம் எதிராக உதவி கோரினார். இந்த மாவட்டம் அப்பொழுது மைசூரின் ஆட்சிக்குட்பட்டதாக இருந்துவந்தது. மசூலிப் பட்டின உடன்படிக்கை நடைபெற்ற ஓராண்டு கழிந்தவுடன் சென்னையிலுள்ள கம்பெனி, மைசூரோடு செய்துகொண்ட உடன்படிக்கையில் பாலக்காடு மைசூருக்கு உரியது என்பதை ஏற்றுக்கொண்டிருந்தது. மேலும், 1784ஆம் ஆண்டில் இரண்டாவது மைசூர்ப் போர் (திப்புவுடன் புரிந்த போர்) முடிவுற்றபொழுது செய்யப்பெற்ற மங்களூர் உடன்படிக்கையில் பாலக்காடு மாவட்டம் மைசூருக்கே உரியது என்பது வலியுறுத்தப்பெற்றது. சென்னை தன்னுடைய வாக்குறுதியை இருமுறை தானே மீறியது. எல்லாக் கட்சியினரிடத்திலும் கல்கத்தா பெருந்தன்மையுடன் நடந்துகொள்ளுவது என்பது இதனால் முடியாமல் போயிற்று. இவ்வாறு இருதலைக் கொள்ளி எறும்புபோலக் காரன்வாலிஸ் திண்டாடினார். இத் திண்டாட்டம் அவருக்குப் பெருவெறுப்பை உண்டாக்கிற்று. எனவே, அவர் தமக்கு யாருடைய நட்பினால் மிகக் குறைந்த அளவு துன்பமோ, தீமையோ உண்டாகுமோ, அவர்களிடத்துக் கம்பெனி நட்புக்கொள்ளுவது பயனுடையதாகும் என்று அவர் கருதினார். 1784ஆம் ஆண்டில் செய்துகொள்ளப்பட்ட உடன்படிக்கைக்கும், 1769ஆம் ஆண்டு செய்துகொள்ளப்பட்ட உடன்படிக்கைக்கும் முற்பட்டதாகிய 1768ஆம் ஆண்டு நைசாமோடு செய்யப்பட்ட உடன்படிக்கையை அவர் ஏற்றுக்கொண்டார். பாலக்காட்டைத் திருப்பித் தருவதாகவும், அதை என்றாகிலும் கம்பெனியிடம் சேர்க்க வேண்டும் என்றும் அவர் ஒரு கடிதம் எழுதினார். கம்பெனியோடு நட்புறவு கொண்டுள்ள எந்த அரசுக்கும் எதிராகப்

படைகளைப் பயன்படுத்துவது இல்லை என்றால், தாம் நைசாமுக்குப் படைகளை அனுப்பி உதவுவதாக அவர் உறுதி மொழியளித்தார். அதன்படியே காரன்வாலிஸ் கம்பெனி யோடு நட்புறவு கொண்டுள்ள அரசுகளின் பட்டியல் ஒன்றை நைசாமுக்கு அனுப்பிவைத்தார். அப் பட்டியலில் மைசூரின் அரசர் திப்புவின் பெயர் விடப்பட்டிருந்தது. தாம் செய்தது சரியென்றே காரன்வாலிஸ் கருதினர். திப்புவுடன் போர் புரிதல் என்பது தவிர்க்க முடியாதவொன்று என்றும், தம் முடைய செயல் அப் போர் மூளுவதை விரைவுபடுத்துகிறது என்றும் அவர் எண்ணினர். திப்புவுடன் போரிடவேண்டிய நெருக்கடி உண்டாவது தடுக்கமுடியாத ஒன்ருக இருக்கலாம். ஆனல், அது திப்புவின் தவருன நம்பிக்கையினல் உண்டாவ தன்று. அவருடைய அமைதியற்ற பேரவாக்கொண்ட மனப் பண்பு, அவருடைய ஆதிக்கத்திற்கு முதன்மையான தடை யாகக் கம்பெனியே இருந்துவருவதைக் கண்டுணருமாறு செய்தது. மேலும், இதற்கு முன்பு மதராசிலுள்ள அரசிடத்து அவர்பெற்ற அனுபவம், ஐரோப்பியரிடத்து நம்பிக்கை கொள்ளும் நல்லெண்ணத்தை அவரிடத்து வளரவொட்டாமல் தடுத்து இருக்கலாம். அதனுடன் அவருடைய தந்தைக்கு வாய்க்கப்பெற்றிருந்த நுண்மாண் நுழைபுலம் திப்புவி னிடத்துச் சிறிதும் இடம்பெறவில்லை. ஏனெனில், அவருடைய தந்தை கம்பெனியின் சேமப்படை ஆதிக்கத்தைப்பற்றி அறிந் திருந்த அளவிற்குத் திப்பு அறிந்திருக்கவில்லை. தக்கதொரு வாய்ப்புக் கிடைக்கும்வரை காலத்தைக் கழித்துக்கொண் டிருப்பதைத் திப்பு விரும்பவில்லை. ஆனல், காரன்வாலிஸின் செயல்முறைகள் கம்பெனியின் அரசியல் சூழ்ச்சித்திறனை அக் காலத்திய இந்திய அரசுகளின் அரசியல் சூழ்ச்சித் திறனைப்போன்று தரம் குறைந்ததாக்கிவிட்டது. நைசாமின் இரண்டகப் போக்கிற்கும், மராட்டியரின் முரண்பாடான செயல்முறைகளுக்கும் ஒத்த அளவில்தான் கம்பெனியின் பெருமையோடு பேசப்பட்டுவந்த நேர்மையின் தரம் இழிந்து போயிற்று. அக் காலத்து அரசியல் சூழ்ச்சித்திறத்தின் நிலைமைக்குக் கீழ்ப்பட்டதாகக் கம்பெனி சென்றுவிட்டது நல்லதன்று; அக் காலத்து நிலையிலிருந்து அது மேம்பட்டு விளங்கவில்லையே என்பதுதான் வருத்தத்திற்குரிய செய்தி யாகும். வாரன்ஹேஸ்டிங்ஸ் காலம்முதல் அது நிலைநாட்டி யிருப்பதாகப் பெருமையோடு பேசப்பட்டுவந்த நிலைக்குத் தம் செயல்களினல் கம்பெனி தாழ்ந்துவிட்டது என்றே கூறலாம். அக் காலத்தில் அது சிறிதளவு அம் முயற்சியில் வெற்றிபெற்றிருந்தது என்பது இங்கு நினைவுகூர்தற்குரிய

தாகும். அமைதிக் காலத்தில் நைசாமுக்குக் காரன்வாலிஸ் படைகளை அனுப்புவதற்கு உடன்படாமல் இருந்திருந்தால் அல்லது கம்பெனியோடு நட்புறவு கொண்டவர்களைப்பற்றிய பட்டியலில் திப்புவின் பெயரை அவர் குறிப்பிட்டிருப்பாரானால் அவருடைய செயல்கள் முற்றிலும் பொருத்தமானதாக முடிந்திருக்கும் என்றோ, அல்லது போர் மூளாமல் தடுத்திருக்கும் என்றோ கூற முடியாது. ஆனால், முரண்பாடான கடமைகளுக்குள்ளே உடன்பாடு காண்பதற்குச் செய்யப்பெற்ற பெருமை மிக்க முயற்சியாக அது சிறப்புற்றிருக்கும். தம்முடைய பெயர், காரன்வாலிஸ் அனுப்பிய பட்டியலில் காணப்படவில்லை என்பதை அக் காலத்துச் சூழ்நிலைகளுக்கேற்பச் சிந்தித்த திப்பு, தம்மைத் தாக்குவதற்காகவே போர் முயற்சிகள் நடைபெறுகின்றன என்றும், அதன் அறிகுறியாகவே தம்முடைய பெயர் பட்டியலில் சேர்க்கப்படவில்லை என்றும் கருதினார். எனவே, அவர் தாமே முதல் கம்பெனியைத் தாக்குவதற்கு ஆயத்தமானார்.

கம்பெனியோடு நட்புறவு கொண்டிருந்த திருவாங்கூரை 1789ஆம் ஆண்டின் இறுதியில் தாக்கியதன் மூலம், திப்பு போர் மூளுவதை விரைவுபடுத்தினார். காரன்வாலிஸ் உடனே ஒரு கூட்டணி அமைத்துக்கொண்டு, திப்புவை எதிர்த்துப் போரிட்டார். அக் கூட்டணியில் விருப்பமிக்கவரும் அதே சமயத்தில், ஆற்றலற்றவருமான நைசாமும், எப்பொழுதும் தயாராக இருக்கும் மராட்டியரும் கூட்டுச் சேர்ந்தனர். படைத் தலைவர் மீடோசின் தலைமையின்கீழ் சென்னையிலிருந்த படை மெல்ல நகர்ந்துகொண்டிருந்தது. அதை முன்னேறவொட்டாமல் பல்வேறு சக்திகள் தடைசெய்தன. எனவே, முதலில் சென்னையின் படைகளுக்காக வந்துகொண்டிருந்த போர்த் தளவாடங்களை வரவொட்டாமல் துண்டிப்பதிலும், முன்னேறவொட்டாமல் தடுப்பதிலும் திப்பு பேராற்றலும் பெருந்திறனும் உடையவராக விளங்கினார். 1790ஆம் ஆண்டு இறுதியில் காரன்வாலிஸே படைகளுக்குத் தலைமை தாங்கினார். அவர் பங்களூரைக் கைப்பற்றினார். போர்க்களத்திலே அவர் திப்புவைத் தோற்கடித்தார்; சீரங்கப்பட்டணத்திற்குள் வெற்றியுடன் அவர் சென்றார். எனினும், உடனடியாக அவர் இரண்டாவது முறையாகப் பின்வாங்க நேரிட்டது. கூர்த்த மதிநலம் வாய்ந்த திப்பு, மீண்டும் பிரிட்டிஷாரின் படைகளுக்கு உதவியாகச் சென்றுகொண்டிருந்த போர்த்தளவாடங்களைத் துண்டித்துவிட்டார். மூன்றாவது முறையாக ஆங்கிலேயர் முன்னேறியபொழுதுதான் அவர்கள் இறுதியான மாபெரு

வெற்றியைப் பெற்றனர். 1792ஆம் ஆண்டு மார்ச்சு மாதத்தில் சீரங்கப்பட்டணத்தில் காரன்வாலிஸ் சமாதான உடன்படிக்கைக்குரிய நிபந்தனைகளை எடுத்துரைத்தார். திப்புவினுடைய அரசின் ஒரு பகுதி ஆங்கிலேயருடைய அரசிலே இணைக்கப்பட்டது. திப்புவிடமிருந்து 330 இலட்ச ரூபாயை இழப்பீட்டுத் தொகையாகக் காரன்வாலிஸ் வற்புறுத்தி வாங்கினர். சிறைப்படுத்தப்பட்டவர்கள் எல்லாரும் விடுதலை செய்யப்பட்டனர். திப்புவின் இரண்டு பிள்ளைகள் பிணையாளிகளாக அனுப்பப்பெற்றனர். அந் நிகழ்ச்சிக்குப் பிறகு மற்றொரு போர் உண்டாகாமல் தவிர்க்க வேண்டுமானல், திப்புவின் அரசு முழுவதையும் ஆங்கிலேய அரசுடன் இணைத்துக்கொள்ளவேண்டும்; அல்லது பழைய இந்து அரச குடும்பத்தையாகிலும் அப் பகுதியில் ஆளுமாறு செய்யவேண்டும் என்று அவருடைய அனுபவ அறிவு அறிவுறுத்தியது. ஆனல், 1956ஆம் ஆண்டில் வாழும் வரலாற்ருசிரியனுக்கு அரசியல் அடிவானம் தெளிவாகத் தோன்றுவதைப்போன்று, 1793ஆம் ஆண்டில் வாழ்ந்த நோக்குநருக்குத் தோன்றவில்லை; அல்லது 1800ஆம் ஆண்டு அளவில் வாழ்ந்த அரசியல் விரகருக்கும் அவ்வாறு புலனுக வில்லை என்றே கூறலாம். திப்பு, காரன்வாலிஸை மிக நெருங்கியே சென்ருர். காரன்வாலிஸ் தம்முடைய பாசறையில் உடல்நலக் குறைவுடன் குற்றங்குறைகளை வெளிப்படுத்தும் நிலையில் கிடந்தார். அவருடன் நட்புறவு கொண்டவர்கள் சதிச்செயல்களில் ஈடுபடுகின்றனர் என்ற ஐயுறவு அவருக்கு உண்டாயிற்று. எனவே, அவருக்கு நெருக்கடி உண்டாயிற்று. அவர் சீரங்கப்பட்டணத்தை ஒருமுறை மீண்டும் தாக்கியிருந்தால், எல்லாம் சரிப்பட்டுப்போயிருக்கும். ஆனல், யார்க் டவுனைச் சேர்ந்த அந்த மனிதர் தம்முடைய பதிவேடுகளில் மற்றொரு சாரடோகா நிகழ்ச்சி குறிக்கப்படுவதைப் பற்றிக் கவலைப்படவில்லை. பாதி அரசினை இணைத்துக் கொள்ளுவதோடு தற்காப்புக்குரிய ஏற்பாடுகள் முன்மதியுடன் செய்யப்பட்டன. ஆனல், திப்புவின் அரசு முழுவதையும் ஆங்கிலேயர்கள் கைப்பற்றிக்கொண்டிருந்தால், அவர்களுடைய இந்திய நட்புறவு நாடுகளிடையே சலசலப்பை உண்டாக்கியிருக்கும்; அதனுடன் தாயகத்து மக்களுடைய பொதுக் கருத்து காரன்வாலிஸிற்கு எதிராகக் கிளம்பியிருக்கலாம். பிட்டின் இந்தியச் சட்டம் மேலும் இந்திய நாட்டு இராச்சியங்களைக் கைப்பற்றி ஆங்கிலேய அரசுடன் இணைப்பதைத் தடுத்தது. திறமையுடன் ஆட்சி செய்வதற்குரிய வசதிகளையுடையதாக இல்லாமல் அவ்வரசு மிகப்பெரிய

தாகவும் இருந்துவந்தமை அவருக்கு அச்சத்தை உண்டாக்கியது. எனவே, இதற்கு மாருகப் பழைய இந்து அரச குடும்பத்தை ஆட்சிக்குக் கொண்டுவருவதே சாலச்சிறந்தது என்று மெடோஸ் தெரிவித்தார். ஆனால், மதிப்பிழந்துபோன குடும்பம் பூரணையா என்னும் அமைச்சருடைய உதவியைப் பெற்றாலும், புறத்தே மராட்டியரையும் நைசாமையும் தடுத்து நிறுத்துமா? அகத்தே மனமுடைந்துபோன சக்திகளாகவும், வெறுப்புற்ற சக்திகளாகவும் உள்ளவர்களுக்கு எதிராக மிகப் பெரியதோர் அரசினை அதனுல் கட்டிக்காக்க முடியுமா என்பனபோன்ற ஐயங்கள் உண்டாயின. எனவே, காரன்வாலிஸ் அறிவுக்குப் பொருத்தமான, அதே சமயத்தில் ஆங்கிலேயருக்குச் சாதகமான செயலில் ஈடுபட்டு, திப்பு என்னும் வேதாளம் மீண்டும் முருங்கை மரத்தில் ஏறவொட்டாமல் பார்த்துக்கொண்டது.

மைசூரின் வடகிழக்கு, வடமேற்குப் பகுதிகள் நீங்கலாக மற்றப் பகுதிகளில் எல்லாம் பிரிட்டிஷாரின் இராச்சியமே சூழ்ந்திருக்கவேண்டும் என்னும் கருத்திஞல்தான் திப்புவினுடைய அரசின் ஒரு பகுதியை ஆங்கிலேயர்கள் தங்களரசோடு இணைத்துக்கொண்டனர். வடகிழக்கு, வடமேற்குப் பகுதிகளில் நைசாமும் மராட்டியரும் மைசூரைச் சூழ்ந்து இருந்தனர். மலபார் கடற்கரைப் பகுதியையும் குடகுப் (கூர்க்கு) பகுதியையும் ஆங்கிலேயர்கள் எடுத்துக்கொண்டமையால், திப்பு மேலைக் கடற்கரைப் பகுதியோடு எத்தகைய தொடர்பும் இல்லாமல் துண்டிக்கப்பட்டார். பாரமகாலினை ஆங்கிலேயர் தங்களுக்கு உரியதாக்கிக்கொண்டனர். கருநாடகத்தை அழித்தொழிப்பதற்கு ஐதர் அலி நுழைந்து வந்த கணவாய்கள் இழக்கப்பட்டன. திப்பு, சுற்றிலும் ஆங்கிலேயர்களால் சூழப்பட்டு உள்ளே அடைக்கப்பட்டார். எப்பொழுதுமே ஓய்வற்ற அவருடைய உள்ளத்திற்கு ஐரோப்பாவிலிருந்து தவறுதலான நம்பிக்கையூட்டப் படாமலேயே இருந்தால், அவருடைய பழிவாங்கவேண்டும் என்ற வைரமேறிய உள்ளம் அமைதியாகவே இருந்திருக்கும்.

சர் ஜான் ஷோரின் ஆட்சி காலமாகிய ஐந்தாண்டுகளில் அமைதி தொடர்ந்து நிலவியது. திப்பு தாக்குவாராஞல், அவருக்கெதிராகப் பேஷ்வாவும் நைசாமும் தங்களுக்குள்ளே உதவிசெய்வதாக உறுதிமொழி வழங்குமாறு காரன்வாலிஸ் முயன்றமையே அவர் தென்னுட்டில் இறுதியில் தலையிட்ட

பிரச்சினையாகும். மராட்டியர்கள் ஐயுறவான செயல்களில் ஈடுபட்டபொழுது நைசாம் தம்முடைய பாதுகாப்பிற்காகக் காரன்வாலிஸின் உதவியை நாடினார். பொதுவாக உதவி செய்வதாக உறுதிமொழி அளிப்பதைத் தவிர, வேறு எத்தகைய பாதுகாப்பையும் அளிக்க காரன்வாலிஸ் முன்வரவில்லை. அவ்வுறுதிமொழியும் அத்துணைச் சிறந்ததாக இந்தியாவில் போற்றப்படவில்லை; ஐரோப்பாவில் மட்டும் ஓரளவிற்கு அது போற்றப்பட்டது. ஷோர் தம்மைக் கட்டுப்படுத்தும் எத்தகைய செயல்களிலும் தாம் ஈடுபடப்போவதில்லை என்பதை வெளிப்படையாக எடுத்துரைத்தபொழுது, நைசாம் ஆற்றலும் திறமையும் வாய்ந்த ரேமாண்டு என்னும் ஃபிரெஞ்சு அதிகாரியின் உதவியை நாடினார். அவரைக்கொண்டு, நைசாம் தம்முடைய படைகளுக்குப் போர்ப்பயிற்சி கொடுத்தார். மராட்டியர்கள் கருதியதைப்போல நைசாம் ஏமாற்றப்படவில்லை. நெடுங்காலம் முதற்கொண்டு கூட்டுறவு துணிகரச் செயலினால் வளர்ச்சியுற்ற மராட்டிய அரசுகளின் கூட்டிணைப்பு, நிலையான குடும்பப் பூசலாக மாற்றமுற்றது. 1795ஆம் ஆண்டு நைசாமைக் கொள்ளையடிப்பதற்கு ஐந்து மராட்டிய அரசுகளும் ஒன்றுசேர்ந்து ஐதராபாத்தைத் தாக்கின. இவ்வாறு மராட்டிய அரசியலில் அஞ்சத்தக்க சிக்கலினையுண்டாக்கும் திடீர் மாற்றம் உண்டாயிற்று. 1789ஆம் ஆண்டு காரன்வாலிஸ் உற்றிடத்துதவி செய்த காலத்தில் திருவாங்கூர் எத்துணை அளவிற்கு நேசநாடாக இருந்துவந்ததோ, அத்துணையளவிற்கு ஐதராபாத்தும் கம்பெனியோடு நட்புறவுகொண்ட நாடாகவே இருந்து வந்தது. ஆயினும், என்ன காரணத்தினாலேயோ ஷோர், நைசாமிற்கு எத்தகைய உதவியும் செய்ய மறுத்துவிட்டார். தலையிடாக் கொள்கையை உண்மையில் பின்பற்றிய நேர்மையான மனிதர்களை அத்தகைய மாற்றங்களுக்கு அது செலுத்தியதுபோலும். அதன் விளைவாக 1795ஆம் ஆண்டு மார்ச்சு மாதத்தில் கர்டா (Kharda) என்னுமிடத்தில் நைசாம் படுதோல்வியடைந்தார். நைசாம் மராட்டியரின் ஆதிக்கத்திற்கு அடிமைப்பட்டிருக்கவேண்டிய நெருக்கடி நிலை உண்டாயிற்று. நல்ல காலமாக மராட்டியரிடையே உண்டான பூசல்கள், நைசாமினுடைய அவலநிலையைப் போக்கின. கர்டாப் போரில் பெற்ற வெற்றியின் பயன்கள் அனைத்தையும் விலைகூறி விற்பதன்மூலம், பூனாவின் அமைச்சரான நானா பட்னவிஸ், பேஷ்வா பதவிக்கு உண்டான அரசுரிமைப் போட்டியில் தம்மை ஆதரிக்குமாறு நைசாமை வேண்டினார்.

தென்னகத்தின் அரசியல் அரங்கில் நடைபெற்றுவந்த ஆதிக்கப் போராட்ட நாடகத்தை விரைவிலே முடிவடையச் செய்த பெருமை மார்னிங்டன் பிரபுவையே சாரும். அவரே, விரைவில் வெல்லஸ்லி கோமகன் என்ற பெயருடன் சீரும் சிறப்பும் பெற்றும் விளங்கலானார். நைசாமின் ஆற்றலற்ற போக்கு ஒருபுறமிருக்க, மராட்டியரின் அமைதியற்ற தன்மையும், திப்புவின் தீராத ஆதிக்க வெறியும் ஒருங்குசேர்ந்து ஃபிரெஞ்சுப் புரட்சி என்னும் வடிவிலே தோன்றத் தொடங்கியது. 1793ஆம் ஆண்டுமுதலே பிரிட்டன் ஃபிரான்சோடு போரிட்டுக்கொண்டிருந்தது. 1797ஆம் ஆண்டு முதல் இங்கிலாந்து மட்டும் தனித்து நின்று ஃபிரான்சோடு போரிட்டு வந்தது. கீழைநாடுகளைத் தாக்கிக் கைப்பற்றுவதற்குரிய திட்டங்களை ஃபிரான்சு வகுத்து வைத்திருந்ததாக நம்பப் பட்டது. எகிப்தின்மீது படையெடுத்துச் செல்லுவதற்கு போனபார்ட்டே ஆயத்தம் செய்துகொண்டிருந்த சமயத்தில் தான், வெல்லஸ்லி இந்தியாவிற்குக் கப்பலில் புறப்பட்டார். வடமேற்கு எல்லைப் பகுதி வழியாகப் படையெடுத்துவரும் ஆப்கானியரை எதிர்ப்பதற்காகச் செய்யவேண்டிய ஏற்பாடுகளைக் காட்டிலும், இந்தியாவின் பல பகுதிகளிலும் ஃபிரெஞ்சியரின் தாக்குதல்களை எதிர்த்துப் போரிடுவதற்கு முன்னேற்பாடான செயல்கள் பலவற்றுள் ஈடுபடவேண்டியது மிக முக்கியத்துவம் வாய்ந்ததாயிற்று. எனவே, திப்பு, தமக்கு உதவியாக நட்புறவு நாடுகளின் ஆதரவைப் பெறவேண்டும் என்னும் ஆசையால், ஃபிரெஞ்சியருடைய மொரீஷஸ் தீவிற்குத் தம்முடைய பிரதிநிதிகளை அனுப்பினார் என்னும் செய்தியையும், அத்தீவின் கவர்னர் உடனடியாக மைசூரோடு ஃபிரான்சு நட்புறவு கொண்டுள்ளதாக அறிவித்ததையும், திப்பு, சீரங்கபட்டணத்தில் விடுதலைக் கொடியை உயர்த்தியதையும், மலபார் கடற்கரைப் பகுதியில் சிறிதளவு ஃபிரெஞ்சியரின் படை வந்து இறங்கியதையும் கேள்வியுற்ற வெல்லஸ்லி, உடனடியாகக் கடுமையான நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று கருதினார். அவர் உடனே சென்னைக்குச் சென்றார். அங்கிருந்து அவர் போருக்குரிய ஆயத்தங்களைச் செய்துகொண்டிருந்த அதே நேரத்தில், திப்புவைத் தனியே பிரித்துவிடுவதற்குரிய சூழ்ச்சிமுறைகளில் அவர் ஈடுபட்டார். எனவே, நைசாம் முதலில் வெல்லஸ்லியின் கருத்தைக் கவர்ந்தார். திப்புவைக்காட்டிலும், மராட்டியரைக் காட்டிலும், கம்பெனியைக் காட்டிலும் தாம் பலவீனமாக இருப்பதை நன்குணர்ந்திருந்த நைசாம் அலி, வெல்லஸ்லியோடு துணைப் படைத் திட்ட உடன்படிக்கை செய்துகொள்ளுவதற்கு அவர்

ஆவலுடையவராக இருந்தார். 1798ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் நைசாமோடு மால்கோம் (Malcolm), கீன்பாட்டிரிக்கு (Kilpatrick) என்பவர்கள் நயமாக நடத்திய பேச்சுகளின் முடிவில், நைசாம் ஃபிரெஞ்சு அதிகாரியான ரேமாண்டையும் அவருடைய ஃபிரெஞ்சு அதிகாரிகளையும் பதவியிலிருந்து நீக்க இசைந்தார். அவர்களிடத்தில் கம்பெனியின் நான்கு படைப் பிரிவுகளைத் தம்முடைய நாட்டில் நிறுத்திக்கொள்ளுவதற்கு அவர் உடன்பட்டார். அப் படைகளைப் போற்றிக் காப்பதற்காக மாதம் ஒன்றிற்கு அரை இலட்சத்திலிருந்து இரண்டு இலட்சம்வரை ரூபாயாக மானியத் தொகையை அவர் உயர்த்தினார். இதனால் நைசாம் பாதுகாப்பினை முயன்று பெற்றார். ஆனால், அவர் அயல்நாட்டுத் தொடர்பினைக் கட்டிக்காக்கும் உரிமையை முற்றிலும் இழந்தார். அடுத்து பேஷ்வாவினைக் கம்பெனியார் அணுகினர். அவர் துணைப்படைத் திட்டம் என்னும் வலையில் சிக்கிக்கொள்ளாமல் மிகத் தந்திரமாகத் தப்பித்துக்கொண்டதோடு, பிரிட்டிஷாரோடு முழுமனத்துடன் ஒத்துழைப்பதற்கு விரும்பாத வகையில் அவர் மிகுந்த ஐயுறவு கொண்டிருந்தார். எனவே, அவர் ஒதுங்கி நின்று, நடுநிலைமையாளராக இருந்துவந்தார். வெல்லஸ்லி போருக்குரிய ஏற்பாடுகள் அனைத்தையும் செய்து முடித்தவுடன், மொரீஷஸ் தீவினுடைய கவர்னரின் படைகள் ஏன் மைசூருக்கு வருகின்றன என்பதற்குத் தக்க காரணம் காட்டுமாறு திப்புவை அவர் விளக்கம் கேட்டார். திப்பு அளித்த மறுமொழி போருக்குரிய அறிகுறியாகும் என்று பொருள் கொள்ளப்பட்டது. எனவே, சென்னையிலிருந்தும் பம்பாயிலிருந்தும் மைசூரின்மீது இரட்டைத் தாக்குதல் தொடங்கிற்று. இரண்டு மாதங்களுக்குள்ளாகச் சீரங்கபட்டணம் முற்றுகையிடப்பெற்றது. திப்புவினுடைய அரசின் பாதிப்பகுதியைத் தம்மிடம் ஒப்படைக்குமாறும், இரண்டு இலட்சம் பவுன்கள் போரின் இழப்பீடாகக் கொடுக்குமாறும் வெல்லஸ்லி வற்புறுத்திக் கேட்டதைத் திப்பு மறுத்துவிட்டார். அதனால், 1799ஆம் ஆண்டு, மே மாதம், ஆறும் நாள், சீரங்கபட்டணம் சூறையாடப்பெற்றது. அந் நெருக்கடி நிலையில் ஆங்கிலேயரை வீரத்துடன் எதிர்த்துக் கடும்போர் புரிந்த திப்பு இறுதியில் கொல்லப்பட்டார். இருபதாம் நூற்றாண்டின் வல்லாட்சியாளர்களைப் போன்றே, வெல்லஸ்லியும் போரிடுவதில் மனவுறுதியுடையவராக இருந்தார். ஆனால், அவர் பெற்ற வெற்றியின் முழுமைத் தன்மையைக் கண்டு அவரே வியப்புற்றார். இந்தியாவில் ஃபிரெஞ்சுக்காரர்களினால் உண்டாகக்கூடிய அச்சத்தை அவர் மிகைப்படுத்திக் கூறி

வந்தார். அவ் அச்சத்தை அகற்றவேண்டும் என்பதே அவருடைய முதன்மையான குறிக்கோளாகும். ஆனல், அவர் அதை உண்மையாகவே நம்பினர் என்பதும் குறிப்பிடத் தக்கது. மேலும், அவர் தென்னிந்தியாவில் பிரிட்டிஷாரின் கூட்டுத் தலைமையை நிறுவுவதில் கருத்துடையவராக இருந்து வந்தார். அவர் சிறிதளவிற்கு நாடுகளைக் கைப்பற்றி பிரிட்டிஷாரின் அரசோடு இணைப்பதற்குத் தயாராக இருந்தார். ஆனல், தற்சமயம் திப்புவின் மிகப்பெரியதும் பரந்ததுமான அரசு முழுவதும் அவருடைய ஆணையை எதிர் நோக்கிக் காத்துக்கிடந்தது. இத்தகைய பரந்த பெருநிலப் பரப்பை ஆட்சிபுரிவதற்கு எங்கிருந்து பிரிட்டிஷ் ஆட்சிப் பணியாளர்களை அழைத்துவருவது என்று கார்ன்வாலிஸ் அன்று திகைப்புற்றதைப்போன்று, வெல்லஸ்லியும் இப்பொழுது திண்டாடினர். இதற்கு மேலாகக் கைப்பற்றப் பட்ட மைசூர் நாட்டின் அரைப்பகுதிக்கு நைசாம் உரிமையுடையவராவர். அந்நிலையில் அம் மைசூர் அரசை ஆங்கிலேய அரசோடு இணைத்துக்கொண்டால், நைசாமின் தேவையற்ற வெறுப்பையும் தம் ஆற்றலைப் பெருக்கிக்கொள்ளும் ஆர்வத்தையும் தூண்டிவிடும் நெருக்கடி உண்டாகும். எனவே, இச் சிக்கலைத் தீர்ப்பதற்குரிய வழியைப்பற்றிச் சிந்தித்த வெல்லஸ்லி, தலைமறைவாக வாழ்ந்துவரும் இந்து அரச மரபினரிடத்து மைசூர் அரசினை ஒப்படைப்பது என்று முடிவு செய்தார். அச் சமயத்தில் அவ்வரச மரபில் தோன்றிய ஆண் பிள்ளை ஐந்து வயது நிரம்பாத குழந்தையாக இருந்தான். இதற்கு முன்பு மைசூர் இராச்சியத்திற்குட்பட்டிராததும் இப்பொழுது சேர்த்துக்கொள்ளப்பட்டதால், பெருநிலப்பரப்பாகிவிட்ட மைசூர் அரசினைக் குழந்தை அரசனிடத்து ஒப்படைத்தனர். அவன் வயதுவந்த இளைஞனகும்வரை திப்புவின் பிராமண அமைச்சனகிய பூரணையாவை நடைமுறையில் ஆட்சியாளனக வெல்லஸ்லி அமர்த்தினர். அவ் ஏற்பாடு துணைக் காப்புப் படைத் திட்டத்தின் புதிய முறை உடன்படிக்கையோடு முற்றுப்பெற்றது. அவ் உடன்படிக்கையில் பல புதிய விதிகள் சேர்க்கப்பட்டன. சிறந்ததோர் ஆட்சி அமைப்பினை நிறுவுவதற்காக கவர்னர்-ஜெனரல் மைசூரின் உள்நாட்டுச் செயல்முறைகளில் தலையிடும் உரிமையையும், மைசூரின் ஆட்சியைத் தேவையானல் நேரடியாக கவர்னர்-ஜெனரல் கண்காணிப்பதற்குரிய உரிமையையும் அவ் உடன்படிக்கை வழங்கியது. பிற்காலத்தில் அவ் உரிமைகளின் முக்கியத்துவம் மெய்ப்பிக்கப்பட்டது. மேற்கில் உள்ள கானரா மாவட்டத்தைக் கம்பெனி தம்முடைய அரசோடு இணைத்துக்

கொண்டது. தெற்கே கோவை மாவட்டமும், சீரங்க பட்டணமும், மற்றப் பகுதியும் கிழக்கிலும் கம்பெனியின் அரசுடன் சேர்த்துக்கொள்ளப்பட்டது. இவ்வாறு மைசூர் அரசைச் சுற்றிலும் பிரிட்டிஷாரின் இராச்சியம் அமையலாயிற்று. நைசாம் தம்முடைய அரசுக்குப் பக்கத்தில் இருந்த நாட்டுப் பகுதிகளை நன்கொடையாகப் பெற்ருர். ஆனால், விரைவில் துணைப்படைத் திட்ட உடன்படிக்கையின்படி, தம் நாட்டில் நிறுத்தப்படும் படைகளைப் போற்றிக் காப்பதற்காகத் தாம் பெற்ற புதிய பகுதிகளை பிரிட்டிஷாருக்கே நைசாம் திருப்பிக் கொடுத்துவிட்டார். 1811ஆம் ஆண்டு வரையில் புதிய மைசூர் அரசு பூரணையா என்னும் அமைச்சரின் ஆட்சியின்கீழ்த் தொடர்ந்து வாழ்வும் வளனும் பெற்று விளங்கியது. அதே சமயத்தில் பிரிட்டிஷாருடைய அரசோடு இணைத்துக்கொள்ளப்பட்ட மாவட்டங்கள் உழைப்பாற்றல் மிக்கவரும், மனித இன அன்புப் பணியாளருமான மன்ரோவின் (Munro) கருத்தைக் கவர்ந்தன.

இப்பொழுதுதான் தென்னிந்தியாவில் பிரிட்டிஷாரின் மேலாண்மை நிலைநாட்டப்பெற்றது. அதை இன்னும் உறுதிப்படுத்தவேண்டிய பணி கட்டுக்கோப்பாக்கவேண்டிய நிலையில் இருந்துவந்தது. கருநாடகம் இன்னும் பெயரளவிற்கு நவாபினுடைய ஆட்சிக்குட்பட்டதாகவே இருந்தது. ஆனால், போர்க் காலத்தில் கருநாடகத்தின் ஆட்சிப் பொறுப்பை பிரிட்டிஷார் ஏற்று நடத்துவதற்குரிய உரிமையை அவர்கள் பெற்றிருந்தனர். நம்பிக்கைக்குரியவரும், இணங்கிப் போகக்கூடியவரும், அதே சமயத்தில் விடாப்பிடியான இயல்புடையவருமான வாலாஜா 1795ஆம் ஆண்டு இறந்துவிட்டார். அவருக்குப் பிறகு ஆற்றல் குறைந்த அவருடைய மகன் உம்தத்-உல்-உமாரா என்பவர் கருநாடக நவாபு ஆனர். எதையாகிலும் கொடுப்பது என்பது வெல்லஸ்லிக்கு உடன்பாடன்று. தென்னகத்தின் மிக வளமான மாநிலத்தை அவர் தனித்திருக்குமாறு விட்டுவிட்டார். 1801ஆம் ஆண்டு உம்தத் இறந்தார். அப்பொழுது கம்பெனியாருக்கு எதிராக உம்தத் திப்புவோடு தொடர்புகொண்டிருந்த செய்தி தெரியவந்தது. அதனுல், அவரையும் அவருடைய தந்தையையும் இந்தியாவிலுள்ள பிரிட்டிஷ் அரசாங்கத்தின் பொதுப் பகைவர்களாகக் கம்பெனியார் கருதலாயினர். முகமதாலியின் பேரனை அசாம்-உத்-தெளலா என்பவரை வெல்லஸ்லி கருநாடகத்தின் நவாபாகத் தேர்ந்தெடுத்தார். ஆனல், அவர் பெயரளவிற்குத்தான் நவாபாக அமர்த்தப்பட்டார்; கருநாட

கத்தின் ஆட்சிப் பொறுப்பை ஆங்கிலேய அரசாங்கமே ஏற்றுக்கொண்டது.[1] ஏறக்குறைய அதே சமயத்தில் தஞ்சாவூரிலிருந்துவந்த மராட்டிய சிற்றரசிலும் அரசுரிமைப் போர் உண்டாயிற்று.[2] அந்த வாய்ப்பினைப் பயன்படுத்திக்கொள்ள விரும்பிய வெல்லஸ்லி அதன் ஆட்சியமைப்பையும் கைப்பற்றிக்கொண்டார். பிறகு அதன் அரசருக்கு ஆண்டிற்கு 4 இலட்ச ரூபாயை ஓய்வு ஊதியமாக அளிக்க முன்வந்தார். கிருஷ்ணை ஆற்றுக்குத் தெற்கே உள்ள நாடு இவ்வாறு பிரிட்டிஷாரின் குடியேற்ற நாடாக மாற்றப்பெற்றது எனலாம்.

இதற்கு முற்பட்ட இருபது ஆண்டு காலத்திய சென்னை மாநிலத்தின் உள்துறை வரலாற்றில் குறிப்பிடவேண்டிய சில நிகழ்ச்சிகள் உள்ளன. அக் காலத்தில் இம் மாநிலம் ஆங்கிலேய ஃபிரெஞ்சுப் போர்களினால் உண்டான விளைவுகளிலிருந்து இதுவரை முற்றிலும் புத்துயிர்ப்பும் புதுவாழ்வும் பெறவில்லை. முதலாவதாகக் கம்பெனியின் ஆதரவை நாடியிருக்கும் அரசர்களின் ஊழல் மிக்க செல்வாக்கினால், வங்காளத்தைப் போன்றே இங்கும் கம்பெனியின் ஊழியர்கள் நேர்மையும் ஒழுங்குமற்றவர்களாகவும், கையூட்டு வாங்குபவர்களாகவும் இருந்தனர். போர்களினால் கட்டுப்பாடு தளர்த்தப்படுவதாலும், அதிகமாகச் செலவு செய்யத் தூண்டுமாறு விரைவில் பண வசதியைப் பெறுவதற்குரிய வாய்ப்புகள் மிகுதியாக இருந்தமையாலும், அவர்கள் ஊழல்மிக்கவர்களாயினர். மூன்றாவதாக கருநாடக நவாபிடத்து ஊழலுக்குப் பெயர்பெற்ற ஒரு நிலையமாக, அவரது ஆட்சி இருந்து வந்தமையும் காரணமாகும். ஆங்கிலேய, ஃபிரெஞ்சுப் போர்கள் முகமதாலியைப் பெயரளவிற்கு உரிமையுடையவராகவும், வாலாஜா நவாபு என்னும் பட்டப் பெயரை

[1] 1853ஆம் ஆண்டு டல்ஹௌசி 'கருநாடக நவாபு' என்னும் பட்டத்தை ஒழித்தார். அதுமுதல் அக் குடும்பத்தின் தலைவர் 'ஆற்காட்டு இளவரசர்' என்றே அழைக்கப்படுகிறார். சென்னை மாநிலத்தில் அவர் முதன்மையான செல்வராகக் கருதப்படுகிறார்.

[2] அவுரங்கசீபு காலத்திய மராட்டியப் போர்களின் எச்சமே தஞ்சை மராட்டிய அரசாகும். அவ் அரசின் தலைவர் சிவாஜியின் தந்தையான ஷாஜியின் மரபிலே வந்தவர். அவ் அரச குடும்பத்தினருக்குக் கொடுக்கப்பட்டுவந்த ஓய்வுக் கால ஊதியம் 1855ஆம் ஆண்டில் வாரிசற்றுப் போகவே, நிறுத்தப்பட்டது.

யுடையவராகவும் விளங்குமாறு விட்டுச் சென்றன.[1] ஆனால், அவருடைய பெயரால் பெரிதும் கம்பெனியின் பொருளைக் கொண்டு அப் போர்கள் நடத்தப்பட்டன. அதன் விளைவாக அவர் பெரிய கடனாளியானார். அறுபதுகளில் கம்பெனிக்குக் கொடுக்கவேண்டிய கடன்கள் குறைக்கப்பட்டன. ஆனால், கம்பெனியின் ஊழியர்களோடு மீண்டும் புதிய கடன் ஒப்பந்தங்களை அவர் செய்துகொண்டார். அதையடுத்து மைசூர், மராட்டியப் போர்கள் நடைபெற்றன. அதனால், அவர் கடனென்னும் கடலினுள் மூழ்கிப்போய்விட்டார். அதனுடன் திறமையற்ற அவருடைய ஆட்சி, அந் நெருக்கடியை இன்னல் மிகுந்ததாகச் செய்துவிட்டது. ஆட்சிமுறையினைத் திருத்தியமைக்குமாறு அதிகாரிகள் ஒருபுறம் தொடர்ந்து வற்புறுத்தி வந்தனர். மற்றொரு பக்கத்தில் தங்களுக்கு நவாபு செலுத்த வேண்டிய வட்டியைச் செலுத்துமாறு ஓயாது தொந்தரவு செய்துவந்தனர். நவாபு, கம்பெனிக்கு எதிராகக் கடன் காரர்களுக்கு எவ்வாறு விரைவில் கடனைக் கொடுத்துத் தீர்ப்பது என்பதற்குரிய வழிவகைகளைக் கண்டுபிடித்தார். பல சமயங்களில் கடன் கொடுக்கப்படவேண்டியவர்கள் கம்பெனி ஊழியர்களாகவே இருப்பர் என்பதை நன்கறிந்திருந்தும், நவாபு இத்தகைய சூழ்ச்சியில் ஈடுபட்டார். கருநாடகத்தின் ஆட்சி முறையைச் சீர்திருத்தவேண்டும் என்பது கம்பெனியின் பணித்துறைச் சார்பான ஆர்வமாகும். அதனால், கருநாடக அரசினைக் கம்பெனியார் எடுத்துக் கொண்டு, பொதுமக்களுக்கும் கம்பெனிக்கும் சேரவேண்டிய கடன்களை நேர்மையான முறையில் கொடுத்துத் தீர்க்க வேண்டும் என்று கருதினர். ஆனால், கடன் கொடுத்திருந்த பொதுமக்களை இச் செயல்முறை பாதிக்கும் போல் தோன்றியது. இச் செயல்முறையால், அவர்களுக்குச் சேரவேண்டிய அளவுமீறிய வட்டிவீதத்தால் நிலுவையாகிப் போன பெருந்தொகையை அவர்கள் இழக்க நேரிடும் என்ற அச்சம் அவர்களுக்கு உண்டாயிற்று. மேலும், கம்பெனியின் அதிகாரிகளுள் பலர் நவாபிற்குக் கடன்கொடுத்து இருந்தமையால், கம்பெனியின் அத் திட்டம் செயற்படுத்தப் படுவதை அவர்களே விரும்பவில்லை. எனவே, இம் மனிதர்களுடைய நலனுக்காக அவரைக் கடன்களினால் உள்ளூர வெதும்புமாறு விட்டுவிட்டனர்: அப் பிரச்சினைக்குச் சிறந்த வகையில் ஒரு முடிவு காண்பதற்குக் கடுமையான நடவடிக்கை

[1] 1765-ல் செய்யப்பட்ட அலகாபாத் உடன்படிக்கையின்படி முகமதாலி நவாபாகத் தொடர்ந்திருந்துவந்தார்.

எடுக்கவேண்டும் என்பதற்காக அதைப் புறக்கணித்து விட்டனர்; சிற்சில சமயங்களில்மட்டும் வட்டி வீதத்தைக் குறைத்துவந்தனர்.[1] பொதுநலக் கொள்கைகளில் தன்னல ஆர்வத்தைக் கொண்டுவந்து புகுத்திய நவாபு, பொறுமையுடன்—ஆனல்—விடாப்பிடியாகச் செயலாற்றிவந்தார். இவ்வாறு கம்பெனியின் செயல்முறைகளில் அவர் செல்வாக்குப் பெற்றிருந்தார். அச் செல்வாக்கு விடாப்பிடியாக எளிதில் மறக்கமுடியாததாக இருந்ததைப்போன்றே, நலக்கேடுடையதாகவும் இருந்தது. கடன் கொடுத்திருந்த தனியார்களுக்குக் கம்பெனியின் வாணிகரான பால் பென்பீல்ட்டு தலைவராக இருந்தார். அவர் விழிப்புணர்ச்சியற்றவராக இல்லாத போதிலும், நாடறிந்த தீயவராகவும், எடுத்த செயலை வெற்றியுடன் செய்து முடிக்கும் ஆற்றலுடையவராகவும் விளங்கினர். அவரும் அவருடைய நண்பர்களும் இங்கிலாந்தின் பொது வாழ்விலும் கம்பெனியின் நலத்திலும் கொண்டிருந்த ஆர்வத்தையும் அக்கறையையும் குறைத்துக்கொள்ள விரும்பவில்லை. பென்பீல்ட் பல ஆண்டுகள் பாராளுமன்ற உறுப்பினராக இருந்தவராவார். இங்கிலாந்திலும் இந்தியாவிலும் இந்தியாவைப்பற்றிய ஆர்வமிக்க சக்தியைப்பற்றிப் பாராளுமன்றத்தினர் மதிப்பிடவேண்டியவர்களாக இருந்தனர். நவாபு தஞ்சை அரசரின் மிகக்கொடிய பகைவராக இருந்துவந்தார். அவருடைய செல்வாக்கு 1776ஆம் ஆண்டு உச்சநிலையை அடைந்தது. அப்பொழுது பிகட் (Pigot) பிரபு அதனை இந்து அரசரிடத்துத் திருப்பிக்கொடுக்க முயன்றுகொண்டிருந்த பொழுது, பென்பீல்டின் நண்பர் குழாம் தஞ்சை அரசரைப் பதவியிலிருந்து நீக்கி, அவரைச் சிறைப்படுத்தியது.

1780ஆம் ஆண்டு மதராசின் செயல்முறைகள் கொடுமுடியை அடைந்தன. அச்சமயத்தில் ஐதர் அலி கருநாடகத்தினுள்ளே பெரும்படையுடன் நுழைந்தார். அதைக் கண்ட மதராசின் அரசாங்கம் போருக்கு ஆயத்தமாக இல்லாததோடு, அந் நெருக்கடியைச் சமாளிப்பதற்குரிய ஆற்றலற்றதாகவும் இருந்தது. அவ்வாண்டில்தான் மெகார்ட்னே பிரபு மதராசின் கவர்னராக வந்துசேர்ந்தார். அவர் வந்ததுமுதல் நிலையான முன்னேற்றம் உண்டாயிற்று. அவர் திறமை

[1] தனிப்பட்ட கடன்களின் உள்துறை வட்டிவீதம் படிப்படியாக 36 வீதத்திலிருந்து 10 வீதத்திற்குக் குறைக்கப்பட்டது. ஆனல், ஒருவகைக் கடன்கள் ஒழுங்கு செய்யப்படுவதற்குள், புதுக் கடன்கள் தோன்றிக்கொண்டேயிருந்தன.

யுடையவராகவும் நேர்மையான மனப்பண்பு வாய்ந்தவராகவும் இருந்தார். ஆனால், அவர் சென்னைக்கு வருவதற்கு முன்பே, ஹேஸ்டிங்ஸிற்கும் முகமதாலிக்கும் இடையே செய்யப்பட்ட உடன்படிக்கையின் விதிகள் எவ்வாறு செயலுக்குக் கொண்டுவரப்படுகின்றன என்பதைக் கண்காணிப்பதற்காக வங்காளத்திலிருந்து ஒரு பிரதிநிதி அனுப்பி வைக்கப்பட்டார். மெகார்ட்னே ஹேஸ்டிங்ஸின் கொள்கைகளை ஆதரிப்பவராகச் சென்னைக்கு வந்துசேர்ந்தார். ஆனால், கம்பெனியினுடைய லண்டன் மாநகர அரசியலில் உண்டான குழப்பம், இவ்விருவருக்கும் இடையே தப்பெண்ணத்தை உண்டாக்கியது. இறுதியில் ஒருவரையொருவர் நம்பமுடியாத சூழ்நிலை உருவாயிற்று. மெகார்ட்னே கல்கத்தா உடன்படிக்கையை மறுத்துவிட்டார். ஆனால், அவ் உடன்படிக்கையின் போக்கினைப் பின்பற்றியே புதிதாக மற்றோர் உடன்படிக்கைக்கு நவாபினை இசையுமாறு 1781ஆம் ஆண்டில் அவர் வற்புறுத்தினர். நவாபு தம்முடைய வருவாயினை ஐந்து ஆண்டுகளுக்கு நேரடியாக மெகார்ட்னேவிடத்து ஒதுக்கி வைத்து வந்தார். ஆனால், வருவாயினைக் கம்பெனிக்குக் கொண்டுசெல்லவொட்டாதவாறு நவாபினுடைய பிரதிநிதிகள் வெற்றியுடன் செயலாற்றிவந்தனர். அதன் பிறகு குத்தகைக்காரர்களை அமர்த்தும் பொறுப்பினை மெகார்ட்னேவே மேற்கொண்டார். பின்னர் கணிசமான அளவிற்கு அவர் பல திருத்தங்களைச் செய்தார். ஹேஸ்டிங்ஸின் போக்கிலே ஒரு மாற்றத்தை உண்டாக்கியமையால், மெகார்ட்னேவின் செயல்முறைகள் முதலில் அச்சுறுத்தப்பட்டன; பின்னர் அவருடைய செயல்கள் அனைத்தும் பாழாக்கப்பட்டன. 1785ஆம் ஆண்டு தாயகத்திலிருந்து அவருக்கு ஆணைகள் பிறப்பிக்கப்பட்டன. அவற்றுள் ஒன்று நவாபு தம்முடைய வருவாயைக் கம்பெனிக்காக ஒதுக்கீடு செய்துவருவதைத் தள்ளுபடி செய்யுமாறு அவரை வற்புறுத்தியது. லண்டனில் இருந்துவந்த பென்பீல்டினுடைய நண்பர்களுடைய செயல்களுக்கும் கம்பெனியின் போக்கிலே உண்டான மாறுதல்களுக்கும் தொடர்பு இல்லாமல் போகவில்லை. மெகார்ட்னே பதவியிலிருந்து தாமே விலகினர். தம்முடைய செயல்கள் நேர்மையானவை என்பதை எடுத்தியம்புவதற்கு அவர் உடனடியாகத் தாயகத்திற்குத் திரும்பிச் சென்றார். ஆனால், லண்டன் மாநகரம் மதராசின் செயல்முறைகளில் கொண்டிருந்த ஆர்வமும் அக்கறையும் அப்பொழுது பேராற்றல் வாய்ந்தனவாக இருந்தன.

ஆனால், அத்தகைய செயல்முறைகள் மதராசில் நெடுங் காலம் நிலவுவது மனநிறைவு அளிப்பதாக இல்லை. எனவே, 1787ஆம் ஆண்டு நவாபோடு புதியதோர் உடன்படிக்கை செய்துகொள்ளப்பட்டது. அவ் உடன்படிக்கையின் படி., தம் முடைய வருவாயில் அவர் ⅘ பங்கினைக் கடன்காரர்களுக்குக் கொடுக்கவேண்டும் என்றும், கம்பெனியிடத்துத் தம்முடைய படைபலத்தை ஒப்படைக்கவேண்டும் என்றும் முடிவுசெய்யப் பட்டது. திப்புவுடன் போர்புரிந்த காலத்தில் காரன்வாலிஸ் இதற்குமேல் ஒருபடி சென்று செயலாற்றினர். 1790ஆம் ஆண்டில் அவர் கருநாடகத்தைக் கைப்பற்றிக்கொண்டு, அதைத் தம்முடைய கட்டுப்பாட்டின்கீழ் வைத்திருப்பது போரை நடத்துவதற்கு எளிதாக இருப்பதை அவர் உணர்ந் தார். எனவே, அவர் 1792ஆம் ஆண்டில் நவாபோடு புதியதோர் உடன்படிக்கையைச் செய்துகொண்டார். போர்க் காலத்தில் கருநாடகத்தின் ஆட்சி முறையைக் கம்பெனியே நடத்தவேண்டும் என்பது அவ்வுடன்படிக்கையின் முதன்மை யான விதியாகும். ஆயினும், நவாபினுடைய அறிவுத் திறனுக்கும் கடன்கொடுப்போரின் செயல்களுக்கும் இன்னும் வாய்ப்பு அளிக்கப்பட்டது. வெல்லஸ்லி இறுதி மைசூர்ப் போரின்போது கருநாடகத்தின் ஆட்சியைத் தம்முடைய தாக்கிக்கொண்டார். அதை அப்படியே கம்பெனியினுடைய தாக்கிக்கொள்ள அவர் புதியதொரு நவாபினைத் தேர்ந் தெடுத்தார்; அந் நவாபும் ஓய்வுக்கால ஊதியம் பெறுவ தோடு பெயரளவில் நவாபாக இருக்கவும் இசைந்தார். அதனுடன் கடன்களையெல்லாம் ஒருவகையாகத் தீர்த்துவிடு வதற்கு அவர் முன்வந்தார். இவ்வாறு வெல்லஸ்லியின் காலத்தில்தான் கருநாடக நவாபின் ஆட்சியும் அதிகாரமும் முற்றிலும் ஆங்கிலேயர் கைவசம் வந்தன. அப்பொழுது தான் ஊழல் எனும் வண்ணக் கலவையில் படிந்திருந்த அதி காரம் என்னும் ஈரப்பசை முற்றிலும் உலர்ந்தது. இவ்வாறு சிறந்ததொரு பொதுத்துறை ஆட்சிமுறையினைக் கருநாட கத்தில் கருத்தாக நிறுவுவதற்குக் கால்கோள்விழா நடத்தப் பெற்றமை இங்குக் கருதத்தக்கதாகும்.

## ஆதாரங்கள்

சென்னையின் உள்நாட்டுச் செயல்முறைகளைப்பற்றி மிக விரிவாக H. D. Love என்பவர் எழுதியுள்ள (Vestiges of Old Madras) *(4 தொகு., 1913)* என்னும் நூலில் காணலாம். நவாப்பின் கடன் தொல்லைகளைப்பற்றி அறிவதற்குக்

'கேம்பிரிட்ஜ் இந்திய வரலாறு' என்னும் நூலில் ஐந்தாம் தொகுதியில் 15, 21ஆம் அதிகாரங்களைக் காண்க. பல்வகைச் செய்திகளைத் தெளிவாக எடுத்துரைக்கும் பயன் மிக்க பதிவேடு 'Private Correspondence of Lord Macartney' என்பதாகும்; பதிப்பாசிரியர் C. C. Davies (Camden Series, 1950). இதற்குச் சிறந்ததொரு முன்னுரை எழுதப்பட்டிருக்கிறது.

ஐதரைப்பற்றியும் திப்புவைப்பற்றியும் அறிவதற்கு 'History of Hyder Naik' என்னும் நூலைக் காண்க. அதை Husain Ali Khan Kirmani என்பவர் எழுதியுள்ளார். அதை மைல்ஸ் (Miles) என்பவர் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துள்ளார் (1842). குலாம் முகமது என்பவர் 'Lives of Haidar Ali and Tipu Sultan' (1855) என்னும் நூலை எழுதியுள்ளார். L. B. பிரவுனிங்கு, 'Haidar Ali and Tipu Sultan (1899)' என்னும் நூலை எழுதியுள்ளார். மைசூரைப்பற்றி மிக அண்மையில் எழுதப்பட்ட நூல் சி. ஹயவர்த்தனராவின் 'History of Mysore 1399—1799' என்னும் (3 தொகு., 1943-8) நூலாகும். இது விரிவான சிறந்ததோர் ஆராய்ச்சி நூலாகும். திப்பு சுல்தானைப்பற்றித் தற்காலத்தில் ஒரு நூல் எழுதப்பட்டுள்ளது. M. H. கான் என்பவர் 'History of Tipu Sultan' எனும் நூலை (1952) எழுதியுள்ளார். இவ்வாசிரியர்கள் அனைவரும் போர்களை ஆழ்ந்தாராய்ந்துள்ளனர். ஆனால், இதுவரையில் மைசூரின் ஆட்சிமுறையினை நன்முறையில் மதிப்பிட்டுரைக்கும் நூல் யாதும் எழுதப்படவில்லை. மைசூரைப்பற்றிச் சிறந்த ஆராய்ச்சி நூலாக இன்றுவரை இருந்துவருவது Mark Wilks என்பவர் எழுதியுள்ள 'Historical Sketches of the South India' (3 தொகுதி, 1810—17) என்பதாகும்.

சென்னையில் ஆங்கிலேயர் வாழ்க்கையைப்பற்றி அறிவதற்கு H. H. Dodwell எழுதியுள்ள 'The Nabobs of Madras' (1926) என்னும் நூலைப் பார்க்கலாம்.

மைசூர் கைப்பற்றப்பட்ட சிறிது காலத்திற்குப் பிறகு, மைசூரின் நிலையைப்பற்றி விரிவான விளக்கத்தினை F. Buchanan என்பவர் எழுதியுள்ள 'A Journey through Mysore...... (3 தொகுதி, 1807) என்னும் நூலில் காணலாம்.

# 9. ஷோரும் வெல்லஸ்லியும்

வங்காளத்திலுள்ள கம்பெனி ஊழியர்களைக் கட்டுப் படுத்த, உள்நாட்டுப் பொருமைகளுக்கும் பேரவாக்களுக்கும் மேற்பட்டவராகவும் பிரிட்டனின் பொதுவாழ்வில் சீரும் சிறப்புமுடையவராகவும் இருக்கின்ற ஒருவரை கவர்னர்-ஜெனரலாக அமர்த்தவேண்டும் என்று இயக்குநர்கள் கருதினர். எனவே, அவர்கள் நேரடியாகக் காரன்வாலிஸை கவர்னர்-ஜெனரலாகப் பதவியில் அமர்த்தினர். காரன் வாலிஸ் அத்தகைய மனிதர்கள் எப்பொழுதும் கிடைப் பார்கள் என்று நம்பிவந்தார். ஆனால், அவர் ஓய்வுபெறும் காலம் வந்தபொழுது அவருடைய பொறுப்பினை ஏற்றுப் பணியாற்ற மூன்றும் ஜார்ஜ் மன்னர் கூறியதைப்போன்று 'சிறப்புமிக்க பொறுப்புவாய்ந்த மனிதர்கள் யாருமே கிடைக்கவில்லை.' ஒருசமயம் கட்டுப்பாட்டுக் கழகத்தின் தலைவரான டண்டாஸ் (Dundas) தாமே கவர்னர்-ஜெனரலாகச் செல்ல நேரிடும் என்று கருதினர். ஆனால், சர் ஜான் ஷோர் என்பவரை இறுதியில் கவர்னர்-ஜெனரலாகத் தேர்ந்தெடுத் தனர். காரன்வாலிஸின் சீர்திருத்தச் செயல்களிலும் புத்தாக்க வேலைகளிலும் உடனிருந்து பணியாற்றியவர் ஷோர் என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது. அவருடைய செய லாற்றும் திறமையும் அறிவாற்றலும் காரன்வாலிஸின் உள்ளத்தைக் கவர்ந்தமையால், அவர் சில விதிமுறைகளைப் புறக்கணித்து, ஷோரினை கவர்னர்-ஜெனரல் பதவியில் அமர்த்துமாறு பரிந்துரைத்தார். அவருடைய திறமையிலும் நேர்மையிலும் மற்றவர்கள் கொண்ட நம்பிக்கை வீண்போக வொட்டாமல் ஷோர் நடந்துகொண்டார். ஆனால், ஆட்சிப் பணியாளர் குழுவின் மிகுந்த நம்பிக்கைக்குரிய தலைவர் என்ற முறையில் மிக உயர்ந்த அதிகாரங்கள் அவரிடத்து ஒப்படைக்கப்பட்டபொழுது, அவர் மலைத்துப்போய்விட்டார். அவர் செயலாற்றிய முறை அவருடைய உள்ள உறுதி

யின்மையை வெளிப்படுத்துவதாகவும் நம்பிக்கையுடைய தாகவும் தொடங்கித் தலையிடாக் கொள்கையினைப் பின்பற்று வதில் முடிந்தது. அத் தலையிடாக் கொள்கையும் கடமையைச் செய்வதற்குப் பதிலாக அதைப் புறக்கணிப்பதைப்போலவும் தோன்றியது.

1784ஆம் ஆண்டு இயற்றப்பட்ட பிட் இந்தியச் சட்டத் திற்கிணங்கத் தலையிடாக் கொள்கையும் வன்முறையில் நாடு களைக் கைப்பற்றுவதில்லை என்னும் கொள்கையும் மிகவும் கடுமையாகக் கடைப்பிடிக்கப்பட்டுவந்த காலத்தில்—1793ஆம் ஆண்டில்—ஷோர், காரன்வாலிஸிற்கு அடுத்து கவர்னர்-ஜெனரலானார். அச்சட்டம் இயற்றப்பட்ட காலத்தில் இந்தியாவில் நடைபெற்ற பல போர்கள் கம்பெனி ஊழியர் களின் பேராவாவினாலும் கீழ்மைப் பண்புகளாலுமே நடை பெற்றன என்னும் கருத்து இங்கிலாந்தில் நிலவிவந்தது. எனவே, பாராளுமன்றத்தின் அனுமதியின்றிப் போர்தொடுப் பதோ, நாடுகளைக் கைப்பற்றுவதோ தடைசெய்யப்பட்டது. வேறு பல காரணங்கள் இவ் ஆணையை உறுதியாகச் செயற் படுத்துவதற்கு ஆதரவைத் தேடித்தந்தன. இந்திய நாட்டின் அரசுகள் வன்முறையில் போர் தொடுக்கும் இயல்புடையன அல்லவென்று நம்பப்பட்டது. அவற்றை அவற்றின் விருப்பப் படியே விட்டுவிட்டால் அவற்றுக்கு இடையே எவ்வாறாகிலும் ஓர் ஆதிக்கச் சமநிலை உண்டாகும் என்றும், அப்பொழுது இந்தியாவிலுள்ள பிரிட்டிஷாரின் ஆதிக்கத்தோடு அவை சமநிலை அடையும் என்றும் கருதினர். மைசூரும், நைசாமும், சென்னையும் தென்னிந்தியாவைப் பகிர்ந்துகொள்ளும் என்றும், மராட்டியர் தங்களுடைய வழக்குகளைத் தாங்களே தீர்த்துக்கொண்ட பிறகு மராட்டிய அரசு வட இந்தியாவில் அப்கானிய அரசுடனும் சீக்கிய அரசுடனும் சமநிலையில் விளங்கும் என்றும், அதைப்போன்றே மராட்டிய அரசு கிழக்கே வங்காளத்திலுள்ள கம்பெனியோடு ஆதிக்கச் சம நிலையைப் பெறும் என்றும் லண்டன் மாநகரம் கருதியது. இவ்வாறு ஒருவகையான அமைதியை இந்தியாவில் நிலை நாட்டலாம் என்றும், அதன்மூலம் வாணிகம் செழித் தோங்கும் என்றும் பெருந்தன்மை வாய்ந்த பாராளுமன்ற உறுப்பினர்கள் நம்பினர். இவை யாவற்றையும்விட இக் கொள்கையைக் கடைப்பிடிக்குமாறு மற்றொரு முக்கியக் காரணமும் தூண்டிவந்தது எனலாம். இந்தியாவிலுள்ள ஆங்கிலேயரின் குடியேற்றங்களுக்கு ஃபிரான்சினாலோ, மற்ற ஐரோப்பிய அரசுகளினாலோ உண்டாகக்கூடிய இடர்ப்

பாடுகள் எல்லாம் இப்பொழுது நீங்கிவிட்டமையால், தலையிடாக் கொள்கையைப் பின்பற்றுவதே சாலச்சிறந்தது என்று அவர்கள் கருதினர். ஆட்சி செய்யவேண்டும் என்னும் காரணத்திற்காக ஒரு வாணிகக் கம்பெனி ஆட்சி செய்வது பொருத்தமற்றதாகும். அவ் ஆட்சியினுல் எத்தகைய ஆதாயமும் கிடைக்காத நிலையில் ஆட்சிசெய்ய விரும்புவது அறிவுடைமையாகாது. இந்திய மக்களின் நலனைக் கருதும் பாராளுமன்றமும் ஆதாயத்தைக் கருதும் இயக்குநர்களும் சேர்ந்து பேரவாவுடன் கூடிய இயல்பூக்கம்கொண்ட மனிதர்களின் செயல்முறைகளைச் செயல்படுத்தாதவாறு தடைப்படுத்திவந்தனர்.

இம் முறையைப் பின்பற்றுவதற்கு அடிப்படையாகக் கொண்ட கருத்துகள் சிறப்புடையனவாக இருந்தமையால், இம் முறை காரன்வாலிஸ் காலத்தில் செம்மையாக வேலை செய்தது. ஃபிரான்சிலிருந்து உண்டாகக்கூடிய இன்னல்களும் இடர்ப்பாடுகளும் நிறுத்தி வைக்கப்பட்டிருந்தன. ஃபிரெஞ்சுப் புரட்சியின் முதற் பகுதியில் ஃபிரான்சினுல் உண்டாகக்கூடிய இடர்ப்பாடுகள் பல ஆண்டுகளுக்கு நிறுத்தி வைக்கப்பட்டதைப்போல் தோன்றியது. மராட்டிய வழக்கு தொடர்ந்து நடைபெற்று வந்தது. அவர்களுள் பேராற்றலும், பெருந்திறனும், நீதியும் நேர்மையும் வாய்ந்த மகதாஜி சிந்தியாவே தன்னிகரற்ற தலைவராகச் சிறப்புற்று விளங்குவார்போல் தோன்றியது. மனக்குழப்பம் அடைந்த பஞ்சாபியரிடை சீக்கியர்கள் ஆதிக்கம் பெறுவதில் வளர்ச்சியுற்றுக் கொண்டிருந்தனர். அவர்களை ஆற்றல்மிக்க ஆப்கானியர் அச்சுறுத்திக்கொண்டே யிருந்தனர். தென்னிந்தியாவில் மட்டும்தான் காரன்வாலிஸ் போரில் ஈடுபட நேரிட்டது. அங்கு மட்டும் அவர் விதிவிலக்காகப் போரில் ஈடுபட்டதற்குரிய காரணங்கள் ஆராயத்தக்கன. முதலாவதாகத் திப்புவின் நாடறிந்த அமைதியின்மையாகிய மனப்பான்மை போருக்குக் காரணமாகும். இரண்டு முரண்பட்ட கடமைகளை, வேற்றுமையைப் போக்கிப் பொருந்தச் செய்யவேண்டும் என்று காரன்வாலிஸ் முயன்றமையால் உண்டான அருவருக்கத்தக்க செயல்களை இரண்டாவது காரணமாகக் கூறலாம்.

இத்தகைய பாவனைகள் அனைத்தும் சட்டப்படி செல்லக் கூடியனவாக இருந்தவரை தலையிடாக் கொள்கை முறையும் தொடர்ந்து வெற்றியளிப்பதாக இருந்துவந்தது என்பதை நாம் எளிதில் அறியலாம். ஃபிரெஞ்சியர் தொடர்ந்து

கம்பெனியோடு தொடர்பு கொள்ளாமல் இருக்க வேண்டும்; மராட்டியர்களுக்கு இடையே நடைபெறும் போராட்டம் கூட்டுத் தலைமையாக வெளிப்படவேண்டும். அக் கூட்டுத் தலைமையும் வன்முறையில் பிற நாடுகளைக் கைப்பற்றாமல், ஆக்கப் பணியில் கருத்தைச் செலுத்தவேண்டும். ஆனால், 1793ஆம் ஆண்டு ஷோர் பதவியேற்றபொழுது அரசியல் நிகழ்ச்சிகள், அரசியல்வாதிகளின் தருக்கத்தினைத் தலை கீழாக மாற்றிவிட்டிருந்தன. எதிர்பாராத அரசியல் நிகழ்ச்சி களால் தலையிடாக் கொள்கையின் அடிப்படை மெல்ல அரிக்கப்பட்டது, ஷோரின் தீவினைப்பயனேயாகும். புதிதாக வளர்ந்துகொண்டிருக்கும் சக்திகளைப் புரிந்துகொள்ளாமை அவருடைய குறையாகும். அப் புதிய சக்திகளின் போக்கினை அறிந்து, அதற்கேற்ப நன்கு ஏற்றுக்கொள்ளத்தக்க திட்டத் தினைக் கடைப்பிடிக்கவும் அவர் தவறிவிட்டார். நாட்டிலே உண்டான மாற்றங்களை இரு வகையாகப் பிரித்துக்கூறலாம். அந்த ஆண்டுகளில் ஐரோப்பாவில் உண்டான மாபெரு மாற்றம் குறிப்பிடத் தக்கதாகும். குழம்பிய நிலையில் சிதறுண்டுபோயிருந்த ஃபிரான்சு, மதிநலம் வாய்ந்த ஒரு மாபெருந் தலைவனின் கீழ்த் தமக்குக் கீழைநாடுகளிடத்துள்ள ஆர்வத்தை உலகறியச் செய்வதற்காக எகிப்தின்மீது படை யெடுத்துச் சென்றமை சிறப்புமிக்க மாற்றமாகும். இந்தி யாவிலே 1794ஆம் ஆண்டில் தம்முடைய வீறுமிக்க வாழ் நாளில் மகதாஜி சிந்தியா இறந்தமையால், மராட்டியரின் படிப்படியான வளர்ச்சி தடைப்பட்டது. அதன் பிறகு புதிதாக உண்டான உட்பகையும் பூசல்களும் நடு இந்தியாவில் அமைதியை நிலைநாட்டுவதற்குரிய வாய்ப்பினை வழங்காமல் போயின. மேலும், உள்ளூர உண்டாகும் நெருக்கடியைக் குறைப்பதற்கு—கருத்தினை வேறு பக்கம் திருப்புவதற்குப் பிற அரசுகளைத் தாக்கும் வன்முறைச் செயல்கள் புதுப்பிக்கப் பட்டன. இந்தியாவில் அமைதியை நிலைநாட்டுவதைப்பற்றிக் கொண்டிருந்த நம்பிக்கை வீண் என்றும், தலையிடாக் கொள்கையைப் பின்பற்றுவது என்பது நிகழ்ச்சிகளைக் காணாது கண்களை மூடிக்கொள்ளும் குருட்டுத்தனமாகும் என்றும் கருதப்பட்டது.

சிந்தியா இறந்தவுடன், பூனாவில் நானா பட்னாவிஸ் தாம் இழந்திருந்த செல்வாக்கினை மீண்டும் பெற்றார். அச் செல் வாக்கினை உறுதிப்படுத்திக்கொள்ளுவதற்காக அவர் நைசாமைத் தாக்குவதற்கு முனைந்தார். நைசாம் இதற்கு முன்பே காரன்வாலிஸிடமிருந்தும், அவருக்குப் பிறகு ஷோரிட

மிருந்தும் தமக்குத் துன்பம் உண்டாகின்றபொழுது படையுதவி அளிக்கவேண்டும் என்று வரையறுக்கப்பட்ட உறுதிமொழியைப் பெற்றிருந்தார். ஆனால், அவ்வுறுதிமொழி பின்னர் மறுக்கப்பட்டாலும், கம்பெனியின் நண்பர்களுள் ஒருவராக நைசாம் பட்டியலில் சேர்க்கப்பட்டிருந்தார். திருவாங்கூரின் அரசரைப் போன்றே நைசாமும் கம்பெனியினிடத்து நட்புறவு கொண்டிருந்தார். இந் நட்புறவை அவர் குண்டூரைக் கொடையாகக் கொடுத்துப் பெற்றிருந்தார் என்பதும் இங்குக் குறிப்பிடத்தக்கதாகும். திப்புவோடு கம்பெனி போரிட்டபொழுது, நைசாம் கம்பெனிக்குப் பலவகையான உதவிகள் செய்ததன்மூலம் கவர்னர் - ஜெனரலின் ஆதரவையும் அன்பையும் பெற்றார். இவ்வளவு நெருங்கிய தொடர்பு இருந்துவந்த போதிலும், ஷோர் நைசாமைத் தொலைவிலேயே நிறுத்தி வைத்தார். இதனால், அவருடைய இத்தகைய செயல்களுக் கெல்லாம் உண்மையான ஊக்கம் அளிப்பது மராட்டியரால் உண்டாகும் அச்சம்தான் என்ற முலாம், நைசாமின் நேச மனப்பான்மைக்குப் பூசப்பட்டது. பிரிட்டிஷாரின் நன்னம்பிக்கையிடத்து இந்தியருக்கு இருந்துவந்த நம்பிக்கை இதனால் ஆட்டம் கொடுக்கத் தொடங்கிற்று. 1795ஆம் ஆண்டு கர்டா என்னும் இடத்தில் நைசாம் மராட்டியரால் தோற்கடிக்கப்பட்டமையின், எதிரொலியாக ஆங்கிலேய ருக்கும் நைசாமிற்கும் இடையே இருந்துவந்த நட்புறவு கசந்து போயிற்று. இச் சமயத்தில் மராட்டியர் ஒற்றுமையுடன் ஒன்றுபட்டிருந்து இருப்பார்களானால், நெருக்கடி நிலை உண்டாகியிருக்கும். ஆனால், அவர்கள் கர்டா வெற்றிக்குப் பிறகு பாழ்செய்யும் உட்பகையால் பல குழுக்களாகப் பிரிந்து விட்டனர். நைசாம் விரைவிலே தாம் இழந்த ஆற்றலைப் பெற்றார். கர்டா போர்க்களத்துத் தாம் இழந்த பகுதிகளை யெல்லாம் பூனாவிற்குப் பரிசாகக் கொடுத்து, நைசாம் அவருடைய ஆதரவைப் பெற்றார். நைசாம் ஃபிரெஞ்சுக்காரர்களோடு தொடர்பு கொண்டது இதனுடைய உடனடி விளைவாகும். ரேமாண்டு என்னும் ஃபிரெஞ்சு அதிகாரியையும் வேறு பல அதிகாரிகளையும் கொண்டு, நைசாம் தம்முடைய படைகளுக்கு முறையான படைக்கலப் பயிற்சி கொடுத்து, ஒழுங்கும் கட்டுப்பாடும் உடைய படைகளின் அணியை அவர் அமைத்தார்.

அயோத்தியின் செயல்முறைகளில் ஷோர் அதிக அளவிற்கு வெற்றி பெற்றார். அவ் அரசின் எல்லைப்புறங்

களில் இதற்கு முன்பே கம்பெனியின் படைகள் நிறுத்தப்பட்டிருந்தன ; அவ் அரசு கம்பெனியின் பாதுகாவலிலேயே இருந்துவந்தது. எனவே, பாராளுமன்றத்தின் கண்டனத்தைப்பற்றிய அச்சம் இல்லாமல் அவர் ஊக்கத்துடன் செயலாற்ற முடிந்தது. 1797ஆம் ஆண்டில் நவாப் அஸாப்-உத்-தௌலா காலமானார். அவருடைய புகழ்மிக்க மகனாகவும் அமைச்சராகவும் இருந்த வாசிர் அலி நவாபாக்கப்பட்டார். அவரைக் கம்பெனியும் நவாபாக ஏற்றுக்கொண்டது. வாசிர் அலி காலஞ்சென்ற நவாபிற்கு நேர்மையற்ற வழியில் பிறந்த மகன் என்பதையும், அவர் திறமையற்றவராக இருக்கிறார் என்பதையும் அறிந்த ஷோர், அவரைப் பதவியிலிருந்து நீக்கிவிட்டு, அஸாப்பினுடைய சகோதரர்களுள் ஒருவரை நவாபாக்குவதற்கு முயன்றார். இவ்வாறு ஷோரினால் நவாபாக்கப்பட்டவர் திறமைமிக்கவரும் நற்பேறில்லாதவருமான சாதத் அலி என்பவராவர். புதியதோர் உடன்படிக்கை அவரோடு செய்துகொள்ளப்பட்டது. அதன்படி ஆங்கிலேயர் அலகாபாத் கோட்டையைக் கைம்மாறாகப் பெற்றனர். நவாபின் அயல்நாட்டுத் தொடர்பு முழுவதும் ஆங்கிலேயரால் கண்காணிக்கப்பட்டது. நவாபினுடைய இராச்சியம் முழுவதையும் பகைவர்களுடைய தாக்குதல்களிலிருந்து காப்பதாக ஆங்கிலேயர் உறுதிமொழி அளித்தனர். அப் பாதுகாப்பிற்காக ஆண்டுதோறும் 76 இலட்சம் ரூபாய் உதவித் தொகையை ஆங்கிலேயர் பெறுவதற்கு உரிமையளிக்கப்பட்டது. இத்தகைய கடுமையான உடன்பாட்டிற்குக் காரணம், லாகூரில் சாமன்ஷா தலைமையின்கீழ் ஆப்கானியர் அயோத்தியைத் தாக்குவதற்குத் தயாராகக் காத்திருந்தமையேயாகும். அகமதுஷா துரானியின் காலம்முதல் ஆப்கானியரால் உண்டாகக்கூடிய தீமையினைப்பற்றிக் கம்பெனி தேவையற்ற அளவிற்கு அறிந்திருந்ததோடு, அச்சமும் கொண்டிருந்தது. வெல்லஸ்லியின் பிற்காலக் கொள்கைக்கு அது ஒரு முன்னறிகுறியாக அமைந்தது எனலாம்.

1795ஆம் ஆண்டின் இறுதியில் வங்காள அதிகாரிகளின் பருவந்தோறும் செய்யப்படும் கூட்டுச் சேர்த்தலினால் ஷோரின் இந்தியப் பணித்துறைத் தொண்டு முடிவுற்றது. வீக்கம் கண்டுவிட்ட அகவிலைப் படிகளைக் காரன்வாலிஸ் குறைத்துவிட்டமையால் வங்காளத்தில் இருந்த கம்பெனி அதிகாரிகள் சீற்றமுற்றிருந்தனர். காரன்வாலிசைக் காட்டிலும் மென்மையான உள்ளமுடையவரும் செல்வாக்குக் குறைந்தவருமான ஷோரின் ஆட்சிக் காலத்தில், அவர்கள்

எதிர்ப்புச் செயல்களில் ஈடுபட்டனர். அவர் சலுகைகள் அளித்தார் என்ற செய்தி எட்டியவுடனேயே, இயக்குநர்கள் அவரைத் திரும்பிவருமாறு அழைப்பதென்று முடிவு செய்தனர். காரன்வாலிஸை மீண்டும் இந்தியாவிற்குச் செல்லுமாறு கம்பெனியார் வேண்டிக்கொண்டனர். அந்நிலையில் காரன்வாலிஸின் ஆட்சிக் காலத்தில்தான் தமக்கு உரிமையில்லாத சலுகைகளையெல்லாம் டண்டாஸ் பெற்ருர் என்ற செய்தியை இயக்குநர்கள் அறிந்தவுடன், காரன்வாலிஸைக் கைவிட்டனர். அதற்குப் பிறகு மார்னிங்டன் பிரபுவை கவர்னர்-ஜெனரலாகப் பதவியில் அவர்கள் அமர்த்தினர்.

புதிய கவர்னர்-ஜெனரல் பதவியில் அமர்த்தப்பட்ட காலத்தில் முப்பத்தேழு வயதுடையவராக இருந்தார். அவர் குறுகிய தோற்றம் உடையவராக இருந்தபோதிலும், உறுதியாக எதிர்த்து நிற்கும் உள்ள உரம் வாய்ந்தவராக இருந்தார்; ஆதிக்க மனப்பான்மையுடையவராக இருந்தார்; மதிநலமும், சுறுசுறுப்பும், வரம்பற்ற பேரவாவும் உடையவராக அவர் விளங்கிஞர். இளைஞராக இருந்த காலத்தில், அவர் தொன்மைச் சிறப்புவாய்ந்த இலக்கியங்களிலே ஈடுபாடு கொண்டிருந்தார். பல ஆண்டுகள் மார்னிங்டன் பிரபு பாராளுமன்ற உறுப்பினராகப் பணிபுரிந்திருக்கிருர். 1795ஆம் ஆண்டு முதல் கிழக்கிந்திய ஆணையாளர்களுள் ஒருவராக இருந்துவந்திருக்கிருர். அரசியல் சமநிலையில் மாற்றங்கள் உண்டாகின்ற பொழுது அம் மாற்றங்களை எளிதிலே கண்டறியும் பெறுதற்கரிய அரசியல் மதிநுட்பம் வாய்க்கப்பெற்றவராக அவர் விளங்கிஞர். ஆஞல், தம்முடைய வள ஆதாரங்கள் எத்துணை அளவிற்குப் பயன்படும் என்பதை அறிந்து, அதற்கேற்ப வழிமுறைகளை, அடையவேண்டிய இலட்சியங்களோடு மென்மையாகச் சமநிலைப்படுத்தும் பண்பு—அரசியலின் இறுதிநிலையில் தேவைப்படும் நற்குணம் அவரிடத்து இல்லாமற்போயிற்று. அவருடைய நுண்ணறிவு முயற்சி செய்யுமாறு ஊக்குவித்தது. அவருடைய அறிவாற்றல் வரிசையான புகழ்மிக்க வெற்றிகளைத் தேடித்தந்தது. பகைவர்களோடும் தோழர்களோடும் பழகுகின்றபொழுது அவரிடத்துக் காணப்பட்ட குறைபாடுகள் முதலில் அவருக்குப் பல தடைகளை உண்டாக்கின; பின்னர் நினைவூட்டிக்கொள்ளுமாறு செய்தன. அவருடைய மாண்புமிக்க சகோதரர் ஆர்தரைக்காட்டிலும் அவர் கற்பனையில் மூழ்குவது மிகுதியாக இருந்துவந்தது. ஆஞல், அவரிடத்து நேர்மையான சமநிலையில் நின்றெழுகும் பண்பு மிகக் குறைவாகவே இருந்தது. கம்பெனி ஊழியர்களின் உள்ளங்களில்

தாய்நாட்டு அரசின் அதிகாரத்தை ஆழப் பதியுமாறு செய்வதில் அவர் வல்லவராக விளங்கினார். அவர்கள் 'புகழடைவதற்குரிய வாயில்கள் அனைத்தையும் அடைப்பதன் மூலமாகவும், ஓரளவிற்குக் கடுமையான ஊக்கத்துடனும்' அவர் கம்பெனி ஊழியர்களின் மனப்பான்மையை மாற்ற முயன்றார். ஆனால், அதே சமயத்தில் தம்மை இயக்குநர்களும் அமைச்சர்களும் அடக்கியாள விரும்புவதை அவர் விரும்பவில்லை.

வெல்லஸ்லியின் ஏழாண்டுக் காலத்துத் தலைமைப் பதவியின்பொழுது செய்யப்பட்ட மாற்றங்கள் மிகப் பெரியனவாகும். இந்தியாவில் பிரிட்டிஷாரின் ஆதிக்கம் வளர்ச்சியுற்ற அக் காலத்தில் அவ் ஆண்டுகள் ஒரு சகாப்தத்தையே தொடங்கிவைத்ததாகக் கருதப்படுகிறது. ஆனால், மார்னிங்டனைப் பதவியில் அமர்த்தியதால், இந்தியாவில் பிரிட்டிஷாருடைய கொள்கையில் எத்தகைய புரட்சிகரமான மாற்றங்களும் உண்டாகவில்லை. ஆனால், இந்திய அரசியல் சூழ்நிலையில் மாற்றமுண்டானதற்கேற்ப, வற்புறுத்தப்படுவதிலும் மாற்றம் உண்டாயிற்று. இவை இரண்டும் ஆவல்மிக்கவரும் துணிகரச் செயல்வீரருமான புதிய தலைவருக்கு மிகவும் பொருத்தமாகப் போயிற்று. அவர் என்ன செய்கிறார் என்பதை உணர்ந்து, அவரைத் திரும்பிவருமாறு அழைப்பதற்குள்ளாகவே அவர் ஒரு புரட்சியை உண்டாக்கக்கூடிய அறிவாற்றல் உடையவராக விளங்கினார். இந்தியாவிலும் ஐரோப்பாவிலும் அரசியல் சூழ்நிலையில் மாற்றம் உண்டாயிற்று. இந்திய அரசுகள் தாமே அரசியல் ஆதிக்கம் பெற்று அனைத்துலக ஆதிக்கச் சமநிலையை நிறுவ முடியாது என்பது பையப்பையப் புலனாயிற்று. இந்திய அரசுகளின் ஒருமைப்பாடு, பதினெட்டாம் நூற்றாண்டின் ஐரோப்பிய அரசுகளின் ஒருமைப்பாட்டிற்கு எப்பொழுதுமே இணையாகாது என்பது புலனாயிற்று. வாணிகத்தைச் செழிப்புறச் செய்வதற்கு நாட்டிலே அமைதி இன்றியமையாது தேவைப்பட்டது. நிலையாகப் படைகளை நிறுத்திப் போற்றிக் காப்பது என்னும் செயல் வாணிகத்தில் கிடைக்கக்கூடிய ஆதாயத்தின் பெரும்பங்கை விழுங்கிவிடும் என்பதை அவர்கள் நன்குணர்ந்திருந்தனர். சமநிலைப்படுத்தவேண்டும் என்று கருதியவர்கள் எல்லாம், இந்தியாவில் மேலாண்மையைப் பெறுவதே பிரிட்டிஷாரின் இலட்சியம் என்பதைப்பற்றி ஆராயத் தொடங்கினர். கம்பெனிக்குள்ளேயே காலப்போக்கில் நன்மை தரத்தக்க முற்போக்கான திட்டங்களை ஆதரிக்கும் கருத்துடையவர்

களும் இருந்தனர்.[1] ஐரோப்பாவைப் பொறுத்தவரையில் உண்டான மாற்றம்தான் குறிப்பிடத்தக்கதாகும். புதிய தொரு யுகத்தின் தொடக்கத்திற்கு ஃபிரெஞ்சுப் புரட்சி கட்டியங் கூறுகிறது என்று நம்பப்பட்ட காலம் மறைந்து போயிற்று. அந் நம்பிக்கை நிலவிய இறுதி இமைப்பொழுது வரையில் பிட் இயன்ற அளவிற்கு அமைதியைக் கடைப்பிடிப் பதிலேயே கண்ணுங் கருத்துமாக இருந்துவந்தார். புரட்சி நெறியைப் போற்றும் ஃபிரான்சு இங்கிலாந்தின் உரிமைக்கு ஊறு விளைவிப்பதாகவும், எங்கும் நிலவிவருகின்ற அமைதி யைக் குலைப்பதாகவும் பிரிட்டிஷார் அஞ்சினர். 1797ஆம் ஆண்டு அக்டோபர் மாதத்தில் காம்போ ஃபார்மியோ (Campo Formio) உடன்படிக்கையின்படி முதல் கூட்டிணைவு இழிவான முடிவிற்கு வந்தது. முன்பின் அறியாத நாட்டின்மீது படை யெடுப்பதற்காக இளைஞராகிய போனபார்ட்டே பேரள விற்குப் படைகளை ஆயத்தம் செய்துகொண்டிருப்பதாகச் செய்தி உலவியது. பிரிட்டிஷ் ஆளும் வகுப்பினர் அச்சத்தால் நடுக்கமுற்றனர்; உள்ள உறுதிப்பாட்டினால் விறைத்துக் கொண்டிருந்தனர். 1796ஆம் ஆண்டில் நடைபெற்ற இத்தாலியப் படையெடுப்பிற்குப் பிறகு ஃபிரான்சினுடைய எத்தகைய செயலும் உண்மையென்று நம்பமுடியாததாக இருந்தது; அச் செயலைப்பற்றி முன்கூட்டி அறிவிக்கக்கூடிய எச் செய்தியும் மகிழ்ச்சியுடன் வரவேற்கப்பட்டது. இந்தியா வில் அரசியல் குழப்பம் தொடர்ந்து இருந்துவருகிறது என்னும் மாயையால் மறைப்புண்டு கிடந்தவர்களிடமிருந்தும், ஃபிரெஞ்சுக்காரர்களுடைய ஆதிக்க வளர்ச்சியின் பரிணாமத் தைக் கண்டு அஞ்சியவர்களிடமிருந்தும் வெல்லஸ்லியின் முதல் செயல்கள் பேராதரவைப் பெற்றன. அவ்வாறு ஆதரவு தந்தவர்களுள் பிட்டும் டண்டாசும் குறிப்பிடத்தக்கவர்க ளாவர்.[2]

[1] இயக்குநர் குழுவைச் சேர்ந்த டேவிட் ஸ்காட்டை எடுத்துக் காட்டாகக் குறிப்பிடலாம்.

[2] 1798ஆம் ஆண்டு ஜூன் மாதம் 18ஆம் நாள் இரகசியக் குழுவினர், நெப்போலியனின் படைகள் குலானிலிருந்து மே மாதம் 19ஆம் நாள் புறப்பட்டுவிட்டதாக வெல்லஸ் லிக்குத் தெரிவித்தனர். அக்டோபர் 18-ல் வெல்லஸ்லி எகிப்து தாக்கப்பட்ட செய்தியைக் கேள்வியுற்றார்; அக்டோபர் 31ஆம் நாள் நைல் நதியில் நெல்சன் வெற்றி பெற்ற செய்தியை அவர் கேள்வியுற்றார்.

இத்தகைய ஏற்ற சூழ்நிலையில் வெல்லஸ்லி தம்முடைய கொள்கையைத் தாயக அரசாங்கத்தின் கருத்துக்கு மாறுபடாத வகையில் தொடர்ந்து கடைப்பிடிக்க முடிந்தது. அவருடைய தனிப்பட்ட கொள்கை மிக எளிமையாக இருந்தது. படையெடுத்துவரும் ஃபிரெஞ்சியரின் படைக்கு நிலைக்களனாகவும், இந்தியாவில் ஃபிரெஞ்சுக்காரர்களுடைய செல்வாக்கிற்கு உரியதாகவும் எப்பகுதியும் இருக்கவொட்டாமல் செய்ய வேண்டுமென்றால், இந்தியாவிலிருந்தே ஃபிரெஞ்சுக்காரரை அடியோடு வெளியேற்றிவிட வேண்டும் என்பது அவருடைய கொள்கையாகும். இந்திய அரசியல் குழப்பம் அத்தகைய நிலைக்களன்களுக்கு இடங்கொடுப்பதாக இருந்தமையால், பொது வகையில் தலையிடாக் கொள்கையையும் ஆதிக்கச் சமநிலையையும் நீக்கிவிட்டு, இந்தியாவில் பிரிட்டிஷாரின் பேராதிக்கத்தை நிலைநாட்டுதல் என்னும் கொள்கையைக் கடைப்பிடிக்கவேண்டும் என்பது வெல்லஸ்லியின் கருத்தாகும். முதலில் அவருடைய செயல்முறைக்குகந்ததான இக் கொள்கை 'ஃபிரெஞ்சுக்காரர்களுக்கு எதிராக முன்னேறுதல்' என்ற ஒன்றாகவே கருதப்பட்டது. அவருடைய முதல் முயற்சியில் அவர் வியக்கத்தக்க பெருவெற்றியடைந்தார். அவ்வெற்றி அவருடைய பெரிய குறிக்கோளினை நோக்கி முன்னேறுமாறு அவரை ஊக்குவித்தது.

வெல்லஸ்லியினுடைய (இப் பெயராலேயே இனிமேல் அவரை நாம் குறிப்பிடுவோம்)[1] திட்டத்திற்கு உதவியாக இருந்த இரண்டு கருவிகள் போரும் அரசியல் சூழ்ச்சித்திறனுமாகும். அவை இரண்டையும்கொண்டு அவர் துணைப்படைத் திட்ட உடன்படிக்கையைச் செய்துகொள்ளுமாறு இந்திய அரசுகளைத் தூண்டிவந்தார். செயல்முறையில் துணைப்படைத் திட்ட உடன்படிக்கை என்பது பெரும்பாலும் போருக்குப் பீடிகையாக அமைந்தது எனலாம். ஆனால், அவருடைய திட்டத்தின் நோக்கத்திற்கு அது நேர்மாறானது என்பதை வெல்லஸ்லி எப்பொழுதுமே ஒப்புக்கொள்ளத் தவறியதில்லை. இவற்றிற்குத் துணையாக ஆற்றலற்ற அரச குமாரர்களை அச்சுறுத்தி, அவர்களுடைய அரசுகட்டில்களைத் தம்மிடம் ஒப்படைக்குமாறு செய்தார்; அதற்குப் பதிலாக அவர்களை ஓய்வுபெறச் செய்தார். அவர்களுக்கு ஓய்வுக் கால ஊதியத்தை அளிக்கும் முறையை அவர் பின்பற்றினார். தம்

[1] திப்புவைத் தோற்கடித்தபிறகு, மார்னிங்டனாக இருந்தவர் வெல்லஸ்லி கோமகனாகச் சிறப்பிக்கப்பட்டார்.

முடைய செயல்முறைகளின் நேர்மையைப்பற்றியும் அறவொழுக்கத்தைப்பற்றியும் என்றுமே அவருக்கு ஐயம் உண்டாகவில்லை. பரந்த நோக்குடன் பார்க்கின்றபொழுது இந்திய மக்களின் நலனைக் கருதியே பிரிட்டிஷாரின் ஆதிக்கத்தை இந்தியாவில் தாம் நிலைநாட்டப்போர்வதாக அவர் கருதியதால், அதற்காக அவர் மேற்கொண்ட செயல்கள் அனைத்தும் சிறந்தவையாகவே அவருக்குத் தோன்றியிருக்க வேண்டும் என்பது புலனாகின்றது. மக்களின் நலனுக்காக அரசர்களை அவர் பலி கொடுத்தார். அதில் பொதிந்துள்ள மக்களாட்சிப் பண்புகளைப்பற்றிக் கருதாமல், அவர் கண்மூடித்தனமாக இச்செயலைச் செய்தார். ஒவ்வொரு பிரச்சினை உண்டாகியபோதெல்லாம் தம்முடைய எதிரிகளே தவறு செய்கிறார்கள் என்று கருதுவதன்மூலம் தம்முடைய மனத்தைத் தாமே தேற்றிக்கொள்ளும் அறிவுநலம் வாய்க்கப் பெற்றவராக அவர் இருந்தார். இத்தகைய கருவிகளுள் சிறப்புமிக்கதாக இருந்தது துணைப்படைத் திட்ட முறையாகும். வெல்லஸ்லியின் பெரும்பான்மையான திட்டங்களுள் துணைப்படைத் திட்ட முறைமட்டும் புதுமையானதாக இல்லை. அவர் அதைப் பயன்படுத்திய முறையில்தான் அவருடைய தற்பண்பு திகழுகிறது. 1765ஆம் ஆண்டில் அயோத்தியைச் சேர்ந்த ஷுஜா-உத்-தௌலாவோடு கிளைவ் முதன்முதலாகத் துணைப்படைத் திட்ட உடன்படிக்கையைச் செய்துகொண்டார். ஹேஸ்டிங்ஸும் காரன்வாலிஸும் அதைச் சிறிது விரிவுபடுத்தி வளர்த்தனர். ஆனால், அவர்கள் எல்லாரும் குறிப்பிட்ட ஓர் அரசரிடத்துக் குறிப்பிட்ட ஒரு குறிக்கோளுக்காகத்தான் இவ் உடன்படிக்கையைச் செய்துகொண்டனரே ஒழிய, வெல்லஸ்லியைப் போன்று ஆதிக்கத்தை அடைவதற்குரிய தொழில் நுட்பத்தின் ஒரு பகுதியாக அவற்றை அவர்கள் பயன்படுத்தவில்லை. அயோத்தியோடு செய்துகொள்ளப்பட்ட உடன்படிக்கை தற்காப்புச் சார்புடையதாகும். ஆப்கானியருக்கும் மராட்டியருக்கும் எதிராக வங்காளம் அயோத்தியை ஓர் அரணாக அமைத்துக்கொண்டது. வெல்லஸ்லியின் உடன்படிக்கைகள் அனைத்தும் முதலிலே தாமே வன்முறையில் தாக்குவனவாக அமைந்தன. அவ் உடன்படிக்கைகள் இந்திய இராச்சியத்தினுள் பிரிட்டிஷாரின் படைகளை நிறுத்துவதற்குரிய நிலைக்களன்களை அமைப்பதற்காகவே செய்யப்பட்டன. கம்பெனியைச் சாராத இந்தியாவை பிரிட்டிஷார் கட்டுப்படுத்தி ஆளுவதற்கு அமைக்கப்பட்ட பீடிகையாக அவை அமைந்தன. அவ் உடன்படிக்கைகளின் தூண்டுதலால் உண்

டான போர்களில் வெற்றி பெறுவதற்குரிய வாய்ப்புகளை அளிப்பனவாக அவை அமைந்தன.

துணைப்படைத் திட்ட முறை மிக எளிமையானது. அது எளிமையாக 'இருந்ததைப்போன்றே ஆற்றலுடையதாகவும் இருந்ததை மெய்ப்பித்தது. தம்மைச் சூழ்ந்துள்ளவர்களால் தமக்குத் துன்பம் உண்டாகும் என்று அஞ்சும் அரசரை பிரிட்டிஷாரின் உதவியைப் பெற்றுக்கொள்ளுமாறு தூண்டுவது இத் திட்டமாகும். எதிர்த்துப் போரிடவரும் எல்லாப் பகைவர்களுக்கும் எதிராக அவ் அரசருக்கு முழுப் பாதுகாப்பு அளிப்பதாக பிரிட்டிஷார் உறுதிமொழி அளித்தனர். அவர்களுடைய உறுதிமொழி ஆற்றல் உடையதாக இருப்பதற்காகக் கம்பெனியின் படைகளுள்ளே ஒரு பிரிவினை அந்த அரசரின் நாட்டினுள் நிறுத்திவைத்தனர். அப் படை தாக்கவருகின்றவரை எதிர்த்துப் போரிடும் என்று உறுதிமொழி அளிக்கப் பட்டது. அப் படைப்பிரிவுக்காகும் செலவினை அந்த அரசர் பணமாகவோ, தம்முடைய அரசின் ஒரு பகுதியை பிரிட்டிஷாருக்கு மானியமாகவோ அளிப்பதன்மூலம் ஏற்றுக்கொண்டார். ஓர் அரசருக்குப் பாதுகாப்பு அளிப்பது என்னும் அடிப்படை இலட்சியத்தோடு இத் திட்டத்தை நோக்குவோமானால், அது முற்றிலும் வெற்றிபெற்றதாகக் கூறலாம். ஆனால், அவ் உடன்படிக்கைகளினால் துணைவிளைவுகள் பல உண்டாயின. அரசர் அவருடைய இந்தியப் பகைவர்களிடமிருந்து பாதுகாக்கப்படுகிறார் என்பது உண்மை. அதைப் போன்றே பிரிட்டிஷாரின் நண்பர்கள் தவிர்க்க முடியாத வகையில் அவருடைய நண்பர்களாயினர். பிரிட்டிஷ் அரசியல் வலையில் சிக்கிக்கொண்ட இந்திய அரசர் என்னும் ஈ புறத்தே பறந்து செல்லமுடியாது அல்லற்பட்டது. அது அவ் வலையிலிருந்து தப்பிச் செல்லுதல் என்னும் நம்பிக்கை பயனற்றதாகும். மக்களைப் பொறுத்தவரையில் அடிக்கடி நடைபெறும் படையெடுப்புகளால் அல்லற்படாது தப்பிப் பிழைத்தனர். ஆனால், அவர்களுடைய அரசரின் மனம்போன போக்கினால் அல்லற்படும் மக்களுக்கு நல்லதோர் எதிர்காலம் வாய்க்காமல் போயிற்று; அரசரை எதிர்ப்பதற்குரிய வள ஆதாரமோ, ஆதரவோ அவர்களுக்குக் கிடைக்காமல் போயிற்று. இவ் உடன்படிக்கையைச் செய்துகொள்ளும் அரசரின் உரிமையைப் பறிப்பதில் இவ் உடன்படிக்கை மிகத் திறமை வாய்ந்ததாக இருந்தது. இத்தகைய உடன்படிக்கைக்கு அரசர்களை எப்பொழுதாகிலும் உடன்படுமாறு தூண்டினரா என்ற வினா எழுவது இயற்கை. இவ் உடன்படிக்

கையைச் செய்துகொள்ளுகின்றபொழுது பிற்காலத்தில் நிகழக்கூடியதைக் கூர்ந்து அறியாத காரணத்தினுலோ, துன்ப மிகுதியினுலோ (பேஷ்வா பாஜிராவைப் போன்றவர்கள்) இறுதியில் விளையக்கூடிய நன்மையையே பெரிதாகக் கருதினர்; மற்றவர்கள் (நைசாமைப் போன்றவர்கள்) உடன்படிக்கையில் குறிப்பிட்டபடி அடிமையாகாமல் இருப்பதைத் தேர்ந்தெடுத்தனர். அச்சமயத்தில், சமயத்துக்கேற்ற ஒழுகலாறு என்பது நாடு முழுவதிலும் பரவியிருந்த நோயாகும். அத்தருணத்தில் பிரிட்டிஷாரின் ஆற்றல் எத்தகையது என்பதைப் பெரும்பான்மையான அரசர்கள் நன்குணர்ந்திருந்தனர். எனினும், அந்த ஆற்றலை இன்னும் மிகுதிப்படுத்தும் மறைபொருளாக இருந்துவந்த அதிகார ஊற்றைப்பற்றிச் சிலர் அறிந்திருந்தனர். மிகவும் துன்புற்றவர்கள் அந் நிகழ்ச்சிகளில் உண்டாகும் சில மாற்றங்கள் தங்களுடைய வளமார்ந்த வாழ்வினைத் திரும்பக் கொணரும் என்னும் நம்பிக்கையோடு இன்னும் இருந்தனர்.

வெல்லஸ்லி இவ்வுடன்படிக்கையின் விதிகளை எவ்வாறு செயற்படுத்தினுர் என்பதை நாம் இப்பொழுது காண முயலலாம். 1798ஆம் ஆண்டு, மே மாதம் வெல்லஸ்லி இந்தியாவிற்கு வந்தார்; சில வாரங்களுக்குள்ளாகத் திப்புவினுடைய பிரதிநிதிகள் மொரீஷஸ் தீவிலுள்ள ஃபிரெஞ்சு கவர்னரோடு தொடர்பு கொண்டுள்ளார் என்ற செய்தியைக் கேள்வியுற்றுர். அவருடைய உள்ளத்தில் யாகோபியக் கருத்துகளுக்கு எதிரான எண்ணங்கள் பொங்கி வழிந்துகொண்டிருந்தன. போனபார்ட்டேவின் திட்டங்களால் அவருடைய உள்ளம் அச்சம் கொண்டிருந்தது. அவருடைய உள்ளம் உடனடியாகப் போரில் இறங்குவதற்குப் படை திரட்டவேண்டும் என்று தூண்டியது. ஆனுல், சென்னை அரசு, போருக்கு எப்பொழுதுமே ஆயத்தமாக இருப்பதில்லை என்பது ஒரு பழமொழியாகுமாறு நடந்துகொண்டது. எச்சரிக்கையுடன் இருக்குமாறு அறிவுரை கூறும் அதனுடைய அறிவாற்றல் போரில் இறங்குவதற்குப் பெருந்தடையாக அமைந்தது. அதன்பிறகு முழு மூச்சுடன் சென்னையிலும் பம்பாயிலும் வெல்லஸ்லி படை திரட்டுவதில் ஈடுபட்டார். அவ்வாறு ஆண்டு இறுதியில் அவரே சென்னைக்குச் சென்று தங்கினுர். இவ்வாறு உண்டான காலதாமதம், அரசியல் சூழ்ச்சித்திறத்தினுல் திப்புவை மற்ற அரசுகளிடமிருந்து பிரித்து, தனிமையில் எதிர்த்துப் போரிடுவதற்கு வாய்ப்பு அளித்தது எனலாம். 1798ஆம் ஆண்டு, செப்டம்பர் மாதத்தில் வெல்லஸ்லியின் துணைப்படைத் திட்டத்தின் முதல்

உடன்படிக்கை நைசாமோடு செய்யப்பட்டதை நாம் முன்னரே கண்டோம். பேஷ்வாவினை இவ் வுடன்படிக்கையைச் செய்து கொள்ளுமாறு கம்பெனியார் தூண்டினர். அவர் உடன்படிக் கையில் கையொப்பம் இடவில்லை என்றாலும், கூட்டுச் சேராது நடுநிலை வகிப்பதாக உறுதிமொழி அளித்ததோடு, செயல் முறையிலும் அவ்வாறே ஒழுகிவந்தார். அதையடுத்து நடை பெற்ற போரில் கிடைத்த வெற்றி, வெல்லஸ்லி எதிர்பார்த் ததைவிடப் பெருவெற்றியாக அமைந்தது. அதனுடன் மைசூர் மாநிலம் முழுவதையும் அவருடைய காலடியில் வைத்தது அப் போரின் முடிவு என்பது இங்குக் குறிப்பிடத் தக்க செய்தியாகும். இத்தகைய இடர்ப்பாடான நிலைமையில் திப்புவினுடைய இராச்சியத்தின் செம்பாதியை மைசூரின் இந்து அரச மரபினரிடத்து ஒப்படைத்து, அக் குடும்பத்தைச் சார்ந்த சிறுபிள்ளையை அரசராக்கிய பெருமை வெல்லஸ் லிக்கே உரியதாகும். வெல்லஸ்லி பெற்ற இந்த முதல் வெற்றி, மேன்மேலும் பல வெற்றிகளைத் தேடித்தருவதாக அமைந்தது. அவ் வெற்றி இந்தியாவிலும் இங்கிலாந்திலும் ஒருங்கே எதிரொலித்தது. இந்தியாவிலுள்ள கம்பெனியின் பீடும் பெருமையும் ஒரே வினாடியில் மீண்டும் நிலைநாட்டப் பெற்றன. மேலும், கம்பெனி புகழ் ஏணியின் உச்சியில் சிறப் புற்று விளங்கத் தொடங்கியது. நைல் நதியில் நெல்சன் பெற்ற வெற்றிச் செய்தியை அடுத்து, வெல்லஸ்லியின் வெற்றி இங்கிலாந்தினைத் தொடர்ந்து விழாக்கோலம் கொள்ளச் செய்தது. நலிந்தும் மெலிந்தும் இருந்த இங்கிலாந் திற்குத் தேவைப்பட்ட ஊட்டம் தரும் சிறந்த மருந்தாக அவ் வெற்றிகள் அமைந்தன. ஒரு வகையில் வெல்லஸ்லியின் வெற்றி, நெல்சனின் கடல் வெற்றியைவிட ஆற்றல் மிக்கதாக விளங்கியது. ஏனெனில், பிரிட்டிஷார் கடற்போரிலே வெற்றி பெறுவதில் வரலாற்றுப் புகழ்பெற்றுச் சிறப்புற்றிருந்தனர். ஆனால், நிலத்திலே போரிட்டு வெற்றி பெறுவது இதுவரை பிரிட்டிஷாருக்கு அரிய செயலாகவே இருந்துவந்தது. வெல்லஸ்லியைப் பற்றியும், அவருடைய சாதனைகளைப் பற்றியும் பாடப்பெற்ற புகழ்மாலைகள், திப்புவைப்பற்றி மிகைபட மதிப்பிட்டு இருந்தமையாலும், பிரிட்டிஷார் தன்னம்பிக்கையற்ற நிலையில் ஆர்வம் குன்றியிருந்தமை யாலும் சூடப்பெற்றனவாகும் என்பது இங்குக் கருதத்தக்க தாகும்.

இவ்வாறு வெல்லஸ்லி பெற்ற பெருமையும் சிறப்பும் அவரைப்பற்றிக் கூறப்பட்ட குறைகளையெல்லாம் மூடி

மறைத்துவைப்பதற்கும், அவருடைய புகழொளி குன்றுமல் ஒளிவிட்டுப் பிரகாசிப்பதற்கும் உதவியாக இருந்தன. அவருடைய படைகள் ஹோல்காரிடத்துத் தோல்வி கண்டபொழுது தான் உண்மையிலேயே வெல்லஸ்லியின் புகழொளி குன்றத் தொடங்கியது. இவ்வாறு அவர் அச்சமயத்தில் தென்னிந்தியாவின் தந்நிகரற்ற தலைவராக விளங்கினுர். அவருடைய கண்காணிப்பின்கீழ் நைசாம் அடங்கியொடுங்கிக் கிடந்தார். குழப்பமுற்றிருந்த மராட்டிய நாடுகளின் கூட்டிணைப்பு அன்றி, வேருேர் இந்திய அரசும் பிரிட்டிஷாருக்கு எதிராகச் சிறப்புற்று விளங்கக்கூடிய நிலையில் இல்லாமற்போனது பிரிட்டிஷாரது நற்பேறேயாகும். அங்குத் தொடர்ந்து குழப்பங்கள் உண்டாயின. அவற்றைக் கண்ட பரிவுமிக்க பார்வையாளர்கள்கூட, அம் முறை நேர்மையானது என்று சொல்லுவதற்கும் உள்ளம் கூசினர். முதலில் கருநாடகமே அம் முறைக்கு இலக்காகியது. சீரங்கப்பட்டணத்தில் கைப்பற்றப்பட்ட கடிதப் போக்குவரத்துகளில் ஆர்க்காட்டு நவாபு உம்தத்-உல்-உமராவுக்கும் திப்புவிற்கும், முகமதாலிக்கும் திப்புவிற்கும் இடையே நடைபெற்ற கடிதப் போக்குவரத்துகள் வெல்லஸ்லியின் கருத்தைக் கவர்ந்தன. அதுமுதல் அவர் கருநாடகம் பிரிட்டிஷாருடைய கட்டுப்பாட்டிற்கும் கண்காணிப்பிற்கும் உட்பட்டதாக இருக்க வேண்டும் என்று கருதினுர். அதற்கு அந்தக் கடிதப் போக்குவரத்தையே குற்றச்சாட்டாகக்கொண்டு, கருநாடகத்தை எடுத்துக்கொள்ளலாம் என்றும், அதற்கு வேறு நேர்மையான எக் காரணமும் காட்ட வேண்டிய தேவை இல்லை என்றும் அவர் கருதினுர். 1801ஆம் ஆண்டு உம்தத்-உல்-உமரா இறந்தபொழுது, அவருடைய மூத்த மகனை நவாபாக்காது, வெல்லஸ்லி புறக்கணித்து விட்டார். அவருக்குப் பதிலாக முகமதாலியின் பேரனை அவர் நவாபாக்கினுர். கருநாடகத்தின் ஆட்சிப் பொறுப்பை ஆங்கிலேயரிடத்து ஒப்படைப்பதாக அவர் உறுதிமொழியளித்த பிறகே, அவர் நவாபாக்கப்பட்டார். மொத்த வருவாயில் $\frac{1}{5}$ பங்கு அவருடைய செலவிற்காக ஒதுக்கப்பட்டது. அவர் கொடுக்கவேண்டிய கடன்கள் அனைத்தையும் கம்பெனி அடைப்பதாகப் பொறுப்பினை ஏற்றுக்கொண்டது. இந்த இரட்டை ஆட்சி ஒழிப்பினை என்றோ செய்திருக்க வேண்டும். ஆனுல், காலம் தாழ்த்தியாகிலும் செய்தனரே என்பதற்கு வணக்கம் தெரிவிக்க வேண்டும். ஏனெனில், இதற்குப் பிறகு தான் கருநாடகத்தில் முதன்முதலாகச் சிறந்த ஆட்சி முறையினை நிறுவுவது சாத்தியமாயிற்று. ஆனுல், அரசர்களின் போலிப் பகட்டான குற்றங்களை அடிப்படையாகக்கொண்டு

வெல்லஸ்லி கருநாடகத்தின் ஆட்சியைக் கைப்பற்றியதைக் காட்டிலும் மக்களின் தேவையை அடிப்படையாகக்கொண்டு அவர் அச் செயலில் ஈடுபட்டிருப்பாரானல், அது அவருக்குப் பெருமை தருவதாக அமைந்திருக்கும். இதற்குச் சிறிது காலத்திற்கு முன்புதான், தஞ்சாவூரில் உண்டான பதவிப் போட்டி, சிவாஜியின் சகோதரருடைய கால்வழியில் வந்த அரசரிடத்து இருந்துவந்த அத் தஞ்சை அரசை 1799ஆம் ஆண்டு எடுத்துக்கொள்ளுவதற்கு ஒரு பொய்க் காரணமாக அமைந்தது. தஞ்சை அரசு தவருன முறையில் ஆளப்பட்டு வந்தது ; எனவே, அதை ஆங்கிலேயர் எடுத்துக்கொண்டனர் என்று கூறுவது நேர்மையற்றதாகும். ஆனல், அவ் அரசு சிறப்புற்று விளங்காமல், ஒரு சிறு அரசாக இருந்தமையே அது செய்த தவருகும். 1799ஆம் ஆண்டில் சூரத்து நவாபு காலமானர். அவர் முகலாயர்களுடைய கவர்னர்களின் மரபிலே வந்தவராவார். அவர் முகலாயருடைய முதன்மையான துறைமுகத்தின் கவர்னராவார். புதிதாக நவாபானவருக்கு, வெல்லஸ்லி ஓய்வுக்கால ஊதியத்தை அளித்துவிட்டு, அத் துறைமுகத்தின் ஆட்சிப்பொறுப்பையும் தாமே எடுத்துக் கொண்டார். அவர் ஏன் சூரத்தை எடுத்துக்கொண்டார்? அச் செயல் நேர்மையானதா? என்னும் ஐயம் எழலாம். அதற்கெல்லாம் அவர் காட்டக்கூடிய காரணம் மிகச் சுருக்கமானது ; எளிமையானது. முதலாவதாகச் சூரத்துப் பாதுகாவல் மிக்க ஒரு கோட்டையாகும் ; இரண்டாவதாகத் தக்காணத்திற்கும் குஜராத்திற்கும் இடையே படைகளை நிறுத்துவதற்குரிய சிறந்த நிலைக்களனுக இருந்தமை வெல்லஸ்லியைத் தமதாக்கிக் கொள்ளுமாறு செய்தது.

இப்பொழுது வெல்லஸ்லி தம்முடைய கருத்தினை அயோத்தியின்மீது செலுத்தினர். 1765ஆம் ஆண்டு முதல் முகலாய மாநிலங்களுள் மிக்க செழிப்புடையதாகக் கருதப்பட்ட இம் மாநிலம் ஒரு பக்கம் வங்காளத்திற்கும், மற்றொரு பக்கம் மராட்டியருக்கும் ஆப்கானியருக்கும் இடையே இடைப்படு நாடாக இருந்துவந்தது. ஹேஸ்டிங்ஸ் அயோத்தியில் துணைப்படை ஒன்றை நிறுத்தி இருந்தார். காரன்வாலிஸ் அதை இரண்டாக அதிகப்படுத்தினர். ஆனல், எத்துணையளவிற்குத் திறமையுடன் அயோத்தி காக்கப்பட்டு வந்ததோ, அத்துணையளவிற்கு அது தன்னைத் தானே காப்பாற்றிக்கொள்ளும் ஆற்றல் அற்றதாகப் போயிற்று. பண்பாடுடைய ஆனல், கவனக்குறைவான அஸாப்-உத்-

தௌலாவின்[4] ஆட்சியின்கீழ், படைகளின் அணி குலைந்து போயின; நிதிநிலைமை குழப்பமடைந்து போயிற்று. அதே சமயத்தில் ஐரோப்பிய சலுகைக்காரர்களுக்கும் துணிகரச் செயல் வீரர்களுக்கும் அயோத்தி அரசு வேட்டைக் காடாகப் போயிற்று. அந் நூற்றுண்டின் இறுதியில் அங்கு வரிசை வரிசையாக நடைபெற்ற நிகழ்ச்சிகள் அயோத்தியினிடத்துக் கருத்தைச் செலுத்துமாறு தூண்டின. தக்கணத்தில் முதன்மை பெறவேண்டும் என்ற நோக்கத்தோடு மராட்டியர்கள் போராடிக்கொண்டிருந்தபொழுது, அயோத்திக்கு அவர்களால் உண்டாகக்கூடிய இடர்ப்பாடுகளைப்பற்றிய அச்சம் குறைந்துபோயிற்று. அச்சமயத்தில் ஆப்கானியருடைய தாக்குதல்பற்றிய அச்சம் புதுப்பிக்கப்பட்டது. 1796, 1798ஆம் ஆண்டுகளில் சாமன்ஷா பஞ்சாப்மீது படையெடுத்து வந்தமையால், ஆப்கானியருடைய தாக்குதல் பற்றிய அச்சம் மீண்டும் அயோத்தியிடத்துத் தலையெடுத்தது. சாமன்ஷா லாகூருக்கு அப்பால் எப்பொழுதுமே படையெடுத்துச் செல்லவில்லை. அவருடைய கோட்டையும் நடுத்தரமானதாகவே இருந்தது. ஆனல், அது குதிரைப்படை முழுவதையும் உடையதாக இருந்தது. அவருடைய குதிரைப் படையை எதிர்த்துப் போரிடும் ஆற்றல் வாய்ந்த அரசு சட்லஜ் முதல் கங்கை வரையில் இருக்கவில்லை என்றே கூறலாம். படைகளை இயக்குவதும், அகமது ஷாவைப் பற்றிய நினைவும் அக்காலத்து அரசியல்வாதிகளின் கண்களுக்குச் சாமன்ஷாவை அஞ்சத்தக்க மாபெரும் வடிவமாகத் தோன்றுமாறு செய்தன. அவ்வுண்மையை விரைவிலேயே தமக்குச் சாதகமாகப் பயன்படுத்திக்கொள்ளக் கம்பெனியார் தவறவில்லை. அச்சமயத்தில் அஸாப் அலி காலமாகி விட்டார். எனவே, விரைவில் அழியக்கூடிய இயல்புடையவராக இருந்த வாசிர் அலியைப் பதவியிலிருந்து நீக்கிவிட்டு, முன்னெச்சரிக்கையுடனும் கருத்துடனும் செயலாற்றும் திறன்வாய்ந்த சாதத்து அலியினை அயோத்தியின் நவாபாகக் கம்பெனியார் அமர்த்தினர். அவரிடத்துப் புதியதோர் உடன்படிக்கையைக் கம்பெனியார் செய்துகொண்டனர். கம்பெனியின் சார்பில் அவ்வுடன்படிக்கையை ஷோர் எழுதிக் கொடுக்க சாதத்து மறுமொழியின்றி அதில் கையெழுத்திட்டதனல்தான், அவர் நவாபாக்கப்பட்டார்.

[4] அஸாப் மாபெருங் கட்டடங்களைக் கட்டியுள்ளார். லக்னேவிலுள்ள இமாம்பரம் (Imambara) என்னும் கட்டடம் அவருடைய சிறப்புமிக்க சாதனையாகும்.

ஆனால், ஆப்கானியருடைய தாக்குதல் என்னும் பொய்க் காரணம்தான் அயோத்தியின் செயல்முறைகளில் தலையிடு வதற்கு வாய்ப்பு அளித்தது. அவ் வாய்ப்பினை நன்முறையில் பயன்படுத்திக்கொள்ளுவதற்குச் சாதகமாக இரு நிகழ்ச்சிகள் நடைபெற்றன. அயோத்தியில் காப்பரசின் ஆளுநராக இருந்த செர்ரி (Cherry) என்பவரை வாசிர் அலி கொலை செய்ததோடு, புதிய நவாபிற்கு எதிராகக் கலகம் செய்தார். அவருடைய கலகம் மிக விரைவிலேயே அடக்கி யொடுக்கப்பட்டது. சாதத்து அலி தம்முடைய எதிரியை எதிர்த்துப் போரிட முடியாது திகைப்புற்றார். அவர் தம்முடைய தயக்கத்தையும் நடுக்கத்தையும் வெளிப்படை யாகவே காட்டிக்கொண்டார். நவாபினுடைய படைகளைக் கலைத்துவிட்டு, துணைப்படைத் திட்டப்படி ஆங்கிலேயரின் படையை அதிகரித்துக்கொள்ளுமாறு அவரை வெல்லஸ்லி வற்புறுத்தினார். நவாபு முடி துறப்பதாகத் தெரிவித்தார். ஆனால், அது 'மாண்புமிக்க கவர்னர் ஜெனரலுக்குப் போற்றத்தக்கதாகத் தோன்றவில்லை'. அதனுடன் நவாபு முடி துறந்தால், அவருடைய மகன் அடுத்து நவாபு ஆக்கப் படமாட்டார் என்றும், கம்பெனியே அயோத்தி அரசினை அதனுடைய இராச்சியத்தோடு இணைத்துக்கொள்ளும் என்றும் வெளிவந்த செய்திகளைக் கேள்வியுற்ற நவாபு, தாம் முன்பு முடிதுறக்கப்போவதாகத் தெரிவித்த கருத்தினை மாற்றிக்கொண்டார். இச் செயல் இன்னும் பல மானியங் களையும் உதவித் தொகையையும் தருமாறு அவரை அச்சுறுத்துவதற்குப் போதிய வாய்ப்பாகக் கம்பெனிக்குக் கிடைத்தது. முடிவாகப் புதிய திட்டத்தின்படி (1800-ல் நைசாமிடத்து முதலில் முயற்சி செய்யப்பட்டது), துணைப் படைத் திட்டப் படையின் கண்காணிப்பிற்காகத் தரப்படும் பொருளுக்குப் பதிலாக, நாட்டின் ஒரு பகுதியை மானிய மாகப் பெறும் முறையை இங்கும் கையாண்டனர். அதனால், நவாபு பரந்த சமவெளியும், வளம் கொழிக்கும் நிலப்பரப்பு மாகிய கங்கை யமுனை ஆற்றிடைப்பட்ட பகுதியை மானிய மாகப் பெற்றதோடு, ரோகில்கண்டு அரசின் செம் பாதியையும் வெல்லஸ்லி கம்பெனிக்குத் தருமாறு அவரை வற்புறுத்திப் பெற்றார். அயோத்தி அரசு மட்டும் அடக்க மான அளவில் வளமிக்கதாக, ஆனால் குழப்பம் நிறைந்த தாகத் தனித்து நின்றது. ஆனால், அது அப்பொழுது வடக்கே இமயமலைச் சாரலை எல்லையாகவும், மற்றப் பக்கங்களில் எல்லாம் பிரிட்டிஷாரின் இராச்சியத்தாலும் சூழப்பட் டிருந்தது. அது கம்பெனியின் பழகிப்போன பிரச்சினையாகப்

போயிற்று. எனவே, அது இந்தியாவின் ஆற்றல்மிக்க அரசியலில் பிரச்சினைகளிலிருந்து மெல்ல மறைந்து போயிற்று. ஹேஸ்டிங்ஸ் பிரபுவினுடைய தூண்டுதலின் பேரில் 1819ஆம் ஆண்டு நவாபு தம்மைத் தாமே 'அரசர்' என்று அறிவித்துக்கொண்டார். அவ்வாறு அவர் அரசராகப் பட்டம் சூட்டிக்கொண்டது, முஸ்லீம் சமூகத்தினரிடையே பெரு வருத்தத்தை உண்டாக்கிற்று. அவர்கள் தில்லியில் உள்ள பேரரசருக்குத் துரோகம் செய்யும் செயலாகவே நவாபினுடைய இச் செயலைக் கருதினர். அதற்குப் பிறகு 1856ஆம் ஆண்டு அயோத்தி கம்பெனியின் அரசோடு இணைக்கப்படும் வரையில் குழப்பமும் கொந்தளிப்பும் எதிர்வாதங்களும் தொடர்ந்து செங்கோலோச்சின; சீர்திருத்தம் செய்யப்போவதாகக் கூறிய உறுதிமொழி மட்டும் சொல் அளவிலேயே இருந்துவந்தது. கவர்னர்-ஜெனரலின் சகோதரரான ஹென்றியினால் (பிற்காலத்தில் கௌலி பிரபு என்று அழைக்கப்பெற்றார்) ஒப்படைக்கப்பட்ட மாவட்டங்கள் ஒழுங்குபடுத்தப்பட்டன.

இதுவரை திப்புவை அழித்ததனால் உண்டான வேகத்தில் வெற்றிமேல் வெற்றியை வெல்லஸ்லி பெற்று வந்தார். அதனுடன் ஃபிரெஞ்சியரின் தாக்குதலுக்கு எதிராகக் கம்பெனியைக் காப்பாற்றினார். இயக்குநர்களின் ஐயத்தை, அமைச்சரவையினரின் ஆதரவு திக்குமுக்காடச் செய்தது; பொதுமக்களின் போற்றுதல் வெல்லஸ்லியிடத்து ஐயுறவை வளர்த்தது. அவர் இப்பொழுது அவருடைய திட்டத்தின் முடிவான கட்டத்தை அடைந்தார். மராட்டியர் எத்துணைக் காலம் அவருடைய திட்டத்திற்கு உட்படாது வெளியிலே இருந்து வருகின்றனரோ, அதுவரையில் இந்தியாவில் பிரிட்டிஷாரின் ஆதிக்கத்தை நிலைநாட்டுதல் என்பது இயலாத ஒன்றாகும். அத்தகைய ஆதிக்கத்தைப் பிரிட்டிஷார் விரும்புகின்ற வரையில் அல்லது மராட்டியர் கண்டு அஞ்சுகின்ற வரையில் ஆதிக்கச் சமநிலைக் கோட்பாட்டின்படி அமைதியை நிலைநாட்டவோ, ஒருவர் மற்றொருவரிடத்துக் கொண்ட அச்சத்தினால், படைக்கலம் தாங்கிய நடுநிலைமையை நிலைநாட்டவோ இயலாது என்பதை அவர் நன்குணர்ந்திருந்தார். முதலில் நிகழ்ச்சிகள் வெல்லஸ்லியின் விருப்பத்தைப்போல் நடைபெறுவதாகத் தோன்றின. கர்டா போர்க்களத்தில் நைசாமைத் தோற்கடித்த மராட்டியரின் கூட்டணி, வெற்றி பெற்றவுடனேயே சீர்குலைந்து போயிற்று. 1795ஆம் ஆண்டு இளைஞரான மாதுராவ் நாராயணன் என்னும் பேஷ்வா

தற்கொலை செய்துகொண்டார். அவருடைய மறைவு மராட்டியரிடையே மீண்டும் புதிய பூசல்களை உண்டாக்கிற்று. அப் பூசல்களுக்கும் குழப்பத்திற்கும் இடையே தலைசிறந்து விளங்கியவர் ஆற்றல்மிக்கவரும் திறமை வாய்ந்தவருமான நானாபட்னவிஸ் என்பவராவார். ஆனால், அவருக்கு உரிமையுடையதாகத் தனிப்படை ஒன்று அவரிடம் இல்லை. அவர் 1800ஆம் ஆண்டு இயற்கை எய்தினார். ரகோபா எனப் பட்டவரும் தீவினைப் பயனால் அல்லற்பட்டவருமான இரகுநாத ராவின் மகனை இரண்டாம் பாஜிராவ் என்பவர் பேஷ்வா வானார். அவர் தம்முடைய தந்தையைப் போன்றே உள்ள உரம் அற்றவராக இருந்தார். அவருடைய அறிவு நலனில் சிறிதளவுகூடப் புதிய பேஷ்வா பெற்றிருக்கவில்லை. உறுதி யான தலைமைப் பண்பு இல்லாதவராக அல்லது ஊக்கத் தோடு ஈடுபட்டுச் செயலாற்றும் திறன் இல்லாதவராக அவர் இருந்தமையால், ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்திற்குத் தடுமாறிக்கொண்டிருந்தார். எனவே, வெல்லஸ்லியின் தொழில் நுட்பத் திட்டத்திற்கு அவர் சிறந்ததொரு கருவி யாகப் பயன்படுத்தப்பட்டார். மராட்டியத் தலைவர்களுள் இக்காலத்தில் பேராற்றலும் பெருந்திறனும் வாய்க்கப் பெற்றவர்களாக சிந்தியாவும் ஹோல்காரும் விளங்கினர். தௌலத் ராவ் சிந்தியா, தம்முடைய பெரியப்பனுடைய படைகளைத் தமக்கு உரிமையாகப் பெற்றார். அப் படைகள் ஃபிரெஞ்சு அதிகாரிகளால் நன்கு பயிற்றுவிக்கப்பட்டிருந்தன. பெர்ரோன் (Perron) என்ற ஃபிரெஞ்சு அதிகாரி அவற்றிற்குச் சிறந்த போர்ப் பயிற்சி அளித்திருந்தார். ஆனால், அவரிடத்துத் திறமைக் குறைவு காணப்பட்டதோடு, பாஜிரா வினைப் போன்றே அவரும் மன உறுதியற்றவராக இருந்தார். ஹோல்கார் குடும்பத்தில் செயலாற்றும் திறமை வாய்ந்த துக்கோஜிக்கும், அகல்யாபாய் அம்மைக்கும் பிறகு அறிவுக் கூர்மை வாய்ந்தவரும் நெறிதிறம்பியவருமான ஜஸ்வந்த்ராவ் பதவிக்கு வந்தார். அவர் இத்தாலிய நாட்டு வெற்றி வீரர் களுக்குரிய (Condottiere) பண்புடையவராக இருந்தார். அவர் தலைமை தாங்கிப் படையை நடத்தவும், அஞ்சா நெஞ்சத் துடன் போர் புரியவும் ஆற்றல் பெற்றிருந்தார். அவருடைய பகுத்தறிவு வழிகாட்டிய வரையில் அவர் வட இந்திய அரசியல் வானில் தீக்கொழுந்துவிட்டு எரியும் நெறிதிறம்பிய வால் நட்சத்திரம் போன்று தோன்றினார். ஆனால், அவருக்கு ஆதரவாக நன்கு பயிற்றுவிக்கப்பட்ட படையோ, அவுரங்க சீபினை அச்சுறுத்திய திறமைமிக்க குதிரைப் படையோ துணையாக இல்லை. மேலும், சிதறிக்கிடந்த மராட்டியப்

படையை ஒருங்குதிரட்டி முறைப்படுத்துவதற்குப் போதிய நேரம் கிடைப்பதற்குள்ளாகவே, வாய்ப்புக் கிடைக்குமா என்று ஆவலோடு காத்துக்கிடந்த பிரிட்டிஷ் படையுடன் அவர் மோதவேண்டிய நெருக்கடி உண்டாயிற்று.

1800ஆம் ஆண்டு நாறு இறந்துவிட்டார். அவரோடு, 'மராட்டிய அரசினரின் மதிநலமும், அமைதியை நிலைநாட்டும் ஆர்வமும் அடியோடு அழிந்துபோயின' என்று மராட்டியத் துணைக்காப்பரசின் ஆளுநர் ஒருவர் குறிப்பிட்டார். பேஷ்வா பாஜிராவினை அடக்கியாளவேண்டும் என்று கருதிய சிந்தியா விற்கும் ஹோல்காருக்கும் இடையே ஓயாத போராட்டம் உண்டாயிற்று. அந் நலக்கேடான விஷமத்தனம் வாய்ந்த அரசர் ஜஸ்வந்திற்கு எதிராக ஹோல்காரோடு சேர்ந்து கொண்டார். ஜஸ்வந்தின் சகோதரர் கொலைசெய்யப் பட்டமையால், அவர்களுக்கு இடையே சமரச உடன்பாடு காண்பது இயலாமற்போயிற்று. 1802ஆம் ஆண்டு, அக்டோபர் மாதத்தில் ஹோல்கார், சிந்தியாவையும் பாஜி ராவையும் பூனாவில் தோற்கடித்தார். பாஜிராவிற்குச் சகோதர ரான (மகன்மையினால்) அமிர்தராவ் என்பவரை அவர் பேஷ்வாவாகப் பட்டம் சூட்டினார். இதனால் பாஜிராவ் பெருந் துன்பத்திற்கு ஆளானார். எனவே, அவர் பஸ்ஸீனுக்குத் தப்பி ஓடினார். அங்கு அவர் நம்பிக்கையற்ற நிலையில் வேறு வழியில்லாமல், வெல்லஸ்லியோடு துணைப்படைத் திட்ட உடன்படிக்கையைச் செய்துகொண்டார். அவ் வுடன் படிக்கையின்படி ஆறு துணைப்படைகளைத் தமக்கு உதவியாக வைத்துக்கொள்ளுவதற்கு பாஜிராவ் இசைந்தார். சூரத் திடத்துத் தமக்கிருந்துவந்த உரிமையை அவர் ஆங்கிலேய ருக்கு விட்டுக்கொடுத்தார். பிரிட்டிஷார் ரோக்குவாரோடு செய்துகொண்ட ஏற்பாடுகளை அவர் ஒப்புக்கொண்டார். பிரிட்டிஷாருக்குத் தெரியாமலோ, பிரிட்டிஷாருடைய இசை வைப் பெறாமலோ, வெளிநாட்டு அரசியல் சக்திகளோடு தொடர்புகொள்ளுவது இல்லை அல்லது போரில் கலந்து கொள்ளுவது இல்லை என்று அவர் உறுதிமொழி அளித்தார். உடனடியாக ஆர்தர் வெல்லஸ்லி பூனாவைக் கைப்பற்றி பாஜிராவைப் பேஷ்வாவாக்கினார்.

பஸ்ஸீன் உடன்படிக்கை வெல்லஸ்லி மராட்டியருக்குக் கொடுத்த மாபெரு அடியாகும். சீரங்கப்பட்டண உடன் படிக்கை தென்னிந்தியாவில் பிரிட்டிஷாருக்கு முதன்மையான இடத்தை அளித்ததைப் போன்று, பஸ்ஸீன் உடன்படிக்கை

தக்காணத்தின் மேலாண்மையை ஆங்கிலேயருடைய கையில் ஒப்படைத்தது எனலாம். அது இந்தியாவிலுள்ள பிரிட்டிஷ் பேரரசினை இன்னும் இந்தியப் பேரரசாக மாற்றவில்லை என்றாலும், பிரச்சினைக்கு முடிவுகாணும் இறுதி நிலைக்கு ஆங்கிலேயரைக் கொண்டுவந்து விட்டது. எஞ்சியிருந்த மராட்டிய சக்திகள் மராட்டியரின் தாயகத்தைக் காக்கும் ஆற்றலை இழந்தன. அதனுடன், அவர்களுடைய அமைப்பு முறையின் உயிர்நாடியினை இழந்துவிட்டனர். இச் சக்திகளோடு பிரிட்டிஷார் போரிடுவது தவிர்க்க முடியாதது என்பதை அவ் வுடன்படிக்கை குறிப்பாகத் தெரிவித்தது. ஏனெனில், கம்பெனியின் மேலாண்மையையும் முதன்மையையும் அவர்கள் ஏற்றுக்கொண்டால்தான், புதிய சூழ்நிலையை அவர்கள் ஏற்றுக்கொள்ள முடியும் என்ற அரசியல் நெருக்கடி உண்டானமையால், அவர்கள் இதற்கு இசைவது அரிய செயல் என்பது புலனாயிற்று. பிரிட்டிஷாரோடு நேருக்கு நேர் எதிர்த்து நிற்கும் நிலை உண்டாகியிருக்கிறது என்ற அதிர்ச்சியானது, கணப்பொழுது மராட்டியரிடையே ஒற்றுமையை உண்டாக்கியது. ஆனால், பேஷ்வாவின் கைகள் கட்டப்பட்டு இருந்தன. கேக்குவார் நடுநிலை வகித்தார். போருக்கு ஆயத்தமாக இல்லாத பொறுமை மிக்க ஹோல்கார் மாளவத்திற்குச் சென்று ஓய்வு எடுத்துக் கொண்டார். எனவே, சிந்தியாவும் பேரார் அரசரும் சேர்ந்து, ஒரு பெரும் படையுடன் நருமதையாற்றைக் கடந்து சென்றனர். வெல்லஸ்லி ஆவலோடு எதிர்பார்த்துக்கொண்டிருந்த அரிய வாய்ப்பு இப்பொழுது அவருக்குக் கிடைத்தது. உடனே அவர், சிந்தியாவைத் திரும்பிப் போகுமாறு கட்டளையிட்டார். அவர் திரும்பிச் செல்ல மறுத்தார். அதனால் 1803ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதத்தில் அவர்களை எதிர்த்து வெல்லஸ்லி போரிடப் போவதாக அறிவித்தார். அப் போர் முற்றுகை இரண்டு பகுதிகளாகத் திட்டமிடப்பட்டிருந்தது. தக்காணத்தில் ஒன்றுபட்ட இருவருடைய படையையும் தோற்கடித்து, தனித்தனியே பிரித்துவிட வேண்டும் என்பது அத் திட்டத்தின் முதற்பகுதியாகும். இந்துஸ்தானத்தில் அலிகாரிலுள்ள ஹோல்காரின் நன்கு பயிற்றுவிக்கப்பட்ட படையை அழித்தொழிப்பது என்பது இரண்டாவது பகுதியாகும். ஆர்தர் வெல்லஸ்லி, பான்ஸ்லே அரசரின் படைகளை அஸ்ஸேய் (Assaye), ஆரகான் (Argaon) என்னும் இடங்களில் முதுகிட்டு ஓடுமாறு செய்தார். ஹோல்காரின் ஆற்றல்மிக்க அரும்படையை லேக்கு (Lake) என்னும் படைத்தலைவர் தில்லியில் படுதோல்வி அடையச் செய்து, தில்லியைக்

கைப்பற்றிக்கொண்டார். லாஸ்வாரி சிந்தியாவை அடக்கி யொடுக்கினர்.

அவ் ஆண்டு முடிவதற்குள்ளாகவே இரண்டு உடன் படிக்கைகள் செய்யப்பட்டன. பான்ஸ்லேவுடன் டியோகான் (Deogaon) என்னுமிடத்தில் பிரிட்டிஷார் ஓர் உடன்படிக்கை செய்துகொண்டனர். சூர்ஜி அர்ஜுன்கான் என்னும் இடத்தில் சிந்தியாவோடு அவர்கள் மற்றோர் உடன்படிக்கை யைச் செய்துகொண்டனர். அவ்விரு உடன்படிக்கைகளும் போர் நிறுத்தத்தை உண்டாக்கின. வெல்லஸ்லி பெற்ற வெற்றியின் உச்சநிலையை அவ்விரு உடன்படிக்கைகளும் குறிப்பிட்டன. அவ்விரு அரசுகளும் தத்தம் அவைக்களத் திற்குத் துணைக்காப்பரசு ஆளுநர்களை ஏற்று அமர்த்திக் கொண்டன. பஸ்ஸீன் உடன்படிக்கையை அவ்விரு அரசு களும் ஏற்றுக்கொண்டன. தங்களுடைய அரசின் பணித் துறையில் பணியாற்றிய ஆங்கிலேயரல்லாத மற்ற ஐரோப் பியர்களை அவை நாடுகடத்திவிட்டன. பான்ஸ்லேயிட மிருந்து கம்பெனி கட்டாக்கினைப் பெற்றது. இவ்வாறு வங்காளம் முதல் சென்னை வரையில் தொடர்ச்சியான இராச்சியத்தைக் கம்பெனி அமைத்தது. சிந்தியாவிடம் இருந்து பெற்றவை இதைவிட மிகுதியானதும் சிறப்புமிக்கது மாகும். பெர்ரோனின் படைகளுக்கு மானியமாக வழங்கப் பட்டிருந்த யமுனை-கங்கை ஆறுகளுக்கு இடைப்பட்ட சமவெளியைச் சிந்தியாவிடமிருந்து கம்பெனி பெற்றது. அச் சமவெளியிலுள்ள நகரங்களாகிய தில்லியையும் ஆக்ராவையும் பிரிட்டிஷார் பெற்றனர். அவ்வாற்றிடைச் சமவெளி, வங்காளத்தினல் 'கைப்பற்றப்பட்ட மாநிலமாகப்' போயிற்று. பேரரசர் ஷாஆலம் கம்பெனியாரால் பாதுகாக்கப் பட்டார். ஆனல், வெல்லஸ்லி அவருடன் உடன்படிக்கையோ, பேரரசின் உரிமைகளை வழங்குவதைப்பற்றிய எத்தகைய இசைவை அளிக்கும் உடன்படிக்கையையோ செய்துகொள் ளாமல், தட்டிக்கழிப்பதில் கண்ணும் கருத்துமாக இருந்தார். தக்கணத்திலும் குஜராத்திலும் இருந்த சிந்தியாவின் நிலங்கள் அனைத்தையும் கம்பெனியார் தங்களுடைய அரசோடு இணைத்துக்கொண்டனர். இராசபுதனத்தில் பரவியிருந்த சிந்தியாவின் ஆதிக்கம் நெகிழ்த்தப்பட்டது. இவ்வாறு தற்கால இந்திய தேசப்படத்தின் வடிவம் உருவாகிக்கொண் டிருந்தது.

ஆனல், தோற்றத்திலே காணப்பட்டதைப்போன்று வெல்லஸ்லியின் நிலை, நடைமுறையில் பாதுகாப்புடையதாக

இல்லை. ஹோல்கார் அடக்கியொடுக்கப்படவில்லை. இரண்டு துணைப்படைத்திட்ட உடன்படிக்கைகள் துணைப்படைகளை அவ்வரசுகள் தங்கள் இராச்சியங்களில் நிறுத்திக்கொள்ளு வதற்கு இடம் தரவில்லை. இவை யாவற்றையும்விடப் பரந்த நெடுநிலப் பரப்புகளைச் சிறிய படையைக்கொண்டு காக்க வேண்டிய நெருக்கடி இருந்துவந்தது. அப் பகுதிகளில் மனம் கசந்துபோன, ஆனால், பயனற்றுப்போகாத மனிதர்கள் பலர் இருந்துவந்தனர். அவர்களை அடக்கியொடுக்க வேண்டிய பொறுப்புக் கம்பெனியைச் சார்ந்ததாயிற்று. வெல்லஸ்லி, தம்முடைய நச்சுப் பல்லினை மராட்டியத் தீனியை உண்ணும்பொழுது அதனுள்ளே புதைத்துக்கொண்டார். அதை வெளியில் எடுக்க முடியாது அவர் திண்டாடினார். ஹோல்காரோடு பேச்சுவார்த்தை நடத்துவதற்கு மேற் கொண்ட முயற்சி தோல்வி அடைந்தது. எனவே, 1804ஆம் ஆண்டில், ஏப்ரல் மாதத்தில், போர் மூண்டது. கோதா விற்கு (Kotah) அருகில் மான்சன் படுதோல்வி அடைந்ததும், ஆக்ராவிற்குப் புறமிட்டு ஓடியதும், மராட்டியர் தில்லியை முற்றுகையிட்டதும், பரத்பூரினைத் தாக்கமுடியாது லேக்கு தோல்வியுற்றதும் வெல்லஸ்லியின் கண்கட்டு வித்தையின் மாய சக்தியை ஆற்றலற்றுப் போகுமாறு செய்தன. மராட்டியத் தலைவர்கள் மீண்டும் எழுச்சிபெறத் தொடங் கினர். கம்பெனியில் இருந்துவந்த வெல்லஸ்லியின் பகை வர்கள் கடைசியாக அமைச்சரவையின் அனுமதியைப்பெற்று, வெல்லஸ்லியைத் தாயகத்திற்குத் திரும்பிவருமாறு கட்டளை யிட்டனர். பேரரசை நிறுவுவதற்காக நடைபெற்ற ஓட்டப் பந்தயம் இறுதிச் சுற்றிலே இவ்வாறு நிறுத்தப்பட்டது.

அக்காலம் வரையில் எழுதப்பெற்ற ஆங்கிலேய-இந்திய ஆண்டு வரலாற்றில் மாட்சிமை பொருந்திய ஆட்சிக்காலம் இவ்வாறு மனவருத்தத்துடனும், நம்பிக்கையற்ற மனச் சோர்வுடனும் முடிவடைந்தது. ஊக்கமும், உள்ள உறுதியும், தெளிவான குறிக்கோளும், அச்சமும், ஐயுறவும், பாழ் செய்யும் உட்பகையும் நிறைந்த உலகில் அது எவ்வாறு பாதிக்கப்படும் என்பதை வெல்லஸ்லி உலகிற்கு உணர்த்தினார். இந்திய அரசுகளின் பலவீனத்தை அவர் பெரிதுபடுத்தினார். அக் குறைபாடுகளைப் போக்குவதற்குரிய ஆற்றல்மிக்க வழி வகைகளை அவர் திறமையுடனும் உள்ள உறுதியுடனும் செயலாற்றத் தொடங்கினார். அவருடைய ஆட்சிக்காலம் முழுவதிலும் அவருடைய செயன்முறைகள் ஆக்கமும் ஊக்கமும் வாய்ந்தனவாக இருந்ததோடு, தெளிந்த நோக்

குடையனவாகவும் காணப்பட்டன. மராட்டியரின் ஆதிக்கத்தை அழிப்பதற்குத் திட்டமிடுவதில் அவர் கலைப்பொருள் சேமிப்பாளரின் ஆர்வத்தையுடையவராக இருந்தார். இந்திய அரசியல் சூழ்ச்சித் திறம் என்னும் துன்பம்மிக்க சிக்கலான வழியில், மிகுந்த ஒருமைப்பாட்டுடனும் திறமையுடனும் அவர் மெல்ல நடந்து சென்றார். அவருடைய நற்பண்புகளின் குறைகளையுடையவராக இருந்தார். அவருடைய செயன் முறைகள் அனைத்திற்கும் தடையாக அவருடைய பொறுமையின்மை என்னும் பண்பு இருந்துவந்தது. பொதுநல உரிமைகளிலும் தீய பண்புகளிலும் அவரிடத்துத் தான்தோன்றித் தனமான போக்கிற்குரிய ஊக்கமும், பிறரை அவமதிக்கத் தக்க தற்செருக்கும், உண்மையான இடர்ப்பாடுகளையும் துன்பங்களையும் குறைத்து எடைபோடும் அலட்சிய மனநிலையும் அவரிடம் இருந்துவந்தன. இலட்சியங்களை அடைவதற்காக, அவற்றை அடைவதற்குரிய வழி நேர்மையானதா என்பதைப்பற்றிக் கவலைப்படாத வன்னெஞ்சமும் வாய்ந்தவர் வெல்லஸ்லி. அவருடைய பண்பு நலன்களைச் சீர்தூக்கிப் பார்ப்பதற்கு அவரை அதிகாரம் என்ற அளவுகோலால் அளந்து பார்க்கவேண்டுமே தவிர, உரிமைகள் என்னும் அளவுகோலாலேயோ, பொது ஒழுக்கநெறி என்னும் அளவுகோலாலேயோ அளந்து பார்க்கக்கூடாது. இந்தியா ஒற்றுமைப்படுவதற்குரிய பக்குவம் அடைந்துள்ளதாக அவர் கருதினார். இந்த மாபெருங் குறிக்கோள், அவருடைய சிறு தவறுகளை எல்லாம் பொருத்தமற்றனவாக்கிவிட்டது. உண்மையில் அவர் செய்தவை அனைத்தும் பெரும்பாலும் சரியாகவே இருந்தன. எனவே, அவருடைய தவற்றிற்காகப் பெரிதும் அவர் மன்னிக்கத்தக்கவராவார். ஆனால், வரலாற்றை விரைவுபடுத்த அவர் செய்த முயற்சி இந்திய மக்களுக்கு உண்மையில் பயன் விளைவித்ததா என்னும் வினா எழலாம். அவருடைய இறுதி முற்றுகை நடு இந்தியாவிலிருந்து வந்த ஆதிக்கத்தை அழித்தொழித்தது. அவ்விடத்தை வேறொரு சக்தியைக்கொண்டு நிறைவுபடுத்தாமல் அவர் அப்படியே விட்டுவிட்டார். அந்த அளவிற்கு மற்றவர்களைப் போன்று அவரும் பழிப்பிற்குரியவராவார். அவருடைய இறுதிச் செயல்தான் பிண்டாரியரின் கலகத்திற்குக் காரணமாக அமைந்தது என்பதை நாம் மறுப்பதற்கு இல்லை.

## ஆதாரங்கள்

ஷோரைப்பற்றி அறிவதற்குப் பொது வரலாறுகளை மட்டுமல்லாமல் டெயின்மௌத் (Teignmouth) என்பவரின்

'Correspondence of John, Lord Teignmouth (2 Vols. 1843)' என்னும் நூலையும், எச். ஃபர்பர் (Furber) பதிப்பித்த 'The Private Record of An Indian Governor-Generalship (1933)' என்னும் நூலையும் பார்க்கலாம். டண்டாசிற்கு எழுதிய இக் கடிதங்களில் ஷோர் அவரைத் திருப்திப்படுத்தவேண்டும் என்ற ஆர்வம் உடையவராகவும் நடுக்கம் உடையவராகவும் இருந்தபோதிலும், தாம் உறுதியான மனநிலையுடன் இருக்க முடியவில்லை என்பதையும் வெளிப்படுத்துகிறார்.

வெல்லஸ்லியைப்பற்றி மதிப்பிட்டுரைப்பதில் உறுதியும் புள்ளி விவரங்களும் கொண்டு, குறைகளை எடுத்துக்காட்டுமில் சிறப்புமிக்கவராவார். மார்ஷமன் என்பவர் வெல்லஸ்லியிடத்து ஆர்வமிக்க அன்பர். அவர் வெல்லஸ்லியைக் 'கம்பெனியின் அக்பராகப்' போற்றியுள்ளார். தற்காலத்தில் போற்றத்தக்க ஆராய்ச்சி நூல் ஒன்று எழுதப்பட்டிருக்கிறது. அது பி. இ. இராபர்ட்ஸ் என்பவர் எழுதியுள்ள 'India Under Wellesley, (1929)' என்னும் நூலாகும். தரமான வாழ்க்கை வரலாற்றினை R. W. பியர்சு என்பவர் 'Memoirs and Correspondence of......Richard, Marques Wellesley (3 தொகு. 1846)' எழுதியுள்ளார். ஹட்டன் W. H. என்பவர் இந்திய ஆட்சியாளர் வரிசையில் 'Marquess Wellesley' என்னும் சிறந்ததொரு சிறிய நூலை (1897) எழுதியுள்ளார். இவற்றிற்கு எல்லாம் அடிப்படை ஆதாரத்தைத் தரும் நூல் மான்ட்கோமெரி மார்ட்டின் என்பவர் பதிப்பித்தது 'Despatches, Minutes and Correspondence' (5 தொகு. 1836) என்பதாகும். S. J. ஓவன் பதிப்பித்தது 'Selections from Despatches, &c. (2 தொகு.) 1877.' இதன் முதல் தொகுதியில் வெல்லஸ்லியின் ஆட்சிமுறையைப்பற்றி விளக்கப்பட்டுள்ளதைக் காணலாம்.

மராட்டியர் வரலாற்றை அறிவதற்கு கிராண்ட் டஃப், அல்லது கின்செய்ட் அல்லது பாராஸ்னிஸ் எழுதியுள்ள நூலினைப் பார்க்க. தாயகத்து அரசியலைப்பற்றிய செய்திகளை பி. இ. இராபர்ட்சின் மேலே குறிப்பிடப்பட்ட நூலையும், சி. எச். ஃபிலிப்சின் 'East India Company' 1784-1834 (1940) என்னும் நூலையும் காண்க.

## 10. இடைக்காட்சி : பார்லோவும் மின்டோவும்

கம்பெனியார் இந்தியாவில் கடைப்பிடித்துவந்த கொள்கையில் மாற்றம் உண்டானதற்குரிய காரணங்களை மதிப்பிடுகின்றபொழுது, ஐரோப்பாவிலும், இங்கிலாந்திலும், இந்தியாவிலும் நிலவிய சூழ்நிலைகளைப்பற்றியும் நாம் சிந்திக்க வேண்டியவர்களாக இருக்கின்றோம். இயக்குநர்கள் வாணிக நோக்கத்திற்கும், பாராளுமன்றத்தின் கருத்திற்கும் கட்டுப்பட்டவர்களாக இருந்ததைப் போன்றே, அயல் நாட்டிலேயே கிடைக்கக்கூடிய ஆதாயத்தைப்பற்றிய கருத்துடையவர்களாகவும் இருந்துவந்தனர். அக்காலத்து அமைச்சர்கள் பொது மக்களின் கருத்துகளை உணரும் மதிநுட்பம் உடையவர்களாக இருந்தனர். அதைப்போன்றே அனைத்துலக அரசியல் அரங்கில் உண்டாகும் மாற்றங்களையும் உணர்ந்து போற்றக்கூடியவர்களாக அவர்கள் இருந்தனர். வெல்லஸ்லியைத் திரும்பி வருமாறு அழைக்கப்பட்டதற்குப் பல காரணங்கள் உள்ளன. அக் காரணங்கள் இங்கிலாந்திலும் இந்தியாவிலும் ஒருங்கே உருவெடுத்ததைப் பார்க்கிறோம். வெல்லஸ்லியின் முன்னேற்றக் கருத்து வாய்ந்த திட்டத்தைக் கம்பெனியின் இயக்குநர்களில் ஒரு பகுதியினர் தொடக்கத்திலே ஆதரித்தனர் அல்லது உடன்பட்டனர் என்றே கூறலாம். அம் முன்னேற்றக் கருத்து வாய்ந்த திட்டத்தின் முதல் நிலைகளில் அவர்கள் அதை ஆதரித்ததற்குக் காரணம் இந்தியாவில் பிரிட்டிஷாரின் ஆதிக்கத்தை நிலைநாட்டுவதே, அமைதி நிலவுமாறு செய்வதற்குரிய வழி என்றும், வாணிகத்தைப் புதுப்பிப்பதற்குரிய முறை என்றும் அவர்கள் கருதியமையாகும். ஆனால், செலவுகள் அதிகமாகிக்கொண்டு போனதைக் கண்டவுடன் அவர்களுடைய பொறுமைப் பண்பு மறைந்து, எதிர்ப்பாக வளரத் தொடங்கியது. ஏழாண்டுகளில் கம்பெனியினுடைய கடன் இரண்டு மடங்காகப் பெருகிய தனால், கம்பெனியின் இயக்குநர்கள் வெல்லஸ்லியிடத்து

வெறுப்புக் கொண்டனர்.[1] வெல்லஸ்லி தங்களுக்கு முன் கூட்டியே தெரிவிக்கவில்லை என்னும் காரணத்தினால், அவர்கள் வெல்லஸ்லி தங்களை மதிக்கவில்லை என்று கருதலாயினர்; அவருடைய வெளிப்படையான புறக்கணிப்பு, அவர்களைச் சீற்றம் கொள்ளுமாறு செய்தது. தனிப்பட்ட வகையில் வாணிகம் செய்வதை அவர் போற்றி ஆதரித்தமையைப் பெரும்பான்மையான இயக்குநர்கள் வன்மையாக எதிர்த்து வந்தனர். ஆனால், அவரைத் திரும்பி வருமாறு அழைக்க வேண்டும் என்ற முடிவிற்கு வந்தது அமைச்சரவையேயாகும்; கம்பெனியன்று. ஃபிரெஞ்சுக்காரர்களுடைய ஆதிக்க வெறியாகிய அச்சம் உண்மையென்றே கருதியதனால், முதலில் பிட்டும் டண்டாசும் வெல்லஸ்லியின் செயல்முறைகளுக்கு ஆதரவு அளித்தனர். ஃபிரெஞ்சுக்காரர்களால் உண்டாகக் கூடிய அத்தகைய அச்சம் மறைந்துபோன பிறகும், தொடர்ந்து போர்கள் நடைபெற்று வந்ததைக் கண்ட அமைச்சர்கள் ஆர்வம் குன்றிப் போயினர். 1804ஆம் ஆண்டு ஃபிரெஞ்சுக்காரர்களோடு போரிடுவது புதுப்பிக்கப்பட்ட பொழுதும் இங்கிலாந்து ஃபிரெஞ்சுக்காரர் படையெடுப்பு ஒன்றினால் அச்சுறுத்தப்பட்டபொழுதும், 'மீண்டும் பதவியில் அமர்ந்திருந்த' பிட்டும் டண்டாசும், வெல்லஸ்லி தம்முடைய ஆற்றலுக்கு அப்பாற்பட்ட நிலையில் உள்ள செயலைச் செய்வதற்காக முயலுகின்றார் என்று அஞ்சினர். அதுமட்டுமல்லாமல் அவருடைய முயற்சி பிரிட்டிஷாருடைய பேணிக்காக்கும் ஆற்றலுக்கு அப்பாற்பட்டது என்றே அவர்கள் கருதினர். அவர்களுடைய அச்சத்தை, கோதாவிலும், பரத்பூரிலும் ஆங்கிலேயர் அடைந்த தோல்விகள் வலியுறுத்தின. அத் தோல்விகளே வெல்லஸ்லியை உடனடியாகத் திரும்பி வருமாறு அழைப்பதற்குக் காரணமாக அமைந்திருக்க வேண்டும் என்று கருத இடமிருக்கிறது. ட்ரஃபால்கர், ஆஸ்டர்லிட்ஸ் போர்கள் நடைபெற்றுக்கொண்டிருந்த அந்த ஆண்டில், இந்தியாவில் முடிவில்லாமல் போரினை நடத்து வதற்குப் போதிய பொருள் வசதியும் ஆள் வசதியும் இல்லாமல் பிரிட்டன் அல்லற்பட்டது.

வெல்லஸ்லியை அழைத்ததற்குப் பிறகு தொடர்ந்த, சிறப்புமிக்க எட்டாண்டுகளில் பிட் இந்தியச் சட்டத்தின் தலையிடாக் கொள்கையினைப் பின்பற்றும் முறைக்கு

[1] 1799-1806ஆம் ஆண்டுகளுக்கு இடையே 170 இலட்சம் பவுனிலிருந்து 310 இலட்சம் பவுனாகக் கடன் வளர்ந்தது.

முற்றிலும் மாறிச் சென்றுவிட்டனர் என்று நினைக்க வேண்டா. இப்பொழுது இந்தியாவில் நிலையான ஆதிக்க சமநிலையை நிலைநாட்ட இயலாது என்பதையும், இந்திய அரசுகளுடைய மரபொழுங்குமிக்க கூட்டணியைக் காண்பது இயலாது என்பதையும் பொதுவாக எல்லாரும் ஒப்புக்கொண்டனர். எவ்வடிவிலாகிலும் கம்பெனியார் ஆதிக்கம் பெறுவதே பிரச்சினையைத் தீர்ப்பதற்குரிய வழியாகக் கருதப்பட்டது. ஆனால், அதற்கேற்ற பக்குவம் உடையதாக இன்னும் காலம் கனியவில்லை. மராட்டியர் அல்லது பிண்டாரியரைக் காட்டிலும் நெப்போலியன் பேராபத்தாக விளங்கினர். ஃபிரெஞ்சு சிக்கல் தீர்க்கப்படுகின்ற வரையிலே, இந்தியப் பிரச்சினை ஒத்திவைக்கப்பட்டிருந்தது. வெல்லஸ்லியிடத்து ஈடுபாடுமிக்க அவருடைய ஆதரவாளர்கள் இந்தியாவில் கட்டுப்படுத்தப்படாத இந்தியாவின் பேரழிவு ஒன்றையே கண்டனர். அவர்களுடைய பதற்றமான போக்குக் குறிப்பிடத்தக்கதாகவும் இயற்கையாகவும் அமைந்தது. அக்காலத்து நூல்களிலும், வாத எதிர்வாதங்களிலும் இந் நெருக்கடி நிலை அடியிலே படர்ந்திருந்தது. இந்தியாவிலுள்ள பிரிட்டிஷாருடைய நோக்கில் இயலக்கூடியவை எவை என்று தோன்றியமைக்கும், ஐரோப்பாவில் பிரிட்டிஷார் தலையிட்டுள்ள பிரச்சினைகளுள் எவை நன்மை பயக்கத் தக்கவை என்று கருதப்பட்டதற்கும் இடையே உண்டான போராட்டமே ஈதெனில் அது தவருகாது. முற்போக்குக் கருத்துடைய திட்டத்தைக் கடைப்பிடிப்பதில் தலைகீழ் மாற்றம் உண்டாயிற்று என்று சொல்லுவதைவிட, அது ஓர் இடைவேளையாக—இடைக்காட்சியாக அமைந்தது என்றே சொல்லலாம். கோட்டையின் இறுதி மாடி கட்டி முடிக்கும் வரையில், கோட்டையைத் தங்கள் பிடியில் வைத்துக்கொள்ள வேண்டியவர்களாக பிரிட்டிஷார் இருந்தனர்.

வெல்லஸ்லிக்குப் பிறகு கவர்னர்-ஜெனரலாக வந்தவர் காரன்வாலிஸ். அப்பொழுது அவருக்கு 67ஆம் வயது நடந்துகொண்டிருந்தது.[1] செயல்முறைக்குகந்த வகையில் கம்பெனியினுடைய இராச்சியத்தின் எல்லைகளை மாற்றி

[1] மிகவும் வயது முதிர்ந்த நிலையில் அவர் கவர்னர்-ஜெனரல் பதவியேற்ருர். கர்சனைப் போன்றே இவரும் இரண்டாவது முறையாகக் கவர்னர்-ஜெனரல் பதவியில் அமர்த்தப்பட்டார்.

யமைக்க வேண்டும் என்பதே அவருடைய நோக்கமாக இருந்தது. ஆனால், எவ்வகையிலும் நடைமுறையில் இருந்து வந்த நிலையைத் திரும்ப நிலைநாட்ட அவர் விரும்பவில்லை. எனவே, அவர் சிந்தியாவோடும் ஹோல்காரோடும் சிக்கிக் கொண்டுள்ளதிலிருந்து விடுவித்துக்கொள்ள வேண்டியவரானார். ஆனால், ஐதராபாத்து, லக்னோ அல்லது பூனா ஆகியவற்றின் நிலையில் யாதோர் அதிர்ச்சியும் அடைவதற்கு இடமில்லாமல் போயிற்று. வெல்லஸ்லியின் திட்டங்கள் ஒரு பகுதியில் தவறிழைத்ததைப் போன்று, காரன்வாலிஸ் செயலாற்ற வகுத்த திட்டங்கள் வேறொரு பகுதியில் தவறிழைத்தன. அவர் தம்முடைய கருத்துகளைச் செயற்படுத்தப் பயணம் செய்துகொண்டிருந்தபொழுது, காசிப்பூர் (Ghazipur) என்னும் இடத்தில் அக்டோபர் மாதம் ஐந்தாம் நாள் அவர் காலமானார். அவருக்குப் பிறகு, பார்லோ கவர்னர்-ஜெனரலாக அமர்த்தப்பட்டார். அவர் கம்பெனியில் நெடுங்காலமாகப் பணிபுரிந்து வந்தவராவர்; வெல்லஸ்லியின் வலக்கை போன்றவர். அவருக்கு முற்பட்ட ஷோரைப் போலவும் பிற்பட்ட லாரன்சைப் போலவும் முதன்மையான பொறுப்புத் தம்மிடத்து ஒப்படைக்கப்பட்டபொழுது, அவர் நிலையான பணித்துறை அதிகாரிகளின் மனப்பான்மையுடையவராகவே இருந்தார். கம்பெனி தலையிடாக் கொள்கையைப் பின்பற்றவேண்டும் என்னும் கட்டளையை அவர் செம்மையாகக் கடைப்பிடித்து ஒழுகினார். 1805ஆம் ஆண்டு நவம்பர் மாதத்தில் சிந்தியாவோடு செய்துகொண்டிருந்த உடன்படிக்கை திருத்தப்பட்டது. குவாலியரும் கோகாட்டும் (Gohad) அவருக்குத் திருப்பிக் கொடுக்கப்பட்டன. அவருடைய இராச்சியத்தின் வட எல்லையாகச் சாம்பல் நதி வரையறுக்கப்பட்டது. பிரிட்டிஷாரின் ஆட்சிக்குட்படாத தக்கணப் பகுதியிலும், இரசபுதனத்திலும் இந்தியாவின் விருப்பப்படி செயலாற்றுவதற்கு உரிமை வழங்கப்பட்டது. பஞ்சாப் வரையில் லேக்கினால் துரத்திச் செல்லப்பட்ட ஹோல்காரின் இராச்சியம் சாம்பல் நதிக்குத் தெற்கே என்று எல்லை வரையறுக்கப்பட்டது. ஆனால், அவ் எல்லைகளுக்கு அப்பாலும் அவர் உரிமையுடன் இயங்குவதற்கு அனுமதி தரப்பட்டது. பிரிட்டிஷார் ஆக்ராவும் தில்லியுமுள்ள யமுனை ஆற்று வெளியைத் தங்களுக்கு உரியதாகவே நிறுத்திக்கொண்டனர். அப்பகுதியில் முகலாயப் பேரரசரோடு தெளிவில்லாத தொடர்பு உடையவர்களாகக் கம்பெனியார் இருந்ததோடு, அப் பேரரசின் பேரால் அப் பகுதியை ஆங்கிலேயர்களே ஆண்டு வந்தனர். மற்ற இடங்

களில் எல்லாம் முன்பிருந்த நிலைமையை அப்படியே பார்லோ நிலைநாட்டி வந்தார். நைசாமும் மராட்டியரும் சேர்ந்து செய்த சதியாலோசனையை முளையிலேயே அவர் கிள்ளி எறிந்தார். பஸ்ஸீன் உடன்படிக்கையைத் தள்ளுபடி செய்யுமாறு இயக்குநர்கள் முயன்றபொழுது, அதை அவர் மிக வன்மையாக எதிர்த்தார். படைத்துறையில் செய்யப்பட்ட திருத்தங்கள் சமய உணர்வைப் புண்படுத்துவதாகக் கருதப்பட்டதனாலும், நாடுகடத்தப்பட்ட மைசூர் இளவரசர் அருகிலிருந்து தூண்டி விட்டமையாலும், வேலூரில் இருந்த இந்தியப் படை வீரர்கள் கலகம் செய்தனர். அதனால் தென்னிந்தியாவில் குழப்பம் உண்டாயிற்று. அதைப் பிற்காலத்து உண்டான சிப்பாய்க் கலகத்தோடு ஒப்பிட்டுக் கூறமுடியாது. இக் கலகம் முழுக்க முழுக்கப் படைத்துறையில் உண்டான மன நிறைவின்மையாலும் வெறுப்பினாலும் தோன்றியதாகும். ஆனால், அது சென்னையில் கவர்னராக இருந்த வில்லியம் பென்ட்டிங்கு பிரபுவைப் பதவி இழக்கச் செய்தது. இதுதான் அதனுடைய மிகச் சிறப்புமிக்க விளைவாக இருக்கலாம். செல்வாக்கு மிக்க அந்தப் பிரபு, 1827ஆம் ஆண்டில் கவர்னர்-ஜெனரலாக்கப்படும் வரையில் தமக்கு இழப்பீடு தருமாறு ஓயாது கேட்டுக்கொண்டே இருந்தார்.[1]

பார்லோ பொதுவாக அவருடைய பணியைச் செம்மையாகவும் திறமையாகவும் செய்தார் என்றே கூறலாம். பணிபுரியும் காலம் முழுவதும் படைகளைக்கொண்டு ஆட்சி புரிவதும், புதிய நாடுகளைக் கைப்பற்றுவதனால் சீற்றமடைகின்ற அரசியல் கட்சிக் கூட்டத்தினரை அடக்கியாளுவது என்பதும் அவ்வளவு எளிய செயலன்று. கம்பெனி சிக்கிக் கொண்டு திக்குமுக்காடிக்கொண்டிருந்த பிரச்சினைகளை எல்லாம், காலவரையறையின்றி நீ படித்துக்கொண்டிருப்பதனால் பயனில்லை என்று கருதப்பட்ட காலத்தில், அவர் அவற்றை மெல்ல மெல்லக் குறைத்துக்கொண்டு வந்தமை அவருடைய தொண்டின் சிறப்பிற்குச் சான்றாகும். அவர் பணிபுரிந்த காலம் மிகவும் சிக்கலானது; குழப்பம் நிரம்பியது என்றும் கூறலாம். கம்பெனிக்கு உண்டான பிரச்சினைகளைத் தீர்ப்பதற்குரிய வழிவகைகளை நாடும்பொழுது,

[1] பென்டிங்கு பிரபு, போர்ட்லாந்தின் மூன்றாவது கோமகனின் இளைய பிள்ளையாவார். அக் கோமகன் 1807 முதல் 1809 வரை இங்கிலாந்தின் பிரதம மந்திரியாகப் பணி புரிந்தவராவார்.

இன்னும் உரிமையுடன் இருக்கின்ற அரசுகளை எதிர்த் தாக்குதல் செய்யுமாறு தூண்டாது அவர் செயலாற்றியது போற்றுதலுக்குரியதாகும். அல்லது கம்பெனியின் கண் காணிப்பின்கீழ் இருக்கின்றவர்கள் தங்களுக்கு உரிமை வேண்டும் என்று கிளர்ச்சி செய்ய முடியாதவாறு பிரச்சினை களைச் சமாளித்த பெருமை பார்லோவிற்குரியதாகும். பல இரசபுதன அரசுகளோடு உடன்படிக்கையோ, ஒப்பந்தமோ செய்துகொள்ளாமல் தட்டிக் கழித்ததும், சிறப்பாக ஜெய்பூரோடு தொடர்புகொள்ளாமல் அதைப் புறக் கணித்ததும் அவருடைய செயல் திறனின் பலவீனமான பகுதி யாகும். அவ்வாறு அவர் புறக்கணித்தமை, அடுத்த சில ஆண்டுகளில் புதுப்பிக்கப்பட்ட மராட்டியரின் கொள்ளையிடும் தாக்குதல்களினல் ஜெய்பூர் பெரிதும் துன்புற்றது. ஆனல், ஐரோப்பிய சூழ்நிலையின் காரணமாக அவ்வரசுகளைப் பாது காப்பது இயலாமற் போயிற்று என்பதை நாம் ஒப்புக் கொள்வோமானல், அத்தகைய சூழ்நிலையில் வேறு என்ன செய்ய முடியும் என்பதைப் பற்றிச் சிந்திப்பதற்கே இட மில்லை. இதுவரையில் இரசபுத்திர அரசுகள் சீரழிந்து கொண்டிருந்தன. அவற்றைப் பாதுகாப்பது என்று சொன்னல், அவற்ருல் கம்பெனிக்குக் கிடைக்கக் கூடிய ஆதாயத்தைக் காட்டிலும், கடன் தொல்லையே மிகுதியாகும் என்பது எளிதாகப் புலனயிற்று. அச்சமயத்தில் கம்பெனி எத்தகைய கடன்களையும் ஏற்றுக்கொள்ளக் கூடிய நிலையில் இல்லாமையால், இரசபுத்திர அரசுகளின் விவகாரத்தில் தலையிடத் தயங்கியது நேர்மையேயாகும். ஆனல், பார்லோ விற்குச் சில தொல்லைகள் உண்டாயின. அவரிடத்து வெறுப் புடன் பணிபுரிந்தவர்கள் அவருக்கு எதிராகத் தங்கள் பேனக் களைப் பயன்படுத்தினர்கள். சார்லஸ் மெட்காப்பிற்கு எவ்வாறு அவருடைய பணியாளர்கள் தொல்லை கொடுத் தனரோ, அதைப் போன்றே பார்லோவிற்கும் அவருடைய வயது நிரம்பிய, பொறுப்புடைய பணித்துறையினர் பழமைப் பற்றுடன் அவருக்கு எதிராக வேலை செய்தனர்.

கவர்னர்-ஜெனரல் பதவியில் மார்லோ உறுதிப்படுத்தப் பட்ட மறுநாளே, பதவியை விட்டு விலகி, இங்கிலாந்திற்குத் திரும்பி வருமாறு கட்டளை பிறப்பிக்கப்பட்டது. லண்டன் மாநகரின் அமைச்சரவையில் உண்டான மாற்றமே மார்லோ திருப்பி அழைக்கப்பட்டமைக்குக் காரணமாகும். அவருக்கு அடுத்து மின்டோ பிரபு கவர்னர்-ஜெனரலானர். வாரன் ஹேஸ்டிங்ஸின்மீது சுமத்தப்பெற்ற துரோகக் குற்றச்சாட்டு

வழக்கு நடைபெற்ற காலத்தில், அதன் மேலாளராகப் பணி புரிந்தவர் மின்டோ பிரபு என்பது இங்குக் குறிப்பிடத்தக்க தாகும். எனவே, அவர் வன்முறைத் திட்டங்களைத் தவிர்த்து விடுவார் என்று நம்பப்பட்டது. உண்மையாகவே விருப்ப மில்லாமல் காலத்தைக் கழிப்பதற்கு அவர் இந்தியாவிற்குப் போனார். ஆனால், தலையிடாக் கொள்கை என்பது அப் பொழுது பார்த்துக்கொண்டும் பொறுத்துக்கொண்டும் இருப்பதைத் தவிர, அது அப்பொழுது வேறொன்றையும் சாதிக்கவில்லை என்பதை எளிதில் புரிந்துகொள்ள முடியாத மதிநுட்பம் உடையவராக அவர் இருந்தார். அவர் பதவி வகித்த காலமும் நெப்போலியனோடு போரிட்ட காலத்தின் உச்ச நிலையும் முற்றிலும் ஒன்றாகப் பொருந்தியிருந்தது. இந்தியாவிலே முன்னேக்கிச் செல்ல முயலும் முயற்சிக்கு உதவியாகத் தங்களுடைய ஆற்றலின் ஒரு பகுதியை இந்தியாவின் பக்கம் திருப்ப முடியாத நிலையில் ஆங்கிலேயர் ஐரோப்பாவில் நடைபெற்ற நிகழ்ச்சிகளால் கட்டுண்டு கிடந்தனர்; இந்தியாவில் நிகழ்ந்த நிகழ்ச்சிகள் பின்னேக்கிப் போகவொட்டாமல் தடுத்தன. புத்துயிர் பெற்று ஃபிரெஞ்சுக் காரர்களின் ஆதிக்கமாகிய அச்சமே மின்டோவின் முதலாவதும் முதன்மையானதுமான கவலையாக இருந்தது. அவர் இந்தியாவிற்கு வந்து சேர்ந்ததும், மூன்றாவது கூட்டிணைப்பு (Third Coalition) அரசாங்கம் இறுதியாகக் கவிழ்ந்தது. அப்பொழுது ரஷ்யா தோற்கடிக்கப்பட்டது; தில்சிட்டு உடன்படிக்கை செய்யப்பட்டது. ரஷ்யாவும் ஃபிரான்சும் சேர்ந்து ஐரோப்பா முழுவதையும் கட்டியாண்டன. அவை ஆசியாவை அச்சுறுத்தி வந்தன. கீழை நாடுகளைக் கைப்பற்றுவது என்னும் கனவினை நெப்போலியன் என்றுமே மறந்துவிடவில்லை. பாரசீகத்தின் மூலமாகப் ஃபிரான்சிய—ரஷ்யப் படையெடுப்புத் திட்டத்தினை (ஸ்பெயின், ஆஸ்திரியா ஆகிய நாடுகளின்மீது திரும்பும்வரை) அவர் விளையாட்டுக் கருவியாக உருட்டிக்கொண்டிருந்தார். இவற்றோடு ஃபிரான்சு இன்னும் மொரீஷஸ் தீவினையும் போர்பன் தீவினையும் இந்தியப் பெருங்கடலின் தெற்குப் பகுதியில் பெற்றிருந்தது. ஹாலந்தில் தன்னுடைய ஆதிக்கத்தை நிலைநாட்டியதன் மூலம், டச்சுக்காரர்களுக்குரிய கிழக்கு இந்தியத் தீவுகளையும் ஃபிரான்சு ஆட்சி புரிந்து வந்தது. அச்சமயத்தில் கம்பெனியின் வடமேற்குப் பகுதியில் உண்டான பிளவுகளை மின்டோ ஒக்கப்பண்ணிக்கொண்டிருந்தார். அதன் பிறகு, எஞ்சியுள்ள ஃபிரெஞ்சுக்காரர்களின் வாணிகத் தளங்களைத் தாக்குவதற்குத் திட்டமிட்டிருந்தார். வெல்லஸ்லியைக் காட்டிலும்

அதிகமான பொறுமையும் திறமையும் உடையவராக அவர் விளங்கினார். பேரளவிற்குத் தம் விருப்பு உரிமையோடு அவருடைய இலட்சியங்களுள் முதலாவதாக இருந்ததை அடைவதற்கு வரிசையாகப் பல தூதர் குழுவினை அனுப்பி வைத்தார். சர் ஜான் மால்கம், பாரசீகத்திற்கு இரண்டு முறை தூதர் குழுவின் தலைவராக அனுப்பிவைக்கப்பட்டார். பாரசீகத்தில் ஃபிரெஞ்சுக்காரர்கள் பெற்றுள்ள செல்வாக்கினை ஈடுகட்டுவதற்காகவே அவர் தூதர் குழுவினை இருமுறை அனுப்பிவைத்தார் என்பது இங்குக் குறிப்பிடத்தக்கதாகும். அங்கு மால்கம் அரசருடைய தூதர் குழுவோடு மோதிக் கொண்டார். அக் குழுவிற்கு சர் ஹார்ஃபோர்ட் ஜோன்ஸ் என்பவர் தலைவராக வந்திருந்தார். அவ்விரு தலைவர்களுக்கும் இடையே மோதுதல் நடைபெற்றதாகத் தெரிகிறது. பெரிதும் பெருந்தன்மையில்லாத முறையில் நடைபெற்ற சச்சரவின் பயனாக அரசருடன் உடன்படிக்கை செய்யப்பட்டது. ஷாவினைப் ஃபிரெஞ்சுக்காரர்களுக்கு ஆதரவு தரவேண்டா என்று அவ்வுடன்படிக்கை வற்புறுத்தியது. என்ன சலுகையோடு ஒருங்கு திரட்ட முடியுமோ, அந்த வகையில் மின்டோ போலிப் பகட்டுடன் அவ்வுடன்படிக்கையை ஏற்றுக் கொண்டார்.[1] பேஷ்வாரிலுள்ள ஆப்கானிய ஷாஷுஜாவின் அவைக்களத்திற்கு மவுண்ட்ஸ் டுவர்ட்டு எலிபின்ஸ்டன் சென்று வந்தார். அவரிடத்து ஓர் உடன்படிக்கையும் செய்து கொண்டார். ஆனால், சிறிது காலத்திற்கெல்லாம் ஷாஷுஜா ஆட்சி கவிழ்க்கப்பட்டமையால், அவ்வுடன்படிக்கை பயனற்றுப் போயிற்று. மின்டோ அனுப்பிய தூதர் குழுக்களில் மூன்றாவதாகப் பணியாற்றியதுதான் பெரு வெற்றியைத் தேடித்தந்தது எனலாம். அக் குழுவிற்கு இளைஞரான சார்லஸ் மெட்காப்பு தலைவராக அமர்த்தப்பட்டார். அவர் லாகூரில் உள்ள சீக்கியரின் தலைவரான இரஞ்சித் சிங்கிடம் தூது போனார்.[2] சட்லெஜ் ஆற்றிற்கு மேற்கே அண்மையில் தான் இரஞ்சித் சிங் தம்முடைய ஆட்சியை நிறுவினார். கிழக்கே உள்ள சீக்கிய அரசுகளைக் கைப்பற்றுவது குறித்து அவர் கருத்தைச் செலுத்தினார். கிழக்கே இருந்த சீக்கிய அரசுகளுக்குள்ளே முதன்மையானது பாடியாலா என்ப

[1] இந்தத் தூதர் குழுப் பயணத்தின்பொழுது மால்கம் 'பாரசீகத்தின் வரலாற்றை' (History of Persia) எழுதுவதற்குரிய சான்றுகளையும் ஆதாரங்களையும் சேகரித்தார்.

[2] சீக்கிய அரசின் எழுச்சியைப் பற்றி அறிவதற்கு எட்டாம் பிரிவின் நான்காம் இயலைக் காண்க.

தாகும். தாற்காலிகமாக ஃபிரெஞ்சுக்காரருடைய ஆதிக்கம் குலைந்ததன் காரணமாக மின்டோ, முன்பு கருதியிருந் ததைவிடக் கடுமையான செயல்முறையில் ஈடுபட முனைந்தார். 1809ஆம் ஆண்டு, ஏப்ரல் மாதத்தில் அமிர்தசரசில் செய்து கொண்ட உடன்படிக்கையின்படி சட்லெஜ் ஆற்றுக்கு மேற்கே தம் விருப்பம்போல் செயலாற்றுவதற்குரிய உரிமையினை இரஞ்சித் சிங்கு பெற்றார். அதற்குப் பதிலாக அவர் சட்லெஜ் ஆற்றின் கிழக்குப் பகுதியின் விவகாரத்தில் தலையிடுவதில்லை என்னும் உறுதிமொழியைக் கம்பெனிக்கு அளித்தார். அக் காலத்தில் இவ்வுடன்படிக்கை மிக்க முக்கியத்துவம் வாய்ந்த தாகக் கருதப்பட்டது. இவ்வுடன்படிக்கை, 1845ஆம் ஆண்டில் நடைபெற்ற முதல் சீக்கியப் போர் வரையில் செயலில் கடைப்பிடிக்கப்பட்டு வந்தது. அதனால் பஞ்சாப்பு முழுவதிலும் அமைதியும் ஒழுங்கும் நிலவியது. சீக்கிய ருடைய ஆற்றல் அனைத்தும் மேற்குப் பக்கத்திலும் தெற்குப் பக்கத்திலும் ஆப்கானியர்களுக்கும் சிந்தியர்களுக்கும் எதிராகச் செலுத்தப்பட்டது. கிழக்கே இருந்த கம்பெனியின் மீது அவர்கள் கருத்தைச் செலுத்தவில்லை. தில்லி அரசின் மாநிலம் காக்கப்பட்டது. இவற்றால் சார்லஸ் மெட்காப்பின் மதிப்பு உயர்ந்தது. அவர் நற்பெயருடன் சிறப்புறத் தொடங் கினார்.

இவ்வரசியல் சூழ்ச்சித்திறன், திறமை மிக்கதாக விளங் கியது. சீக்கியர்களைப் பொறுத்தவரை, இது பெரும் பயன் அளிப்பதாக அமைந்தது. ஆனால், இவ்வுடன்படிக்கை செய்யப் பட்ட பொழுது எதிர்பார்த்த இடர்ப்பாடுகளும் இன்னல் களும் ஐரோப்பிய நிகழ்ச்சிகளால் வேறு பக்கமாகத் திருப் பப்பட்டன. ஐரோப்பாவில் நடைபெற்ற நிகழ்ச்சிகள் நெப்போலியனை முதலில் ஸ்பெயினுக்கும், பின்னர் வியன்னா விற்கும், அங்கிருந்து இறுதியாக மாஸ்கோவிற்கும் அழைத்துச் சென்றது. துன்பம் உண்டாகாத இவ்வோய்வு நேரத்தைக் கிழக்குப் பகுதியில் இன்னும் எஞ்சியுள்ள ஃபிரெஞ்சுக்காரர்களின் அரண்களை எல்லாம் அழித்தொழிப் பதற்கு முயலுமாறு தூண்டியது. நன்னம்பிக்கை முனையி லிருந்த டச்சுக்காரர்களின் குடியேற்ற நாட்டினை இறுதியாக 1806ஆம் ஆண்டு ஆங்கிலேயர் கைப்பற்றினர். போர்ச்சு கலைப் ஃபிரெஞ்சுக்காரர்கள் கைப்பற்றிய பொழுது, கோவா வினைப் பிரிட்டிஷார் கைப்பற்றிக்கொண்டனர். 1809ஆம் ஆண்டில் சீனவில் (போர்ச்சுகலுக்குரியதாக) இருந்த மாகாவோ (Macao) என்பதை ஆங்கிலேயர் கைப்பற்றிக்

கொண்டனர். 1810ஆம் ஆண்டில் தெற்கத்திய ஃபிரெஞ்சுத் தீவுகளுக்கு ஆற்றல் மிக்க பெரும்படைகள் அனுப்பப்பட்டன. எங்கிருந்து மைசூரோடு நேச உறவுகொண்டிருப்பதாக அறிவிக்கப்பட்டதோ, எவை இப்பொழுது ஃபிரெஞ்சுக்காரர்களுள் திறமைமிக்க தனியார்களின் கூண்டுகளாக இருந்தனவோ, அவற்றின்மீது பெரும் படையெடுப்பு நடைபெற்றது. அவை இரண்டும் கைப்பற்றப்பட்டன. 1815ஆம் ஆண்டில் போர்பன் தீவு திருப்பிக் கொடுக்கப்பட்டது. அதற்கு 'ரேயூனியன்' என்னும் புதுப் பெயரிடப்பட்டது. மொரீஷஸ் தீவு பழைய டச்சுப் பெயரோடு ஆங்கிலேயர்களின் ஆதிக்கத்திற்கு உட்பட்டதாகவே இருந்துவந்தது. பின்னர், கிழக்கிந்தியத் தீவுகளில் டச்சுக்காரர்களுக்கு உரியனவாக இருந்த உடைமைகளின் மீது மின்டோ கருத்தைச் செலுத்தினர். 1810ஆம் ஆண்டில் அம்பாய்னு (Amboyna) வும், மலாக்கா தீவுகளும் கைப்பற்றப்பட்டன. 1811ஆம் ஆண்டில் சர் சாமுவெல் ஆக்முடி என்பவர் தலைமையின்கீழ்ப் பெரியதொரு படையெடுப்பு நடந்தது. அப் படையெடுப்பில் மின்டோவும் உடன் சென்ருர். கடும் போருக்குப் பிறகு ஃபிரெஞ்சுக்காரர்களின் ஆதிக்கத்திற்குட்பட்டிருந்த டச்சுக்காரர்களின் தீவாகிய ஜாவாவை வன்முறையில் அவர்கள் பறித்துக்கொண்டனர். ஸ்டாம்போர்ட் ராஃப்பில்சு என்பவரிடத்து அதன் ஆட்சிப் பொறுப்பை ஒப்படைத்துவிட்டு மின்டோ இந்தியாவிற்குத் திரும்பினுர். இவ்வாறு சிறியதொரு இயலினை—ஜாவாவைப் பொறுத்த வரையில் சுவை மிக்கதொரு அதிகாரத்தினை அதன் வரலாற்றில் அவர் தொடங்கி வைத்தார். ஆனுல், அது சிங்கப்பூரைக் கைப்பற்றும் சிறந்ததொரு துணிகரச் செயலுக்கு அடிகோலியது. அதனுடன் பிரிட்டிஷாரின் பேரரசு கிழக்கு நாடுகளில் விரிவுபடுத்தப்படுவதில் புதியதொரு திருப்பத்தை உண்டாக்கியது. மின்டோவின் படைகள் ஜாவாவிற்குப் போக்குவரத்திற்குரிய வழியை அமைத்ததன்மூலம், தென்கிழக்கு ஆசிய நாடுகளில் பிரிட்டிஷ் பேரரசு என்னும் பயிருக்கு விதை விதைக்கப் பெற்றது.

இந்தியாவினுள்ளே மராட்டியர் திரும்பவும் புத்துயிர்ப்புப் பெறுவதற்குரிய அறிகுறி யாதுமின்றி, துன்பக் கடலில் மூழ்கிப் பாதாளத்திற்குள் சென்றுகொண்டிருந்தனர். விடுதலையைத் திரும்பப் பெறவேண்டும் அல்லது பெற்றுள்ள சுதந்திரத்தைப் பேணிக் காக்கவேண்டும் என்பதே ஒவ்வோர் அரசிளங்குமரருடைய அவாவாக இருந்துவந்தது. ஆனுல்,

அவ்வவாவினை அவர்களுடைய நிதிநிலை நெருக்கடி சமநிலைப் படுத்தி வந்தது. ஒன்றுசேர்ப்பதற்கு இயலாத வகையில் இருந்துவந்த எஞ்சிய இந்து அரசுகள் இரசபுத்திரர்களுடையன வாகும். லாகூரிலிருந்த இரஞ்சித் சிங்கின் புதிய சீக்கிய அரசு, சட்லெஜ் ஆற்றுக்குக் கிழக்கிலும் தெற்கிலும் நடை பெறும் நிகழ்ச்சிகளில் தலையிடுவதற்குரிய தனது ஆர்வத் தையும் ஆவலையும் துறந்துவிட்டது. தங்கள் இராச்சியங் களில் தண்டப்படும் மிகக் குறைந்த வரிப்பணத்தால் உண் டான பற்றாக்குறையைப் போக்கிக்கொள்ளுவதற்காகத் தங்களுக்குள்ளேயே ஒருவர் மற்றொருவரைத் தாக்கியதோடு, இரசபுத்திர அரசுகளின்மீதும் படையெடுத்துச் சென்றனர். அதன் விளைவாகத் துன்பம் பெருகியதோடு, பணமுடை கட்டுக்கு அடங்காததாயிற்று. மராட்டியர்களின் தலைவராக இயற்கையில் இருக்க வேண்டியவர் பேஷ்வாவாவர். ஆனால், அவர் முயற்சியுடன் பூசலைப் போக்குவதற்கு என்றுமே முயலாமல் இருக்கவில்லை, என்றாலும், அவர் கொண்டிருந்த நம்பிக்கை மிகச் சிறியதாக இருந்தது என்றுதான் சொல்ல வேண்டும். அவர் தம்முடைய இன மக்களையே மிகக் கடுமை யாகவும் கொடுமையாகவும் நடத்தியமையால், அவருக்கு ஆதரவாக மராட்டிய மக்களிடையே ஒரு பொதுக் கருத்து உருவாகாமல் போயிற்று. நாகபுரியில் ராகோஜி பான்ஸ்லே செயலற்றுக் கிடந்தார். 1805ஆம் ஆண்டில் கெய்க்குவார் துணைப்படைத் திட்டத்தை ஏற்றுக்கொண்டு, ஆங்கிலேயரின் படையொன்றையும் தம்முடைய நாட்டில் நிறுத்திக் கொண்டார். தௌலத்ராவ் சிந்தியா பொருளாதார நெருக் கடியால் பாதிக்கப்பட்டிருந்தார். மேலும், அவருடைய இழந்த செல்வத்தையும் செல்வாக்கையும் திரும்பப் பெறு வதற்குத் தேவைப்படும் வீரமிக்க செயல்களைச் செய்வதற் குரிய ஆற்றலோ, திறமையோ அற்றவராக அவர் இருந்தார். அங்கு, அறிவு நலம் வாய்ந்தவரும் முரட்டுக் குணமுடையவரு மான ஜஸ்வந்த் ராவ் ஹோல்கார் என்பவர் இருந்தார். அவர் ஒருவரிடமே மராட்டிய அரசிற்குப் புதுவாழ்வு அளிக்கக்கூடிய அறிவும் ஆற்றலும் செறிந்து கிடந்தன. ஆனால், அவர் 1808ஆம் ஆண்டு பைத்தியம் பிடித்தவராகிவிட்டார். மூன்றாண்டுகள் கழித்து அவர் இறந்துபோனார். அவர் இறந்தபொழுது மற்ற மராட்டிய அரசுகளைக் காட்டிலும் அவருடைய அரசு குழப்பமடைந்து கிடந்தது.

ஜஸ்வந்தின் திறமையற்ற போக்கு, பிண்டாரிகளுக்கு இறுதித் தடையாக இருந்துவந்ததையும் நீக்கிற்று. அவர்கள்

இப்பொழுது இந்திய ஆதிக்க வெறிபிடித்த அரசியலில் ஆற்றல்மிக்க ஒரு பகுதியாக வெளிப்பட்டனர்; நடு இந்தியாவில் பெருக்கெடுத்தோடும் துன்ப வெள்ளத்தை மிகுதிப் படுத்தும் சூறுவளியாக அவர்கள் எழுச்சியுற்றனர். அவுரங்க சீப்பின் ஆட்சி காலத்திய பிற்பகுதியிலேயே பிண்டாரிகள் மராட்டியருக்குத் துணைப்படையினராக இருந்துவந்தனர் என்றும், அதுமுதலே அவர்கள் இந்திய வரலாற்றில் காணப் படுகின்றனர் என்றும் மால்கம் (Malcolm) கருதுகிருர். அவர்கள் மராட்டியத் தலைவர்களின் படைகளில் சேருவதன் மூலம் தங்களுடைய தறுகண்மைமிக்க வாழ்க்கையைத் தொடங்கினர். அவர்கள் முகலாயருக்கு எதிராகத் தாங்களே படையெடுத்துச் சென்று, கொள்ளையும் கொலையும் புரிவோராக மராட்டியர் ஆதரவில் வாழ்ந்துவந்தனர். அவர்கள் மிகவும் எளிதில் நழுவித் தப்பித்துக் கொள்ளுகின்றவர்களாகவும், தம்மினத்துடன் தாம் இணங்கிப் போகின்றவர்களாக இல்லாமலும், மராட்டியர்களைக் காட்டிலும் இரக்கமெனும் ஒரு பொருளிலா அரக்கர்களாகவும் இருந்தனர். அவர்கள் மராட்டிய சிறுத்தைப் புலிகளுக்கு உதவி புரியும் குள்ளநரிகளாக இருந்தனர். அவர்களுக்குச் சாதிப்பற்ருே, சமயப் பற்ருே, தாயகமோ, தேசிய இனப் பெருமையோ இருந்ததாகத் தெரியவில்லை. இவைதாம் மராட்டியர்களுக்கும் பிண்டாரிகளுக்கும் இடையே காணப்பட்ட வேறுபாடாகும். அவர்கள் எல்லாச் சமூகத்திலிருந்தும் வந்தவர்களாக இருந்தனர். பிற்காலத்தில் பட்டானியக் கொள்ளைக்காரர் குழுக்களோடு (திருமண வுறவுகொண்டு) கலந்துவிட்டனர். அவர்களை ஒன்றுபடுத்தும் கருவி அவர்களுடைய தலைவராவர்; அவர்களுடைய குறிக்கோள் கொள்ளையடிப்பதாகும்; அவர்கள் கொள்ளையடித்துக் கொலைபுரிந்த நாடுகளில் உள்ள மக்களே அவர்களுடைய இனத்தை விருத்தி செய்துகொள்ளுவதற்குரிய கருவிகளாகப் பயன்படுத்தப்பட்டனர். அவர்கள் நாட்டிலே உண்டாகும் சமூகச் சீர்குலைவினுலும், அரசியல் குழப்பங்களாலும் பேணி வளர்க்கப்பட்டனர். அவர்கள் 'விலங்குகளின் சடலங்களில் தோன்றும் புழுக்களைப் போன்று பேரளவில் தோன்றினர்; ஆற்றலற்றும் அழிந்து கொண்டும் இருந்த அரசுகளின் ஊழல்களிலிருந்து வெளிப் பட்டனர்' என்பர் மால்கம். மராட்டியத் தலைவர்கள் ஆற்றல் மிக்கவர்களாக இருந்த வரையில் அவர்கள் வேட்டையில் பயன்படுத்தப்படும் நாய்களாக இருந்தனர். அப்பொழுது அவர்கள் எண்ணிக்கையில் குறைவாகவும், ஒருவகையான அடிமைகளாகவுமே இருந்துவந்தனர். மராட்டியப் பெருந்

தலைவர்கள் ஆற்றல் குன்றியவர்களாகப் போனபொழுது, பிண்டாரிகளின் தலைவர்களான சித்து (Chithu), வசில்கான், கரீம்கான் போன்றவர்கள் தங்களுடைய பண்ணைகளையே இராச்சியங்களாக மாற்றிக்கொண்டனர். தமக்குரிமையாக நிலமில்லாமல் இருந்த மனிதர்களிலிருந்தும், படைகளிலிருந்தும், நாடுகடத்தப்பட்ட வீரர்களிலிருந்தும் தங்களுக்குத் தேவையான ஆட்களை அவர்கள் தேர்ந்தெடுத்துக் கொள்ளுவது வழக்கம். இவ்வாறு இந்திய அரசியலில் ஆற்றல்மிக்க தனித்ததொரு சக்தியாக அவர்கள் ஏற்றமுற்றனர். இடைக் காலத்தின் பிற்பகுதியில் இத்தாலியில் களபேரம் செய்த 'உரிமைமிக்க கூட்டுக் கழகங்க'ளோடு (Free Companies) பிண்டாரிகளை நாம் ஒப்பிட்டுரைக்கலாம்.

பிண்டாரியர், மூட்டை முடிச்சுகளையோ கூடாரங்களையோ தங்களுடன் தூக்கிக்கொண்டு திரிகின்றவர்கள் அல்லர். ஒவ்வொரு குதிரைக்காரனும் தன்னுடைய குதிரைக்காகச் சில துண்டு ரொட்டிகளையே உடன் எடுத்துக்கொண்டு சென்றான். பிண்டாரியர் குழு, இரண்டு அல்லது மூன்றுயிரம் நல்ல குதிரைகளையும், அவற்றிற்கேற்ற விகிதத்தில் வீரர்களையும் உடையதாக இருந்தது. அவர்கள் ஒரு நாளைக்கு நாற்பது அல்லது ஐம்பது மைல் அக் குதிரைகளை ஊர்ந்து முன்னேறிச் சென்றனர். அவர்கள் சென்றடையவேண்டிய இலக்கினை அடையும்வரை அவர்கள் வலப்பக்கமோ, இடப்பக்கமோ திரும்பிப் பார்க்கமாட்டார்கள். அவர்களுடைய இலக்கினை அடைந்தவுடன், அவர்கள் பல குழுக்களாகப் பிரிந்து விடுவர். அவர்களுடைய கண்களில்பட்ட கால்நடைகளையும் பொருள்களையும் அப்படியே கவர்ந்து கொண்டு வருவர்; அப்படிக் கொள்ளையடிக்கின்ற பொழுது எத்தகைய கொடுஞ் செயல்களை எல்லாம் செய்ய முடியுமோ, அத்தகையவற்றை எல்லாம் அஞ்சாது செய்து முடிப்பர். அவர்களால் எடுத்துக் கொண்டு செல்ல முடியாத பொருள்களையெல்லாம் அழித்தொழிப்பர். அவர்கள் படையெடுத்துச் செல்லும் நாட்டின், எல்லைக் காவற் படையினர் அறிய முடியாத நிலையில் அவர்கள் தங்கள் திட்டங்களைத் தங்களுக்குள்ளே மிகவும் இரகசியமாக வைத்திருப்பதில் வல்லவர்கள். அதைப் போன்றே அவர்கள் திடீரென்று தோன்றித் தாக்குதலிலும்

தந்நிகரற்றவர்களாவர். அவர்களுக்கு எதிராக ஒரு படையைத் திரட்டிக்கொண்டு வருவதற்குள், அவர்கள் திரும்பிச் சென்றுவிடுவர். அவர்கள் இணக்கமற்ற வர்களாக இருந்தனர். அதில்தான் அவர்களுடைய ஆற்றல் அனைத்தும் அடங்கிக் கிடந்தது. அவர்கள் துரத்திக்கொண்டு வரப்படுவார்களால், மிக நெடுந்தொலைவிற்கு அணிவகுத்துச் செல்லுவர் (சில சமயங்களில் அறுபது மைலுக்கும் மேற்பட்ட தூரம் ஓடி ஒளிந்திருக்கின்றனர்). அவர்கள் ஓடிச் செல்லக்கூடிய வழிகளில் ஒழுங்கான படைகள் செல்ல முடியாது அல்லற்படும். அவர்களைத் துரத்தி வருகின்றவர்கள் அவர்களை முந்திக்கொள்ளுவார் களானால், உடனடியாக அவர்கள் தனித்தனியாகப் பிரிந்து ஓடிவிடுவர்; பின்னர் எங்காகிலும் ஓரிடத்தில் ஒன்ருகக் கூடுவர். அவர்கள் எங்கிருந்து புறப் பட்டார்களோ, அந்நாட்டிற்கே துரத்திச் செல்லப் படுவார்களானல், இடையிலே அவர்கள் பல குழுக் களாகப் பிரிந்துவிடுவர். அவர்கள் மலைகளுக்கு இடையே பாதுகாவலான இடங்களில் தங்கள் செல் வத்தோடும், கொள்ளையடித்த பொருளோடும், குடும் பத்தோடும் மிகப் பரவலாக வாழ்ந்து வந்தனர். ஆனல், அவர்கள் எங்குமே தாக்குவதற்குரிய நிலை களை உடையவர்களாக இருப்பதில்லை. அவர் களுடைய குழுக்களுள் யாதாகிலும் ஒரு குழு தோற் கடிக்கப்பட்டாலும், அவர்களுடைய பாளையங்களுள் ஒன்று அழிக்கப்பட்டாலும், அல்லது அவர்களுடைய அரண்களுள் யாதாகிலும் ஒன்று தாற்காலிகமாகக் கைப்பற்றப்பட்டாலும் அதனல் ஒன்றும் தலை முழுகிப் போய்விடுவதில்லை; ஓரிரு கொள்ளைக் காரர்கள் கொலை செய்யப்படுவார்கள். விரைவிலே கொலை செய்யப்பட்டவர்களின் இடம் நிரப்பப்படும். பொதுவாக மிகவும் துன்பமயமான நற்பேறுடைய வர்கள் அவர்கள் எனலாம். எனவே, அவர்கள் துணிகரச் செயல் புரிவதிலே பேரார்வம் கொண்டவர் களாக உள்ளனர்'.[1]

இக்கொள்ளைக் கூட்டத்தினைப் போன்ற மற்ருெரு குழு அக்காலத்தில் சிறப்புற்று விளங்கியது. அதைப்பற்றிச் சில

[1] சர். ஜே. மால்கம்: 'Memoirs of Central India' தொகுதி I, பக். 430-1.

சொற்கள் கூறவேண்டும். அக் குழு பட்டானியர்களுடைய தாகும். அவர்களுடைய சிறப்புமிக்க தலைவன் அமீர்கான் என்பவன் நாட்டுப்புற மக்களுக்கு இவர்களும் பிண்டாரியரைப் போன்று பேரச்சத்தை உண்டாக்கியிருந்தனர். ஆனால், அவர்கள் பிண்டாரியரைப் போன்று இல்லாமல் ஒழுங்கான காலாட்படையையும், குதிரைப் படையையும், பீரங்கிப் படையையும் உடையவர்களாக இருந்தனர். பெயரளவிற்கு அவர்கள் ஹோல்காரிடம் பணி புரிபவர்களாக இருந்தனர். அவர்கள் இங்குமங்கும் இயங்குகின்ற இராணுவ அரசினை நிறுவியிருந்தனர். போரிலே அவர்களை வெல்லுவது மிகவும் கடினம். அவர்கள் மிகுதியான சுமைகளைத் தூக்கிச் சென்றதனால், ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்திற்குச் செல்லுவதில் விரைவு குறைந்தவர்களாக இருந்தனர். பிண்டாரியர் தக்கணத்தினைத் துன்புறுத்தியதைப் போன்று, பட்டானியர் இரசபுதனத்தை அல்லோலகல்லோலப் படுத்தினர்.

இவ்வாறு சுதந்திர இந்தியாவின்மீது பிரிட்டிஷ் பேரரசின் நிழல் விரிந்து பரவியது. வெறுக்கப்பட்ட வெளிநாட்டினரின் ஆட்சியை முனைப்பற்ற வகையில் ஏற்றுக்கொள்ளுவதற்குரிய வழியமைக்கப்பட்டது. அயலார் ஆட்சிக்கு மாற்றாக ஏற்றுக் கொள்ளக் கூடிய இந்திய அரசின் வடிவங்கள் ஒவ்வொன்றும் ஆதரவற்றுப் போனமையால், இந்திய மக்கள் வெளிநாட்டாருடைய ஆட்சியை ஏற்றுக்கொண்டு தீரவேண்டிய நெருக்கடி நிலையை அடைந்தனர். மின்டோ ஆறு ஆண்டுகளாகத் தக்க வாய்ப்பிற்காகப் பொறுமையாகக் காத்துக்கொண்டிருந்தார். இன்னும் அத்தகைய வாய்ப்பை எதிர்பார்த்துக் கொண்டிருந்தால், அரசியல் நிலை இன்னும் அதிக நேரம் அதற்காகக் காத்திருக்காது என்பதைத் தெளிவுபடுத்தியது.

## ஆதாரங்கள்

இக்காலத்தைப்பற்றி அறிவதற்கு ஜேம்ஸ் மில் எழுதிய 'வரலாற்றைத்' தொடர்ந்து H. H. வில்சன் எழுதியுள்ளதைப் பார்க்கலாம். அது பெரும்பயன் தருவதாகும்.

மால்கமின் 'Political History' (1826) என்னும் நூலும் பயன்படும். அக்காலத்திய வரலாற்றில் மால்கம் நடிகராகவும் பார்க்குநராகவும் இருந்தவராவர். மின்டோவைப் பற்றித் தெரிந்துகொள்ளுவதற்கு, 'Countess of Minto' என்னும் நூலையும் 'Lord Minto in India' (1880) என்னும் நூலையும்

பார்க்க. அக்காலத்துத் தூதர் குழுக்களைப் பற்றி J. W. Kaye என்பவர் எழுதியுள்ள 'Life of Lord Metcalfe' (2 தொகுதி. 2-ம் பதிப்பு, 1858) என்னும் நூலையும், 'Life of Sir J. Malcolm' என்னும் நூலையும் பார்க்கலாம். மேலும் E. Thompson எழுதியுள்ள 'Charles, Lord Metcalfe' என்னும் நூலும் சிறப்புடையதாகும்.

காபூலுக்குச் சென்ற தூதர் குழுவினைப் பற்றி, சர். டி. இ. கோல்புரூக்கு எழுதியுள்ள 'Life of Mountstuart Elphinstone' (2 தொகுதி, 1884) நூல் பயன்படும். எல்பின்ஸ்டனே 'Account of the Kingdom of Cabaul' (1815) என்னும் நூலினை எழுதியுள்ளார். சர் எல். கிரிஃப்பின் என்பவர் இந்திய ஆட்சியாளர் வரிசையில் 'இரஞ்சித்சிங்கு' (1911) என்னும் நூலினை எழுதியுள்ளார். இந்நூல் அக்காலத்து சீக்கியர் வரலாற்றை அறிவதற்குப் பேருதவியாக இருக்கிறது.

நடு இந்தியாவைப் பற்றி அறிவதற்கு சர் ஜே. மால்கமின் இலக்கியச் சிறப்புடைய 'Memoirs of Central India' (தொகுதி 2, மூன்றும் பதிப்பு, 1832) என்னும் நூல் பெரிதும் பயன்படும். இந்நூலில் அகல்யாபாயைப் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. அரசிளங் குமரர்களைப் பற்றிய செய்திகள் E. தாம்சனின் 'The Making of the Indian Princes' (1943) என்னும் நூலில் விரிவாகக் கூறப்பட்டுள்ளன.

# 11. ஹேஸ்டிங்ஸும் கூட்டுத் தலைமையும்

நாடகத்தின் இறுதி அங்கத்தை நோக்கி நிகழ்ச்சிகள் அனைத்தும் விரைந்து சென்றுகொண்டிருந்தன. பிரிட்டிஷாரின் தலைமையின்கீழ் இந்தியா ஒன்றுபடும் நிலையை அடைந்ததற்குக் காரணம், மாறி மாறிப் பல முறைகள் பரிசோதனை செய்யப்பட்டும் தேவை இருந்துகொண்டே வந்தமையாகும். முகலாயர்கள் காலத்து அம்முறை செயற்படுத்தப்பட்டதைக் காட்டிலும் பிரிட்டிஷார் ஆட்சிக் காலத்து ஒன்றுபட்ட இந்தியாவை உருவாக்குவது மிக விரைவில் நடைபெற்றது. முகலாயர்களைக் காட்டிலும் பிரிட்டிஷார் மிகுதியான வள ஆதாரத்தைப் பெற்றிருந்தமையும், உள்நாட்டு அரசுகள் ஆற்றலற்றவைகளாக இருந்தமையும் பிரிட்டிஷார் ஆட்சி காலத்தில் ஒன்றுபட்ட இந்தியா விரைவில் உருப்பெற்றதற்குக் காரணமாகும். அதன் பரிணும வளர்ச்சி விரைவுடையதாக இருந்தாலும், அதனுல் அதிகப்படியான சீர்குலைவு உண்டாயிற்று. இந்தியாவில் ஆதிக்கம் செலுத்திய சக்தி முழுவதும் சிதறுண்டு போயிருந்தமையே அச் சீர்குலைவிற்குக் காரணமாகும். மேலும், முகலாயருடைய பழக்கவழக்கங்களுக்கும் கருத்துகளுக்கும் இடையே காணப்பட்ட வேற்றுமையைக் காட்டிலும், பிரிட்டிஷாருக்கும் இந்திய மக்களுக்கும் இடையே பெரிதும் ஆழமான வேறுபாடுகள் காணப்பட்டன. இதுவரையில் அம்முறை நடைபெற்றுவந்தது. இன்னும் வெளிநாட்டு மக்களால் இந்திய அரசு கைப்பற்றப்படுவதும், அவர்களுடைய ஆட்சி காலத்தில் அவர்கள் மாண்புற்று விளங்கும் நாட்களும், பின்னர் நலிவுற்று வீழ்ச்சியடைதலும் நோக்குநர்க்கு—சிறப்பாக இந்தியாவைச் சேர்ந்த நோக்குநர்க்கு அது ஆதிக்க அரசியலில் புதியதொரு பயிற்சியாக அன்றி வேறுவகையாகத் தோன்றியிருக்க முடியாது. சற்று முன்புதான் முடிவுற்ற எட்டு ஆண்டுகள்—பலவகைப் பணிபுரிந்த எட்டு

ஆண்டுகள், இந்தியர் கண்களுக்குத் துன்பக் கோப்பை பொங்கி வழியுமாறு அதை நிரப்பியதாகவே தோன்றும்.

இத்தகைய சூழ்நிலையில்தான் மோய்ரா பிரபு (Lord Moira) இந்தியாவிற்கு வந்தார். நம்முடைய வசதிக்காகத் தொடக்கத்திலிருந்தே நாம் அவருடைய பிற்காலப் பட்டப் பெயராகிய ஹேஸ்டிங்ஸ் பிரபு[1] என்பதனையே பயன்படுத்தலாம். கவர்னர்-ஜெனரல் பதவியில் மின்டோ பிரபு என்றுமே பாதுகாப்புடன் இருந்ததில்லை. அவரிடத்து கவர்னர்-ஜெனரலுக்கு இன்றியமையாத ஆற்றல் இல்லாக் குறை இருந்து வந்தது. அதனுடன் தாயகத்தில் எந்தக் கட்சியின் ஆதரவும் அவருக்கு நிலையாகக் கிடைக்கவில்லை.[2] காரன்வாலிசைப் பிட்டும், டண்டாசும் உறுதியாக ஆதரித்துப் போற்றினர். எத்துணைக் காலம் இங்கிலாந்தின் அமைச்சரவை தம்மை ஆதரித்ததோ, அதுவரையில் வெல்லஸ்லி இயக்குநர்களைத் தற்காப்புடன் எதிர்த்து வந்தார். ஷோரும் பார்லோவும் அமைச்சரவையினுல் ஆதரிக்கப்படவில்லை. அவர்களை இயக்குநர்களே அன்புடன் ஆதரித்தனர்; அவ்வாதரவும் நிலையானதாக இல்லை. அதனுல்தான் அவர்கள் ஆற்றல் குன்றியவர்களாக இருக்க நேரிட்டது. எல்லாருடைய அறிவையும் துணையாகக் கொண்டு அமைக்கப்பட்டதும், சிறிது காலமே நிலைத்து நின்றதுமான கூட்டு அமைச்சரவையோடு விக் கட்சியினர் நடத்திய அரசியல் பேரத்தின் பயனுக, அவர்கள் ஹேஸ்டிங்ஸ் பிரபுவை இப் பதவியில் அமர்த்தினர். டோரியின் அமைச்சரவையோ, எதிர்க்கட்சியான விக்குகளின் அமைப்போ, கம்பெனியோ அவரை உறுதியாகப் போற்றி ஆதரிக்கவில்லை. அவர் தலையிடாக் கொள்கையிலிருந்து நெடுந்தொலைவிற்கு விலகிப் போய்விடாமல் பணியாற்றியதனுலும், ஃபிரெஞ்சியருக்கு எதிராகச் செயலாற்றியபொழுது வெற்றிகள் பல பெற்றமையாலும், இந்திய அரசுகளோடு அரசியல் சூழ்ச்சித் திறத்துடன் தொடர்பு கொண்டிருந்தமையாலுந்தான் தொடர்ந்து அவர் பதவியில் இருக்கமுடிந்தது. அவர் எந்தக் குழுவினருடைய கட்சிக்காரராகவும் இல்லை. ஒவ்வொருவரையும் அவர் மன நிறைவு அடையுமாறும்,

[1] அவர் மோய்ராவின் இரண்டாவது கோமகன்; நேப்பாளப் போரிலே அவர் பெருவெற்றி பெற்றமையைப் பாராட்டும் வகையில் 1817-ல் அவர் ஹேஸ்டிங்ஸ் கோமகனுகச் சிறப்புச் செய்யப்பட்டார்.

[2] C. H. Philips, The East India Company, 1784-1834, பக். 177.

வெறுப்புக் கொள்ளுமாறும் மாறி மாறிச் செய்துவந்தார். ஆனால், அவருடைய போக்கு, அவரைத் திருப்பி அழைக்குமாறு செய்யும் அளவிற்கு வெறுப்புண்டாக்குவதாக அமையவில்லை. மின்டோ அலுவலகத்தை நடத்திய முறையில் திறமைமிக்க அரசியல் சமநிலையாகிய மாபெரும் சாதனையைச் சாதித்தார். அவருடைய சிறப்புகளைக் குறைத்துக் கூற விரும்புகின்றவர்கள் இதை மறவாமல் கருத்தில் இருத்த வேண்டும். ஆனால், 1812ஆம் ஆண்டிற்குள் அவருடைய பதவிக்காலம் முடிந்துவிட்டது. ஸ்பென்சர் பெர்சிவல் கொலை செய்யப்பட்டதன் விளைவாக லிவர்பூல் அமைச்சரவையை அமைத்தபொழுது அதைச் சதியாலோசனைகள் சூழ்ந்து கொண்டன. அப்பொழுது அரசரின் பகர ஆட்சியாளர் தம்முடைய மூத்த நண்பர் ஹேஸ்டிங்ஸ் பிரபுவிற்கு ஊதியம் மிகுதியுடைய பதவியொன்றைத் தேடிக்கொண்டிருந்ததைக் கண்டனர். அதே சமயத்தில் சென்னையிலிருந்து கம்பெனி இயக்குநர்கள் சர் ஜார்ஜ் பார்லோவை நீக்குவதற்கு ஆவலுடையவர்களாக இருந்தனர். ஏதோ ஒருவகையான பேரம் பேசப்பட்டது.[1] மின்டோ கோமகனைச் சிறப்புச் செய்யப்படுவதற்கு அழைக்கப்பட்டார். ஸ்காட்லாந்திலுள்ள தம்முடைய மனைவியிடத்துத் திரும்பிச் செல்லும் வழியில் அவர் காலமானார்.

ஐம்பத்தொன்பதாவது வயதில் ஹேஸ்டிங்ஸ் பிரபு இந்தியாவிற்கு வந்தார். அவர் படைவீரர் நிலையிலிருந்து படைத்தலைவர் நிலைக்குப் படிப்படியாக உயர்வு பெற்றவராவார். அவர் மன்னரின் பகர ஆட்சியாளரின் நெருங்கிய நண்பராக இருந்தமையே அவருடைய புகழிற்கும் சிறப்புக்குமுரிய காரணங்களுள் முதன்மையானதாகும். அளவு மீறிச் செலவழிப்பதனால் அவர் சமூகத்திலே ஒருவகையான மதிப்பைப் பெற்றிருந்தார். அவர் வெல்லஸ்லியின் திட்டங்களை எதிர்த்து வந்தவராவர். ஆனால், சூழ்நிலையின் அத்திட்டங்களை முற்றுப்பெறுமாறு செய்வதற்காகவே அவர் அழைக்கப்பட்டார். அவருடைய நாள்வண்ணக் கோலத்திற்கு ஏற்றவகையில் ஏதோ சிறிது கவர்ச்சி இந்தியாவின் தோற்றத்தில் இருப்பதை அவர் கண்டார். படைவீரனைப் பணியாற்றுவதில் வெற்றிபெற முடியாத ஒருவன் சிறந்த போர்க்கலைச் சூழ்ச்சித் திறமுடையவனாக அவருக்குத் (அவருக்கு அவரே தளபதியாக இருந்தார்) தோன்றினான்;

[1] மேற்குறிப்பிட்ட நூலில், பக்கம் 177—8.

முன்னூளைய அரசவைப் பிரபு, விரிந்ததும் பரந்ததுமான நோக்கங்களையுடைய அரசியல் வீரகரானுர்; ஒரு சமயத்துச் சூதாடியாக இருந்தவர், கம்பெனியின் விவகாரங்களைக் கருத்துடன் கவனிக்கும் மேற்பார்வையாளராகச் சிறப்புற்ருர். பகட்டும் ஆடம்பரமுமிக்க நாள்வண்ணக் கோலத்தில் மூழ்கித் திளைத்த மனிதர், மக்களுடைய நல்வாழ்வைப்பற்றி உண்மையிலேயே கவலைப்படுபவர் என்பதை அவர் வெளிப்படுத்திஞர்.

ஹேஸ்டிங்ஸ் இந்தியாவிற்கு வந்து சேர்ந்ததும் அவருக்கு முன்பு பதவியிலிருந்தவரைப்பற்றி மேலிடத்திற்கு வருத்தத்தோடு பல குறைகளையும் குற்றங்களையும் தெரிவித்தார். மின்டோ பதவியைவிட்டு நீங்கிச் செல்லும்பொழுது ஏழு சண்டைகளை உண்டாக்கிவிட்டுச் சென்ருர் என்றும், அவை ஒவ்வொன்றும், 'படைக்கலன்களினுலேயே முடிவுகாணக் கூடியனவாக உள்ளன' என்றும் ஹேஸ்டிங்ஸ் மேலதிகாரிகளிடத்து முறையிட்டுக்கொண்டார். அவற்றுள் மிகக் கடுமையானதாக இருந்தது பிண்டாரியின் அச்சுறுத்தலாகும். அதனுடன் இன்னும் உரிமையுடன் குழப்பமடைந்த நிலையில் உள்ள மராட்டிய அரசுகளுக்கும் இடையே சிக்கலான தொடர்பு இருந்துவந்தது. ஆனல், அந்தப் பிரச்சினைக்கு உடனடியாக முடிவு காணவொட்டாதவாறு ஒத்திப்போடு மாறு நேப்பாளத்தில் ஒரு பிரச்சினை தோன்றியது. கூர்க்காக்களுடைய பிரச்சினை புதிதாகவும் உடனடியாகக் கவனிக்க வேண்டியதாகவும் இருந்தது. இந்த எதிர்பாராத சூழ்நிலை ஹேஸ்டிங்ஸிற்கு நன்மை பயப்பதாகவே முடிந்தது எனலாம். இவ்வாறு அவர் காலந்தாழ்த்த நேரிட்டமையால், அவர் சூழ்நிலையைக் கணித்து மதிப்பிடுவதற்குப் போதிய வாய்ப்பு கிடைத்தது; மிகவிரிவான சிறந்ததொரு திட்டத்தைத் தயாரிக்கவும் தூண்டியது; அத் திட்டம் இந்தியா முழுவதிலும் நிலவிய குழப்பத்தைப் போக்குவதற்குரிய மாமருந்தாகப் பயன்பட்டது. ஒருமுகப்படுத்தப்படாத பல போர்கள் புரிந்து முடிவு காணவேண்டிய அப் பிரச்சினைக்கு அவர் ஒரே முயற்சியில் முடிவு கண்டமை சிறப்புமிக்க செய்தியாகும். 1717ஆம் ஆண்டு முகலாயர்களால் சீக்கியர்கள் அழித்தொழிக்கப்பட்டபொழுது, அவர்களுக்குப் புகலிடமாகப் பயன்பட்டது குன்றுகளும் மலைகளுமேயாகும். பதினெட்டாம் நூற்ருண்டில் குன்றுகளும் மலைகளும் இதற்காகவே பயன்பட்டன. பெரும்பாலும் அவற்றின் நெடுகப் பழைய அரசுகள் தன்னிறைவுடைய எளிமையுடனும், மாறிவரும் நற்பேற்றுடனும் இருந்துவந்தன. அப் பகுதிகளில்

உள்ள இந்துக் கோயில்களுக்குச் சென்றுவரும் யாத்திரிகர்களே அப் பகுதிகளுக்குச் செல்லக்கூடிய வேற்று மனிதர்களாவர். அப்பகுதிகளின் வாணிகப் பொருள்களில் முதன்மையானது அரசரது அவைகளுக்கு எடுத்துச் செல்லப்பட்ட பனிக்கட்டிகளாகும். அக் குன்றுகளின் கிழக்குப்பகுதி சிக்கிமிலிருந்து சட்லெஜ் வரையில் 700 மைல்கள் பரப்புடைய நிலப்பகுதி அகன்று கிடந்தது. சமவெளிகளின் பின்புறமாக நூறு மைல் தொலைவு மூடுபனி மூடப்பெற்ற உயர்ந்த மலைத் தொடர் வரையில் அது பரந்து கிடந்தது. அம் மலைத்தொடர் அயோத்தி அரசின் சிறு பகுதிகளை நீக்கிவிட்டால் பெரிதும் கம்பெனியின் எல்லைப்புறப் பகுதியோடு சேர்ந்தே சென்றுகொண்டிருந்தது. அங்குப் பன்னெடுங்காலமாக மீங்கோலிய இனத்தைச் சார்ந்த பழங்குடி மக்களே வாழ்ந்து வந்தனர். அவர்களைப் பதினைன்காம் நூற்றாண்டில் இந்து இனத்தைச் சேர்ந்தவர்கள் வென்றனர். ஓரளவிற்கு அவர்களோடு மண உறவும் அவர்கள் கொண்டனர். 1786ஆம் ஆண்டில் கூர்க்கா பழங்குடி மக்கள் காட்மாண்டு பள்ளத்தாக்கினைக் கைப்பற்றிக் கொண்டனர். இதை மையமாகக் கொண்டு கிழக்கிலும் மேற்கிலும் உள்ள பகுதிகளை அவர்கள் நிலையாக வன்முறையில் கைப்பற்றி வந்தனர். பத்தொன்பதாம் நூற்றாண்டின் முதலாண்டுகளில் குமோவான், கார்வல், சிம்லா குன்றுகள் ஆகியவற்றை அவர்கள் கைப்பற்றிக்கொண்டனர். ஆனால், சட்லெஜ் ஆற்றுப் பகுதியில் அவர்களை முன்னேற வொட்டாமல் புதிதாகத் தோன்றியுள்ள சீக்கிய அரசு தடுத்து நிறுத்தியது. பின்னர் கூர்க்காக்கள் தங்கள் கருத்தைக் கங்கைச் சமவெளியின் பக்கம் திருப்பினர். உடனடியாக அவர்கள் பிரிட்டிஷாரோடு மோதினர். வெல்லஸ்லி அயோத்தியைக் கம்பெனி இராச்சியத்தோடு இணைத்துக்கொண்டதற்குரிய விலையை இப்பொழுது கம்பெனி கொடுக்க வேண்டியதாயிற்று. ஏனெனில், கம்பெனிக்கு மானியமாகக் கொடுக்கப்பட்டிருந்த கொரக்பூர், பஸ்தி மாவட்டங்களிலேயே முக்கியமான வன்முறைத் தாக்குதல்கள் நடைபெற்றன. கூர்க்காக்கள் கைப்பற்றிய நிலையங்களிலிருந்து விரைவிலே வெளியேற்றப்பட்டனர். ஆனால், 1814ஆம் ஆண்டு பட்வல்லில் புதியதொரு தாக்குதல் நடைபெற்றது. அத் தாக்குதல்தான் ஹேஸ்டிங்ஸை முறையான போர் ஒன்றினை நடத்துவதைத்தவிர வேறு வழியில்லை என்ற முடிவிற்கு வருமாறு செய்தது.

விரிவுபடுத்தப்பட்ட எல்லைப்புறம் முழுவதிலும் நான்கு முனைத் தாக்குதல் நடத்துவதற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்யப்பட்டன. 12,000 கூர்க்காக்களுக்கு எதிராக 34,000 மனிதர்களைக் கம்பெனி பயன்படுத்தியது. இதனுடன் பதவியிலிருந்து விரட்டப்பட்ட மலையரசர்களோடு பேச்சுவார்த்தைகளைக் கம்பெனி தொடங்கியது. இதன் விளைவு மனவெழுச்சியினை உண்டாக்குவதாக இருந்தது. 1814ஆம் ஆண்டின் இறுதியில் நான்கு படைப் பிரிவுகளுள் மூன்று பிரிவுகள் பேரிழப்போடு தோற்கடிக்கப்பட்டன; மேற்குப் பகுதியில் சர் டேவிட் ஆக்டர் லோனியின் தலைமையின்கீழ்ப் போரிட்ட படைதான் சிறிதளவு முன்னேற்றத்தைக் கண்டது. இந்தியா முழுவதும் ஆவலோடு மூச்சுக்கூடவிடாமல் இப் போராட்டத்தைக் கூர்ந்து கவனித்து வந்தது; மராட்டிய அரசவைகளுக்கு இடையே இங்குமங்குமாகத் தூதர்கள் விரைந்து சென்றுகொண்டிருந்தனர். மிகுந்த பொறுமையுடன் ஹேஸ்டிங்ஸ் அவருடைய மலைப்படையினை வலிமைபெறச் செய்துகொண்டிருந்தார். அதே சமயத்தில் சமவெளியில் முன்னெச்சரிக்கையுடன் பிரிட்டிஷ் படையினர் ஓய்வு எடுத்துக் கொள்ளாமல் எதிர்த்துப் போரிட்டு வந்தனர். மீண்டும் நடு இந்தியாவிலும், கிழக்குப் பகுதியிலும் பிரிட்டிஷார் தோற்கடிக்கப்பட்டபோதிலும், ஆக்டர் லோனி ஜெய்தக்கைக் கைப்பற்றினர்; 1815ஆம் ஆண்டு ஏப்ரல் மாதத்தில் கார்டினர் அல்மோராவைக் கைப்பற்றினர். இவ்வாறு சட்லெஜ் ஆறு முதல் காளியாறு வரையில் பரவியிருந்த நிலப்பரப்பு முழுவதையும் அவர்கள் கூர்க்காக்களிடமிருந்து விடுவித்தனர். போரிட முடியாத கோடைப் பருவத்தில் மழை பெய்துகொண்டிருந்தபொழுதெல்லாம் கூர்க்காக்கள் சமாதான உடன்படிக்கை செய்துகொள்ளுவதற்குரிய பேச்சுவார்த்தையைத் தொடங்கிக் காலம் கடத்திக்கொண்டிருந்தனர். இறுதியில் ஓர் உடன்படிக்கை செய்யப்பட்டது. ஆனல், அதைக் கூர்க்காக்கள் அங்கீகரிக்கவில்லை. எனவே, 1816ஆம் ஆண்டுத் தொடக்கத்தில் போர் மீண்டும் தொடங்கியது. இந்தச் சமயம் ஆக்டர்லோனி தலைமைத் தளபதியாக அமர்த்தப்பட்டார். அவர் உள்ளே நுழைய முடியாத கொடுமையான தெரேய் (Terai) காட்டுவெளியினுள் நுழைந்து, பெருந் துன்பப்பட்டுக் காட்மாண்டினை நோக்கி நேராக அணிவகுத்துச் சென்றார். ஒரு மாத காலம் அவர்கள் முற்றுகையிட்டும், பின்னர் போரிட்டும் வந்தனர். அதன் பிறகு கம்பெனியின் படைகள் முறையாகப் பயன்படுத்தப்படுமானல், அதை எதிர்த்துப் போரிட்டுத் தாங்கள் வெற்றி காண முடியாது என்பதைக் கூர்க்காக்கள்

நன்குணர்ந்தனர். எனவே, மார்ச்சு மாதத்தில் முன்பு செய்யப்பட்ட சார்-கௌலி உடன்படிக்கைக்கு அவர்கள் ஒப்புதல் தெரிவித்தனர். அவர்களுடைய வேண்டுகோளை ஹேஸ்டிங்ஸ் மகிழ்ச்சியுடன் வரவேற்றார். மேற்கொண்டு இழப்பீடுகளைத் தருமாறு கூர்க்காக்களை அவர் வற்புறுத்தவில்லை. தெற்கே போர் மேகங்கள் சூழ்ந்துகொண்டிருந்தமையால், ஹேஸ்டிங்ஸ் இந்தப் பொறுப்பிலிருந்து விடுதலை பெறுவது நல்லது என்று கருதினார். இந்த உடன்படிக்கையின்படி, காட்மாண்டுவில் பிரிட்டிஷ் துணைக்காப்பரசின் ஆளுநரை அமர்த்திக்கொள்ளுவதற்குக் கூர்க்காக்கள் உடன்பட்டனர். தெற்கு எல்லைப் பகுதியிலிருந்த தெரேய் காட்டுப் பகுதியில் தாங்கள் கொண்டாடி வந்த பெரும்பாலான உரிமைகளை அவர்கள் கம்பெனியாரிடத்து ஒப்படைத்தனர். மேலும், அவர்கள் அண்மையில் சட்லெஜ்ஜிலிருந்து கோக்ரா வரையில் கைப்பற்றிய பகுதிகளையும் பிரிட்டிஷாரிடத்து ஒப்படைத்தனர். அப் பகுதிகளில் அவர்கள் பழைய குறுநில மன்னர்கள் பலரை அழித்தொழித்துக் கொடுஞ் செயல்கள் பல புரிந்திருந்தனர். அப் பகுதிகளில் கூர்க்காக்கள் புரிந்த கொடுமைகள் அண்மைக் காலம் வரையில் அங்கு வாழ்ந்த மக்கள் உள்ளங்களில் எல்லாம் ஆழப் பதிந்திருந்தன. இவ்வாறு குமோவான், கார்வெல், சிம்லா குன்றுகளும் அரசுகளும் பிரிட்டிஷாரின் கைகளுக்கு வந்து சேர்ந்தன ; சிறப்புமிக்க பிரிட்டிஷ் இந்தியாவின் மலைவாழ்விடம் உருவாவதற்குரிய வழியமைக்கப்பட்டது. சிம்லா குன்றுகளின் அரசுக்குப் பிரதிநிதியாக அமர்த்தப்பட்ட கென்னடி என்பவர் சபத்து (Sabathu) என்னும் இடத்தில் தம்முடைய தலைமை நிலையத்தை நிறுவினார். அங்கிருந்து அவர் சிம்லா முகட்டின் அழகினைக் கண்டுகளித்தார் ; மெல்லிய பூங்காற்றின் இன்பத்தை நுகர்ந்து மகிழ்ந்தார். 1827-ல் சார்லஸ் மெட்கா:ப் கசௌலியின் (Kasauli) பெருமைகளைப் போற்றிப் பாடினார். பென்ட்டிங்கு அவருடைய வடக்குப் பகுதிப் பயணத்தின்போது, மருத்துவர்கள் கோடைகாலத்தில் அவரை ஓய்வெடுத்துக்கொள்ளுமாறு அறிவுரை கூறினர். எனவே, அவர் அந்தக் கோடையைச் சிம்லாவிலே கழித்தார். அப்பொழுது அந் நகரம் மேன்மேலும் வளர்ச்சியுறத் தொடங்கியது. ஆக்லண்டு பிரபு பென்ட்டிங்கின் அடிச்சுவட்டைப் பின்பற்றிக் கோடையில் ‘குன்றுகளில்’ தங்கியபொழுது, ‘நோயாளிகளுக்குரிய உடல்நலம் பெறுமிடத்தை’யும், சோர்வுற்றவர்களுக்கும் சோம்பேறிகளுக்கும் புத்துணர்ச்சி ஊட்டும் நிலையங்களையும், அரசாங்கங்களுக்குக் கோடைகால இருப்

பிடங்களையும் உடையதாக சிம்லா சீரும் சிறப்பும் பெற்றது. புழுக்கம்மிக்க வங்காள, கருநாடகச் சமவெளிகளில் இந்தியா வெற்றி கொள்ளப்பட்டது. இமயமலையின் தேவதாரு மரங்களினுடைய நறுமணத்தைக்கொண்ட மென்காற்றினை உதவியாகக்கொண்டு இந்தியா சற்றேறக்குறைய ஒரு நூற்றாண்டு காலத்திற்கு ஆட்சி செய்யப்பட்டது.

இந்தப் போராட்டம், பிரிட்டிஷாருடைய ஆதிக்கத்தின் வலிமை எத்தகையது என்பதைக் கூர்க்காக்களை உணருமாறு செய்தது. மேலும், இருதிறத்தினருள், ஒருவர் மற்றொருவருடைய பண்புகளை இன்முகத்துடன் போற்றுமாறு அது செய்தது. அவர்களிடையே ஒருவர் மற்றொருவரை மதித்துப் போற்றும் பண்பு இருந்துவந்தமையால், அவர்களிடையே நட்புறவு வளர்வதற்குரிய அடிப்படையை அது அமைத்தது. அந்நட்புறவு பிரிட்டிஷாரின் ஆட்சிக்காலம் முழுவதிலும் அவர்களிடையே நிலவிவந்தமை இங்குக் குறிப்பிடத்தக்கதாகும். இதன் பிறகு கூர்க்காக்கள் தங்கள் தாயகத்து எல்லைக்குள்ளாகவே தங்கள் ஆதிக்கத்தை நிலைநாட்டுவதை நிறுத்திக் கொண்டனர். பல ஆண்டுகள் வரையில் உள்நாட்டுப் பூசல்களிலும் போர்களிலுமே அவர்கள் மூழ்கிக்கிடந்தனர். அதனால், இராசபுதனத்து ராணைக் குடும்பம் அங்கு எழுச்சியுற்றது. 1846ஆம் ஆண்டு அக்குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் அந்நாட்டின் முதன்மந்திரிப் பதவியைக் கைப்பற்றிக் கொண்டனர். அதுமுதல் அரசர் வெறும் மதிப்பற்றவராகவே இருந்து வரலானார். 1949ஆம் ஆண்டில்தான் நேப்பாளத்தின் அரசர் அரசியல் புகழொளியோடு மீண்டும் சிறப்புறத் தொடங்கினார். அவர்களுடைய நாடு ஐரோப்பியர்களுடைய நாட்டோடு மிக நெருக்கமுடையதாக இருந்துவந்தது. அதில் சில விதிவிலக்குகள் இருக்கலாம். இந்தியாவோடு அந்நாடு வாணிகத் தொடர்பு கொள்ளுவது கடுமையாகக் கட்டுப்படுத்தப்பட்டு வந்தது. இருபதாம் நூற்றாண்டு வரையில் அந்நாட்டினுள் சிறிதளவு முன்னேற்றம்கூட உண்டாகவில்லை என்பது இங்குக் குறிப்பிடத்தக்கதாகும். ஆனால், தங்களுடைய துணிகரச் செயல்புரியும் விருப்பத்திற்கும் ஆர்வத்திற்கும் கூர்க்காக்கள் ஒரு வழியைக் கண்டுபிடித்தனர். பிரிட்டிஷாரிடத்துப் பணிபுரிவதே தங்களுக்குப் பொருத்தமான பணி என்று முடிவு செய்தனர். பிரிட்டிஷாரின் இந்தியப் படையில் கூர்க்காக்களின் துணைப்படை, முறையான ஒரு பகுதியாக இருந்துவரலாயிற்று. சிப்பாய்க் கலகம் முதல் அப்படை எல்லாப் போர்களிலும் தனக்கென்று தனிச் சிறப்

புடையதாகப் பேரும் புகழும்பெற்று விளங்கத் தொடங்கியது. ஜப்பானியர்களுக்கு எதிராகப் பர்மாவில் நடத்தப்பட்ட போரில்தான் அவர்களுடைய இராணுவ அறிவுத்திறன் வேறெந்தப் போரைக் காட்டிலும் பேரொளிவிட்டுப் பிரகாசித்தது எனலாம். ஆக்டர்லோனியின் தந்திரம்மிக்க திறமையும், ஹேஸ்டிங்ஸின் திட்டமிடும் மதிநுட்பமும், நேர்மை பிறழாது செயலாற்றும் திறனும் சேர்ந்து இமயமலை எல்லைப்புறத்தை நிலையாகப் பாதுகாக்கும் முயற்சியில் பெரு வெற்றியைத் தேடித்தந்தது. அதனுடன் இந்தியாவில் பிரிட்டிஷாரின் ஆதிக்கம் நிலைபெற்று விளங்குவதற்கு உடலுரனும் உள்ள உரமும் வாய்ந்த வீரர்கள் பலர் ஈடுபாட்டுடன் பணிபுரிவதற்கு வாய்ப்பு அளித்தது.

இப்பொழுது நடு இந்தியாவில் செயல்புரிவதற்குப் போதிய ஓய்வும் வசதியும் உடையவராக ஹேஸ்டிங்ஸ் பிரபு இருந்தார். வெல்லஸ்லி பெருமகனார் பின்பற்றிய முறைகளோடு ஹேஸ்டிங்ஸ் கோமகனார் பின்பற்றிய முறைகளை நாம் ஒப்பிட்டுப் பார்ப்போமானால், ஹேஸ்டிங்ஸ் பின்பற்றிய முறைகளைப்பற்றி வேறுபட்ட கருத்துகள் நம்முடைய உள்ளத்தில் தோன்றுகின்றன. பேரரசை நிறுவ வேண்டும் என்னும் ஆர்வம்கொண்ட வெல்லஸ்லி, நாடுகளைக் கைப்பற்றும் பணியில் விரைந்து ஈடுபடுமாறு வரலாற்றின் கைகளை நெடுங்காலம் வற்புறுத்தவில்லை; அவர் ஆற்றல் அற்றவர்களை ஆற்றல் உடையவர்களுக்கே இயல்பாகவுள்ள இரக்கமற்ற முறையில் கொடுமைப்படுத்தியும், சரளமாகக் கடிந்து உரைத்தும் விளக்கவுரை தந்தும் வந்தார். அதற்கு மாறாக, மிகவும் இடர்ப்பாடான ஒரு நெருக்கடி நிலையை அளவாலும், திட்டத்தாலும், வள ஆதாரத்தாலும் போதிய வழிவகைகளைக் கொண்டு சமாளிக்கும் ஓர் அரசியல் விரகரை நாம் ஹேஸ்டிங்ஸிடம் காணுகின்றோம். ஆனால், அவருடைய முயற்சி அனைத்தும் அவர் முன்னிலையில் உள்ள பிரச்சினையின் அளவையொட்டியே அமைந்திருந்தது. அவர் செய்ய முடிந்தவற்றைச் செய்யாமல் பின்வாங்கியதில்லை; அதைப்போன்றே நேர்மையின் எல்லையைக் கடந்து அவர் செயலாற்றியதும் இல்லை. அழிப்பதிலே ஆர்வம் கொண்டிருந்ததைப்போலவே, அவர் சேமித்துப் பாதுகாப்பதிலும் ஆர்வம் உடையவராக இருந்தார். தக்க காலத்தை அறிந்து செயலாற்றுவதில் அவர் வல்லுநர். முதிர்ந்த வயதின் அறிவுநலத்தை அவர் நன்கு பயன்படுத்திக்கொண்டார். ஆனால், தள்ளாமையினால் உண்டாகும் ஊக்கக் குறைவிற்கு அவர் பலியாகவில்லை.

அவரிடத்துப் பேரரசை நிறுவுவதற்குரிய தெளிந்த நோக்கம் இருந்தது. ஆனால், எப்பொழுதும் அந் நோக்கத்துடன் இணைந்துசெல்லும் பதற்றமோ, இரக்கமற்ற பண்போ அவரிடத்துக் காணப்படவில்லை. பொறுமையாக ஆழ்ந்து சிந்தித்தும், கலந்து ஆராய்ந்தும், திட்டமிட்டும் அவர் ஒவ்வொரு செயலையும் செய்துவந்தார். ஒரு செயலின் பல நிலைகளிலும் கூட்டுறவுடன் பணியாற்றவும், போர் புரியவும் அவர் வாய்ப்பு அளித்து வந்தார். இந்தக் காரணத்தினால்தான், மராட்டியக் கூட்டரசு பிரிட்டிஷாரோடு சேர்ந்து செயலாற்றுவதற்குத் தொடர்புகொள்ள முயன்றிருந்தால் அது ஹேஸ்டிங்ஸ் பிரபுவின் ஆட்சிக் காலத்தில்தான் செய்திருக்க இயலும் என்று சொல்ல முடிந்தது. மராட்டிய ஆதிக்கம் அதனுடைய மடத்தனத்தின் சுமையைத் தாங்க முடியாமல் தானே இறுதியில் வீழ்ச்சியுற்றது.

1814ஆம் ஆண்டு நடு இந்தியாவின் நிலை சீர்கெட்டிருந்ததைப் போல வேறு எப்பொழுதுமே அவ்வாறிருந்ததில்லை. பிரிட்டிஷாரின்மீது வெறுப்பும் நம்பிக்கையின்மையும் எல்லாக் கட்சியினரிடத்தும் பொதுவாகக் காணப்பட்ட மூலக்கூறுகும். சிந்தியா அமைதியற்றவராகவும் பகையுணர்ச்சியுடையவராகவும் இருந்தார்; ஆனால், அவர் அச்சத்துடன் மெல்லச் செயலாற்றிக்கொண்டிருந்தார். பேஷ்வா சூழ்ச்சி செய்துகொண்டிருந்தார். ஆனால், அவர் மனவுறுதியற்றவராக இருந்தார். ஹோல்கார் பல்குழுவாலும் பாழ்செய்யும் உட்பகையாலும் சோர்ந்துபோயிருந்தார். அவர்கள் எல்லாருக்கும் இடையேயும் பட்டாணியர் தலைவன் அமீர்கானும், அவனுடைய வீரர்களும் அலைந்து திரிந்துகொண்டிருந்தனர். மராட்டிய அரசுகளுக்கு உள்ளே பெயரளவில் தங்களுக்குத் தலைவர்களாக இருந்த மராட்டியத் தலைவர்களின்கீழ்ப் பணிபுரிந்துகொண்டிருந்த வேட்டை நாய்களைப் போன்ற பிண்டாரியர்கள் கொலை, தீயிடல், கொள்ளையடித்தல் ஆகிய செயல்களைச் செய்துவிட்டு உடனடியாகத் தலைமறைவாக ஒளிந்துகொண்டிருந்தனர். 1812ஆம் ஆண்டில் அவர்கள் மிராஸ்பூர் மாவட்டத்தைத் தாக்கிக் கொள்ளையிட்டனர். இப்பொழுது நருமதை ஆற்றங்கரையோரத்திலுள்ள அவர்களுடைய பாளையப்பற்றாகிய நேமாவாரில் இன்னும் பெரிய தாக்குதல்களை நடத்துவதற்காகத் திட்டமிட்டுக்கொண்டிருந்தனர். 1814—15ஆம் ஆண்டுகளின் குளிர்காலத்தில் அவர்கள் நைசாமினுடைய இராச்சியத்தின் ஒரு மூலையிலிருந்து மற்றொரு மூலைக்கு இருமுறை படையெடுத்துச் சென்று கொள்ளையிட்டு வந்தனர்;

சென்னை மாநிலத்தின் சில பகுதிகளைக் கொள்ளையடித்தும் வந்தனர். இவ்வாறு தென்னாட்டில் கொள்ளையடித்துவிட்டு அவர்கள் தீங்குறுமல் திரும்பியபொழுது 10,000 பவுன்கள் மதிப்புள்ள கொள்ளையடித்த பொருள்களையும் உடன்கொண்டு சென்றனர். அவர்களால் தாக்கப்பட்ட பகுதிகள் பேரழிவுக்குள்ளாயின. பிரிட்டிஷாருடைய இராச்சியத்திற்குள்ளோ, பிரிட்டிஷாரால் பாதுகாக்கப்பட்ட நாடுகளுக்குள்ளோ அவர்கள் நுழைந்தபொழுது அவர்கள் அச்சத்தை உண்டாக்காது குழப்பத்தை உண்டாக்கியும், தொல்லை கொடுத்தும் வந்தனர். அதனால், எதிர்த்துத் தாக்குவது தவிர்க்கமுடியாததாயிற்று. கம்பெனியின் மெல்ல நகர்ந்து செல்லும், ஒழுங்கும் கட்டுப்பாடும் மிக்க படைகளுக்கு அகப்படாமல் அவர்கள் நழுவித் தப்பியோடினர். மராட்டியருக்கு எதிராக அவுரங்கசீபின் படைகள் ஆற்றலற்றுப் போனதைப்போன்று, முறையாகப் பயிற்றுவிக்கப்பட்ட ஒழுங்குணர்வும், கட்டுப்பாடும் உடைய கம்பெனியின் படை பிண்டாரியரை எதிர்த்து நிற்க முடியவில்லை. பலர் தனித்தனியாக எதிர்த்துப் போரிடுவதே ஓரளவிற்குப் பயன் தருவதாக அமைந்தது. ஆனால், இப்பொழுது பிரிட்டிஷார் ஒருமுகப்படுத்தப்பட்ட பல ஆற்றல் மிக்க நிலையங்களைக்கொண்டு செயலாற்றத் தொடங்கினர். அதன் விளைவாக ஒரு நிலையத்தில் பிண்டாரியர் தப்பியோடிவிட்டால், உடனே அவர்கள் சென்ற வழியிலுள்ள மற்றொரு நிலையத்திற்கு அறிவித்தவுடன் அங்குள்ளவர்கள் பிண்டாரியர்களை எதிர்பாராவகையில் தாக்கி அழித்தனர். போரிடும் திறமையற்றவர்களாகப் பிண்டாரியர் இருந்தமையால், சிறு படையினரே அவர்களை வழிமறித்துப் போரிட முடிந்தது. நாட்டுப்புற மக்கள் பிண்டாரியரிடத்துக் கொண்டிருந்த வெறுப்புணர்ச்சி அவர்கள் சிதறியோடியபொழுது அடைக்கலம் தராமல் ஆங்கிலேயருக்கு அவர்களைக் காட்டிக்கொடுத்தனர். 1816—17ஆம் ஆண்டுகளில் பிண்டாரியரைப் பிடிப்பதற்குரிய கண்ணியை ஆங்கிலேயர் மிகப் பரவலாக விரித்து வைத்தனர். பிண்டாரியரின் குடியிருப்புகள் கொள்ளையிடப்பட்டன. அவை வெளியுலகத் தொடர்பற்ற வகையில் துண்டிக்கப்பட்டன. அவமதிப்படைந்த நிலையில் அவர்கள் முதுகிட்டு நேமவாருக்கு ஓடினர். அவர்களை இறுதியாக அடியோடு அழித்தொழிப்பதற்குரிய ஏற்பாடுகள் இப்பொழுது செய்யப்பட்டன. சென்னையை பிண்டாரியர் தாக்கினர் என்ற செய்தி லண்டன் மாநகரை அதிர்ச்சியுறச் செய்தது. எனவே, இயக்குநர்கள் பிண்டாரியரை அடக்கியொடுக்க உடனடியாக நடவடிக்கை எடுக்குமாறு அறிவித்

தனர். 1817—18ஆம் ஆண்டுகளின் குளிர்காலத்தில் அவர்களை ஒழித்துக்கட்டுவதற்குரிய விரிவான திட்டமொன்றை ஹேஸ்டிங்ஸ் தீட்டினர்.

இதற்கிடையில் மராட்டியர் வாளா இருக்கவில்லை. 1815ஆம் ஆண்டில் போபாலைத் தாக்கப்போவதாகச் சிந்தியா அச்சுறுத்தினர். ஆனால், பிரிட்டிஷார் போபாலை ஆதரிக்கின்றனர் என்பதை அறிந்தவுடன் அவர் முற்றுகையைக் கைவிட்டார். இதே காரணத்தினால்தான் 1816ஆம் ஆண்டு அமீர்கான் ஜெய்ப்பூரைத் தாக்குவதாக இருந்த திட்டம் கைவிடப்பட்டது. ஆனால், உண்மையான ஆர்வத்திற்குரிய மையமாகப் பூனா விளங்கியது. 1815ஆம் ஆண்டில் ஜூலை மாதத்தில் கூர்க்காக்களின் பிரச்சினை ஒரு முடிவிற்கும் வராமல் இருந்தபொழுது, பரோடாவைச் சேர்ந்த கெய்க்குவாரின் தூதரான கங்காதர சாஸ்திரி, பந்தர்பூர் கோயிலில் படுகொலை செய்யப்பட்டார். பேஷ்வாவிடமிருந்து அகமதாபாத்தை உரிமையாகப் பெற்றிருந்தவரும், பேஷ்வாவிற்கு மிகவும் வேண்டியவருமான திரிம்பக்ஜி திட்டமிட்டு கங்காதர சாஸ்திரியைக் கொலைசெய்தார் என்பது புலனாயிற்று. ஏனெனில், சாஸ்திரி நேர்மையான முறையில் உடன்பாட்டைக் காணவந்த வழக்கிலே, திரிம்பக்ஜி பெரிதும் கவலைகொண்டிருந்தார். சாஸ்திரி தமக்கெதிராக முடிவுசெய்துவிட்டால் என்ன செய்வது என்னும் அச்சத்தாலும், தன்னலத்தாலும் அவரைக் கொலை செய்தார் திரிம்பக்ஜி. பூனாவில் துணைக் காப்பு அரசின் ஆளுநராக இருந்தவர் மவுன்ட்-ஸ்டூவர்ட் எலிபின்ஸ்டன் என்பவராவர். நிகழ்ச்சிகளின் நெருக்கடி காரணமாகவும் அதிகார நிலையில் காலம் தாழ்த்தப்படுவதாலும் கவர்னர்-ஜெனரலுடைய விருப்பங்களை உய்த்துணர வேண்டிய நெருக்கடி இருந்துவந்தபோதிலும், அவர் குற்றமற்ற திறமையுடன் பிரிட்டிஷாருடைய வழக்கினை நடத்தினர். திரிம்பக்ஜியைச் சிறைப்படுத்துமாறு அவர் வற்புறுத்தினர். மேலும், அந்தக் கொலைகாரனை சால்செட்டு சிறைச்சாலையில் வைத்துக் கண்காணிப்பதற்காகப் பிரிட்டிஷாரிடம் ஒப்படைக்குமாறு அவர் அறிவுறுத்தினர். அவர் முயற்சி ஒருவரையொருவர் புரிந்துகொள்ளுதல், சமரச உடன்பாட்டை நாடுதல், வற்புறுத்துதல் முதலியவைமூலம் செப்டம்பர் மாதத்தில் நிறைவேற்றப்பெற்றது. அடுத்த வசந்த காலத்திற்குள் நேப்பாளப் போரும் முடிவுற்றது. ஹேஸ்டிங்ஸ் அரசியல் சூறாவளி ஒன்று ஓய்ந்ததைக் கண்டார்; எதிர்பாராத நல்லதொரு வாய்ப்புக் கிடைத்ததை அவர் நன்முறையில்

பயன்படுத்திக்கொள்ள விரும்பினார். சிக்கல் மிகுந்த மராட்டியப்-பிண்டாரியரின் விவகாரத்தினை ஒரு முடிவிற்குக் கொண்டுவருவதற்கு அவர் இவ் வாய்ப்பினைப் பயன்படுத்திக் கொண்டார். 1816ஆம் ஆண்டு மார்ச் மாதத்தில் நாகபுரியில் இருந்த இரண்டாம் இராகோஜி பான்ஸ்லே இயற்கையெய்தினார். அவருடைய நெருங்கிய உறவினரான அப்பா சாகிபு என்பவர், இராகோஜியினுடைய ஆற்றலற்ற மகனான பார்சாஜிக்குத் தாம் மன்னர் ஆட்பேராக இருக்க வேண்டும் என்னும் நோக்கத்தோடு பிரிட்டிஷாரோடு துணைப்படைத் திட்ட உடன்படிக்கை ஒன்றைச் செய்துகொண்டார். ஆனால், இரண்டு ஆண்டுகளுக்கு முன்பு அவருடைய மாமனான இராகோஜி இவ் உடன்படிக்கையைச்செய்துகொள்ள மறுத்து விட்டார் என்பது இங்கு நினைவுகூரத்தக்கது. ஹேஸ்டிங்ஸினுடைய அரசியல் அதிகாரிகள் மிகச் சிறந்த முறையில் பணியாற்றினர். பூனாவிலிருந்துவந்த எலிபின்ஸ்டன் முதன்மையான ஆட்சிப் பணியாளராகக் கருதப்பட்டார். அவருக்கு அடுத்த நிலையில் தில்லியில் மெட்கா:ப் (Metcalfe) என்பவர் சிறப்புற்று விளங்கினார். நாகபுரியில் இருந்த ஜெங்கின்ஸ் என்னும் அதிகாரி மூன்றும் நிலையில் வைத்துப் போற்றப்பட்டார். அவ் உடன்படிக்கை ஜூலையில் ஒப்புக்கொள்ளப் பட்டது. அதன்படி நாகபுரியில் துணைப்படை ஒன்று நிலையாக நிறுத்தப்பட்டது. மேலும், பிரிட்டிஷாரின் அறிவுரையின் பேரில் மராட்டியத் துணைப்படை ஒன்று பிரிட்டிஷாரின் படைப்பிரிவுகளுள் ஒன்றாக அமைக்கப்பெற்றது. இவ்வாறு பிண்டாரியருக்கு விரிக்கப்பட்ட வலை இறுக்கப்பட்டது. எஞ்சிய மராட்டியச் சக்திகளை ஒரு முயற்சியில் அடக்கிவிட முயலுகின்றபொழுதே, ஹேஸ்டிங்ஸ் பிண்டாரியரை அழித்தொழிப்பதற்குரிய தம்முடைய சிறப்புமிக்க திட்டப்படி செயலாற்றத் தொடங்கினார்.

1817ஆம் ஆண்டின் முதலிரு மாதங்களில் அவருடைய திட்டம் நன்கு உருப்பெற்றது. 1,00,000-த்திற்கு மேற்பட்ட படைவீரர்கள் பயன்படுத்தப்பட்டனர். அவர்களை இரு பெரும் குழுக்களாக அவர் பிரித்து இருந்தார். இந்துஸ்தானத்தின் வடக்கில் நான்கு படைப்பிரிவுகளை அவர் கங்கை-யமுனை வரிசையில் மேற்கே ரேவாரியிலிருந்து (ஆக்டர்லோனியின் தலைமையின்கீழ்) ஆக்ரா, எட்டாவா வழியாகக் கான்பூருக்கு மேற்காக களிஞ்சர் (Kalinjar) கோட்டை வரையில் நிறுத்தி இருந்தார். இவை ஒவ்வொன்றும் தன்னிறைவு பெற்ற படைப் பிரிவுகளாக இருந்தன.

அவற்றின் விருப்பப்படியே செயலாற்றும் உரிமையுடையன வாக அவை இருந்தன. இவற்ருேடு, ரேவாவிலும் (Rewa), பீகாரின் தென்பகுதியிலும் இரண்டு பார்வைப் பட்டாளங்கள் நிறுத்தப்பட்டிருந்தன. இந்தக் குழுவிற்கு ஹேஸ்டிங்ஸ் தாமே தலைமை தாங்கிஞர். அவர் எட்டாவாப் படைகளின் பாசறையிலேயே தங்கியிருந்தார். தெற்கே உள்ள தக்கணத்தில், சர் தாமஸ் ஹிஸ்லாப்பு என்னும் படைத் தலைவரின்கீழ் நான்கு படைப்பிரிவுகள் நிறுத்தப்பட் டிருந்தன. அவை நருமதையாற்றங் கரையோரத்தில் உஷங்காபாத், சிந்தியா என்னும் இடங்களிலும், பீராரிலும் காந்தேஷிலும் நிறுத்தப்பட்டிருந்தன. சென்னை மாநிலத்தி லிருந்த அடோனி (Adoni) என்னும் இடத்தில் சர் தாமஸ் மன்ரோவின் தலைமையின்கீழ் சேமப்படை ஒன்று நிறுத்தப் பட்டிருந்தது. ஹிஸ்லாப்பிற்கு அரசியல் மதியுரைஞராக சர் ஜான் மால்கம் அமர்த்தப்பட்டிருந்தார். குஜராத்தில் மற்ருெரு படைப்பிரிவு அமைக்கப்பட்டது. கிழக்கிலிருந்தோ, வடமேற்கிலிருந்தோ முதுகிட்டு ஓடிவரும் கொள்ளைக் கூட்டத் தினரை மூலைக்கு ஒருவராகச் சிதறியோடுமாறு விரட்ட வேண்டியது இப் படைப் பிரிவின் கடமையாக ஒப்படைக்கப் பட்டது. இவை அல்லாமல் ஆற்றல்மிக்க முக்கிய மையங் களாகிய பூனுவிலும் நாகபுரியிலும் இரண்டு துணைப்படைத் திட்டத்தின்படி நிறுத்தப்பட்டிருந்த படைகள் இருந்தன. அவை ஐயப்பாட்டிற்கு இடமான பற்றுறுதிகொண்ட அப் பகுதிகளிலேயே இருந்துவந்தன.

1817ஆம் ஆண்டு மழைகாலத்திற்குப் பிறகு தாக்குதல் தொடங்கியது. ஒரே சமயத்தில் நருமதைப் பள்ளத்தாக்கி லுள்ள பிண்டாரியரை அவர்களுடைய நடமாடும் இடத்தி லிருந்து விரட்டுவதற்காகத் தெற்கு, மேற்கு, வடக்கு ஆகிய திசைகளை நோக்கிப் படைகள் முன்னேறிக்கொண்டிருந்தன. பலதிறப்பட்ட சக்திகளும் இம் முயற்சியில் பிரிட்டிஷாரோடு ஒத்துழைப்பதனுல் பிரிட்டிஷாருடைய ஆட்சிப் பகுதியிலிருந்து பிண்டாரியர் தப்பியோடி மறைந்துகொள்ள முடியாமல் போயிற்று. அவர்களுடைய குடும்பங்களுக்கு அடைக்கலம் தேடாமலும் அவர்களால் இருக்கமுடியவில்லை. எனவே, அவர்கள் இழந்த வலிமையைத் திரும்ப அடைவதற்கும், தங்கள் இருப்பிடங்களை நோக்கிப் புறமிட்டு ஓடிவந்தனர். அதே சமயத்தில் நடு இந்தியாவின் அரசியல் சக்திகளாக இருந்துவந்த சிந்தியா, ஹோல்கார் ஆகிய இருவரும் போபாலைச் சேர்ந்த மராட்டியத் தலைவரும் மற்றும் சிறிய

அரசுகளின் தலைவர்களும் பிரிட்டிஷாரோடு ஒத்துழைக்குமாறு அழைக்கப்பட்டனர்; அல்லது பிரிட்டிஷாரை எதிர்த்துப் போரிடுவதற்கு ஆயத்தமாக இருக்குமாறு அறிவிக்கப் பட்டனர். அமீர்கான் கைப்பற்றியிருந்த நிலப்பகுதிகளை எல்லாம் அவனுக்கே உரியதாக ஒப்படைத்து, அவனைப் பிண்டாரியருக்கு உதவி செய்யவொட்டாதவாறு ஹேஸ்டிங்ஸ் தடுத்து நிறுத்தினார். பேஷ்வாவையும், பான்ஸ்லேயையும் இப் போராட்டத்தில் தலையிடத் தூண்டும் அவாவிலிருந்து அவர்களைத் தடுத்து நிறுத்தும் பணியினை, துணைப்படைத் திட்டத்தின்படி தனிப்பட்ட பிரிட்டிஷ் படையினைத் தங்களுக்கு உதவியாகப் பெற்றிருந்த துணைக்காப்பரசின் ஆளுநர்கள் திறமையாக கவனித்து வந்தனர். பரவலாக நிறுத்தப்பட்ட படை, தனித்தனியாக அமைக்கப்பட்ட மையங்கள், நெடுந் தொலைவில் நிறுத்தப்பெற்றுள்ள சேமப்படை ஆகியவற்றோடு கூடிய அந்தத் திட்டம் மன உறுதியும், ஊக்கமும், சுறுசுறுப்பும் கொண்ட பகைவரை எதிர்த்துப் போரிடுவதற்கு மடத்தன மான திட்டமாகத் தோன்றியிருக்கலாம். இளைஞராகிய போனபார்ட்டே போன்றவர்கள் ஒத்த ஆற்றலுடைய படை களுடன் எதிர்த்துப் போரிட்டிருந்தால் அத் திட்டம் குறை பாடுடையது என்று மெய்ப்பித்து இருக்கலாம். ஆனால், அங்கு நெப்போலியனும் இல்லை; நெப்போலியனைப் போன்ற ஒருவர் இருப்பதற்குரிய அறிகுறியும் இல்லை; அல்லது பிரிட்டிஷாருடைய படைகளோடு ஒப்பாகக் கூறக்கூடிய படை களும் அவர்களிடம் இல்லை. விரைவாக இயங்கக்கூடிய பகைவர்களால் எதிர்த்து நின்று போரிட இயலவில்லை; எதிர்த்து நின்று கடுஞ்சமர் புரியக்கூடிய பிரிட்டிஷ் படை யினரால் விரைந்து இயங்க முடியவில்லை. அத் தலைவர் களிடையே, மனவுறுதிப்பாட்டிற்கு மாறாகச் சீற்றமும் நம்பிக்கையற்ற போக்கும் இருந்துவந்தன. அவர்களுக்கு இடையே பொதுவான உயர்ந்த குறிக்கோள் இல்லை. பிரிட்டிஷாரிடத்து வெறுப்புணர்ச்சி கொண்டிருந்ததைத் தவிரப் பொதுவான எத்தகைய உணர்ச்சியும் அவர்களிடத்து காணப்படவில்லை. அவர்களுள் மராட்டியர் பகுதியைச் சார்ந்தவர்கள் தாம் தேசிய இனச் செருக்குடையவர்களாக இருந்தனர். எனவே, அத் திட்டம் நோக்கங்கள் பலவற்றையும் ஈடேற்றுவதற்குரிய வழிவகைகளைத் தம்மகத்தே கொண்ட தாகவும், எத்தகைய சூழ்நிலைகளை அது எதிர்த்துச் சமாளிக்க வேண்டுமோ அவற்றிற்கேற்பவும் அது அமைக்கப் பெற்றிருந்தது. ஏற்றத்தாழ்வான எண்ணற்ற சக்திகளைச் சந்திக்க நேரிடும் என்பதை ஹேஸ்டிங்ஸ் நன்கு அறிந்

திருந்தார். அச் சக்திகள் ஒவ்வொன்றும் எத்துணை அளவிற்கு பிரிட்டிஷாரை வெறுக்கின்றனவோ, அத்துணை அளவிற்கு அவற்றுள் ஒன்று மற்றொன்றை வெறுத்து வருகிறது என்பதையும், ஒருமுகப்படுத்தப்பட்ட செயல்முறையின் மூலம் அவற்றை ஒரே சமயத்தில் அச்சுறுத்தவும் தோற்கடிக்கவும் முடியும் என்பதையும் அவர் நன்குணர்ந்திருந்தார். அவற்றைத் தனித்தனியே தாக்குவது எய்முல், அவை விரைந்து இயங்கும் ஆற்றல் உடையனவாக இருப்பதாலும், பலதிறப்பட்டனவாக இருப்பதாலும் முடிவின்றி அவை திரும்பத் திரும்ப ஒன்றுசேருவதையும், குழுக்களாக அமைவதையும் தடுக்க முடியாது என்று ஹேஸ்டிங்ஸ் கருதினார். அரசியல் சக்திகளைப் பிரித்து வேறுபடுத்துவதனால் உண்மையாக உண்டாகக்கூடிய இடர்ப்பாடுகள் ஒன்றும் இல்லை. ஆனால், எதிர்த்துப் போரிடுபவர்கள் தங்கள் ஆற்றல் அனைத்தையும் ஒருமுகப்படுத்திப் போரிடுபவர்களாக இருக்க வேண்டும். தனிப்பெருந் திறமை வாய்ந்த அதிகாரிகளைத் தேர்ந்தெடுத்து, தமக்கு உதவியாளர்களாக அவர்களை அமர்த்திக்கொண்டிருந்த ஹேஸ்டிங்ஸிற்கு அத்தகைய தகுதியும் திறமையும் வாய்த்திருந்தமை பிரிட்டிஷாரின் நற்பேறாகும்.

விரிவாகவும், நெகிழ்ச்சியுடையதாகவும் திட்டங்களைத் தீட்டுவதிலே ஹேஸ்டிங்ஸ் மாபெரும் நிபுணராவார். இப்பண்புகளே அவருக்கு வெற்றியைத் தேடித்தந்தன. அத்திட்டம் உருவாக்கப்பட்டுக்கொண்டிருந்த காலத்திலேயே நிகழ்ச்சிகளுக்கு ஒரு புதிய திருப்பம் ஒன்று உண்டாயிற்று. 1816ஆம் ஆண்டு அக்டோபர் மாதத்தில் சால்செட்டிலுள்ள தானாவின் சிறையில் இருந்த திரிம்பக்ஜி தப்பியோடிய சுவைமிக்க நிகழ்ச்சியே ஒரு திருப்பு மையத்தை உண்டாக்கியது.[1] அவ்வாண்டின் வசந்த காலத்திற்குள் அவர் படையொன்றைத் திரட்டிக்கொண்டிருந்தார். ஆனால், பேஷ்வா அவ்வுண்மையை மறுத்துக்கொண்டிருந்தார். அவரைச் சிறைப்படுத்த முடியாத தம்முடைய திறமையற்ற போக்கினை, உண்மையை

[1] பெரும் பாதுகாப்பிற்காகப் பிரிட்டிஷ் படைவீரர்கள் திரிம்பக்ஜியைக் காவல் புரிந்துவந்தனர். சிறைச்சாலையின் சன்னலுக்கு வெளியே குதிரைக் கொட்டிலில் வேலை செய்யும் ஒருவன் எவ்வாறு திரிம்பக்ஜி தப்பியோடுவது என்பதைப்பற்றிய செய்திகளை மராட்டிய மொழிப் பாடலாகப் பாடிவந்தான். அதைக்கேட்ட திரிம்பக்ஜி, அப்பாடலில் குறிப்பிட்ட முறைப்படி தப்பியோடினன்.

மறுப்பதன் மூலம் பேஷ்வா வெளிப்படுத்தினர். எலிபின்ஸ்டன் திரிம்பக்ஜியைச் சிறைப்படுத்துமாறு பேஷ்வாவை வற்புறுத்தினர். அதன் விளைவாகப் பஸ்ஸீன் உடன்படிக்கைக்குப் பதிலாக மிகவும் கடுமையான உடன்படிக்கை ஒன்று செய்து கொள்ளப்பட்டது. நெருக்கடியான சில வாரங்களுக்குப் பிறகு, பாஜிராவ் மீண்டும் நடுக்கம் கொண்டார். எனவே, 1817ஆம் ஆண்டு ஜூலை மாதத்தில் புது உடன்படிக்கை செய்யப்பட்டது. திரிம்பக்ஜி பதவியிலிருந்து நீக்கப்பட்டார். பஸ்ஸீன் உடன்படிக்கையின்படி நிலைநிறுத்த வேண்டிய ஆனல், இன்னும் நிலைநிறுத்தப்படாத பேஷ்வாவின் துணைப் படையை நிறுவிப் பேணிக் காப்பதற்காகத் திரிம்பக்ஜியின் இராச்சியம் பிரிட்டிஷாரிடத்து ஒப்படைக்கப்பட்டது. பேஷ்வாவின் அவையிலே இருந்துவந்த அயல்நாட்டுப் பிரதிநிதிகளைப் பதவியிலிருந்து நீக்குமாறு ஆங்கிலேயர் வற்புறுத்தினர். இவையெல்லாவற்றையும்விட, மராட்டிய நாடுகளின் கூட்டரசிற்குப் பேஷ்வா தலைவராக இருந்துவந்ததை, ஆங்கிலேயர்கள் ஏற்றுக்கொள்ளவில்லை. அது பாஜிராவிற்குப் பெருஞ் சீற்றத்தை உண்டாக்கியது. ஆனல், அடக்கியொடுக்க முடியாத மராட்டியத் தலைவர்களின் தலைவராக இருந்ததனல் பேஷ்வாவிற்கு உண்டாகக்கூடிய பழியையும், மதிப்பின்மையையும் காட்டிலும், இந்நிலையே சிறந்ததாக ஆங்கிலேயர்களால் கருதப்பட்டது. இந் நிகழ்ச்சிகள் யாவும் மெல்ல நடைபெற்றுக்கொண்டிருக்கின்றபொழுது ஆற்றலற்ற பான்ஸ்லே பரசாஜி 1817ஆம் ஆண்டின் ஃபிப்ரவரி மாதத்தில் படுகொலை செய்யப்பட்டார். போட்டியின்றி இப்பொழுது ஆட்சித் தலைவரான அப்பா சாகிபு பிரிட்டிஷாருடைய உதவியும் ஆதரவும் தமக்குத் தேவையில்லை என்று கருதினர். எனவே, அவர் பொறுமையிழந்து பதற்றத்துடன் துணைப்படைத் திட்ட உடன்படிக்கைக்கு மாருகச் செயலாற்றத் தொடங்கினர்.

1817ஆம் ஆண்டு அக்டோபர் மாதத்தில் ஹேஸ்டிங்ஸ் படைகளுடன் அணிவகுத்துச் செல்லத் தொடங்கினர். பிண்டாரிகளுக்கு எதிராகத் தம்மோடு சிந்தியா ஒத்துழைக்கின்ருரா? இல்லையா? என்பதைத் தெரிவிக்குமாறு ஹேஸ்டிங்ஸ் அவரை வற்புறுத்தினர். இராசபுத்திர அரசுகளின் விவகாரத்திலோ, போர்களிலோ தலையிடுவதில்லை என்று சூர்ஜி அர்ஜுன்கான் உடன்படிக்கையில் கையெழுத்திட்டபடி, கட்டுப்பட்டு நடக்கப்போகிருரா? இல்லையா? என்பதை அறிவிக்குமாறு அவர் வேண்டினர். பழக்கமான உணர்ச்சி

வயப்பட்ட தயக்கத்திற்குப் பிறகு சிந்தியா நவம்பர் 5ஆம் நாள் அதற்கு உடன்பட்டார். அதன் விளைவாக அவர்கள் ஆர்வத்தோடு அணைத்துக்கொண்டிருந்த இராசபுத்திர அரசு களோடு தொடர்பு கொள்ளுவதற்குரிய வழி ஒழுங்குபடுத்தப் பட்டது. சில மாதங்களுக்குள்ளாகத் தில்லியில் இருந்து வந்த மெட்கா∴ப் இராசபுத்திர அரசர்களுள் பத்தொன்பது பேர்களோடு உடன்படிக்கை செய்துகொண்டார். அவற்றுள் ஜெய்ப்பூர், உதயபுரி, ஜோத்பூர் ஆகியவையும் சேர்ந்திருந்தன. அதே சமயத்தில் போபால், துணைப்படைத் திட்ட உடன் படிக்கை செய்துகொள்ளுவதற்கு இசைந்தது. தம்முடைய இராச்சியத்தில் தாம், தொங்கின் (Tonk) நவாபாக இருப் பதை உறுதிப்படுத்துவதானால், அமீர்கான் படைக் கலைப் பிற்கு உடன்படுவதாகத் தெரிவித்தான். அதற்கு ஹேஸ்டிங்ஸும் இசைந்தார். இதுவரையில் வெற்றி ஒளிமய மாகத் திகழ்ந்தது. ஆனால், சிந்தியா என்றைக்கு உடன் படிக்கையில் கையெழுத்து இட்டாரோ, அன்றே தடுமாற்றம் மிக்க பேஷ்வா இறுதியாகத் தாக்குவதென்று முடிவு செய்தார். எலிபின்ஸ்டன் மிகுந்த பொறுமையுடன் நடந்து கொண்டார். பூனாவிலுள்ள படையினைத் தாக்குவதற்கு முயன்றபொழுது பேஷ்வாவின் படையினை கிற்கியில் படுதோல்வியடையச் செய்தார். எதிர்த் தாக்குதலைச் சமாளிக்க முடியாத பேஷ்வா தெற்கு நோக்கி முதுகிட்டு ஓடினார். சில நாட்களுக்குள் அப்பா சாகிபு தம்முடைய துணைப்படைத் திட்டப் படைகளைத் தாக்கினார். சிட்டபால்டி குன்றுகளில் அவர் தோற்கடிக்கப்பட்டார்.[1] பின்னர் ஹோல் காரின் முறை வந்தது. சிந்தியாவிற்கு அளிக்கப்பட்ட சலுகைகளை மன்னரின் ஆட்பேராட்சியினர் ஹோல்காரின் சார்பில் ஏற்றுக்கொள்ள முன்வந்தனர். ஆனால், பட்டாணியக் கட்சியினர் ஹோல்காரை அடக்கியொடுக்கினர். மன்னரின் ஆட்பேரான துளசிபாய் கொலை செய்யப்பட்டார். மகித புரியில் இருந்த படைகளோடு மன்னரின் படையும் சேர்ந்து கொண்டு போரிட்டன. அதன் விளைவாக டிசம்பர் 21ஆம் நாள் அவை தோற்கடிக்கப்பட்டன. அவ்வாண்டு இறுதிக் குள்ளாக மராட்டிய நாடுகளின் கூட்டரசு அழிவுற்றது. அதன்

[1] அவர் மீண்டும் பதவியிலமர்த்தப்பட்டார். பின்னர் ஹேஸ் டிங்ஸ் அவரைப் பதவியிலிருந்து நீக்கினார். சிறிது காலம் அவர் கொரில்லாப் போர் புரிந்தார். இறுதியில் இரஞ்சித் சிங்கின் அவையில் அடைக்கலம் அடைந்து, இருக்கும் இடம் தெரியாமல் அவர் மறைந்துபோனார்.

தலைவர்கள் தோற்கடிக்கப்பட்டனர்; அல்லது அடிமைக ளாக்கப்பட்டனர். பிண்டாரியரை ஒழித்துக்கட்ட வேண்டிய பணி ஒன்றுதான் எஞ்சி நின்றது; மராட்டிய ஆதிக்கத்தின் எச்சங்கள் சிலவற்றை அழித்தொழிக்கவேண்டியும் இருந்தது. அஷ்தி, கோரிகான் என்னும் இடங்களில் தோற்கடிக்கப்பட்ட பேஷ்வா இறுதியாக ஜூன் 2ஆம் நாள் சர் ஜான் மால்கா மிடம் அடைக்கலம் அடைந்தார். பிண்டாரியர் தங்களுடைய பழக்கமான வேகத்துடன் இங்குமங்குமாகத் திரிந்துகொண் டிருந்தனர்; சிலர் ஹேஸ்டிங்ஸ் விரித்திருந்த வலைக்குள் சிக்கிக் கொண்டனர். அவர்களுடைய குழுக்கள் பிரிட்டிஷாரால் சிதறியோடும்படி செய்யப்பட்டன. நெடுங்காலம் தொடர்ந்து இப் போரில் ஈடுபடுவது இடர்ப்பாடாகத் தோன்றியது. பிண்டாரியரின் தலைவர்களுள் அஞ்சா நெஞ்சம் படைத்த சித்து (Chithu) பிரிட்டிஷாரின் தாக்குதலை எதிர்த்துப் போரிட முடியாமல் காட்டிற்கு ஓடியபொழுது, அங்குப் புலியினால் தாக்கப்பட்டு இறந்தான். 1819ஆம் ஆண்டு மார்ச்சு மாதத்தில் அசிர்காரின் வீழ்ச்சியோடு அப் போராட்டம் முடி வுற்றது.

நாம் இப்பொழுது 1818ஆம் ஆண்டில் செய்துகொள்ளப் பட்ட உடன்படிக்கையைக் காணலாம். பேஷ்வாவுடன் உண்டான பிளவு மிகப் பெரிதாகிவிட்டது. அவருடைய இராச்சியப் பகுதிகள் கம்பெனியினுடைய நாட்டுப் பகுதி யோடு இணைக்கப்பட்டன. மால்காமினுடைய பெருந்தன்மை யினால் பேஷ்வாவிற்கு ஆண்டிற்கு எட்டு இலட்சம் ரூபாய் ஓய்வுக்கால ஊதியமாக அளிக்கப்பெற்றது. இச் செயல் ஹேஸ்டிங்கிற்குப் பெரு வருத்தத்தை அளித்தது. ஓய்வூதியம் பெற்ற பேஷ்வா கங்கைக்கரையோரத்திலுள்ள பெட்னர் (Bednur) என்னும் இடத்தில் தம்முடைய இருப்பிடத்தை அமைத்துக்கொண்டார். அங்கு 1851ஆம் ஆண்டு வரையில் அவர் வாழ்ந்துவந்தார். அவருக்குப் பிறகு அவருடைய வளர்ப்புப் பிள்ளையாகிய நானா சாகிப்பிடம் தம்முடைய உரிமைகளையும் குறைகளையும் ஒப்படைத்துவிட்டுச் சென்றார்.[1] சிவாஜியின் மரபிலே வந்த ஒருவரை மராட் டியரின் தலைவரெனப் பெயரளவிற்குப் பட்டம் சூட்டி, அவரை சதாராவில் அரசராக ஹேஸ்டிங்ஸ் அமர்த்தினார். இப் பகுதி

[1] Kaye என்பவர் எழுதியுள்ள Mutiny என்னும் நூலின் (1897 பதிப்பு) முதல் தொகுதியில் 73ஆம் பக்கம் பார்க்க.

நீங்கலாகப் பேஷ்வாவினுடைய மற்றப் பகுதிகள் எல்லாம் பம்பாய் மாநிலத்தின் ஒரு பகுதியாகச் சேர்க்கப்பட்டன. இதுமுதல் பம்பாய் ஒரு துறைமுகப்பட்டினத்தை உடைய மாவட்டமாக இல்லாமல், மராட்டியரும் குஜராத்தியரும், பிற்காலத்தில் சிந்திகளும் சேர்ந்து வாழும் ஒரு மாநிலமாக வளர்ச்சியுற்றது. மேற்கு இந்தியாவின் துறைமுகப்பட்டின மாகப் பம்பாய் சிறப்புற்று விளங்கத் தொடங்கியது. நாளடைவில் கப்பல் போக்குவரத்து இங்கு மிகுதிப்படவே, சூரத்தின் சிறப்புக் குன்றத் தொடங்கியது. ரெயில்வேக்கள் வளர்ச்சியுற்றமையால் மேற்கு மலைத்தொடரால் உண்டாகக் கூடிய இடர்ப்பாடுகள் குறைந்தன; தற்காலப் பஞ்சாலைத் தொழிற்சாலைகளும் பம்பாய்க்கு அருகில் தோன்றத் தொடங்கின. இவற்றால் பம்பாய் முக்கியத்துவம் வாய்ந்த துறைமுகமாக வளர்ச்சியுறலாயிற்று. மராட்டியப் புலவர்கள் பூனாவில் கலைத்தொண்டில் ஈடுபட்டிருந்த காலத்தில், குஜராத்திய வாணிகர்களும், பார்சிய வாணிகர்களும் வாணிகப் பெருநகராகிய பம்பாய்க்குக் கூட்டம் கூட்டமாக வந்து குடியேறிக்கொண்டிருந்தனர். இதற்கு முன்னர் கிழக்குக் கடற்கரைப் பகுதியில் வாணிகம் செய்யப்பட்டு வந்ததைப் போன்று, இப்பொழுது மேற்குக் கடற்கரைப் பகுதியில் வாணிகம் செய்யப்பட்டது. அதன் நிலைக்களனாக பம்பாய் வளமுற்று விளங்கத் தொடங்கியது. ஆனால், இவ் விடத்தில் வாணிகம் செய்வதில் ஐரோப்பியரும், இந்தியரும் தக்க வாய்ப்புகளையும் வசதிகளையும் பெற்றிருந்தனர். கீழை நாடுகளின் நுழைவு வாயிலாக வளர்ந்துகொண்டிருந்த பம்பாய், மேற்கு நாடுகளின் எல்லைப்புற அரணாக அமைய லாயிற்று. இன்னும் கிழக்குப் பகுதியில் இரண்டாம் இரா குஜியின் பேரப்பிள்ளையான குழந்தை ராகுஜி (மூன்றும்) நடுநிலை திறம்பிய அப்பா சாகிப்பிற்குப் பதிலாக நாகபுரியில் பதவியில் அமர்த்தப்பட்டார். நைசாமுடைய படை உதவி செய்ததற்காகப் பேரார் அவருக்கு அன்பளிப்பாகக் கொடுக் கப்பட்டது. ஐதராபாத்தோடு அது சேர்க்கப்பட்டது. சாகர் தனியே பிரிக்கப்பட்டு, சாகர் நருமதை அரசாக அமைக்கப் பட்டது. விரைவில் அவை தக்கர்களை எதிர்த்துப் போரிடும் நிலையமாக மாற்றப்பட்டது. அமீர்கான் பெருந்தன்மை யுடன் தொங்கின் நவாபாகச் சிறப்புற்று விளங்கினர். அதை யடுத்திருந்த போபால் சிந்தியாவினாலும் பிண்டாரியராலும் உண்டாகக்கூடிய அச்சமின்றி வாழமுடிந்தது. இரசபுதனத் திலும் ஆஜ்மீர் பகுதியிலும் தம்முடைய மேலாண்மையை இழந்ததன் மூலம் சிந்தியா அவருடைய அரசைக் கட்டிக்

காத்துவந்தார். தௌலத் ராவ் சிந்தியா பிரிட்டிஷாருடைய ஆற்றலை அறிந்துகொள்ளக்கூடிய மதிநலம் உடையவராக இருந்தார்; ஆனால், அவர்களோடு ஒத்துழைக்கக்கூடிய அள விற்கு அறிவோ, எதிர்த்துப் போரிடக்கூடிய ஆற்றலோ அற்றவராக அவர் இருந்தார். ஆயினும், அவருடைய அரசையும், குடும்பச் செல்வத்தையும் அழித்துவிடாதவாறு மயிரிழையில் அவர் காப்பாற்றினர். போரினல் வறிதாக்கப் பட்ட ஹோல்காரின் அரசு, செல்வாக்கு அனைத்தையும் இழந்துவிட்ட நிலையில் அழியாமல் இருக்கப் பெருந்துன்பத் திற்கு ஆளாகி அல்லற்பட்டது. அது திறமைமிக்க தந்தியா ஜாக் என்பவரின் அமைச்சரவை காலத்தில் மீண்டும் புத்துயிர் பெறத் தொடங்கியது. மராட்டியர்களிடமிருந்தும் பட்டானி யர்களிடமிருந்தும் விடுதலை பெற்ற இரசபுத்திர அரசுகள் மகிழ்ச்சியுற்றன. அவற்றைத் துணைப்படைத் திட்டத்தின்படி படைகளை ஏற்றுக்கொள்ளுமாறு பிரிட்டிஷார் வற்புறுத்த வில்லை. ஆனால், ஆஜ்மீர் மையத்திலும், கிழக்கே தில்லி யிலும், தெற்கில் குஜராத்திலும் நிறுவப்பட்டிருந்த பிரிட்டிஷ் புறக்காவல் நிலையங்கள் இரசபுத்திர அரசுகளைக் கண் காணித்து வந்தன. மராட்டிய அரசர்களுக்குள்ளே கெய்க்குவார் ஒருவரே, அவர் காட்டிய பற்றுறுதிக்காகப் பிரிட்டிஷாரிடமிருந்து நாட்டுப் பகுதி ஒன்றை அன்பளிப் பாகப் பெற்றனர்.

மராட்டிய நாடுகளின் கூட்டரசு அழிக்கப்பட்டது என்று சொல்லுவது தவருகும். ஏனெனில், 1802ஆம் ஆண்டு முதலே அது உள்ளூரச் சிதைந்துகொண்டிருந்தது; அவ்வாறு அது சிதைந்ததற்கு அதனுடைய செயல்களே காரணமாகும். 1818ஆம் ஆண்டில் உண்மையில் நடைபெற்றது என்ன வென்றால், நடு இந்தியாவில் யாருடைய ஆதிக்கமும் இல்லாமல் இருந்தமையால் அங்கு பிரிட்டிஷார் தங்களுடைய ஆதிக்கத்தை நிலைநாட்டினர். பின்னர் தங்கள் மேலாண் மையை இரசபுத்திர அரசுகளின்மீது அவர்கள் செலுத்தத் தொடங்கினர். இக்காலத்தில் நடு இந்தியா எவ்வாறு இருந்தது என்பதைப்பற்றி மால்கம் வெளியிட்ட அறிக்கை யின் ஏடுகள், நடு இந்தியாவில் காணப்பட்ட பேரழிவினையும் அடைந்திருந்த சோர்வையும் சொல்லோவியமாக்கிக் காட்டு கின்றன. அரசியல் குழப்பத்தின் நிலைக்களன் ஒன்று நீக்கப் பட்டது. அவ்வாறு அதை நீக்குகின்றபொழுது இடையிலே ஒழுங்கற்றுக்கிடந்த அரசுகள் நீக்கப்பட்டன. இதனல் உண்டான பெருவிளைவு யாதெனில் சட்லெஜ் ஆறு வரையில்

இந்தியா முழுவதிலும் கம்பெனியாரின் கூட்டுத் தலைமை நிறுவப்பெற்றது. கிழக்கிலும் வடக்கிலும் அதனுடைய எல்லை இயற்கைப்புற எல்லைகளான அஸ்ஸாம், இமய மலைப் பகுதிகளையுடையதாயிற்று. இடையிலே பனிமூடிய மலைகளுக்கு இடையில் நேப்பாளம் மட்டும் தனித்து இருந்தது. மேற்கே தார்ப்பாலைவனமும், கச்சிப் பகுதியின் கழியுமே இருந்தன. பஞ்சாப் பகுதியில்தான் எல்லைப்புறம் திறந்த வெளியாகக் கிடந்தது. அங்கு ரஞ்சித் சிங்கின் அரசாகிய மனித அரண் உறுதியுடனும் நட்புறவுடனும் இருந்தமை இங்குக் குறிப்பிடத்தக்கதாகும். மற்ற இடங்களில் அழிந் தொழியாது இருந்த அரசுகள் எல்லாம், பிரிட்டிஷ் பேரர சாகிய கடலினுள் காணப்பட்ட தீவுகளாகவே இருந்தன. அயோத்தி, மைசூர் அரசுகள் முழுவதும் பிரிட்டிஷ் அரசினால் சூழப்பட்டிருந்தன. ஐதராபாத்தும் சிந்தியாவின் அரசும் இரு பக்கங்களிலுமே பிரிட்டிஷாரால் சூழப்பட்டும் கண்காணிக்கப் பட்டும் இருந்தன. இவை நீங்கலாக இந்தியர்களால் ஆளப் பட்டு வந்த அரசுகள் நடு இந்தியாவில் நாகபுரியிலிருந்து ஒரிசா வரையில் பரவியிருந்த நிலப்பரப்பும், இராசபுதனமுமே யாகும். நாகபுரி துணைப்படைத் திட்ட உடன்படிக்கை செய்து கொண்ட அரசாகும். எஞ்சிய மற்றப்பகுதி முழுவதும் குன்றுகளும் காடுகளும் நிறைந்த பகுதியாக இருந்தது. அதனால் யாதோர் இன்னலும் உண்டாகாது என்பது தெளி வாகப் புலனாயிற்று. இரசபுத்திர அரசுகள் தங்களுக்கிடையே நிலைத்த பொறாமையும், தாற்காலிகச் சோர்வும் அடைந் திருந்தமையால் அவை தீமையற்றனவாக இருந்தன. முன்னர் கூறியதைப்போன்று பிரிட்டிஷாரின் காவல் நிலையங்கள் திறமையுடன் அவற்றைக் கண்காணித்து வந்தன. முகலாயர் ஆட்சிக் காலத்தில் நிலவியதைவிட ஓரளவிற்குச் சிறந்த முறையில் 1818ஆம் ஆண்டு செய்யப்பெற்ற உடன்படிக்கை இந்தியாவின் ஒற்றுமையைப் பேரளவிற்கு மீண்டும் நிலை நாட்டியது எனலாம். அவற்றிற்கு இடையே காணப்பட்ட வேறுபாடுகள் இங்குக் குறிப்பிடத்தக்கன. பிரிட்டிஷாரின் அதிகாரம் தென்னாட்டில் உறுதிப்படுத்தப்பட்டிருந்தமை முதன்மையான வேறுபாடாகும். ஆனால், சட்லெஜ் பகுதியில் முன்னேறவொட்டாமல் அது தடுத்து நிறுத்தப்பட்டது. முகலாயருடைய ஆதிக்கம் வடமேற்குப் பகுதியில் காபூல் வரையில் பேராற்றல் பெற்று விளங்கியது; ஆனால், அவர் களுடைய ஆதிக்கம் தக்கணத்தில் ஆட்டம் கொடுத்துவிட்டது. குமரிமுனை வரையில் பேரரசை நிறுவவேண்டும் என்று முயன்ற முயற்சியில் முகலாயப் பேரரசு சிதைவுற்றது.

பிரிட்டிஷாருடைய ஆதிக்கத்தைக் காபூல்வரையில் நிலைநாட்ட முயன்றதனால் அவர்கள் அல்லற்பட்டனர். இதுமுதல் இந்தியா மீண்டும் ஒரு நாடாக விளங்கத் தொடங்கியது. எனவே, நாம் உள்நாட்டில் உண்டான வளர்ச்சிகளையும் வெளி நாட்டில் உண்டான வளர்ச்சிகளையும் இனித் தனித்தனியாகக் காண்போம்.

அரசியல் ஆட்சிப் பணியிலும் படையியல் துறையிலும் மிகச் சிறந்த துணைத்தலைவர்களின் குழுக்களை ஹேஸ்டிங்ஸ் பெற்றிருந்தமை அவருடைய நற்பேறேயாகும். எலிபின்ஸ்டன், மால்கம், மெட்காஃப், மன்ரோ, ஜென்கின்ஸ் ஆகிய அதிகாரிகள் உண்மையிலேயே பேராற்றலும் பெருந் திறனும் வாய்க்கப்பெற்றிருந்தனர். அவர்கள் எத்தகைய பணியையும் செம்மையாகவும், சிறப்பாகவும், பொறுமை யாகவும் செய்யக்கூடிய அருந்திறனைப் பெற்று இருந்தனர். அவர்களிடத்து உள்ளன்புடன் ஒத்துழைக்கக்கூடிய மனப் பண்பும், உரிமையுடன் அடக்கியாளும் ஆற்றலும் ஒருங்கே அமைந்து இருந்தன. ஆனால், இந்த வெற்றிக்கு மூலகாரண மாக இருந்தவர் ஹேஸ்டிங்ஸ் என்பதில் சிறிதும் ஐயமில்லை. அவருடைய தெளிந்த அரசியல் அறிவும் சூழ்ச்சித் திறனும் பொருத்தம் உடையனவாக அமைந்தன. விரிந்த அளவில் திட்டமிடும் அவருடைய அறிவுத் திறனுக்கேற்ப ஆர்வத்தோடு செயலாற்றும் திறனும் ஒத்த அளவிற்கு அமைந்திருந்தது. சிறப்புமிக்க தலைமைப் பதவிக்கு உரிய சிறந்த பண்பாகிய நெகிழ்ச்சியுள்ளம், இணங்கிப்போகும் மனப்பண்பு, அவருடைய ஏற்பாடுகள், செயல் முறைகள் அனைத்திலும் வெளிப்பட்டதைக் காணுகின்றோம். அவருடைய செயல்கள் அனைத்திலும் இதைக் காட்டிலும் பெருமைக்குரிய சிறந்த தொரு பண்பு வெளிப்படவில்லை என்பது இங்குக் குறிப்பிடத் தக்கது. அவருடைய வள ஆதாரங்களினால் என்றும் அவர் மயங்கியதில்லை; அல்லது அவருடைய செல்வாக்கின் சிறப்பினால் அவர் திகைப்புற்றதில்லை. அவர் எப்பொழுதுமே தம்முடைய இலட்சியங்களும், அவற்றை அடையும் வழிகளும் ஒத்த வீதத்தில் அமையுமாறு செய லாற்றிவந்தார். அவர் நேப்பாளத்தினை நடத்திய முறையும், மராட்டியர்களையும் இராசபுத்திரர்களையும் நடத்திய முறையும் அவர் நாட்டினைக் கைப்பற்ற வேண்டும் என்ற மண்ணாசை பிடித்த வெறியரல்லர் என்பதை எடுத்துரைக்கின்றன. வெல்லஸ்லியைவிட நாட்டைக் கைப்பற்றுவதற்குரிய வாய்ப்பும் வசதியும் அவருக்கு மிகுதியாக இருந்தும், அவர்

அவ்வாறு நடந்துகொள்ளாதது அவருடைய மனப்போக்கின் மாட்சியை வெளிப்படுத்துகிறது என்றே கூறலாம். அவருடைய செயல்முறை வரையறுக்கப்பட்டதாகவும் உறுதிப்பாடுடையதாகவும் இருந்தது; ஆனால், அது அச்சுறுத்துவதாக அமையவில்லை. உறுதிப்பாட்டுடன் கலந்த சமரச உடன்பாட்டுணர்வே அவருடைய செயல் முறைகளை உருவாக்கியது. அவர் காரன்வாலிசைப்போன்று இணங்கிப்போகும் பண்புடையவர். ஆனால், அவரைப் போன்று செயல்களைக் குழப்பிவிட்டு வேடிக்கை பார்க்கும் பண்பு இவரிடத்தில் கிடையாது. அரசகுமாரர்களைக் குறிப் பிட்ட நிபந்தனைகளைப் பின்பற்றுமாறு வற்புறுத்துவதில் அவர் கடுமையாக இருந்ததைப் போன்றே, அவற்றைக் கடைப்பிடிப்பதிலும் அவர் மிகக் கடுமையாக நடந்து கொள்ளுவார். அவர் பின்பற்றிய திட்டத்திற்கு மாற்றுத் திட்டம் யாதாகிலும் இருக்க முடியுமா என்பதை ஆராய்வோமானால், வேறு திட்டத்திற்கே வழியில்லாமல்போனதை உணரலாம். இமயமலைப் பகுதியில் நேபாளத்தில் ஓர் உடன் பாட்டைக் கண்டதைப் போல, நடு இந்தியாவில் இந்தியப் பிரிட்டிஷ் கூட்டாட்சியை நிறுவுவதற்குரிய வாய்ப்பினை மராட் டியரே பாழாக்கிவிட்டனர். ஹேஸ்டிங்ஸ் தம்முடைய விரிவான திட்டங்களின் வெற்றியாலும் செயல்முறைகளின் வெற்றியாலும் பிரிட்டிஷாரின் ஊக்கத்தைப் பற்றியும் திறன்மையைப் பற்றியும் இந்திய மக்களிடையே இருந்துவந்த மதிப்பினை மிகுதிப்படுத்தினர். ஆனால், பிரிட்டிஷார் ஆதிக் கத்தை நிலைபெறுமாறு செய்ததைக் காட்டிலும் அவர் கடைப் பிடித்த பொதுத்துறை நீதியும் சமரச உடன்பாடும் மிகுந்த பயன் மதிப்புடையனவாகும். இவ்வரிய பண்பே, இந்திய மக்களுடைய உள்ளங்களில் ஆழப் பதிந்துபோயிருந்த வெல்லஸ்லியின் வன்முறையில் கைப்பற்றும் சூழ்ச்சியும், அச்சுறுத்தி அடக்கியாளும் சூழ்ச்சியும் உண்டாக்கிய வடுக்களை மறையச் செய்ததோடு, பிரிட்டிஷாரிடத்து நல்லெண்ணத்தையும் அவர்களுடைய நீதிமுறையில் நம்பிக்கையையும் வளர்த்து உறுதிப்படுமாறு செய்தது.

## ஆதாரங்கள்

ஹேஸ்டிங்சைப் பற்றி பிளான்டர்பர்க்கைச் சேர்ந்த மேஜர் ராஸ் என்பவர் இந்திய ஆட்சியாளர் வரிசையில், ‘The Marquess of Hastings’ என்னும் அடக்கமான நூல் ஒன்றை *(1893-ல்)* எழுதியுள்ளார். ஹேஸ்டிங்ஸின் தனி

இதழ் ஒன்றை அவருடைய மகளான கோமகள் பியூட் (2 தொகு, 1858) பதிப்பித்துள்ளார்.

மில்லினுடைய வரலாற்றைத் தொடர்ந்து எழுதிய H. H. வில்சன் ஹேஸ்டிங்ஸிற்கு ஒரு தொகுதியை (தொகு. 8) ஒதுக்கியுள்ளார். அக் காலத்தில் ஆதாரத்தோடு எழுதப் பட்ட ஆராய்ச்சி நூல் பிரின்சப்பின் (Prinsep), 'History of the Political and Military Transactions in India during the Administration of Marquess of Hastings' (2 தொகு. 1825). அக்காலத்தின் பல்வேறு இயல்புகள் மெட்கா∴ப், மால்காம், எலிபின்ஸ்டன் ஆகியோரின் வாழ்க்கை வரலாறு களில் தெளிவாக விளக்கப்பட்டுள்ளன. அவை முன்னரே குறிப்பிடப்பட்டன. அவற்ரோடு பின்வரும் நூல்களையும் பார்க்க: ஜி. ஆர். கிளீக்கு: 'Life of Sir Thomas Munro' (3 தொகுதி, 1830). சர் ஏ. ஜே. ஆர்பத்நாட்: 'Sir Thomas Munro' (2 தொகுதி, 1884).

இந்திய அரசுகளைப்பற்றி அறிவதற்கு எம். எஸ். மேத்தா எழுதியுள்ள சிறப்புமிக்க ஆராய்ச்சி நூலான, 'Lord Hastings and the Indian States' என்னும் நூலைப் பார்க்க. அதனோடு முன்பு குறிப்பிட்ட தாம்சனின் நூலையும் காணலாம். ஜே. டாட் என்பவர் 'Annals and Antiquities of Rajasthan' (முதல் பதி. 1829-32) என்று எழுதியுள்ள நூல் இரச புத்திரப் பின்னணியைத் தந்துதவுகிறது. ஆர். ஜென்கின்ஸ் என்பவருடைய 'Reports on the territories of Nagpur' (1827) என்னும் நூலும், மால்காமினுடைய நடு இந்தியாவைப் பற்றிய ஆராய்ச்சி நூலும் நடு இந்திய வரலாற்றை முழுமை யாக விளக்குகின்றன. நேப்பாளப் போரைப் பற்றிய வரலாற்று நூல் இதுவரையில் ஒன்றும் எழுதப்படவில்லை. 'Papers relating to the Nepal War' (கிழக்கிந்தியக் கம்பெனி பதிப்பித்தது; 1824) என்பதும், பி. லாண்டன் என்பவர் எழுதியுள்ள, 'History of Nepal' என்னும் நூலும் கட்டாயம் படிக்கவேண்டியவையாகும். வட இந்தியாவில் சிறப்புற்று விளங்கிய இராணுவத் துணிகரச் செயல் வீரர்களைப்பற்றி H. G. கீனே (Keene) என்பவர், 'Hindustan under Freelances 1770—1820' (1907) என்னும் நூலில் எழுதியுள்ளார்.

பகுதி VIII

# நிறைவு செய்தலும் ஒன்றுக்கப்படுதலும்

## 1. ஹேஸ்டிங்ஸ் முதல் டல்ஹௌசி வரை

(ஆட்சிமுறையின் பொதுவியல்புகள்)

பிரிட்டிஷாருடைய ஆட்சிக்கால இந்தியாவின் வரலாற்றில், 1818ஆம் ஆண்டு, புதியதொரு வளர்ச்சி நிலையைக் குறிப்பதாகும். பிரிட்டிஷார் தங்களுடைய மேலாண்மையை நிலைநாட்டுவதற்காக நடத்திய உள்நாட்டுப் போர்களும், அவற்றால் உண்டான பூசல்களும் ஒருவாறு முடிவுற்றன. 1740ஆம் ஆண்டு முதல் சிதறிக்கிடந்த இந்தியாவை இக் காலத்தில் (1818 அளவில்) ஓரளவிற்கு ஒன்றுபட்ட இந்தியாவாக நாம் காணுகின்றோம். எனவே, மீண்டும் ஒற்றுமைமிக்க ஒரே நாடாக இந்தியா இக் காலமுதல் விளங்கத் தொடங்கியதென்றே கூறலாம். கம்பெனியின் ஆட்சி, நடைமுறையில் இந்தியாவின் அரசாக மாறியது. அடுத்துவரும் ஆட்சிக் காலத்தில் நிகழ்ந்த நிகழ்ச்சிகளை நாம் இரண்டு பகுதிகளாகப் பிரித்துக்கொள்ளலாம். அவை அயல்நாட்டுக் கொள்கையும் உள்நாட்டு ஆட்சிமுறையுமாகும். அயல்நாடுகளில் உள்ள குடியேற்ற நாடுகளை எல்லாம் ஒன்றுசேர்த்து வலுப்படுத்தும் பணியில் பிரிட்டிஷார் ஈடுபட்டனர். தாயகத்தில் திரும்ப உரிமை பெறுதலும், திட்டமிட்டு ஆக்கவேலைகளில் ஈடுபடுதலும் நடைபெற்றுக்கொண்டிருந்தன. 'தாயகம்' என்றும், 'கடல்களுக்கு அப்பால் உள்ள குடியேற்ற நாடுகள்' என்றும் கூறும் புதிய வழக்கம் இக் காலத்தில் தோன்றலாயிற்று. இந்த வெளித்துறைப் பிரச்சினைகளைத் தீர்த்துக் கொண்ட நேரத்திலேயே, உள்துறையில் ஒன்றுக்கப்படுதலும் நடைபெற்றது. அதன் விளைவாக இந்தியாவில் பண்பாட்டின் தோற்றத்தில்

மாற்றம் உண்டாகத் தொடங்கியது. அம் மாற்றம் அன்று முதல் இன்றுவரை இந்திய நாட்டின் வளர்ச்சியில் முதன்மையான ஓரிடத்தைப் பெற்றுள்ளமை இங்குக் குறிப்பிடத்தக்கதாகும். முதலில் அது, மேலைநாட்டுக் கருத்துகளை அடிப்படையாகக்கொண்டு இந்தியப் பண்பாட்டில் மாற்றத்தை உண்டாக்குவதாக அல்லது புதியது புனைவதாக அமைந்தது. ஆனால், அப் புதுமுறை முழுவதையும் பிற்காலத்தில் பேராற்றல் வாய்ந்ததாகச் செய்த இந்திய மக்களின் எதிர்ச்செயல்கள் தோன்றத் தொடங்கியமையும் இங்குக் குறிப்பிடத்தக்கதாகும். இப்பொழுது நாம் ஆராய்வதற்கு எடுத்துக்கொண்ட வரலாற்றுப் பகுதி, சற்றேறக்குறைய 1818ஆம் ஆண்டிற்கும் 1848ஆம் ஆண்டிற்கும் இடைப்பட்ட முப்பதாண்டுக் காலமாகும். இத்தகைய மனப்பாங்குகள் சில வகைகளில் டல்ஹௌசியின் ஆட்சிக்காலத்தில் முழுநிறைவு அடையலாயின. அம் மனப்பாங்குகள் டல்ஹௌசியின் ஆட்சிக்காலத்திற்குப் பின்னர் பொங்கியெழுந்த புரட்சியோடு நெருங்கிய தொடர்புகொண்டிருந்தன. அப் புரட்சியைப்பற்றி நாம் அடுத்த பிரிவில் விரிவாகக் காணலாம். நாம் பின்பற்ற வேண்டிய திட்டத்தில் 1818ஆம் ஆண்டு பிரிட்டிஷாரை நோக்கியிருந்த இந்தியப் பிரச்சினைகளைப்பற்றியும், அவற்றைச் சமாளிக்க நடைமுறையில் அவர்கள் எத்தகைய நடவடிக்கைகளை மேற்கொண்டனர் என்பதைப்பற்றியும் சிறிது விளக்கலாம். பிறகு மத்திய அரசின் சிறப்புமிக்க கொள்கையின் சுவடுகளை ஆராய்ந்து பார்க்கலாம். அதன் பின்னர் நாம் கம்பெனியின் வெளிநாட்டுக் கொள்கையையும், அதனுடைய ஆட்சிமுறை அமைப்பையும், சமூகப் பொருளாதாரப் பண்பாட்டு வளர்ச்சிகள்போன்ற தனிச் சிறப்பு வாய்ந்த பொருள்களைப்பற்றியும் கருதலாம்.

அக்பரின் ஆட்சிக்காலத்தில் அல்லது ஷாஜகான் ஆட்சிக்காலத்தில் இந்தியா இருந்த நிலைமையிலிருந்து, 1818ஆம் ஆண்டு அது பெரிதும் வேறுபட்டிருந்தது. 1748ஆம் ஆண்டு முகமது ஷா இறந்தபொழுது இருந்த நிலையைக்காட்டிலும் 1818ஆம் ஆண்டு இந்தியா மிகவும் வேறுபட்ட நிலையிலிருந்தது என்று கூறினால், அது மிகையாகாது. நாட்டின் அரசியல் அமைப்புப் பாழ்பட்டுக் கிடந்தது. இதற்கு முன்பு நாட்டை ஒன்றுபடுத்தி ஆட்சிபுரிந்துவந்த ஆதிக்கம் அழிந்ததோடு, அதனுடைய வழித்தோன்றலாகப் பொறுப்பேற்றுக் கொள்ள வேண்டிய நிலையில் இருந்த அரசியல் சக்தி, பல்குழுவாலும் பாழ்செய்யும் உட்பகையாலும் சிதறிக்கிடந்தது. இந்தக்

கண்கொண்டு பார்க்கின்றபொழுது பிரிட்டிஷார் முகலாயர்களுக்குப்பின் தோன்றியவர்கள் என்பது பொருந்தாது. ஆனால், அவர்கள் அரசியல் குழப்பத்தின் விருப்ப ஆவண வழி உடைமை (legatees) பெற்றவர்களாவர். மராட்டியர் தங்களுக்குள்ளே உண்டான உட்பகையால் பல குழுக்களாகப் பிரிந்து, தங்களுக்குள்ளேயே போரிட்டுக்கொண்டிருந்தனர். அவர்களுள் ஓர் அரசை நிறுவிக் கட்டிக்காக்கும் ஆற்றலுடையவர் என்னும் நம்பிக்கையைச் சிந்தியா அளித்துவந்தார். 1794ஆம் ஆண்டு மகதாஜி சிந்தியா இறந்த பிறகு, அரசுகட்டிலேறிய அவருடைய கால்வழியினர் தங்கள் ஆதிக்கத்தை நெகிழ்ச்சியுறச் செய்தனர். அதேசமயத்தில் அவர்களுடைய ஆற்றல்மிக்க எதிரிகளான ஹோல்கார்கள் குடும்பப் பூசல் காரணமாகத் தங்களுடைய ஆதிக்கத்தைப் பையப்பைய இழந்துவரலாயினர். வட இந்தியாவில் அமைதியையும் ஒழுங்கையும் நிலைநாட்டாமல் சீக்கியர்கள் அதிகாரத்தைக் கவர்ந்துகொண்டனர். ஒரு காலத்தில் வீறுடன் விளங்கிய அயோத்தி, இப்பொழுது ஊழல்மிக்க முதுமைத் தன்மைக்கு அடிமையாகிக் கிடந்தது. இராசபுதனம் முழுவதிலும் அரச குடும்பங்கள் மராட்டியரின் தாக்குதல்களைத் தடுத்து நிறுத்தவும், தங்களுடைய குறுநில மன்னர்களை அடக்கியாளவும் முடியாமல் அல்லற்பட்டன. பிண்டாரியரின் எழுச்சியினாலும் மராட்டியரின் ஆற்றலிழந்த போக்கினாலும் வட இந்தியாவில் தார் பாலைவனம் முதல் ஒரிசா வரையிலும், சட்லெஜ் முதல் கிருஷ்ணையாற்றின் மேற்பகுதி வரையிலும் அரசியல் குழப்பம் என்னும் பேய் தலைவிரித்தாடலாயிற்று. 1803ஆம் ஆண்டு பிரிட்டிஷார் தில்லிக்கு வந்தபொழுது ஒவ்வொரு கிராமமும் தற்காப்பு அரண்களைக் கொண்ட கோட்டைகளாகக் காணப்பட்டன. அவை, துப்பாக்கி முனையைக் காட்டி அச்சுறுத்தியபொழுதுதான் வரிசெலுத்த முன்வந்தன. சுற்றுப்புறத்தில் உள்ள கிராமங்களில் வாழும் கொள்ளைக் கூட்டத்தார் தில்லியைக் கொள்ளையடிப்பதற்காக அதைப் பல குடும்புகளாகப் பிரித்துக்கொண்டிருந்தனர். அக்காலத்தில் பாழடைந்த பகுதிகளைப் பார்க்கப் பாதுகாப்பாளர்கள் இல்லாமல் போவது இடர்ப்பாடுடையதாக இருந்து வந்தது. ஏனெனில், பாழ்பட்ட பழம்பொருட் சின்னங்களின் இடிந்த சுவர்களுக்குப் பின்னால் கொள்ளைக் கூட்டத்தினர் ஒளிந்துகொண்டிருப்பது, அந் நாட்களில் இயற்கையாக இருந்தமையால், அப் பகுதிகளுக்குப் போகின்றவர்கள் அஞ்ச வேண்டி நேரிட்டது. மேலும், தில்லியிலிருந்து ஆக்ரா செல்லும் நெடுஞ் சாலையில் பயணம் செய்வதும் அஞ்சத்தக்க

தாகவே இருந்துவந்தது. வட்டாரத் தலைவர்கள் என்ற பெயரும், கொள்ளைக்கூட்டத் தலைவர்கள் என்ற பெயரும் அக் காலத்தில் ஒரே பொருளில் கையாளப்பட்டு வந்தன. மெட்கா·ப் தில்லிக்கு அருகில் இருந்து வந்த தலைவர்கள் சிலரை நாட்டின் எப் பகுதியிலாகிலும் கொள்ளையடித்து வந்த கொள்ளைக் கூட்டத்தின் தலைவர்கள் என்றே அதிகார முறையில் பட்டியலில் சேர்த்துள்ளார். நடு இந்தியாவைப் பற்றி மால்கம் வெளியிட்ட அறிக்கையும், இராசபுதனத்தைப் பற்றி தாட் (Tod) எழுதிச் சேர்த்துள்ள குறிப்புகளும் இதே கதையைத்தான் சொல்லுகின்றன. பிரிட்டிஷாரின் ஆட்சியை அல்லது மேலாண்மையை இந்திய மக்கள் ஆர்வத் துடனே, அதிகமான நம்பிக்கையுடனே ஏற்றுக்கொள்ள வில்லை. ஆனால், எத்தகைய முடிவும் இல்லாமல் தொடர்ந்து நிலவும் அரசியல் குழப்பத்திற்கு மாற்றாகவே, அவர்கள் பிரிட்டிஷாரின் ஆட்சியை வேறு வழியில்லாமல் அமைதியாக ஏற்றுக்கொள்ள வேண்டியவர்களாக இருந்தனர்.

அரசியல் கட்டுப்பாட்டையும் நோக்கத்தையும் அவர்கள் இழந்தனர். அதைப்போன்றே நாட்டு ஆட்சி முறையும் அடியோடு அழிந்தொழிந்தது. கட்டாயப்படுத்தினால்தான் மக்கள் வரி செலுத்தினர்; இல்லையென்றால் வரி செலுத்த வேண்டும் என்பதைப்பற்றி யாருமே கவலைப்படுவதில்லை. ஆட்சி புரிந்தவர்களும் எப்படியாகிலும் மக்களிடமிருந்து பணத்தைத் தண்டுவது என்பதைப்பற்றிக் கவலைப் பட்டார்களே ஒழிய மக்கள் நலத்தை நாடும் அவர்கள் வேறு செயல்களில் கருத்தைச் செலுத்தவில்லை. அப்படித் தண்டிய பணத்தைக்கொண்டு படைவீரர்களுக்குச் சேர வேண்டிய ஊதியத்தைக் காலம் தாழ்த்தாமல் கொடுப்பதிலேயே அவர்கள் கண்ணும் கருத்துமாக இருந்துவந்தனர். படை வீரர்களைச் சரிவரக் கவனிக்கவில்லையென்றால், அவர்கள் ஒன்று சேர்ந்து கலகம் செய்வார்கள் என்னும் கவலை அவர் களுக்கு இருந்துவந்தது. இத்தகைய நடைமுறையில் அதிகாரிகள் தங்களால் இயன்ற அளவிற்குத் தங்களுக்குத் தேவையான பொருள்களைச் சேமித்து வைத்துக்கொள்ளு வதில் கருத்துடையவர்களாக இருந்தனர். குடியானவர் களின் வாழ்க்கை நிலை மிகவும் மோசமாக இருந்தது. எப்பொழுது கொள்ளைக் கூட்டத்தினரால் கொள்ளையடிக்கப் படுவோமோ, கொலை செய்யப்படுவோமோ, சித்திரவதை செய்யப்படுவோமோ என்ற அச்சத்தோடு குடியானவர்கள் அல்லற்பட்டுக்கொண்டிருந்தனர். எச்சமயத்தில் யாரால்

துன்புறுத்தப்படுவோமோ, நிலவுடைமைகள் பறிக்கப்படுவோமோ என்ற மனக்கலக்கம் உடையவர்களாக அவர்கள் வாழ்ந்தனர். எனவே, அவர்களுடைய அவல நிலையிலிருந்து முன்னேற்றம் அடைவதற்குரிய வாய்ப்புக் கிடைக்கும் என்ற நம்பிக்கையே இல்லாமல் அவர்கள் உழன்றுகொண்டிருந்தனர். வாணிகர்களின் நிலை இதைவிட அச்சமும் கலக்கமும் நிறைந்ததாக இருந்தது. அணிவகுத்துச் செல்லும் படைகளால் எந்நேரத்தில் என்ன துன்பம் உண்டாகுமோ என்றும், கொள்ளைக் கூட்டத்தினரால் தாக்கப்படுவோமோ என்றும், பணமுடையால் நெருக்கடியுற்றிருக்கும் அரசுகள் எச்சமயத்தில் பொருளைக் கொடுத்து உதவுமாறு தங்களைக் கசக்கிப் பிழியுமோ என்றும் அவர்கள் அஞ்சி நடுங்கிக்கொண்டிருந்தனர். நிலைபேறில்லாத அரசாங்கங்களுக்கு அவர்கள் கொடுத்திருந்த கடன்கள்கூட அக் காலத்தில் பாதுகாப்புடையனவாக இல்லை என்பது குறிப்பிடத்தக்கது. கிராமங்களில் பரம்பரை அதிகாரிகளாக இருந்துவந்த கிராம அதிகாரிகளுடைய பதிவேடுகளிலும், பழைய ஆட்சிபுரியும் குடும்பங்கள் கடைப்பிடித்துவந்த பழக்க வழக்கங்களில்தான் அக்காலத்தில் முகலாயருடைய ஆட்சி நடைபெற்று வந்ததன் சின்னங்களைக் காணமுடியுமே தவிர, நாட்டில் முகலாயரால் நன்முறையில் நடத்தப்பெற்றுவந்த ஆட்சி முறை அடியோடு மறைந்தே போய்விட்டது எனலாம்.

நாட்டின் அரசியல் வாழ்வு நலிவுற்றதோடு, சமூகப் பண்பாட்டு நிலைகளிலும் வீழ்ச்சியுண்டாயிற்று. சமூகத்தை அரித்தொழிக்கும் கொடிய நோய்கள் நாட்டிலே பரவியமை, நாட்டின் நிலை எவ்வாறு இருந்தது என்பதை விளக்குவதற்குப் போதிய சான்றாகும். இச் சமூகத்தைப் பாழாக்கும் நோய்களுக்குக் காரணமான நச்சுக் கிருமிகள், நாகரிகமடைந்த சமூகங்களில் தக்க வாய்ப்புக் கிடைக்கின்றபொழுது பன்மடங்காகப் பெருகிக் கொடிய நோயாகப் பரவுவதற்காகப் பதுங்கி இருந்தன. அந் நோய்களுள் மிகவும் தெளிவாகத் தோன்றியது கொள்ளையடித்தலாகும். இந் நோய்க்குச் சிறந்த எடுத்துக்காட்டாக இருந்தவர்கள் பிண்டாரியர்கள் என்னும் கொள்ளைக் கூட்டத்தினராவர். சமுதாயத்தின் சீர்குலைவும் துணிகரச் செயலாற்றும் விருப்பும், நம்பிக்கையற்ற மனப் போக்கும், வெறுக்கச் செய்யும் உணர்ச்சியும் கொண்டவர்களைச் சட்டத்தை மீறி மனம்போனவாறு நடக்கும்படி தூண்டின. அத்தகையவர்கள் அரசர்களுடைய படைகளிலும் அல்லது கொள்ளைக் கூட்டத்தினரின் குழுவிலும் நிறைந்து

காணப்பட்டனர். அவர்களுடைய வாழ்வும் வளனும், எழுச்சியும் வீழ்ச்சியும் பெற்றதற்கேற்ப அரசர்கள் கொள்ளைக் கூட்டத்தினரின் குழுவில் உள்ளவர்களைத் தங்கள் படைகளில் சேர்த்துக்கொள்ளுதலும், அரசர்களுடைய படைகளில் இருந்தவர்கள் கொள்ளைக் கூட்டத்தினருடைய குழுவில் சேர்ந்துகொள்ளுதலும் மாறிமாறி நடைபெற்று வந்தன. நிலமற்றோரும் அல்லது அடியோடு வளமான வாழ்க்கையை இழந்தோரும் தங்களுக்குத் தேவையான தலைவர் ஒருவரை நாடி அலைந்தனர். நம்பிக்கையிழந்தமையால் பொறுப்புற்றவர்களாக நடந்துகொள்ளுவது அக் காலத்தின் கோலமாக இருந்தது. இத்தகைய மனிதர்களுள் தனிப்பட்ட சிறப்பும் பயிற்சியும் உடையவர்களாகத் தக்கர்களும், கொள்ளையடிப் போரும், சமயச் சடங்குகளின் பெயரால் கொலைபுரிவோரும் பலர் தோன்றினர். அவர்கள் இக் காலத்தில் தலையெடுக்கத் தொடங்கினர். வழிப்பயணிகளும் அமைதியை விரும்புவோரும் கண்டு அஞ்சுமாறு இவர்கள் இந்தியாவின் நடுப் பகுதியின் இடையே பரவியிருந்தனர். அடக்கியொடுக்கும் அரசின் கைகள் சோர்வுற்றவுடன், ‘சதி’ என்று சொல்லப்படும் ‘உடன்கட்டை ஏறுதல்’ பெருவழக்காகப் பெருகியது. பகுத்தறிவின் ஆற்றல் மக்களிடையே மறையத் தொடங்கியமையால், மூடப் பழக்க வழக்கங்கள் மெல்லப் பெருகத் தொடங்கின. இந்திய மக்கள் வாழ்க்கையின் புகழ்மிக்க ஒட்டுணியாக இருந்துவந்த சோதிடம், மக்களை நெறிப்படுத்தும் பேராற்றலாகச் சிறப்புற்று விளங்கத் தொடங்கியது. சமூக வாழ்க்கையின் நோய்க்குறிகளான குழந்தைக் கொலையும், சமயத் தொடர்பாக இரும்புக் கொக்கிகளைக் குத்திக்கொண்டு ஆடுதலும், தன்னைத்தானே பலியிட்டுக் கொள்ளுதலும், கோயில் தேர்கள் வருகின்றபொழுது தானே அதன் சக்கரங்களுக்கு முன்னால் விழுந்து தற்கொலை செய்து கொள்ளுதலும் ஆகிய கொடிய பழக்கங்கள் விரைவாகப் பெருகின. நாட்டிலே பொதுவாக உண்டான சீரழிவினால் சமயத் தொண்டர்களும் பெரும் துன்பத்திற்கு ஆளாயினர். பொதுமக்களைப்போன்றே அவர்களும் கொள்ளை, கொலை ஆகிய செயல்களால் அச்சுறுத்தப்பட்டனர். எனவே, அவர்களும் படைக்கலமேந்தத் தொடங்கினர். அவ்வாறு படைக்கல மேந்திய துறவிகள் நாகர்கள், பைராகிகள், சந்நியாசிகள் அல்லது கோசெய்ன்கள் (Gosains) என்னும் குழுக்களாக விளங்கினர். அவர்கள் அக்பருடைய ஆட்சிக் காலம் முதல் நாட்டிலே இருந்துவந்ததற்குரிய சான்றுகள் கிடைத்துள்ளன. ஆனால், நாட்டிலே உண்டான குழப்பத்தால்

அவர்கள் எண்ணிக்கை பெருகலாயிற்று. மகதாஜி சிந்தியாவின் படைகளில் கோசெய்ன்கள் இம்மத் பகதூர் தலைமையில் பணியாற்றி வந்ததையும், தாதுபந்துக்கள் (Dadupanthis) ஜெய்ப்பூர் அரசரிடத்தில் பணிபுரிந்துவந்ததையும் எடுத்துக்காட்டாகக் கூறலாம்.[1] சீக்கியர்கள் இவ் இயக்கத்தின் தலைசிறந்த குழுவினராவர். அக் குழுக்களுள் சீக்கியரே தனிப்பட்டதொரு சமயத்தையும் அரசையும் நிறுவுவதற்குரிய அறிவும் ஆற்றலும் பெற்றிருந்தனர்.

அறிவுத்துறைச் செயல்களும் பண்பாட்டுத் துறைச் செயல்களும் தவிர்க்கமுடியாத வகையில் வளர்ச்சியற்றுப் போயின. அவற்றைப் போற்றி ஆதரிப்பதற்குரிய பாதுகாப்போ, பொருள் வசதியோ இல்லாமல் போயினமையால் அவற்றின் வளர்ச்சி தடைப்பட்டது. புலவர்களும் கலைஞர்களும் அரசர்களின் ஆதரவை எதிர்பார்த்து வாழவேண்டியவர்களானார்கள். ஆனால், அவ் அரசர்களோ அக்காலத்தில் அரசியல் விரகர்களையும் படை வீரர்களையும் போற்றியாதரிப்பதிலேயே தங்கள் கருத்தைப் பெரிதும் செலுத்தி வந்தனர். சமஸ்கிருத சபைகளிலும் (Tols) முஸ்லீம்களின் 'மதரசாக்களிலு'ம் பழைய மரபு போற்றிக் காக்கப்பட்டு வந்ததெனலாம். ஆனால், அவற்றின் தற்பண்பு இழக்கப்பட்டது; பெருந்திரளாக உள்ள மக்களிடத்து அவை பெற்றிருந்த செல்வாக்கு நலிந்துபோயிற்று. இந்த ஆண்டுகளில் புதிய சிந்தனைகள் மக்களிடையே தோன்றுவதற்குரிய அறிகுறிகள் ஒன்றுமே காணப்படவில்லை. அதைப்போன்றே சமயத் துறையிலும் ஆக்கவேலைக்குரிய சாதனை ஒன்றும் நடைபெற்றதாகத் தெரியவில்லை. உயிர்க்களையுடன் இருந்த சமயம், செயலற்ற சோம்பல் நிலையை நாடும் சமயக் கட்சிகளிடத்துச் சரணடைந்தது. அதனுடைய பக்தர்கள் கண்ணன் அல்லது காளி கோயில்களுக்கு அடிக்கடி ஓயாது சென்று சுற்றி வந்தனர் அல்லது காசியிலுள்ள கங்கைக் கரைக்கும், நாசிக்கிலுள்ள கோதாவரி கரைக்கும் சென்று புனித நீராடி வந்தனர். இங்கும், பல குடும்பங்களின் 'பர்தாக்களுக்குப்' பின்னும் உண்மையான பக்தி பேரளவிற்கு உயிருடன் இருந்துவந்தது. ஆனால், கொந்தளிப்பும் குழப்பமும் மிக்க அக் காலத்திற்குப் புலன்களுக்கு அப்பாற்பட்ட செய்தி

[1] W. G. Orr, 'Armed Religious Ascetics in N. India' என்னும் நூலைப் பார்க்க. (Bulletin of John Rylands Library, vol. xxiv, No. 1. Apr. 1940).

களையும், செயலற்ற நிலையினையும் அளித்ததல்லாமல் புத்துணர்ச்சியை ஊட்டக்கூடிய வேறொன்றையும் அது அளிக்கவில்லை என்றே கூறலாம்.

நாட்டில் உண்டான கலகத்தினாலும் குழப்பத்தினாலும் வாழ்வியல் கலைகள் பெரிதும் பாதிக்கப்பட்டன. கல்வியினைப் போன்றே கட்டடக் கலையும் போற்றி ஆதரிப்பாரில்லாமையினால் செழிப்படைய முடியவில்லை. கோயில்களும் மசூதிகளும் கட்டப்பட்ட நிலைமாறி, கோட்டைகள் கட்டப்பட்டன. 1750ஆம் ஆண்டிற்குப் பின்னர் மாபெரும் கட்டடங்கள் கட்டப்படவில்லை; நல்ல கட்டடங்கள் என்று சொல்லக்கூடிய முறையில் கட்டப்பட்டவை மிகச் சிலவே என்று கூறலாம். 1756-ல் கட்டப்பட்ட சப்தார் ஜங்கின் பிரமாண்டமான கல்லறையை ஷாஜகானின் மாண்புமிக்க மசூதியோடு ஒப்பிட்டுப் பார்ப்போமானால், கலைப்பண்புகளிலும் கலைமரபுகளிலும் நலிவு உண்டாகியிருப்பதை எளிதில் நாம் கண்டறியலாம். அவற்றைப் பத்தொன்பதாம் நூற்றாண்டில் கட்டப்பட்ட கட்டடங்களோடு ஒப்பிட்டுப் பார்ப்போமானால், அவை திடத்தன்மையற்றனவாகவும், ஊக்குவிக்கப் பெறுதனவாகவும் இருப்பதைக் காணலாம். அயோத்தி அரசு ஒன்றில் தான் கட்டடக் கலைமரபு போற்றிக் காக்கப்பட்டது. இங்குக் கலைப்பண்புகளில் காணப்படும் குழப்பங்களும், திரும்பத் திரும்ப சில கருத்துகளைப் பெயரளவிற்கு விரிவுபடுத்தி அமைத்திருப்பதும் மக்கள் மனக்குழப்பம் அடைந்திருப்பதையும், ஆர்வத்தை இழந்திருப்பதையும் மறைத்துவிட்டன. ஓவியக் கலையும்—முகலாய இராசபுத்திர மரபுகளைப் பின்பற்றிய ஓவியக் கலையும் இத்தகைய நலிவினையே அடைந்தது. பத்தொன்பதாம் நூற்றாண்டளவில் பஞ்சாபின் மலையடிவாரங்களை ஓவியக்கலை புகலிடமாகக் கொண்டிருந்ததைக் காணுகின்றோம். அங்குதான் ஓவியக் கலைமரபின் பல்வேறு குழுக்கள் உயிருடன் இருந்தன. நாட்டு மொழிகள் நாட்டுப் பாடல்களைப் பெயரளவில் பெற்றிருந்தன. ஆனால், இக்காலத்தில் உண்டான பெரிய இலக்கிய வளர்ச்சியாகக் குறிப்பிடத்தக்கது பிற்கால முகலாய மன்னர்களின் ஆதரவில் உருதுமொழி தோன்றி வளர்ந்தமையேயாகும்.

இந்தியா முழுவதிலும் புதிதாகப் பண்பாடும் நாகரிகமும் வளர்ச்சியடைந்ததற்குரிய அறிகுறிகள் இந்திய மக்களிடையே ஒன்றுகூடக் காணப்படவில்லை; அல்லது ஆக்கச்

செயல்களின் மின்னல்கள்கூடத் தோன்றவில்லை.[1] பண்டை மரபுகளைக் கண்மூடித்தனமாகப் போற்றிப் பின்பற்றுவதே அக்காலத்திய செயல் முறையாக இருந்துவந்தது; பண்டைக் கால வாழ்க்கை முறைக்குத் திரும்பிச் செல்லவேண்டும் என்னும் பேரவாவுமே மக்களிடையே இருந்துவந்தது. முகலாய அரச மரபினைப்போன்றே இந்திய சமுதாயமும் 'விண்ணுலகக் கட்டளையை' இழந்துவிட்டது என்றே கூறலாம். எப்பொழுதும்போலவே துணிவு, ஆற்றல், திறமை, ஈடுபாடு, பற்றுறுதி ஆகியவை அனைத்தும் இந்திய மக்களிடத்துப் பெயரளவில் காணப்பட்டன. ஆனால், இப் பண்புகள் அனைத்தும் பயனற்ற முயற்சிகளிலும், கைவிடப் பட்ட நம்பிக்கைகளிலும் தாமாகவே பாழாக்கப்பட்டன; அல்லது எதிர்மறை காரணங்களுக்காகவும், அழிவை உண்டாக்கும் முயற்சிகளுக்காகவும் அப் பண்புகள் வீணாக்கப் பட்டன.

நாம் பிரிட்டிஷாரின் ஆட்சிக் காலத்திய இந்தியாவின் நிலையைப் பார்ப்போமானால், அது மேலெழுந்தவாறான அளவில் சிறிதளவு வேறுபட்ட நிலையுடன் விளங்கியதைக் காண்கிறோம். பிரிட்டிஷார் சென்ற இடமெல்லாம் அமைதி யையும் ஒழுங்கையும் நிலைநாட்டி வந்தனர்; வாணிகம் செய்வதற்குரிய வசதிகளைச் செய்து கொடுத்தனர்; வரிகள் காலந்தவறாமல் வசூலிக்கப்பட்டு வந்தன; நீதிமன்றங்கள் ஒழுங்காகவும் முறையாகவும் செயலாற்றி வந்தன. மனிதன் உணவு ஒன்றினால்மட்டும் வாழமுடியாததைப் போன்று, நாட்டில் உண்டான அமைதி ஒன்றினால்மட்டும் வாழ முடிய வில்லை. இவ்வமைதியுடன் பண்பாட்டின் மறுமலர்ச்சி உடனிகழ்ச்சியாகத் தோன்றவில்லை. கல்கத்தாவில்மட்டும் ஏதோ அறிவுத்துறைச் செயல் முறைகளின் அறிகுறிகள் சில தோன்றலாயின. எல்லா வகையான பொறுப்புமிக்க பொது வாழ்க்கையிலிருந்தும் இந்தியர் விலக்கி வைக்கப்பட்டனர். அதன் விளைவாக மிகச் சிறந்த மனிதர்களெல்லாம் பொது வாழ்க்கையின் புறத்தே தனிமையில் பகைமையுணர்வோடு நிற்கலாயினர். அறியாமை நிறைந்த அதிகாரிகளின் பொறுப்பற்ற பிரதிநிதிகளால் பேரளவிற்கு அதிகாரம்

[1] எனினும், ஷாவாலி-வுல்லாவும், அவர் குழுவைச் சார்ந்த இஸ்லாமிய சமயவாதிகளின் பணியும் இங்குக் குறிப்பிடத் தக்கதாகும். அக் குழுவின் பணி பெரும் விளைவுகளுக்குக் காரணமாக இருந்தது. பார்க்க: பிரிவு பத்து, இயல் 5.

செலுத்தப்பட்டு வந்தது. புதிய ஆட்சியாளர்கள் தங்களுடைய எளிமையான ஊழலின் முதல் நிலையைக் கண்டனர். அவர்கள் முன்பு செய்த தவறுகளும், நாட்டின் பல்வேறு பகுதிகளைப்பற்றி நன்கு அறியாமல் இருந்தமையால் அடைந்த துன்பங்களும், அவர்களுடைய நன்னோக்கங்களும், அனுபவ வளர்ச்சியும் அவர்களைத் திருத்தவில்லை. அதன் விளைவாக அவர்களுடைய ஆட்சிமுறை கடுமையானதாக இல்லையென்றாலும், திறமையுடையதாக இருந்தும், தனித்து நிற்பதாகவும், உணர்ச்சியற்றதாகவும், மக்களால் அணுக முடியாததாகவும் இருக்கலாயிற்று. பிரிட்டிஷார் சிறந்தவர்களாக இருந்தனர். ஆனால், அவர்கள் வேற்று நாட்டவராக இருந்தனர். மீர்சா குலாம் ஹுஸ்ஸெயின் என்பவர், 'பிரிட்டிஷார் மக்களோடு கலக்காது தனித்து நிற்கின்றனர்; தங்களுடைய நலத்திலேயே அக்கறை காட்டிவருகின்றனர்; பிறர் புகழைப் பாடுபவர்களே அவர்களைச் சூழ்ந்துகொண்டிருக்கின்றனர்' என்று அவர்களைப்பற்றி வருத்தத்தோடு முறையிட்டுக் கொண்டார்.[1] 1824ஆம் ஆண்டில் ஹுபர் பாதிரியார் லக்னோவிலிருந்தார். அவரிடத்து அயோத்தியின் அரசைப் பற்றி ஒரு படைவீரர் குறைபட்டுக்கொண்டார். அப்படைவீரனை, 'நீங்கள் பிரிட்டிஷாரின் ஆட்சியில் இருந்தால் வளமாகவும் நலமாகவும் இருப்பீர்கள் அல்லவா?' என்று பாதிரியார் கேட்டார். அதற்கு அவன், 'நாங்களே துயரம் நிறைந்தவர்களாக இருக்கிறோம்; எங்களுடைய துன்பங்கள் எல்லாம் சேர்ந்து, பிரிட்டிஷாரின் ஆட்சிக்குட்படாதவாறு காத்துவருகின்றன' என்று சொன்னான். அதற்குக் காரணம் என்னவென்று கேட்டபொழுது, அவ் வீரன், 'எங்கள் நாட்டின் பெயரும், புகழும், மதிப்பும் அழிந்துவிடும்' என்று மொழிந்தான்.[2] களைத்துப்போன சமுதாயத்தை, சிதறிப்போகும் சூழ்நிலையில் அல்லற்பட்ட சமுதாயத்தைக் குழப்பங்களினாலும் கலகங்களினாலும் அழிந்தொழியாதவாறு பிரிட்டிஷார் காக்க வேண்டியவர்களானார்கள். தங்கள் ஆட்சிக்குட்பட்ட பகுதிகளில் அச் சமுதாயத்தை நன்முறையில் திருத்தியமைத்து, நீதியையும், நேர்மையையும், அமைதியையும், ஒழுங்கையும் அவர்கள் நிலைநாட்டவேண்டியவர்களானார்கள். பண்பாட்டு வாழ்க்கையின் மிகச் சிறிய பொறியிலிருந்து எந்த அளவிற்குப் புத்துயிர்ப்புப் பெறுமாறு அவர்களால்

[1] Siyar-ul Mutaqherin, Vol. III, பக். 170-1.

[2] Bishop Heber, Narrative of a Journey...., Vol. I. ப. 405.

செய்ய இயலுமோ, அந்த அளவிற்குப் பண்பாட்டை வலுப் பெறுமாறு செய்ய முயன்றனர். மேலும், ஆளப்பட்டோருக்கும், ஆள்வோருக்கும், நாட்டு மக்களுக்கும், வெளிநாட்டவருக்கும் இடையே எளிதில் கலந்து பழகுவதற்குத் தடையாக இருந்துவந்த பிரிவினைச் சுவரினை எவ்வகையிலேனும் உடைத்தெறியவேண்டும் என்று அவர்கள் கருதினர். 1818ஆம் ஆண்டு ஹேஸ்டிங்ஸ் பிரபு, தம்முடைய முத்தாய்ப்பான அருளுணர்வோடு வந்தபொழுது, கம்பெனியின் ஊழியர்களுள் சிந்திக்கத் தெரிந்தவர்கள் இத்தகைய இந்திய நாட்டுச் சூழ்நிலையைக் கூர்ந்து கவனித்துக்கொண்டிருந்தனர். அவர்கள் பெற்ற வெற்றியினால் பெருமகிழ்ச்சியோ, வெற்றிக் களிப்போ, தற்பெருமையோ அவர்கள் அடையவில்லை. ஏனென்றால், அவர்கள் ஏற்றுக்கொண்டிருக்கும் பொறுப்பின் முக்கியத்துவத்தையும் அதன் பரிணாமத்தையும் நன்கு அறிந்திருந்தமையால், அவர்கள் செருக்கடையவில்லை.

வெல்லஸ்லியின் ஆட்சிக்காலத்தில் இளமையின் வீறு மிக்க அதிகாரிகள், வெல்லஸ்லியினுடைய செழிப்புமிக்க பேரரசுக் கோட்பாட்டையும், வலியதாக்கும் தலைமைப் பதவியையும் தங்களுடைய உணர்வுகளுக்கேற்றனவாக இருந்ததைக் கண்டனர். ஆனால், வெல்லஸ்லிக்குப் பிறகு வந்த இரு பேரதிகாரிகளும் வரலாற்றிலே சிறப்பிடத்தைப் பெறாமல் போகவில்லை. ஆனால், அவர்கள் அவ்வதிகாரிகளின் ஏமாற்றத்திற்கு ஆளானதால் அவர்களுடைய வசைமாரிகளைப் பெற்றனர் எனலாம். அவர்களுக்குப் பின்வந்த சிறுதரத்து அதிகாரிகள் நாட்டைக் கைப்பற்றுவதில் அவர்களுக்குச் சமமான ஆர்வத்தைக் காட்டிவந்தனர். இறுதியாக நடந்த மராட்டியப் போரின்போது இத்தகைய மனிதர்களடைந்த கிளர்ச்சியைப்பற்றி எட்வர்ட் தாம்ப்சன் மிக நன்றாக வருணித்துள்ளார். புதியதோர் உலகினைக் கைப்பற்றும் நிலையில் புதியதொரு சகாப்தத்தின் வாயிலில் தாங்கள் நிற்கின்ற உணர்ச்சியையும் மனவெழுச்சியையும் அவர்கள் பெற்றிருந்தனர். அவர்களுடைய மேல்நிலை அதிகாரிகள் இதற்கு மாறாகப் போதிய அளவிற்குப் போர்களையும், அதனால் உண்டாகக்கூடிய அழிவுகளையும் நேரில் கண்டறிந்து இருந்தனர். அவர்கள் சமூகத்தின் உள்ளார்ந்த ஆற்றலின் திறத்தை அறிந்தவர்களாக இருந்தனர். மேலும், அச் சமூகத்தின் நிலையற்ற ஆற்றலின்மைக்கு இடையே அதைக் கட்டிக் காக்கவேண்டிய பொறுப்பு அவர்களுடைய தலைவிதியாக அமைந்திருப்பதையும் அவர்கள் நன்குணர்ந்து இருந்தனர்.

எனவே, அவர்கள் முன்னெச்சரிக்கையுடன் நடந்துகொண்டனர். பேரரசை விரிவுபடுத்தும் கோட்பாட்டாளர்களின் முன்னோடிகளாக முன்னர் இருந்தவர்கள் எல்லாம் இப்பொழுது நடுநிலைக் கொள்கையை எடுத்துரைக்கும் அறிவுரையாளர்களாக மாறினர். அவர்கள் சமூக, அரசியல் எரிமலைமீது அமர்ந்திருப்பதாக நம்பினர். அம் மலை தற்சமயம் அவிந்து அமைதியாக இருக்கிறது என்பதையும் அவர்கள் நன்குணர்ந்து இருந்தனர். அது உண்மை. எனினும், அது எந்நேரத்தில் வேண்டுமானாலும் புதிய செயல்களின்மூலம் தீப்பிழம்பினை வெளியே வாரி வீசலாம் என்பதையும் அவர்கள் மறந்துவிடவில்லை. மெட்கா:ப் தமது முப்பத்துமூன்றும் வயதில் ஏதோ வயது முதிர்ந்த, அனுபவம் கனிந்த, தொண்டு கிழவரைப்போன்று பிரிட்டிஷ் குடியேற்ற நாட்டிற்கு உண்டாகக்கூடிய 'இடையூறுகளையும் இன்னல்களையும்' பற்றி விரிவாக எழுதியுள்ளார். உணர்ச்சியற்ற உள்ளத்தோடு பண்டை இலக்கியங்களில் மூழ்கித் திளைத்த எலிபின்ஸ்டன், 'நம்முடைய இந்தியப் பேரரசு நெடுங்காலம் நிலைத்துநிற்கப் போவதில்லை என்னும் நம்பிக்கை தப்பெண்ணமாகாது; ஆழ்ந்து சிந்தித்த சிந்தனையின் முடிவேயாகும்' என்று அச்சத்துடன் கூறியுள்ளார். வீரர்களுக்கேயுரிய நன்னலக் கோட்பாட்டுடன் மால்கம், 'இந்தியாவைப் போன்ற பேரரசில் நாம் எப்பொழுதுமே ஆபத்தான நிலையில்தான் இருக்கிறோம்' என்று மொழிந்துள்ளார். நம்முடைய ஆட்சிமுறையில் காணப்படும் மாபெரும் குற்றம் 'புதிதாக அமைப்பதாகும்' என்று மன்ரோ தம்முடைய கருத்தைத் தெரிவித்துள்ளார். அயல்நாட்டுப் படையெடுப்பினாலும், உள்நாட்டுப் படைகளின் கலகத்தினாலும், சமயக் கிளர்ச்சியினாலும் தங்கள் பேரரசிற்கு ஆபத்துண்டாகலாம் என்பதை அவர்கள் அப்பொழுதே நன்கறிந்திருந்தனர். இவற்றுள் ஒன்றும் நடைபெறவில்லையென்றால், மக்கள் பிரிட்டிஷாரின் மேலாண்மையை உதறித் தள்ளுவதற்குரிய வகையில் வளர்ச்சி பெறுவர். 'இதுவே பிரிட்டிஷாரின் ஆட்சியை முடிப்பதற்குரிய விரும்பத்தக்க முடிவாகும்' என்று எலிபின்ஸ்டன் கருதினார். ஆனால், அத்தகைய வளர்ச்சி, ''அளவிட்டுரைக்க முடியாத நெடுந் தொலைவில் இருப்பதாகத்' தோன்றியது.

1600ஆம் ஆண்டில், அக்பருடைய ஆட்சிக்காலத்தில் அவருடைய பேரரசு விரிவடைந்து இருந்ததைக்காட்டிலும், இப்பொழுது பிரிட்டிஷாரின் பேரரசு மிகவும் விரிவானதாக இருந்தது. அக்பருடைய பேரரசு காந்தாரம், காபூல், படாக்

ஷான் வரை எட்டியிருந்தாலும், தெற்கே நருமதையாற்ருேடு அது நின்றுவிட்டது என்பது நாமெல்லாம் அறிந்த உண்மையாகும். இப்பொழுது சட்லெஜ், இராஜபுதனப் பாலைவனம் வரையிலுள்ள இந்தியாவின் முழு நிலப்பரப்பும் பிரிட்டிஷாரின் ஆட்சிக்குட்பட்டிருந்தமை இங்குக் குறிப்பிடத்தக்கதாகும். இராஜபுதனத்துக்கு அப்பால் சீக்கியருடைய அரசு இரஞ்சித் சிங்கின் ஆட்சிக்குட்பட்டிருந்தது; அதற்கப்பால் சிந்துவின் அமீர்களுடைய சிதறிய அரசுகளும், சிதைந்துகொண்டிருந்த ஆப்கானிய அரசும் இருந்தன. அம் மூன்றனுள் லாகூரில் இருந்த சீக்கிய அரசே நிலைபேறுடையதாக இருந்தது. சீக்கியர், அவர்களுக்குள்ளே சிறுபான்மையராக இருந்தனர். மற்ற இரு சமூகத்தினரை அடக்கியாளும் இராணுவ வல்லாட்சியாக சீக்கியருடைய அரசு விளங்கியது என்று கூறினல், அது மிகையாகாது. அடுத்த முப்பதாண்டுகளில் இவ்வாறு இருதிறக் கருத்துகள் உருவாயின. அயல்நாட்டுக் கொள்கை அவற்றுள் ஒன்று; இந்துஸ்தானத்திற்குள் பிரிட்டிஷாரின் குடியேற்ற நாட்டினை முழு வடிவினதாக்க வேண்டும் அல்லது குடியேற்ற நாடுகளைக் கைப்பற்றுவதை முடிவிற்குக் கொண்டுவர வேண்டும் என்பதே, அவ் அயல்நாட்டுக் கொள்கையின் தலையாய நோக்கமாக இருந்தது. இதுவரை பிரிட்டிஷார் இந்தியாவில் பெற்ற மேலாண்மையினையும் உடைமைகளையும் ஒழுங்குமுறைக்குட்படுத்திப் புதியதொரு பேரரசினை நிறுவவேண்டும் என்பது பிரிட்டிஷாரின் இரண்டாவது இலட்சியமாக இருந்துவந்தது.

பிரிட்டிஷாரின் ஆட்சிக்குட்பட்டிருந்த இந்தியாவிற்குள் இங்குதான் மிக முக்கியமான அரசியல் கோட்பாடு ஒன்றைப்பற்றிய முடிவிற்கு வரவேண்டியிருந்தது. குடியேற்ற நாட்டு அமைப்பினை உருவாக்கிவிடலாம் என்ருல், எவ்வாறு புதிய அரசினை ஆட்சிபுரிவது என்னும் சிக்கல் எழுந்தது. வங்காளத்தில் பெற்ற அனுபவத்தின் விளைவாக அயல்நாட்டுச் சுரண்டல் முறைபற்றிய எண்ணம் கைவிடப்பட்டது. இந்தியா இந்தியரின் நன்மைக்காகவே ஆட்சி புரியப்பட வேண்டும் என்ற நிலை உண்டாயிற்று. ஆனல், எத்தகைய ஆட்சிமுறையை இந்தியாவில் நிறுவுவது? இந்திய நாட்டிலே இருந்து நேரடியாகப் பிரச்சினைகளைக் கண்டவர்களுக்கு, முகலாயப் பேரரசிற்குப் புத்துயிர் கொடுத்து, அதை மீண்டும் தொடர்ந்து அரசாளுமாறு செய்வதே பிரச்சினையைத் தீர்ப்பதற்குரிய சிறந்த வழியாகத் தோன்றியது. முகலாயரையும் அவர்களுடைய அரசையும் அகற்றிவிட்டு, கம்பெனியே

பண்டை மரபு வழி ஆட்சிமுறையை நிலைநாட்ட முயலுவதும், தங்களுடைய புதிய மாதிரியான படைகளைக்கொண்டு நாட்டைக் காப்பதும் சிறந்த வழியாக ஆங்கிலேயர்கள் கருதலாயினர். இவ்வாறு செய்தால், முன்பிருந்ததைவிட வாணிகம் உரிமையுடன் பெருக முடியும் என்றும், நேர்மையான முறையில் போற்றி ஆதரிக்கப்படும் ஆட்சிமுறையினால் கலை, பண்பாடு, சமயங்கள் ஆகிய அனைத்தும் புத்துயிர்ப்புப் பெறுவதுடன் புதுமலர்ச்சியை அடைய முடியும் என்றும், பழைய முகலாயர்களின் ஆட்சியின் விரிந்த நிலையாகவே புதிய பிரிட்டிஷாரின் ஆட்சி அமைந்து விளங்கும் என்றும் அவர்கள் நம்பினர். வாரன் ஹேஸ்டிங்ஸும் அவருடைய நண்பர்களும் இக் கருத்துகளைக் கொண்டவர்களாக இருந்து வந்தனர். வாரன்ஹேஸ்டிங்ஸ் ஆட்சிக்காலம் முதல் உள்நாட்டுக் கொள்கையின் உள்ளார்ந்த பண்பாக இக் கருத்துகள் இருந்துவந்தமை இங்குக் குறிப்பிடத்தக்கதாகும். எனினும், சிற்சில மாற்றங்கள் உண்டானமை மறுக்கமுடியாத உண்மையாகும். இதுவரை இந்தியாவை இந்திய அரசு—இந்தியரின் செயலாண்மை நிலையம் ஆட்சிபுரிந்து வந்தது. ஆனால், அதற்குப் பதிலாக இப்பொழுது ஐரோப்பியச் செயலாண்மை நிலையம் இந்தியாவின் ஆட்சிப் பொறுப்பை ஏற்றுக் கொண்டது; இஸ்லாமிய குற்றவியல் சட்டங்களையும், நீதி வழங்கும் முறைகளையும் மாற்றி, பிரிட்டிஷாரின் சட்டதிட்டங்களையும் நீதி வழங்கும் முறைகளையும் ஆங்கிலேயர் புகுத்தினர். 1818ஆம் ஆண்டுவரை பிரிட்டிஷாருடைய உள்நாட்டுக் கொள்கையின் போக்கு, மக்களுடைய நன்மையை நாடும் வல்லாட்சியைப் புத்துயிர் பெறச் செய்வதும், அதைச் சீர்திருத்தி மேன்மேலும் விரிவடையச் செய்வதுமாக இருந்தது.

ஐரோப்பாவில் நிலவும் புதிய கருத்துகளின் எழுச்சியை இந்தியாவில் பரவவொட்டாமல் தடுத்திருந்தால்—இந்தியாவைத் தனியாக ஐரோப்பாவிலிருந்து பிரித்துவைத்திருந்தால், அத்தகைய திட்டம் செயலாற்றக்கூடியதாகவே அமைந்திருக்கும். புது உலகக் கருத்துகள் கீன்முநாடுகளுக்குப் பறந்து செல்லவொட்டாமல் தடுக்கப்பட்டிருக்கலாம். ஆனால், இந்தியாவினை நேரடியாகக் கண்காணித்துவரும் பணிமக்களை இயக்கிவந்த பிரிட்டனில் இருந்த பிரிட்டிஷார்களே அக் கருத்துகளுக்கும் கொள்கைகளுக்கும் அடிமைப்பட்டுக்கிடந்தனர். எல்லாச் செயல்களும் எல்லாப் பொருள்களும் நன்கு பழக்கப்பட்ட முறைகளிலேயே தொடர்ந்து இயங்கவேண்டும் என்ற

வெளிநாட்டு ஆட்சியாளர்களின் இலட்சியம், உருவாக்கப்பட்ட சிறிது காலத்திற்கெல்லாம் அவ் எண்ணம் அடியோடு தகர்த் தெறியப்பட்டது. பிரிட்டனில் அக் காலத்தில் நிலவிய எண்ண அலைகளினால் இந்தியாவில் பணிபுரிந்த பிரிட்டிஷாரின் பிரதி நிதிகள் அலைக்கப்பட்டனர். அவ் எண்ண அலைகளுக் கேற்பவே அவர்களுடைய ஆட்சிமுறைக் கொள்கைகளும் உருவாக்கப்பட்டன. இந்து நிலையங்களையும் பண்பாட்டை யும் வியந்து பாராட்டிய ஜேம்ஸ் ஃபோர்பஸ் (James Forbes), ஸ்காட் வாரிங் (Scott Waring) போன்ற பெருமக்கள், பண்டை இந்தியப் பண்பாட்டின் புத்துயிர்ப்பையும் புது வாழ்வையும் விரும்பியதோடு, அவை அழிந்தொழியாமல் நிலைத்து விளங்குவதற்கு ஆவன செய்யவேண்டியதே பிரிட்டி ஷாரின் கடமையாகும் என்னும் கருத்துகள், பிரிட்டனில் இருந்து முன்னேற்றக் கருத்துகளைக்கொண்ட குழுக்களின் கொள்கைகளுக்கும், சமயக் குழுக்களின் கொள்கைகளுக்கும் மாறுபட்டனவாக இருந்தன. அறிவொளி ஊழிக்காலம் பகுத்தறிவில் நம்பிக்கையும், முன்னேற்ற வளர்ச்சியில் நம்பிக்கையும் கொண்டிருந்தது; பயன்வழிக்கொள்கை யினரின் (Utilitarians) அன்புப் பணிபுரியும் கொள்கையினை அது பேரார்வத்தோடு போற்றி வளர்த்தது. மேலும், அறிவொளி ஊழியில் (Age of Enlightenment) அரும்பிய பயன்வழிக் கோட்பாட்டு நெறி, எவ் இடத்திற்கும் தன்னுடைய கொள்கைகள் செயற்படுத்துவதற்குப் பொருத்த மானவையென்றும், உகந்தவை என்றும் நம்பி வந்தது. இந்தியாவின் நல்வாழ்வில் நாட்டம் கொண்ட ஜேம்ஸ் மில் பயன்வழிக்கொள்கையினருள் தலைசிறந்தவராவார். அவர் 1809ஆம் ஆண்டு, 'இந்திய வரலாறு' என்னும் நூலை எழுதத் தொடங்கி, 1817ஆம் ஆண்டு அதை நூலாக வெளி யிட்டார். மேலே குறிப்பிட்ட பண்புகள், 'எவான்ஜெலிகன்' (Evangelical Movement) எனப்படும் கிறித்துவ சமய அறவோர் இயக்கத்திலும் வெளிப்பட்டன. அவ் வியக்கத்தின் செல் வாக்குமிக்க தலைவரான வில்லியம் வில்பர்ஃபோர்சு, பிட்டின் நண்பராகவும், கம்பெனியின் இயக்குநர் குழுவைச் சேர்ந்த சார்லஸ் கிராண்ட்டின் நெருங்கிய நண்பராகவும் இருந்தார். கிறித்துவ சமய அறநெறிக் கொள்கைகள் உலகின் எப்பகுதி யிலும் பொருந்திவரக்கூடியவை என்னும் நம்பிக்கையுடைய வர்களாக அவர்கள் இருந்துவந்தனர். இந்தியாவின் அறநெறி நல்வாழ்விற்கு இப்பொழுது பிரிட்டனே அறநிலையக் காவல ராக இருந்துவந்தமையால், இந்தியாவில் புனித விவிலியத்தை இந்திய மக்களிடையே பரப்பவேண்டியது தங்களுடைய

புனிதமான சிறந்த சமயப் பணியாகும் என்று அவர்கள் நம்பினர். இவ்விரு கொள்கையினரும் இந்திய மக்கள் வாழ்க்கையிலும் சிந்தனையிலும் போற்றிப் பாராட்டத்தக்க பண்புகள் ஒன்றைக்கூடக் காணவில்லை. இந்திய மக்களின் வாழ்க்கை, பேரளவிற்குச் சமயத்தோடும் வழக்காற்று மரபு களோடும் கட்டுண்டு கிடந்தது; இந்நிலை பயன்வழிக் கொள்கையினருக்கு மூடநம்பிக்கையாக அல்லது பகுத் தறிவைப் புறக்கணிப்பதாகத் தோன்றியது. 'எவான் ஜலிகன்' குழுவினருக்கு அந்நிலை மூடநம்பிக்கையாகத் தோன்றியதோடு கடவுளின் இருப்பை மறுப்பதாகவும் தோன்றியது.

அவ்வாண்டுகளில் இந்திய ஆட்சிமுறைக் கொள்கையைப் பற்றிய விளக்கத்தில் விரிவானதும், வேறுபட்டதும், சிறப் பியல்பு வாய்ந்ததுமான மூன்று வகையான சிந்தனைகளின் போக்கினைக் காணலாம். முதலாவதாக, அங்கு டோரிகள் (Tory) எனப்படும் பழைமைப் பற்றுளர்களின் (Conservatives) எண்ணப்போக்குச் சிறப்பிடம் பெற்றது. கீழை நாடுகளின் நாகரிகப் பண்பாட்டு ஆராய்ச்சியில் பொன்றுப் புகழ்பெற்ற H. H. வில்சன் என்பவர் பழைமைப் பற்றுளர் குழுவின் தனிச் சிறப்புவாய்ந்த அறிஞராவர். நிலைமையைச் சீர்திருத்துவதற் குரிய வாய்ப்புகள் பல உள்ளன என்பதை மறுக்காமலேயே, அவர்கள் மிகுந்த முன்னெச்சரிக்கையுடன் செயலாற்ற வேண்டும் என்று பரிந்துரைத்தனர். இந்தியப் பண்பாட்டின் நிலையங்களுடைய பயன்மதிப்பையும், ஆற்றலையும் கண்டு அவர்கள் அகமகிழ்வு கொண்டனர். அவை விரைவில் அழிவ தற்கு வாய்ப்புகள் இல்லை என்பதை அறிந்திருந்த அவர்கள், அவற்றைப் போற்றிக் காப்பதையும், புதுப்பித்து மீண்டும் நடைமுறைக்குக் கொண்டுவருவதையும் பெரிதும் விரும்பினர். அறிவற்ற முறையில் தலையிடுவதால் அல்லது அவசரப்பட்டுச் சீர்திருத்தம் செய்வதால் இந்திய மக்களிடையே கடுமையான எதிர்ப்புணர்ச்சியைத் தோற்றுவிக்க நேரிடும் என்றும், அதனால் பெருந் துன்பம் உண்டாகும் என்றும் அவர்கள் கருதியதோடு, செயலாற்றுவதில் மிகுந்த முன்னெச்சரிக்கை யுடன் நடந்துகொண்டனர். அவர்கள் சமஸ்கிருத, அராபிய மொழிக் கல்வியைப் பரப்ப விரும்பினர்; கிறித்தவ சமயத் தொண்டர் குழுக்கள் இந்தியாவிற்குச் சென்று பணிபுரியக் கூடாது என்னும் கருத்துடையவர்களாக இருந்தனர். உடன் கட்டையேறுதலைச் சட்டப்படி தடுப்பது நெருப்போடு விளை யாடும் விளையாட்டைப்போன்றது என்று அவர்கள் கருதினர்.

இரண்டாவது, எண்ணப்போக்கு முற்போக்கான டோரிக் கட்சியினரின் கருத்தாகும். மாபெரும் ஆட்சித்துறை வல்லுநர்களான மெட்கா∴ப், மன்ரோ, மால்கம், எலி∴பின்ஸ்டன் போன்றவர்கள் பல்வேறு நிலைகளில் இக் குழுவினைச் சார்ந்தவர்களாக விளங்கினர். அவர்கள் இந்திய நாட்டின் நிலைமையை வளர்ச்சியுறச் செய்வதற்குச் சீர்திருத்தங்கள் செய்யவேண்டும் என்பதையும், மேலைநாட்டுக் கருத்துகளையும், பயன்மதிப்புக் கொள்கைகளையும் இந்தியாவில் புகுத்தவேண்டும் என்பதையும் ஒப்புக்கொண்டனர். ஆனால், மரபுவழி நிலையங்களின் பயன்மதிப்பையும், மரபுவழி உணர்ச்சியின் ஆற்றலையும் அவர்கள் கண்கூடாகக் கண்டதனால் அவற்றைப் பெரிதும் மதித்துப் போற்றினர். எனவே, எச்சரிக்கையுடன் புதிதாக அமைக்கவேண்டும் என்பது அவர்களுடைய மேற்கோளுரையாக இருந்து வந்தது. பழைமைக்கும் புதுமைக்கும் இடையே முடிவாக நேரக்கூடிய ஒருமைப்பாட்டை அவர்கள் ஆவலோடு எதிர்பார்த்தனர்.

> ‘நாம் படிப்படியான முன்னேற்றத்தை நோக்கிச் செல்லுவோமாக. நம்முடைய ஆட்சி முடிவிற்கு வருகிறபொழுது—எப்பொழுதாகிலும் அது ஒரு முடிவிற்கு வந்தேயாகவேண்டும் (அக்காலம் வேண்டுமானால் நெடுந்தொலைவில் இருக்கலாம்)—நாம் அறிவு வளர்ச்சியினை இந்நாட்டில் பரப்புகின்ற காரணத்தினால் அதன் விளைவாக நம்முடைய ஆட்சி ஒரு முடிவிற்கு வந்தே தீரும். அப்பொழுது, இந்தியா நெடுங்காலம் தொடர்ந்து அடிமை நாடாக இருப்பதைக் காட்டிலும், அந் நாடு நாகரிகத்தில் வளர்ச்சியுற்றுச் சிறப்படையச் செய்த தேசிய இனத்தைச் சேர்ந்தவர்கள் நாம் என்று பெருமைப்படலாம். நம்முடைய ஆதிக்கம் மறைந்த பிறகு, நம்முடைய பெயர் இந்திய மக்களால் மதிப்புடன் போற்றப்படும்; அவ்வாறு அவர்கள் போற்றுமாறு நாம் என்றுமே மனிதரால் அமைக்கப்படாத பெருந்தன்மை மிக்கதும் பொன்றுப் புகழ் வாய்ந்ததுமான அறநெறி நினைவுச் சின்னத்தை இந்தியாவிலே நிறுவி விட்டுச் செல்லுவோம்.’[1]

[1] Sir J. Malcolm, ‘Memoir on Central India,’ Vol. II, p.304.

மூன்றாவது வகையான சிந்தனைக் குழுவினரை நாம் தீவிர வாதிகள் என்று கூறலாம். அவர்களுடைய கொள்கை பகுத்தறிவு இயக்கத்திலும், சமய இயக்கத்திலும் கிளைகளை யுடையனவாக இருந்தன. பெந்தாமும் (Bentham), ஜேம்ஸ் மில்லும் பகுத்தறிவு இயக்கத்தின் மிகப்பெருஞ் செல்வாக்கு மிக்க தலைவர்களாக விளங்கினர். அவர்களுடைய கொள்கை களைப் பின்பற்றும் மாணவர்களாக மெக்காலேயும், வில்லியம் பெண்டிங்கு பிரபுவும், சார்லஸ் டிரெவெலியனும் விளங்கினர். வில்பர்ஃபோர்சும் கிளாப்பாம் (Clapham) சமயக் குழுவினரும், எவான்ஜலிகன் சமயத்துறைத் தலைவர்களாக விளங்கினர். வெறுப்புணர்ச்சி மறைந்து, சிந்திக்கும் ஆற்றல் வளரும் என்றும், பொய்ம்மை மறைந்து, உண்மை என்றைக்காகிலும் ஒரு நாள் ஒளிவிட்டுப் பிரகாசிக்கும் என்றும் மனமார அவர்கள் நம்பியதனால், பெருந் துணிச்சலுடன் இந்திய நாட்டின் நாகரிகத்தைப் புதிதாக அமைப்பதில் அவர்கள் பேரார்வம் காட்டினர். பகுத்தறிவின் ஒளியும், விவிலியத்தின் ஒளியும் இந்திய மண்ணில் ஒளிவிட்டுப் பிரகாசிக்குமாறு செய்யப்படுமானால், அவை தாமாகவே என்றும் ஒளிமயமாய் ஒளிரும் என்றும் அவர்கள் நம்பினர். அதனால் இந்தியர்கள் தங்களைத் தாங்களே ஒளிமயமான வாழ்க்கைக்குத் தகுதி யுடையவர்களாக மாற்றிக்கொள்ளுவர் என்றும், அதன் மூலம் புதியதொரு சமுதாய அமைப்பு உருவாகும் என்றும் அவர்கள் கருதினர்.

இந்த மூவகைக் குழுக்களும் தனிப்பட்ட மூவகைக் கட்சிகள் என்று நாம் கருதக்கூடாது. ஆட்சிமுறைத் திட்டங்களை முடிவு செய்யும் பாராளுமன்றத்திலோ, கம்பெனி யின் இயக்குநர் செயல் மன்றத்திலோ, ஆட்சிப் பொறுப்பைப் பேரளவில் ஏற்றுக்கொண்டு இருக்கும் மக்களிடத்திலோ செல்வாக்குடைய முப்பெரும் ஆற்றல்மிக்க பண்புகளாக, இயக்கங்களாக அவை விளங்கின. தனி மனிதர்களின் மனப் போக்கும் வாய்ப்பும் இப் பேராற்றல் மிக்க சக்திகளுக்கு இடையே காணப்பட்ட வேறுபாடுகளை மிகக் குறைந்த அளவினவாக மாற்றியமைத்து இருக்கலாம். மிகக் குறைந்த அளவிற்கே சீர்திருத்தம் செய்யலாம் என்னும் கருத்தினைக் கொண்டிருந்த குழுவொன்றும், மேலைநாட்டுப் பாணியில் நன்கு வரையறுக்கும் முறையில் திட்டமிட்டுப் புதிய திட்டங் களைச் செயற்படுத்தலாம் என்ற கருத்தினைக் கொண்டிருந்த மற்றொரு குழுவும் இங்கிலாந்தில் இருந்தன என்று பொது வாகச் சொல்லலாம். இவ்விருவகைக் குழுக்களுக்கும்

இடையே தொடர்ச்சியான பல படிநிலைகள் காணப்பட்டன என்பதும் இங்குக் குறிப்பிடத்தக்கதாகும். பல்வகையான சொல்லாய்வுகளிலிருந்து இந்திய நாகரிகப் பண்பாடு இறக்கும் நிலையை அடையவில்லையென்றாலும், வளர்ச்சியற்ற தேக்க நிலையை அடைந்துவிட்டது என்பதையும், மேலைநாட்டு நாகரிகம் முன்னேற்றப் பாதையில் ஏறுநடை போட்டு ஏற்ற முற்றுக்கொண்டிருந்தது என்பதையும் நாம் உய்த்துணரலாம். எனவே, யாதாகிலும் மாற்றம் செய்வதென்றால், அது மேலைநாட்டு முறையிலே அமையவேண்டும் என்பது இன்றியமையாததாயிற்று. இரண்டாவதாகச் சீர்திருத்தம் செய்வது, புதிதாக அமைப்பது என்பன இப்பொழுது ஆங்கிலேய மக்களுடைய மனநிலையின் கூறாக அமைந்திருந்தன. 'செம்மைப்படுத்துதல்' என்பது மந்திர சக்தி வாய்ந்த சொல்லாக அக்காலத்தில் விளங்கியது. அச்சொல்லினை டோரிகள் வேளாண்மைத் துறைக்குக்கூடப் பயன்படுத்தி வந்தார்கள். எத்தகைய திருத்தங்களைச் செய்து செம்மைப்படுத்தலாம் என்பதைப் பற்றிச் சிந்திக்காது, ஆங்கிலேயர்கள் எந்தச் செயலைச் செய்யவும் முன்வருவதில்லை.

இக் குழுக்களின் கருத்துகளும் முடிவுகளும் ஆட்சியாளர்களிடத்துச் செல்வாக்குற்றபொழுது, அவர்களுடைய எண்ணங்களாலும், நிகழ்ச்சிகளின் ஆற்றலாலும் மாற்றம் பெறலாயின. மேலும், ஆட்சித் துறையினர் பெற்றிருந்த அனுபவத்தின் ஆற்றலாலும், அன்றைய பிரிட்டிஷாரிடையே நிலவிய உள்ளப் போக்கினாலும் அவை சிறிது மாற்றம் பெற்றன. பல பகுதிகளில் குழப்பங்களும் கொந்தளிப்புகளும் எடுத்தியம்ப முடியாத அளவிற்கு மோசமாகிவிட்டமையால், அதற்கு முன்பு அவற்றிற்கு ஒப்பாக எதையும் சுட்டிக்காட்ட முடியாத அளவிற்கு இழிந்த நிலையை அடைந்துவிட்டது. எனவே, செயலற்ற தலைமைப் பதவி வகிப்பதைத் தொடர்ந்து பின்பற்றவொட்டாதவாறு, நாட்டிலே நடைபெற்ற நிகழ்ச்சிகள் ஆங்கிலேயர்களை நிலைகுலையச் செய்தன. குற்றவியல் சட்டமாகவோ, ஆட்சித்துறை முறைகளாகவோ, இவற்றைப் போன்ற வேறு எந்தச் செயல்களாகவோ, கருத்துகளாகவோ இருந்தாலும், அவை அனைத்தும் அன்றைய இங்கிலாந்தில் நிலவிய மனித நலக் கோட்பாட்டினை—மன்பதைத் தொண்டினை பாதிப்பதாக இருந்தன. அல்லது மனச்சான்றையோ, மேலைநாட்டாரின் பொருத்தமான மனப்பண்பையோ அவை பாதிப்பனவாகக் காணப்பட்டன.

அறுபதுகளில் வங்காளத்தில் அரசியல் ஆதிக்கம் முறிந்ததைப் போன்ற புதிய சூழ்நிலைகள் மற்றத் துறைகளில் உருவானமை, அவற்றைத் தீர்ப்பதற்குரிய புதிய முறைகளை—சரிப்படுத்தும் செயல்களைப் பின்பற்றுமாறு தூண்டியது எனலாம். அவ்வாறு அவர்களால் மேற்கொள்ளப்பட்ட செயல்முறைகளுள் கிராமப் பஞ்சாயத்து ஆட்சிமுறையைப் புதுப்பிப்பது போன்ற முயற்சிகளாக அமையாதவை எல்லாம் மேலைநாட்டுக் கருத்துகளாலும் முறைகளாலும் எப்பொழுதும் ஊக்குவிக்கப்பட்டுவந்தன. இதற்கு மாறாகத் தீவிர ஆட்சிமுறைக் கொள்கைகளை முழுவதும் செயற்படுத்துவதற்காக இந்தியாவில் புகுத்துவதை அனுபவமும் பொது அறிவும் தடுத்துவந்தன. நாம் எளிதிலே புறக்கணிக்க முடியாத அதிகாரிகளின் கருத்துகளும், பொதுவாகத் தீவிரவாதிகளின் கொள்கைகளுக்கு நேர்மாறானவையாக இருந்துவந்தன. அவர்களுடைய கருத்துகள் உண்மை என்பதை, 1856ஆம் ஆண்டில் உண்டான வேலூர் புரட்சி போன்ற பல நிகழ்ச்சிகள் உறுதிப்படுத்திவந்தன. சுருக்கமாகக் கூறுவதென்றால் மால்கமினுடைய ஆட்சிமுறைத் திட்டத்தைப் போன்றவொன்று பின்பற்றப்பட்டுவந்தது எனலாம். முதலில் பண்டை மரபுகளைத் தொடர்ந்து போற்றிக் காப்பதிலும், முன்னெச்சரிக்கையோடு இருக்கவேண்டிய தேவையைப்பற்றியும் மிகுந்த கவனம் செலுத்தப்பட்டுவந்தது. பென்டிங்கின் ஆட்சிக்காலம் முதல் எச்சரிக்கையுடன் இருக்கவேண்டிய தேவையை மறந்துவிடாத நிலையில், புதிதாக அமைக்கவேண்டிய செயல்திட்டங்களில் நாட்டம் இருந்துவந்ததைப் பார்க்கிறோம். டல்ஹௌசியின் காலம் வரையில் சீர்திருத்தங்களால் என்ன விளைவுகள் உண்டாகுமோ என்ற அச்சம் இருந்துவந்தமையால், மேலும் மேலும் முன்னேற்றமான சீர்திருத்தங்களைச் செய்வதற்குரிய நம்பிக்கை இல்லாமல் இருந்துவந்தது. மற்ற சக்திகளெல்லாம் எழுச்சி பெற்ற பிறகும், நெடுங்காலத்திற்கு எச்சரிக்கையோடு இருக்குமாறு செய்ததோடு, இம் மனநிலையைப் புரட்சி (சிப்பாய் கலகம்) அடியோடு அடக்கியொடுக்கிவிட்டது என்றே கூறலாம். புரட்சி, இத்தகைய மனப்போக்குத் தேவையற்றது என்றும், ஊறு விளைவிப்பது என்றும், இறுதியில் இடர்ப்பாடானது என்றும் உணருமாறு செய்தது.

மேலைநாட்டுக் கருத்துகளுக்கும், கொள்கைகளுக்கும், புதிய திட்டங்களுக்கும் இந்தியரின் மாற்றுச் செயல்களாக இந்தப் புதிய சக்திகள் விளங்கின. 1818ஆம் ஆண்டிற்கு

முற்பட்ட காலத்தில் எல்லாம் மேலைநாட்டுக் கருத்து களுக்கும் கொள்கைகளுக்கும் படைத்துறையில்தான் மாற்றுச் செயல் காணப்பட்டதேயொழிய வேறு துறைகளில் எத்தகைய மாற்றுச் செயலும் தோன்றவில்லை. அரசர்கள் மேலைநாட்டுப் படைகளின் ஒழுங்குமுறையையும் பீரங்கிப் படையின் பேராற்றலையும் நன்கறிந்திருந்தனர். ஆனால், அவர்கள் மேலைநாட்டில் வளர்ந்துவரும் அறிவியலைப் பற்றியோ, மக்கள் உரிமைகளைப்பற்றியோ ஒன்றும் அறியா தவர்களாக இருந்தனர் (ஔரளவிற்குத் திப்பு இதற்கு விதி விலக்காக இருந்தார் என்று கூறலாம்). முதன்முதலாக வங்காளத்தில்தான் மேலைநாட்டு நாகரிகப் பண்பாடு பேரள விற்கு இந்திய மக்கள் உள்ளத்தைத் தாக்கியது என்று கூறலாம். விரிந்த அளவில் பரவிய ஆங்கிலக் கல்வியறிவு, கருத்துமுதற் கொள்கைப் பாலத்தை அமைத்துத் தந்தது. மேலைநாட்டுக் கருத்துகள், பிரிட்டிஷ் வழக்கறிஞர்கள், அதிகாரிகள், சமய அன்புப் பணித் தொண்டர்கள்மூலம் இந்திய நாட்டில் வெள்ளப் பெருக்கெடுத்து ஓடின. மேலும், விருப்பு வெறுப்பற்ற நிலையில் அறிவாராய்ச்சித் துறையில் ஈடுபாடுகொண்ட கல்வியில் சிறந்த சர் வில்லியம் ஜேம்ஸ் போன்ற அறிஞர்கள்மூலமும் மேனாட்டுக் கருத்துகளும் கொள்கைகளும் பொங்கி வழிந்தன. இந்திய வழக்காற்று மரபாகிய களைகளை அப்புறப்படுத்தும் வகையில், இவ் வித்துகள் விரைவில் முளைத்துச் செழித்து வளர்ந்துவிடும் என்று தீவிரவாதிகள் நம்பினர். ஆனால், அம் முறையின் வளர்ச்சி மிகப் பையவே நடைபெற்றதைக் கண்டு, அவர்கள் ஏமாற்றம் அடைந்தனர். அடுத்த தலைமுறையைச் சேர்ந்த வர்கள் பெரிதும் நம்பிக்கையற்ற நிலையில் வருத்தப்பட்ட தோடு, மாற்றமும் வளர்ச்சியும் அடைய விரும்பாத கீழை நாடுகளைப்பற்றிப் பரிவு உணர்ச்சியுடன் அங்கலாய்த்தும் வந்தனர். ஆனால், நாம் எந்த ஆண்டுகளைப்பற்றி இங்குப் பேசிக்கொண்டிருக்கிறோமோ, அதே ஆண்டுகளில் மேலை நாட்டுப் புத்தம் புதிய—புரட்சிமயமான கருத்துகளும் கொள்கைகளும் இந்திய மண்ணில் வேரூன்றத் தொடங்கின என்பது முக்கியமாக நாம் நினைவுகூரத்தக்கதாகும். எதிர் பார்த்ததைவிட அக் கருத்துகள் மிகமிகப் பையவே இந் நாட்டில் செல்வாக்குப் பெற்றமை மட்டும் உண்மையாகும். ஆனால், அம் முறை செயற்படத் தொடங்கிவிட்டது. அது வளர்ச்சியுறத் தொடங்கியபொழுதே, புதிய இந்தியா இன்று அடைந்துள்ள மாபெரு வளர்ச்சியையும் முன்னேற்றத் தையும் அது முன்கூட்டியே வரையறுத்து முடிவு செய்வதாக

அமைந்தது எனலாம். இந்த முறையே, இருபதாம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் சிறப்புற்று விளங்கும் இன்றைய இந்தியாவை, ரோமானியர்கள் ஐந்தாம் நூற்றாண்டில் விட்டு விட்டுச் சென்ற பிரிட்டனிலிருந்து வேறுபடுத்திக் காட்டுகிறது. மேற்கண்ட நாடுகளுள் ஒன்றனுள் உள்ளார்ந்த பண்புகள் எல்லாம் முறையாக வளர்ந்து சிறப்புறத் தொடங்கின; மற்றொன்றில் தொடர்பில்லாததும், அயல்நாட்டிற்குரியதும், அயற்பண்புடையதுமான பண்பாடு வலிய புகுத்தப்பட்டிருப்பதையும் நாம் காணலாம். இவ் வியக்கம் வங்காளத்தைச் சேர்ந்த குழுவினரிடத்துத்தான் முதலில் தோன்றி வளர்ந்தது. அக் குழுவிற்கு இராம்மோகன் ராய் முதன்மையான தலைவராக விளங்கினார். அந் நூற்றாண்டின் முற்பகுதியின் நடுக் கட்டத்தில் இந்தியாவின் முதல் எதிர்ச் செயலிற்குரிய செயல் முறைகளை அவர்கள் உருவாக்கிக்கொண்டிருந்தனர். அவர்களுடைய செயல்முறைகள் மேலைநாட்டு ஆதிக்கத்தை எதிர்க்கும் வகையிலோ, அரசியல் சூழ்ச்சிகளை எதிர்க்கும் வகையிலோ உருவாகவில்லை. ஆனால், மேலைநாட்டு நாகரிகத்தை முழு வடிவில் எதிர்க்கும் வகையிலேயே அவர்களுடைய செயல்முறைகள் உருவாகிக்கொண்டிருந்தன. அதே காலத்தில்தான் ஹேஸ்டிங்ஸ் பிரபு இந்தியாவில் பிரிட்டிஷாரின் ஆதிக்கத்தினுடைய மாண்புமிக்க மாளிகையை நிறுவுவதில் ஈடுபட்டிருந்தார். அதே சமயத்தில் இந்தியாவில் கீழைநாட்டுப் பண்புகளோடு மேலைநாட்டுப் பண்புகள் கலந்த, ஒரு புதிய, தொகுத்துக் காணல் எனப்படும் முறையினுடைய முதல் இழையின் அடிச்சுவட்டினை இராம்மோகன் ராய் தேடிப் பார்த்துக்கொண்டிருந்தார். அவ் இழையே, உள்ளார்ந்த வளர்ச்சியின்மூலம் மாபெருஞ் சக்தியையுடைய இந்தியாவின் உருவத்தை மாற்றியமைப்பதற்கும், இறுதியாக அமைதியான முறையில் மற்றொன்றை அதனிடத்தில் வளர்ச்சியுறச் செய்வதற்கும் கருவியாக அமைந்தது எனலாம்.

### ஆதாரங்கள்

இந்தியாவில் பிரிட்டிஷ் கூட்டுத்தலைமை முற்றுப்பெற்ற காலத்தைப்பற்றி அறிவதற்குப் பின்வரும் நூல்கள் மூலாதாரங்களாகப் பயன்படுத்தப்படலாம்.

1. ஆர். ஹீபர் (R. Heber): 'Narrative of a Journey through the Upper Provinces of India' *(2 தொகுதிகள், 1828)*.

2. வி. ஜாக்மான்ட் (V. Jacquemont): 'Letters from India' *(2 தொகுதிகள், 1834). இந் நூலில் வட இந்தியாவைப் பற்றிய குறிப்புகளே காணப்படுகின்றன.*

*3.* ஜே. தாட் (J. Tod): 'Annals and Antiquities of Rajasthan' *(3 தொகுதிகள், 1829-32). இது இராசபுதனத்தைப்பற்றிய வரலாறு.*

*4.* சர் ஜே. மால்கோம் (Sir J. Malcolm): 'A Memoir of Central India' *(2 தொகுதிகள், 1832).*

*5.* ஆர். ஜென்கின்ஸ் (R. Jenkins): 'Report on the Territories of Nagpur' *(1827).*

*6.* எம். எல்ஃபின்ஸ்டன் (M. Elphinstone): 'Report on the territories lately conquered from the Pekshwa' *(1822). 4, 5, 6 எண்ணுள்ளவை மத்திய, மேற்கத்திய இந்திய வரலாற்றை விளக்குவன.*

*7.* எம். வில்க்ஸ் (M. Wilks): 'Historical Sketches of Mysore' *(3 தொகுதிகள், 1810-14).*

*8.* F. புச்சனன் (F. Buchanan): 'A Journey from Madras through Mysore....' *(3 தொகுதிகள், 1807). 7, 8, எண்ணுள்ளவை தென்னிந்திய வரலாற்றை விளக்குவன.*

*9.* W. W. ஹன்ட்டர் (W. W. Hunter): 'Annals of Rural Bengal'.

*10.* மான்ட்கோமெரி மார்ட்டின் (Montgomery Martin): 'The History, antiquities, statistics........ of Eastern India' *(3 தொகுதிகள், 1838) வங்காளத்தின் வரலாற்றை அறிவதற்குப் பயன்படும்.*

*11.* 'Selections from the Records of the Delhi Residency and Agency' *(1911). தில்லியைப்பற்றியது (அதி. 6); சிம்லாவைப்பற்றியது (அதி. 8).*

*12.* W. G. ஆஸ்பர்ன் (W. G. Osborne): 'The Court and Camp of Runjeet Singh' *(1840).*

*13.* சி. மேசன் (C. Masson): 'Travels &c.' *(1842) பஞ்சாபின் வரலாற்றை விளக்குவன.*

*இந்து சமயத்தைப்பற்றி அறிவதற்கு,* Abbe J. Dubois *எழுதியுள்ள* 'Hindu Manners, Customs and Ceremonies' *(3ஆம் பதிப்பு, ஆக்ஸ்போர்டு, 1906) என்னும் நூலையும், இராம்மோகன் ராய் எழுதியுள்ள நூல்களையும் காண்க. இஸ்லாமிய சமயத்தின் நிலையை அறிவதற்கு கோல்புருக்* (Colebrooke), *வில்சன்* (H. H. Wilson) *எழுதியுள்ள நூல்களையும், திருமதி மீர் ஹசான் அலி* (Mrs. Meer Hassan Ali) *என்பவர் எழுதியுள்ள* 'Observations on the Mussulmans of India' *(2ஆம் பதிப்பு, ஆக்ஸ்போர்ட், 1915) என்னும் நூலையும்,*

ஹெர்க்லாட்ஸ் (G. A. Herklots) என்பவர் எழுதியுள்ள 'Islam in India' (புதிய பதிப்பு ஆக்ஸ். 1921) என்னும் நூலையும் காண்க. கிறித்துவசமயத்தைப்பற்றி அறிவதற்கு, சி. புச்சனன் (C. Buchanan) எழுதியுள்ள 'Christian Researches in India' என்னும் நூலைப் பார்க்க.

ஆங்கிலேயருடைய வாழ்க்கையை அறிவதற்கு, இ. ஈடன் (E. Eden) எழுதியுள்ள 'Up the Country' (பதிப்பு, E. தாம்ப்சன், ஆக்ஸ். 1930) என்னும் நூலைப் பார்க்க.

## 2. அரசியல் இழை : ஹேஸ்டிங்ஸ் பிரபு முதல் ஹார்டிஞ்சு பிரபு வரை, 1818–48

இந்தியாவிலும் பிரிட்டனிலும் நிகழ்ந்த நிகழ்ச்சிகளுக்கும், அவற்றில் ஈடுபட்ட மனிதர்களுக்கும் இடையே நடைபெற்ற எதிர்ச் செயல்களினால் உறுதி செய்யப்பட்ட ஆட்சிமுறைக் கொள்கை, 1818ஆம் ஆண்டு இந்தியாவினை மீண்டும் ஒன்று பட்ட இந்தியாவாக விளங்குமாறு செய்ததை நாம் முன்னர்க் கண்டோம். இந்தியாவில் இருந்துவந்த கம்பெனியின் ஊழியர்கள், ஆதாயம் பெறுவதற்குரிய வழிவகைகளைக் கடைப் பிடிப்பதில் கண்ணும் கருத்துமாக இருந்துவந்ததோடு, மட்டு மதிப்பற்றவர்களாகவும் இருந்துவந்தனர். அவர்கள் அமைதியை நாடும் சாந்தமான போக்குடைய கவர்னர் ஜெனரல்களுக்குப் பெரும் பிரச்சினையாக இருந்துவந்தனர். மேலும், கம்பெனியின் ஆதாயத்தையும் நலத்தையும் நாடு கின்ற இயக்குநர்களுக்கு அவ்வூழியர்களின் போக்கு மன வருத்தத்தை அளிப்பதாக அமைந்தது. தனிப்பட்ட வகையில் ஆதாயம் பெறவேண்டும் என்ற கம்பெனியின் ஊழியர் களுடைய துடிப்பினைத் திறமையாகவும் செம்மையாகவும் கட்டுப்படுத்தாமையால், பெரும்பாலும் ஓரமைப்பாகச் சேர்ந் துள்ள எல்லாரும் மொத்தமாகப் பொருளினை இழந்து நொடித்துப் போகவேண்டி நேரிடுவதைக் கண்ட அரசு, அச் செயல்முறைகளில் தலையிடவேண்டிய நெருக்கடி உண்டா யிற்று. பிட் இந்தியச் சட்டம் இயற்றப்பட்ட காலம் முதல் (அதற்கு முன்னர் எல்லாம் பயனற்ற வகையில் இருந்த போதிலும்) அரசு மனிதப் பண்பினைப் போற்றி மதிப்ப தாகவும், வன்முறையில் துன்புறுத்தும் நோக்கமற்றதாகவும் இருந்துவரலாயிற்று. இந்திய அரசியல் அமைப்பு நிலையாகக் கலந்துகொண்டிருந்தது; ஃபிரெஞ்சுக்காரர்களின் தலையீடு பற்றிப் புதிதாகத் தோன்றிய அச்சமும், இயக்கமின்றி இருப் பதைக் காட்டிலும் முன்னேக்கிச் செல்லுவதனால் உண்டாகக்

கூடிய விளைவுகள் அழிவாற்றல் குறைந்ததாகவே இருக்கும் என்ற ஓர் உணர்ச்சியும் கம்பெனியாரிடத்து நிலவி வந்தது. வெல்லஸ்லி நடப்பு நிலையிலிருந்து நெடுந்தொலைவிற்கு மிக விரைந்து விலகிச் சென்றார் என்றே கூறலாம். அதனால் நாட்டிலே எதிர்த்துச் செயலாற்றும் சக்திகளை அவர் உருவாக்கிவிட்டார். அம்முறையினை ஒருவகையான பெருந் தன்மைமிக்க முயற்சியோடு முற்றுப்பெறுமாறு செய்ய வேண்டிய பொறுப்பு ஹேஸ்டிங்ஸ் பிரபுவைச் சார்ந்த தாயிற்று.

புதிய ஆட்சிக் காலத்திலும், தன்னல வேட்கைகளுக்கும் நோக்கங்களுக்கும் இடையே இருந்துவந்த மோதல் தொடர்ந்து நடைபெற்றுவந்தது என்றே கூறலாம். ஆனால், ஆட்சிமுறைபற்றிய முதன்மையான திட்டங்களைப்பற்றிய முடிவுகளைக் கல்கத்தாவில் செய்வது பையப்பையக் குறைந்து, லண்டனில் செய்யப்படுவதே மிகுந்து வரலாயிற்று. இந்தக் காலத்தில் கருத்தோடைகளைப் போன்றே, ஆட்சி முறைத் திட்ட ஓடையும், மேற்கே இருந்து ஓடிவரலாயிற்று. பிரிட்டனில் ஆளும் கட்சியினரின் நிலையான ஆதரவு இல்லை யென்றால், எந்த கவர்னர்-ஜெனரலும் அதிக அளவில் சீர்திருத்தம் செய்யலாம் என்று எண்ணுவது—நம்பிக்கை கொள்ளுவதுகூட இயலாத ஒரு செயல் என்று பேராசிரியர் ஃபிலிப்ஸ் குறிப்பிட்டுள்ளார். ஆளும் கட்சியினரின் ஆதரவு கிடைக்காமையால்தான் மின்ட்டோ பெரிதும் அல்லற் பட்டார். லண்டனில் அத்துணைப் பாதுகாப்பாகிய ஆதரவு இல்லையென்றாலும், ஆளும் கட்சியினரின் நிலையான ஆதரவைப் பெற்றிருந்த காரணத்தினால்தான் வாரன் ஹேஸ்டிங்ஸ் பேரளவிற்குத் திட்டங்களைச் செயற்படுத்தி வெற்றிபெற முடிந்தது. செயற்கரும் செயல்களைச் செய்து முடித்துப் பெருமைபெற்ற ஆட்சியாளர்கள் எல்லாருமே தாயகத்திலே ஆளுங்கட்சியினருடைய பேராதரவைப் பெற்றிருந்தவர்களாவார்கள். காரன்வாலிஸ், வெல்லஸ்லி (தொடக்க காலத்தில்), பென்டிங், டல்ஹௌசி போன்ற வர்கள் இத்தகைய அரசியல் ஆதரவைப் பெற்றமையால் சிறப்புற்றவர்களாவார்கள். ஷோர் முதல் ஜான் லாரன்சு வரை அதிகாரிகளாக இருந்தவர்கள் கவர்னர்-ஜெனரலாகப் பதவி உயர்வு பெற்றனர். அப்பொழுது அவர்கள் தங்க ளுடைய நடத்தையிலும் செயல்முறைகளிலும் தேக்கமுடைய வர்களாகவும், முன்னெச்சரிக்கையுடையவர்களாகவும் ஏன் இருந்துவந்தனர் என்பதை ஓரளவிற்கு விளக்குவதற்கு இது

உதவியாக இருக்கிறது எனலாம். அவர்களுடைய திறமைக்குத் தரப்பட்ட மதிப்பினுல்தான் அவர்களுக்குப் பதவி உயர்வு கிடைத்ததேயொழிய, மற்றபடி அவர்களுக்கு அரசியல் ஆதரவோ, செல்வாக்கோ கிடையாது. எனவே தான், அவர்கள் தாங்கள் மேற்கொள்ளக்கூடிய புதிய திட்டங்களுக்கு லண்டனில் உள்ள உருப்படியான அரசியல் குழுவின் ஆதரவு கிடைக்கும் என்ற நம்பிக்கையோடு செயலாற்ற முடியாமல் போயிற்று. இப்பொழுது நாம் 1818 முதல் 1848 வரையில் உருவான அரசியல் இழையைக் காணலாம்.

ஹேஸ்டிங்ஸ் பிரபுவின் திட்டங்கள் அனைத்தும் நல்லவை என்று எண்பிக்கப்பட்டமைக்குக் காரணம், அவை யாவும் செயற்படுத்தப்பட்டபொழுது வெற்றியளித்தமையேயாகும். அவருக்கு உண்டான கடன்கள், இன்னும் நெடுநாட்களுக்குப் பதவி வகிக்கவேண்டும் என்னும் அவாவினை அவருக்கு ஊட்டியது. அவருடைய பெருமதிப்பும், தீர்ப்பளிக்கும் திறனும் இங்கிலாந்தில் இருந்த கம்பெனி உரிமையாளர்களின் உள்ளங்களைக் கவர்ந்தமையால், ஹேஸ்டிங்ஸ் பிரபுவைத் தொடர்ந்து பதவியிலிருக்குமாறு பார்த்துக்கொள்ளுவதில் அவர்கள் ஆர்வம் காட்டினர். அவருடைய ஆட்சிக் காலத்தின் முற்பகுதியில் நடைபெற்ற நாடகம், அவருடைய ஆட்சியின் இறுதிக் காலத்திய நிகழ்ச்சிகளைச் சிறப்பற்றதாகச் செய்துவிட்டது. எதிர்காலத்தின் சிறப்பிற்குரிய நிகழ்ச்சிகளும், வளர்ச்சிகளும் அவ் இறுதியாண்டுகளில் பொதிந்து காணப்படுகின்றன. அயல்நாட்டு நிகழ்ச்சிகளுள் முதன்மையானதும் முக்கியமானதும் சிங்கப்பூரை ஆங்கிலேயர்கள் கைப்பற்றிக்கொண்டமையாகும். 1815ஆம் ஆண்டில் ஃபிரான்சு இறுதியாகப் படுதோல்வியடைந்தது. அதற்கு முன்பு நான்கு ஆண்டுகள் வரையில் ஜாவா தீவு சர் ஸ்டாம்ஃபோர்ட் ராப்பில்சு என்பவரால் ஆட்சி செய்யப்பட்டு வந்தது. அதை, மேற்கண்ட தோல்விக்குப் பிறகு இங்கிலாந்து, ஹாலந்திற்குத் திருப்பிக் கொடுக்க நேரிட்டது. சமாதான உடன்படிக்கையின்படி அவ்வாறு செய்யவேண்டியதாயிற்று. இவ்வாறு இந்தோனேசிய ஆட்சி முறையில் நம்பிக்கையூட்டக் கூடிய வகையில் நடைபெற்ற பரிசோதனை முறை ஒன்று முடிவிற்கு வரநேர்ந்தது. ஆனால், பிரிட்டிஷாரின் நேச நாடாக ஹாலந்து இருந்தது என்பதும், ஃபிரெஞ்சுக்காரர் ஜாவாவைக் கைப்பற்றிக்கொண்டிருந்தமையால், அதை ஆங்கிலேயர் 1812ஆம் ஆண்டு மீட்பதற்கு முற்றுகையிட்டுக் கைப்பற்றினர் என்பதும், இவ்வாறு ஃபிரான்சின் மண்ணாசைக்கும் வன்

முறைச் செயலுக்கும் ஹாலந்து பலியாயிற்று என்பதும் புறக் கணிக்க முடியாத மெய்ம்மைகளாகும். எப்படியாயினும், நெடுங்கிழக்கு நாடுகளுக்கும், சீனுவிற்கும் கடல்வழியொன் றினைப் பெற்றுப் போற்றிக் காப்பதும் விரும்பத்தக்க செய லாகும் என்று ஹேஸ்டிங்ஸ் கருதினர். மலாயா தீபகற் பத்தின் எல்லையில் இருந்த சிங்கப்பூர் தீவினை 1819ஆம் ஆண்டில் கைப்பற்றுமாறு ஹேஸ்டிங்ஸ் ராபில்சிற்கு இசை வளித்தார். அதனுடைய நிலவியல் அமைப்பு மிகச் சிறந்த போர்முறை முக்கியத்துவம் வாய்ந்ததாக இருந்தது அதனுடைய துறைமுகம் மிகப் பரந்ததாகவும், கொள்ளிடம் மிகப் பெரிதாகவும் இருந்தது. அக்காலத்தில், சிங்கப்பூரில் மலாயா நாட்டு மீனவர்களே குடியிருந்து வந்தனர். டச்சுக் காரர்கள் சிங்கப்பூர் ஆங்கிலேயரால் கைப்பற்றப்பட்ட மைக்குத் தெரிவித்த கண்டனத்திற்காக, இந்தியாவிலிருந்த டச்சுக்காரர்களின் சிறிய வாணிகத் தளங்களை ஆங்கிலே யர்கள் ஏற்றுக்கொண்டனர். அதற்கு மாற்றுகச் சுமத் திராவில் இருந்துவந்த தங்களுடைய வாணிகத் தளங்களை அவர்கள் டச்சுக்காரர்களுக்கு விட்டுக்கொடுத்தனர். இவ்வாறு கீழைநாடுகளில் பிரிட்டிஷாரின் புதிய துணிகரச் செயல்முறை அதன் போக்கிலே செல்லுமாறு விடப்பட்டது; அழைப்பதற்குரிய துறைமுகம், மிகச் சிறந்த வள ஆதார உற்பத்தியின் நிலைக்களனுக மாறியது; மேலும் புதியதொரு குடியேற்ற நாடு உருவாவதற்கு உரிய அறிகுறிகள் அங்குத் தோன்றின. 1867ஆம் ஆண்டு சிங்கப்பூர் அரசாள் குடியேற்ற நாடாக (Crown Colony) மாறியது. எனவே, அது நம்முடைய வரலாற்று மதிப்பீட்டு எல்லைக்குட்படாது விலகி நிற்கிறது.

முகலாயப் பேரரசோடு தொடர்பு கொண்டு, செய லாற்றியதில் பிரிட்டிஷாருடைய நடுக்கமும் திகைப்பும் வெளிப் படலாயின. அதற்குக் காரணமாக இருந்த பண்பற்ற அரை குறைத் திட்டங்களுள் ஒன்றை ஹேஸ்டிங்ஸ் இந்தியாவிற்கு வந்ததும் செயற்படுத்தத் தொடங்கினர். ஆங்கிலேயர் களுக்கு வங்காளத்திடத்து இருந்துவந்த சட்டப்படியான உரிமை 1765ஆம் ஆண்டு பேரரசு வழங்கிய மானியத்தை அடிப்படையாகக் கொண்டிருந்தது. வெல்லஸ்லி கருத்தாக இரு முறைகளையும் தவிர்த்துவிட்டார் என்றே கூறலாம். அவர், 1803ஆம் ஆண்டில் முகலாயரின் மேலரசுரிமையை ஒப்புக்கொள்ளாது புறக்கணித்தார்; அதைப்போன்றே அதை அறவே மறுத்து ஒதுக்கிவிடவுமில்லை. உண்மையில்

ஷா ஆலத்தோடு அவர் உடன்படிக்கைகள் ஒன்றும் செய்து கொள்ளவில்லை. ஆனால், அவருக்கு உரிமையையும், வாழ்க்கைச் செலவிற்குரிய தொகையையும் அளிப்பதாக வெல்லஸ்லி உறுதிமொழியளித்திருந்தார். பேரரசரைப் பொறுத்த வரையில் கம்பெனி இன்னும் அதிகார முறைப்படி தம்மைப் போற்றி ஆதரிக்கும் செல்வக் குமரனாகவே இருந்துவந்தது. ஆனால், கம்பெனியார் பேரரசரை ஒரு நச்சரிப்பாகவும் தொல்லையாகவுமே கருதத் தலைப்பட்டனர். 1816ஆம் ஆண்டில் அரசாங்கத்தின் சார்பில் செய்யப்படும் நாசரஸ் (Nazaras) என்னும் பரிசு வழங்குதல் (தாழ்ந்த நிலைக்குரியவருக்குச் செய்யப்படும் சிறப்பின் அறிகுறி) நிறுத்தப்பட்டது. ஆனால், ஷா ஆலத்தின் பட்டப் பெயர்களுடன் கம்பெனி வெளியிட்டுவந்த நாணயங்கள் 1835ஆம் ஆண்டு வரை தொடர்ந்து வழங்கப்பட்டு வந்தன. அதே சமயத்தில் அயோத்தியின் அமைச்சராக இருந்த நவாபினை ஹேஸ்டிங்ஸ் போற்றியாதரித்து வந்தார். போர்க்காலத்தில் அவர் பெருந்தொகையைத் தமக்குக் கடன்கொடுத்து உதவியமையால், அவரை அயோத்தியின் அரசர் என்னும் பட்டம் சூட்டிக்கொள்ளுமாறு ஹேஸ்டிங்ஸ் போற்றியாதரித்து வந்தார். நவாபு வாசீரை ஷியா முஸ்லீம் இனத்தவருக்குத் தலைவராகவும், பேரரசரைச் சுன்னி முஸ்லீம் இனத்தவருக்குத் தலைவராகவும் விளங்குமாறு செய்வதற்கும், முஸ்லீம் சமூகத்தினரை இருபெரும் பிரிவினராகப் பிரிப்பதற்கும் இத்தகைய முறையில் ஹேஸ்டிங்ஸ் செயலாற்றி வருகிறார் என்று அக்காலத்திய மக்கள் கருதலாயினர். இவ்வாறு நவாபு வசீர் பேரரசருக்கு எதிராகத் தாம் ஓர் அரசராக ஆன செயல் அவருக்குப் புகழைத் தேடித்தராமல், அவரை ஒரு கலகக்காரராகக் கருதுமாறு செய்தது. இதைச் சுட்டிக்காட்டிய நைசாம், தாம் இம்முறையை ஓர் எடுத்துக்காட்டாகக் கொண்டு பின்பற்ற முடியாது என்று மறுத்துவிட்டார்.

உள்நாட்டு நிகழ்ச்சிகளுள் மற்றவற்றில் எல்லாம் செயல் தொடர்பு கொள்ளுவதில் ஹேஸ்டிங்ஸ் உறுதியான தொடர்புடையவர் என்பதைப் புலப்படுத்தினார். ஹதரசுகளுடைய (Ha-thras) தலைவர் 1817ஆம் ஆண்டில் தம்முடைய கோட்டையில் இருந்துகொண்டே பிரிட்டிஷாரை எதிர்த்து நின்ற பொழுது, பேரளவில் பீரங்கிப் படைகளைக் கொண்டுவந்து ஹேஸ்டிங்ஸ் அக்கோட்டையை மண்மேடாக்கியதோடு அமையாமல், பிரபுக்கள் யாராக இருந்தாலும், அவர்கள் கட்டுப்பாடு மீறுதலை எக்காரணத்தை முன்னிட்டும் அனுமதிக்க முடியாது

என்பதை யாவரும் அறியுமாறு செய்தார். 1805ஆம் ஆண்டில் பரத்பூரினால் பாடம் கற்றுக் கொள்ளப்பட்டது. மராட்டியப் போர் முடிவடைந்ததற்குப் பின்னர், கடற் கொள்ளைக்காரர்களின் நிலைக்களனாக கோலாப்பூர் முதல் கோவா வரையில் எஞ்சி இருந்துவந்த கடற்கரைப் பகுதி அடியோடு அழிக்கப்பட்டது. 1812ஆம் ஆண்டில்தான் அக் கொள்ளைக் கூட்டத்தினர் இறுதியாக ஒழிக்கப்பட்டனர். இவ்வாறு மேலைக் கடற்கரைப் பகுதியில் கிரேக்க-ரோமானியர் வாணிகக் காலம் முதல் இன்றுவரை தீராத பெருந் தொல்லையாக இருந்துவந்த கொள்ளைக் கூட்டத்தினரின் கொடுஞ் செயல்கள் நன்மைக்காகவே அழித்தொழிக்கப் பட்டன எனலாம். ரோகில்கண்டிலுள்ள பரெய்லி என்னும் இடத்தில் உண்டான இஸ்லாமிய மதக் கலவரத்தை அவர் அடக்கியொடுக்கினர்; 1816ஆம் ஆண்டு ஒரிசாவில் உண்டான உழவர்களின் கலகத்தைக் குறிப்பிடத்தக்க உறுதியான உள்ளத்தோடு, உடன்பாட்டு நெறிமுறை கலந்த நயமான முறையினால் அதை ஒருவாறு அமைதி யடையுமாறு செய்தார்.

உள்நாட்டு ஆட்சி முறையில் ஹேஸ்டிங்ஸ் பிரபு தந்நிகரற்ற தனிப்பெரும் ஆட்சியாளராவார். நாடு முன்னேற்றப் பாதையில் முதல் அடியெடுத்து வைக்குமாறு செய்த பெருமைக்கும் போற்றுதலுக்கும் உரியவர் நம்முடைய ஹேஸ்டிங்ஸ் பிரபு என்று சொன்னால் அது மிகையாகாது. அவர் அடிக்கடி நாட்டின் பல பகுதிகளுக்குத் தாமே நேரடியாகச் சென்றுவந்தமை, நாட்டுப்புறங்கள் பாழ்பட்டிருக்கும் அவல நிலையைக் காணுமாறு அவருடைய கண்களைத் திறந்தது. பதினெட்டாம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் நாட்டிலே உண்டான குழப்பங்களாலும் கொந்தளிப்புகளாலும், பாழடைந்தும் தூர்ந்தும் போயிருந்த முகலாயர்களால் தோண்டப்பட்டிருந்த நீர்ப்பாசனத்துக்குரிய கால்வாய்களைப் பழுதுபார்க்க அவர் 1818ஆம் ஆண்டு கட்டளைகள் பிறப்பித்தார். அதன்மூலம் நாட்டின் நீர்வளத்திற்குரிய கால்வாய் முறையைச் செம்மைப்படுத்தினர். 1820ஆம் ஆண்டு தில்லி நகருக்குள் இருந்த கால்வாய்களில் நிறைய நீர் ஓடிவந்தது. அதன் பிறகு பிரிட்டிஷாரின் நீர்ப்பாசனத் திட்டம் செயலுக்கு வரத் தொடங்கியது. அவர் சாலைகளை எல்லாம் பழுதுபார்த்து, அவற்றைப் புதுப்பித்தார். அதனால் நாட்டுப்புறப் பகுதிகளுக்குப் பாதுகாப்பு உண்டானதோடு, படைத்துறைப் பயன்மதிப்புடையனவாகவும் அச்சாலைகள்

சிறப்புற்று விளங்கத் தொடங்கின. வங்காளத்தில் அவர் கல்வி வளர்ச்சிக்காகப் பேராதரவு அளித்துவந்தார்; ஆங்கிலப் பள்ளிகளுக்குத் தனிப்பட்ட முறையில் தம்மாலியன்ற உதவிகளையெல்லாம் செய்துவந்தார். மேலும், கல்கத்தாவில் புதிதாக நிறுவப்பட்ட இந்துக் கல்லூரியின் புரவலராகவும் அவர் விளங்கினார்.

அறிவொளி பெற்ற அறிஞர்களுடைய உள்ளமெல்லாம் எத் திசை நோக்கிச் சென்று கொண்டிருந்தன என்பதை அறிவுறுத்தும் குறிப்பு மொழியாகவே இத் திட்டங்கள் அமைந்தன எனலாம். ஆனால், ஆட்சித் துறையின் உயிர்நாடி போன்ற சட்டவியல், வருவாய்த்துறைகளின் ஆட்சிமுறையில் அவர் தெளிவும் உறுதியும் வாய்ந்த திட்டங்களைத் தீட்டிச் செயல்படுத்திச் சிறப்புற்றார். நீதிமன்றங்களில் குவிந்திருந்த வழக்குகளை உடனடியாக விசாரித்துத் தீர்ப்பு வழங்குவதற்குரிய வழிமுறைகளை வகுத்துத் தந்தார். அதனால் நீதிமன்றங்களில் தேங்கிக் கிடந்த வழக்குகளின் எண்ணிக்கை கணிசமான அளவிற்குக் குறையலாயின. நிர்வாகத் துறையும் நீதித்துறையும் மிகக் கடுமையான முறையில் தனித்தியங்கி வந்த நிலையினைப் போக்கி, ஓரளவிற்கு மாற்றங்களும் திருத்தங்களும் செய்வதற்காக அவர் தண்டல்நாயகத்தின் அலுவலகத்தையும், மாவட்ட குற்ற விசாரணை நீதிபதி அலுவலகத்தையும் ஒன்றாக இணைத்தார். நீதித்துறையில் பணியாற்றிவந்த இந்தியத் துணை அதிகாரிகளின் பதவிகளை உயர்த்துவதன் மூலம், அவர் எல்லாவற்றையும் இந்தியர்களுடையதாக்கவேண்டும் என்னும் கொள்கையினைச் செயற்படுத்தத் தொடங்கினார். புதிதாகக் கைப்பற்றிய இராச்சியங்களிலும், கொடையாகப்பெற்ற பகுதிகளிலும் அவர் நிலத் தீர்வையை நிர்ணயம் செய்வதன் மூலம் வருவாய்த்துறை அமைப்பிற்குக் கால்கோள் விழா நடத்தினார். அந் நிலத் தீர்வை நிர்ணயம் 1822ஆம் ஆண்டு இயற்றப்பட்ட விரிவான ஏழாவது ஒழுங்குமுறைச் சட்டத்தினால் பெரும்பயன் அளிப்பதாக அமைந்தது. தெற்கே, 1813ஆம் ஆண்டு இயற்றப்பட்ட சாசனச் சட்டத்தின்படி (Chārter Act) நிலத்தீர்வையை நிர்ணயம் செய்வதில் அயன்குடி முறையைச் (Ryotwari) செயற்படுத்துவதில் முனைந்திருந்தார். வெல்லஸ்லியின் தூண்டுதலின்பேரில் காரன்வாலிஸின் நிலவரித் திட்டம் கைவிடப்பட்டதற்குப் பின்னர், இம் முறையினை மன்ரோ செயற்படுத்திக் கொண்டிருந்தார். 1820ஆம் ஆண்டில் அவர் மதராசின் கவர்னரானார். பம்பாயில் 1819ஆம் ஆண்டில்

எல்.:பின்ஸ்டன் கவர்னரானுர். பேஷ்வாவிடமிருந்து புதிதாகக் கைப்பற்றிய இராச்சியப் பகுதிகளில் பழமையிலிருந்து புதுமைக்கு மாறும் நிலைமாறுபாட்டுக் காலத்தினை எளிமையாக்கும் வகையில் அப் பகுதிகள் திறமை மிக்கவரும், கருத்தூன்றிக் கடமையைச் செய்யக்கூடியவருமான எல்.:பின்ஸ்டனிடம் ஒப்படைக்கப்பட்டிருந்தமை அவற்றின் நற்பேறேயாகும்.

பால்மர் கூட்டுக் கம்பெனிக்கும் நைசாமுக்கும் இடையே இருந்துவந்த நிதிநிலைத் தொடர்பு கசந்து போயிற்று. அக் கம்பெனியின் ஐதராபாத் கிளையினிடத்து ஹேஸ்டிங்ஸ் தனிப்பட்ட வகையில் ஆர்வமும் அக்கறையும் கொண்டிருந்தார்.[1] அதனுல், அவருடைய ஆட்சிக் காலத்தின் இறுதியாண்டுகள் பால்மர் கம்பெனியின் கருத்து மாறுபாடு என்னும் கருமேகங்களால் சூழ்ந்துகொள்ளப்பட்டன. புதிய துணைக்காப்பரசின் ஆளுநர் மெட்கா.:ப், பால்மர் கம்பெனியின் குறைபாடுகளை எல்லாம் நன்கு வெளிப்படுத்திக் காட்டிய பிறகும், அதன் செயல்முறைகளில் ஹேஸ்டிங்ஸ் தலையிடத் தவறினுர். இத் தகராறின் காரணமாக அவரைப் பதவியிலிருந்து விலக்கியிருக்கலாம்; ஹேஸ்டிங்ஸைத் தாயகத்திற்குத் திரும்பி வருமாறு கம்பெனியின் இயக்குநர்கள் அவரை வற்புறுத்தியும் இருக்கலாம். ஆனுல், நான்காம் ஜார்ஜ் மன்னருக்கும் ஹேஸ்டிங்ஸுக்கும் இடையே தனிப்பட்ட வகையில் நிலவிய நெருங்கிய நட்பின் காரணமாக அவர்கள் அவ்வாறு செய்யவில்லை.[2] எனினும், துணைக்காப்பரசின் ஒழுகலாறுகள்பற்றி ஆங்கிலேயர்களின் பழக்க வழக்கங்களை இந்தியாவிலும் ஹேஸ்டிங்ஸ் கடைப்பிடித்து வந்ததை அந் நிகழ்ச்சி காட்டுகிறது என்றே கூறலாம். எனவே, மற்றத் துறைகளில் அவராற்றியுள்ள அரும்பெருந் தொண்டின் அளவினையும் மதிப்பையும் நாம் இழிவாகப் பேசவோ, குறைவாக மதிப்பிடவோ முடியாது.

ஹேஸ்டிங்ஸ் பதவியிலிருந்து ஓய்வுபெற்ற காலத்தில், இங்கிலாந்தில் முன்னேறுவதற்கு யாதொரு வழியும் காணுது ஏமாற்றம் அடைந்திருந்த கானிங் கவர்னர்-ஜெனரல்

[1] சர் தி. ரம்போல்ட் என்பவரின் மனைவி அக் கம்பெனியின் ஒரு கூட்டாளியாவார். அம்மம்மையார் ஹேஸ்டிங்ஸின் பாதுகாப்பில் இருந்தவராவார்.

[2] C. H. பிலிப்ஸ் : The East India Co ; and the State, pp. 225-8.

பதவியை ஏற்றுக்கொண்டார். ஆனால், 1822ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதத்தில் காசில்ரீக் (Castlereagh) பிரபு தற்கொலை செய்துகொண்டமை, அயல்நாட்டு அலுவலகத்திற்குக் கானிங்கை அனுப்பியது. அதனால், பிரிட்டிஷ் இந்தியா, சுவை மிக்க மற்றோர் இயலினைத் தன்னுடைய வரலாற்றில் இழந்தது என்றே கூறலாம். ஆம்ஹர்ஸ்ட் பிரபு கானிங்கின் நண்பராவார். லண்டன் மாநகரின் அரசியலில் உண்டான மாற்றங்களே ஆம்ஹர்ஸ்ட் பிரபுவைக் கவர்னர்-ஜெனரல் பதவியில் அமர்த்துமாறு செய்ததே ஒழிய, தனிப்பட்ட வகையில் அவரிடத்து எத்தகைய சிறப்புமிக்க தகுதி திறமைகளும் இருந்ததாகத் தெரியவில்லை. 1816ஆம் ஆண்டு சீனவிற்குச் சென்ற நல்லுறவுத் தூதர் குழுவில், அவரையும் ஓர் உறுப்பினராக அமர்த்துவதற்கு இயக்குநர்கள் இசைவளித்திருந்தனர். மேலும், அவர் எப்பொழுதும் அமைதியை விரும்புகின்றவர் என்று பெயரெடுத்து இருந்தமையாலும், கானிங் அவரை இணங்கிப் போகக்கூடியவர் என்று கருதியமையாலும் அவரை கவர்னர்-ஜெனரலாக அமர்த்தினர். அவர் ஹக்கின்சன் என்பவருக்கு, 'இப்பொழுது பதவியில் அமர்த்தப்படும் அமர்வு நீங்கள் கருதுவதைப் போல ஆற்றல் மிக்கதன்று என்பதை நான் ஓரளவிற்கு ஒப்புக்கொள்ளுகிறேன்; ஆனால்........ ஆம்ஹர்ஸ்ட் பழிப்பற்றவராகவேனும் இருக்கிறார்.... மொத்தத்தில் அவருடைய தேர்ந்தெடுப்பு பயனற்ற ஒன்றைப்போல் தோன்றலாம்'[1] என்று எழுதினர். இந்தச் சமயத்தில் கவர்னர்-ஜெனரல் பதவியைத் தாம் பெறுவதற்காக வில்லியம் பென்டிங் பிரபு பயனற்ற முயற்சி செய்துவந்தார்.

ஏழு மாத இடையீட்டுக் காலத்தில், கவுன்சிலின் முதிய உறுப்பினரான ஜான் ஆடம் (John Adam) என்பவரால் இந்தியா ஆட்சி செய்யப்பட்டு வந்தது. இவருடைய குறுகிய ஆட்சிக் காலத்தில் 'கல்கத்தா ஜர்னல்' எனும் இதழின் ஆசிரியரான ஜான் சில்க் பக்கிங்காம் என்பவர், பொதுப் பணித்துறை அதிகாரிகளைப்பற்றி வரம்பின்றி குறை கூறியமையால் வெளியேற்றப்பட்டார். இவ்வாறு இந்தியாவின் அரசியல் அரங்கில் தற்கால வாழ்க்கையின் மற்றோர் இயல்பும், வழக்கும் தோன்றியது எனலாம். 1823ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் ஆம்ஹர்ஸ்ட் இந்தியாவிற்கு வந்து சேர்ந்தார். மேலும், போரிடவேண்டிய நெருக்கடிகள் யாதும்

[1] மேல். கூ. நூ. பக். 239-40.

கிடையாது என்றும், அமைதியான ஆட்சிக் காலத்தையே எதிர்பார்ப்பதாகவும் அவரிடம் கம்பெனியார் கூறி அனுப்பியிருந்தனர். ஆனால், அவர் இந்திய மண்ணில் காலெடுத்து வைத்து சில நாட்களுக்குள் போர் மேகங்கள் அவரைச் சூழ்ந்துகொண்டன. அவருடைய நாலரை ஆண்டு ஆட்சிக் காலத்தில் முதன்மையும் முக்கியத்துவமும் பெற்றிருந்தது போரேயாகும். அவர் பதவியேற்று ஒரு மாதத்திற்குள்ளேயே சிட்டகாங்கிற்கு அப்பாலுள்ள ஷாபுரி தீவினைப் பர்மியர்கள் கைப்பற்றிக்கொண்டனர்; இதையடுத்து அஸ்ஸாமை அவர்கள் வன்முறையில் தாக்கிக் கைப்பற்றிக் கொள்ள முயன்றனர். எனவே, அடுத்துப் போர் மூண்டது. கூர்க்குகள் தங்கள் அரசினைப் பரப்புவதில் ஈடுபட்டிருந்ததைப் போன்றே, கடந்த ஏழுபது ஆண்டுகளாகத் தங்கள் அரசினை விரிவுபடுத்தும் முயற்சியிலும் தொடர்ந்து ஈடுபட்டு வந்துள்ளனர். ஆனால், தாங்கள் யாரை எதிர்த்துப் போரிடப் போகிறோம், அவர்களுடைய படையாற்றல் எத்தகையது என்பதையெல்லாம் கூர்க்குகளைப் போன்றே அவர்களும் அறிந்தவர்களல்லர். 1826ஆம் ஆண்டு ஃபிப்ரவரி மாதம் வரையில் போர் நடைபெற்றுவந்தது. அதனால் பேரிழப்பும் பெருஞ் செலவும் கம்பெனிக்கு உண்டாயிற்றே அல்லாமல் ஓரணுவளவு பெருமையோ, மதிப்போ கிடைக்கவில்லை. யாண்டபூ (Yandaboo) உடன்படிக்கை பிரிட்டிஷாரின் ஆட்சியின் கீழ் பர்மாவின் பெரும்பகுதியை மாற்றலாயிற்று. அவ்வாறு புதிய நிலப்பகுதி சேர்க்கப்படும் வேலை 1886-ல்தான் முடிவடைந்தது.[1] இப் போர்க் காலத்தில், கடல் வழியாக இந்தியப் படைகளை அனுப்பியமை, 1824ஆம் ஆண்டு அக்டோபர் மாதத்தில் பாரக்பூரில் படைத்துறைக் கலகத்தைத் தோற்றுவித்தது. அக் கலகமே ஆம்ஹர்ஸ்ட்டைத் தாயகத்திற்குத் திரும்பிவருமாறு அழைப்பதற்குப் போதிய காரணமாக அமைந்தது. ஆனால், தாயகத்தின் அரசியலில் உண்டான சிக்கல் அவ்வாறு செய்யவொட்டாமல் காலம் தள்ளுமாறு செய்தது. பர்மாவில் பிரிட்டிஷார் அடைந்த தோல்வி இந்தியாவில் அமைதியின்மையை உண்டாக்கியது. அரசுரிமைபற்றிப் பரத்பூரில் உண்டான பூசலின் மூலம், இவ்வமைதியின்மை பரத்பூரின் எதிர்ப்புக் கிளர்ச்சியாக வெளிப்பட்டது. ஆம்ஹர்ஸ்ட்டின் ஊசலாடும் உள்ளப் போக்கினால் ஆக்டர்லோனி வேலையிலிருந்து ஓய்வுபெற வேண்டிய நெருக்கடி உண்டாயிற்று. அதே உளப்பான்மை

[1] இந்நூலின் ஒன்பதாம் பாகம், மூன்றாம் பிரிவினைக் காண்க.

யோடு, அவர் 1826ஆம் ஆண்டில் அப்பரத்பூர் கோட்டையைத் தாக்கிப் பிடிப்பதற்குரிய திட்டங்களில் ஈடுபடுமாறு மெட்காஃபை அனுமதித்தார். 1828ஆம் ஆண்டு மார்ச்சு மாதத்தில் ஆம்ஹர்ஸ்ட் பதவியிலிருந்து ஓய்வு பெற்ருர். அவர் இந்தியாவிலிருந்து பதவியை விட்டு விலகி வந்தமைக்காகவோ, அவரடைந்த அல்லல்களுக்காகவோ அவருக்குக் கோமகன் (Earl) என்னும் பட்டத்தை இங்கிலாந்தின் அரசு அளித்துப் பாராட்டியது. அவருடைய சம காலத்தவரும் 'அப்பாவியுமா'ன காட்ரிச் (Goderich) என்பவரைப் போன்று, ஆம்ஹர்ஸ்ட்டும் நல்ல எண்ணமும், நெறியுமுடைய மனிதராவர்; குற்றம் குறைகளற்றவர். ஆனுல், தனிப்பட்ட பொறுப்பினை ஏற்றபொழுது, அதன் உச்சநிலைவரை எழுவதற்குரிய ஆற்றல் அவரிடத்து இல்லாமல் போயிற்று.

ஆம்ஹர்ஸ்ட்டை அடுத்துப் பதவிக்கு வந்தவர் முற்றிலும் வேறுபட்ட மனிதராக இருந்துவந்தார். வில்லியம் பென்டிங் பிரபு ஒரு குறையுடையவராக இருந்தார் என்று சொல்லப்படுமாஞல், அக்குறை அவருடையதன்று; குறையென்று, மற்றவர்களால் வண்ணம் பூசப்பெற்றதே நமக்குக் குறையாகத் தோன்றலாம். 1807ஆம் ஆண்டு, வேலூர் கலகத்தின் காரணமாக அவர் திருப்பியழைக்கப்பெற்ருர். வேலூர் கலகத்தினை அடக்கியொடுக்கத் தவறியமைக்குக் காரணம் சென்னைப் படைப்பிரிவின் தளபதியினுடைய தெளிவில்லா சிந்தனையேயாகும் என்பதைப் பிற்காலத்தில் கம்பெனியார் ஒப்புக்கொண்டனர். எனவே, பென்டிங் தம்முடைய இழக்கப்பட்ட மதிப்பையும் நற்பெயரையும் திரும்ப நிலைநாட்டுவதற்கு ஒல்லும் வகையெல்லாம் ஓயாது முயன்று வந்தார். அவர் ஸ்பெயினில் ஒரு போர் வீரராகப் பணி புரிந்தார். அங்கு, வெலிங்டன் அவரை விரும்பவில்லை; எனவே, வெறுத்தொதுக்கப்பட்டார். பின்னர் சிசிலியிலும் ஜெனேவாவிலும் அவர் பிரிட்டனின் பிரதிநிதியாகச் சென்றிருந்தார். அங்கு அவர் நடந்துகொண்ட முறையினுல், எளிதில் மனவுணர்ச்சியை எழுப்புகின்றவர் என்று குற்றம் சாட்டப்பட்டார்.[1] அரசியலில் அவர் முற்போக்குக் கொள்கையையுடைய விக்குக் (Whig) கட்சியினராக இருந்தார்.

[1] இத்தகைய சுவைமிக்க கிளைக் கதைகளை 'வில்லியம் பென்டிங்கும் சிசிலியும்' என்னும் நூலில் பார்க்கலாம். இந்நூலினை J. ரோசெலி (Roselli) என்பவர் எழுதியுள்ளார். கேம்பிரிட்ஜ், 1956.

அவர் சீர்திருத்தங்களைப் போற்றியாதரித்தார்; பென்தாமி னுடைய கொள்கைகளைப் பின்பற்றும் சீடராக விளங்கினர். அவரைக் கவர்னர்-ஜெனரலாக அமர்த்துவதை ஏற்றுக் கொள்ளாத முதலமைச்சர் லிவர்பூல், மறைந்த பிறகு எதிர் பாராத வகையில் கானிங் முதல் அமைச்சராகப் பதவி யேற்றார். அப் புதிய முதலமைச்சர் கம்பெனியின் இயக்கு நர்கள் பேராதரவு தருகின்ற பென்டிங்கைப் பதவியில் அமர்த்துவதற்கு மனமுவந்து இசைவளித்தார். அப் பொழுதும் அவர் அப் பதவிக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டவர் களுள் ஆருவது இடத்தையே பெற்றார். பென்டிங் பதவியில் அமர்த்தப்பட்ட சிறிது காலத்திற்கெல்லாம் முதல் அமைச்சர் கானிங் இயற்கையெய்தினர். பென்டிங் இந்தியாவை அடைவதற்குள் டோரிகளுள் சிறந்தவரும், எதிலும் குற்றம் காண்பதில் வல்லவருமான வெலிங்டன் இங்கிலாந்தின் முதலமைச்சரானர். எனவே, பென்டிங்கின் பதவிக் காலம் மிகக் குறைந்த அளவினதாகவும், துன்பம் நிறைந்ததாகவும் இருந்திருக்கும். ஆனல், நல்ல காலமாக 1830ஆம் ஆண்டு கிரே (Grey) பிரபுவின் சீர்திருத்த அமைச்சரவை பதவி யேற்றது. அது பென்டிங்கிற்கு நிலேத்த ஆதரவை அளித்து வந்ததோடு, செயலாற்றுவதற்குரிய வழிமுறைகளேயும் வகுத்துத் தந்தது.[1]

பென்டிங் அமைதியை நாடுபவராகவும், கட்டுப் பாட்டையும் ஒழுங்கு முறையையும் கடைபிடிப்பவராகவும், சிக்கனமாகச் செலவு செய்பவராகவும் இருந்தமையால் கம்பெனியின் இயக்குநர்கள் அவரைப் போற்றி ஆதரித்தனர். பர்மியப் போரினல் கம்பெனியின் நிதிநிலேமை மீண்டும் தொல்லே கொடுக்கலாயிற்று. பற்றாக்குறை வரவுசெலவுத் திட்டத்தைப்பற்றிய பட்டயச் சட்டம் இன்னும் பரிசீலனேக்கு எடுத்துக்கொள்ளப்படாமல் இருந்துவந்தது. அது இந்தச் சமயத்தில் பாராளுமன்றத்தில் பரிசீலனேக்கு எடுத்துக் கொள்ளப்படுமோ என்று இயக்குநர்கள் அஞ்சியவண்ணம் இருந்துவந்தனர். ஆனல், பென்டிங்கிற்குரிய உண்மையான சிறப்பெல்லாம் அவர் இடதுசாரியினரின் ஆதரவாளராக இருந்தமையேயாகும். அப்பொழுதுதான் ஆட்சிக்கு வந்து

[1] வெலிங்டன் அமைச்சரவையோடு பென்டிங்கிற்கு உண்டான மனக்கசப்பை அறிவதற்கு T. G. P. ஸ்பியர் எழுதியுள்ள 'எல்லன்பரோவும் பென்டிங்கும்' என்னும் கட்டுரையைக் காண்க. அக் கட்டுரை 'Proceedings of Indian History Congress, 1939' என்னும் மலரில் வெளிவந்திருக்கிறது.

கொண்டிருந்த புத்துலகக் கருத்துகளையும், கொள்கைகளையும் கொண்டவராக பென்டிங் விளங்கியமையே அவருடைய சிறப்பிற்குரிய காரணமாகும். சீர்திருத்த நோக்கம் உடைய அமைச்சரவை பதவியேற்ற நற்பேற்ருலும், இயக்குநர்களின் அதிகாரக் கட்டளைகளை ஏற்று, செயற் படுத்தி வந்தமையாலும் இந்திய ஆட்சிமுறைக் கொள்கையில், நலவாழ்வையும் மேனுட்டு நாகரிகப் பண்பாட்டு முறைகளை யொட்டி புதியதாக அமைப்பதையும் நோக்கி ஒரு திருப் பத்தை திடீரென உண்டாக்க பென்டிங்கால் முடிந்தது. அவ்வாறு அவர் செய்த மாற்றம் பிற்காலத்தில் என்றுமே முற்றிலும் இழக்கப்படவில்லை. 'இந்தியாவில் நாம் ஒரு மாபெரும் அறநெறிக் கடமையை ஆற்ற வேண்டியவர்களாக இருக்கின்ரேம்' என்னும் தொடர்மொழியினைத் தோற்று வித்தவர் மாண்புமிக்க எல்லன்பரோ பிரபு ஆவார். ஆனுல், அப் பொன்மொழிக்குச் சிறந்த பொருளையும் உள்ளார்ந்த உணர்வையும் செயல்மூலம் ஊட்டிவந்த பென்டிங்கை, அந்த எல்லன்பரோ பிரபு இந்தியாவிலிருந்து திரும்பிவருமாறு அழைக்க முனைந்தமை வியப்பிற்குரிய செய்தியாகும்.

சிக்கனமாகச் செலவிடுவதே பென்டிங்கினுடைய முதன்மையான கடமையாக இருந்தது. இந்தியாவில் சிக்கன மாகச் செலவுசெய்ய விரும்புவோருக்குத் தற்செயலாக பல இடையூறுகள் உண்டாகிக் கொண்டிருந்தன. இக் காரணத் தால், ஒரு படைத்தலைவரை கவர்னர்-ஜெனரலாக அமர்த்து வதையே இயக்குநர்கள் பெரிதும் வரவேற்றனர். பென்டிங் கினுடைய சிக்கனத் திட்டம் விரிவானதாகவும் கடுமையான தாகவும் இருந்தது. வங்காளத்தில் இருந்துவந்த படை வீரர்கள் பெற்றுவந்த இரட்டைப் படியினை[1] ஒழித்தமை அவருடைய சிக்கனத் திட்டத்தின் மிகச் சிறியதொரு செய லாகும். ஆனுல், அச் செயல் அவருக்குத் 'துண்டுத் துணுக்கு களைப் பொறுக்கும் டச்சுக்காரன்' என்னும் பட்டத்தையும்,

[1] சுறுசுறுப்பாகப் படையினர் பணிபுரிகிறபொழுது அவர் களுக்கு அளித்த சிறப்புப் படியே 'பேட்டா' என்று வழங்கப்படுகிறது. இந்தப் படி பிரிட்டிஷாரின் ஆட்சிக்குட் பட்டிருந்த எல்லாப் பகுதிகளிலும் பணிபுரிந்த படை யினருக்கு அளிக்கப்படவில்லை. எனவே, அடிக்கடி அப் படியைக் குறைக்கவேண்டும் என்ற கூக்குரல் எழுந்தது. கல்கத்தாவிலிருந்து 400 மைல்களுக்கு உட்பட்ட பகுதி களில் படைகள் நிறுத்தப்பட்டிருக்குமானுல், அப்பொழுது அப் படைகளுக்கு முன்பு கொடுத்துவந்த படியினில் பாதி யினைக் கொடுக்கவேண்டும் என்று புதிய விதி அறிவித்தது.

இன்றுவரையில் முற்றிலும் மறைந்தொழியாத பழமொழியையும்[1] தேடித்தந்தது. படைத்துறையினரின் மனக்குறையை உண்டாக்கிய இச்செயலைச் செய்கின்றபொழுது, அவர் உறுதியான உள்ளத்துடனும் அரசியல் சூழ்ச்சித் திறத்துடனும் பணியாற்றினார். அவருடைய அச்செயலால் தனிப்பட்ட முறையில் அவருக்குக் கொடுக்கவேண்டிய மரியாதையைக்கூடக் கொடுப்பதற்குப் படைவீரர்கள் முன்வரவில்லை. அதுமட்டுமல்லாமல் சமுதாயத்தில் அவரைச் சாதிக் கட்டுப்பாடு செய்யவும் ஆங்கிலேயர்கள் முயன்றனர். ஆயினும், அவர் தளராத மன உறுதியோடு செயலாற்றினார். அத் தளரா மனவுறுதிதான் அவருடைய வாழ்க்கையின் தொடக்கத்தில் அவருடைய முன்னேற்றத்திற்குத் தடையாக இருந்தது. அவருடைய ஆர்வத்தினை அவருடைய அனுபவமிக்க வயது, சிந்தனையினால் பக்குவமாகக் கட்டுப்படுத்தியது; அமைதியான அவருடைய மனவெழுச்சி மற்றவர்கள் எல்லாம் வெறுமனே பேசிப்பேசிக் காலத்தைக் கழித்த காலத்தில், சிறந்த முறையில் செயலாற்றும் நிலைக்குக் கொண்டுபோய் விட்டது. சிக்கனக் கொள்கையைச் செயற்படுத்துவது என்பது தனிப்பட்ட வகையில் அவருக்கு வெறுப்பை உண்டாக்கியது. தனிப்பட்ட முறையில் படிக்குறைப்பை அவர் மிகவும் வன்மையாகக் கண்டித்தார்; அற்பத்தனமாகக் குழப்பத்தை உண்டாக்குவதும், வீணான செயலுமாகும் என்பதே அதைப்பற்றி அவர் கொண்டிருந்த கருத்தாகும். படைத் துறையிலும், பொதுத் துறையிலும் அவர் மேற்கொண்ட சிக்கனக் கொள்கையின்மூலம் பதினைந்து லட்சம் பவுன்களைச் சேமித்து வைத்தார். அவர் பதவியேற்ற காலத்தில் ஆண்டுதோறும் பத்து லட்சம் கடன்பட்டுக் கொண்டிருந்த பற்றுக்குறையான வருவாயையுடையதாக இருந்துவந்த கம்பெனியின் கருவூலத்தை, ஆண்டுதோறும் பதினைந்து லட்சம் தேவைக்கு மிகுதிப்பட்ட வருவாயுடையதாகச் செய்துவிட்டு அவர் சென்றார். இந்த அளவிற்கு இயக்குநர்களின் ஆர்வம்மிக்க ஆதரவை அவர் பெற்றுவந்தார். ஆனால், பென்டிங் இந்த உபரியாக இருந்த பொருளை இந்திய மக்களின் நல்வாழ்விற்காகப் பயன்படுத்த

[1] இத்தகைய பழிப்புக்கு எடுத்துக்காட்டாக பென்டிங் தாஜ்மகாலிலுள்ள பளிங்குக் கற்களுக்காக அதை விலைகூறி விற்க முயன்றார் என்னும் கதையைக் கூறலாம். T. G. P. ஸ்பியர் அவர்கள் எழுதியுள்ள 'பென்டிங்கும் தாஜ்மகாலும்' என்னும் கட்டுரையை ராயல் ஏஷியாடிக் சங்க இதழில் பார்க்க.

விரும்பியபொழுது, இயக்குநர்களுக்கும் அவருக்கும் இடையே மனக்கசப்பு உண்டாயிற்று. இந்தியாவின் அரசாங்கம் மீண்டும் பொருளாதார வசதிமிக்க ஒன்றாக வளர்ச்சியுறலா யிற்று. அதனால், இங்கிலாந்தில் பாராளுமன்றத்தின் சீர்திருத்த வேகத்தைத் தன்னம்பிக்கையுடன் எதிர்த்துப் போட்டியிட முடிந்தது. 1833ஆம் ஆண்டில் இயற்றப்பட்ட பட்டயச் சட்டத்திற்குப் பின்னரும் பென்டிங்கினுடைய நிதி நிலையைச் செம்மைப்படுத்திய திட்டங்களினாலேயே பெரும் பாலும் தொடர்ந்து கம்பெனி நொடித்துப் போகாமல் இருக்க முடிந்தது.

பென்டிங் நீதித்துறையிலும் வருவாய்த் துறையிலும் செய்த சீர்திருத்தங்களே அவருடைய மாபெரும் சாதனை களாகும். நெடுங்காலம் வழக்குகளை விசாரிக்காமல், குவித்து வைப்பதற்குக் காரணமாக இருந்ததும் காரன்வாலிஸினால் அமைக்கப்பட்டதுமான மாநில முறையீட்டு மன்றங்களையும், சுற்றுலா நீதிமன்றங்களையும் (Circuit Courts) அவர் கலைத் தொழித்தார். நீதிமன்றங்களில் இதுவரை பாரசீக மொழியே பயன்படுத்தப்பட்டுவந்தது. அதை மாற்றி கீழ்நிலையிலுள்ள நீதிமன்றங்களில் வட்டார மொழிகளையும், மேல்நிலையிலுள்ள நீதிமன்றங்களில் ஆங்கில மொழியையும் பயன்படுத்துமாறு அவர் ஆணை பிறப்பித்தார். இந்திய நீதிபதிகளுக்கு அதிகாரத்தை மிகுதியாக வழங்கியதனாலும், ஊதியத்தை அதிகப்படுத்தியதனாலும் அவர்களுடைய மதிப்பு உயர்ந்தது எனலாம். மேலும், இந்தியர்களுடைய திறமையை அவர் போற்றியாதரித்தமையும் புலனாகின்றது. இத் திட்டம் ஒன்றுதான் இயக்குநர்களால் மிக விரைவிலே ஒப்புக் கொள்ளப்பட்டது. ஏனென்றால், இம்முறையில் ஓரளவிற்குச் சிக்கனக் கொள்கை இடம்பெற்றிருந்தமையேயாகும். எங்குக் கொள்கையின் அடிப்படையில் இன்னும் கருத்துவேற்றுமை இருந்துவந்ததோ, அங்கு நிதிநிலைமை மேற்கொள்ள வேண்டிய வழியைச் சுட்டிக்காட்டியது எனலாம். வருவாய்த் துறையில், 1822ஆம் ஆண்டில் இயற்றப்பட்ட ஏழாவது ஒழுங்குமுறை விதி மிகப்பரந்த ஒன்றாகவும், திறமை மிகுதி யாகத் தேவைப்படுகின்ற ஒன்றாகவும் இருந்தமையால், அதைச் செயற்படுத்துவது பெரிதும் இடர்ப்பாடாக இருக் கிறது என்னும் கூக்குரலைக் கேட்டு, அதற்கு வழிகாண வேண்டிய பொறுப்பு அவரைச் சார்ந்ததாயிற்று. 1830ஆம் ஆண்டின் இறுதியில் அவருடைய சிறப்புமிக்க வட இந்திய யாத்திரையைத் தொடங்கினார். கோடை காலத்தைச்

சிம்லாவிலும், குளிர்காலத்தைச் சமவெளிப் பிரதேசங்களிலும் கழித்ததன்மூலம், அவ்விடங்களின் நிலையினையும் தன்மையினையும் அவர் நேரடியாகக் கண்டறிந்தார். அதன் விளைவாக R. M. பர்ட் (R. M. Bird) என்பவருடைய ஆதரவோடு, பென்டிங் வடமேற்கு மாநிலங்களில் நிலத்தீர்வை முறையைச் செயற்படுத்தினர். அத்திட்டம் முழுமையாகச் செயற்படுத்தப்படுவதற்குப் பத்தாண்டுகளாயின. அத்திட்டம் முப்பதாண்டுகளுக்கு ஒருமுறை விதிக்கப்படும் ஓரளவிற்கு நிலைபேறுடைய நிலத்தீர்வை முறையாக இருந்து வந்தது. அதே நேரத்தில் உழவர்கள் முன்னேற்றத்திற்கான வழிவகைகளை நாடுவதற்குரிய வசதியை அளிப்பதாகவும், அதன் பயனுக அரசாங்கம் மேலும் சிறிது ஆதாயம் அடையக்கூடியதாகவும் அம்முறை அமைந்தது. அவருடைய வருவாய்த் துறைச் சீர்திருத்தம் அப்பொழுது நிலவியிருந்த உரிமைகளைப் போற்றி மதித்தது. அவ்வவ் வட்டாரங்களுக்கேற்ப அங்கங்கிருந்த பெருநிலக்கிழார்கள், உழவர்கள் அல்லது கிராமச் சமூகங்கள் ஆகியோரின் உரிமைகளைப் போற்றி மதிக்கும் நிலையில் அவருடைய திட்டம் செயற்படுத்தப்பட்டது. அவருடைய பயணத்தின் துணை விளைவு, வேலை செய்வதற்குரிய இடங்களாகவும், நோய் நீங்கி உடல் நலம் பெறுவதற்காகத் தங்கி வாழ்வதற்குரிய நலவாழ்விடங்களாகவும் குன்றுகள் உள்ளதைக் கண்டுபிடித்தமையாகும். அவருடைய இப்பயணமுறை மிக விரைவில் சிறந்ததோர் எடுத்துக்காட்டாகப் பின்வந்த கவர்னர்-ஜெனரல்களால் பின்பற்றப்பட்டது. எனவே, குன்றுகளை நலவாழ்வு நிலையங்களாகப் பயன்படுத்தும் பிரிட்டிஷார் ஆட்சிக்கால இந்தியாவின் சிறப்புமிக்க செயல்முறைக்குப் பென்டிங்தாம் கால்கோள் விழா நடத்தினர் என்று நாம் கூறலாம்.

சமுதாயத் துறையிலும், அறிவாற்றல் துறையிலும் பென்டிங் செய்த சீர்திருத்தங்கள், அவருடைய மூன்ருவது பெரும் சாதனையாகும். கணவன் இறந்தவுடன் மனைவி அக்கணவனுடன் தீக்குளித்தலாகிய உடன்கட்டை ஏறுதல் எனப்படும் 'சதி' என்ற கொடிய வழக்கத்தினைச் சட்டத்தின் மூலம் பென்டிங் தடுத்து நிறுத்தியமை அவருக்குப் பொன்ருப் புகழைத் தேடிக் கொடுத்தது எனலாம்.[1] இந்தக் கொடிய வழக்கத்தை முகலாயர்கள் வெறுப்புடன் கண்டித்து வந்தனர். அவ் வழக்கம் பிரிட்டிஷாரின் ஆட்சிக் காலத்திய

[1] மேலும் எட்டாம் பாகத்தில் ஏழாம் இயலினைப் பார்க்க.

வங்காளத்தில் பெரு வழக்காகப் பெருகலாயிற்று. வெல்லஸ்லி முதல் ஒவ்வொரு கவர்னர்-ஜெனரலும் அக் கொடிய வழக்கத்தைத் தடுத்து நிறுத்தவேண்டும் என்று கருதி வந்தனர். மற்றவர்கள் எல்லாம் கண்டும் பேசியும் வந்த ஒன்றை ஒழிப்பதற்குப் பென்டிங் திட்டமிட்டுச் செயலாற்றினர். அவர் அத் திட்டத்தைச் செயற்படுத்த முனைந்தபொழுது அவருக்கு உண்டான எதிர்ப்பு வியக்கத் தக்க வகையில் மிகவும் ஆற்றலற்ற ஒன்ருக இருந்தமை இங்குக் குறிப்பிடத் தக்கதாகும். இதைப்போன்ற மற்ருெரு முக்கிய செயல் தக்கர்களை (Thags) அழித்தொழித்தமை யாகும். 1830ஆம் ஆண்டு முதல் கர்னல் ஸ்லீமன் (Col. Sleeman) தலைமையில் தக்கர்களுக்கு எதிராக நடத்தப் பெற்ற படையெடுப்பின் விளைவாக, அக் கொள்ளைக் கூட்டத் தினர் அழித்தொழிக்கப்பட்டனர். இத் தக்கர்கள் கொள்ளைக் கூட்டத்தினராகவும், சமயச் சடங்குகளின் பேரால் மனிதர் களைக் கொலை (பலி) செய்பவர்களாகவும் இருந்துவந்தனர். அவர்கள் கொள்ளைக் கூட்டம் ஒன்றையும், சமய வழிபாட்டு நெறி மரபுக் குழு ஒன்றையும் அமைத்து இருந்தனர். அவர்கள் மத்திய இந்தியாவிலும், வட இந்தியாவிலும், குழப்பமும் கொந்தளிப்பும் உண்டான காலத்தில் பேராற்றல் உடையவர் களாகப் பெருகலாயினர். வங்காளத்தில் ஒரு தீவாக உள்ள சாகரில் (Saugar) குழந்தைகளைச் சமயச் சடங்குகளில் பலி யிட்டுவந்த கொடிய வழக்கத்தை, அடக்கியொடுக்கியமையும், குழந்தைக் கொலைகளைத் தடுத்து நிறுத்தியமையும் அவருடைய செயற்கருஞ் செயல்களோடு ஒப்பவைத்துப் போற்றத்தக்கனவாகும். இந்தச் செயல்கள் அனைத்தும் பிரிட்டிஷாருடைய ஆட்சியின் புதிய பண்புகளாக விளங்கின. ஏனெனில், அவர்கள் வெளிப்படையாக சமூகப் பழக்கவழக் கங்களிலும் சமய வழிபாட்டு மரபுகளிலும் நேரடியாகத் தலையிடத் தொடங்கினர். மனித இனத்தின் நலத்தை நாடும் அனைத்துலகச் சட்டத்தின் நிலைக்களனுக உள்ள பகுதியில் அல்லவா அவர்கள் தலையிடத் தொடங்கினர்; மனித இனத்தின் நலனை நாடும் அனைத்துலக ஒழுக்கநெறிச் சட்டத்தின் முன்னர் சமயச் சார்பான செயலுரிமைகளும் செயலற்று—மதிப்பற்றுப் போகவேண்டும் என்பது இக் காலத்து சமூக இயல் நூலார் எடுத்தியம்பும் தத்துவ மாகும்.

தவருன பழக்க வழக்கங்களைத் திருத்தியமைப்பதில் இருந்து, இப்பொழுது பென்டிங் புதிய ஆக்கவேலைகளில்

ஈடுபடத் தொடங்கினர். 1813ஆம் ஆண்டில் இங்கிலாந்தின் பாராளுமன்றம் நிறைவேற்றிய பட்டயச் சட்டத்தில் இந்திய மக்களுக்குக் கல்வி வசதி அளிப்பதைப் போற்றி ஆதரித்து வளர்த்துவரவேண்டும் என்னும் ஒருவிதி இடம்பெற்றிருந்தது. பென்டிங் அவ்வாட்சிமுறைக் கொள்கைக்குப் புதியதோர் ஆற்றலை ஊட்டியதோடு, புத்தம்புதிய வழியிலே செலுத்திச் செயலாற்றத் தொடங்கினர். மேலைநாட்டு அறிவு வளமோ இந்நாட்டில் புகட்டப்படும் கல்வியின் சாரமாக இருக்க வேண்டும் என்றும், அக் கல்வியை ஆங்கில மொழியின் மூலமாகப் பயிற்றுவிக்கவேண்டும் என்றும் அவர் கருதியதோடு அமையாமல், அம்முறையில் செயலாற்றவும் தொடங்கினர். இம்முறையினைச் செயற்படுத்துவதற்குப் போதிய உள்ள உரம் பெற்றிருந்ததோடு, அவர் தற்காப்புக்காகத் தாயகத்துச் சான்றோர்களின் ஆதரவையும் பெற்றார். ஆனல், இத் திட்டம் மெக்காலேயினுல் எதிர்பார்க்கப்படவில்லை. இது பென்டிங் தாமே வகுத்த திட்டமாகும். 1833ஆம் ஆண்டு நிறைவேற்றப்பட்ட பட்டயச் சட்டத்தின்படி மெக்காலே கவுன்சிலின் சட்டவியல் உறுப்பினராக வந்து சேர்ந்தார். 1829ஆம் ஆண்டிலேயே பென்டிங் 'எல்லா வகையான முன்னேற்றத்திற்கும் திறவுகோலாக இருப்பது பிரிட்டிஷாருடைய மொழியேயாகும்' என்று மெட்கா:பிற்கு எழுதியிருக்கிருர். மெக்காலே இந்தியாவிற்கு வருவதற்கு முன்பு 1834ஆம் ஆண்டில், பென்டிங் 'இந்தியாவின் புத்துயிர்ப்பிற்குப் பொதுக்கல்வியே நான் தரவிரும்பும் மாமருந்தாகும்'[1] என்று மெட்கா:பிற்குத் தெரிவித்திருக்கிருர். நீதிமன்றங்களில் வழங்கிவந்த பாரசீக மொழியை நீக்கி, ஆங்கில மொழியை அவ்விடத்தில் ஆட்சி மொழியாக அமர்த்தியமையும், அரசாங்கத்தின் செயல்முறைகளுக்கு எல்லாம் ஆங்கிலத்தையே பயன்படுத்தி வந்தமையும் ஆங்கிலத்தைக் கற்பதற்கும் மேலைநாட்டு அறிவு வளம் பரவுவதற்கும் ஆற்றல்மிக்க தூண்டுதலாக அமைந்ததோடு, அது பயனளிக்கும் தூண்டுதலாகவும் அமைந்தது. இந்த மாண்புமிக்க செயல்முறைத் திட்டத்தோடு, அவருடைய எதிர்காலம் எவ்வாறிருக்கும் என்பதைக் கணித்து அறியும் மனநிலையும், முற்போக்கான எண்ணங்களும் ஒருங்கு சேர்த்துக் கூறத் தக்கனவாகும். அவற்றுள் 1835ஆம் ஆண்டு அவர் இடம்

[1] பென்டிங்கின் கடிதங்கள் மெட்கா:பிற்கு எழுதியவை, செப்டம்பர் 16, 1829; மான்சிக்கு (Mancy) எழுதியவை, ஜூன் 1, 1834.

மாற்றுவதற்குச் செலுத்தவேண்டிய வரிகளை (Transit duties) ஒழித்தமையும், ஆற்று வழியாகவும், கடல் வழியாகவும் நீராவிப் படகுகள், கப்பல்களின் போக்குவரத்தைத் தொடங்கி வைத்தமையும், காப்பி, தேயிலை ஆகியவற்றை இந்தியாவில் பயிரிடத் தொடங்கியமையும், இரும்பு, நிலக்கரி தோண்டியெடுக்கப்பட்டமையும் சாலைகள் பலவற்றை ஒருங்கே இணைக்கும் திட்டம் ஒன்றை உருவாக்கியமையும், வடிகால் திட்டம் வகுத்தமையும், நீர்ப்பாசனத்துக்குரிய கால்வாய்களை[1] வெட்டுவதற்குத் திட்டம் வகுத்துச் செயற்படுத்தியமையும், இந்தியப் படைப்பகுதியில் கசையடி கொடுத்து வந்ததை ஒழித்தமையும் குறிப்பிடத்தக்கனவாகும்.

உள்நாட்டு அரசுகளோடு தொடர்பு கொள்ளுவதிலும், வெளிநாட்டு அரசுகளோடு பழகுவதிலும் அவர் முன்னோரிடமிருந்து பெற்ற தலையிடாக் கொள்கையும், வலுச் சண்டைக்குப் போகாமையும் ஆகிய கொள்கைகளைத் தொடர்ந்து பென்டிங் கடைப்பிடித்து வந்தார். இக் கொள்கையைக் கடைப்பிடித்து வந்தமையால் உள்நாட்டு அரசுகள் கொடுத்துவந்த தொல்லைகளையெல்லாம் சமாளிக்க வேண்டியவரானார். உள்ளும் புறமும் ஆளுகின்றவர்களுக்கு அளிக்கப்பட்டுவந்த பாதுகாப்பும், திறமைகளை வெளிப்படுத்துவதற்குரிய வழிமுறைகள் இல்லாமை அல்லது நேர்மையான உயர்ந்த பேரவா இல்லாமையும் பொறுப்பற்ற தன்மையையும், வேலையில் விருப்பமில்லா மனநிலையையும், நலிவையும் வீழ்ச்சியையும் உண்டாக்கின. இந்தப் பிரச்சினையைத் தீர்ப்பதற்குரிய வழிவகை ஒன்றுமே பென்டிங்கிற்குத் தோன்றவில்லை. இயன்ற வரையில் உள்நாட்டு அரசுகள் கொடுத்துவந்த தொல்லைகளை எல்லாம் அவர் பொறுத்துக்கொண்டே வந்தார். பொறுத்துக்கொள்ள முடியாத அளவிற்கு நெறிபிறழ்ந்த ஆட்சி நடைபெறுவதைத் தடுப்பதற்காகவே, சிற்சில சமயங்களில் அவ்வரசுகளின் ஆட்சியில் அவர் தலையிட்டார். மைசூரில் வெல்லஸ்லியால் பதவியில் அமர்த்தப்பட்ட அரசர் திறமையற்றவர் என்பதை மெய்ப்பித்ததோடு, கொடுங்குற்றம் இழைக்கும் நேர்மைக் கேடுடையவர் என்பதையும் செயல்முறையில் காட்டிவந்தார். முன்பு செய்யப்பட்ட உடன்படிக்கையில் குறிப்பிட்டபடி மைசூரினை ஆட்சிபுரியும் பொறுப்பினை அரசரிடமிருந்து

[1] தமிழகத்திலுள்ள ‘கல்லணை’ (Grand Anicut) 1835—6ஆம் ஆண்டுகளில் கட்டப்பட்டது.

கம்பெனி பறித்துக் கொண்டது. ஐம்பதாண்டுகள் மைசூர் பிரிட்டிஷாரின் ஆளுகைக்குட்பட்டதாகவே இருந்துவந்தது. கூர்க்கு அரசர் கொடுஞ்செயல்கள் பல புரிந்துவந்தமையால் அவரிடமிருந்து 1834ஆம் ஆண்டு அவ்வரசர் பதவியில் இருந்து நீக்கப்பட்டார்; 'மக்களின் ஒருமுகமான விருப்பத் திற்கு இணங்க அவ்வரசு பிரிட்டிஷாரின் அரசோடு இணைத்துக் கொள்ளப்பட்டது.' மக்களின் விருப்பத்திற்கு இணங்கியே கச்சார் (Cachar) எனும் அரசும் ஆங்கிலேய அரசோடு இணைத்துக்கொள்ளப்பட்டது. பின்னர் அது தேயிலைத் தோட்டங்களின் கூடாக விளங்கலாயிற்று. சீர்திருத்தங்கள் செய்யப்போவதாக உறுதிமொழி அளித்த அயோத்திக்கு, மைசூருக்கு உண்டான கதி உண்டாகாமல்போயிற்று. ஜெய்ப் பூர், குவாலியரைப்போன்றே மற்ற இடங்களில் எல்லாம் உண்டான குழப்பங்கள் பிரிட்டிஷார் தலையிடவேண்டிய தேவை இல்லாமலேயே மிகக் குறுகிய காலத்தில் அடங்கிப் போய்விட்டன. எல்லைக்கு அப்பால் அமைதி நிலைநாட்டப்பட் டிருந்தது. ஆனால், 1831ஆம் ஆண்டில் முதன்முதலாகச் சிந்து நதியின் நீரினை நீர்ப்பாசனத்திற்குப் பயன்படுத்துவதற் காகத் திறந்துவிடப்பட்டது. அத்துடன் இரஞ்சித் சிங்குடன் லாகூரில் ஒரு வாணிக உடன்படிக்கை செய்துகொள்ளப் பட்டது. ருஷ்யாவினால் இந்தியாவிற்குப் பேரிடர் உண்டாகும் அறிகுறி புலப்படுவதாக அறிந்துரைத்த முதல் கவர்னர்-ஜெனரல் பென்டிங்கேயாவார். ஆனால், அவரும் மெட்காஃபும் பேரிடரினைச் சந்தித்து சமாளிக்க மேற்கொண்ட முறைகள் ஆக்லண்டு பின்பற்றிய முறைகளிலிருந்து வேறுபட்டிருந்தன என்று கூறலாம்.

அரசியலில் மாற்றம் உண்டான சமயத்திலே பென்டிங் தாம் பதவியிலிருந்து விலகி ஓய்வுபெறப்போவதாக அறிவித் தார். 1835ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் அவர் இந்தியாவை விட்டுப் புறப்பட்டுச் சென்றதிலிருந்து, அவருக்குப் பிறகு நிலையாகப் பதவியேற்க மற்றொருவர் இந்தியாவிற்கு வருகின்ற வரையில் சர் சார்லஸ் மெட்காஃப் தற்காலிகக் கவர்னர்-ஜெனரலாகப் பணியாற்றினார். அவர் உள்ள உணர்ச்சிகளில் தாராளவாதியாக விளங்கினார். அவர் 1800ஆம் ஆண்டு முதல் தொடர்ந்து இந்தியாவிலேயே இருந்துவந்தவராவார். பென்டிங்கின் ஆட்சிக் காலத்திய சாதனைகள் அனைத்திற்கும் உறுதுணையாக அவர் இருந்துவந்த தோடு, பென்டிங்கின் வலது கையைப்போன்று பல வகையில் அவருக்கு உதவியாக விளங்கியவருமாவார். வெளிநாட்டில்

வீரதீரச் செயல்கள் செய்வதில் மெட்கா∴ப்கூட அனுபவம் பெற்றிருந்தார்; செயல்முறையில் அடிப்படையை மாற்றி அமைக்கும் கோட்பாட்டில் பழக்கப்பட்டவருமாக விளங்கினுர். அவருடைய தாராள மனப்பான்மை எவ்வாறிருந்தபோதிலும் ஒரு துணிச்சலான செயலைச் செய்யுமாறு அவரை அது தூண்டிற்று. அச்சகத்தார் செய்தித்தாளைப் பதிப்பித்து வெளியிடுவதற்கு முன்னர் அரசினரிடத்து அதற்குரிய உரிமத்தினைப் (licence) பெறவேண்டும் என்னும் ஜான் ஆதாம் கொண்டுவந்த விதிமுறையினை அவர் வேண்டாமென்று ஒழித்துவிட்டார். இதைக் கண்டு கம்பெனி இயக்குநர்கள் திகைப்புற்றனர். அதன் விளைவாக மெட்கா∴ப் நிலைத்து கவர்னர்-ஜெனரலாகப் பணியாற்றுவதற்குரிய வாய்ப்பினை இழந்தார்.[1] அவர் பதவியிலிருந்த ஓராண்டு, பென்டிங்கினுடைய ஆட்சிக்காலம் மேலும் ஓராண்டு நீடிக்கப்பட்டதைப் போன்று செயல்முறைகளிலும் அதன் விளைவுகளிலும் காணப்பட்டது.

முதலில் கவர்னர்-ஜெனரல் பதவி மவுன்ட் ஸ்டூவர்ட் எல்∴பின்ஸ்டன் அவர்களுக்கு வழங்கப்பட்டது. ஆனுல், அவர் உடல்நலக் குறைவு காரணமாக அப்பதவியை வகிக்க இயலாமையைத் தெரிவித்துவிட்டார். பின்னர், சிறிதுகாலமே ஆட்சிப் பொறுப்பை ஏற்றிருந்த டோரி அரசு ஹெப்டஸ்பரி பிரபுவை அப்பதவியில் அமர்த்தியது. ஆனுல், அவர் இந்தியாவிற்குக் கப்பலில் புறப்படுவதற்கு முன்பே விக்குகள் அரசினைக் கைப்பற்றிக் கொண்டனர். எனவே, அவர்கள் ஹெப்டஸ்பரி பிரபுவின் பதவியமர்த்தலைத் தள்ளுபடி செய்து, செல்லாது என்று அறிவித்தனர். அதன்பிறகு அவர்கள் மின்ட்டோ பிரபுவின் நெருங்கிய உறவினரும், சிறந்ததொரு விக்குக் கட்சியினருமான ஆக்லண்டு பிரபுவைப் பதவியில் அமர்த்தினர். ஆக்லண்டு திறமைமிக்கவரும் நேர்மையானவரும், மனச்சான்றை மதித்துப் போற்றுபவருமாவார். ஆமர்ஸ்ட்டோடு அவரை ஒப்பிட்டுக் கூறமுடியாது. ஆனுல், அவரிடத்தில் ஒரு குறை இருந்தது. நெருக்கடி நேரத்தில் மற்றவர்களை அடக்கியொடுக்கி ஆதிக்கம் செலுத்துவதற்குரிய முனைப்புமிக்க ஆளுமை அவரிடத்தில் இல்லை. மேலும், அவர் தம்முடைய ஆவல்களைக்காட்டிலும் பிறருடைய ஆர்வம்

[1] மெட்கா∴ப் தம்முடைய வேலையை 1837ஆம் ஆண்டு கைவிட்டார். ஆனுல், 1839-ல் ஜமைய்காவின் கவர்னராகவும், 1843-ல் கானடாவின் கவர்னர்-ஜெனரலாகவும் பணியாற்றும் வரை அவர் வாழ்ந்துவந்தார்.

மிக்க ஆவல்களுக்கு எளிதில் இரையாகிவிடுபவராகவும் இருந்துவந்தார். அவரிடத்து ஒழுக்கக்கேடான மனப் போக்கும் இருந்துவந்தது. அதனால் அவர் செய்த செயல்கள் சில இன்னும் அவருடைய பண்புநலனுக்கு முற்றிலும் பொருத்தமற்றவையாகவே காணப்படுகின்றன. அவரைப் பதவியில் அமர்த்தியது நம்பிக்கைக்குரியதாகவும், இடர்க் காப்பானதாகவும் கருதப்பட்டது. ஆனால், நெருக்கடி நேரங்களில் தெளிவான குறைகள் இல்லாத பண்பு மிகவும் இடர்ப் பாடானது என்பதைச் செயலில் மெய்ப்பித்துவிடும் என்பதை அவருக்கு ஆதரவு தந்து பதவியில் அமர்த்தியவர்கள் மறந்து விட்டனர். தன்னந்தனியே ஆட்சிபுரியும் பதவியைப்போன்று சிறந்ததொரு வாய்ப்பும் வசதியும் வேறொன்றும் இருக்க முடியாது. கட்சி அரசியல்வாதிகளின் மாண்புமிக்க வடிவங் களின்கீழ் களிமண்ணால் செய்யப்பட்ட திருவடிகளே உள்ளன என்பதைத் தெரிவிக்க இந்தியாவைப்போன்று பல்வேறு சிக்கலான பிரச்சினைகளைக்கொண்ட மற்றொரு நாடும் இருக்க முடியாது.

பென்டிங் தாமாக வருத்துக்கொள்ளாத முறையில் உள்நாட்டு அரசுகளினால் பிரச்சினைகள் உண்டாவதைக் கண்ட தைப் போன்று, ஆக்லண்டு, அவராகத் தேர்ந்தெடுக்காத வெளிநாட்டுப் பிரச்சினைகள் பலவற்றை அவர் எதிர்த்துச் சமாளிக்கவேண்டிய நெருக்கடி உண்டாயிற்று. கருத்தளவில் அவர், பென்டிங்கினுடைய உள்நாட்டு ஆட்சிமுறை மரபுகளை அப்படியே போற்றிப் பின்பற்ற விரும்பினார். குறிப்பிட்ட ஒரு நிலைவரையில் அக் கருத்திலும் அவர் வெற்றி பெற்றார். மேனாட்டுக் கலைகளையும் கீழைநாட்டுக் கலைகளையும் கற்ப தற்குச் சிறிது ஆதரவு காட்டுவதன்மூலம் அவர் மேனாட்டாரின் கடுமையான புதிய கல்விமுறையை விரிவுபடுத்தியதுடன், அதை இனிமையுடையதுவுமாக்கினார். பென்டிங் தொடங்கி வைத்த நீர்ப்பாசனத் திட்டத்தைத் தொடர்ந்து அவர் விரிவு படுத்தினார். 1837-8ஆம் ஆண்டுகளில் இந்தியாவில் மாபெரும் பஞ்சம் உண்டாயிற்று. அவர் முதன்முதலாகப் பஞ்சத்தைச் சமாளிப்பதற்குரிய பெரியதொரு திட்டம் வகுத்து, மக்களுடைய துன்பத்தைத் துடைக்க முயன்றார். 1770ஆம் ஆண்டு பஞ்சத்தினால் வங்காளம் பாழாக்கப்பட்ட பொழுது என்ன செய்வதென்பதை அறியாமல் அரசு வெறு மனே அதைப் பார்த்துக்கொண்டிருந்தது. 1838ஆம் ஆண்டில் பஞ்சகால உதவிப் பணிக்காக சற்றேறக்குறைய 40 இலட்சம் செலவு செய்யப்பட்டமை இங்குக் குறிப்பிடத்

தக்கதாகும். ஆனால், பேரளவில் உண்டான பஞ்சத்தை மிகச் சிறந்த முறையில் சமாளிப்பதற்கு நல்ல போக்குவரத்து வசதிகள் அக்காலத்தில் இல்லாமை தடையாக இருந்தது எனலாம். நெடுந்தொலைவிற்கு விரைவில் உணவுப் பொருள்களைக் கொண்டுசெல்லுவது பேரிடர்ப்பாடாக இருந்தது; தேவையான அளவிற்கு உணவுப் பொருள்களைக் கொண்டு சென்று குறித்த காலத்தில் வழங்க முடியாமலும் போயிற்று. குறைந்தது 8 இலட்சம் மக்களாகிலும் இந்தப் பஞ்சத்தில் இறந்திருப்பார்கள் என்று கருதப்படுகிறது. மேலும், அவர் இயக்குநர்களின் கட்டளையைப் பின்பற்றி யாத்திரிகர்களுக்கு விதிக்கப்பட்டுவந்த வரியை ஒழித்தார்; அதைப்போன்றே கோயில்களுடன் அல்லது சமயத் தொடர்பான விழாக்கள் முதலியவற்றில் அரசாங்கத்தின் தொடர்பு எவ்வகையிலும் இருக்கவொட்டாமல் அவர் செய்தார். இவ்வாறு சமயத் துறையில் அரசு தலையிடாமல் நடுநிலையில் நிற்கும் மாண்பு மிக்க பண்புநெறியை நிலைநாட்டினார். இந்நிலை பிற்காலத்தில் பிரிட்டிஷாரின் ஆட்சி முழுவதும் நின்றுநிலவிவருமாறு காக்கப் பட்டது. உள்நாட்டு அரசுகளிடத்து அவர் நடந்துகொண்ட முறையில் பழிப்பிற்கு இடமில்லாமல் இல்லை. சதியாலோசனை செய்தார் என்ற காரணத்திற்காக சதாராவின் அரசர் பதவியி லிருந்து வன்முறையில் விலக்கப்பட்டதோடு, அவருடன் பிறந் தவர் ஒருவர் அப் பதவியில் அமர்த்தப்பட்டார். கம்பெனியை எதிர்த்துப் போரிட முயன்ற கர்நல் (Karnal) நவாபு அடியோடு பதவியிலிருந்து நீக்கப்பட்டார். ஆனால், ஆக்லண்டு 1837 ஆம் ஆண்டு அயோத்தியின் அரசரோடு ஓர் உடன்படிக்கை செய்து கொண்டதைச் செயற்படுத்த முயன்றபொழுது, அதைச் செயற்படுத்துவதற்குக் கம்பெனி இயக்குநர்கள் அனுமதி யளிக்கவில்லை. அச்செய்தியை அவர் அயோத்தியின் அரச ரிடத்துத் தெரிவிக்கவே இல்லை. இந்தப் புதிய நேர்மையற்ற போக்கு மெக்கவல்லியின் சூழ்ச்சித் திறன்வாய்ந்த மனப் போக்குடையதாகும். இந்த அரசியல் சூழ்ச்சித்திறன் இக் காலம் முதற்கொண்டு பிரிட்டிஷாரின் இந்திய ஆட்சிமுறையில் காணத் தலைப்பட்டது. சில ஆண்டுகளுக்குப் பிரிட்டிஷாரின் ஆட்சியின் அழகை அது கெடுத்தது எனலாம்.

ஆப்கானிஸ்தானத்தின் நிழல் ஆக்லண்டின் ஆட்சிமுறை யினைச் செம்மையாக நடைபெறவொட்டாமல் செய்ததோடு அமையாமல், அவருக்குத் தீராத பெரும் மன உளைச்சலையும் உண்டாக்கிற்று. அவருடைய உள்ளத்தில் மிகவும் ஆழமாக வேரூன்றிவிட்ட அவ் அச்சத்தை அவருடைய சகோதரி

இனிமையும் கவர்ச்சியுமிக்க வருணனைகளுடன் எழுதிய கடிதங்களாலும் போக்க முடியவில்லை. ஆப்கானிய நாட்டைப் பற்றிய கிளைக்கதையை மூன்றும் இயலில் பரக்கக் காணலாம். இங்கு பிரிட்டிஷாரின் ஆட்சிமுறைக் கொள்கையோடு அது கொண்டிருந்த தொடர்பினை மொத்தமாகச் சுட்டிக்காட்டுவதே போதுமானதாகும்.

ஆப்கானியப் போரைப்பற்றி முழுமையான கதை இன்னும் தெளிவாக வெளிப்படவில்லை. பிரிட்டிஷ் அமைச்சரவையும், பிரிட்டனின் அயல்நாட்டு அலுவலகமும் அச்சிக்கலில் கொண்டிருந்த பங்கு என்னவென்பது தெளிவாகப் புலனுகாமையே இதற்குரிய காரணமாகும். ஆனல், நாம் ஒன்றை மட்டும் மறத்தலாகாது. ஆக்லண்டிற்கு அறிவுரை கூறியவர்கள் இருதிறப்பட்ட குழுவினராக இருந்தனர். காபூலிலிருந்துவந்த ஆர்வம்மிக்க அரசியல்வாதிகள் அதைப் பற்றித் தூண்டிக்கொண்டிருந்தனர். அதுமட்டுமல்லாமல், சிம்லாவில் பாமர்ஸ்டன் (Palmerston) பிரபு அரசியல் சூழ்ச்சித் திறன்மிகு அலுவலில் கைதேர்ந்த நிபுணராக அவருடைய பணியில் ஈடுபட்டிருந்தார். 1833ஆம் ஆண்டில் துருக்கிக்கும் ருஷ்யாவிற்கும் இடையே அங்கீர் ஸ்கெலஸ்ஸி (Unkiar Skelessi) என்னும் இடத்தில் ஓர் உடன்படிக்கை நடந்தது. அதன்படி ருஷ்யா துருக்கியினைத் தம்முடைய ஆதிக்கத்திற்கு ஓர் அளவு கட்டுப்பட்டு நடக்குமாறு செய்துகொண்டது. பாமர்ஸ்டன் இந்த உடன்படிக்கையை எவ்வாருகிலும் முறிக்க வேண்டும் என்னும் குறிக்கோளுடன் செயலாற்றிவந்தார். ஆப்கானிஸ்தானத்தின்மூலமாக ருஷ்யா பிரிட்டனை நெருக்கடிக்கு உள்ளாக்கலாம் என்று அவர் நினைத்ததைப்போலவே, ஆப்கானிஸ்தானத்தின்மூலம் பிரிட்டன், ருஷ்யாவை நெருக்கடிக்கு உள்ளாக்கலாம் என்றும் கருதினர். ருஷ்யா பேரார்வம் கொண்டுள்ள பாரசீகத்தின் செயல்முறைகளில் செல்வாக்கு பெறுவதற்கு, ஆப்கானிஸ்தானத்தில் பிரிட்டனின் ஆதரவாளருடைய ஆட்சி தேவைப்படுவதாக அவர் கருதினர். அதைப்போன்றே பாமீருக்கு அப்பாலுள்ள துருக்கித்தானிலும் பிரிட்டன் செல்வாக்கு பெறவேண்டுமானல், ஆப்கானிஸ்தானத்தின் ஆதரவு இன்றியமையாது தேவைப்படுவதை அவர் உணர்ந்தார். ஏனெனில், ஆப்கானிஸ்தானத்தின் இராச்சிய எல்லை படாக்ஷானுள்ளும் (Badakshan) சென்று பரவியிருந்தது. இவ்விரு காரணங்களினல், ஆப்கானிஸ்தானத்தில் ஆங்கிலேயரைப் போற்றியாதரிக்கும் அரசு ஒன்று

அமைந்தால்தான் பிரிட்டனுக்கு நன்மை பயக்கும் என்ற நிலை உண்டாயிற்று.

முப்பதுகளில் பாரசீகத்தில் ருஷ்யாவின் செல்வாக்கு அளவுகடந்து வளர்ந்தது. ருஷ்யாவின் உதவியைக்கொண்டு பாரசீகம் ஹெராட்டை (Herat) முற்றுகையிட்டது. இச் செயல் இந்தியாவை நேரடியாக அச்சுறுத்துவதைப்போன்று காணப்பட்டது. 1838ஆம் ஆண்டில் பாமர்ஸ்டன் அம் முற்றுகைக்கு எதிர்ப்புத் தெரிவித்தார். அதனால், அம் முற்றுகையைப் பாரசீகம் கைவிட்டது சிறப்புமிக்க செய்தியாகும். மேற்கிலிருந்துகொண்டே கிழக்கு நாடுகளில் நெருக்கடியை உண்டாக்கும் ருஷ்யாவின் சூழ்ச்சித்திறன்வாய்ந்த நுட்பமான உணர்ச்சி, பாமர்ஸ்டனையும், விக்கு அரசாங்கத்தையும் ஆப்கானிஸ்தானத்தோடு கொண்டிருந்த உறவினை விடாமுயற்சியுடன் வலுப்படுத்துமாறு ஊக்குவித்தது. ருஷ்யாவின் கட்டுப்பாட்டிற்குட்பட்ட ஆப்கானிஸ்தானம் எவ்வாறு இந்தியாவிற்கு ஓர் அச்சுறுத்தலாக இருக்குமோ அதைப் போன்றே, பிரிட்டிஷாரைப் போற்றி ஆதரிக்கக்கூடிய ஆப்கானிய அரசு ஒன்று அமையுமானல், அது ருஷ்யாவிற்குப் பேரச்சத்தையும் பேரிடர்ப்பாட்டையும் உண்டாக்கும் என்று அவர்கள் நம்பினர்.

1838ஆம் ஆண்டில்தான் வடமேற்கு எல்லைப்புறத்தில் முன்னேறிச் செல்ல வேண்டும் என்னும் முடிவிற்கு இந்திய அரசாங்கம் வந்தது. இம் முடிவு அடுத்த பல ஆண்டுகளுக்கு இந்திய அரசாங்கத்தின் பண்பினையும் போக்கினையும் வரையறுத்தது எனலாம். 1818ஆம் ஆண்டு முதல் 1839ஆம் ஆண்டு வரை இந்தியா போதுமான அளவிற்கு அமைதியை நாடியதோடு, அமைதியை நிலைநாட்டியும் வந்தது. அவருடைய எல்லைப்புறங்களுக்கு அப்பால் ஒரேவொரு முக்கியமான போர் நடைபெற்றது. அப் போரும் இந்திய அரசினிடத்து வெளிப்படையாகக் கட்டாயப்படுத்தித் திணிக்கப்பட்டதாகும். உள்நாட்டில் அமைதியைக் குலைக்கும் செயல்களும் நிகழ்ச்சிகளும் மிகவும் அருகிய ஒன்ருகவே காணப்பட்டன; மிகக் குறைந்த அளவினதாகவும் அவை இருந்தன. எனவே, அக் காலத்திய ஆட்சிமுறைத் கொள்கையின் அடிப்படைக் கருத்தாக அமைதியும், சீர்திருத்தமும், ஆட்குறைப்பும் இருந்து வந்தன. அவ்வாண்டுகளிலேயே புதிய இந்தியாவிற்கு உரிய அடிப்படை அமைக்கப்பட்டது. பிற்காலத்தில் இந்திய தேசிய இயக்கத்திற்கு உள்ளார்ந்த ஊட்டத்தையும் ஊக்கத்

தையும் அளித்த இந்திய-பிரிட்டிஷ் பண்பாட்டினைத் தொகுத்துக் காண்பதற்குரிய வித்துகள் விதைக்கப்பட்டன. அதன் பிறகு பத்தாண்டுகள் தொடர்ந்து போர்கள் நடைபெற்றன. ஒரு போர் மற்றொரு போரிலே சென்றுமுடிந்தது. தருக்க வாதத்தினைப் போன்று ஒரு போர் மற்றொரு வன்முறைச் செயலில் சென்று முடிந்ததால், மற்றொரு போர் மூள அது காரணமாயிற்று. அவற்றைத் தொடர்ந்து உண்டான அமைதி, மன உலைவு தருவதாகவே அமையலாயிற்று. மேலும், வெளிநாட்டில் நடைபெற்ற இரண்டாவது பர்மியப் போர் அவ்வமைதியைக் குலைத்தது. அத்துடன் தாயகத்தில் வெறுப்புணர்ச்சியும், மன நிறைவின்மையும் தலையெடுக்கலாயிற்று. சிப்பாய்க் கலகம் எனும் புயற்காற்று வீசிய பிறகு இந்தியா மீண்டும் அமைதியடைந்த காலத்தில்—ஆக்க வேலைகளில் ஆட்சியாளர்கள் கருத்தைச் செலுத்திய அக்காலம் வரையில், இந்தியாவில் இக்காலம் முதல் உண்மையான அமைதி நிலவவில்லை என்றே கூறலாம். ஆனால், அக்காலத்திய அரசாங்கத்தின் போக்கே வேறு வகையாக அமைந்தது. முப்பதுகளில் இருந்த இன்பவியல் நோக்கொடு பொருந்திய தாராளமான மனப்போக்கிலிருந்து கலகத்திற்குப் பிற்பட்ட காலத்திய அரசு முற்றிலும் வேறுபட்டிருந்தது. எனினும், ஆக்கவேலைகளுக்குரிய முயற்சிகள் முற்றிலும் மறைந்துபோய்விடவில்லை. ஆனால், அது ஆதிக்க அரசியலுக்குக் கீழ்ப்பட்டதாக்கப்பட்டது. ஆதிக்கம் செலுத்துவோரின் குரலிலே கடுகடுப்பு கலந்து ஒலிக்கத் தொடங்கியது. ' தங்களுடைய செயல்முறைகளிலேயே மூழ்கிக்கிடந்த, பிரிட்டிஷாரால் உண்டான புறக்கணிப்பையும், தனித்து ஒதுக்கப்பட்டதையும்பற்றி இந்தியர்கள் குறைகூறத் தொடங்கியதோடு அமையாது, பிரிட்டிஷார் தங்கள் இனத்தைப்பற்றிப் பெருமையும், தங்கள் சாதனைகளைக் குறித்துச் செருக்கும் கொண்டுள்ளனர் என்றும் குறிப்பிட்டுப் பேசலாயினர். இதனால் பிரிட்டிஷார், பண்பாட்டிலும் பண்பிலும் இந்தியர்களைத் தாழ்ந்தவர்கள் என்று இழிவாகக் கருதலாயினர் என்றும், அதனால் இனி இந்தியருக்கு முன்னேறுவதற்கு வாய்ப்போ, புத்துயிர்ப்புப் பெறுவதற்கு வசதியோ கிடையாது என்றும் அவர்கள் குறைபட்டுக்கொண்டனர்.

ஆப்கானிய துணிகரச் செயலை நடத்துவது, சீக்கியர்களோடு கொண்டுள்ள நட்பு உறவினைத் தொடர்ந்து நிலவுமாறு செய்வதையும், ஐயப்படத்தக்க ஆனால் பயனற்ற சிந்துவின் அமீர்களை அச்சுறுத்தித் தடுப்பதையும் பொறுத்து

இருந்தது. இரஞ்சித் சிங்கு இறந்தமை, மேற்கண்ட செயல் முறை ஒன்றை இடருக்கு உட்படுத்தியது; ஆப்கானிஸ்தானம் இழக்கப்பட்டமை மற்ருென்றைத் தம்முடைய கட்டுக்கு அடங்கியிருக்குமாறு செய்யவேண்டிய இன்றியமையாமையை உண்டாக்கிற்று. ஆக்லண்டிற்குப் பிறகு கவர்னர்-ஜெனரலாக அமர்த்தப்பட்டவர் எல்லன்பரோ பிரபு என்பவராவார். அவர் இந்தியாவை நோக்கி வந்துகொண்டிருந்த பொழுது, காபூலின் பேரிழப்பு உண்டாயிற்று. அச் செய்தியைக் கேட்கின்ற வரையில், அவர் மிகவும் நெருக்கடியான நிலையினை மிகுந்த தன்னடக்கத்தோடு எதிர்த்துச் சமாளிக்கும் திறமையோ, முன்மதியோடு பின்வாங்கிக்கொள்ளும் பயனுள்ள செயலைச் செய்வதற்குரிய ஆற்றலோ உடையவராக இல்லை. உண்மையான நுண்ணறிவு நோக்குடன், சிறப்புமிக்க பேச்சாளராக விளங்கிய அவர், தற்பெருமையும் பகட்டும் நிறைந்தவராகவும், வீறுப்பும் முன்கோபமும் உடையவராகவும் இருந்தார். சூழ்நிலை இடந்தராத சமயத்தில் அவர் புகழிற்காக ஏங்கிக்கொண்டிருந்தார். ஆனால், எதிர்ப்பை மட்டும் அல்லாமல் அறிவுரையைக்கூட அவர் குற்றமாகக் கருதிச் சீற்றம் கொண்டார். வெலிங்டனின் ஆதரவில் கட்டுப்பாட்டுக் கழகத்தின் தலைவனாக அவர் இருந்தபொழுது, அவருடைய இனிய கற்பனைகள் உணர்ச்சிமிக்க ஊற்றிலிருந்து பெருக்கெடுத்தன; அதிகாரத்தைக் கைப்பற்ற வேண்டும் என்னும் அவருடைய பேரவாவினை அது மேலும் கூர்மையாக்கியது. அவருடைய பல்வகைக் குற்றங்களையும் குறைபாடுகளையும் நன்கு அறிந்திருந்தும்கூட, அவருடைய அனுபவத்திற்காகவும், செயலாற்றும் திறமைக்காகவும் அவரைப் பீலின் (Peel) கன்சர்வெடிவ் கட்சியின் அரசு, கவர்னர்-ஜெனரலாகத் தேர்ந்தெடுத்தது. இரண்டரை ஆண்டுக் காலத்தில் அவர் ஆட்சிமுறைக் கொள்கைகளை மாற்றியமையும், வீறுப்புமிக்க மனநிலையும், பகட்டாரவாரமான சைகைகளும் தாயகத்தில் இருந்துவந்த, ஏறக்குறைய ஒவ்வொரு பொறுப்புமிக்க அதிகாரியின் அன்பையும் அனுதாபத்தையும் இழக்குமாறு செய்தது. ஆப்கானிஸ்தானத்திலிருந்து படைகளைத் திரும்பி வருமாறு செய்தமை முரண்பட்ட பல்வேறு கட்டளைகளினால் பாழாக்கப்பட்டது; கஜினியிடமிருந்து சோமநாதபுரக் கோயிலின் தலைவாயிற் கதவுகளைத் திரும்பப் பெற்றுவந்ததாகக் கட்டிவிடப்பட்ட கேலிக்கூத்தான கிளைக்கதையும் நிலைமையை மேலும் குழப்பத்திற்குள்ளாக்கியது.[1] அதற்குப் பிறகு

[1] 1025ஆம் ஆண்டில் கத்தியவாரிலுள்ள சோமநாதபுரத்தின் மாண்புமிக்க கோயிலை கஜினி முகமது கொள்ளையடித்துப் பாழாக்கினர்.

சிந்துவில் அவுட்ராம் (Outram) என்பவரை ஒதுக்கிவைத்து விட்டு, சர் சார்லஸ் நேப்பியர் என்பவர் ஒருவரையே படைத் துறைப் பொறுப்பும், அரசியல் பொறுப்பும் வாய்ந்த சிறப்பு மிக்க முதன்மையுடைய அதிகாரியாக அவர் அமர்த்தினர். மேலும், அமீர்களைத் தோற்கடிப்பதற்கு நேப்பியர் கையாண்ட முறைகளைப் போற்றி ஊக்குவித்ததோடு, அவர்களுடைய நாட்டைக் கைப்பற்றி, பிரிட்டிஷ் அரசோடு இணைத்துக் கொள்ளுதற்கும் அவர் ஆதரவு காட்டினர். மேற்கொண்ட பணி ஒரு முடிவிற்கு வருவதற்குள், எல்லன்பரோ சிற்சில சமயங்களில் ஐயுறவு கொண்டாலும், நேப்பியர் கவர்னர்-ஜெனரலுக்கு ஏற்ற சீடர் என்பதை மெய்ப்பித்தார்.[1] 1843ஆம் ஆண்டு டிசம்பர் மாதத்தில் சிந்தியாவின் படைகளை அடியோடு அழித்தொழித்த அரும்பெருஞ் செயலே எல்லன் பரோவின் இறுதிப் போராகும். சீக்கியரின் பஞ்சாபில், நடைபெற்றுவந்த நிகழ்ச்சிகளின் அச்சுறுத்தலால் முன்னெச் சரிக்கையுடன் எல்லன்பரோ மேற்கொண்ட திட்டமே சிந்தி யாவின் படைகளை அழித்தொழிக்கும் செயலாகும். இச் செயல் அவருடைய கூர்த்த மதிநுட்பத்திற்கும், வருமுன் காக்கும் விழிப்புணர்ச்சிக்கும் சிறந்த எடுத்துக்காட்டாகும். ஆனல், அதைச் செயற்படுத்தியபொழுது அது அவருடைய குறைகளைப் பெரிதுபடுத்திக் காட்டியது. அவர் மிகக் குறைந்த அளவில் சூழ்ச்சித்திறனையும் பேரளவிற்கு அதிகா ரத்தையும் பயன்படுத்தியதால் இந்நிலை உண்டாயிற்று. 1817ஆம் ஆண்டு ஹேஸ்டிங்ஸ் பிரபு மேற்கொண்ட செயல் முறைகளோடு ஒப்பிட்டுப் பார்ப்போமானல், கவர்னர்-ஜெனரலிடத்து நன்மை தீமைகளை ஆராய்ந்து ஒரு முடிபிற்கு வரும் பழக்கம் இல்லாமையும், இந்திய அரசாங்கத்தின் இறுகிய மனப்பான்மையும் நமக்குத் தெளிவாகப் புலனுகும். இயக்குநர்களுடைய அச்சத்தையும் வெறுப்பை யும் அச்செயல் மிகுதிப்படுத்தியது. எனவே, கவர்னர்-ஜெனரலைப் பதவியிலிருந்து நீக்கித் திரும்பிவருமாறு அழைப் பதற்குரிய அவர்களுடைய சட்டப்படியான உரிமையை இறுதி முறையாகப் பயன்படுத்துமாறு அச்செயல் அவர்களுக்குத் துணிவூட்டியது.

உள்நாட்டு விவகாரங்களைக் கவனிப்பதற்கு எல்லன்பரோ விற்குச் சிறிதுகூட நேரமில்லை. எனினும், அவருடைய சிறப்பு

[1] லாம்பிரிக்கு என்பவர் எழுதியுள்ள 'சர் சார்லஸ் நேப்பிய ரும் சிந்துவும்' என்னும் நூலினைப் பார்க்க.

மிக்க செயல் ஒன்றிற்கு நாம் அவருக்குச் செலுத்தவேண்டிய மதிப்பினையும், கொடுக்க வேண்டிய கூலியையும் கொடுத்தாக வேண்டும். 1843ஆம் ஆண்டில் இந்தியாவில் இறுதியாக அடிமை முறை ஒழிக்கப்பட்டது. அடிமை முறையை ஒழிப்பதற்குப் பின்பற்றப்பட்ட முறை மிகவும் சாலச்சிறந்ததாகும். அடிமை முறை நாட்டிலே கிடையாது என்பதை அறிவிக்குமாறு செய்து, இழப்பீடு கொடுக்கும் பிரச்சினையே உண்டாகாமல் அவர் செய்துவிட்டார். இந்த இழப்பீடு கொடுக்கும் பிரச்சினைதான் மேற்கிந்தியத் தீவுகளில் அடிமை முறை ஒழிப்புத் திட்டம் செயற்படுத்தப்பட்டபோது பெருந் தொல்லையாக இருந்துவந்தது என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது.

எல்லன்பரோவிற்குப் பின்னர் கவர்னர்-ஜெனரல் பதவியேற்றவர் சர் ஹென்றி ஹார்டிஞ்சு என்பவராவார். அவர் நன்கு பயிற்சிபெற்ற பருவத்துக்கேற்ற வீரராவார்; வாட்டர்லூ போரிலே போரிட்ட பெருமையும் அவருக்குண்டு. போர்க்காலச் செயலாளராகப் பணிபுரிந்திருந்தமையாலும், அயர்லாந்தின் தலைமைச் செயலராகப் பணிபுரிந்திருந்தமையாலும் சிறந்த அரசியல் சூழ்ச்சித்திறனுடையவராகவும் அனுபவ அறிவு மிக்கவராகவும் அவர் விளங்கினர்.[1] அவருடைய முழுக் கவனத்தையும் முதற் சீக்கியப் போரும், அதனுடைய பின் விளைவுகளும் கவர்ந்தன. அவர் இந்தியாவிற்கு வந்த பதினெட்டு மாதங்களுக்குள், 1845ஆம் ஆண்டு சீக்கியப் போர் மூண்டது. ஆனல், உள்நாட்டு விவகாரங்களிலும் அவரால் கருத்தையும் காலத்தையும் செலுத்த முடிந்தது. கங்கை நதியின் பெரிய நீர்ப்பாசனத் திட்ட முறையினை அவர் பெரிதும் விரிவுபடுத்தினர். மேலும், முதன் முதலாக இந்தியாவில் இரயில்களை விடுவதற்குரிய இந்திய இரயில்வே முறைத் திட்டத்தினை வகுத்தார். அவர் கல்விக்குப் பேராதரவு அளித்தார். பென்டிங்கினைப் போன்றே, இந்திய அரசுகளுள் உடன்கட்டையேறும் வழக்கத்தை அடக்கியொடுக்குதலையும், குழந்தைக் கொலைகளை ஒழிப்பதிலும் அவரும் ஆர்வம் காட்டினர். மேலும், ஒரிசாவின் மலைப்பகுதிகளில் நரபலி கொடுத்துவந்த வழக்கத்தினை அடியோடு அடக்கியொடுக்கினர். 1847ஆம் ஆண்டிற்கும் 1854ஆம் ஆண்

[1] அவர் எல்லன்பரோவின் மைத்துனராவார். தம்மை அடக்கியொடுக்கியமையால் எல்லன்பரோவிற்கு உண்டான வருத்தம், தம்முடைய மைத்துனரைத் தம்முடைய பதவியில் அமர்த்தியமையால் மறைந்ததோடு, மகிழ்ச்சியும் உண்டாயிற்று.

டிற்கும் இடையே காம்பெல் என்பவரின் தலைமையின்கீழ் நரபலி கொடுக்கும் வழக்கம் அடியோடு ஒழிக்கப்பட்டது.

இந்த ஆட்சிக்காலமாகிய முப்பதாண்டுகளை, 1839ஆம் ஆண்டில் இரண்டாகப் பிரிக்கலாம். முதல் இருபத்தோர் ஆண்டுகள் அமைதி நிறைந்த காலமாக இருந்தது என்றே கூறலாம். நெடுந்தொலைவிலுள்ள பர்மாவின்மீது படையெடுத்துச் சென்ற முதல் படையெடுப்பும், பரத்பூரின் எதிர்ப்பினால் உண்டான அச்சமும் இக்காலத்தின் அமைதியைச் சிறிது குலைத்தன எனலாம். அவுரங்கசீப் 1680ஆம் ஆண்டு தில்லியைவிட்டுப் புறப்பட்டுத் தக்கணத்திற்குச் சென்ற காலத்திற்குப் பின்னர், இந்தியாவில் என்றுமே கண்டறியாத அளவிற்கு நெடுங்காலம் அமைதி நிலவிய காலமாக இக் காலம் காணப்படுகிறது. ஆனால், அது வெறும் செயலற்ற அமைதிக் காலமாக விளங்கவில்லை. அது முதன்மையான சீர்திருத்தங்கள் செய்யப்பெற்ற செயல்திறன் நிறைந்த காலமாகும். அக்காலத்தில்தான், இந்தியாவில் பிரிட்டிஷாருடைய ஆட்சி முறையின் பரந்த அடிப்படையின் முழு அமைப்பு அமைக்கப்பட்டது. 1818ஆம் ஆண்டிற்கு முன்பெல்லாம் நாம் இந்தியாவில் பிரிட்டிஷாரின் ஆதிக்கத்தைப்பற்றிப் பேசலாம். 1839ஆம் ஆண்டிற்குப் பிறகு 'இந்தியாவில் பிரிட்டிஷ் பேரரசு' என்று கூறுவது மிகவும் பொருத்தமானதும், தவறற்றதுமாகும். நாட்டிற்குள்ளே விரைவாக இயங்கும் ஆற்றலுள்ள சக்தியொன்று நாடாளும் அதிகாரத்தைப் பெற்றது. ஆனால், அமைப்புமுறையில் பிரிட்டிஷாருடைய செயல்முறைகள் குறைபாடுடையதாக நின்றுவிடவில்லை. அதனுடன், இருபதாம் நூற்றாண்டில் இந்தியா முன்னேற்றத்துடன் பொருந்திய வளர்ச்சியினை அடைவதற்குத் தேவையான ஆக்கப் பணிகளுக்குரிய அடிப்படை அக்காலத்திலேயே அமைக்கப்பட்டது. இந்த ஆக்கப்பணிகள் எல்லாம் இந்தியாவை மேனாட்டு நாகரிகமயமாக்கும் வகையில் செய்யப்பட்டு வந்தன. நின்றுநிலவிவந்த நிலையங்களுக்கு உறுதுணையாகக் கூடுதலாகவோ, மாற்றாகவோ அவை அமைக்கப்பட்டாலும், அவை பயன் அளிப்பதில் கடந்த காலத்திற்கு நேரெதிராக அமைந்தன. பிரிட்டிஷாருடைய இந்தத் திட்டங்களின் சீரும் சிறப்பிற்கும் ஏற்றவண்ணம் வங்காளத்தில் இருந்த இந்தியர்களிடையே இவ் அறைகூவலுக்கு முதல் மறுமொழியாக எதிர்ச் செயல்கள் தோன்றின. இவ் வரும் பணியை இராம் மோகன் ராய் என்பவரும், அவருடைய குழுவினரும் கல்கத்தாவில் செய்யத்தொடங்கினர்.

இக்காலத்தின் இறுதி ஒன்பதாண்டுகள், முந்தைய ஆண்டுகளுக்கு நேர்மாறான இயல்புடையனவாக விளங்கின. ஆட்சிமுறைச் சீர்த்திருத்தங்கள், பண்பாட்டின் புத்தாக்கங்கள், பொருளாதாரத் திட்டங்கள் ஆகிய அனைத்தும் என்றும்போலவே தொடர்ந்து நடைபெற்றுக்கொண்டு வந்தன. ஆனால், பொதுமக்களிடத்துக் குறைந்த அளவில் ஆர்வத்தை எழுப்பியும், கருத்துக் குறைவாகவும் செயலாற்றப்பட்டு வந்தன. பொதுமக்களின் பார்வைக்கு அவற்றின் இடத்தை ஆப்கானிய, சிந்திய, சீக்கிய, மராட்டியப் போர்கள் கைப்பற்றிக்கொண்டதாகத் தோன்றின. இப் போர்கள் தொடர்ந்து நடைபெற்றுவந்தமையால் அரசினரின் முழுக் கவனத்தையும் இவை கவர்ந்ததோடு அமையாமல், வீரர்கள், ஆட்சியாளர்கள், அதிகாரிகள் அல்லாதவர்கள் ஆகிய எல்லாருடைய கருத்தையும் இவை ஒருங்கே ஈர்த்தன. பிரிட்டிஷாரின் அரசு முழுமையிலும் ஏதோ ஒருவகையான கடுமையும் கண்டிப்பும் கலந்திருந்தமை புலனாகின்றது. உண்மையில் அது இந்தியாவிடத்து ஐரோப்பியர்கள் பொதுவாகக் காட்டும் பண்பாக அமைந்தது. ‘மேற்கத்தியப் பண்புகளை’ப் போற்றியாதரித்தவர்கள் ஆற்றல் பெற்றதோடு வன்முறைச் செயல்களில் ஈடுபடவும் தொடங்கினர். கடந்த கால இந்தியாவில் நல்லவை என்று சொல்லத்தக்கன ஒன்று கூட இருந்ததில்லை என்னும் திடமான நம்பிக்கை வளர்ந்து வரலாயிற்று. எனவே, இந்தியாவில் செய்யப்படும் சீர்திருத்தங்கள் அனைத்தும் மேலைநாட்டுப் பாணியிலேயே அமைய வேண்டும் என்னும் கருத்தும் கால்கொள்ளத் தொடங்கியது. மேனாட்டுக் கருத்துகளுக்கு ஆதரவான எதிர்விளைவுகளை உண்டாக்கிய தொடக்க காலத்திய உயர்ந்த நிலையிலிருந்த மனிதர்களின் நம்பிக்கையும், பொறுமையாக இருப்பதற்கு அவர்கள் காட்டிய விருப்பமும் அமைதியும் புறக்கணிப்பிலும் ஐயுறவு வாதத்திலும் மெல்ல மறைந்துபோயின. எதிர்காலத்தை உருவாக்குவதற்குக் கடந்த காலத்திலிருந்து இந்தியா கொடுத்துதவக்கூடியது ஒன்றுமே இல்லை என்னும் கருத்து பையப்பைய வளர்ச்சியுற்று, அதுவே உண்மை என்று எல்லாரையும் நம்புமாறு செய்தது. எனவே, மேலைநாட்டுத் தற்காலப் பண்பிற்காக அவற்றைக் கைவிடுவதைப் பற்றிய உண்மையான கவலை யாரிடத்திலும் உண்டானதாகத் தெரியவில்லை. முதுமையுற்றதும், இடர்ப்பாடுமிக்கதுமான சொத்துரிமையைப் பாதுகாக்கும் பொறுப்பினை ஏற்றுக் கொண்டவர்கள் காலப்போக்கில் கைவிடப்பட்ட அச்சொத்திற்குத் தாங்களே உரிமையாளர்கள் என்று சொல்லத்தக்க



ராம் மோகன் ராய்

புகைப்படம் 32



(a) வில்லியம் பெண்டிங் பிரபு



(b) டல்ஹௌசி

வேறுபட்ட மனநிலை அவர்களிடையே வளரலாயிற்று. தொடர்ந்து நடைபெற்ற போர்களும், நாடுகள் இணைக்கப் பட்டமையும் ஆங்கிலேயருடைய உயர்வு மனப்பான்மையைப் பெருகச் செய்தது. நாட்டைக் கைப்பற்றிய வெற்றி வீரர்கள் தாங்கள் என்ற எண்ணம் இடைநிலை, கீழ்நிலை அதிகாரிகளிடத் திலும், வாணிகம் புரிந்துவந்த ஐரோப்பியர்களிடத்திலும் நிலவிவந்தது. பொறுப்பாளர் பதவியில் நாம் இருக்கிறோம் என்ற உணர்ச்சி இருந்துவந்த ஆங்கிலேயர்கள் எல்லாம், தாங்கள் வயது நிரம்பாத சிறுபிள்ளையாக உள்ள இந்தியா விற்குப் பொறுப்பாளராக இருக்கிறோம் என்று எண்ணுவதை மறந்து, நிலையாக இல்லாதிருக்கிற அல்லது இயலாத வகையி லுள்ள ஓர் இளங்கணர் ஒருவருடைய முதுகளுளராகவே தங்களைக் கருதிக்கொண்டனர். இந்தியாவிலும் இங்கிலாந் திலும் இருந்துவந்த ஆளுங் குழுவினருடைய கண்களுக்கு, இந்தியா பண்பாட்டு மாற்றம் அடையும் தருணத்தை அடைந் திருக்கின்ற நாடு என்பதன் அறிகுறி சிறிதுகூடத் தோன்றாமல் போய்விட்டது; அசைக்க முடியாததும் வழக்கிறந்ததுமான பண்பாட்டையும், புதிய பழக்கவழக்கங்களையும் புதிரான எண்ணங்களையும், எத்தகைய மாற்றத்தையும், கண்மூடித் தனமாக எதிர்க்கின்ற வெறுப்புணர்ச்சியையும் கொண்ட மக்களையுடைய சமூகங்கள் பலவற்றைக் கொண்டுள்ள கைப் பற்றப்பட்ட நாடே இந்தியா என்ற எண்ணமே அவர்க ளிடத்துத் தலையெடுக்கலாயிற்று. தாமாகவே சீர்திருத்தம் அடைந்துவிடும் என்ற பழைய நம்பிக்கைக்கு மாறாக 'மாற்றமே அடையாத கிழக்கு' என்னும் எதிர்நம்பிக்கை யான கதை தோன்றுவதற்கு அது இடமளித்தது.

### ஆதாரங்கள்

'இந்தியாவின் ஆட்சியாளர்கள் வரிசையில்' கவர்னர்-ஜெனரல்களின் வாழ்க்கை வரலாறுகளை A. T. ரிட்சியும், R. எவான்சும் ஆமர்ஸ்ட் பிரபுவின் வரலாற்றை எழுதி யுள்ளனர்.

D. Boulger என்பவர் 'வில்லியம் பென்டிங் பிரபு' எனும் நூலை (1897) எழுதியுள்ளார். L. J. டிராட்டர் 'ஆக்லண்டு பிரபு'வைப்பற்றி எழுதியிருக்கிறார். வைகவுன்ட் ஹார்டிஞ்சு என்பார் 'ஹேஸ்டிங்ஸ் பிரபு'வின் வரலாற்றை வரைந்துள் ளார்.

கோல்செஸ்டர் பிரபுவின் 'History of the Indian Administration of Lord Ellenborrough' (1874) என்னும் நூல்

எல்லன்பரோவின் வரலாற்றையும், அவர் பேரரசிக்கும், வெலிங்டன் கோமகனுக்கும் எழுதிய கடிதங்களையும் தன்னகத்தே கொண்டிருக்கிறது. அண்மையில் A. H. இம்லா (Imlah) என்பவர், அவருடைய வாழ்க்கை வரலாற்றை (1939) எழுதியுள்ளார். மேலும், சர். எ. லாவினுடைய 'India under Ellenborrough' (1926) என்னும் நூலையும், கோல்செஸ்டர் பிரபு பதிப்பித்துள்ள 'Lord Ellenborrough's Political Diary' என்னும் நூலையும் காண்க.

1834ஆம் ஆண்டுக்குட்பட்ட கம்பெனி வரலாற்றை அறிவதற்குப் பெரிதும் பயன்படக்கூடியது C. H. பிலிப்சு எழுதியுள்ள 'The East India Company' என்னும் நூலாகும். அவருடைய 'கர்சன் பிரபு' என்னும் நூலும், 'British Government in India' (2 தொ. 1925) என்னும் நூலும் ஆங்கிலேயர் ஆட்சிக்கால வரலாற்றை முற்றிலும் விளக்குவதாகும். மில்லினுடைய வரலாற்றைத் தொடர்ந்து மார்ஷ்மனும், வில்சனும் எழுதியுள்ளனர். அவர்கள் ஆமர்ஸ்ட், பென்டிங் ஆகியோருடைய வரலாற்றைப் பொதுவாக எழுதியுள்ளனர். அதற்குப் பிறகு மார்ஷ்மனுடைய நூல் சமகாலத்திய வரலாற்றுக் குறிப்பேடாக மாறிவிடுகிறது. தற்காலத்தில் எழுதப்பட்ட நூற்களுள் இராபர்ட்சினுடைய 'பிரிட்டிஷாரின் இந்தியா' என்னும் நூலையும், கேம்பிரிட்ஜ் இந்திய வரலாறு ஐந்தாம் தொகுதியையும் பார்க்கலாம்.

# 3. வெளிநாட்டுக் கொள்கை, 1818–1849 : பர்மாவும் வடமேற்கு எல்லைப்புறமும்

1818ஆம் ஆண்டில் கம்பெனியின் குடியேற்ற நாடுகள் நன்கு நிறுவப்பட்டன. அதன் விளைவாகப் புதியதொரு பிரச்சினை தோன்றியது. இந்தியாவிற்குப் புறத்தே உள்ள நாடுகளோடு கொள்ளவேண்டிய தொடர்பைப்பற்றியும், அதைப்போன்றே உள்நாட்டின் முன்னேற்றத்தைப்பற்றியும் வளர்ச்சியைப்பற்றியும் கருத்துச் செலுத்தவேண்டிய நெருக்கடி உண்டாயிற்று. மேலும், இந்தியாவிற்குள் இன்னும் அழிந்தொழியாத அரசுகளினுடைய அரசர்களை எவ்வாறு நடத்துவது என்ற பிரச்சினையும் கம்பெனிக்கு உண்டாயிற்று. கம்பெனியினுடைய ஆட்சிக்குட்பட்ட நாட்டின் புதிய எல்லைகளாக வடக்கே இமயமலையும், வடமேற்கே சட்லெஜ் ஆறும், மேற்கே இரசபுதனப் பாலைநிலங்களும், வடகிழக்கே சிக்கல் மிகுந்த அஸ்ஸாமிய மலைப்பிரதேசங்களும் இருந்தன. வடக்கே இருந்த ஒரேவோர் அரசு கூர்க்காக்களின் இராச்சியமாகிய நேப்பாளமாகும். அவர்களோடு ஹேஸ்டிங்ஸ் பிரபு இதற்குமுன்பே அமைதியான உடன்படிக்கையைச் செய்திருந்தார். அவ்வாறு அவர் செய்துவைத்த காட்மண்டு உடன்படிக்கை பிரிட்டிஷாரின் ஆட்சிக்காலம் முழுவதிலும் நீடித்து இருந்துவந்தமை இங்குக் குறிப்பிடத்தக்கதாகும். கூர்க்காக்கள் தலைச்சுமையாக—செலவினமாக இல்லாமல் பெறுதற்கரிய நிலைமுதற் செல்வமாக விளங்கினர். வடமேற்கு எல்லைக்கு அப்பால் சட்லெஜ் ஆற்றுக்கும் சிந்து நதிக்கும் இடையே இரஞ்சித் சிங்கினுடைய சீக்கிய அரசு சிறப்புற்று

விளங்கியது. 1809ஆம் ஆண்டு அமிருதசரசில் செய்து கொள்ளப்பட்ட உடன்படிக்கையின்படி கம்பெனியாருக்கும் சீக்கியருக்கும் இடையே நட்புறவு நிலவிவந்தது. அந்த உடன் படிக்கையின்படி சிந்துவெளியையும் சிஸ்-சட்லெஜ் சீக்கியரை யும் விலையாகக் கொடுத்து, சீக்கியர் மேற்கிலும் வடக்கிலும் தங்கள் அரசினை விரிவுபடுத்திக்கொள்ளுவதற்குரிய உரிமை யினைப் பெற்றனர். சிந்துவெளியில் ஒழுங்கற்ற ஐந்து அமீர்கள் ஆட்சி புரிந்துவந்தனர். அவர்கள் அப்பொழுதுதான் மொகலாயர்கள், ஆப்கானியர்கள் ஆகியோருடைய ஆதிக்கத் திலிருந்து விடுதலை பெற்றிருந்தனர். ஆனால், அவர்கள் தாங்க ளாகவே வன்முறையில் நாடுகளைக் கைப்பற்றிக்கொள்ளும் ஆற்றலோ, திட்டமிட்ட தற்காப்புகளை அமைத்துக் கொள்ளும் ஆற்றலோ அற்றவர்களாக இருந்தனர். அவர் களுக்கு அப்பால் ஆப்கானிய அரசு இருந்தது. இச்சமயத்தில், பாரக்சாய் சகோதரர்களுக்கும், பழைய அப்தாலி அரச மரபினருக்கும் இடையே உண்டாகியிருந்த நீண்டநாட் பகைமையினால் ஆப்கானிஸ்தானம் சிதறுண்டுபோயிருந்தது. அதுமட்டுமல்லாமல், பாரக்சாய் சகோதரர்களுக்கு இடையே போட்டியும் பூசலும் நிறைந்து காணப்பட்டன. 1818ஆம் ஆண்டில் அவர்களுள் மூத்த சகோதரர், கம்ரன் ஷா (Kamran Shah) என்பவனால் கொலை செய்யப்பட்டார்; மேலும், கஜினி யைத் தோஸ்து முகமதுகான் என்பவன் கைப்பற்றிக் கொண் டான். அதற்கும் அப்பால் பாரசீகம் இருந்தது. 1807ஆம் ஆண்டு தில்சிட்டில் செய்யப்பட்ட பிராங்கோ-ருஷ்ய உடன் பாட்டின் நிழலிலிருந்து அப்பொழுதுதான் அது வெளிப்பட் டிருந்தது. அவ் உடன்படிக்கையின்படி பாரசீகம் தன்னுடைய ஜார்ஜியா பகுதியை ருஷியாவிற்கு அளித்தது. எனினும், தான் அடைந்த வெற்றியால் புத்துணர்ச்சியும் வலிவும் பெற் றிருந்த ருஷ்யாவினால் பாரசீகம் மேலும் அச்சுறுத்தப்பட்டு வந்தது. நெப்போலியனைப் புறமுதுகிட்டு ஓடுமாறு விரட்டி யடித்த பெருமையினால் ருஷ்யா சிறப்புகளையெல்லாம் தனக்கேயுரியதாகப் பெற்றிருந்தது. ஆனால், அண்மையில் தான் அது ஒரு நேசநாடாக விளங்கத் தொடங்கியது. கிழக்கு ஐரோப்பாவிலும், ஆசியா மைனரிலும் அது நடந்து கொண்ட முறை ஆசியாவினுடைய நாட்டுப் படத்தின் பெரிய வரைவில் சுட்டிக்காட்டக்கூடிய அளவிற்கு அஞ்சத்தகுந்த நிலை உண்டாகவில்லை என்றே கூறலாம். நம்முடைய பயணத்தை நாம் தொடருவோமானால், இந்தியாவின் கடற்கரைப் பகுதி ஃபிரெஞ்சுக்காரர்கள் தோற்கடிக்கப்பட்டமையாலும், அவர்க ளுடைய தீவாகிய மொரீஷஸ் கைப்பற்றப்பட்டமையாலும்

பாதுகாப்பாக இருந்துவரலாயிற்று.[1] ஜாவா டச்சுக்காரர்களுக்குத் திருப்பிக் கொடுக்கப்பட்டாலும், டச்சுக்காரர்கள் பிரிட்டிஷாருடைய கடலாதிக்கத்தின் ஆதரவிலே வாழவேண்டியவர்களாக இருந்துவந்தனர். இவற்றோடு 1819ஆம் ஆண்டு சிங்கப்பூரைச் சிறந்ததொரு துறைமுகப்பட்டினமாக நிறுவியமை கணக்கிட்டுரைக்க முடியாத அளவிற்குப் பயன்மதிப்புடையதாகும்; போர்முறைச் சூழ்ச்சித்திறமிக்க அரண்மிக்க தளம் ஒன்றும் அதனால் கிடைத்தது. வடகிழக்குப் பகுதியில் மட்டும்தான் ஐராவதிப் பள்ளத்தாக்கில், ஆதிக்க எழுச்சி பெற்றுக்கொண்டிருந்த ஆவா நகரத்து அரசிடமிருந்தும், மீக்காங்குப் பள்ளத்தாக்கில் உள்ள சையாமிய அரசிடமிருந்தும் சிக்கல் மிகுந்த மலைப்பிரதேசங்களும், அடர்ந்த காடுகளும், கிழக்கு வங்காளச் சமவெளிப் பகுதியை வேறுபடுத்திப் பிரித்துவைத்திருந்தது.

இந் நிலையினை நாம் கூர்ந்து நோக்குவோமானால், தெற்கு ஆசியாவில் காவல்மிக்க ஆதிக்கம் செலுத்துவதற்குத் தேவைப்படும் $\frac{3}{4}$ பங்கு நாட்டுப் பரப்பைப் பிரிட்டிஷார் இச் சமயத்தில் தங்களுக்கேயுரிய உடைமையாகப் பெற்றிருந்தனர் என்பது புலனாகாமல்போகாது. கடலாதிக்கம் கடல் தாக்குதல்களை விலக்கியது; கிழக்கிந்தியத் தீவுக் குழுக்களின் கிழக்குக் கடற்கரையோரத்தின் பாதுகாவலைத் தேடித்தந்தது. பிரிட்டிஷாரின் கடலாதிக்கத்தினைப் பொறுத்தே டச்சுக்காரர்களின் அதிகாரம் இங்கு நிலவிவந்தமையால், அவர்கள் உண்மையில் பிரிட்டிஷாரின் பிரதிநிதிகளாகவே கிழக்கிந்தியத் தீவுகளில் ஆட்சி புரிந்துவந்தனர். இந்தியப் பெருநிலப் பரப்பின் ஏறக்குறைய முழுப்பகுதியும் பிரிட்டிஷாரின் ஆட்சிக்குட்பட்டிருந்தது என்றே கூறலாம். இவர்களுக்கு முற்பட்ட முகலாயப் பேரரசர்களுக்கு இருந்துவந்த வாய்ப்பு வசதிகளுள் ஆங்கிலேயர்கள் பெறாதது ஒன்றே ஒன்றுதான். ஒரு பக்கத்தில் பாரசீகத்திற்கும் நடு ஆசியாவிற்கும் செல்லுவதற்குரிய தலைவாயிலாகவும், மற்றொரு பக்கத்தில் சிந்துவெளிக்கும் இந்தியாவிற்கும் வருவதற்குரிய வழியாகவும் உள்ள வடமேற்கு எல்லைப்புற அரணைக் கட்டிக்காக்கும் உரிமையினை பிரிட்டிஷார் பெறாமை இங்குக் குறிப்பிடத்

[1] மொரீஷஸ் என்பது அத்தீவினுடைய பழைய பெயராகும். அமைதிகாண் வில்லியத்திற்குப் பின்னர் ஆட்சிக்குவந்த ஆரஞ்சுக் குடியினைச் சேர்ந்த இளவரசர் மொரீஷின் பெயரால் வழங்கப்பட்ட தீவு 'மொரீஷஸ்' என்றழைக்கப்பட்டது.

தக்கது. முகலாய அரசர்களுள் அக்பர் வரையில் இருந்தவர்கள் காபூலையும் காந்தகாரையும் தங்களுடைய இராச்சியத்தின் பகுதிகளாகப் பெற்றிருந்தமையால் இந்த வாய்ப்பினை எளிதில் பெற்றிருந்தனர். காபூலும் காந்தகாரும் இந்தியக் கணவாய்களுக்குச் செல்லும் வழிகளையுடைய பிரதேசமும், ஹெராட் வழியாகப் பாரசீகத்திற்குச் செல்லும் வழியையும், படக்ஷானிலிருந்து இந்துகுஷ் மலைத்தொடரிடையே உள்ள வழியின்மூலம் காபூலுக்குச் செல்லும் பாதை ஆகிய அனைத்தையும் தொடக்க காலத்திய முகலாய அரசர்கள் தங்களுடைய ஆதிக்கத்தின் கீழ்க் கொண்டுவந்திருந்தனர். எனவே, இத்தகையதொரு நிலையினையும் வாய்ப்பினையும் பெறுவதிலே பிரிட்டிஷாருடைய அறிவும் ஆற்றலும் செலுத்தப்பட்டதைக் கண்டு நாம் வியப்படைவதற்கு ஒன்றும் இல்லை. இந்தியக் கணவாய்களைக் கட்டுப்பாட்டின்கீழ்க் கொண்டுவருவதும், ஆப்கானிய மேட்டுநிலத்தைத் தங்கள் ஆதிக்கத்தின்கீழ்க் கொண்டுவருவதும் இந்தியாவின் பாதுகாப்பிற்குச் செய்ய வேண்டிய இன்றியமையாத செயல்களாக நெடுங்காலமாகக் கருதப்பட்டுவந்தன. ஷாஜகான் காந்தகாரை இழந்தமை முகலாயப் பேரரசிற்குக் கிடைத்த முதற்பேரடியாகும். நாதிர்ஷா காபூலைக் கைப்பற்றியமை முகலாயப் பேரரசின் அழிவிற்கு முன்னுரையாக அமைந்தது. இந்தப் பகுதிகளைத் தன்வயப்படுத்துவது குறித்து உண்மையில் முகலாய மன்னர்களுக்குள் எத்தகைய கருத்து இருந்தபோதிலும், பிரிட்டிஷாருக்கு அது அதே ஆற்றலுடன் பொருந்துவதாக இல்லை. பிரிட்டிஷார் தங்களுக்கு முற்பட்ட முகலாயர்களுக்குக் கிடைக்காத இரண்டு வள ஆதாரங்களைப் பெற்றிருந்தமையினால் அவ்வாறு அவர்களுக்குத் தோன்றவில்லை. அவர்கள் கடலாதிக்கம் உடையவர்களாக விளங்கினர். அதனால், கடல் தாக்குதல்களிலிருந்து காப்பதற்கு நிலப்பரப்பினைத் தக்க பாதுகாப்புடையதாகச் செய்யும் திறமையை அவர்கள் பெற்றிருந்தனர். அதைப்போன்ற நாட்டினுள்ளேயே நல்லதொரு பாதுகாப்பினை அமைத்துக் கொள்ளக்கூடிய ஆற்றல்மிக்க படைகளையுடையவர்களாகவும் அவர்கள் விளங்கினர். மேலும், அவர்களுடைய படைகள், மேலைநாட்டுப் படைத்துறை ஒழுங்குமுறைப் பயிற்சியில் தலைசிறந்தனவாக விளங்கின. அவற்றோடு, நடு ஆசிய குதிரைப்படை வீரர்களுக்கும், துருக்கியப் பீரங்கிப் படைக்கும் புதிய ஈடாக மேலைநாட்டுப் படைத்துறையின் ஒழுங்குமுறைப் பயிற்சியையும், பேராற்றல்மிக்க பீரங்கிப் படையினையும் ஆங்கிலேயர்கள் பெற்றிருந்தனர். தாக்குதல் நடைபெற

வொட்டாமல் தடுப்பதற்குரிய படையியல் முக்கியத்துவம் வாய்ந்த அரண்களை எல்லைப்புறத்தில் அவர்கள் பெற்றிருக்க வில்லையென்றாலும், இந்தியாவின் எல்லைகள் தாக்கப்படு மானால், அத்தாக்குதலை எதிர்த்துச் சமாளிப்பதற்குத் தேவை யான ஆற்றலும் வள ஆதாரமும் உடையவர்களாக அவர்கள் விளங்கினர். ஆனால், ஈரானிய மேட்டுநிலப் பரப்பில் படைத் துறை ஆதிக்கச் சமநிலையை மீண்டும் உயிர்ப்பிப்பதற்காக ருஷ்யா பெரும் படையோடு முன்னேறுமானால், அப்பொழுது ஒருகால் இந்நிலை பாதிக்கப்படலாம் என்ற எண்ணம் அவர்க ளிடையே இருந்துவந்தது. 1818ஆம் ஆண்டில் இன்னும் ருஷ்யா நெடுந்தொலைவிலேயே இருந்துவந்தது. ஆனால், மேலே கண்ட கருத்துகளெல்லாம், பத்தொன்பதாம் நூற் றாண்டின் இந்திய அரசியல் விரகருக்கு ருஷ்யாவின் ஆட்சி முறைக்கொள்கை புரியாத புதிராகவும், சிறப்புமிக்க கொடிய தோற்றமுடையதாகவும் தோன்றியதில் வியப்பில்லை. போராற்றலோடு ருஷ்யா ஈரானிய, ஆப்கானிய மேட்டுநிலங் களில் காலெடுத்துவைக்குமானால், இந்தியாவில் பிரிட்டிஷார் பெற்றுள்ள அரசியல் செல்வாக்கினைக் கட்டாயம் அது அச்சுறுத்தும். ஆனால், அதனால் இயலுமா? முடியுமா? எனவே, அரசியல் சூழ்ச்சித்திறன்மிக்க எல்லைப்புறப் பாதுகாவல் பிரச்சினை, இந்துகுஷ் மலைப்பகுதி வரையிலும், பாரசீகப் பாலைநிலங்கள் வரையிலும் பிரிட்டிஷாருடைய ஆதிக் கத்தை நிலைநாட்டாமலேயே, தற்காப்புமிக்க ஒரு கோட்டை எல்லைப்புறத்திலே அமைத்துக்கொள்ளுவது என்னும் முடிவின் மூலம் தீர்க்கப்பட்டது. இந்தக் கேள்விகளுக்கு எல்லாம் விடைகூறும் கருத்துகளைச் சுற்றிச்சுற்றி இந்திய அரசின் வெளிநாட்டுக் கொள்கைபற்றிய வாத எதிர்வாதங்கள் நடை பெற்றுக்கொண்டிருந்தன. செயல்முறையில் தற்காப்புக் கோட்டை எங்கே வரைவது என்னும் பிரச்சினையே அரசியல் விரகர்களின் உள்ளங்களையும், வீரர்களின் உள்ளங்களையும் ஆட்டிப்படைத்தது. 'செயல்முறைத் தற்காப்புக் கோடு' என்பது உண்மையானதும் தேவையானதுமான பாதுகாப்பை அளிக்கக்கூடியதாக இருப்பதையே குறிப்பிட்டது எனலாம். அத்தகைய தற்காப்பினை நிறுவி, கட்டிக்காப்பதும் கிடைத்தற் குரிய நிதி வசதிக்கும், படையியல் வள ஆதாரத்திற்கும், அரசியல் சூழ்ச்சித் திறத்திற்கும் உட்பட்டதாக இருக்க வேண்டும். மேலும், அந்தச் சிக்கலை வெறும் அரசியல் சூனியத்தில் செயற்படுத்தி வெற்றிபெற முடியாது என்பதும் இங்கு நினைவுகூர்தற்குரியதாகும். ஆனால், அப் பகுதியில் போரினை விரும்பும் வீறுமிக்க பழங்குடி மக்கள் வாழ்ந்து

வந்தமையால் அப் பிரச்சினை இன்னும் சிக்கல் வாய்ந்ததாகப் போயிற்று ; சதியாலோசனை நிரம்பியதாயிற்று ; சில சமயங்களில் அப் பகுதியில் இருந்துவந்த ஆற்றல்மிக்க அரசுகளின் விவகாரங்களில் தலையிடவேண்டிய நெருக்கடியும் உண்டாயிற்று.

இந்தியாவின் மீது ஆதிக்கம் செலுத்துவதற்கு ஹேஸ்டிங்ஸ் ஐந்தாண்டுகள் அணிவகுத்துச் சென்றார். அப்பொழுதெல்லாம் அவர் பஞ்சாபிலுள்ள இரஞ்சித் சிங்கின் நடவடிக்கைகளைக் கூர்ந்து கவனித்துவந்தார். இரஞ்சித் சிங், மகதாஜி சிந்தியாவின் செயல்முறைகளைப் பின்பற்றி நடக்கலானார். சிறுபான்மையினரான ஒரு சமூகத்தினரின் பற்றுறுதியையும் ஆதரவையும் அடிப்படையாகக்கொண்டு ஆற்றல்மிக்க ஓர் அரசினை நிறுவுவதிலும், படைத்துறையில் ஐரோப்பியர்களைத் தலைமை அதிகாரிகளாக அமர்த்தித் தம்முடைய படைகளை மேலைநாட்டுப் படைத்துறை ஒழுங்குமுறையில் பயிற்சி கொடுத்து, அதைச் சிறந்த கட்டுப்பாடும் பேராற்றலும் உடையதாக அமைப்பதிலும் மகதாஜி சிந்தியா, இரஞ்சித் சிங்கிற்கு அரசியல் ஆசானாக விளங்கினார். அவ் அடிச்சுவட்டைப் பின்பற்றிய இரஞ்சித் சிங்கும் சிறந்ததொரு பற்றுறுதியுடைய சீக்கிய அரசையும், கண்டிப்பும் கட்டுப்பாடுமிக்க சீக்கியப் படையையும் நிறுவினார். எனவே, வடக்கே இருந்து எத்தகைய இன்னல்களும் இடையூறும் உண்டாகாமல் அவர் தம்முடைய பணியை முடித்தபொழுதும், மேலும் தொடர்ந்து நான்கு ஆண்டுகள் அமைதியின் இன்பத்தில் மூழ்கித் திளைத்த போதும், அவர் வெளிநாட்டு அமைதியை இந்தியா குறிப்பிட்ட ஒரு காலத்திற்கு ஆவலோடு எதிர்பார்க்கும் என்னும் முடிவிற்கு வந்தமை அறிவுக்குப் பொருத்தமானதாகும். ஆனால், அவருக்குப்பின் பதவியில் அமர்த்தப்பட்ட ஆமர்ஸ்ட் இந்தியாவிற்குள் காலெடுத்துவைத்த சிறிது காலத்திற்கெல்லாம் அமைதியற்ற சூழ்நிலை உருவாயிற்று. அரசியல் வானில் போர் மேகங்கள் சூழத் தொடங்கின. வடகிழக்கிலிருந்து அச்சுறுத்தல் உண்டாயிற்று. பன்னெடுங்காலமாகப் பர்மா புத்தசமயச் சார்புடைய அரசாக இருந்துவந்தது. அந்நாட்டின் அரசமரபுகள் பொதுவாகக் கீழைநாட்டு அரசுகளின் சூழ்நிலைகளில் சிக்கி அந் நாட்டு அரசமரபுகளும் அல்லற்பட்டு வந்தன. பிளாசிப் போர் நடைபெற்ற ஆண்டில், அலோம்பிரா (Alompra) என்பவர் பர்மாவில் புதியதோர் அரசமரபினை நிறுவினார். அவர் பெகூ (Pegu) மாநிலத்தைக் கைப்பற்றித் தம்முடைய மேலை பர்மா இராச்சியமாகிய ஆவாவுடன் (Ava) சேர்த்துக்

கொண்டார். பெகூ மாநிலம் ஐராவதி நதிப் பள்ளத்தாக்கின் வளமிக்க பகுதியாகும். அடுத்து அவர் சையாமிலுள்ள தாய்களைத் (Thais) தோற்கடித்தார். அவர்களுடைய தலைநகரான அயோத்தி, 1768ஆம் ஆண்டு அடியோடு அழிக்கப்பட்டது. 1766ஆம் ஆண்டு தெனசரீம், பர்மாவோடு இணைக்கப்பட்டது. 1785-ல் அரக்கானையும், 1813-ல் மணிப்புரியையும், 1816-ல் அஸ்ஸாமையும் போடபாயா என்னும் அரசர் வென்று, தம்முடைய அரசுடன் அவற்றைச் சேர்த்துக் கொண்டார். அரக்கான் அரசரின் வழிவந்தவர்கள் என்னும் முறையில் ஹேஸ்டிங்ஸ் பிரபுவை சிட்டகாங், டாக்கா, மூர்ஷிதாபாத் ஆகியவற்றைத் தங்களிடம் அடைக்கலமாகச் சேர்க்குமாறு பர்மியர் 1818-ல் அறிவித்தனர். ஆனால், சையாமியர்களிடத்து பர்மியர் தோல்வியடைந்ததாலும், மீண்டும் புதியதொரு போரில் ஈடுபட விரும்பாது ஹேஸ்டிங்ஸ் அமைதியாக இருந்தமையாலும், இருதிறத்தினரும் மீண்டும் உரிமைக் கோரிக்கை விடுவதற்கோ, அதை வெறுப்புடன் எதிர்ப்பதற்கோ வாய்ப்பில்லாமல்போயிற்று. 1765-69ஆம் ஆண்டுகளில் சீன படையெடுத்துவந்தபொழுது அதை எதிர்த்துக் கடும்போர் புரிந்து விரட்டியடித்தமை பர்மியர் தங்களுடைய அரசினை விரிவுபடுத்துவதற்கு மேற்கொண்ட திட்டத்தின் முன்னுரையாக அமைந்தது. உலகிலேயே முதன்மையான மாபெரும் சக்தியாக பர்மியர்கள் சீனவைக் கருதிக்கொண்டிருந்தமையால், அதை அவர்கள் தோற்கடித்தமை அவர்களுக்குப் பெரும் நம்பிக்கையை அளித்ததோடு, அவர்களைச் செருக்கு அடையுமாறும் செய்தது. பர்மியர் வீம்புடையவர்கள்; உலகத்தோடு தொடர்பற்றுத் தனித்து வாழ்பவர்கள்; அறியாமை நிறைந்தவர்கள். மேலைநாட்டு நாகரிகத்தின் இயல்பைப்பற்றிய எத்தகைய எண்ணமும் உடையவர்களாக அவர்கள் இருக்கவில்லை. அவர்களுக்கு மேலைநாட்டு நாகரிகத்தைப்பற்றி ஒன்றுமே தெரியாது என்று நாம் கூறலாம். குறுகிய எல்லைக்குள் நீண்டகாலமாகப் பெற்றுவரும் வெற்றியின் பயனாக உண்டாகும் 'தற்பெருமையுணர்ச்சி'யாகிய (megalomania) நோயினால் அவர்கள் பெரும் துன்பப்பட்டனர்.

தற்காலத்திய வன்முறைச் செயல்களுள் மிக எளிமையான நிகழ்ச்சியிலிருந்து இவ்வாறு முதல் பர்மியப் போர் தொடங்கியது. அப் போர் 'அவர்களை ஆங்கிலேயரோடு நேரடியாகத் தொடர்புகொள்ளுமாறு செய்தபொழுதும், அவர்கள் சிறிதும் அச்சமடையவில்லை; ஆவாவே இப் பேரண்

டத்தின் நடுமையம் என்றும், அதனுடைய படைக்கலன்களை எவராலும் வெல்ல முடியாது என்றும், அதனுடைய பண்பாடு உலகத்திலேயே தந்நிகரற்ற தலைசிறந்த பண்பாடென்றும்' அவர்கள் நம்பியிருந்தனர். 'அரசன் முதல் ஆண்டி வரையி லுள்ள பர்மியர் ஒவ்வொருவரும் ஆங்கிலேயருடன் போர் புரியத் துடியாகத் துடித்துக்கொண்டிருந்தனர்.' சிட்டகாங் கிற்கு அருகிலுள்ள 'ஷாபுரி' என்னும் தீவினைப் பர்மியர் 1823ஆம் ஆண்டின் செப்டம்பர் மாதத்தில் தாக்கினர். அஸ்ஸாமின் எல்லைப்புறத்தை முற்றுகையிடுவதற்கும் அவர்கள் முனைந்தனர். பிரிட்டிஷார் பர்மியருடைய செயல் களுக்கு விளக்கம் கூறுமாறு கோரினர். அவர்களுடைய கோரிக்கை பர்மியரால் வேண்டுமென்றே புறக்கணிக்கப் பட்டது. எனவே, 1824ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் ஆமர்ஸ்ட் பர்மாவுடன் போர் தொடுத்துள்ளதாக அறிவித் தார். அப் போர் இரண்டு ஆண்டுகள்வரை தொடர்ந்து நடைபெற்று வந்தது. எனினும், அதனால் இருதிறத்தாருக்கும் சிறிதளவுகூட நன்மையோ, மதிப்போ உண்டாகவில்லை. பர்மியர் தங்களுடைய அறியாமைக்கும் தவற்றிற்கும் உரிய தண்டனையாகப் பெருந் துன்பப்பட்டனர். பிரிட்டிஷார் தங்க ளுடைய பிடிவாதத்திற்காகவும், இணங்கிப்போகும் பண் பின்மைக்காகவும் தண்டனையாகத் துன்பப்பட்டனர். கடல் வழியாக ஐராவதி வரையில் முன்னேறிச் சென்று ரங்கூனைக் கைப்பற்றுவதற்குப் பிரிட்டிஷார் திட்டமிட்டிருந்தனர். மே மாதத்தில் மழைப் பருவம் தொடங்கும் நிலையில் இந்தச் சிறப்புமிக்க அரசியல் சூழ்ச்சித் திறன்வாய்ந்த திட்டம் செயற்படுத்தப்பட்டது. அதன் விளைவாகப் பிரிட்டிஷ் படை உடல்நலக் கோளாற்றை உண்டாக்கும் சேற்று நிலத்தில் சிக்கிச் சீரழிந்தது; அவ் இடத்தைவிட்டு அசைய முடியவும் இல்லை; நோயினால் பிரிட்டிஷாருடைய படையில் பத்திலொரு பங்கு அழிந்துபோயிற்று. அரக்கான், மணிப்புரி வழியாக கடற்படையெடுப்பிற்குத் துணையாக நிலவழிப் படையெடுப்பு நடத்தப்பட வேண்டும் என்ற திட்டம் வானிலையைக் கண்டு அச்சமுற்றமையாலும் அந் நாட்டினுள் நுழைந்து செல்லும் அருமைப்பாட்டினாலும் கைவிடப்பட்டது. பர்மியருக்குப் பேராற்றலும் மதிநுட்பமும் வாய்ந்த பண்டுலா (Bandula) என்பவர் தலைவராக விளங்கினார். ஆனால், அவர் 1825ஆம் ஆண்டு ஏப்ரல் மாதத்தில் இறந்துபடவே, பர்மியர்கள் தங்கள் நாட்டு வானிலையையும், நிலவியல்பையுமே நம்பி இருந்தனர். புதிய இடத்தின் சூழ்நிலைகளுக்கேற்பத் தங்களைச் சரிப் படுத்திக்கொள்ளக்கூடிய முறையினை ஆங்கிலேயர் கற்றுக்

கொண்டமையால், அவர்கள் வெற்றிபெறுவது உறுதி என்ற நிலை உண்டாயிற்று. 1824ஆம் ஆண்டு கடற்போரின்மூலமே தெனசரிம் கைப்பற்றப்பட்டது. 1825ஆம் ஆண்டின் குளிர் காலத்தில் இறுதியாகப் பிரிட்டிஷாரின் படை முன்னேறிய பொழுது, அதைக் கண்ட ஆவாவின் அரசர் ஆங்கிலேயரோடு சமாதான உடன்படிக்கை செய்துகொள்ள முன்வந்தார். 1826ஆம் ஆண்டு பிப்ரவரி மாதத்தில் ஆவாவிலிருந்து அறுபது மைல் தொலைவிலுள்ள 'யாண்பூ' என்னுமிடத்தில் அமைதியை நிலைநாட்டும் உடன்படிக்கை ஒன்று கையெழுத்திடப்பட்டது. பர்மியர் அஸ்ஸாமிலும், சச்சாரிலும் (Cachar) இருந்துவந்த தங்கள் படைகளைத் திருப்பி அழைத்துக் கொண்டதோடு, அரக்கானையும் தெனசரித்தையும் பிரிட்டிஷாருக்குக் கொடையாக வழங்கினர். மணிப்புரியின் சுதந்தரத்தினையும் இருதிறத்தினரும் ஏற்றுக்கொண்டனர். மேலும், போரின் இழப்பீட்டுத் தொகையாகப் பத்து லட்சம் பவுன்களைக் கொடுப்பதாகவும், ஆங்கிலேயரோடு வாணிக ஒப்பந்தம் செய்துகொள்வதாகவும், பிரிட்டிஷ் துணைக்காப்பரசின் ஆளுநர் ஒருவரை பர்மாவில் அனுமதிப்பதாகவும் அவர்கள் ஒப்புக்கொண்டனர்.

வாணிகப் பூசல் காரணமாக இரண்டாவது பர்மியப் போர் 1852ஆம் ஆண்டில் தொடங்கியது. ஆவாவிலிருந்து வந்த பிரிட்டனுடைய துணைக்காப்பரசின் ஆளுநரைச் சிறிது காலத்திற்கு முன்பே திருப்பி அழைத்துக் கொண்டதன் விளைவாக ரங்கூனில் வாணிகத் தகராறுகள் உண்டாயின. அத் தகராற்றைத் தீர்ப்பதற்கு இயல்பாகவே போரில் ஈடுபாடுடைய கவர்னர்களுக்கும், சூழ்ச்சித்திறனற்ற கப்பல் தலைவர்களுக்கும் இடையே நடந்த பேச்சுவார்த்தைகளினால் சிக்கல் மிகுந்து நெருக்கடி நிலையே உண்டாயிற்று. டல்ஹௌசி புதிதாக நாடுகளைப் பிடித்துச் சேர்த்துக் கொள்ளுவதில் வெறுப்புடையவராக இருந்தார். இருதிறத்திலும் பணியாற்றிய கீழ்நிலை அதிகாரிகளுடைய பதற்றத்தினாலும், தவருக ஒருவரை மற்ருெருவர் புரிந்து கொண்டமையாலும் போர் மூளுவது விரைவுபடுத்தப்பட்டது. போரிடத் தொடங்கிய பிறகு, ஆமர்ஸ்டின் தளபதி சர் ஆர்ச்பால்ட் காம்பெல் செய்த தவற்றைத் தாம் செய்யாதவாறு தவிர்க்க வேண்டும் என்னும் கருத்துடன், டல்ஹௌசி தம்முடைய

திட்டங்கள் முழு வெற்றியை அளித்தபோதிலும், அவர் இயற்கைக்கு மாருன வகையில் எச்செயலேச் செய்வதற்கும் தடையாக இருந்துவந்தார். கீழைப் பர்மாவில் வாழ்ந்த மக்கள் பர்மியரோடு ஓரளவிற்கே குருதிக் கலப்பும் இனத் தொடர்பும் உடையவர்களாக இருந்தனர். அவர்கள் தங்களுக்கு விடுதலே அளிக்கவே பிரிட்டிஷார் வருகிருர்கள் என்று கருதி மனம்கனிந்த வரவேற்பை அளித்தனர். பல பாளேயங்களில் படைவீரர்கள் நலமாக இருந்ததைக் காட்டிலும், இங்குப் படையெடுத்துவந்த படைவீரர்களின் உடல்நலம் மிகவும் நன்ருக இருந்தது ; போரில் இறந்தவர்கள் 377 பேர்களேயாவர். போருக்கான செலவும் பத்துலட்சம் பவுன்களுக்குக் குறைவாகவே இருந்தது. டல்ஹௌசி பெகூவைக் கைப்பற்றித் தமது அரசோடு சேர்த்துக் கொண்டார். ஆனல், அவர் அதற்குமேல் முன்னேறிச்செல்ல மறுத்துவிட்டார். அரசர் பகனே அடுத்து மிந்தன் என்பவர் அரசராஞர். அவருடைய நேர்மையான ஆட்சிக்காலத்தில் உண்டான நட்புறவு, அரசர் தீபா அரசுகட்டிலேறியவரை தொடர்ந்து இருந்துவந்தது. பர்மாவில் பிரிட்டிஷார் ஆட்சியின் உண்மையான தொடக்கத்தை இப்போர் வரையறுத்தது. இதற்குமுன்பு கைப்பற்றிய பர்மியப் பகுதி உண்மையான பர்மிய இராச்சியத்தின் எல்லேப்புறத்தைச் சார்ந்து இருந்தமையால் இப்பொழுது நடைபெற்ற போரே பர்மாவின் உள்நாட்டுப் பகுதிகளேக் கைப்பற்றுவதற்கு வாய்ப்பாக அமைந்தது.

நாம் இப்பொழுது வடமேற்கு எல்லேப்புறத்தின் அரசியல் நிலேயைக் காண்போம். பதினெட்டாம் நூற்ருண்டின் இறுதி வரையில் பிரிட்டிஷார் வட இந்தியாவைக்காட்டிலும் தென்னிந்தியாவிலேயே அதிகமாக அக்கறை காட்டிவந்தனர். வெல்லஸ்லி அவர்களுடைய கவனத்தை நடு இந்தியாவில் மராட்டியரிடத்துத் திருப்பினுர். மராட்டியர் தோற்கடிக்கப் பட்டமையும், வடமேற்கு எல்லேயின் தலேவாயிலாக இருக்கும் தில்லியைக் கைப்பற்றியமையும் இதுவரை அவர்களுக்காகக் காத்துக்கொண்டிருந்த புதிய பிரச்சினேகளோடு பிரிட்டிஷார் தொடர்புகொள்ள நேரிட்டது. அவர்களுடைய கற்பனேயில் நிறைந்திருந்த பனே மரங்களுக்கும், தென்னே மரங்களுக்கும், மாந்தோப்புகளுக்கும் பதிலாக மணற்பாங்கான களர் நிலங்களும், வறண்ட மலேகளுமே இடம்பெற்றன ; யானேகளுக்குப் பதிலாக ஒட்டகங்கள் அவர்களுடைய உள்ளங்களில் இடம் பெற்றன. நிலேபேறற்ற வட இந்திய அரசியலில் கடந்த

முப்பதாண்டுகளாகத் தொடர்ந்து நிலைபெற்றிருந்த ஒரு கருத்தினைக் குறிப்பிடுவதன்மூலம், நாம் நமது மதிப்பீட்டுப் பணியைத் தொடங்குவோம். அது மின்ட்டோ பிரபுவினுடைய நல்லெண்ணத் தூதின் முயற்சியால் இரஞ்சித்சிங்கிற்கும், சார்லஸ் மெட்காஃப்பிற்கும் இடையே 1809ஆம் ஆண்டில் செய்யப்பட்ட அமிர்தசரசு உடன்படிக்கையாகும். இவ்வுடன் படிக்கை சீக்கியருடைய செல்வாக்கிற்கும், பிரிட்டிஷாருடைய ஆதிக்கத்திற்கும் இடையே சட்லஜ் நதியின் போக்கினை நிலையான ஓர் எல்லைக்கோடாக வரையறுத்தது. அதுமுதல் அந் நதியின் கிழக்குக்கரைப் பகுதியில் அதாவது சிஸ்-சட்லெஜ் அரசுகள், பிரிட்டிஷாருடைய பாதுகாப்பில் இருந்து வரலாயின. இந்த உடன்படிக்கையிலிருந்து காலப்போக்கில் பாடியாலா, கிழக்குப் பஞ்சாப் அரசுகளின் யூனியன் (PEPSU) தோன்றியது. 1839ஆம் ஆண்டு இரஞ்சித் சிங்கு இறக்கின்ற வரையில் சட்லெஜ் முதல் சிந்துவரை இடைப்பட்டிருந்த நிலப் பரப்பு ஆற்றல்மிக்க நட்புறவு கொண்டுள்ள சீக்கியரிடம் இருந்துவந்தது. லாகூர் அரசு, வரலாற்றிலேயே வெற்றி மிக்க இடைப்படு நாடுகள் சிலவற்றுள் சிறப்புமிக்க ஒன்ருக விளங்கியது என்று கூறின் அது மிகையாகாது.

அடுத்து, பஞ்சாப் மாநிலத்தின் தெற்கிலும் மேற்கிலும் உண்டான ஆதிக்கச் சிதைவினை இப்பொழுது காணலாம். 1591ஆம் ஆண்டுமுதல் 1750ஆம் ஆண்டுவரை சிந்து முகலாயர்களின் ஆட்சிக்குட்பட்டதாக இருந்துவந்தது. பின்னர் அது புதிய ஆப்கானிய அரசரான அகமதுஷா அப்தாலியின் கைகளுக்கு மாறியது. 1783ஆம் ஆண்டில் மீர்பத் அலிகான் தல்புரா என்பவன் கலோரியரின் (Kaloras) கடைசி மன்னரைத் தோற்கடித்தான். அதன் பிறகு ஆப்கானிய ஷாவான தைமூரின் ஆட்சி ஆற்றலற்று நலியத் தொடங்கியது. அதனுல், அது தனித்ததொரு சுதந்திர நாடாக மாறியது. திறைப்பொருளைச் சிந்து தொடர்ந்து செலுத்தவேண்டும் என்று கோரப்பட்டது. ஆனுல், பொது வாகத் திறைப்பொருள் செலுத்தப்படாமலேயே இருந்து வந்தது. சிந்துவின் பழங்குடிக் குலமரபின் மூன்று கிளைகள் அதைப் பங்குபோட்டுக்கொண்டன. ஷதாத்புரி குடும்பம் ஐதராபாத்திலிருந்து சிந்து வரையிலுள்ள மத்திய சிந்து வெளிப் பிரதேசத்தை ஆட்சிபுரிந்து வந்தது. மீர்புரி அல்லது மணிக்கணி குடும்பம் மீர்புரியிலும், சோகரபாணிகள் கெய்ர் புரியிலும் ஆட்சிபுரியலாயினர். 1802ஆம் ஆண்டில் மீர்பத் அலிகான் காலமானுர். அதன்பிறகு மத்திய சிந்து அரசினை

அவருடைய மகனும், சகோதரர்களும், பங்காளிகளும் சிறு சிறு பகுதிகளாகப் பிரித்துக் கொண்டனர். அவர்களுள் ஒருவரை அவர்கள் தங்களுடைய தலைவர் (ராய்) என்று ஏற்றுக்கொண்டனர். இவ்வாறு அங்கு மூன்று கிளை மரபுகள் ஆட்சிபுரிந்து வந்தன. அவற்றுள் ஒன்று, நான்கு உட்கிளைகளை உடையதாகப் பிரிக்கப்பட்டிருந்தது. அவை சிந்துவை ஆண்ட அமீர்களின் கிளைகளாகும். சிந்துவில் மீண்டும் தங்களுடைய மேலாண்மையை நிலைநாட்ட இயலாத அளவிற்கு ஆப்கானியர் தங்களுடைய கருத்தினை வேறுபக்கத்தில் செலுத்தியிருந்தனர். அமீர்கள் ஆதிக்க முதன்மை பெறுவதற்கு முயலக் கூடிய ஊக்கம் வாய்க்கப்பெருமலும், ஒற்றுமைப்பட்டு விளங்குவதற்குரிய அறிவில்லாதவர்களாகவும் இருந்தனர். எனவே, அந் நாடு உரிமைமிக்க, எண்ணற்ற சிறுசிறு அரசுகளாகப் பிரிந்து கிடந்தது.

ஆப்கானிஸ்தானத்தின் சிதைவு இயற்கையின் பெருக்கத்தினுல் உண்டாகவில்லை. ஆனுல், கொலைகளினுலும் போர்களினுலும் அது சிதறுண்டு போயிற்று. பழங்குடி மக்களின் சடோசி குலத்தின் தலைவராக அகமதுஷா அப்தாலி விளங்கினுர். அவர் அப்தாலி பழங்குடியின் பெயரை, துர்ரானி (Durrani) என்று மாற்றிவிட்டார். அவர் காந்தகாரிலிருந்து ஆட்சிபுரிந்தார். அவர் ஆப்கானியர் அனைவரையும் ஒரு குடைக்கீழ்க் கொண்டுவந்து ஒன்றுபட்ட ஓரினத்தை உருவாக்க முயன்ருர். 1773ஆம் ஆண்டில் அவர் இறந்த பொழுது, அவருடைய ஆட்சி வடக்கே கபீரிஸ்தான், ஆக்சஸ் முதல் கிழக்கில் காஷ்மீர், சட்லெஜ், சிந்துவரையில் பரவி இருந்தது; தெற்கே கடல்வரையிலும், மேற்கே பாரசீகம், கொரசான்வரையிலும் விரிந்திருந்தது. தற்காலத்திய பெயர்களில் சொல்லுவதென்ருல் அது பாகிஸ்தான், ஆப்கானிஸ்தான் பகுதிகளை ஒட்டி, தற்காலப் பாரசீகம், ருஷ்ய துருக்கிஸ்தான் ஆகியவற்றின் பகுதிகளைத் தன்னகத்தே கொண்டதாக இருந்துவந்தது. அது கஜனிகளும் கோரிகளும் ஆட்சிபுரிந்த இராச்சியங்களின் புத்துயிர்ப்பினுல் அமைந்தது. ஆனுல், அது நெடுங்காலம் நிலைபெற்றிருக்கவில்லை. அகமதுஷாவிற்கு எட்டுப் பிள்ளைகள் இருந்தனர். அவர்களுள் இரண்டாவது மகனுன தைமூர், ஷாவாக முடிசூடிக் கொண்டார். அவருடைய ஆட்சிக்காலத்தில்தாம் பஞ்சாபில் சீக்கிய அரசு வளர்ந்தது; சிந்து மாநிலம் இழக்கப்பட்டது. துரானியரைப் பெருந்துன்பத்திற்காளாக்கிவிட்டு, அவர் பரக்சாய் குலமரபைச் சேர்ந்தவரும், அக்

குலத்தின் தலைவருமான பயந்தன் கான் (Payandan Khan) என்பவருக்குப் பேராதரவு நல்கினர். 1793ஆம் ஆண்டில் அவர் இறந்தபொழுது அவருக்கு 23 ஆண் மக்கள் இருந்தனர். பயந்தன் கான் 1799-ல் இறந்தபொழுது 21 ஆண் மக்களை அவருடைய 'வாரிசாக' விட்டுச் சென்றார். இத்தகைய அளவுகடந்த மக்கட்பேறு, நிலையான அரசியல் அமைப்புக்கு இடையூருக இருக்கலாயிற்று. பல சகோதரர்களுக்கு இடையே உண்டான பிணக்காலும், பூசலாலும், படுகொலையாலும், இவ் இரண்டு குடும்பங்களுக்கு இடையே உண்டான போட்டியாலும், பதவி வெறியாலும், அதிகார வேட்கையாலும் துரானியரின் பேரரசு அடியோடு அழிந்து போயிற்று. 1798ஆம் ஆண்டு, ஷாமன் ஷா லாகூர் வரையில் வெற்றியோடு படையெடுத்து வந்தார். அதன்பிறகு அவர் பதவியிலிருந்து நீக்கப்பட்டு, குருடாக்கப்பட்டார். பயந்தன் கானுடைய மூத்த மகனை பதேகானின் உதவியைப்பெற்று ஷாமன் ஷாவினுடைய சகோதரர் முகமது ஷா அரசைக் கைப்பற்றிக்கொண்டார். பதேகான் அரசியல் சூழ்ச்சித் திறன் வாய்ந்த 'அரசராக்குவோராக' விளங்கினர். 1803ஆம் ஆண்டில் முகமது ஷா பதவியிலிருந்து நீக்கப்பட்டார். தைமூர் ஷாவின் மற்ருெரு மகனும் தீவினைக்கு இரையாகிய ஷுஜா-உல்-முல்க்கினை, பதே கான் 1809-ல் அரசராக்கினன். இப்பொழுது துரானியர் பரக்சாய் மரபினருக்குக் கீழாட்களாக வாழவேண்டிய அவலநிலை உண்டாயிற்று. இவ் ஆதிக்கத்தை எதிர்த்து 1818ஆம் ஆண்டில் இறுதியாக ஒரு கிளர்ச்சி உண்டாயிற்று. பதே கான் கொலை செய்யப்பட்டார். ஆனல், முகமது ஷாவும் அவருடைய மகன் கம்ரானும் ஹெராட்டிலே அடைத்து வைக்கப்பட்டனர். 1829ஆம் ஆண்டில் முகமதுக்குப் பிறகு கம்ரான் பட்டத்திற்கு வந்தார். அவர் அரசரானதும், பாரசீகத்தின் மேலாண்மையை ஏற்றுக்கொண்டு, அதற்குத் திறை செலுத்த அவர் இசைந்தார். ஆப்கானிஸ்தானத்தின் எஞ்சிய பகுதிகள் அனைத்தும் சடோசாய் சகோதரர்களுக்குள்ளே பங்குபோட்டுக் கொள்ளப்பட்டது. அவர்களுள் பேராற்றலும் பெருந்திறமையும் வாய்ந்தவர் தோஸ்து முகமது கான் என்பவராவார். அவர் கஜனியைத் தம் கையகப்படுத்தி இருந்தார். நம்பிக்கைத் துரோகமும் போராட்டமும் நிறைந்த இருபதாண்டுக் காலத்தில், அவர் பையப்பைய மேம்பாடுற்ருர். கஜனியோடு அவர் ஜலாலாபாத்தைச் சேர்த்துக் கொண்டார். 1826ஆம் ஆண்டில் அவர் காபூலைக் கைப்பற்றிக் கொண்டார்; பின்னர்த் தம்மை அமீர் என்று அவர்

உலகிற்கு அறிவித்தார். 1834ஆம் ஆண்டில் அவர் பெஷாவரைச் சீக்கியரிடம் இழந்தார். அதே ஆண்டில், தங்கள் குடும்பத்தின் அரியணையைக் கைப்பற்ற முயன்ற ஷா ஷூஜா என்பவரை மிக எளிதிலே புறமுதுகிட்டு ஓடுமாறு தோஸ்து முகமது செய்தார்.

வடமேற்கு எல்லைப்புறத்திலுண்டான ஆதிக்கச் சிதைவு இந்தியாவில் பிரிட்டிஷாருடைய பாதுகாப்பினை மேன்மேலும் வளரச் செய்தது. ஆனால், நெடுந்தொலைவிலுள்ளவர்களின் அச்சுறுத்தலினால் அவர்கள் அல்லற்பட்டனர். இவ்வாறு அச்சுறுத்தியவர்களுள் நெப்போலியன் காலத்திய ஃபிரெஞ்சுக்காரர்கள் ஒருவராவார். நெப்போலியனுடைய எகிப்தியப் படையெடுப்பும், அதன்பிறகு கீழைநாடுகளிடத்து அவர் உள்ளத்தைப் பறிகொடுத்தமையும் இதுவரையில் ஃபிரெஞ்சுக்காரர்களுக்கு எதிராகத் தென்னிந்தியாவிலேயே கருத்தைச் செலுத்திவந்த பிரிட்டிஷார், இப்பொழுது வடமேற்கு எல்லைப் புறத்தில் ஃபிரெஞ்சுக்காரர்களின் அச்சுறுத்துதல் உண்டானமையால், அப் பகுதியில் பிரிட்டிஷார் தங்கள் கருத்தினைச் செலுத்தத் தொடங்கினர். இந்த நிகழ்ச்சி அருகிலே நிலையானதோர் ஆட்சியமைப்பை உடையதாக உள்ள பாரசீகத்தைப்பற்றிச் சிந்திக்குமாறு அவர்களைத் தூண்டியது. ஃபிரெஞ்சுக்காரர்களை நேரடியாக இந்தியாவிற்குள் நுழையவொட்டாமல் இடையே தடுத்து நிறுத்தக் கூடிய பேராற்றல் வாய்ந்ததாகப் பாரசீகம் விளங்குவதைக் கண்ட ஆங்கிலேயர், அதைத் தங்களுக்கு நன்மை தரத்தக்க வழியில் பயன்படுத்திக் கொள்ளலாம் என்று கருதினர். 1801ஆம் ஆண்டில் வெல்லஸ்லி, இளைஞரான ஜான் மால்கோமை, பாரசீகத்திற்குத் தூதராக அனுப்பிவைத்தார். மால்கோம் பாரசீகத்தோடு வாணிகத் தொடர்புடைய ஓர் உடன்படிக்கையும், அரசியல் தொடர்புடைய ஓர் உடன் படிக்கையும் செய்துகொண்டு, வெற்றியோடு திரும்பிவந்தார். ஆனால், தனது எல்லைப்புறத்திலுள்ள ருஷ்யாவைப்பற்றித் தான் பாரசீகம் பெரும் கவலை கொண்டிருந்தது. 1801ஆம் ஆண்டு ருஷ்யா பாரசீகத்திற்குரிய ஜார்ஜியாவைக் கைப் பற்றிக்கொண்டது. எனவே, அட்லான்டிக்கிலுள்ள ஃபிரான்சோடு அது அதிகமாகத் தொடர்புகொள்ள முயன்றது. ருஷ்யர்களுக்கு எதிராகப் போரிடுவதற்குப் பாரசீகம் ஃபிரெஞ்சுக்காரப் பிரதிநிதிகளைப் பயன்படுத்தத் தொடங்கியது. 1807ஆம் ஆண்டில் தில்சிட்டு என்னும் இடத்தில் நெப்போலியனுக்கும், சார் அலக்சாண்டருக்கும் இடையே

செய்துகொள்ளப்பட்ட நேச உடன்பாடு, ருஷ்யருக்கு எதிராகப் ஃபிரெஞ்சுக்காரர்களைப் பயன்படுத்திக்கொள்ள வேண்டும் என்ற பாரசீகத்தின் எண்ணத்தைக் குலைத்தது. எனவே, பாரசீகம் மீண்டும் பிரிட்டனின் ஆதரவை நாடத் தொடங்கியது. இந்த நெருக்கடி நிலையைத் தங்களுக்கு நன்மை தரத்தக்க நிலையில், நன்கு பயன்படுத்திக்கொள்ள விரும்பிய மின்ட்டோ தெகரானுக்கு இரண்டாவது நல்லெண்ணத் தூதர் குழுவை மால்கோம் தலைமையின்கீழ் அனுப்பிவைத்தார். ஆனால், இத் தூதர் குழு தெகரானுக்குச் சென்றபொழுது, லண்டனில் அயல்நாட்டுத்துறை அலுவலகமும் சர் ஹார்போர்ட் ஜோன்சு என்பவரை இதே காரணத்திற்காகப் பாரசீகத்திற்கு அனுப்பி வைத்திருந்தது. இவ்விரு திறத்தினருக்கும் இடையே போட்டியும் பொறாமையும் உண்டாயிற்று. மதிப்பிழந்த இச் சிறுகதை 1809ஆம் ஆண்டு பாரசீகத்திற்கும் ஜோன்சுக்கும் இடையே செய்து கொள்ளப்பட்ட உடன்படிக்கையினால் முடிவடைந்தது. அதன்படி எந்த ஐரோப்பிய அரசையும் பாரசீகத்தினுள் நுழைந்து செல்லுவதற்குப் பாரசீகம் அனுமதி அளிக்காது என்பதும், பிரிட்டிஷாரின் இந்தியா பகைவர்களால் தாக்கப்படுமானால், அப்பொழுது பாரசீகம் இந்தியாவிற்கு உதவிபுரிய முன்வரும் என்பதும் முடிவு செய்யப்பட்டன. இதற்கு மாற்றாக ஐரோப்பிய அரசுகள் யாதேனும் பாரசீகத்தைத் தாக்கினால், பிரிட்டன் பாரசீகத்திற்குப் படை உதவியோ, பொருள் உதவியோ, அதிகாரிகளைக் கடன்கொடுக்கும் உதவியோ செய்வதாகப் பிரிட்டன் உறுதிமொழி அளித்தது. அதே சமயத்தில் பெஷாவருக்கு எல்ஃபின்ஸ்டன் தலைமையில் சென்ற நல்லெண்ணத் தூதர் குழு ஷா ஷுஜாவோடு ஓர் உடன்படிக்கை செய்துகொண்டது. ஆனால், உடனடியாகச் சிறிது காலத்திற்கெல்லாம் ஷா ஷுஜா வீழ்ச்சியுற்றதனால், அவ் உடன்படிக்கை பயனற்றுப் போயிற்று. இத்தகைய திட்டங்களின் மூலம் இந்தியாவிற்குப் பிராங்கிய-ருஷ்ய நாடுகளின் மூலம் உண்டான அச்சுறுத்தலைத் தவிர்க்க, அந் நாடுகளுக்கும் இந்தியாவிற்கும் இடையே பாரசீகத்தை இடைப்படு நாடாக விளங்குமாறு செய்யவேண்டும் என்பதே ஆங்கிலேயருடைய நோக்கமாக இருந்துவந்தது. ஆனால், பிரிட்டனும் இந்தியாவும் நெடுந்தொலைவில் இருந்துவந்தன. அத் திட்டத்தைச் செயற்படுத்துவதற்குப் பாரசீகம் மிகவும் ஆற்றலற்ற நிலையில் இருந்தது; ஆனால், அக் கொள்கை வெற்றிதரும் என்பதை மெய்ப்பிப்பதற்கு ருஷ்யா மிக அருகிலேயே இருந்தது. பாரசீகத்திற்குத் தேவைப்பட்ட அளவிற்கு

உதவிகளையும் வசதிகளையும் கொடுத்துதவுவது என்பது பிரிட்டனுடைய ஆற்றலுக்கு அப்பாற்பட்ட ஒன்றாக இருந்தது. ஃபிரான்சினால் கட்டுப்படுத்தப்பட்ட ஐரோப்பாவைத் தன் வயப்படுத்த முடியாமையாலும், மராட்டியப் பிரச்சினையில் இன்னும் மூழ்கிக்கிடந்த இந்தியாவை, பாரசீகத்திற்கு உதவி செய்யுமாறு ஆணையிட முடியாமையாலும் பிரிட்டன் பாரசீகத்திற்கு உதவி புரியும் வகையறியாது திகைப்புற்றிருந்தது எனலாம். 1811ஆம் ஆண்டு ருஷ்யா மீண்டும் பாரசீகத்தைத் தாக்கியது. 1813ஆம் ஆண்டில் இவ்விரு நாடுகளும் செய்துகொண்ட 'குலிஸ்தான்' உடன்படிக்கையின்படி காஸ்பியன் கடலில் பாரசீகக் கப்பல்கள் தலைகாட்டக்கூடாது என்று முடிவுசெய்யப்பட்டது. பிரிட்டிஷ் அதிகாரிகள், பாரசீகத்திற்குக் கடனுக அனுப்பப்பட்டனர். இவர்கள் உதவியின்மூலம் ருஷ்யர்களுக்கு எதிராகத் தம்முடைய படையைப் பலப்படுத்திக் கொள்ளலாம் என்று பாரசீகம் கருதியது. 1826ஆம் ஆண்டில் ஷாபாத் அலி மக்களுடைய பொது எண்ணத் தூண்டுதலினால் ருஷ்யாவைத் தாக்கியமை இந் நாடகத்தின் திருப்புமையமாக அமைந்தது. ருஷ்யாவிடத்துப் பாரசீகம் அடைந்த தோல்வி, இன்னும் பாரசீகத்தின் படை திறமை வாய்ந்ததாக விளங்கவில்லை என்பதைத் தெரிவித்ததோடு மானக்கேடான வகையில் அதனுடன் சமாதான உடன்படிக்கை ஒன்றை 1828-ல் செய்துகொள்ளுமாறும் தூண்டியது. இதுமுதல் பிரிட்டிஷாரின் செல்வாக்கு பாரசீகத்தில் குன்றியது; ஆனால், ருஷ்யருடைய செல்வாக்கு மேன்மேலும் பெருகி வளர்ந்தது. நடு ஆசியாவைப் பாரசீகத்தின்மூலம் கட்டுப்படுத்தியாளவேண்டுமென ருஷ்யா ஆவல்கொண்டிருந்தது. அவ்வாறு செய்வதன்மூலம் பாரசீகம் தான் இழந்துவிட்ட மதிப்பையும் பெருமையையும் மீண்டும் நிலைநாட்ட விழைந்தது. இத் திட்டத்தின்படி 1832-ல் கொராசானைப் (Khorasan) பாரசீகம் கைப்பற்றியது; 1834-ல் தம்முடைய பாட்டனுக்குப் பிறகு, ருஷ்யாவின் ஆதரவாளரான முகமது மீர்சா, ஷாவாக அரசுகட்டிலேறினர்.

அதேசமயத்தில், ருஷ்யா 1828—9-ல் துருக்கியைத் தோற்கடித்தது. அதன்மூலம் ஐரோப்பாவில் ருஷ்யாவின் நிலை பலம் பொருந்தியதாகவும் ஆற்றல்மிக்கதாகவும் ஆக்கப்பட்டது. அதன் விளைவாகச் சிறிய ஆசியாவில் புதிய அரசர்கள் பதவிக்கு வந்தனர்; டான்யூப் நதிப் பிரதேசத்தில் (தற்கால ருமேனியாவில்) சிற்றரசுகள் பல செயல் முறையில் சுதந்தரம் பெற்றன. இதைத் தொடர்ந்து கடைப்பிடிக்க, 1833ஆம்

ஆண்டில் அங்கியர் ஸ்கெலஸ்ஸி (Unkiar Skelessi) என்னும் உடன்படிக்கை செய்யப்பட்டது. அதன்மூலம் ருஷ்யாவின் கண்காணிப்பிற்குட்பட்ட காப்பரசு ஒன்றினைத் துருக்கியில் ருஷ்யா நிறுவியது. எகிப்தினுடைய அதிபரான முகமது அலிக்கு எதிராக ருஷ்யா, துருக்கியின் சுல்தானைப் பாது காப்பதாக உறுதிமொழி அளித்தது. இதற்காகத் துருக்கி, ருஷ்யாவிற்குப் பொன்னும் பொருளும் கொடுத்துதவ முன் வந்தது. இவ்வாறு பாரசீகத்தில் நடந்ததைப்போன்று வெளியாரால் பலவீனப்படுத்தும் முறைக்குப் பதிலாக உள்ளார்ந்த நிலையிலேயே கீழறுக்கப்படுவதன் மூலம் பலவீனப்படுத்தப்படும் செயல், துருக்கியில் இடம் பெற லாயிற்று. ருஷ்யர்கள் அண்மைக் கிழக்கு, நடுக் கிழக்கு நாடுகள் முழுவதையும் தங்களுடைய ஆதிக்கத்தின்கீழ்க் கொண்டுவந்துவிடுவார்களோ என்ற ஐயம் நெடுங்காலத் திற்கு முன்பிருந்தே இருந்துவந்தது. சென்ற நூற்றாண்டின் இருபதுகளில் இந்தியாவை ருஷ்யா அச்சுறுத்தும் என்னும் எச்சரிக்கைக் குரல்கள் முதன்முதலாகக் கேட்கத் தொடங்கின. அவை இப்பொழுது மிக உயர்ந்த இடங்களில் இருந்து கேட்டன. அங்கியர் ஸ்கெலஸ்ஸி உடன் படிக்கை, பாமர்ஸ்டனின் அரசியல் சூழ்ச்சித்திறன் பொருந்திய எதிர்த்தாக்குதலின் அறிகுறியாக விளங்கியது. அவ்வுடன்படிக்கை முகமதாலிக்கு முழுச் சுதந்தரத்தை அளித்ததோடு, அவரை எகிப்தோடு அமைந்து கிடக்குமாறு செய்தது; 1840ஆம் ஆண்டு ஃபிரான்சு பாமர்ஸ்டனால் இழிவு படுத்தப்பட்டது; துருக்கியில் இருந்துவந்த ருஷ்யர்களின் செல்வாக்கைப் பையப்பைய மாற்றி, பிரிட்டிஷாருடைய செல்வாக்கை நிலைநிறுத்துமாறு செய்தது. துருக்கியப் பேரரசை ருஷ்யாவின் தலையீட்டுக்கெதிராக ஆதரிப்பது, இதுமுதல் அந் நூற்றாண்டின் எஞ்சிய பகுதி முழுவதிலும் பிரிட்டிஷாரின் ஆர்வமிக்க முக்கியச்செயலாக இருந்துவந்தது. அண்மைக் கிழக்கு நாடுகளிலும், நடுக் கிழக்கு நாடுகளிலும் ருஷ்யாவிற்கெதிராகப் பிரிட்டிஷார் ஆட்சிமுறைக் கொள்கை களைச் செயற்படுத்திய இருபுறச் செயல்களின் ஊடேதான், நாம் முதல் இரு ஆப்கானியப் போர்களில் நடந்தவற்றுள் பெரும்பான்மையான நிகழ்ச்சிகளின் காரணங்களைக் காண வேண்டும். பாரசீகத்தில் ருஷ்யா செல்வாக்குப் பெறுவதனால் இந்தியாவிலுள்ள பிரிட்டிஷாரை அது அச்சுறுத்துவதாகக் காணப்படுகிறது என்று பாமர்ஸ்டன் வாதாடுவாரானால், இந்தியாவிலுள்ள பிரிட்டிஷார் ஆப்கானிஸ்தானத்தின் அரசியலில் தலையிட்டுச் செல்வாக்குப் பெறுவது ருஷ்யா

விற்குப் பேரச்சத்தை உண்டாக்குகிறது என்று ஏன் ருஷ்யா வாதிடக்கூடாது? இதைப்போன்றே, ருஷ்யர்கள் ஐரோப்பாவில் பிரிட்டனை நெருக்கடிக்குள் சிக்கித் திக்குமுக்காட வைப்பதன்மூலம் இந்தியாவில் பிரிட்டிஷாரின் ஆட்சிக்கு ஏன் ஊறு தேடக்கூடாது? இருதிற நாடுகளும் யாதாகிலும் ஒரு வழியில் ஒன்றை மற்றொன்று அச்சுறுத்திக்கொண்டிருந்தன. ஒன்று உள்நாட்டுப் பகுதியில் நெடுகவுள்ள நாடுகளில் தனது செல்வாக்கை நிலைநாட்டியதன்மூலம் அச்சுறுத்தத் தொடங்கியது; மற்றொன்று கடற்படை ஆதிக்கத்தைக்கொண்டு தனது எதிரிக்கு அச்சத்தை ஊட்டிவந்தது. எனவே, ஓர் அரசியல் அரங்கில் நடைபெறும் நிகழ்ச்சிகளை, மற்றோர் அரசியல் அரங்கில் நடைபெறும் நிகழ்ச்சிகளோடு தொடர்புபடுத்திப் பார்த்தால் அல்லாமல், அவற்றினுடைய பொருள் தெளிவாகப் புரியாது. இவ் வகையில்தான் ஆப்கானியப் போர்கள் அமைந்தன. அவ் ஆப்கானியப் போர்கள் அனைத்தும் முக்கியமாகக் 'கீழைநாடுகளின் பிரச்சினை' எனப்படும் பொதுப் பிரச்சினை ஒன்றின் பகுதியாக அமைந்தன.

ஆட்சிமுறைக் கொள்கைகளை உருவாக்கியவர்களால், அடிக்கடி மறக்கப்பட்டுவந்த சிந்தனைக்கு உரிய மற்றொரு செய்தியொன்றுள்ளது. அதை நாம் என்றுமே மறக்கலாகாது. ஆப்கானிய மக்களுடைய ஒன்றுபட்ட உணர்ச்சியே அதுவென்பது இங்குக் குறிப்பிடத்தக்கது. அவர்களுடைய போர்களுக்கும், பூசல்களுக்கும், குழப்பங்களுக்கும், கொந்தளிப்புகளுக்கும் இடையே ஒரு பெரிய மனவெழுச்சி மற்ற எல்லா வகையான உணர்ச்சிகளைக்காட்டிலும் மேலோங்கிக் காணப்பட்டது. அயலார்—வெளியார் தங்களுடைய நாட்டு விவகாரத்தில் தலையிடுவதை அவர்கள் மிகக் கடுமையாக எதிர்த்தமையே அவர்களுடைய சிறப்புமிக்க மனவெழுச்சியாகும். இந்த வகையில் ஆப்கானியர், 'ஆசியாவின் ஸ்பானியராக' இருந்தனர் என்று கூறலாம். தோஸ்து முகமது பிற்காலத்தில் தம்முடைய மகன் ஷெர் அலி செய்ததைப்போன்று, ருஷ்யர்கள் தலையிடுவதை வெறுத்ததோடு, அதற்கு மாறாகப் பிரிட்டிஷாருடைய ஆதரவைப் பெற முயன்றமைக்குத் தக்க சான்றுகள் உள்ளன. ஆனால், அவர்களிருவரும் இருதிறத்தாரின் ஆதரவை நாடுவதைக்காட்டிலும், பெரிதும் விரும்பியது அவர்களுடைய சுதந்தரத்தையேயாகும். இந்தச் சிறப்புமிக்க ஆப்கானியருடைய மனப்போக்கினைப் புறக்கணித்தமை, பிரிட்டிஷ் இந்திய 'அரசியல் வாதிகளின்' உள்ளங்களில் ஆழப் பதிந்திருந்த ருஷ்யாவினால்

உண்டாகும் அச்சத்தைப்பற்றி, ஊறு விளைவிக்கக்கூடிய வகையில் அதிகப்படியான உயர்வுநவிற்சியான கருத்துகள் தோன்ற ஏதுவாயின.

1836ஆம் ஆண்டு ஏப்ரல் மாதத்தில் ஆக்லண்டு பிரபு இந்தியாவிற்கு வந்தார். அப்பொழுது மிகவும் இடர்ப்பாடான நெருக்கடி நிலை அவரைச் சூழ்ந்துகொண்டிருப்பதைக் கண்டார். ருஷ்யருடைய ஆதரவோடு பாரசீகர்கள் ஹெராட்டைத் தாக்கப்போவதாக அச்சுறுத்திக்கொண்டிருந்தனர். தோஸ்து முகமது பாரசீகத்திற்கும் இரஞ்சித் சிங்கிற்கும் எதிராகத் தமக்கு உதவிபுரியுமாறு பிரிட்டிஷாரை வேண்டிக் கொண்டிருந்தார்; இரஞ்சித் சிங் 1834-ல் ஆப்கானியருடைய பெஷாவாரைக் கைப்பற்றிக்கொண்டார்; அந்த இரஞ்சித் சிங்கோ கம்பெனியாருடன் நேச உறவுகொண்ட நண்பராக இருந்துவந்தார்; ஆக்லண்டு உள்நாட்டு முன்னேற்றத்தையும் வளர்ச்சியையும் நாடும் அமைதிமிக்க ஆட்சிகாலத்தை நிலைநாட்டலாம் என்ற நம்பிக்கையோடு வந்தார். அவருடைய முதல் செயல்முறையின் போக்கினைக் கம்பெனியின் இயக்குநர்களுடைய 'மறைபொருட் கழகத்தின்' அறிவிப்பு நெறிப் படுத்தியது. அவ் அறிவிப்பு 1836ஆம் ஆண்டு, ஜூன் மாதம் 25ஆம் நாள் அவருக்கு அனுப்பிவைக்கப்பட்டது. அவ் ஆணையின் ஒரு பகுதியைக் கீழே காணலாம். கவர்னர்-ஜெனரல் பின்வருமாறு செயலாற்ற வேண்டும் என்று அவ் ஆணையில் அறிவுறுத்தப்படுகிறது:

> 'ஆப்கானிஸ்தானத்தில் நடைபெறும் நிகழ்ச்சிகளையும் அங்கு ஒரு பகுதியில் ருஷ்யர்களுடைய செல்வாக்கு வளர்ந்தோங்கி வருவதையும், இதுவரை முயன்றதைக்காட்டிலும் மிகக் கூர்ந்து கவனித்து நீர் மேற்கொள்ளுவதற்குகந்தனவும், விரும்புவனவுமான நடவடிக்கைகள் எடுக்கலாம் என்பதைப்பற்றி ஆழ்ந்து சிந்தித்து முடிவிற்கு வருக. நெடுந்தொலைவிலுள்ள ருஷ்யா தன்னுடைய செல்வாக்கை ஆப்கானிஸ்தானத்தில் நிலைநாட்டுவதனால் நம்முடைய இந்திய உடைமைகளுக்கு உண்டாகக்கூடிய ஊறுகளைக் கணித்து மதிப்பிடத் தவறிவிட வேண்டாம். மேலும், ருஷ்யருடைய செல்வாக்கு நம்முடைய இந்திய நேச உறவு நாடுகளிடத்து நாம் கொண்டுள்ள தொடர்பினை எவ்வாறு பாதிக்கும் என்பதை நீர் ஆராய்ந்து அறிவீராக; மேலும், நம்முடைய இந்திய இராச்சியத்தின்

அமைதியை அது எவ்வாறு குலைக்கும் என்பதையும் பற்றி ஆழ்ந்து சிந்தித்து முடிவிற்கு வந்தபிறகு செயலாற்றத் திட்டம் வகுக்கவும்.'

'இந்த முக்கியமான பிரச்சினையை எவ்வாறு சமாளிப்பது என்பதைப் பற்றியும், காபூலில் உள்ள தோஸ்து முகமதுவினிடம் அங்கு நடைபெறும் நிகழ்ச்சிகளைக் கூர்ந்து கவனிப்பதற்கோ, அரசியல் அல்லது முதலில் வெறும் வாணிகத் தொடர்பான உடன்படிக்கையையோ அத் தலைவரிடம் செய்துகொள்ளுவதற்கோ, நாம் நம்முடைய நம்பிக்கைக்குரிய ஒரு பிரதிநிதியை அனுப்பிவைக்கலாமா என்பதைச் சிந்தித்து முடிவிற்கு நீர் வருக. இதைப்பற்றித் தீர்மானிக்க வேண்டிய பொறுப்பையும், ருஷ்யாவின் செல்வாக்கையும்—முன்னேற்றத்தையும் தடுத்து நிறுத்துவதற்குரிய செயல்களில் ஈடுபடும் பொறுப்பையும் நாங்கள் உம்மிடத்தில் ஒப்படைத்துவிடுகிறோம். நீர் உமக்கு உகந்தது எது என்று தோன்றுகிறதோ, அதை அவ்வாறே உம் விருப்பப்படி செய்யலாம். இதுவரை எல்லைப்புறத்தில் இருந்துவந்த உம்முடைய பிரதிநிதிகள் அறிந்துவந்த செய்திகளைக் கேட்டு மன நிறைவடைந்தீரா? இனி, திரு. மக்நீல் பாரசீகத்தைச் சென்றடைந்ததும், அவர் உமக்குத் தேவையான செய்திகளைச் சேகரித்து அவ்வப்பொழுது உமக்குத் தெரிவிப்பார். அவற்றையெல்லாம் நன்கு கூர்ந்து ஆராய்ந்து, நீர் செயலாற்ற வேண்டும். ஆப்கானிய அரசியல் செயல்முறைகளில் நீர் உறுதியான தீர்மானத்தோடு தலையிடுவதற்குரிய சரியான நேரம் வந்துவிட்டது.

அப்படி நீங்கள் தலையிடுவதன்மூலம் பாரசீகம், ஆப்கானிஸ்தானத்தின் எப் பகுதியிலும் தன்னுடைய பேராசை விரிவுபடுத்த வொட்டாமல் நீர் தடுக்க வேண்டும்; நெடுநாட்களாகத் தடைப்பட்டுக்கொண்டிருக்கும் ருஷ்யச் செல்வாக்கு ஆப்கானிஸ்தானத்தில் கால்கொள்ளாதவாறு தக்க சமயத்தில் தடுத்து நிறுத்தும் நல்லதொரு செயலாக உம்முடைய தலையீடு அமையவேண்டும்'.

அலக்சாண்டர் பர்ன்ஸ் என்பவரைக் காபூலுக்கு வாணிக நட்புறவுக் குழுவினராகப் புறப்பகட்டோடு அனுப்பி வைத்தமையே, இதனால் உடனடியாக உண்டான விளைவாகும். வாணிக நட்புறவிற்காகத் தூதர் அனுப்பப்பட்டார் என்பதை விட உண்மையில் அரசியல் நிலையை ஆராய்ந்தறியவே அத்தூதர் அனுப்பப்பட்டார் என்றே கூறலாம்.[2] அவர் 1837ஆம் ஆண்டு காபூலுக்கு வந்து சேர்ந்தார். இரண்டு மாதங்களுக்குப் பிறகு உலகச் சிறப்புமிக்க ஹெராட் முற்றுகையைப் பாரசீகர்கள் தொடங்கினர். இவ்வாறு ஓர் அரசியல் நெருக்கடி உண்டாயிற்று. எனவே, அயல்நாட்டுக் கொள்கையைப்பற்றி ஆங்கிலேயர் ஒரு முடிவிற்கு வரவேண்டியமை தவிர்க்க முடியாததாயிற்று. பாரசீக-ருஷ்யத் தாக்குதல்களுக்கு எதிராகத் தோஸ்து முகமதிற்குத் தேவையான உதவியினை அளிக்கவேண்டும் அல்லது அவனுடைய நிலையில் வேறோர் ஆட்சியமைப்பை நிறுவவேண்டும் அல்லது ஆப்கனிஸ்தானத்தின் தலைவிதியைப்போல் எல்லாம் நடைபெறும் என்று அதை அப்படியே வாளாவிட்டுவிட வேண்டும். முதலில் நேச உடன்படிக்கை ஒன்றைச் செய்துகொள்ளுவதில் தோஸ்து முகமது பேரார்வம் காட்டினார். ஆனால் அவர் அதற்கு விலையாகத் தாம் முன்னர் இழந்துவிட்ட பெஷாவரை, இரஞ்சித் சிங்கிடமிருந்து பெறவேண்டும் என்று நினைத்தார். 1834-ல் பெஷாவரை இழந்தமை, அண்மையில் நடைபெற்ற 'ஜம்ரத்து' கொடிய போரினால் உறுதி செய்யப்பட்டமையால், அவருக்கு அதில் நாட்டம் இல்லாமல் போயிற்று. நன்மை தரத்தக்க சீக்கியர் நட்புறவை ஐயப்பாட்டிற்குரிய ஆப்கானியருடைய ஆதரவிற்காகக் கைவிட மறுத்தமை, ஆக்லண்டினுடைய நேர்மையான செயலாகும். ஆனால், ஆக்லண்டு மற்றொரு செயலைச் செய்யத் தவறினர். இரஞ்சித் சிங்கோடு அரசியல் சூழ்ச்சித்திறன் மிக்க உடன்படிக்கை செய்துகொள்ளுவதன்மூலம், பஞ்சாபில் பிரிட்டிஷாரின் செல்வாக்கை மிகுதிப்படுத்த ஆக்லண்டு மறுத்துவிட்டார். அவ்வாறு மறுக்காமல் அவர் ஓர் உடன்படிக்கை செய்துகொண்டிருப்பாரானல், அது இரு திறத்தினருக்கும் பாதுகாவலாக அமைந்திருக்கும். இதன் விளைவாகப் பர்ன்சு

[2] 1843ஆம் ஆண்டு வெளியிடப்பட்ட பாராளுமன்ற நடவடிக்கைகளைக்கொண்ட 'நீலப் புத்தகத்தில்' (Blue Book) பர்ன்சினுடைய கடிதப் போக்குவரத்துகள், ஆக்லண்டு அரசாங்கத்திடத்து அக்கறை காட்டும் வகையில் தீயநோக்கத்துடன் எடுத்துக்காட்டப்பட்டது.

தோஸ்து முகமதிற்கு எவ்வகையிலும் உதவி செய்ய இயலாத வரானுர். எனவே, தமக்கு ருஷ்யாவிலாகிலும் உதவி கிடைக்குமா என்னும் ஆர்வத்தோடு தோஸ்து முகமது ருஷ்யாவின் ஆதரவை நாடினுர்.

ஆப்கானியர் பிரிட்டிஷாரை வேண்டுமென்றே புறக் கணித்துவிட்டு, ருஷ்யரின் ஆதரவைப்பெறத் தானே முனைந்து செல்லுவதைக் கண்ட ஆக்லண்டு, வெறுப்புற்றதோடு, ஆப்கானியர் பிரிட்டிஷ் இந்தியாவிற்குப் பகைவர்களாகி விட்டனர் என்றும் கருதலானுர். எனவே, அவருடைய வட மேற்கு எல்லைப்புறக் கொள்கையின் இரண்டாவது கட்டத் திற்குச் சென்று செயலாற்றத் தொடங்கினுர். 1838ஆம் ஆண்டு, மே மாதம் 12ஆம் நாள் அவர் வரைந்த கூட்ட நடவடிக்கைக் குறிப்பில் தாம் மேற்கொள்ளுவதற்குரிய மூன்று வழிகளைப் பின்வருமாறு குறிப்பிட்டிருந்தார்.[8]

'முதலாவது, சிந்து நதியின் போக்கில் நாம் நம்முடைய தற்காப்புப் படையினை நிறுத்திப் பலப் படுத்திக்கொள்ள வேண்டும்; ஆப்கானிஸ்தானத்தை, அதன் தலைவிதிப்படி எல்லாம் நடக்கும் என்று நாம் வாளா விட்டுவிடவேண்டும். இரண்டாவதாக, நாம் ஆப்கானிஸ்தானத்தைக் காப்பாற்றத் தற்பொழு துள்ள காபூல், காந்தகார் தலைமைப் பதவிகளுக்கு உற்றிடத்துதவியளிக்க வேண்டும்; மூன்ருவதாக, அறிவுரையின்படியும் தக்கக் கட்டுப்பாட்டோடும் இரஞ்சித் சிங்கின் படை காபூலின்மீது படை யெடுத்துச் செல்லுவதை நாம் அனுமதிக்கவேண்டும் அல்லது ஆதரவு அளிக்க வேண்டும். இந்தப் படை யெடுப்பிற்குத் துணையாக நான் மேலே விளக்கிய தைப்போன்று ஷா ஷூஜாவின் தலைமையின்கீழ் மற்ெருரு படையெடுப்பிற்குரிய ஏற்பாடுகளைச் செய்யவேண்டும்.'

ஆக்லண்டு முதலில் குறிப்பிட்ட முறையைப் பின் பற்றினுல் (அது 'தோல்வியையே உண்டாக்கும்' என்று அவர் கருதினுர்), மிகக் குறுகிய காலத்தில் நடைபெற்ற நிகழ்ச்சிகள் மெய்ப்பித்ததைப்போன்று எத்தகைய தீமையும்

[8] J. W. Kaye: History of the War in Afghanistan, தொகு. 1, பக். 320.

உண்டாகியிருக்காது; இரண்டாவது செயல் முறையை அவர் தேர்ந்தெடுத்திருந்தாலும், அதன் விளைவும் அவ்வாறேதான் இருந்திருக்கும். மூன்றாவது செயல்முறையை விடாப் பிடியாகப் பின்பற்றியிருந்தால், அதன் முடிவும் மேற்கண்ட வாறே அமைந்திருக்கலாம். ஏனெனில், குறிப்பாகப் பிறருடைய நன்மையைக் கருதி, தம்முடைய படையைக் குளிர்மிகுந்த ஆப்கானிய மேட்டுநிலத்தில் கொண்டுபோய்ப் பலி கொடுக்கும் உண்மையான நோக்கம் ஒன்றும் இரஞ்சித் சிங்கிற்குக் கிடையாது. ஆக்லண்டு செயல் முறைக்குரிய வழியினைத் தேர்ந்தெடுத்தமையே பேரழிவினை உண்டாக்கி விட்டது என்று சொல்லுவதற்கில்லை. ஆனால், அது பேரழிவுகளை விளைவிக்கத்தக்க நிலையில் கொண்டு சென்று விட்டது. முதலில் யாரைப் படைத்துறை வேலையைக் கவனிக்குமாறு விடலாம் என்னும் அறிவற்ற போராட்டத் திற்குள் ஆழ்த்தியது. அது அவருடைய அரசியல் சூழ்ச்சித் திறனற்ற போக்கினை வெளிப்படுத்தியதோடு, அவர் அரசியல் அறிவுரையாளர்களின் கருத்துகளை நம்பியே செயலாற்று கிறார் என்பதை எடுத்துரைத்தது. சிறப்பாக அவர் சர் வில்லியம் மக்நாக்டன் என்பவருடைய கைப்பாவையாக இருந்துவந்தார் என்பது புலனாயிற்று. இந்தப் போராட் டத்தின் விளைவாக 1838ஆம் ஆண்டு, ஜூன் மாதத்தில் முக்கூட்டு உடன்படிக்கை ஒன்று செய்யப்பட்டது. காபூலின் தலைவராக ஷாஷூஜாவை அமர்த்தவேண்டும் என்பதே இவ் உடன்படிக்கையின் நோக்கமாக இருந்தது. இரஞ்சித் சிங் அவருடைய அரசின் எல்லாப் பகுதிகளுக்கும் உரிய தலைவர் என்பது உறுதிப்படுத்தப்பட்டது. ஷா உதவிக்கு வேண்டினால், இரஞ்சித் சிங் முஸ்லீம்களைக்கொண்ட படையொன்றைக் காபூலுக்கு அனுப்பிவைக்க வேண்டும் என்று தீர்மானிக்கப் பட்டது. அதைப்போன்றே, தேவைப்படுகின்ற பொழுது ஷாவும் சீக்கியருக்கு உதவிபுரிய வேண்டும் என்றும், ஆப்கா னியரின் ஆட்சியிலிருந்து 'எப்பொழுதும்' சிந்து விடுதலைப் பட்ட தனியரசாக விளங்கவேண்டும் என்றும் முடிவு செய்யப் பட்டது. வேறு வகையாகச் சொல்லுவதென்றால், சிந்துவைப் பரிசாகக் கொடுப்பதன்மூலம் ஷாஷூஜா, காபூலைப் பெறுவ தோடு சீக்கியருடைய படையுதவியையும், பிரிட்டிஷாருடைய பொருள் உதவியையும் பெறுவார் என்பதே அவ் உடன் படிக்கையின் சாரமாகும். ஆக்லண்டு இன்னும் படைத்துறை உதவியளிப்பதாகக் கூறித் தம்மைச் சிக்கிக் கொள்ளுமாறு

செய்துவிடவில்லை என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது.[4] ஆனால், பிரிட்டிஷாரோடு சேர்ந்து படைத்துறைச் செயல் முறையில் ஈடுபடுவதாக உடன்படிக்கை செய்துகொள்ளாமல் தலைமறைவாக உள்ள வள ஆதாரமற்ற ஷா ஷுஜாவோடு உடன்படிக்கை செய்துகொண்டதே தம்முடைய வெற்றி யாகும் என்று இரஞ்சித் சிங் கருதலானார். பிரிட்டிஷார் தாங்களாகவே செயலாற்றுகின்றவரையில் அல்லது அத் துணிகரச் செயல் திட்டம் அழிந்தொழிகின்றவரையில் அதைப் பார்த்துக்கொண்டு அவர் வாளா இருக்கவேண்டியவ ரானார். இரஞ்சித் சிங் ஆக்லண்டை அறிவால் வென்றிருக் கலாம். ஆனால், அவர் அமைதியாகக் காத்திருந்தார். இப் பொழுது ஆக்லண்டு தம்முடைய ஊழ்வலிமிக்க அடுத்த செயல்களில் இறங்கினார். பிரிட்டிஷாரே இந்தச் செயலைச் செய்யவேண்டும் என்று சிம்லாவில் முடிவு செய்யப்பட்டது. இம் முடிவு நேர்மையானது என்பதை 1838ஆம் ஆண்டு, ஆகஸ்டு மாதம் 13ஆம் நாள் கம்பெனியின் இயக்குநர்களுக்கு எழுதிய கடிதத்தில் அவர் எண்பித்திருந்தார்.

இறுதியாக மூழ்குவதற்கு முன்பு, தக்க சமயத்தில் விலகிக் கொள்ளுவதற்குரிய வாய்ப்பு ஒன்று ஆக்லண்டிற்கு அளிக்கப்பட்டது. லண்டன் மாநகரத்து அமைச்சரவை நேரடியாகப் பாரசீகத்திற்கு எதிர்ப்பினைத் தெரிவித்ததோடு, அதைத் தொடர்ந்து காராக்கினைக் (Karak) கைப்பற்றிக் கொண்டது. இந்தச் செயலின் செய்தி எட்டியவுடனே ஷா ஹெராட்டினை முற்றுகையிட்டிருந்ததைக் கைவிட்டார். அதனை 1838ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதத்தில் எல்ட்ரெட் போட்டிங்கர் என்பவரின் திறமையாலும் தறுகண்மையாலும் இதுவரைத் தற்காப்புமிக்கதாகக் காப்பாற்றிக்கொள்ள முடிந்தது. ஆனால், தாயகத்தில் ஐயுறவான கருத்துகள் தெரிவிக்கப் பட்டபோதிலும், வெலிங்டன் கோமகன் 'ஆப்கனிஸ் தானத்தினுள் நுழைவது என்பது, என்றும் அந் நாட்டினுள் அணிவகுத்துச் செல்லுவதாகும்' என்று அச்சுறுத்திய போதிலும், ஆக்லண்டு தம்முடைய திட்டத்தை விடாப் பிடியாகச் செயலாற்றுவதில் ஈடுபட்டிருந்தார். ஹெராட் முற்றுகை தவிர்க்கப்பட்டுப் பாதுகாப்பாக இருக்கிறது என்ற

[4] '1833ஆம் ஆண்டில் ஷா ஷுஜாவிற்கும் இரஞ்சித் சிங்கிற்கும் இடையே செய்யப்பட்ட உடன்படிக்கையின் விரிவான வடிவமே' முக்கூட்டு உடன்படிக்கை என்று கூறலாம். கேம்பிரிட்ஜ் இந்திய வரலாறு, தொ. 1, பக். 495.

செய்தி கிடைப்பதற்கு முன்பே, அக்டோபர் முதல் நாள், அவர் தம்முடைய படையெடுப்பைப்பற்றி அறிவிக்கும் கொள்கையறிவிப்பினை வெளியிட்டார். ஆனால், நவம்பர் எட்டாம் நாள் முற்றுகை கைவிடப்பட்டதைப்பற்றியும், தம்முடைய திட்டத்தைத் தொடர்ந்து செயலாற்றப் போவதைப்பற்றியும் அவர் அறிவித்தார்.

தவிர்க்க முடியாத நெருக்கடி நிலை உண்டாயிற்று. அதனால், இடர்ப்பாடுமிக்க, வன்முறைச் செயல்கள் நிறைந்த போரில் ஆக்லண்டு இறங்கினார் என்று எண்பிக்க முடியாத நிலையில், அவர் கொடுமையான போரில் இறங்குவதற்குக் காரணமாக அமைந்த அவர் செய்த தவறுதல்களை எல்லாம் இப்பொழுது நாம் சுருக்கமாகக் காண்போம். கலகம் செய்வதைக்காட்டிலும், முழு உரிமையுடன் வாழ்வதையே ஆப்கானியர் பெரிதும் விரும்பினர் என்னும் உண்மையை அவர் உணராமல் செயலாற்றினார். ருஷ்யருடைய ஆதிக்கத் திற்குத் தடையாக அமைப்பதற்குரிய எல்லாவகையான பாதுகாவல் முறைகளிலும் தலைசிறந்தது ஆப்கானியருடைய சுதந்தர உணர்ச்சியே என்பதை அவர் அறிந்து போற்ற வில்லை. நடுக் கிழக்கு நாடுகளின் சூழ்நிலையையும் மக்கள் பண்புகளையும் உணர்ச்சிகளையும் அவர் அறிந்தவரல்லர். எனவேதான், அவர் இவ்வாறு தவறு செய்ய நேர்ந்தது என்று சாக்குப்போக்குச் சொல்லலாம். ஆனால், இது அவருடைய மற்றப் பொறுப்புகளிலிருந்தும் தவறுகளிலிருந்தும் அவரைக் குற்றமற்றவர் என்று காப்பாற்றுமா என்பது இங்குக் கருதத்தக்கதாகும். பெஷாவரைக் குறித்து தோஸ்து முகமதோடு இரஞ்சித் சிங்கை ஓர் உடன்பாட்டிற்கு வருமாறு தம்முடைய செல்வாக்கைப் பயன்படுத்திச் சீக்கியரை வற்புறுத்தாமல் போனது அவர் செய்த இரண்டாவது மாபெருங் குற்றமாகும். இதைத் தொடர்ந்து, அவர் முப்ப தாண்டுகளாகத் தலைமறைவாக வாழ்ந்துவந்த ஷாஷுஜாவை காபூலின் அரசுகட்டிலில் தோஸ்து முகமதிற்குப் பதிலாக, அரசராக அமர்த்துவது என்று முடிவுசெய்யப்பட்டது. அந்த ஷா ஷுஜா, நம்முடைய முதலாம் ஜேம்சைப்போல எப்பொழுதுமே முட்டாள்தனமானவற்றைச் சொல்லியதும் இல்லை; அறிவுடைய செயல்களைச் செய்ததும் இல்லை என்னும் பெருமையுடையவராக இருந்தார். முக்கூட்டு உடன்படிக்கை விதிகளின்படி இப் பொறுப்புகளிலிருந்து இரஞ்சித் சிங்கிற்குப் பெரும்பாலும் விடுதலை வழங்கியமை அவர் செய்த மற்றொரு தவறாகும். இதிலிருந்து பிரிட்டிஷாரே

முக்கியப் பொறுப்பினை ஏற்றுக்கொள்ளவேண்டிய பெருஞ் சுமை அவர்கள் தலையின்மீது வந்து வீழ்ந்தது; அதனுடன் ஹெராட் முற்றுகை கைவிடப்பட்ட பிறகு அதைக் காப்பாற்று வதற்காகவே மேற்கொள்ளப்பட்ட பல செயல்களையும் திட்டங்களையும் கைவிடாது, அவற்றை விடாப்பிடியாக அவர் தொடர்ந்து செயலாற்றியமை அவர் செய்த இறுதியான தவறுகும். ஆப்கானிஸ்தானத்தின் அரசியல் களிமண்ணினைக் கொண்டு மண்பாண்டங்கள் பலவற்றைச் செய்யும் திறமை மிக்க அரசியல் சூழ்ச்சித்திறன் வாய்ந்த குயவன் என்று அவர் தம்மைக் கருதிக் கொண்டார். ஆனால், உண்மை வேறு வகையாக இருந்தது. அவர்தாம் களிமண்ணுக இருந்தார்; அவருடைய அரசியல் ஆலோசகர்களே மண்பாண்டத்தை வனையும் குயவர்களாக விளங்கினர்.

அரசியல் சூழ்ச்சித்திறன் வாய்ந்த பேனுக்களின் மென்மை யான இயக்கத்தைத் தொடர்ந்து இப்பொழுது போரென்னும் இரும்பு முக்கியத்துவம் பெற்றது. அது முதலில் பெற்ற அலங்காரம் மிக்க வெற்றியையும், அடுத்துண்டான பேரழிவையும், இறுதியில் திரும்பப் பெற்ற வெற்றியையும் பதிவேட்டில் குறித்துவைக்க வேண்டியதாயிற்று. 1838ஆம் ஆண்டின் வேனிற்பருவத்தில் ‘சிந்துவெளிப் படை’ என்பது நிறுவப்பட்டது. 1838ஆம் ஆண்டின் டிசம்பர் மாதத்தில், முற்றுகையிடுவதற்காக அப் படை முன்னேக்கிச் சென்றது. அப்படையில் ஷா ஷூஜாவின் வீரர்கள் 6000 பேரையும் சேர்த்து, மொத்தம் 21,000 படை வீரர்கள் இருந்தனர். முதலில் எல்லாம் நன்மை பயக்கும் வகையிலேயே நடை பெற்றன. 1839ஆம் ஆண்டு, ஏப்ரல் மாதத்தில் காந்தகார் கைப்பற்றப்பட்டது; ஜூலையில் கஜனி கொள்ளையடிக்கப் பட்டது; ஆகஸ்டு மாதத்தில் காபூலுக்குள் பிரிட்டிஷாரின் படை நுழைந்தது. தோஸ்து முகமது தப்பியோடி மறைந்து கொண்டார். ஆனுல், அதற்குப் பிறகுதான் இடர்ப்பாடுகள் தொடங்கின. மக்களிடையே ஷா ஷூஜா செல்வாக்கற்றவ ராஞர்; அவருடைய வருகையை மக்கள் ஆதரிக்கவில்லை. நாட்டினைக்கட்டிக் காப்பதற்குரிய அளவிற்கு அந் நாட்டு மக்களிடையே ஆதரவாளர்களை அவரால் பெறமுடியாமல் போயிற்று. அதன் விளைவாக வங்காளத்திலிருந்து தளபதி காட்டன் தலைமையில் சென்றிருந்த வங்காளப் படை, ஷா ஷூஜாவிற்குப் பாதுகாப்பளிக்கும் துணைப்படையாகக் காபூலில் தங்கியிருக்க நேரிட்டது. அது ஆப்கனிஸ் தானத்தைக் கைப்பற்றிக்கொண்ட படையாகக் காணப்

பட்டது. அதன் விளைவாக ஆப்கானிஸ்தானத்தில் இரட்டையரசு அமைந்திருப்பதைப் போன்றதோர் எண்ணம் மக்களிடையே தோன்றியது. ஆப்கானிய அரசு ஒன்று, பிரிட்டிஷாரின் படையாட்சி மற்ருென்று என்று மக்கள் கருதினர். அயல் நாட்டினரின் படையுதவியையும் நம்பிக்கைக் கேடானவர்களின் ஆதரவையும் பெற்ற ஷா ஷூஜா தம்முடைய நிலையைக் காப்பாற்றிக்கொள்ளத்தான் முடிந்ததேயொழிய, வேறொன்றும் செய்ய இயலவில்லை. இவ்வாறு தம்முடைய பாதுகாப்பிற்காக அயல்நாட்டுப் படைக்குப் பொருள் கொடுத்து வந்தமையால் செல்வாக்கு அற்றிருந்த அவருடைய ஆட்சி மக்களுடைய வெறுப்புக்கு ஆளாகியது. அதன் பயனுக நாட்டிலே நிலையாக அமைதியற்ற நிலையும், இடையிடையே புதிய அரசுக்கெதிராகக் கலகங்களும் குழப்பங்களும் உண்டாகிக்கொண்டிருந்தன. இத்தகைய இடர்ப்பாடான நெருக்கடி நிலைக்கு முடிவுகாண ஒரேவொரு வழிதான் இருந்தது. 1840ஆம் ஆண்டு 'கில்சாயிகள்' கலகம் செய்தனர். அக் கலகத்தை மிகுந்த திறமையுடன் ஆங்கிலேயப் படை அடக்கியொடுக்கியது. அவ்வாண்டு நவம்பர் மாதத்தில் பிரிட்டிஷாரிடத்து தோஸ்து முகமது தாமே வந்து சரணடைந்தார். ஆனுல், நாட்டிலே தொடர்ந்து குழப்பமும் கொந்தளிப்பும் நிலவின; துணைப்படைக்குச் செலவிடப்பட்டுவந்த தொகை அதிகரித்துக்கொண்டே போயிற்று.[5] எனவே, தாயக அரசு ஆட்குறைப்புச் செய்யுமாறு கட்டளையிட்டது. இக் கட்டளையைச் செயற்படுத்தியபொழுது அறிவில்லாத வகையில் ஆப்கானியத் தலைவர்களுக்குப் படிகள் கொடுப்பதென்று முடிவுசெய்யப்பட்டது. ஆப்கானிய படைத் தலைவர்களுக்குப் புதிதாகப் படி கொடுப்பதைக்காட்டிலும், பிரிட்டிஷ் படையில் ஆட்குறைப்புச் செய்யாமல் இருந்திருந்தால் அது அறிவுடைய செயலாக அமைந்திருக்கும். கில்சாயிகள் மீண்டும் கலகம் செய்யத் தொடங்கினர்; பெஷாவரோடு தொடர்புடைய போக்குவரத்து வசதிகளையெல்லாம் அவர்கள் தடைப்படுத்தினர். 1841ஆம் ஆண்டு, நவம்பர் மாதம் 2ஆம் நாள் காபூல் நகரில் பர்ன்சுவைப் படுகொலை செய்ததன் மூலம் திறமையாகத் திட்டமிட்ட மற்ருெரு புரட்சி உண்டாயிற்று. அதைத் தொடர்ந்து, தோல்வியைப் பேரழிவாகும் பெருந்துன்ப நிகழ்ச்சியாகவும் மாற்றியதாக அடிக்கடி கதையாகச் சொல்லப்படும் மடத்தனமான செயல்களும், மன

[5] அச் செலவு குறைந்தது ஆண்டிற்கு 12,50,000 பவுன்கள் என்று மதிப்பிடப்பட்டுள்ளது.

உறுதிப்பாடில்லாத அதிகாரிகளின் போக்கும் நிகழலாயின. படைகளுக்குத் தலைமைதாங்கி நடத்திய தலைமைத் தளபதியான எலிபின்ஸ்டன் உள்ள உறுதியற்றவராகவும், ஆற்றலிழந்தவராகவும் இருந்தார். (அவரைத் தலைமைத் தளபதியாக அமர்த்துவதை அவர் வன்மையாக எதிர்த்தார்; ஆயினும், ஆக்லண்டு அவருடைய எதிர்ப்பைப்பற்றிக் கவலைப்படாது எலிபின்ஸ்டனையே தலைமைத் தளபதியாக அமர்த்தினர். இதுவும் ஆக்லண்டு செய்த தவறுகளுள் ஒன்ருகும்). அங்கு பிரிட்டிஷாரின் அரசியல் பிரதிநிதியாக இருந்துவந்த மாக்நாக்டன் (Magnagten) மனவுறுதியுடையவராக இருந்தார். அத்தகைய மிக நெருக்கடியான நேரத்திலும், அவர் பணத்தின் ஆற்றலையும், சூழ்ச்சித்திறத்தின் சிறப்பைப்பற்றியும் மிக அதிகமாக நினைத்துக்கொண்டிருந்தார். படைகளோ ஊக்கங் குலைந்தனவாகவும் திறந்த பாடிவீடுகளில் குளிரால் வாடுமாறு அடைக்கப்பட்டுமிருந்தன. அவற்றைப் பல ஹிஸ்ஸாரிலுள்ள சேமர அரணில் தங்கியிருக்குமாறு செய்திருக்கலாம். மாநாட்டில் கலந்துகொண்டிருந்த சமயத்தில் மாக்நாக்டன் அக்பர் கான் என்பவரால் படுகொலை செய்யப்பட்டார். 1842ஆம் ஆண்டு, ஜனவரி 2ஆம் நாள் நகரத்தைவிட்டு வெளியேறுவது குறித்து ஓர் உடன்படிக்கை செய்துகொள்ளப்பட்டது. ஜனவரி 6ஆம் நாள் பாடிவீடுகளிலிருந்து 16,000 படைவீரர்கள் இந்தியாவை நோக்கி அணிவகுத்துப் புறப்பட்டனர். ஜனவரி 13ஆம் நாள் டாக்டர் பிரைடன் என்ற ஒருவரே அப் பதினுருயிரம் விரர்களுள் உயிருடன் தப்பிப் பிழைத்து, ஜலாலாபாத்திற்கு வந்து சேர்ந்தார். மற்ற வீரர்கள் கில்சியர்களுடைய கொடுமைக்கும், ஆப்கானிஸ்தானத்தின் மிகக் கடுமையான குளிருக்கும் பலியாயினர். 1842ஆம் ஆண்டு, ஏப்ரல் மாதத்தில் எப்பொழுதுமே நற்பேறு வாய்க்கப்பெருத ஷாஷுஜா அவருடைய பங்காளி ஒருவரால் படுகொலை செய்யப்பட்டார்.

பிரிட்டிஷ்-இந்தியப் படையினருக்கு இதற்கு முன்பு எப்பொழுதுமே இத்தகைய பேரழிவும் பெருந்துன்பமும் உண்டானதில்லை. ஆனல், ஆக்லண்டு முதலில் கிலியும் மனமுறிவும் அடைந்தபோதிலும், பேரழிவு என்பது முழுமையானதாக அமையவில்லை என்பது உண்மையாகும். காந்தகார், கஜனி, ஜலாலாபாத் ஆகிய நகரங்கள் இன்னும் பிரிட்டிஷாரின் ஆதிக்கத்திற்குட்பட்டே இருந்தன; இரண்டு ஆண்டுகளுக்கு முன்னர் இரஞ்சித் சிங் இறந்தபோதிலும், சீக்கியரோடு கொண்டிருந்த நேச உறவு நீடித்துவந்தது. இத்தகைய சூழ்

நிலையில் முந்தைய நவம்பர் மாதத்தில் கவர்னர்-ஜெனரலாகப் பதவியில் அமர்த்தப்பட்ட எல்லன்பரோ பிரபு, 1842ஆம் ஆண்டு பிப்பிரவரி மாதம் இந்தியாவிற்கு வந்து சேர்ந்தார். ஆப்கானிஸ்தானத்தைக் காலி செய்துவிட்டுப் பிரிட்டிஷார் வெளியேறுவதைத் தவிர வேறு வழியில்லை என்பது இதனால் தெளிவாகப் புலனாயிற்று. இந்தியாவிற்குள்ளேயும் வெளியேயும் பிரிட்டிஷாரின் மதிப்புக் குறையாத வகையில் எவ்வாறு ஆப்கானிஸ்தானத்தைவிட்டு வெளியேறுவது என்பதே அவருக்குப் பிரச்சினையாக இருந்தது; மிகக் குறைந்த அளவில் தங்கள் மதிப்புக்கெட்டாலும் பரவாயில்லை; அதற்குரிய வழி யாது என்பதைப்பற்றி எல்லன்பரோ சிந்திக்கத் தொடங்கினார். எல்லன்பரோவின் செயல்முறைகள் ஒழுங்கற்றனவாகவும் நெறி தவறியனவாகவும் இருந்தன. ஆப்கானியரைக் 'கடுமையாகத் தாக்கி அச்சுறுத்திய பிறகே' ஆப்கானிஸ்தானத்தைவிட்டு வெளியேற வேண்டும் என்று அவர் முதலில் நினைத்தார். ஆனால், கஜனியைக் கைப்பற்றிக்கொண்டனர் ஆப்கானியக்காரர்கள் என்ற செய்தி அவருக்குப் பேரதிர்ச்சியைத் தந்தது. எனவே, அவர் உடனடியாக ஆப்கானிஸ்தானத்தைவிட்டு வெளியேறுமாறு பிரிட்டிஷ் படையினருக்குக் கட்டளையிட்டார். ஆனால், காந்தகாரில் இருந்த தளபதி நாட்டும் பொல்லாக்கும் பெஷாவாரிலிருந்து ஜலாலாபாத்தைச் சென்றடைந்ததோடு, ஆப்கானியக் கலகக்காரர்களின் கொட்டத்தை அடக்கியொடுக்கிவிட்டனர். அவர்கள் போக்குவரத்து வசதியில்லாமை குறித்து கவர்னர்-ஜெனரலிடம் முறையிட்டுக்கொண்டனர். அப்பொழுதுதான் எல்லன்பரோ தாம் செய்த தவற்றையுணர்ந்தார். ஆயினும், அத் தவற்றினை அவர் உரத்து ஒலிக்கிற தொடர்மொழிகளால் மூடி மறைத்துவிட்டார். 1842ஆம் ஆண்டு ஜூலை மாதத்தில் அவர் தம்முடைய கட்டளையை மீண்டும் பிறப்பித்தார். அதனுடன் காந்தகாரிலுள்ள தளபதி நாட்டிற்கு அனுப்பிய குறிப்பு ஒன்றில் திரும்பிவருவது இயலக்கூடிய செயலானால் உடனடியாகத் 'திரும்பி வருமாறு' அவர் குறிப்பிட்டிருந்தார். அவ்வாறு திரும்பி வருவதாக இருந்தால் போர்லன் கணவாய் வழியாக வராமல், கைபர் கணவாய் வழியாகவும் காபூல் வழியாகவும் திரும்பி வருமாறு அவர் தெரிவித்திருந்தார். அதே சமயத்தில் ஜலாலாபாத்திலிருந்த தளபதி பொல்லாக்கினை, நாட்டுடன் ஒத்துழைக்குமாறு அவர் அனுமதியளித்திருந்தார். இவ்வாறு செயலாற்றும் பொறுப்பு முழுவதும் படைத் தலைவர்கள்மீது சுமத்தப்பட்டது. அவர்கள் இதற்குமேல் எதுவும் கேட்கவில்லை. இரண்டு போர்களில் அக்பர்கானைத்

தளபதி பொல்லாக்கு படுதோல்வியடையுமாறு செய்தார்; செப்டம்பர் 16ஆம் நாள் அவர் காபூலைக் கைப்பற்றிக் கொண்டார். அதற்கடுத்த நாள் காந்தகாரிலிருந்து கஜனி வழியாக அணிவகுத்துவந்த தளபதி நாட்டு, பொல்லாக்குடன் சேர்ந்துகொண்டார். ஐரோப்பியச் சிறையாளிகள் சிறையிலிருந்து மீட்கப்பட்டனர். பிரிட்டிஷ் இந்தியப் படைகள் காபூலின் புகழ்மிக்க மாபெருங் கடைத்தெருவினைத் தாக்கியழித்த கொடுஞ்செயலாகிய களங்கத்தோடு தங்களுடைய வஞ்சத்தைத் தீர்த்துக்கொண்டன என்று கூறலாம். அக்டோபர் 12ஆம் நாள் பிரிட்டிஷ் படைகள் காபூலைவிட்டு வெளியேறின; கைபர் கணவாய் வழியாக இந்தியாவிற்குத் திரும்பி வந்தன. எல்லன்பரோ தம்முடைய பெருவிருப்பம் ஒன்றைத் தெரிவித்ததற்கு இணங்க, அவர்கள் கஜனி முகமதின் கல்லறையின் வாயிற்கதவுகளைத் தங்களுடன் எடுத்துவந்தனர். அந்தக் கதவுகள் 1025ஆம் ஆண்டு குஜராத்திலுள்ள சோமநாதர் ஆலயத்திலிருந்து கஜினி முகமதுவினால் எடுத்துச் செல்லப்பட்டவை என்ற ஒரு நம்பிக்கை இருந்துவந்தது. ஆனால், உண்மை வேறு வகையாக இருந்தது. கஜனி முகமதினுடைய கல்லறையின் கதவுகள் வேலைப்பாடும் நேர்த்தியுமற்றதாக இருந்ததோடு, காலத்தால் மிகவும் பிற்பட்டதாகவும் காணப்பட்டது. இத்தகைய புகழோடும், உச்சநிலைக்கு எதிரான செயல்களோடு முதல் ஆப்கானியப் போர் முடிவடைந்தது. இப்பொழுது தம்முடைய தாயகத்திற்குத் திரும்பிவருமாறு தோஸ்து முகமது அனுமதிக்கப்பட்டார். அவர் விரைவிலே தம்முடைய ஆதிக்கத்தைத் திரும்ப நிலைநாட்டினர். ஆனால், 1863ஆம் ஆண்டில் அவர் இறந்துவிட்டார். அவர் இறக்கின்றபொழுது அவருக்கு எண்பது வயது. ஆயினும், அப்பொழுதும் அவர் அதிகாரமிக்க அரசராகவே இருந்து மறைந்தார். முதல் படையெடுப்பின்பொழுதும், அதையடுத்து உண்டான பேரழிவுகளின்பொழுதும் ருஷ்யா முனைப்பற்றிருந்தமையும், அச் சூழ்நிலையைத் தனக்குப் பயன்தரும் வகையில் பயன்படுத்திக் கொள்ள அது முன்வராமையும், 'ருஷ்யாவின் அச்சுறுத்தல்' என்று ஆக்லண்டு கருதியது எத்துணையளவிற்குப் பொருத்தமற்ற தப்புக் கணக்கு என்பதை உலகிற்கு அறிவித்தது எனலாம்.

### ஆதாரங்கள்

பர்மாவுடன் ஆங்கிலேயர் கொண்டிருந்த தொடர்பினைப் பற்றி அறிவதற்குப் பின்வரும் நூல்களைக் காண்க:

(1) ஜீ. இ. ஹார்வி: 'History of Burma to 1824 (1925). (2) ஜி. டி. இ. ஹால்: (a) 'Dalhousie—Phayre Correspondence 1852-56' (1932). (b) 'Early English Intercourse with Burma' (1928). (3) எச். எச். வில்சன்: 'Documents Illustrative of the First Burmese War' (1827). (4) சர் லீ-வார்னர்: 'Life of the Marquis of Dalhousie' (2 தொ. 1904). (5) மேஜர் ஜே. ஜே. சுனோட்கிராஸ்: 'The Burmese War' (1827).

வடமேற்கு எல்லைப்புறத்து நிகழ்ச்சிகளை விரிவாக அறிவதற்குப் பின்வரும் நூல்களைக் காண்க:

(1) எலிபின்ஸ்டன்: 'Account of the Kingdom of Cabul' (1815). (2) J. W. கேயே: 'History of the War in Afghanistan' (3 தொகுதி). முதன்முதல் 1851-ல் வெளியிடப்பட்டது. இது மிக முதன்மையான ஆதார நூலாக இருந்து வருகிறது. (3) தீய நோக்கத்துடன் எடுத்துக்காட்டப்பட்ட பாராளுமன்ற 1839ஆம் ஆண்டு நடைமுறைக் குறிப்பு நூல், பர்ன்சினுடைய கடிதங்களின் முக்கியமான பகுதிகள் இருட்டடிப்பு செய்யப்பட்டிருக்கின்றன என்பதை வெளிப்படுத்திய பிறகு, 1859-ல் திருத்தியமைக்கப்பட்ட புதிய பதிப்பு வெளியிடப்பட்டுள்ளது. (4) சர். ஏ. காலின்: ஜான் ரஸ்ஸல் காலின் (இந்திய ஆட்சியாளர் வரிசை 1905).

இந் நூலில் அதன் ஆசிரியர் தம்முடைய தகப்பனுரே போருண்டாவதற்குக் காரணம் என்னும் கருத்தினைத் தெளிவுபடுத்த முயன்றுள்ளார்.

ஆப்கானிய, பாரசிக நாட்டு நிகழ்ச்சிகளை அறிவதற்குப் பின்வரும் நூல்களைக் காண்க:

(1) பி. சைக்ஸ்: (a) 'History of Persia' (2 தொ. 1920). (b) 'History of Afghanistans' (2 தொகுதி 1940). (2) ஏ. பர்னசு: (a) 'Travels into Bokhare...' (3 தொகுதி 1834). (b) 'Travels into Cabool' (1842). இது அவருடைய வாழ்க்கை நிகழ்ச்சிகளை விரித்துரைப்பதாகக் காணப்படுகிறது.

# 4. சிந்துவும் பஞ்சாபும்

## 1. சிந்து

இதுவரையில் தனிப்பட்ட இயற்கைச் சூழ்நிலையுடைய தாகச் சிந்து இருந்துவந்தமையால், இந்தியாவின் அரசியல் நிகழ்ச்சிகள் அனைத்திலும் மிகச் சிறிய பங்கினையே இது வரையில் அது ஏற்க முடிந்தது. நெடுங்காலமாக அது முகலாயர்களுடைய மாநிலங்களுள் ஒன்ருக இருந்துவந்தது. பேரரசர் அக்பர் பிறந்த ஊராகிய உமர்கோட் அங்கிருந்தமை, அம் மாநிலம் பெற்ற புகழிற்கும் செல்வாக்கிற்கும் உரிய காரணமாக அமைந்தது. தாட்டா துறைமுகத்தின் வழியாக அது செய்துகொண்டிருந்த வாணிகமும் பஞ்சாப், தென் ஆப்கானிஸ்தானம் ஆகிய பகுதிகளில் கிடைக்கும் குறிப்பிட்ட சில வாணிகப் பொருள்களிலேயே நடைபெறவேண்டிய கட்டுப்பாடு இருந்துவந்தது. இக் காரணத்தினுல்தான், கிழக்கிந்தியக் கம்பெனியின்மூலம் சிந்து மாநிலத்தோடு பிரிட்டிஷார் எத்தகைய தொடர்பும் கொள்ளாமல் போயினர். அவ்வாறு தொடர்பு கொள்வதனுல் கிடைக்கக்கூடிய ஆதாயமும் கணிசமானதாக இருக்காது என்று கருதப்பட்டது. 1758-ல் தொழிற்சாலை ஒன்று மீண்டும் திறக்கப்பட்டது. ஆனுல், 1775-ல் அதை மீண்டும் மூடிவிடவேண்டிய நெருக்கடி உண்டாயிற்று. அங்கு வாணிகம் செய்யவேண்டும் என்ற உள்ள உறுதிப்பாடு மிகுதியாகவே ஆங்கிலேயரிடத்து இருந்து வந்தது. ஆனுல், அங்கு வாணிகம் செய்வதற்குரிய வாய்ப்பு வசதிகளோ மிகக் குறைவாக இருந்தன. வடமேற்கு எல்லைப் புறப் பகுதி மிகவும் அமைதி நிலவும் பகுதியாக மாறிய பின், அப் பகுதியில் வாணிகம் செய்யவேண்டும் என்னும் ஆவல் ஆங்கிலேயருடைய உள்ளங்களில் புத்துயிர்ப்புப் பெற்றது. எனவே, 1799ஆம் ஆண்டு தால்புராவின் புதிய அமீர்களிடத்து நல்லெண்ணத் தூதர் குழு ஒன்று அனுப்பப்

பட்டது. ஆனால், அம் மாநிலத்தில் மிகுந்த அமைதி நிலை நாட்டப்பட்டமையால், அப் பகுதியை ஆண்டவர்கள் பிரிட்டிஷாரிடத்து அளவுமீறிய ஐயுறவு கொள்ளத் தலைப்பட்டனர். எனவே, அத் தூதர் குழு திடீரென்று செயலற்றுப்போய் விட்டது.

அந் நூற்றாண்டு முடிவடைவதற்குள் மந்தமான ஆர்வத்தோடு வாணிகத்தில் ஈடுபட்டிருந்த கம்பெனியினை, அரசியல் ஊக்கிகள் புத்துணர்ச்சிபெற்று எழுமாறு தூண்டின. நாட்டிலே ஃபிரெஞ்சுக்காரரின் பூச்சாண்டி மெல்ல மறைந்து போயிற்று. அதுமுதல் சிந்து மாநிலத்திடத்து பிரிட்டிஷார் இரு வகையான ஆர்வத்தோடு அதை அணுகலாயினர். அம் மாநிலததின் சூழ்நிலை அமைதிமிக்க நிலைபேறுடையதாக விளங்கியமையால், அதை வாணிக நிலைக்களனாக அமைக்க வேண்டும் என்னும் அவா ஆங்கிலேயரிடத்து அரும்பியது. அத்துடன் வடமேற்கு அரசியல் ஆதிக்கத்தில் ஓர் எதிர்ப்புச் சக்தியாகச் சிந்துவைப் பயன்படுத்திக்கொள்ளவேண்டும் என்றும் அவர்கள் கருதினர். 1809ஆம் ஆண்டு மின்ட்டோ பிரபுவினுடைய அரசியல் சூழ்ச்சித் திறன்வாய்ந்த நட்புறவுத் தூதர் குழு ஒன்றினைச் சிந்து வரவேற்றது. (அவற்றுள் ஒரு தூதர் கவர்னர்-ஜெனரலின் அறிவிப்புகளுக்கு மேற்பட்ட நிலையில் போயினமையால், அவரைத் திருப்பி அழைத்துக் கொண்டனர்.) அத் தூதர் குழுவினரின் முயற்சியினால் ஓர் உடன்படிக்கை செய்துகொள்ளப்பட்டது. அமீர்களோடு ஆங்கிலேயர் செய்துகொண்ட அவ் உடன்படிக்கையின்படி, சிந்து மாநிலத்தில் ஃபிரெஞ்சியர் குடியிருப்புகளையோ, வாணிக நிலையங்களையோ அமைக்க அனுமதி தருவதில்லை என்று அமீர்கள் உறுதிமொழியளித்தனர். இவ் உடன்படிக்கை 1820ஆம் ஆண்டில் மீண்டும் புதுப்பிக்கப்பட்டது; அதில் புதிதாக ஒரு துணைவிதி சேர்க்கப்பட்டது; ஐரோப்பிய, அமெரிக்க நாடுகளில் யாதாகிலும் ஒன்றுக்குக்கூட அங்கு வாணிகத் தளம் அமைப்பதற்கு அனுமதி அளிக்கக்கூடாது என்பதே அத் துணைவிதியாகும். 1825ஆம் ஆண்டில் கோசர்களைத் (Khosa) தண்டிப்பதற்காக நடைபெற்ற படையெடுப்பின் பொழுது ஜேம்ஸ் பர்ன்சு[1] என்பவர் சிந்து மாநிலத்திலுள்ள ஐதராபாத்திற்குச் சென்றுவர ஒரு வாய்ப்புக் கிடைத்தது. சிந்துவினைப்பற்றிய விளக்கவுரை ஒன்றினை அவர் முதன்

[1] காபூலுக்குச் சென்ற தூதர்களுள் பெரும்புகழ் வாய்ந்த அலக்சாண்டரின் சகோதரர் இவர்.

முதலாக ஆங்கிலத்தில் எழுதி வெளியிட்டார். இது முதல் சிந்துவை வாணிகப் பெருவழியாக்குவதற்குரிய வழிமுறை களைப்பற்றிப் பல கருத்துகள் அடிக்கடி வெளியிடப்பட்டு வந்தன. அத்தகைய மாபெரும் நதி ஒன்று பயன்படுத்தப் படாது வீணாக ஓடிச்சென்று கடலில் கலக்குமாறு விடக்கூடாது என்று ஆங்கிலேயர் கருதலாயினர். ஆனால், அவ்வாற்றின் பெரும்பகுதி பாலைநிலத்தின் வழியாகப் பாய்ந்து செல்வ தனால், வாணிகப் பொருள்களை எங்கிருந்து கொண்டுவருவது என்ற பிரச்சினை எழுந்தது. இன்னும் பஞ்சாப் மாநிலம் உழவுத் தொழில் செய்யப்படாத தரிசுநிலக் காடாகவே இருந்துவந்தது. இதையெல்லாம் அவர்கள் யாரும் தெளி வாகச் சிந்தித்ததாகத் தெரியவில்லை. சிந்துவில் உருண்டோடும் வெள்ளப்பெருக்கினை நினைத்தவுடன், எளிதிலே கற்பனையைத் தூண்டிவிடக்கூடிய இயல்பு வாய்ந்த எல்லன்பரோ பிரபுவின் உள்ளத்தில் சிந்து நதியினை வாணிகத்திற்கு எப்படியாகிலும் பயன்படுத்திக்கொள்ள வேண்டும் என்ற எண்ணம் ஆற்ற லுடையதாக விளங்கியது.[1] 1831ஆம் ஆண்டில் அலக் சாண்டர் பர்ன்சு அவ் ஆற்றினை ஒட்டிப் பயணம் செய்து, இரஞ்சித் சிங்கைக் கண்டு, அவருக்கு வண்டியிழுக்கும் ஆங்கிலேயக் குதிரைகளை அன்பளிப்பாக அளித்துவிட்டு வந்தார்.[2] 'ஐயோ! சிந்து நதியை ஆங்கிலேயர் கண்ட வுடனேயே சிந்து பறிபோயிற்றே' என்று சிந்தி சாயித் என்பவர் குறிப்பிட்டார். அவர் கூற்று உண்மை என்பதனை அந்நிகழ்ச்சியே மெய்ப்பித்தது.

சிந்து மாநிலத்தைப் பற்றிய சிறிதளவு அறிவு ஆங்கிலேய ரிடையே பரவியதன் விளைவாக, அதனிடத்து ஆங்கிலேயர் கொண்ட ஆர்வம்மேன்மேலும்பெருகிவளரலாயிற்று. சீக்கிய, பிரிட்டிஷாருடைய, ஆப்கானியருடைய முக்கூட்டு அரசியல் முயற்சிகள் அனைத்திலும் சிந்து இதுமுதல் ஒரு விளையாட்டுப்

[1] 1828-30ஆம் ஆண்டுகளில் எல்லன்பரோ கட்டுப்பாட்டுக் கழகத்தின் தலைவராக இருந்தார். அப்பொழுது, பெண் டிங் பிரபுவை இந்த நற்பணியில் ஈடுபடுமாறு அவர் வற்புறுத்தினர்.

[2] வண்டி இழுக்கும் குதிரைகளை இரஞ்சித் சிங் போற்றாமல், பெரு வியப்போடு பேணிவந்தார். பஞ்சாபில் உள்ள குதிரை இனங்களைக் காட்டிலும் இவை பெரியனவாகவும், ஆனால், ஊர்ந்து செல்வதற்குப் பொருந்தாதனவாகவும் இருந்தன. அவற்றிற்கு அளவுகடந்து தீனி போட்டு வந்தமையால், அவை இறந்துபோயின.

பொருளாக இடம் பெறலாயிற்று. இம் மூவரிடத்திலும் சிந்துவின் அமீர்கள் ஆழ்ந்த ஐயுறவு கொள்ளலாயினர். அவர்கள் தனிப்பட்ட வகையில் எவரையும் எதிர்த்துப் போரிடுவதற்குரிய ஆற்றலற்றவர்களாக இருந்தனர். எனவே, அவர்கள் அம் மூன்று சக்திகளுக்குள் ஒன்றினை மற்றொன்றோடு மோதுமாறு நெருக்கடிகளை உண்டாக்கிவந்தனர். உடனடியாக இரஞ்சித்சிங்கினால் சிந்து மாநிலத்திற்கு இடர்ப்பாடு உண்டாயிற்று. அவர், ரூபரிலிருந்த பென்டிங்கிடம் சிந்து மாநிலத்தை இரண்டு பெரும் பிரிவுகளாகப் பிரித்துவிடலாம் என்ற கருத்தைத் தெரிவித்தார். ஆனால், அமைதியை நாடிய அரசியல் விரகரான அவர், இரஞ்சித் சிங் தெரிவித்ததைப் போன்று சிந்து மாநிலத்தைத் துண்டுபோட உடன்படாது அவர் கருத்தை மறுத்துவிட்டார். இவ்வாறு 1831ஆம் ஆண்டு முதல் 1838ஆம் ஆண்டுவரை சீக்கியரிடமிருந்து அமீர்களைக் காப்பாற்றும் உண்மைக் காவலர்களாக பிரிட்ஷார் விளங்கலாயினர். இரஞ்சித் சிங் கூறிய அறிவுரையின் விளைவாக, 1832ஆம் ஆண்டில், ஆங்கிலேயருக்கும் அமீர்களுக்கும் இடையே ஓர் உடன்படிக்கை செய்துகொள்ளப் பட்டது. அங்கிருந்த துணைக்காப்பரசின் முதல் ஆளுநரான கர்னல் ஹென்றி பொட்டிங்கார் அவ் உடன்படிக்கை செய்யப் படுவதற்குரிய முயற்சிகளை மேற்கொண்டார். இந்த உடன் படிக்கையின் படி, சிந்து நதி வாணிகத்தின் பொருட்டுத் திறந்து விடப்பட்டது. ஆனால், அவ் உடன்படிக்கையின் முக்கிய விதியாக ஒன்று அமைக்கப்பட்டது. எக் காரணத்தை முன்னிட்டும் படைக்கலன்களைத் தாங்கிய கப்பல்கள் சிந்து நதியின் வழியாகச் செல்லக்கூடாது; அல்லது இராணுவத் தளவாடங்கள் அவ்வாற்றின் வழியாக அனுப்பப்படக்கூடாது என்னும் விதியொன்று அவ் உடன்படிக்கையில் முக்கியத் துவம் வாய்ந்ததாகக் காணப்பட்டது.[1] அமீர்களுடைய அச்சம் வெளிப்படையாக ஒரு விதியில் எடுத்துரைக்கப்பட்டதோடு, அதைப் போக்குவதற்கு மேற்கொள்ளவேண்டிய நெறி முறைகளையும் பின்வருமாறு குறிப்பிடப்பட்டது: ‘உடன் படிக்கை செய்துகொள்ளும் இரண்டு கட்சியினரும் ஒருவர் மற்றொருவருடைய வள ஆதாரமிக்க உடமைகளைத் தாங்கள் கைப்பற்றிக்கொள்ளவேண்டும் என்னும் பேராசையுடன்

[1] வாணிகப் பொருள்களுக்குச் செலுத்தவேண்டிய சுங்க வரியைக் குறித்து 1834ஆம் ஆண்டு ஒரு துணை உடன் படிக்கை செய்துகொள்ளப்பட்டதன்மூலம் அவ் வரிவீதம் வரையறுக்கப்பட்டது எனலாம்.

நோக்குவதில்லை என்ற கட்டுப்பாட்டிற்குக் கட்டுப்பட்டு நடக்க வேண்டும்.' பிற்காலத்தில் சிந்து மாநிலத்தில் பிரிட்டிஷார் செயற்படுத்திய ஆட்சிமுறைக் கொள்கையில் காணப் படும் முதல் தவறு, 1832ஆம் ஆண்டில் செய்யப்பட்ட உடன்படிக்கையில் அமீர்களுக்குக் கொடுத்த உறுதிமொழியை அவர்கள் ஒருதலைச் சார்பாகக் காற்றில் பறக்கவிட்டமையே யாகும்.

இவ்வாறு 1838ஆம் ஆண்டுவரை சிந்துவின் நிலை இருந்து வந்தது. ஷா ஷுஜாவை ஆப்கானிய அரசுகட்டிலில் ஏற்றி முடிசூட்டவேண்டிய பொறுப்பு பிரிட்டிஷாரைச் சார்ந்ததே யென்று என்றைக்கு ஆக்லண்டு பிரபு தீர்மானம் செய்தாரோ, அன்றே ஆப்கானிஸ்தானத்திற்குச் செல்லுவதற்குரிய வழி (பஞ்சாபில் சீக்கியர் இருந்தமையால் அவ் வழி கைவிடப் பட்டது) சிந்து மாநிலமும் போலன் கணவாயுமே என்று கருதப்பட்டது. எனவே, 1832ஆம் ஆண்டு செய்யப்பட்ட உடன்படிக்கையைப் புறக்கணித்துவிட்டு, படைகளைச் சிந்துவின் வழியாக ஆப்கானிஸ்தானத்திற்கு ஆங்கிலேயர் அனுப்பிவைத்தனர். அதுமட்டுமல்லாமல் அமீர்களை ஷாவிற்குத் திறைப்பொருள் நிலுவையைச் செலுத்துமாறு ஆக்லண்டு வற்புறுத்தினர். இங்கு ஓர் உண்மையை மறந்து கவர்னர்-ஜெனரல் செயலாற்றினர் என்றே கூறவேண்டும். 1833-ல் ஷாவிற்கும் அமீர்களுக்கும் இடையே நடைபெற்ற உடன்படிக்கையில், ஷாவிற்குச் செலுத்தப்படாமல் நின்று போன திறைப்பொருளைத் தமக்குச் செலுத்தவேண்டாம் என்று வெளிப்படையாகவே ஷா குறிப்பிட்டிருந்தார். அதை ஆக்லண்டு அடியோடு புறக்கணித்துவிட்டார். அதனுடன் 1839ஆம் ஆண்டு புதியதோர் உடன்படிக்கை செய்து கொள்ளுமாறு அவர் அமீர்களை வற்புறுத்தினர். சிந்துவில் துணைப்படை ஒன்றை ஆங்கிலேயர்கள் நிறுவப்போவதாகவும், அதற்காக அமீர்கள் பிரிட்டிஷ் இந்திய அரசுக்கு ஆண்டு தோறும் மூன்று இலட்சம் பவுன்கள் திறை செலுத்தவேண்டும் என்றும் அவர் அவ் உடன்படிக்கையில் ஒரு விதியினை அமைத்து, அதற்கு அமீர்களை உடன்படுமாறு வன்முறைச் செயல்களின் மூலம் (இவ் உடன்படிக்கை பிரிட்டிஷாருக்கு நன்மை பயக்கத்தக்க வகையில் பிற்காலத்தில் திருத்தி யமைக்கப்பட்டது) வற்புறுத்தினர். 'ஆயத்தமாக இருக்கும் படையினைக்கொண்டு அவர்களை அடக்கியொடுக்கவும், அடியோடு அழித்தொழிக்கவும் தேவைப்பட்டால் தவருமல் செய்வோம் என்றும், ஆங்கிலேய இந்தியப் பேரரசிற்கு

அல்லது அதன் எல்லைப்புறப் பகுதிக்கு ஆபத்து உண்டாகும் அமீர்களால் என்று தோன்றினாலும் அப் படை அவர்களுக்கு உதவிபுரியும்' என்றும் ஆக்லண்டு அமீர்களுக்கு அறிவித்தார். இந்தச் சமயத்தில் ஆக்லண்டு செய்த உறுதியற்ற செயல்களுள் இது மிகவும் மன்னிக்கமுடியாத குற்றமுடைய செயலாகும். தாம் முதலில் தவறுதலாகத் தீர்மானித்தவற்றின் விளைவுகளை மறைக்க முயன்ற பலவீனமான (அறவொழுக்கத்திலும் ஆற்றலிலும்) மனிதரான ஆக்லண்டு இந்த அளவிற்கு மட்டமாக நடந்துகொள்ளலானார். இவ்வாறு தோஸ்து முகமதுவிற்கு எதிராக நடத்தப்பட்ட படையெடுப்பின்பொழுது சிந்து படைத்துறை நிலைக்களனாக மாற்றப்பட்டது.

ஆப்கானிய 'நிகழ்ச்சியின்' முடிவிற்குப் பிறகு சிந்துவில் நிறுத்தப்பட்டிருந்த படைகளைத் திரும்ப அழைத்துக்கொள்ளுவதன்மூலம், அவர் இழப்பீடு செய்திருக்கலாம். ஆனால், அந் நிகழ்ச்சி பேரழிவில் முடிவுற்றது. மேலும், ஆக்லண்டிற்குப் பிறகு பதவிக்கு வந்த எல்லன்பரோவின் ஆட்சியில் அமுராத் முதல் அமுராத்வரை அது வெற்றியும் பெற்றது. பேரழிவை உண்டாக்கிய துணிச்சல்மிக்க செயலில் நாட்டு, பொல்லாக் என்போர் பெற்ற வெற்றிகள், விடைபெறும் சமயத்தில் தாக்கிய இரு தாக்குதல்களேயொழிய வேறொன்றும் இல்லை. வெற்றியோடு திரும்பிவந்ததனால் கிடைத்த புகழைக் காட்டிலும், உருப்படியான சிறந்த புகழினைப் பெறவேண்டும் என்ற புகழ் வேட்கையுடையவராக எல்லன்பரோ இருந்தார். எனவே, அங்கு நாட்டைக் கைப்பற்றித் தம்மரசுடன் இணைத்துக்கொள்ளுவதாகிய சுவைமிக்க இறுதி நாடகம் நடத்தப்பட்டது. ஆப்கானியப் போரின்போது அமீர்கள் நட்புறவுடையவர்களாக நடந்துகொள்ளவில்லை என்ற (அவர்கள் வேறு எவ்வாறு நடந்துகொள்ளமுடியும்?) சொத்தைக் காரணத்தைக் காட்டி, 1839ஆம் ஆண்டில் கைப்பற்றப்பட்ட கராச்சி, சுக்கூர், புக்கூர் ஆகியவற்றையாகிலும் தங்களிடத்திலே நிறுத்திக்கொள்ளுவது நல்லதென்று அவர் கருதினார். ஐதராபாத்தில் இருந்துவந்த உயர்ந்த பண்பாடும் ஒழுக்கமும் வாய்ந்த துணைக்காப்பரசின் ஆளுநரான ஜேம்ஸ் அவுட்ராம் இதற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்வதற்குமுன்பே, அவரைத் தள்ளிவைத்துவிட்டு, சர் சார்லஸ் நேப்பியர் என்பாருக்கு 1842ஆம் ஆண்டு செப்டம்பர் மாதத்தில் முதன்மையான படைத்துறை அதிகாரமும் அரசியல் கட்டுப்பாட்டு அதிகாரமும் வழங்கி, அவரைச் சிந்துவிற்கு கவர்னர்-

ஜெனரல் அனுப்பிவைத்தார். ஆக்லண்டிடத்து இருந்த விழிப் புணர்ச்சியில் சிறிதளவுகூட இயல்பாகப் பெற்றிராத, ஆனால், அவையெல்லாம் தம்மிடத்து மிகுதியாக இருப்பதாகக் கருதிய பித்துக்கொள்ளியும் வீம்புமிக்க வீரருமான நேப்பியர் தற் பெருமையுடையவராவார். அவர் தம்முடைய நாட்குறிப்பில், 'சிந்துவைக் கைப்பற்ற நமக்கு எத்தகைய உரிமையும் கிடை யாது' என்று எழுதினார். 'ஆயினும், நாம் அவ்வாறு செய் கிறோம்; அது நன்மை தரத்தக்க, பயனுள்ள, போக்கிரித் தனத்தின் மனிதாபிமானமுள்ள சிறியதொரு துணுக்காகும்' என்று அவர் தொடர்ந்து எழுதியுள்ளார். அமீர்களோடு புதிய உடன்படிக்கை செய்துகொள்ளப்பட்டது. அதன்படி அவர்கள் தங்கள் அரசின் பெரும் பகுதியை, பிரிட்டிஷா ரிடத்து ஒப்படைத்தனர்; சிந்து நதியில் செலுத்தப்படும் நீராவிப் படகுகளுக்கு வேண்டிய எரிபொருள்களைத் தந்துதவும் பொறுப்பினை அவர்கள் ஏற்றுக்கொண்டனர். இறுதியாக, நாணயங்களை அச்சிட்டு வழங்கும் உரிமை அமீர்களுக்கு இருந்துவந்ததை இவ் உடன்படிக்கையின்மூலம் ஆங்கிலே யர்கள் பறித்துவிட்டனர். அதன்பிறகு நேப்பியர் நடந்து கொண்ட முறை வியப்பையளிப்பதாகும். அமீர்கள் ஏதோ மேற்கண்ட உடன்பாட்டிற்கு வர மறுத்ததைப்போன்ற தவறான எண்ணத்துடன் அவர், தங்களுக்குத் தருமாறு பிரிட்டி ஷார் அவர்களிடம் கோரிய நாட்டுப் பகுதியைக் கைப்பற்றிக் கொண்டார்; பாலைவனக் கோட்டையாகிய இமாம்காரினை அவர் இடித்துத் தரைமட்டமாக்கினார். அவுட்ராமினுடைய முயற்சிகளினால், அமீர்கள் நேப்பியருடைய செயல்களினால் தங்களுக்குண்டான துன்பத்தையும் இழப்பையும் பொருட் படுத்தாது அவ் உடன்படிக்கையில் கையெழுத்திட்டனர். ஐதராபாத்திலிருந்த துணைக்காப்பரசின் ஆளுநரைத் திடீ ரென்று தாக்கிக் குழப்பம் உண்டாக்கியமை நேப்பியருக்குத் தூண்டுகோலாக அமைந்தது. 1843ஆம் ஆண்டு பிப்பிரவரி மாதம் மியானி என்னும் இடத்தில் அமீர்கள் தோற்கடிக்கப் பட்டனர். பின்னர் அவர்கள் நாடு கடத்தப்பட்டனர்;[1] சிந்து மாநிலத்தை ஆங்கிலேயர் கைப்பற்றித் தங்கள் அரசுடன் இணைத்துக்கொண்டனர். சிந்துவினை முரட்டுத்தனத்துடனும் ஊக்கத்துடனும் ஆட்சிபுரிவதற்காக நேப்பியர் நான்கு ஆண்டுகள் சிந்துவிலேயே தங்கியிருந்தார். சிந்துவின் அரசியல் செயல்முறைகளில் ஆங்கிலேயர் பின்பற்றிவரும் கொள்கையை எதிர்த்துப் பேச அவுட்ராம் இங்கிலாந்திற்குத்

[1] கெய்ர்பூரின் தலைவர் (மீர்) ஒருவரே தப்பியோடினார்.

திரும்பிவந்தார். அவர் கம்பெனி இயக்குநர்களிடத்து ஆதரவைப் பெற்றபோதிலும், காலம் கடந்துவிட்டமையால், கடந்த காலத்தில் நடைபெற்ற செயல்களை அழித்தொழிக்க முடியாத அவலநிலைக்காளானூர். தாங்கள் வன்முறையில் சிந்துவினைக் கைப்பற்றிக்கொண்ட பாவத்திற்குக் கழுவாய் தேடுவதற்கு சிந்து மாநிலத்தை நல்ல முறையில் ஆட்சி புரிவதைத் தவிர வேறு வழியில்லாமல்போயிற்று.

பத்தொன்பதாம் நூற்றுண்டின் பிரிட்டிஷாருடைய வரலாற்றில், சிந்துவில் நிகழ்ந்த நிகழ்ச்சிகள் முழுவதும் சிறிதும் பெருமை தரத்தக்க செயல்களாக அமையவில்லை. 1832ஆம் ஆண்டு செய்யப்பட்ட உடன்படிக்கையை நேர்மையற்ற முறையில் அவர்கள் வெளிப்படையாகவே மீறினர். அதையடுத்த ஆண்டுகளில் படைபலத்தைக் காட்டி அச்சுறுத்தி, பல செயல்களைத் தாங்கள் நினைத்தவண்ணமே தங்களுக்கு நன்மை தரத்தக்க வழியில் அவர்கள் சாதித்துக் கொண்டனர். இறுதிப் போராட்டத்திற்குப் பித்துக்கொள்ளித்தனமாகத் தூண்டிவிட்டவர்களும் ஆங்கிலேயர்களேயாவர். இவ் இருபதாம் நூற்றுண்டில் இத்தகைய செயல்களைச் செய்தால் அதனை '·ஃபாசிசப் போக்கு' (Fascism) என்னும் பெயரால் குறிப்பிடும் வழக்கம் நம்மிடையே இருந்துவருகிறது. சிந்துவில் ஆங்கிலேயர்கள் செய்த அட்டூழியங்களுக்குப் பழைய பெயர் பொருத்தமாகவில்லை; ஆனுல், 'ஃபாசிசப் போக்கு' எனும் புதிய பட்டமே மிகப் பொருத்தமாக இருக்கிறது என்று கூறலாம். ஆனுல், பொது நீதியைப் போற்றிப் பாராட்டும் இதே சமயத்தில், சிந்து மாநில அரசியலில் சிக்கிக் கொண்டிருந்த பெரிய நடைமுறைப் பிரச்சினைகளை நாம் மறந்துவிடக்கூடாது. இந்தியாவின் பிற பகுதிகளைப் போன்றே சிந்து மாநிலமும் மேலைநாட்டுச் செல்வாக்கிற்குட்படுமாறு செய்யப்படுவதற்குக் காலமெனும் நீரோட்டத்திஞல் இழுத்துச் செல்லப்பட்டது. இந் நடைமுறைச் செயல் துருக்கி அல்லது சையாமில் நடைபெற்றதைப்போன்று இங்கும் உள்ளூரத் தாஞகவே தோன்றியது எனலாம்; அல்லது இந்தியத் தனியரசுகள் காக்கப்பெற்றதன்மூலம் அவற்றில் இம் மாற்றம் உண்டானதைப் போன்ருே, அவற்றைக் கைப்பற்றி இணைத்துக்கொண்டதஞல் இம் மாற்றம் உண்டானதைப் போன்ருே சிந்துவிலும் மாற்றமுண்டாயிற்று என்று கூறலாம். மேற்கண்ட மாற்று வழிகளில் முதல் மாற்று வழியைப் பின்பற்ற முடியாமல்போனமைக்கு அமீர்களின் ஆற்றலற்ற தன்மையே காரணமாகும்.

ஆக்லண்டு, நேப்பியர் ஆகியோருடைய வெறுப்பு மனப் பான்மை மூன்ருவது முறை வன்மையாகக் கண்டிக்கத்தக்க வடிவிலே உருக்கொள்ளலாயிற்று. சிந்துவினுள் மேலை நாட்டுச் செல்வாக்கு நுழையலாமா, நுழையக்கூடாதா என்பதன்று பிரச்சினை. ஆனல், அது எவ்வாறு நுழைக்கப் படுவது என்பதுதான் பிரச்சினையாக எழுந்தது. மேலை நாட்டுச் செல்வாக்கினை அதன்மீது சுமத்திய முறையை நாம் வன்மையாகக் கண்டிக்கலாம்; ஆனல், அதே சமயத்தில், உலகிலிருந்து சிந்து தனித்து நிற்க இயலாது என்பதையும் நாம் உணர வேண்டும்; அதனுடைய மிகச் சிறந்த நலத்தையும் நல்வாழ்வையும் குறிக்கோளாகக்கொண்டு நோக்குவோமானல், அவ்வாறு அது தனித்து நின்றிருந்தால், அதனல் அதற்கு எத்தகைய பயனும் உண்டாகியிராது என்பதும் இங்குக் குறிப்பிடத்தக்கதாகும்.

## 2. பஞ்சாப் மாநிலம்

இந் நூலின் இரண்டாம் பகுதியில் சீக்கிய இயக்கத்தின் எழுச்சியைப்பற்றியும், அரசியலில் அவ் இயக்கம் நுழைந்ததைப்பற்றியும், படைத்துறையைச் சார்ந்த சமயக் கட்சியாக அவ் இயக்கம் மாறியமைபற்றியும் விளக்கப்பட்டுள்ளது.[1] அவுரங்கசீபுவினுடைய ஆட்சியின் இறுதிக் காலத்தில் முகலாயருக்குப் பேரச்சத்தை உண்டாக்கிவந்த—கிலியாக இருந்து வந்த சீக்கியப் படைத்துறை, ஆற்றலற்ற ஒரு சமயமாகப் போனதைப் போன்று தோன்றியது. 1708ஆம் ஆண்டு பத்தாவது குருவான குரு கோவிந்தர் காலமானர். ஆனல், அவருடைய பிள்ளைகள் அவர் இறப்பதற்கு முன்பே போரில் கொலை செய்யப்பட்டார்கள். ஆயினும், குரு கோவிந்தர் தமக்குப் பிறகு சீக்கிய மதத்தலைவராக அருளாட்சி செலுத்துவதற்குரிய ஆன்மீகத்துறை 'வாரிசாக' அவர் யாரையுமே குறிப்பிடாமல் சென்றர். அவருடைய ஆதரவாளரான பண்டா போராட்டத்தினைத் தொடர்ந்து நடத்திவந்தார். 1716ஆம் ஆண்டில் அப்துல் சமத்கான் என்பவர் அவரைக் கைப்பற்றித் தூக்கிலிட்டதோடு, அக்கலகத்தினை மிகக் கொடுமையான முறைகளினல் அடக்கியொடுக்கினர். அவருடைய எஞ்சிய சீடர்கள் குன்றுகள் சூழ்ந்த பகுதிகளுக்குத் தப்பியோடினர். அங்கே ஒரு தலைமுறைக் காலம் வரையில்

[1] இரண்டாம் பகுதி (முகலாயர் ஆட்சி)யில் காண்க.

தலைமறைவாக வாழவேண்டிய அவலநிலைக்கு அவர்கள் ஆளாயினர். இமயமலை அடிவாரத்தின்கண் யமுனை முதல் ரவி ஆறு வரையிலுள்ள எண்ணற்ற குன்றுகள் நிறைந்துள்ளமை அவர்களுடைய சமூகத்திலிருந்து விலக்கப்பட்ட வாழ்க்கைக்கு வசதியாக அமைந்தது.

சீக்கியர்கள் அடியோடு சின்னபின்னமாக அழிக்கப்பட்டு விட்டதாகக் கருதப்பட்டது. ஆனால், அவர்களைத் தாக்கினர்களே ஒழிய, அவர்களை வடிவம் தெரியாத வகையில் கூழாக்கி விடவில்லை; எஞ்சிய ஒரு பகுதியினரை புடம்போட்ட எஃகாக ஆற்றல்பெற்று விளங்குமாறு செய்தனர். சீக்கிய சமூகத்தினரிடத்து 'இந்த நெருக்கடி அனுபவம்' சிறந்ததொரு மாற்றத்தை உண்டாக்கியமை குறிப்பிடத்தக்கதாகும். சீக்கியரிடை உண்டான மாற்றங்களுக்குள்ளே ஒன்று எல்லாருக்கும் நன்கு தெரிந்ததாகும். அமைதிமிக்க சமயக் கிளை அல்லது குழுவாக சீக்கியர் படைக்கலன் தாங்கிய துறவிகளின் திருக்கூட்டமாக மாறியமை உலகறிந்த உண்மையாகும். ஆனால், இம் மாற்றம் சீக்கியரைப் பொறுத்தவரையில் இதைவிட மேம்பட்ட ஒன்றாக இருந்தது. துறவிகளான அகாலிகள் மட்டுமே அல்லாமல் சீக்கிய சமூகம் முழுவதுமே படைக்கலன் தாங்கிய படைத்துறைச் சார்பான சமூகமாக வாழ வழியுண்டாயிற்று. குரு கோவிந்தர் தம் சமயத்தின் பழைய சித்தாந்தத்தை அப்படியே போற்றிப் பின்பற்றினர். ஆயினும், அவர் சீக்கிய சமயத்தின் முழு நிறைவான மதிநுட்பம் வாய்ந்த கொள்கைகளையும் கோட்பாடுகளையும் மாற்றியமைத்தார். அது ஒரு சமய இயக்கமாக இருந்த நிலை மாறி, ஒரு சமயமாக மலர்ச்சியுற்றது; ஒரு சமயக் கிளையாக இருந்துவந்த நிலை மாறி ஒரு தனிச் சமூகமாக விளங்கத் தொடங்கியது; அமைதியான சமயத் திருத்தொண்டர் குழுவாக இருந்துவந்த நிலை மாறி, விரைந்தியங்கும் ஆற்றல்பெற்ற சமூக-அரசியல் இயக்கமாக அது சீரும் சிறப்பும் பெறத் தொடங்கியது. இவ்வாறு சாதிமுறைப் பாகுபாட்டை வெறுத்தொதுக்குவதும், ஒரு தெய்வ வழிபாட்டு முறையும் அச் சமயத்தில் நீங்காமல் இடம்பெற்றிருந்தன; இந்தக் காலத்தில் இறைச்சியை உண்ணும் முஸ்லீம்களின் பழக்கத்தைக் கூட சீக்கிய மக்கள் புதிதாகப் பின்பற்றத் தொடங்கி யிருந்தனர். ஆனால், தொடர்ச்சியாகப் பல சீர்திருத்தங்களைச் செய்து புதுப்பித்தமையால், அச் சமயத்தினருக்குள்ளே சகோதரத்துவ மனப்பான்மை வலிமையுறுமாறு செய்யப்பட்டது; மற்றவர்களிடமிருந்து வேறுபட்டவர்கள் என்ற

மனப்பான்மையைப் புறத்தே அவர்களிடை வளர்த்தது; இவையெல்லாவற்றையும்விட அவர்களிடத்து சமயத் திருத்தொண்டாற்றும் பேரார்வம்மிக்க 'தொண்டாற்றும் மனப்பான்மை' யினைப் போற்றி வளர்த்தது. தீட்சையளிக்கும் சடங்கு புதிதாகப் பலரைச் சீக்கிய சமயத்தைத் தழுவுமாறு தூண்டியது; தழுவியவர்களைப் போற்றியாதரித்தது; எனவே, சீக்கியரை மற்றவர்களிடமிருந்து வேறுபடுத்திக் காட்டுவதாக, அவர்கள் சிறப்புமிக்க தனிச் சமூகத்தினர் என்பதை அறிவிப்பதாக அமைந்தது. ஒருவர் மற்றொருவரைக் காணுகின்றபொழுது 'குருநாதர் வெற்றிபெறுக!' என்று வாழ்த்துவதும், தாடி வளர்த்தலும், 'சிங்கு' என்ற பட்டத்தைச் (சிங்கம் அல்லது வெற்றிவீரன் என்பது பொருள்) சூடிக்கொள்ளுவதும், அவர்களிடையே, தாங்கள் பிற மக்களிடமிருந்து வேறுபட்டவர்கள் என்ற உணர்ச்சியை ஊட்டி வளர்த்தன. ஐந்து 'ககரங்கள்' எனும் திருமந்திரம் அவர்களிடையே ஒற்றுமையை வளர்க்கும் மந்திர சக்திவாய்ந்த 'தாயத்தாக' இருந்தது;[1] அது கல்லாரையும் கற்றாரையும், இல்லாரையும் உடையாரையும் ஒருங்கே கவர்வதாக அமைந்தது. குருகோவிந்தர் இறந்த பிறகு அரசியல் அதிகாரம் 'கால்சா' எனப்படும் சீக்கிய சமயத் திருக்கூட்டத்தினருடையதாக மாறியது; 'கிரந்த சாகிபு' எனப்படும் திருமறையே புனிதமான ஆதார நூலாகப் போற்றப்பட்டது; இந்தப் புனிதத் திருமறை இப்பொழுது கடவுளினுடைய பிரதிநிதியான குருவினுடைய இடத்தைப் பெற்றது; அதுமட்டுமல்லாமல் வழிபாடு செய்வதற்குரிய ஒரேயொரு பொருளாகவும் கொள்ளப்பட்டது; நிலையாக முஸ்லீம்களை உள்ளத்துணர்வால் எதிர்க்கும் ஒரு குழுவினராக இந் நிலையில் சீக்கியர்கள் ஒரு பெருங் கூட்டமாக அமைந்தபோதிலும், இஸ்லாமிய சமயப் பழக்கவழக்கங்களிலிருந்து எத்துணையளவிற்கு அவர்கள் கடன் வாங்கினர் என்பதை ஆராய்ந்தறிவது இன்பம்தரும் செயலாகக் காணப்படுகிறது. அவர்கள் எச் சமயத்தை வன்மையாகக் கண்டித்து வேண்டாம் என எதிர்த்தார்களோ, அச் சமயத்தின் பழக்கவழக்கங்கள் பல

[1] ஐந்து ககரங்களாவன: 1. கெஷ் எனப்படும் தாடி வளர்த்தல் முறை; 2. குங்கா எனப்படும் தலைமுடியில் சீப்பினைச் செருகிக்கொண்டிருக்கும் முறை; 3. குச்சா எனப்படும் குறைவான உடுப்புகளை அணியும் முறை; 4. கரா எனப்படும் வலதுகை மணிக்கட்டில் இரும்பு வளையத்தை அணியும் முறை; 5. கிர்பன் எனப்படும் கையிலே எப்பொழுதும் ஒரு வாளினை ஏந்திச் செல்லும் முறை.

வற்றைத் தங்கள் சமயத்திடத்துப் புகுத்திப் பின்பற்றத் தொடங்கியமை வியப்பிற்குரிய செய்தியாகும். ஒரு தெய்வ வழிபாட்டினையே போற்றிப் பின்பற்றியமை, விக்கிரக வழிபாட்டை வெறுத்தொதுக்கியமை, சாதி வேறுபாட்டைப் பின்பற்ருது கைவிட்டமை ஆகியவை முகலாயர்களோடு மாறுபடுவதற்கு முன்பு, இஸ்லாமிய சமயத்திடமிருந்து சீக்கியர் கடன்வாங்கியனவாகும். இறைச்சியை உண்ணும் வழக்கம், சகோதரத்துவ மனப்பான்மையை வளர்ப்பதற் குரிய வழிவகைகளைப் பின்பற்றுதல் ஆகியவை இஸ்லாமிய சமயத்தினரோடு போராடிக்கொண்டிருந்தபொழுது, அச் சமயத்தினரிடமிருந்து இவர்கள் கடன்வாங்கியவையாகும். 'சிங்கு' என்று பட்டம் சூடிக்கொள்ளுவதில் நாம் போரிடுத லுக்கு அளிக்கப்பட்ட முக்கியத்துவத்தைக் காணுகின்ருேம்; உயிர்த் தியாகம் செய்யும் கொள்கையில் இஸ்லாமியருடைய ஜெஹாட் (Jehad) எனப்படும் 'புனிதப் போர்க்' கொள்கையின் சாயல் படிந்திருப்பதை நாம் காணுகின்ருேம்.

பஞ்சாபின் குன்றுகளில் எஞ்சிய நிலையில் மறைந்து வாழ்ந்த சீக்கியர் இவ்வாறு ஒரு படைத்துறைச் சார்புடைய சமயக் குழுவினராகவே இருந்துவந்தனர். அவர்களுக்கு ஒரு தலைவரும் இல்லை; தனி நாடும் இல்லாமற்போயிற்று. கொள்கையொன்றுதான் அவர்களை ஒன்றுபட்ட சமூகத்தின ராக விளங்குமாறு செய்தது. அக்கொள்கையே, அவர்களை இறைவனுல் தேர்ந்தெடுத்து அனுப்பப்பட்ட தனிச் சிறப்பு வாய்ந்த மனிதர்கள் என்று கருதுமாறு செய்தது. அன்ருட வாழ்க்கையில் அவர்கள் செய்துவந்த சடங்கொன்று மற்ற வர்களிடமிருந்தும் அவர்களுக்கிடையேயும் அவர்களை வேறு படுத்திக் காட்டிவந்தது. 1738-39ஆம் ஆண்டுகளில் நாதிர்ஷா தில்லியை நோக்கிப் படையெடுத்துவந்த காலம் வரையில் சீக்கியரைப்பற்றிய செய்தி சமவெளிப் பகுதியில் ஒன்றுமே வழங்கியதாகத் தெரியவில்லை. அந்தக் காலம் முதல் பஞ்சாபின் அரசியல் ஆதிக்கம் கைசோரத் தொடங்கியது. அது சீக்கியர் மீண்டும் சமவெளிப் பகுதியில் நடமாடத் தொடங்குவதற்குப் பேருதவியாக அமைந்தது. ஐம்பதுகளில் உண்டான தொல்லைகளும் துன்பங்களும் சீக்கியருக்குச் சிறந்த வாய்ப்பினை அளித்தன. 1761ஆம் ஆண்டு நடை பெற்ற பானிப்பட்டுப் போருக்குப் பிறகு அவர்களை எதிர்ப் பதற்குரிய ஆற்றலுடையவர்கள் யாருமே இல்லை. அவர்க ளுடைய முன்னேற்றம் இவ்வாறு விரைவாக அமைந்தது; ஆனல், ஒழுங்கற்றதாக இருந்தது. அவர்களுடைய முன்

னேற்றத்தைத் தடுத்து நிறுத்தும் ஆற்றல் வாய்ந்த தலைவர்கள் யாருமே அக் காலத்தில் இல்லை. ஆனால், அவர்கள் அனைவராலும் தலைவராக ஏற்றுக்கொள்ளப்பட்ட தலைவர் ஒருவர் அவர்களை நெறிப்படுத்துவதற்கு அவர்களிடையே இல்லை. எனினும், அவர்கள் முன்னேறிக்கொண்டிருந்தனர். போர்ப் படைக் குழுவினரான அவர்கள் பஞ்சாபு மாநிலம் முழுவதிலும் பரவியதோடு, புதிதாகப் பலரைத் தங்கள் சமயத்தில் சேருமாறு சமய மாற்றம் செய்துவந்ததோடு, தறுகண்மை மிக்க ஆடவர்களை வீரர்களாக விளங்குவதற்காகத் தேர்ந்தெடுத்து, தங்கள் மதத்தில் சீக்கியர் சேர்த்துக்கொண்டனர். இவ்வாறு அவர்கள் பஞ்சாபில் பரவியபொழுது, அவர்கள் தங்களுக்கெனச் சிறியசிறிய அரசுகளை நிறுவிக்கொண்டனர். அடுத்த முப்பது ஆண்டுகளில் சீக்கிய சமூகம் நன்கு நிறுவப் படாத பன்னிரண்டு 'மிசில்ஸ்' (Misls) எனப்படும் அரசுகளையுடையதாக விளங்கலாயிற்று. ஒவ்வோர் அரசும், அவ் வட்டாரத்தின் சிறப்புமிக்க தலைவர் ஒருவருடைய பெயரினால் அழைக்கப்பட்டுவந்தது; அல்லது அவ் வட்டாரத்திற்கே தனிச் சிறப்பாக உள்ள இயல்புகளைக் குறிப்பிடும் பெயரினால் வழங்கப்பட்டது. அத் தலைவர்களுள் பெரும்பலோர் ஜாத்துகளின் இனத்தைச் சார்ந்தவர்களாக இருந்தனர். அவர்களைப் புறத்தே தொடர்பு உடையவர்களாகச் செய்தது, ஆண்டிற்கொருமுறை கூடும் 'சர்பத் கல்சா' (Sarbat Khalsa) எனப்படும் பேரவைக் கூட்டமாகும். அக் கூட்டம் ஆண்டுதோறும் அமிர்தசரஸில் கூடியது. குருமடத்தில் சீக்கியத் தலைவர்கள் ஆண்டிற்கு ஒரு முறை ஒன்றாகக் கூடிக் கூட்டம் ஒன்று நடத்தி வந்தனர். அக் கூட்டம் 1773ஆம் ஆண்டிற்குப் பிறகு நடத்தப்படாமல் நிறுத்திவைக்கப்பட்டது. கடைசியாக அக் கூட்டம் 1805ஆம் ஆண்டில் ஒரு முறை நடைபெற்றது. இவ்வாறு இடையீடுபட்ட இடங்களில் எங்கும் சுற்றித் திரிகின்ற இயல்புடன் சீக்கியர் தெற்கே தில்லிக்கு இருபது கல் தொலைவுள்ள காற்கௌடாவரையிலும், வடக்கே சிந்து நதிவரையிலும் பரவியிருந்தனர்.

அரசியல் ஒற்றுமையை உருவாக்குவதற்குகந்த வகையில் காலச் சூழ்நிலை கனிவுற்றிருந்தது. தேவையே இன்றியமையாத மனிதனைப் படைத்துத்தந்தது. 1764ஆம் ஆண்டில் முதன் முதலாக லாகூரினை சீக்கியர் தமதாக்கிக் கொண்டனர். ஆனால், அவர்களுடைய உரிமைக்காலம் குறிப்பிட்ட சில சமயங்களில் கைவிடப்படவேண்டிய நிலையை அடைந்தது. 1767ஆம் ஆண்டு பாடியாலா (Patiala) அரசினை

அமர்சிங் என்பவர் நிறுவினர். அவ் அரசு சட்லெஜ் நதிக்குக் கிழக்கே இருந்துவந்த சீக்கிய அரசுகளுள் முதன்மையானதாக விளங்கியது. 1790ஆம் ஆண்டில் பத்து வயதுகூட நிறைவடையாத இரஞ்சித்சிங் சுகர்சாகிய மிசில் குழுவின் தலைமைப் பதவியைத் தாங்கும் பொறுப்பினையேற்றார். அத்தகைய குழப்பமும் கொந்தளிப்பும் மிக்க காலத்தில் அத் தலைமைப் பதவியை நெடுங்காலம் வகிப்பதற்கு அவரைப் போன்ற தந்நிகரற்ற திறமையும் பேராற்றலும் வாய்ந்த இளைஞர்களாலேயே இயலும் என்பது இங்குக் குறிப்பிடத் தக்கதாகும். இந்த வகையில் நாம் இரஞ்சித்சிங்கினை அக்பரோடு ஒப்பிடலாம். அக்பரும் தமது தந்தை ஹுமாயூன் இறந்தவுடன் பதின்மூன்று வயது அளவிலேயே அரசு கட்டிலேறியவராவார். 1698ஆம் ஆண்டு ஷா ஜமான் என்பவர் இறுதியாகப் பஞ்சாபிற்கு வந்ததன் விளைவாக இரஞ்சித்சிங்கிற்கு மாபெரு வாய்ப்பு ஒன்று கிடைத்தது. 1799-ல் ஷா ஜமான் தம்முடைய பதவியிலிருந்து விலகி ஓய்வு பெற்றபொழுது, அவர் லாகூர் அரசினை இரஞ்சித்சிங்கிற்கு உரிமையுடையதாக்கிச்சென்றார். இவ்வாறு நேர்மையான உரிமையெனும் போர்வையை இரஞ்சித்சிங்கிற்கு அவர் போர்த்திவிட்டுச் சென்றார். உண்மையில் இரஞ்சித்சிங் ஒருவர்தாம் அதற்குத் தகுதியுடையவராக இருந்தார் என்பதும் இங்குக் குறிப்பிடத்தக்கது. பொருளாதாரவகையில் அப் பட்டமும் உரிமையும் பயனற்றனவாகவும் தேவையற்றனவாகவுமே தோன்றின. ஆனால், அப் பட்டம் பெருமையையும் முக்கியத்துவத்தையும் அளிப்பதில் பெருமதிப்புடையதாகக் கருதப்பட்டது. முஸ்லீம்கள் முன்னர் இரஞ்சித்சிங், தாம் சட்டப்படி உரிமைபெற்ற அரசர் என்று கூறிக்கொள்ள முடிந்தது; அந்த வட்டாரத்திலிருந்த சீக்கியர்களுக்குள்ளே முதன்மையான சக்திகளாக இருந்தவற்றின் பேராதரவை அவர் பெற்றவராக விளங்கினர். இதுமுதல் அவர் மிக விரைந்து முன்னேறத்தொடங்கினர். 1801ஆம் ஆண்டில் சீக்கியர்களுள் பேராற்றல் வாய்ந்த பங்கிசு என்ற குழுவின் தலைவரை அவர் தோற்கடித்தார். 1802ஆம் ஆண்டில் அமிர்தசரசினை தம்முடைய ஆட்சியின்கீழ்க்கொண்டு வந்தார். இவ்வாறு, அவர் சீக்கிய இனத்தின் 'லண்டன்' மாநகரத்தையும் 'காண்ட்டர்பரியை'யும் ஒரே சமயத்தில் தாமே ஆளத்தொடங்கினர். 1806ஆம் ஆண்டு அவர் லூதியானவைக் கைப்பற்றிக்கொண்டார். ஆனல், அவர் கிழக்குத் திசையிலும் தெற்குத் திசையிலும் முன்னேறுவதை பிரிட்டிஷார் தடுத்து நிறுத்தினர். மெட்கா:பின்

நல்லெண்ணத் தூதர் குழு இரஞ்சித்தைச் சந்தித்தமையால், 1809ஆம் ஆண்டு இருவருக்கும் இடையே அமிர்தசரஸ் உடன்படிக்கை கையெழுத்திடப்பட்டது. அதையடுத்து, இரஞ்சித்சிங்கின் அரசியல் பணியில் ஒரு நெருக்கடி உண்டாயிற்று; அந் நெருக்கடியைச் சமாளிக்க அவர் மேற்கொண்ட முறைகள் அவருடைய முன்னறிவையும் தீர்மானத்திற்கு வரும் தெளிவுமிக்க சிந்தனையாற்றலையும் உறுதிப்படுத்தின. தோல்வியுற்றதனால் உண்டான கசப்பான அனுபவத்தினால் பிரிட்டிஷார்மீது வெறுப்புக்கொள்ளாமல், அவர் கம்பெனியாருடைய ஆற்றலை நன்கறிந்துகொண்டார். சிஸ்-சட்லெஜ் பகுதிகளில் தமக்கிருந்துவந்த உரிமையைத் தியாகம் செய்வதன் மூலம், அவர் எத்துணைப் பேரளவிற்கு நன்மையைப் பெறமுடியுமோ அத் துணையளவிற்கு நன்மையைப் பெற முயன்றார். அவ் வாய்ப்பினை அவர் தம்முடைய வீரமிக்க, ஆனால், ஒழுங்கற்ற ஆதரவாளர்களிடையே ஒழுங்கு முறையையும் கட்டுப்பாட்டையும் வளர்ப்பதற்குரிய சிறந்ததொரு வாய்ப்பாகப் பயன்படுத்திக்கொண்டார். 1805ஆம் ஆண்டில் ஹோல்கார் லாகூருக்கு வந்து அரசியல் புகலடைந்தமை, ஒழுங்குணர்வும் கட்டுப்பாடும் உடைய சீக்கியப் படையணி தோன்றுவதற்குக் காரணமாக அமைந்தது. மெட்கா:ஃபினுடைய மெய்காப்பாளரான வீரர்கள் அகாலியருடைய தாக்குதலை மிக எளிமையாக எதிர்த்துப் புறமுதுகிட்டோடச் செய்தனர். அதைக் காரணமாகக் காட்டி, இரஞ்சித் சிங் தம்முடைய ஆதரவாளர்களிடையே, ஒழுங்கும் கட்டுப்பாடும் எத்துணை இன்றியமையாதனவும் பயன் மதிப்புடையனவுமாகும் என்பதை நன்கு உணர்த்தினர். அத்துடன் அவ் வொழுகலாற்றை அவர்களிடத்தும் அவர் பரப்பிவந்தார். தென்மேற்கே இருந்த முல்தானை 1818-19ஆம் ஆண்டுகளில் அவர் கைப்பற்றிக்கொண்டார்; அதே ஆண்டுகளில் அவர் வடக்கே காஷ்மீரையும் கைப்பற்றினார். 1833-ல் லடாக்கும், 1834-ல் பெஷாவரும் அவருடைய அரசில் சேர்க்கப்பட்டன. அதற்குமேல் அவர் தெற்கு நோக்கி முன்னேறியபொழுது சிந்துவிலிருந்த அமீர்களை அழித்தொழிக்க நேர்ந்தமையால், அதை பிரிட்டிஷார் தடுத்து நிறுத்திவிட்டனர். அதைப்போன்றே, அவர் மேற்கே ஆப்கானிஸ்தானத்தினுள் தம்முடைய ஆட்சியை நிலைநாட்ட முயன்றபொழுது, தோஸ்து முகமது அவரை மேலும் முன்னேறவொட்டாமல் தடுத்தார். ஆனால். தோஸ்து 1837-ல் எதிர்த்துத் தாக்கியபொழுதிலும், பெஷாவரைக் கைப்பற்றியிருந்த இரஞ்சித்து அதை விட்டுகொடுக்கவே

இல்லை. 1839ஆம் ஆண்டு இரஞ்சித் சிங் காலமானார். அப்பொழுது அவருக்கு ஐம்பத்தொன்பது வயதாகியிருந்தது. அச் சமயத்தில் அவர், அடக்கமானதும் நன்கு நிறுவப் பட்டதுமான பெரியதோர் அரசின் தந்நிகரற்ற தனிப்பெருந் தலைவராக விளங்கினார். மேலும், கம்பெனியின் படைகளைச் சரிநிகர் சமானமான வகையில் ஒத்திருந்த பேராற்றலும் பெருந்திறனும் வாய்ந்த ஒருவரோடு இந்தியப் படையின் மாபெருந் தலைவராகவும் அவர் விளங்கினார்.

அந்தக் காலத்திய இந்தியத் தலைமுறையில், இரஞ்சித் சிங்கும் இராம்மோகன் ராயும் குறிப்பிடத்தக்க பெருஞ்சிறப்பு வாய்ந்த இந்தியத் தலைவர்களாவர்.

அக்காலத்தில் வாழ்ந்த இருவர் வரைந்துள்ள விளக்க வுரைகள் இரண்டு இங்குக் கீழே கொடுக்கப்பட்டுள்ளன. முதலில் குறிப்பிடப்படுவது சார்லஸ் மேசன்[1] என்பவருடைய கருத்துரையாகும். அவர் 1820 அளவில் இரஞ்சித் சிங்கைச் சந்தித்தவராவர். அடுத்தவர் W. G. ஆஸ்பார்ன்[2] என்பவ ராவர்; அவர் 1838-ல் இரஞ்சித் சிங்கைச் சந்தித்தார்.

> 'மகாராசா இடைப்பட்ட மனிதர்களின் வடிவைக் காட்டிலும் சிறிது சிறிய வடிவம் உடையவர்; ஒல்லியான தோற்றம் உடையவர்; அழகிய நிறமும், ஒழுங்கான முகத் தோற்றமும், கழுகு மூக்கும் கொண்டு விளங்கினார். அவர் நீண்ட வெண் தாடியுடைய வேந்தராவார். அவருடைய இடது கண் குறைபாடுடையது. மிகவும் வயது முதிர்ந்தவர்போல் அவர் தோன்றினாலும், அவருக்கு இன்னும் ஐம்பது வயதுகூட நிறையவில்லை; அவருடைய கழுத்தின் வலப்பக்கத்தில் பெரியதொரு தழும்பு தெரிகிறது; போரிலே உண்டான புண்ணின் வடுவாக அது இருக்க லாம். உணவுமுறையில் அவர் சிறுகச்சிறுக உண்ணு கின்றவராக இருக்கிறார். ஆனால், எப்பொழுதும் மிகவும் கேடு விளைக்கின்ற கடுமையான மதுவை யருந்தி மனம் மகிழ்வது அவருடைய வழக்கம். அத்

[1] சி. மேசன்: 'Narrative...in Baluchistan, Afghanistan and the Panjab', Vol. I, p. 443.

[2] W. G. ஆஸ்பார்ன்: 'The Court and Camp of Ranjit Singh', pp. 81–83; 79-80.

துடன் அவர் அளவுகடந்த சிற்றின்பப் பிரியர். இவை இரண்டினலும் இளமையிலேயே முதுமைக் கோல முடையவராக விளங்கலானர். அதன் விளைவாக உடல்நலக் குறைபாடுகள் அவருக்கு உண்டாயின. ஏதோ நோய் ஒன்றிற்காக அவர் நாள்தோறும் அபினியைப் பயன்படுத்திவருகிறர். அவருடைய உடையிலே எளிமை திகழ்கிறது. அது வெண்மை யான லினன் ஆடையாக இருக்கிறது. அவர் தோளிலே புகழ்மிக்க கோகினூர் வைரத்தை அணிந் திருக்கிறர். அதை அவர் ஷா ஷுஜா உல் முல்க்கிட மிருந்து கவர்ந்துவந்தார் என்பது இங்குக் குறிப்பிடத் தக்கதாகும்.'

'சிறிதும் ஐயத்திற்கு இடமின்றி அவர் பார்ப்ப தற்கு அழகற்றவராகவே தோன்றுகிறர். அவருடைய தோற்றம் ஒவ்வொருவர் உள்ளத்திலும் அவர் சிறப்பு மிக்க ஒரு மனிதர் என்ற எண்ணத்தைத் தவருமல் உண்டாக்கும். முதலில் அவருடைய தோற்றம் வெறுப்புணர்ச்சியை உண்டாக்கக்கூடிய வகையில் இருந்தாலும், இரண்டாவது முறை அவரைப் பார்ப்போமானல், மிகுந்த மதிநுட்பமும், அச்சுறுத் தும் அவருடைய ஒரு கண் ஓயாது அலைந்துகொண் டிருப்பதும் நம்முடைய உள்ளத்தைக் கவரும். அவ ருடைய வெளிப்படையான, வஞ்சனையும் சூழ்ச்சியு மற்ற பேச்சிற்கு ஒருவர் பழக்கப்பட்டுவிட்டால், அவருடைய முகத்தோற்றத்தில் அறிவின் கூர்மையும் மதிநுட்பமும் சிறப்பாகப் படிந்துள்ளதைக் கண்டு வியக்காமல் இருக்க முடியாது. ஆகவே, அவரை முதலில் பார்க்கும்பொழுது உண்டாகும் வெறுப் புணர்ச்சி, பின்னர் தானே மறைந்துவிடும்.'

'அவருடைய உயரம் சராசரி மனிதனுடைய உயரத்தைக்காட்டிலும் குறைவானது; அவருடைய உடற்கட்டுப் பொதுவாக மற்றச் சீக்கியர்களுடை யதைப் போன்றே காணப்பட்டது. அவர் எப்பொழு தும் குனிந்து நின்று பழக்கப்பட்டுப்போனமையால், அவர் உண்மையாக உள்ள உயரத்தைக்காட்டிலும் குள்ளமாகத் தோன்றுகிறர். அவர் நடக்க முயலு கின்றபொழுது அவருடைய கால்கள் நிலத்தில் பாவுவ தில்லை; ஆனல், அவர் குதிரைமீதமர்ந்து சவாரி

செய்யத் தொடங்குவாரானால், அவரிடத்துள்ள குறைகள் எல்லாம் தாமே மறைந்துவிடுகின்றன. மூன்றாண்டுகளுக்கு முன்பு பக்கவாதத்தினால் தாக்கப் பட்டதன் விளைவாக இப்பொழுது அவருடைய பேச்சில் ஒருவகையான தடுமாற்றம் காணப்படு கிறது. ஆனால், கடந்த பன்னிரண்டு மாதங்களுக்குள் அவருடைய உடல்நலம் எவ்வளவோ குணமடைந்து விட்டதாக, அவரை அறிந்தவர்கள் கூறுகின்றனர். அவருடைய வயதிற்காக நாம் கொடுக்கக்கூடிய மதிப்பைக்காட்டிலும், அவருடைய வெண்தாடியும் மீசையும் அவருக்குப் பெரு மதிப்பளிக்குமாறு தூண்டுகின்றன. ஐம்பத்தெட்டு வயதிலும் அவர் நல்ல கட்டான உடலும் ஊக்கமும் நிறைந்தவராக உள்ளார். அவரை நோயாளியென்று கூறுவது கற்பனையாகும்........'

'அவருடைய வினாக்கள் இடையறாமல் விரைவாக எழுவதைக் குறித்து ஒன்றையும் சொல்ல முடியாது; அதைப்போன்றே எண்ணற்ற பொருள்களைப்பற்றி யும் கருத்துகளைப்பற்றியும் அவர் கேள்வி கேட்டுக் கொண்டேயிருப்பார். 'நீ மதுவினை அருந்துகிறாயா? எவ்வளவு குடிக்கிறாய்? நேற்று உனக்கு நான் அனுப்பிய மதுவைச் சுவைத்துப் பார்த்தாயா? எவ்வளவு நீ குடித்தாய்? உன்னுடன் எத்தகைய பீரங்கிகளைக் கொண்டுவந்திருக்கிறாய்? அவற்றிற்கு மூடிகள் உண்டா? எத்தனை? குதிரையின்மீது சவாரி செய்வதை நீ விரும்புகிறாயா? எந்த நாட்டுக் குதிரைகள்மீது சவாரி செய்ய நீ விரும்புகிறாய்? நீ படையில் சேர்ந்திருக்கிறாயா? நீ பெரிதும் விரும்பு வது குதிரைப் படையையா அல்லது காலாட் படையையா? ஆக்லண்டு பிரபு மது அருந்துகிறாரா? எத்தனை குவளைகள்? அதை அவர் காலைவேளையில் குடிக்கிறாரா? கம்பெனியாருடைய படையின் எண்ணிக்கையும் ஆற்றலும் எவ்வளவு? அவை ஒழுங்குணர்வும் கட்டுப்பாடும் உடையனவாக உள் ளனவா?'

பஞ்சாபின் அரசு பண்டை இந்திய மரபுவழி அமைந்த நாட்டின் எல்லைக்குட்பட்ட அரசும் அன்று; ஒரு சமூகத்தினர் மற்றொரு சமூகத்தினர்மீது அடக்குமுறை ஆட்சிபுரியும்

வல்லாட்சியும் அன்று. சிந்தியாவின் அரசினுள்ளோ, ஹோல்காரின் இராச்சியத்திலோ மராட்டியர் எத்துணை அளவிற்கு முதன்மையான பங்கினைப் பெற்றிருந்தார்களோ, அத்துணை அளவிற்குப் பஞ்சாபின் அரசில் சீக்கியர் முதன்மையும் செல்வாக்கும் பெற்றிருந்தனர். ஆனால், தொடக்க காலத்திய தில்லி சுல்தான்களின் அரச மரபுகளைப் போன்ற சமூக வல்லாட்சியாக அவர்களுடைய அரசு விளங்கவில்லை. மற்றச் சமூகத்தினரோடு ஓரளவிற்குக் கூட்டுச் சேர்ந்து அமைத்த அரசாகவே சீக்கியருடைய அரசு இருந்தது. ஆனால், அக் கூட்டுச் சேர்க்கை அவர்களைக்காட்டிலும் சிறுபான்மையினராகவும் செல்வாக்கும் சிறப்புமற்றவர்களாகவும் இருந்த மக்களோடு கொண்ட தொடர்பாக இருந்துவந்தது எனலாம். அக் கூட்டமைப்பில் இந்துக்களின் பல்வேறு பிரிவினரும் முஸ்லீம்களும் பங்கு பெற்றிருந்தனர். அதே சமயத்தில் தம் இனத்தவராகிய சீக்கிய மக்களை மரபுவழி மன்னர்களின் வல்லாட்சியுரிமையையும் அதிகாரத்தையும்கொண்டு இரஞ்சித் சிங் அச்சுறுத்தித் துன்புறுத்தவில்லை என்றே கூறலாம். அவர் 'மகாராசர்' என்னும் பட்டத்தைச் சூடிக் கொண்டிருந்தபோதிலும், இறுதிவரையில் அவர் கால்சியர்களின் தலைவர் என்னும் உரிமையைப் பெரிதும் போற்றிப் பாராட்டிவந்தமை இங்குக் குறிப்பிடத்தக்கதாகும். ஒரு வகையில் அவர் அதனுடைய தேர்ந்தெடுக்கப்பட்ட தலைவராகவும் விளங்கினார். அகஸ்தஸ் சீசரைப்போன்று அவர் தம்முடைய உரிமைகளை நெடுந்தொலைவிற்குக் கொண்டு செலுத்துவதில் மிகவும் எச்சரிக்கையுடன் இருந்தார். அவர் எப்பொழுதுமே ஆதிக்கத்தினால் உண்டாகக்கூடிய பயனைப் பெறுவதில் கருத்துடையவராக இருந்தாரேயொழிய, வெறும் வெளிப்பகட்டு ஆரவாரத்தில் ஈடுபாடற்றவராகவும் இருந்து வந்தார். சிறுபான்மையினராகிய சிறிய சமூகங்களைத் துணைக் கூட்டாளிகளாகக்கொண்ட சமூகச் சார்புடைய சமூகப் பொதுவுடைமை அரசாக சீக்சியரின் அரசு விளங்கியதென்று நாம் கூறலாம். சிறுபான்மைச் சமூகத்தினர் முதன்மையான சமூகத்திற்குக் கீழ்ப்பட்டவர்களாகவே இருந்தனர். ஆனால், அவர்களால் அடக்கியொடுக்கப்படவில்லை. அவ் ஆட்சி நிலைபேறுடையதாகக் காலப்போக்கில் பேராற்றல் பெற்று விளங்கத் தொடங்கிய காலத்தில், பஞ்சாபிய தேசியம் புதிதாகத் தோன்றி மலரத் தொடங்கியதன் அறிகுறிகள் தோன்றின. ஆனால், இத் தேசிய உணர்வு பதினெட்டாம் நூற்றாண்டின் நாற்பதுகளில் உண்டான தொல்லைகளாலும் துன்பத்தாலும் வாடிப்போய்விட்டது;

பத்தொன்பதாம் நூற்றாண்டின் முதல் அரைப் பகுதியில் முற்றிலும் வளர்ச்சியுறாத நிலையில் அது மீண்டும் காட்சியளிக்கத் தொடங்கியது. அவர்களுக்குக் கிடைத்த வாய்ப்பும் வசதியும்மிக்க அக்காலத்தில் தேசிய உணர்வு வேரூன்றி வளருவதற்கு ஒரு மனிதனையே பேரளவிற்கு நம்பியிருக்க வேண்டிய அவலநிலை இருந்துவந்தது. அதனால்தான் அவருக்குப் பிறகு அவ் உணர்ச்சி குன்றிப்போயிற்று.

லாகூர் அரசினைத் தாங்கிய முதன்மையான தூணாக இருந்தவர் இரஞ்சித் சிங்கே என்பது தெளிவாகக் காணப்பட்டது. பொதுப்படையான படைத்துறைத் திறமையுடையவராக இருந்த அவரிடத்து, அரசியல் சூழ்ச்சித்திறனும் சேர்ந்து விளங்கியது. அக் காலத்திய சிக்கல்மிக்க அரசியல் சூழ்நிலையில், சிறப்புமிக்க அரசியல் விரகரைக் காண்பது அரிதாகவே இருந்த காலத்தில், பஞ்சாப் சிறந்ததோர் அரசியல் விரகரைப் பெற்றிருந்தமை அதனுடைய நற்பேறேயாகும். ஆனால், இவ்வரிய பண்புகளோடு, செயற்கரிய வேறு பல பண்புகளும் அவரிடத்து அமைந்திருந்தமையால்தான் அவர் தந்நிகரற்ற தனிப்பெரு மனிதராக விளங்க முடிந்தது. நண்பர்களையும் பகைவர்களையும் தம்முடைய உண்மையான உள்ளார்ந்த கருத்துகளையும் எண்ணங்களையும் ஒருங்கே ஏற்றுக்கொள்ளுமாறு தூண்டும் திறனுடையவராக அவர் இருந்தார். இவ் வகையில் அவர் எலிசபெத்து அரசியின் ஆற்றலையும் திறனையும் கவர்ச்சிப் பண்பையும் பெற்றிருந்தார் என்று கூறலாம். பிறருடைய பண்பு நலனை மதிப்பிடுவதில் அவர் மிகவும் கூர்த்த மதியுடையவராக இருந்தார். யாரை நம்பலாம், எப்பொழுது நம்பலாம், எது வரையிலும் நம்பலாம் என்பதை அவர் நன்கறிந்திருந்தார். எல்லா வகையான நம்பிக்கைகளையும் அச்சங்களையும் தம்மை மையமாகக்கொண்டே இயங்குமாறு அவர் செய்தார். வேறு எந்த மனிதரும் தம்மைவிட முதன்மையும் செல்வாக்கும் பெறவொட்டாமல் கருத்தாகத் திட்டமிட்டு அவர் செயலாற்றி வந்தார். அதைப்போன்றே யாரையும் அவர் துன்பத்தில் துவளவோ, நம்பிக்கையிழந்து மனமுடைந்துபோகுமாறோ கைவிட்டுவிடவில்லை. பெறுதற்கரிய மாயமான திறமையுடையவராக இருந்த அவர், தனி மனிதர் ஒருவரை மற்றொருவருக்கு எதிராகவும், ஒரு சமூகத்தினரை மற்றொரு சமூகத்தினருக்கு எதிராகவும் சமநிலைப்படுத்திவந்தார். முஸ்லீம்கள், டோக்ராக்கள், பிராமணர்கள், ஐரோப்பியர்கள் ஆகியோரைக் கொண்டும், தம்முடைய புதிய படையினைக்கொண்டும்

தம்முடைய சீக்கியர்களைத் தொலைவிலேயே நிறுத்தி வைத்தார். இச் சமூகங்கள் அனைத்தும் இத்தகைய பண்பு களால் ஆக்கப்பட்டிருந்தாலும், தனிப்பட்ட வகையில் அளவு கடந்த ஈடுபாடும் பற்றுறுதியும் உடையனவாகவே இருந்து வந்தன. இதன் விளைவாக ஒவ்வொருவரும் தாங்கள் இரஞ்சித் சிங்கிற்குக் கீழ்ப்படிந்து நடப்பதனால் இறப்பதைக் காட்டிலும் பெறுகின்ற ஆதாயமே மிகுதியானவை என்பதை நடைமுறையில் கண்டறிந்தனர். பேரவாவும் இரக்கமுமற்ற பெருமக்களைக்கொண்ட அவைக்களத்தில் அவர் பெரிதும் கவலையற்றுப் பாதுகாப்புடன் நடந்துவந்தார். அவர் பக்க வாதத்தினால் படுத்த படுக்கையாகக் கிடந்தபொழுதும்கூட, அவரைத் துன்புறுத்துவதற்கு அல்லது கொன்றுவிடுவதற்கு யாரும் முயலக்கூடிய உள்ள உரம் பெற்றிருக்கவில்லை. அவருடைய மதிநுட்பத்தாலும் சூழ்ச்சித்திறத்தாலும் அவர் தம்முடைய காலத்திய மக்களையெல்லாம் அடக்கியாண்டார். அக்பரைப்போன்று அவருடைய உள்ளத்தின் செயல்களும் பெயரளவிற்கு வியப்பையுண்டாக்குவனவாகவே இருந்தன. 1830ஆம் ஆண்டில் விக்டர் ஜாக்குமென்ட் என்பவர் 'அவருடைய உரையாடல் தீக்கனவினைப் போன்றிருக்கிறது. நான் கண்டவர்களுள் அவர்தாம் அறிவார்வமிக்க இந்தியராவார். அவருடைய ஆர்வம், அத் தேசிய இனத்தின் அசட்டுத் தன்மையை ஈடு செய்வதாக இருக்கிறது. அவர் என்னைப் பற்றியும், இந்தியாவைப்பற்றியும், பிரிட்டிஷாரைப்பற்றியும், ஐரோப்பாவைப்பற்றியும், போனபார்ட்டேவைப்பற்றியும், இவ் உலகைப்பற்றியும், மறுவுலகைப்பற்றியும் பொது வாகவும் சிறப்பாகவும் கேட்ட கேள்விகளுக்கு அளவேயில்லை. நரகம், சுவர்க்கம், ஆன்மா, கடவுள், சாத்தான் முதலிய வற்றைப்பற்றியும் அவர் ஆர்வத்தோடு கேட்ட கேள்விகள் ஆயிரக்கணக்கானவை'[1] என்று எழுதியுள்ளார்.

அவருடைய அரசினைத் தாங்கிய இரண்டாவது பெரும் தூண் ஒருமைப்பாட்டுக் கொள்கையாகும். இரஞ்சித் சிங்கி னுடைய ஆட்சிக்காலத்தில் அக் கொள்கை குறிப்பிடத்தக்க அளவிற்கு நிலைபேறுடையதாக அவ் அரசினை விளங்குமாறு செய்தது. ஆளும் இனத்தினர் ஆதிக்கம் செலுத்துவது மற்றச் சமூகத்தினரின் ஒத்துழைப்பைப் பெற்று இனிமை யுடையதாக்கப்பட்டது. அக்பரின் வெற்றிக்கு இம் முறையே காரணமாக அமைந்தது என்பதை முன்னர்க் கண்டோம்.

[1] V. Jacquement, 'Letters From India', Vol. I. p. 395.

சமயப் பொறையுடைமை என்னும் கொள்கையினை அவர் போற்றிக் கடைப்பிடித்தார். ஒரு சமயத்தினரும் மற்றொரு சமயத்தினரை மதித்துப் போற்றுவதற்கும், ஒரு சமயக் குழுவினர் மற்றொரு சமயக் குழுவினரிடத்து நம்பிக்கை கொள்ளுவதற்குமுரிய வாய்ப்பும் வசதியும் மக்களுக்கு அளிக்கப்பட்டிருந்தன. இரஞ்சித் சிங்கின் நம்பிக்கைக்குரிய அந்தரங்க ஆலோசகராக பக்கிரி அசீஸ் உத்தீன் என்பவர் இருந்து வந்தமை இங்குக் குறிப்பிடத்தக்கதாகும். மற்ற இந்துக்களோடு, பிராமணர்களும், டோக்கராக்களும், ஐரோப்பியர்களும் அவருடைய பெரும் நம்பிக்கைக்குரியவர்களாக இருந்து வந்தனர். இடையிடையே குழப்பங்களும் கொந்தளிப்புகளும் நிலையாக உண்டாகும் நிலை பஞ்சாபில் காணப்படவில்லை. இவ்வகையில் அக் காலத்திய ஆப்கானிஸ்தானத்திலிருந்து பஞ்சாப் வேறுபட்டிருந்தது. போட்டியும் பூசலும் தனிப்பட்டவர்களுக்கு இடையே இருந்துவந்தது. தலைவரிடத்துச் சலுகை பெற வேண்டும் என்ற எல்லைக்குள்ளேயே அப் போட்டியால் உண்டான போராட்டம் நடந்துவந்ததேயொழிய, அது நாட்டிலே கிளர்ச்சியாகவோ, கொந்தளிப்பாகவோ உருவெடுக்கவில்லை.

இரஞ்சித் சிங்கின் ஆளுமைக்குப் பின்னர், நாட்டின் ஆட்சிப் பொறுப்பைத் தாங்கிய மூன்றாவது முக்கியத் தூண் என்று சொல்லத்தக்கது அந் நாட்டின் படையாகும். அவருடைய ஆட்சியின் இறுதிப் பகுதியில் படைக்கலந் தாங்கிய படையினை அவரே நேரடியாகக் கண்காணித்துவந்தார். அப்பொழுது அவருடைய படையில் 75,000 பேர்கள் இருந்தனர். அத்துடன் அவரைச் சார்ந்திருந்த குறுநிலத் தலைவர்களின் துணைப்படைகளும் அவருக்கு உதவியாக இருந்துவந்தன. அத் துணைப்படைகளுள் மலைவாழ் மக்களான டோக்கராக்களின் படை சிறப்புமிக்கதாகும். மேலே கண்ட படைவீரர்களின் எண்ணிக்கையில் பாதிக்கு மேற்பட்ட தொகையினர் நிலைப்படை வீரர்களாக இருந்துவந்தனர். அந் நிலைப்படை ஐரோப்பியப் படையியல் பயிற்சி கொடுக்கப்பட்டு, அம் முறையில் அமைக்கப்பட்டதாக இருந்தது. அப் படைப் பிரிவில் பல ஐரோப்பியர்கள் அதிகாரிகளாகப் பணிபுரிந்து வந்தனர் என்பதும் இங்கு நினைவுகூரத்தக்கதாகும். காலாட் படையில் சீக்கியர்களும், பஞ்சாபின் முஸ்லீம்களும் வீரர்களாகச் சேர்ந்திருந்தனர். அப்படையினை முறையாக நிறுவிய பெருமை இத்தாலிய நாட்டுத் தளபதி வெந்தூராவிற் (Ventura) குரியதாகும். குதிரைப் படையில் 12,000 வீரர்கள் இருந்

தனர். அதைப் பயிற்சி கொடுத்து அமைத்தவர் ஃபிரெஞ்சுத் தளபதி அலார்டு (Allard) என்பவர். காலாட்படையை விடக் குதிரைப் படை திறமை குறைவுடையதாக இருந்த தென்று சொல்லப்படுகிறது. ஆனால், அது ஆற்றலும் திறமையுமுடையதாகவே இருந்தது என்பர். சீக்கியருடைய நிலைப்படையின் சிறப்புக்குக் காரணமாக இருந்தது அதனுடைய பீரங்கிப் படைப் பிரிவேயாகும். அப் படையை முதலில் திட்டமிட்டு நிறுவியவர்கள் ஃபிரெஞ்சுக்காரர்களான தளபதி கோர்ட்டும், துணைத் தளபதி கார்ட்னருமாவர். காலாட்படையும் பீரங்கிப் படையும் ஒழுங்குமுறையிலும் உறுதிப்பாட்டிலும் தந்நிகரற்று விளங்கின. இந்தியாவிலிருந்த பிரிட்டிஷ் இந்தியப் படைக்கு ஈடாகவும் இணையாகவும் சீக்கியரின் காலாட்படை இருந்ததென்றும், பிரிட்டிஷாரின் பீரங்கிப் படையினைக்காட்டிலும் சீக்கியரின் பீரங்கிப் படை மேம்பட்டதாக இருந்ததென்றும் கூறலாம். இப் படைகளே சீக்கியருடைய ஆதிக்கத்தின் நிலைக்களனாக இருந்தன. அப் படைகள் எத்துணைக் காலம் வரையில் ஒற்றுமையுடன் இருந்து வந்தனவோ, எதுவரையில் ஆற்றலும் திறமையும் வாய்ந்த தலைவர்களால் நடத்தப்பட்டுவந்தனவோ அதுவரையில் அதற்கு நிகராக இந்தியத் துணைக்கண்டத்தில் வேறொரு படை இருக்கவில்லை.

அவ் அரசினைத் தாங்கிய மற்றத் தூண்கள் எல்லாம் வீறு குறைந்ததாகவும், உள்ளார்ந்த ஆற்றல் குறைந்ததாகவும் இருந்தன. வருவாய்த்துறை ஆட்சியும், நீதித்துறை ஆட்சியும் முகலாயருடைய ஆட்சிமுறையைப் பேரளவிற்குக் கடைப்பிடிப்பனவாக இருந்தன. அம் முறை முற்றிலும் வேளாண்மைத் தொழிலையே நம்பி வாழ்ந்த நாட்டிற்கு, முற்றிலும் பொருத்தமும் பயனும் உடையதாக இருந்தது. ஆனால், நாட்டின் பொருளாதார முன்னேற்றத்தைப்பற்றியோ வாணிகத்தைப்பற்றியோ சிறிதும் கவலைப்பட்டதாகத் தெரியவில்லை. அவற்றில் ஆர்வமோ, ஈடுபாடோ இருந்ததாகவும் தெரியவில்லை. அரசினர் பொறியியல் பணித்துறை ஒன்று இருந்தது என்பதுமட்டும் உண்மைதான். அப் பணித்துறையே 300 கற்கள் நீளமான நீர்ப்பாசனக் கால்வாய்களை வெட்டியது; ஆனால், நாட்டின் பொருளாதாரத்தை உயர்த்துவதற்குரிய வள ஆதாரங்கள் எவையென்பதை ஆராய்ந்தறிவதில் அரசிற்கு நாட்டமும் இல்லை; அவ் வள ஆதாரங்களைப் பயன்படுத்திக்கொள்ளுவதற்கு அவ் அரசு முயற்சியும் செய்யவில்லை. உண்மையில் ஆட்சித்துறையின் பிற பகுதிகளை

எல்லாம் படைத்துறை பொலிவிழக்கச்செய்தது என்றே சொல்லலாம். மனிதச் சக்தி அனைத்தும் படைத்துறைக்கே பயன்படுத்தப்பட்டுவந்தது. அதனால் வருவாயின் பெரும் பகுதி படைத்துறைப் பேரவாவினைச் செயற்படுத்துவதற்கே செலவழிக்கப்பட்டது. சிறந்த மனிதர்கள் படையில் சேர்ந்தனர். நாட்டின் வளமிக்க செல்வத்தை அப் படைத்துறை உறிஞ்சிவந்தது. படைத்துறையின் தேவைகளை நிறைவேற்றுவதற்குப் பொருளினைச் செலவழித்த பிறகு, ஆக்கப் பணிகள் செய்வதற்குத் தேவையான நிதி வசதியில்லாமல் போயிற்று. எனவே, நவீன அரசியலை மேற்கொள்ளும் ஒரு மாநிலத்தின் நிர்வாகத்தை, வேளாண்மையை மட்டும் நம்பித் தொடங்கிய பிற மாநிலங்கள் அடைந்த கதியைப் பஞ்சாபும் அடைந்தது. படையைத் தவிரப் பிறிதொன்றையும் அதனால் சமாளிக்க முடியவில்லை. மேலாகப் பார்ப்பதற்குப் பிரமிக்கத் தக்க தோற்றத்தைத் தரினும் பஞ்சாப் மாநிலத்தின் வேர் ஆழமாக ஊன்றவில்லை.

இயன்றவரையில் குறிப்பிட்ட எல்லைக்குள் தம்முடைய அரசினை விரிவுபடுத்த வேண்டும் என்பதே இரஞ்சித் சிங்கின் ஆட்சிமுறைத் திட்டமாக இருந்தது. அவருடைய அரசியல் ஆதிக்கத்தின் எல்லையாக பிரிட்டிஷாருடைய அதிகாரம் இருந்தது. 1809ஆம் ஆண்டில் அமிருதசரசில் செய்யப்பட்ட உடன்படிக்கையில் சீக்கிய அரசு, பிரிட்டிஷாருடைய ஆதிக்கத்தை ஒப்புக்கொண்டது. வடக்குத் திசையிலுள்ள மலைப் பகுதிகளின் கடுங்குளிரும், ஆப்கானிய மேட்டுநிலத்தின் தட்பவெப்ப நிலையும் இரஞ்சித் சிங்கினுடைய வீரர்களுக்கு என்றுமே ஒத்துக்கொள்ளவில்லை. முதலில் அவர் தம்முடைய சகோதர சீக்கியர்களிடம் சென்றார். அவர் அத்துடன் நின்றுவிடவில்லை; தாமாக வரையறுத்துக்கொண்ட ஆட்சி எல்லைக்கு வெளியே உரிமையுடன் சிற்றரசுகள் சில இருந்துவருமாறு விட்டு வைத்தார். அரசியல் சூழ்ச்சியாலோ, படையாற்றலாலோ தொல்லை கொடுக்காது சிஸ்-சட்லெஜ் சீக்கியரின் தனியரசைத் தனித்து இயங்குமாறு அவர் விட்டு வைத்தார். ஆனால், அதேசமயத்தில் அவர் சட்லெஜ் ஆற்றுக்கு அப்பாலிருந்துவந்த சீக்கிய அரசுகளை எல்லாம் கைப்பற்றி, ஒன்றுபட்ட ஒரு பேரரசை நிறுவினார். பின்னர், வட திசையிலுள்ள காஷ்மீர்மீது அவர் படையெடுத்துச் சென்றார்; அதைப்போன்றே மேற்கிலுள்ள பெஷாவர்மீதும் தென்மேற்கிலுள்ள முல்தான்மீதும் அவர் படையெடுத்துச்

சென்றார். சிந்துவின் தலைவாயிலாக இருந்த ஷிக்கர்பூரின் மீது விழைவார்வத்துடன் அவர் தம்முடைய கருத்தைச் செலுத்தினார். அந் நாடு முழுவதையும் அவர் கைப்பற்றிக் கொள்வதற்கு ஆயத்தமாக இருந்தார். ஆனால், பிரிட்டிஷார் அதற்குத் தடையாக இருந்தனர். ஆனால், அவருக்கு வட மேற்கு எல்லைப்புறக் கணவாய்களுக்கு அப்பால் தம்முடைய ஆட்சியைப் பரப்பவேண்டும் என்ற ஆவலே கிடையாது. ஆப்கானிய நாட்டின் மிகக் கடுமையான குளிரில் போரிட சீக்கிய வீரர்கள் மறுப்பதையும் அவர் உணர்ந்திருந்தார். மேலும், ஆப்கானிஸ்தானத்தில் நிலையாகத் தம்முடைய ஆதிக்கத்தை நிலைநாட்டுவதற்குரிய இன்னல்களையும் இடையூறுகளையும் அவர் நன்கறிந்திருந்தார். இவ்வகையில் அவர் ஆக்லண்டையும், மெக்நாக்டனையும்விடச் சிறந்த செயல் வீரராக விளங்கினார். முக்கூட்டு உடன்படிக்கையைக் குறித்துப் பேச்சு நடந்துகொண்டிருந்தபொழுது, ஷா ஷுஜா விடமிருந்து இரண்டு இலட்சம் ரூபாய் திறையாகப் பெற்றுக்கொண்டு, தம்முடைய அதிகாரத்திற்குட்பட்டிருந்த ஜலாலாபாத்தினை அவருக்குத் திருப்பிக் கொடுத்தார். அவருக்கு ஆப்கானிஸ்தானம், வெளிநாட்டுத் தாக்குதலிலிருந்து தம்முடைய இராச்சியத்தைக் காக்கும் இடைப்படு நாடாக இருந்தது. ஆப்கானிஸ்தானத்தினுள் பல்குழுவும் பாழ் செய்யும் உட்பகையை உண்டாக்குவதன்மூலம் அதனுடைய ஆற்றல்மிக்க தாக்குதல் உண்டாகாமல் செய்வதற்குரிய முறையில் அவர் திட்டமிட்டுச் செயலாற்றினார்.

1839ஆம் ஆண்டு ஜூன் மாதத்தில் இரஞ்சித் சிங் காலமானார். சீக்கிய அரசு விரைவில் அழிந்துவிடும் என்பதற்குரிய அறிகுறியாக அவருடைய இறப்பு அமைந்தது. பேராவல் கொண்டிருந்த, ஆனால் வடிவ அமைதியற்ற சீக்கியத் தலைவர்களைக் கட்டுப்படுத்தி அடக்கியாளக்கூடிய ஒரு மாபெரும் தலைவர் அவர்களிடையே இல்லாமற்போனது அவர்களுடைய அழிவினை விரைவுபடுத்தியது. ஈவு இரக்கமற்றவர்களாக இருந்தவர்கள் முன்கருத்தில்லாதவர்களாகவும், ஆணவமிக்கவர்களாகவும் இருந்தனர். அதனால், செல்வமும் செல்வாக்குமிக்க சீக்கியத் தலைவர்களின் கூட்டணி ஒன்றினை அமைக்க முடியாமல் போயிற்று. நிலைப்படை விரைவில் கட்டுப்பாட்டிற்குட்படுமாறு அடக்கியொடுக்கப் பட்டது. அதைத் தொடர்ந்து சீக்கிய நாட்டு அரசியலில் குழப்பம் உண்டாயிற்று; அக் குழப்பம் நேரடியாகச் சீக்கியப் போரிலே சென்றுமுடிந்தது. இரஞ்சித் சிங்கின் ஒரேமகனும்

வாரிசுமாக இருந்த கரக்கு சிங் 1840ஆம் ஆண்டு கொலை செய்யப்பட்டார். அடுத்த நாள் அவருடைய மகனான நவோ நிகல் சிங் தற்செயலாகக் கொல்லப்பட்டார். பின்னர் புகழ் மிக்க அவருடைய மகன் ஷேர்ஸிங் ஆட்சிக்கு வந்தார். அவரையும் 1843ஆம் ஆண்டு கொலை செய்தனர். ஷேர் சிங்கையடுத்து மற்றொரு புகழ்மிக்க மகனான சிறுவன் துலிப்பு சிங்கு அவனுடைய தாயான அரசி சிந்தான், மன்னரின் பகராட்சியாளராக இருந்து உதவிபுரியும் நிலையில் அரச ரானார். இவர் ஆட்சிக்கு வருவதற்கு முன்பு குழப்பங்களும், கொந்தளிப்புகளும், கொலைகளும் தொடர்ந்து நடைபெற்றன. 'தனிப்பட்ட மனிதர்களைச் சந்திப்பதில்லை; குழுக்களையே சந்தித்துப் பேசுவேன்' என்று ஷேர்சிங் செய்த முடிவு நாட்டிலே 'புஞ்ச்' எனப்படும் படைத்துறைக் குழுக்கள் பல தோன்றி வளர்வதற்கு வாய்ப்பு அளித்தது. அவை விரைவில் ஆதிக்கத்தின் நிலைக்களன்களாக மாறின. ஒழுங்கையும், ஆணையிடும் அதிகாரத்தையும் அதிகாரிகளிடம் ஒப்படைத்து விட்டு, அவை ஆட்சிமுறைச் செயல்களைப்பற்றிச் சொற்போர் புரிந்துகொண்டிருந்தன. இங்கிலாந்திலிருந்த கடும் தூய்மைச் சமயத்தினரின் படைக் குழுக்களுக்கு இருந்ததைப் போன்ற அதிகார உரிமை இவர்களிடத்தும் இருந்துவந்தது. ஆனால், அவற்றிற்கிருந்த எண்ணித் துணியும் உரிமை இவர் களுக்கு இல்லாமற் போயிற்று. அதைவிட இவர்களை நெறிப்படுத்தி இயக்குவதற்குக் கிராம்வெல்லைப் போன்ற ஒரு மாபெரும் தலைவர் இவர்களிடையே தோன்றவில்லை. அரசியல் குழப்பத்திற்கும், உட்பகையுடைய இராணுவத் தலைமைக்கும் தீர்வுகாண ஒரேஒரு வழிதான் இருந்தது. படை களை அடக்கியொடுக்கிக் கட்டுப்படுத்த முடியவில்லை யென்றால், அதைக் கலைத்துவிட வேண்டும்; அல்லது அத னுடைய ஆற்றலைச் செலுத்துவதற்குப் போரில் ஈடுபடுமாறு அதைத் திருப்பிவிடவேண்டும். யாரும் படையைக் கலைத்து விடுவதற்கு நெஞ்சுரம் பெற்றவர்களாக இல்லை. எனவே, இரண்டாவது வழியையே பின்பற்றவேண்டியதாயிற்று. பிரிட்டிஷாருக்கு எதிரான உணர்ச்சியும், பிரிட்டிஷாரின் உள்ளார்ந்த நோக்கங்கள் குறித்து ஐயுறவும் வளர்ந்து கொண்டேவந்தது. ஆப்கானியப் போரில் பிரிட்டிஷாரின் படை படுதோல்வியடைந்தமையால், பிரிட்டிஷாருடைய படை களுக்கு இருந்துவந்த மதிப்புக் குறைந்துபோயிற்று. மேலும், ஏராளமான சில்லறைத் தகராறுகளும் இருதிறத்தினருக்கும் இடையே இருந்துவந்தது. எனவே, படை போரில் இறங்கு வதற்குப் பெருவிருப்பமுடையதாக இருந்தது. ஆனால், படை




படம் 4. பஞ்சாப், 1839.

களால் உண்டாகக்கூடிய பேரச்சத்தை நீக்கவேண்டும் என்ற விருப்பார்வமும் இருந்துவந்தது. எனவே, மன்னரின் பகர ஆட்சியாளரான அரசி சிந்தானும், முதலமைச்சரான லால் சிங்கும், படைத் தளபதியான தேஜ் சிங்கும் அம் முயற்சியைப் போற்றியாதரித்தனர். திடமான தீர்மானம் ஒன்றும் இல்லாமல் அவர்கள் போரிட்டதற்கு இந்த ஊக்கமே காரணமாக அமைந்தது.

பஞ்சாபில் உண்டான நெருக்கடி இடையீடு இல்லாமல் வளர்ந்துகொண்டே வந்தது. அதனால் மனக்கசப்பும் பூசலும் பெருகிக்கொண்டு வந்தமையால், போர் மூண்டுவிடும் என்ற அச்சம் பிரிட்டிஷாரிடையே நீண்டகாலமாக நிலவிவந்தது. 1843ஆம் ஆண்டில் எல்லன்பரோ சிந்தியாவைத் தோற்கடித்தார். அதனால் பக்கத்திலுள்ள நாடுகளையெல்லாம் போரின் மூலம் கைப்பற்ற வேண்டும் என்னும் அவாவானது அவருடைய உள்ளத்தில் கொழுந்துவிட்டு எரியலாயிற்று. மீரட்டுக்கும் சட்லெஜ்ஜுக்கும் இடையில் நிறுத்தப்பட்டிருந்த படையினை ஆக்லண்டும், எல்லன்பரோவும், ஹார்டிஞ்சும் மையப் மையப் பெருக்கிக்கொண்டே சென்றனர். இறுதியாக 94 பீரங்கிகளையும், 40,000 காலாட்படையினரையும் உடையதாக அப் படை விளங்குகின்றவரையில் அதைப் பெருக்கிக் கொண்டே சென்றனர். ஆயினும், அக் காலத்தில் கட்டுப்பாடும் ஒழுங்கும் மிக்க சீக்கியப் படையில் பலநூறு பீரங்கிகளும், 60,000 காலாட்படையினரும் இருந்துவந்தமையால், பிரிட்டிஷார் அப் பகுதியில் நிறுவியிருந்த படையாற்றல் சீக்கியருக்குச் சீற்றத்தை உண்டாக்கவில்லை; போரிடுமாறு தூண்டவும் இல்லை. நிலையற்ற ஆட்சிமுறை அமைப்புகளைப் போலவே, சீக்கிய அரசின் முன்னால் போரிடுவதா அல்லது உள்நாட்டுக் குழப்பத்தை உண்டாக்குவதா என்ற இருவகை பிரச்சினைகள் எழுந்தன. அவற்றுள் அது போரிடுவதைத் தேர்ந்தெடுத்தது.

1845ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 11ஆம் நாள், சீக்கியப் படை சட்லெஜ்ஜைக் கடந்து சென்றது. அது வீரர்களுக்கு இடையே மட்டும் நடைபெற்ற சிறிய போராக இருந்தாலும், அது மிகக் கொடிய போராகும். முட்கி (Mudki), ஃபிரோஷ்ஷா என்னும் இடங்களில் நடைபெற்ற போர்களில் சீக்கியர் ஃபிரோஸ்பூருக்குள் நுழையவொட்டாமல் முறியடிக்கப் பட்டனர். அங்கிருந்து லூதியானவை நேரடியாகத் தாக்கியதும் அலிவால் என்னும் இடத்தில் நடைபெற்ற போரினால்,

சீக்கியர் புறமுதுகிட்டோட நேரிட்டது. 1846ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் 10ஆம் நாள் சோப்ரோன் (Sobraon) என்னும் இடத்தில் இறுதியாகச் சீக்கியர் படை பிளவுபட்டு இரு பிரிவாகப் பிரிந்தது. இருதிறப் படைகளிலும் சிறந்த படைத் தலைவர்கள் இல்லாமற் போயினர். இருதிறப் படைத் தலைவர்களுக்கு இடையே உண்டான நம்பிக்கையின்மை தலைமை இடத்தைச் செயலற்றதாக்கிவிட்டது. பிரிட்டிஷாரின் படைத்தலைவராக விளங்கிய சர் ஹக் கொஃப் (Sir Hugh Gough) என்பவர் சூழ்ச்சிமுறையைக் கையாளாது நேரடித் தாக்குதலை மேற்கொண்டார். மேலும், அவர் பீரங்கிப் படையினைப் பயன்படுத்திக்கொண்டார். அதன் விளைவாகக் கடுமையான தாக்குதல்கள் நடைபெற்றன; நம்பிக்கையற்ற வகையில் இருதிறப் படைகளும் போரிட்டன. பண்டைக் காலத்தில் பிரிட்டிஷார் நெப்போலியனுடன் போர் புரிந்தபொழுது பீரங்கிப் படையின் முக்கியத்துவத்தைப் பற்றிய படிப்பினையைப் பெற்றனர். அதைப்போன்று, இப் போரினால் அவர்கள் சீக்கிய வீரரின் போரிடும் பயன் மதிப்பினைப்பற்றித் தெளிவாக அறிந்தனர்.

இவ்வாறு இறுதியில் சீக்கிய அரசு ஆங்கிலேயரிடம் அடிபணிந்தது. அதை என்னசெய்வது என்பதே பிரிட்டிஷாருக்குப் பெரும் பிரச்சினையாயிற்று. பஞ்சாபினை நேரடியாகத் தங்கள் அரசுடன் இணைத்துக்கொள்ளலாம் என்பது அந் நெருக்கடியைத் தவிர்ப்பதற்குரிய ஒரு வழியாகக் கருதப்பட்டது. ஆனால், இம் முறையைப் பின்பற்றினால் உண்டாகக்கூடிய விளைவு, ஆங்கிலேயருக்கு நன்மை தருமா என்ற ஐயம் உண்டாயிற்று. இதுவரையில் வடமேற்கு எல்லைப் பகுதியின்மூலம் உண்டாகக்கூடிய தாக்குதல்களைத் தடுத்துநிறுத்தும் இடைப்படு நாடாகப் பஞ்சாப் இருந்து வந்தது. அதை இணைத்துக்கொண்டால், தங்கள் அரசுக்கு இருந்துவந்த பாதுகாப்பு அற்றுப்போய்விடுமே என்ற அச்சம் ஒருபுறம் கம்பெனியாருக்கு உண்டாயிற்று. மற்றொருபுறம், பற்றுறுதியற்ற வீரர்களாக உள்ள மக்களைக்கொண்ட ஒரு பெருநிலப்பரப்பைக் கட்டிக்காப்பது என்பது, பிரிட்டிஷாருடைய ஆற்றலுக்கு ஒரு பெருஞ் சுமையாகிவிடுமோ என்ற அச்சம் அவர்களிடையே தலைதூக்கியது. மராட்டிய மாநிலத்தில் செய்ததைப்போன்று, ஒரு துணைப் படையைப் பஞ்சாபில் நிலைநிறுத்துவது இந்தப் பிரச்சினைக்கு ஒரு முடிவாக அமையாதா என்று சிலர் கருதினர். ஆனால், அவ்வாறு செய்தால், ஒருகால் அது மேலும் பூசலுக்கு

இடமளிக்குமோ என்று ஐயுற்றவர்கள் இம் முறையைப் பின்பற்றுவது பெருங் கேடு விளைவிக்கும் என்று கூறி மறுத்து விட்டனர். உண்மையில் ஒரு துணைப் படையைப் பஞ்சாபில் நிறுத்தியிருந்தால் 1848ஆம் ஆண்டு உண்டான முல்ராசின் கலகத்தை முளையிலேயே களைந்தெறிந்து இருக்கலாம். அதன்மூலம் மிகுதியான இரத்தமும் நிதியும் பாழாக்கப் படாமல் காத்திருக்கலாம்; அத்துடன் ஓரளவிற்குப் பஞ்சாபினைத் தன்னாட்சியுரிமையுடைய நாடாக விளங்குமாறு காப்பாற்றியும் இருக்கலாம். ஆனால், செயல்முறையில் இந் நெருக்கடியைத் தீர்ப்பதற்காகச் சீக்கிய அரசிடமிருந்து அதனுடைய படையியல்பினைப் பறித்துவிடவேண்டும் என்றும் பிரிட்டிஷாருடைய அறிவுரையின்படி சீக்கிய அரசினைப் புத்துயிர்ப்புப்பெறுமாறு செய்யவேண்டும் என்றும் அவர்கள் கருதினர். அதனால் இந்நெருக்கடியைத் தீர்ப்பதற்குரிய நல்ல வழி என்ற நோக்கத்துடன் இத்தகைய செயல்முறையில் அவர்கள் ஈடுபட்டனர். 1846ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் 9ஆம் நாள் லாகூர் உடன்படிக்கை கையொப்பமாயிற்று. அதன்படி சீக்கியப் படையாற்றல் 20,000 காலாட் படையினரையும், 12,000 குதிரைப் படையினரையும் உடையதாகக் குறைக்கப்பட்டது. ஜலந்தர் ஆற்றிடைவெளியும், காஷ்மீரும், அதைச் சார்ந்த பகுதிகளும் பிரிட்டிஷாருக்கு நன்கொடையாக வழங்கப்பட்டன. இழப்பீடாக 5,00,000 பவுன்கள் சீக்கியரிடமிருந்து வன்முறையில் பறிக்கப்பட்டன. பேரரசருடைய அரசினைக் கம்பெனியார் ஏற்றுக்கொண்டனர். அவருக்கு அறிவுரை கூறுவதற்காக லாகூரில் ஒரு பிரிட்டிஷ் துணைக் காப்பரசின் ஆளுநர் அமர்த்தப்பட்டார். இவ் உடன்படிக்கையின் இறுதி நிகழ்ச்சி கோலாப் சிங் எனப்படும் ஜம்முவின் டோக்ரா தலைவனிடம் காஷ்மீர் ஒப்படைக்கப்பட்டதோடு ஒரு முடிவிற்கு வந்தது. தம்முடைய சொத்தான பத்து இலட்சம் பவுன்களை ஆங்கிலேயருக்குக் கொடுக்க நேர்ந்ததற்குச் சிறந்ததோர் ஆதாயத்தைப் பெறுவதற்குரிய வாய்ப்பாக இதைக் கருதினார். எனவே, அவர் இந்த வாய்ப்பினை நன்கு பயன்படுத்திக் கொண்டார். தீய சகுனமான இந்தச் செயலின் விளைவு இன்று வரைத் தீராத பெரும் பிரச்சினையை உண்டாக்கிக்கொண்டிருப்பதைக் காணுகின்றோம்.

அவ் உடன்படிக்கையின்படி அமர்த்தப்பட்ட துணைக் காப்பரசின் ஆளுநர் சர் ஹென்றி லாரன்சு என்பவராவார். பண்டை மரபுவழித் தலைவர்களோடு ஒப்பிட்டுப் பார்க்

கின்றபொழுது, ஆளுமையிலும் இரக்கவுணர்ச்சியிலும் இவரைவிடச் சிறந்தவர்களாக வேறு யாரையுமே தேர்ந் தெடுத்து இருக்கமுடியாது. ஆயினும், சீர்திருத்தம் செய்ய வேண்டும் என்று அவர் கொண்டிருந்த பேரார்வமே சீக்கிய அரசினைத் தற்கால முறையில் மனிதப் பண்பினைப் போற்றி மதிக்கும் மாண்புடைய அரசாகப் புதுப்பிக்கவேண்டும் என்ற அவருடைய கனவினைத் தூள்தூளாகத் தகர்த்தெறிந்தது. சீக்கியப் படையியல் ஆற்றல் சிறிது காயப்படுத்தப்பட்டதே யொழிய முற்றிலும் அழித்தொழிக்கப்படவில்லை. சீக்கிய தேசியம் உள்ளூரப் புத்துயிர்ப்புக் கொடுக்கப்படாமல், புறத்தே புதியதொரு மலர்ச்சியை—மறுமலர்ச்சியை—அடையவேண்டும் என்று எதிர்பார்க்கப்பட்டது. அதனால், எத்தகைய சீர்திருத்தங்களைச் செய்ய விரும்பினாலும், அது மேல்நாட்டினர் தங்கள் உரிமையில் தலையிடுவதாகவும், தங்களுடைய மறுமலர்ச்சிக்கு முட்டுக்கட்டையாகச் செய லாற்றுவதாகவும் சீக்கியர்கள் கருதினர். முதலில் எல்லாச் செயல்களும் நன்மை தரத்தக்க நன்முறையில், யாதோர் இடர்ப்பாடுமில்லாமல் நடைபெற்றுவந்தன. ஓராண்டுக் குள்ளாகக் காஷ்மீரில் உண்டான கலகத்தை அடக்கி யொடுக்குவதற்கு லாரென்சு, சீக்கியப் படைகளைப் பயன் படுத்திக்கொண்டார். ஆனால், 1846ஆம் ஆண்டின் இறுதியில் அப்பொழுதிருந்துவந்த மன்னரின் ஆட்சியாளர் பிரதிநிதிக் குழுவினை மாற்றி, அதற்குப்பதிலாக எட்டுத் தலைவர்களைக் (சர்தார்) கொண்ட குழு ஒன்றினை நிறுவி, அதன் தலைவராக லாரென்சு பணியாற்றவேண்டிய பொறுப்பினை ஏற்றார். மற்றுமோர் எட்டாண்டுகளுக்கு பிரிட்டிஷாருடைய காவல்படை தொடர்ந்து பஞ்சாபில் காவல்புரிந்து வந்தது. நட்புறவுகொண்ட தலைவர்களின் வேண்டுகோளுக்கிணங்க இவ்வாறு செய்யப்பட்டது. ஆனால், இச் செயல் வெறிபிடித்த தேசியவாதிகளுக்கும், அயல்நாட்டினரோடு சேர்ந்துகொண்டு பயணம் செய்தவர்கள் என்று தற்காலத்தில் கருதப்படு கிறவர்களுக்கும் இடையே இருந்துவந்த பிளவினைத் தவிர்க்க முடியாதவகையில் ஆழமுடையதாக்கியது. வலிமைமிக்க லாரென்சின் ஆட்சியினுடைய சிறந்த பண்புகளே மிக முனைப்பான தேசியவாதிகளின் கட்சியினை வலுப்பெறச் செய்தது. லாரென்சு உடன்கட்டையேறுதல் எனப்படும் கொடிய வழக்கமான ‘சதி’யென்னும் முறையைத் தாக்கினார். பெண் குழந்தைக் கொலையையும், கொடுமைமிக்க தண்டனை களையும், வெறுப்பினையுண்டாக்கும் வரிகளையும் அவர் நாட்டிலிருந்து அறவே அழித்தொழிக்கவேண்டும் என்று

முயன்றார். அவருடைய நன்னோக்கத்தோடு செய்யப்பட்ட முயற்சிகள் பொதுவாகத் தொன்றுதொட்டுச் சீக்கிய மக்களின் வழக்காற்று நெறிமரபான வாழ்க்கையைத் தாக்குவதற்காகவும், அழிப்பதற்காகவும் செய்யப்படுகின்றன என்று தவறான கண்ணோட்டத்தோடு நாட்டு மக்கள் கருதலாயினர். அவருடைய சீர்திருத்தக் கருத்துகளைப் பாமர மக்கள் மகிழ்ச்சியோடு கேட்டனர்; வரவேற்றனர். ஆனால், தனிப்பட்ட நிலையில் தலைவர்கள் அவருடைய முயற்சிகளைக் கண்டு ஆத்திரத்தோடு முணுமுணுத்துக் கொண்டிருந்தனர். நல்லதொரு வாய்ப்பினை எதிர்பார்த்து அவர்கள் காத்துக் கிடந்தனர்.

1847ஆம் ஆண்டின் இறுதியில் விடுப்பு எடுத்துக்கொண்ட லாரென்சு, பஞ்சாபை விட்டுப் புறப்பட்டமை ஒருகால் அவர்களுடைய கிளர்ச்சியை விரைவுபடுத்தியிருக்கலாம். ஆனால், அவருக்கு எதிர்ப்பாகக் கலகம் ஒன்று உண்டாவதற்குரிய, தவிர்க்க முடியாத சூழ்நிலை அதற்கு முன்பே உருவாகிக் கிடந்தது. நெடுந்தொலைவிற்கு அப்பால் இருந்த ஒரு சீக்கியக் கோட்டையில் உண்டான கிளர்ச்சி நாட்டு மக்களின் தேசிய எழுச்சியாக வளர்ச்சியுற்றமைக்குரிய முக்கியமான காரணம் லாரென்சு பஞ்சாபினைவிட்டு வெளியே விடுப்பில் சென்றிருந்தமையேயாகும் என்று சொன்னால், அது தவறாகாது. 1848ஆம் ஆண்டு, ஏப்ரல் மாதத்தில் முல்தானின் கவர்னரான திவான் முல்ராஜ் என்பவர், இரண்டு பிரிட்டிஷ் அதிகாரிகளுக்குப் பின்னர் படைக்கலமேந்திக் கிளர்ச்சி செய்யத் தொடங்கினார். அவருடைய சீக்கிய அரசுகட்டிலில் அவருக்குப் பின் பதவியில் ஒருவரை அமர்த்துவதற்காக இரு அதிகாரிகள் அனுப்பப்பட்டனர். ஆனால், அவர்களை முல்ராஜ் கொலை செய்துவிட்டார். இப்படுகொலை நடைபெற்ற சமயத்தில் டல்ஹௌசி பிரபு ஆட்சிக்குவந்து மூன்று மாதங்களே ஆகி இருந்தன. எனவே, அவர் தளபதி கொஃபினுடைய அறிவுரையை ஏற்றுக்கொண்டு, அதற்கேற்றவாறு அவர் செயலாற்றினார். இலையுதிர்காலம் வரையில் அக் கிளர்ச்சியாளரைத் தண்டிக்கும் வகையில் எத்தகைய நடவடிக்கையும் எடுக்காமல் காலம் தாழ்த்த வேண்டும் என்று தளபதி ஆலோசனை கூறினார். இளைஞரான எர்பர்ட் எட்வர்ட்ஸ் உள்நாட்டில் தமக்குக் கிடைத்த படையுதவியைக்கொண்டு முல்ராஜினைத் தாக்கினார். ஆனால், அக் கோட்டையைத் தகர்த்தெறியவோ, அக் கலகத்தைப் பிற இடங்களில் பரவவொட்டாமல் தடுக்கவோ அவரால் இயலவில்லை. செப்டம்பர்

மாதத்தில்தான் இந்நெருக்கடி உச்சநிலையை அடைந்தது. அம் மாதத்தில் கலகக்காரர்களை அடக்கியொடுக்க துணைக் காப்பரசின் ஆளுநர் சீக்கியப் படை ஒன்றினை அனுப்பிவைத்தார். அந்நிலையில் லாகூரின் அரசவைத் தலைவராக இருந்த ஷேர் சிங், முல்ராஜின் கட்சியில் சேர்ந்துகொண்டார். இயற்கையாகக் குறிப்பிட்ட ஓர் இடத்தில் உண்டான கிளர்ச்சி தேசியப் புரட்சியாக மாறியது. அப்பொழுது டல்ஹௌசி பேராற்றலுடனும் பேருக்கத்துடனும் செயலாற்றத் தொடங்கினார். அப்பொழுது அவர் பெற்ற அப் பண்புகளை அவருடைய ஆட்சியின் இறுதிவரையில் அவர் இழக்கவே இல்லை. 'முன்பு எப்பொழுதுமே நடைபெற்றிராத வகையில், எடுத்துக்காட்டுகளினால் செல்வாக்குப் பெருமிதல் சீக்கிய இனம் போருக்கு அழைக்கிறது; ஐயன்மீர்! என்னுடைய சொற்களின்படி அந்த எல்லை வரையில் உணர்ச்சியோடு அவர்கள் அந்த எல்லையை அடைவார்கள்' என்று அக்டோபர் 10ஆம் நாள், டல்ஹௌசி அறிவித்தார்.[1] மீண்டும் கொஃப் பிரபு படைகளுக்குத் தலைமை தாங்கினார். அக்டோபர் 16ஆம் நாள் அவர் ரவி ஆற்றைக் கடந்து சென்றார். முதலில் பேரிழப்புக்குக் காரணமாக இருந்த, முடிவுறாத இரு பெரும் போர்கள் இராம் நகரிலும், சில்லியன் வாலாவிலும்[2] நடைபெற்றன. அவற்றின் விளைவாகக் குஜராத்தில் மிகக் கொடியதொரு போர் நடைபெற்றது. கொஃப் ஒருமுறை தம்முடைய பீரங்கிப் படை முழுவதையும் பயன்படுத்தினார். சீக்கியப் படை இழந்ததை மீண்டும் திரும்பப் பெறமுடியும் என்ற நம்பிக்கை சிறிதுகூட இருப்பதற்கு இடமில்லா வகையில், சீக்கியப் பெரும்படை சுக்கு நூறாகத் தகர்த்தெறியப்பட்டது. எஞ்சியிருந்த அதன் சிறு

[1] 'Vengeance' என்னும் சொல் 'பழிக்குப் பழிவாங்குதல்' எனும் பொதுப் பொருளில் இங்குப் பயன்படுத்தப்படவில்லை. ஃபிரெஞ்சு மொழியில் இச் சொல்லிற்கு 'அந்த எல்லை வரையில்' என்னும் பொருள் வழங்குகிறது. அப் பொருளிலேயே அச் சொல் இங்கு வழங்கப்பட்டு இருக்கிறது.

[2] இச் சமயத்தில் உண்டான இழப்புகள் (2,446 வீரர்கள், 4 பீரங்கிகள், 3 படைப் பிரிவுகள்) லண்டன் மாநகரப் பொதுமக்களின் உணர்ச்சியைத் தூண்டியது. அதன் விளைவாக அவர்கள் கொஃப்பினைப் பதவியிலிருந்து நீக்கிவிட்டு, நேப்பியரை அப் பதவியில் அமர்த்த விரும்பினர். நேப்பியர் இந்தியாவிற்கு வருவதற்குள் கொஃப் குஜராத்தினைக் கைப்பற்றிக்கொண்டார்.

பகுதி 1849ஆம் ஆண்டு மார்ச்சு மாதம், தானே பிரிட்டிஷாரிடம் அடைக்கலம் அடைந்தது.

தம்முடைய சொந்தப் பொறுப்பில் டல்ஹௌசி இவ்வாய்ப்பினைப் பயன்படுத்திக்கொண்டு, பஞ்சாபினை பிரிட்டிஷாருடைய அரசுடன் இணைத்துக்கொண்டார்.[1] லண்டனிலிருந்து அவருக்குத் தெளிவான முறையில் ஆணைகள் அனுப்பப்படவில்லை. இச்செயல்முறையில் லண்டன் அவருக்கு நல்ல முறையில் வழிகாட்டவில்லை என்றே சொல்லலாம். அதே சமயத்தில் எல்லன்பரோ, ஹென்றி லாரன்சு போன்ற பொறுப்புவாய்ந்த அதிகாரமுடையவர்கள் சிலர் அச்செயலினை வன்மையாக எதிர்த்தனர்; ஜான் லாரன்சு போன்ற மற்றவர்கள் பஞ்சாபினைக் கம்பெனியின் இராச்சியத்தில் இணைத்துக்கொள்ளுவதற்குப் பேராதரவு அளித்தனர். மைசூரைச் செய்ததைப்போன்று சிறிது காலத்திற்குப் பஞ்சாபினைக் கம்பெனியின் அரசில் சேர்த்துக்கொள்ளுவதற்கும், ஆட்சிமுறையினை நிலைநாட்டுவதற்கும் இடைப்பட்ட நிலையில் ஆங்கிலேயருடைய வாய்ப்பு இருந்துவந்தது. இவற்றுள் ஆட்சிமுறையை நிலைநாட்டுவதே சிறந்தது என்று கருதியவர்கள் பின்வரும் விளக்கத்தைத் தந்தனர். பிரிட்டிஷாரின் பிரதேசத்திற்குள் அடங்காது எல்லைப்புறப் பகுதியில் கிடக்கும் பெருவெளியே பஞ்சாப்; அதனைக் கம்பெனியின் இராச்சியத்தோடு இணைத்துக்கொள்ளுவது இடர்ப்பாடானது. எனவே, ‘துன்பத்தை நாம் ஏன் விலைகொடுத்து வாங்க வேண்டும்’ என்பது அவர்கள் கருத்தாகும். மேலும், அங்கு மற்றொரு தேசியப் புரட்சிக்கு மீண்டும் ஏன் இடம் கொடுக்க வேண்டும் என்பது அவர்களுடைய கேள்வி. முற்றிலும் ஊக்கம் இழந்து களைத்துப்போன முடியரசுகளால் ஒரு பயனும் உண்டாகாது என்று டல்ஹௌசி கருதினார். மேலும், அவருக்குக் கீழைநாட்டு வழக்காற்று மரபுகள் ஒன்றுமே தெரியாது. பழைய சீக்கிய அரசாங்கம் நல்லதன்று; அதனால் தீமையே உண்டாகும் என்பதைமட்டும் அவர் நன்கறிந்திருந்தார். எனவே, பஞ்சாப் மாநிலத்தைக் கம்பெனியின் அரசோடு இணைத்துக்கொள்ளுவது பொது அறிவுக்கு உகந்த செயலாகவும், பொதுவாக மக்களினத்திற்குச் செய்யக்கூடிய தொண்டாகவும் அவருக்குத் தோன்றியது. மேலைநாட்டு மக்

[1] தூலிப் சிங் ஓய்வுச் சம்பளம் கொடுக்கப்பட்டார். பிற்காலத்தில் அவர் இங்கிலாந்தில் நாட்டுப்புற நன்மனிதராக வாழ்ந்துவந்தார்.

களின் தன்னம்பிக்கை என்னும் அலைகளினால் கொண்டுவந்து சேர்க்கப்பட்ட மக்களுடைய பொது எண்ணம், டல்ஹௌசிக்கு ஆதரவாகவே இருந்தது. திறமைமிக்க ஆட்சியை அங்கு நிலைநாட்டுதல் என்பதே அரசின் ஒப்பற்ற குறிக்கோளாக இருக்குமானால், அதற்காகப் பஞ்சாபை இணைத்துக்கொள்ளு வதை யாரும் எதிர்க்கமாட்டார்கள் என்ற நம்பிக்கை அவருக்கு இருந்துவந்தது. ஆனால், எச் சமயங்களில் எல்லாம் ஒரு தேசிய இனம் தன்னுடைய சுதந்திரத்தை இழக்கின்றதோ, அச் சமயங்களில் எல்லாம் அத் தேசிய இனம் தன்னுடைய 'கூட்டு ஆளுமையின்' இயல்புகள் சிலவற்றை இழந்துவிடுகிறது. பொருள்திற நன்மைகளோடும், ஆன்மீக அமைதியின்மையோடும் தற்காலத்திற்குரிய புதுமைப் பொலிவுமிக்க உணர்ச்சி பஞ்சாபிற்கு வரவேண்டியிருந்தது. ஆனால், அது சீர்திருத்தக் குழுவினரின் கட்டுப்பாடற்ற செயல் முறைகளினால் உள்ளூரக் கொண்டுவரப்படுவதற்கு மாறாக, அயல்நாட்டினரின் ஆட்சியால் கொண்டுவரப்படுமானால், நாட்டிலே உண்டாகக்கூடிய மாற்றங்கள் மிகப் பையவே நடைபெற்றாலும் நாளடைவில் முழு நிறைவு உடையதாக முற்றுப்பெறும் என்று பலர் உறுதியாக நம்பினர். அவ்வாறு செய்திருந்தால் பஞ்சாபில் பிற்காலத்தில் நிகழ்ந்த நிகழ்ச்சிகளுள் பெரும்பாலானவற்றை—நாடு இரண்டாகப் பிரிக்கப் பட்டமைகூட—நடைபெறவொட்டாமல் தவிர்த்திருக்கலாம். பல்வேறு சமூகத்தினரைக்கொண்ட ஒருமைப்பாடுடைய ஓர் அரசாகப் பஞ்சாப் விளங்குவதற்குரிய வாய்ப்புக் கிடைத்த பொழுது, சீக்கியர் தங்களுடைய மடமையினால் அதை நழுவ விட்டனர்; இரண்டாவதாகக் கண்ட ஆட்சிமுறையமைப்பை நிறுவுவதற்குக் கிடைத்த வாய்ப்பினைத் தம்முடைய அளவுக்கு மீறிய நம்பிக்கையினால் டல்ஹௌசி இழந்தார். ஹென்றி லாரன்சு தம்முடைய சீர்திருத்தத் திட்டங்களைச் செயற் படுத்துவதில் மிகுந்த வேகம் உடையவராக இருந்தார். எனினும், அவர் பஞ்சாபின் நோய்களைப் போக்குவதற்குக் கொடுத்த மருந்துகள் பொருத்தமானவையாகவும் நேர்மை யானவையாகவும் இருந்தன என்பதுமட்டும் மறுக்கமுடியாத உண்மையாகும்.

## ஆதாரங்கள்

சிந்துவில் எல்லன்பரோவின் செயல்முறைகளைப்பற்றி அறிய கோல்செஸ்டர் பிரபுவும், சர். எ. லாவும் எழுதியுள்ள நூற்களைப் பார்க்கலாம். சிந்து மாநிலம் ஆங்கிலேயர்களால்

கைப்பற்றப்பட்ட காலத்தில் இருந்த நிலைமையை ஜேம்ஸ் பர்ன்சு என்பவர் 'Narrative...' என்ற நூலில் மிக அழகாக வருணித்துள்ளார். சிந்து மாநிலத்தைப்பற்றிய மாண்புமிக்க கருத்துமாறுபாட்டை சர். W. நேப்பியர் எழுதியுள்ள, 'The Conquest of Scinde (1845)' என்னும் நூலிலும், 'சிந்துவில் சர் சார்லஸ் நேப்பியரின் ஆட்சி' (1851) என்னும் நூலிலும், 'சர் சார்லஸ் நேப்பியரின் வாழ்க்கை வரலாறு' (4 தொகு., 1857) என்னும் நூலிலும் ஒருவகையான செய்திகளைப் பரக்கக் காணலாம். சர். ஜே. அவுட்ராம் என்பவர் எழுதியுள்ள, 'Conquest of Scinde , a Commentary', (1846) என்ற நூலிலும், சர். F. J. கோல்ட்ஸ்மிட் என்பவர் எழுதியுள்ள 'James Outram' (2 தொகுதிகள்) என்ற நூலிலும் மற்றொரு வகையான செய்திகளைக் காணலாம். தற்காலத்தில் H. J. லாம்பிரிக்கு என்பவரால் எழுதப்பட்ட 'Sir Charles Napier and Sind' (1952) என்னும் நூல் விரிவானதும் ஆதாரங்கள் நிறைந்ததுமான ஆராய்ச்சி நூலாகும்.

சீக்கியம்பற்றி வெளிவந்துள்ள நூற்களில் M. A. Macauliffe என்பவர் எழுதியுள்ள 'சீக்கியரின் சமயம்' (6 தொகுதி. 1909) என்னும் நூல் தலைசிறந்ததாகும். தற்காலத்தில் சீக்கியரைப்பற்றியும், சீக்கியத்தைப்பற்றியும் பயனுடைய முறையில் தொகுக்கப்பெற்ற செய்திகளைக் கொண்டது K. சிங் என்பவரால் எழுதப்பட்ட 'சீக்கியர்' (1953) என்னும் நூலாகும். 1846ஆம் ஆண்டுவரை சீக்கிய வரலாற்றை எடுத்துரைக்கும் நூற்களில் ஜே. டி. கன்னிங்காம் எழுதியுள்ள 'History of the Sikhs' (ஆக்ஸ்ஃபோர்டு, 1918) என்னும் நூல் மிகச் சிறந்த விளக்க நூலாக இருந்துவருகிறது. மேலும், G. C. நாரங் எழுதியுள்ள 'The Transformation of Sikhism' என்னும் நூலையும் பார்க்க. பஞ்சாபைப்பற்றிப் பொதுவாக அறிவதற்கு சையது முகமது லத்தீஃப் எழுதியுள்ள 'History of the Punjab' (1891) என்னும் நூலைப் படிக்கலாம். ஐரோப்பியத் துணிகரச் செயல்வீரர்களைப்பற்றி H. L. O. Garrett என்பவரும், C. கிரே என்பவரும் 'European Adventurers in the Punjab' (லாகூர், 1929) என்றொரு நூல் எழுதியுள்ளனர்.

அச்சிடப்பட்ட பதிவேடுகளுள் பஞ்சாப் அரசின் ஆவணப் பதிவேடுகள் 9 தொகுதிகளாக வெளியிடப்பட்டுள்ளன. அவையல்லாமல் பாராளுமன்ற நடவடிக்கைக் குறிப்புகள் பல நூற்களாக வெளிவந்துள்ளன. மேலும், டல்ஹௌசியின் 'Private Letters' என்பதும், ஹார்டிஞ்சினுடைய 'Despatches' என்பதும் அச்சாகியுள்ளன. லீ வார்னர் என்பவர் எழுதியுள்ள 'டல்ஹௌசியின் வாழ்க்கை' (1904) என்னும் நூலில் டல்ஹௌசியின் பங்கு விரிவாக விளக்கப்பட்டுள்ளது. ஹென்றி லாரன்சினுடைய வரலாறு 'Lives' என்னும் நூலில் H. B. எட்வர்ட்ஸ் என்பவரால் விளக்கப்பட்டுள்ளது. அதைப் போன்றே H. Merivale (1872), J. L. Morison (1934) என்பவர்களும் அவரைப்பற்றி நூற்கள் எழுதியுள்ளனர். ஜானியினுடைய வாழ்க்கையை S. B. ஸ்மித் என்பவர் 'Life' (மூன்றும்

பதிப்பு, 1883) என்னும் நூலில் நயந்தோன்ற விளக்கியுள்ளார்.

இரஞ்சித் சிங்கினைப்பற்றி V. Jacquement என்பவர் 'Letters from India' (1834) என்ற நூலிலும், அவருடைய அவைக்களத்தைப்பற்றி W. G. Osborne 'Court and Camp of Runjeet Singh' (1840) என்னும் நூலிலும் இனிமையாகவும் கவர்ச்சியாகவும் எழுதியுள்ளனர். இரஞ்சித் சிங்கினைப்பற்றி ஆராய்ச்சி நூல்கள் பல வெளிவந்துள்ளன. அவற்றுள் சர். L. கிரிஃப்பின் எழுதியுள்ள நூலும் (1911), N. K. சின்ஹா எழுதியுள்ள நூலும் குறிப்பிடத்தக்கன.

சீக்கிய அரசைப்பற்றி அறிவதற்கு N. K. சின்ஹா எழுதியுள்ள 'The Rise of the Sikh Power' என்ற நூலையும், H. L. சோப்ரா எழுதியுள்ள 'The Punjab as a Sovereign State' என்ற நூலையும் பார்க்கலாம்.

## 5. அரசும் மக்களும் : அதிகார அமைப்பு முறை

பிரிட்டிஷாரின் ஆட்சிக்குட்பட்டிருந்த இந்தியா, பஞ்சாபைக் கைப்பற்றியதுடன் ஒரு முழு வடிவத்தைப் பெற்றது என்று கூறலாம். சிந்து நதிமுதல் வங்காளக் கடல் வரையில் பரந்துகிடந்த இந்திய நாட்டிற்குத் தலைவர்களாகப் பிரிட்டிஷ்காரர்கள் விளங்கினர். இந்த விரிந்த பெருநிலப் பரப்பில் அடங்கிக் கிடந்த அரசுகளை அவர்கள் எவ்வாறு ஆட்சி செய்யத் திட்டமிட்டிருந்தனர் என்னும் வினாவினை நமக்கு நாமே கேட்டுக்கொள்ளலாம். அவர்கள் மரணத் துடன் போராடிக்கொண்டிருந்த முகலாயப் பேரரசின் மரபுரிமையாளராக ஆட்சிப் பொறுப்பை ஏற்றனர். அப் பொறுப்பினை மராட்டிய அரசுகளின் இறுதிப் பத்திரத்தின் மூலம் பெரும் செல்வமாகப் பெற்றதன் விளைவாகத் தொடர்ந்து செயற்படுத்தி வந்தனர். இந்தியாவிற்கு மேலை நாட்டு நாகரிகத்தின் நறுமணத்தைக் கொண்டுவந்து சேர்த்த முன்னோடிகள் என்று தங்களுடைய நற்பணியைக் குறித்து அவர்கள் பெருமைப்பட்டுக்கொள்ளத் தொடங்கினர். ஆனால், தற்பொழுது இந்தியா நெடுங்காலம் வரைக்கும் தங்களைச் சார்ந்திருக்கிற உரிமையற்ற நாடாகவே இருக்கவேண்டும் என்று அவர்கள் நம்பினர். இவ் இடைக்காலத்தில் அவர்கள் இந்திய நாட்டை ஆளுவதற்கு என்ன திட்டம் வகுத்திருந்தனர் என்பதே கேள்வி. முதலில் கம்பெனி எவ்வாறு மேற் பார்வையிட்டுவந்தது என்பதை, நாம் முன்னரே ஒருவாறு அதனுடைய அடிச்சுவடுகளை ஆராய்ந்து பார்த்தபொழுது கண்டோம். கம்பெனியின் மேற்பார்வைக்குட்பட்டிருந்த பிரிட்டிஷாரின் இந்திய அரசினை இங்கிலாந்தின் முடியாட்சி எவ்வாறு தன்னுடைய நேர்முக ஆட்சிக்குரியதாக்கிக் கொண்டது என்பதையும் நாம் முன்னரே கண்டோம். கம்பெனியின் வாணிகப் பண்பு பையப்பையக் குறைந்து இறுதியில் மெல்ல மறைந்தே போயிற்று. இந்தக் கால

கட்டத்தில் படிப்படியாக வளர்ச்சியுற்ற ஆட்சிமுறை அமைப்பின் இயல்புகளை நாம் இங்கு விரிவாகக் காண்போம். மேலும், பெரும்பாலான பொதுமக்களிடத்து 'கம்பெனி பகதூர்' என்னும் சிறப்புப் பெயர் என்ன பொருளில் வழங்கப் பட்டு வந்தது என்பதையும் நாம் இங்கு ஆராய்ந்தறிய முயலுவோம்.

முதலில் நாம் மத்திய செயற்குழு (executive) எவ்வாறு வளர்ச்சியுற்றது என்பதைக் காண்போம். இந்தியாவில் தோன்றிய பெரும்பாலான பேரரசுகள், நாடுகளைக் கைப் பற்றுவதற்கும் அவற்றைக் கட்டுப்படுத்தி ஆளுவதற்கும் ஒரே தலைமைப் பதவியையுடையனவாக விளங்கின. அத் தனிப்பெருந் தலைவர் தம்முடைய அரசினை விரிவுபடுத்தி, நன் முறையில் நிறுவிய பிறகு, தம்முடைய அதிகாரத்தைப் பிறரிடம் மாற்றி ஒப்படைப்பதும் உண்டு. சிற்சில சமயங் களில், மராட்டியருடைய பேஷ்வாக்களைப் போன்று தலைவருடைய பிரதிநிதியாகப் பணிபுரிந்தவர்கள் திறமை மிக்க ஆட்சியாளர்களாக மாறியதும் உண்டு. அதன் விளைவாக அரசு பல்வேறு சிறு இராச்சியங்களாகப் பிரிக்கப் பட்டு அதிகாரம் பகிர்ந்துகொள்ளப்படுவதும் உண்டு; சில சமயங்களில் இம் முறையினால் பேரரசு சிதறுண்டு சிதைந்து போவதும் உண்டு. தனித்து இருப்பதனாலேயே பிரிட்டி ஷாரைப் பொறுத்தவரையில் மேலாதிக்கம் வளரத் தொடங் கியது. அது மெல்ல வளர்ந்து ஒன்றுபட்ட பேரதிகாரமாக உறுதிப்பட்டது. லண்டனில் உள்ள கம்பெனியின் மேலாதிக் கத்திற்கு நேரடியாகக் கீழ்ப்படிந்திருந்த மூன்று மாநில அரசுகள் முதன்முதல் இந்தியாவில் நிறுவப்பெற்றன. இந் நிலை 1773ஆம் ஆண்டு ஒழுங்குமுறைச் சட்டம் இயற்றப் பட்ட காலம்வரையில், தொடர்ந்து நிலவி வந்தது எனலாம். அச் சட்டம் இயற்றப்பட்ட பிறகுதான், கல்கத்தாவிலிருந்த கவர்னர்-ஜெனரலுக்கு மற்ற இரு மாநிலங்களையும் கண் காணிப்பதற்குரிய பொதுவான அதிகாரம் வழங்கப்பட்டது. 1783ஆம் ஆண்டில் இவ் அதிகாரம் விரிவுபடுத்தப்பட்டது. 'இந்திய நாட்டிலுள்ள அரசுகளோடு மாநிலக் கம்பெனிகள் கொள்ளும் தொடர்புகளையும் அல்லது போரிடுதல் அல்லது சமாதான உடன்படிக்கை செய்துகொள்ளுதல்போன்ற செயல்முறைகளையும் அல்லது அம் மாநிலங்களின் வருவாய் அல்லது படைகளைப் போர்க்காலத்தில் பயன்படுத்தும் முறை களையும்' கண்காணித்துக் கட்டுப்படுத்தும் உரிமையும் அதிகாரமும் கவர்னர்-ஜெனரலுக்கு வழங்கப்பட்டது. இதனை

1793ஆம் ஆண்டு இயற்றப்பட்ட சட்டம் ஏற்றுப் போற்றியதோடு, அதன் முக்கியத்துவத்தைத் தெள்ளத் தெளிய விளக்கியது. அச் சட்டம், ஒரு மாநிலத்திற்கு கவர்னர் ஜெனரல் எழுந்தருளுவாரானால், அப்பொழுது அந்த மாநில கவர்னருக்கு இருக்கும் அதிகாரத்தைக்காட்டிலும், கவர்னர்-ஜெனரலுக்கே எல்லாவகையான மேலதிகாரமும் உண்டு என்பதை அறிவித்தது. அதனால் கவர்னர்-ஜெனரல் மாநில கவர்னர்களுக்கு எல்லாம் தலைவர் என்னும் கருத்து நிலைநாட்டப்பட்டது. இறுதியில் நடைபெற்ற மைசூர் போருக்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்து கொண்டிருந்தபொழுது, வெல்லஸ்லி இவ் அதிகாரத்தினைச் செயல்முறையில் காட்டினர். ஆகவே, இதுமுதல் பெரிய ஆட்சிமுறைக் கொள்கைகளில் எல்லாம் ஒருவகை ஒற்றுமையும் ஒருமைப்பாடும் இடம்பெறலாயிற்று. மதராஸ், பம்பாய் கவர்னர்களுக்கு நேரடியாகத் தாயகத்திலுள்ள கம்பெனி இயக்குநர்களோடு தொடர்புகொள்ளும் உரிமை தொன்றுதொட்டு இருந்துவந்தபோதிலும், அவர்களுடைய முயற்சியினால், கவர்னர்-ஜெனரலுடைய ஆட்சிமுறைக் கொள்கை பெரிதும் பாதிக்கப்படவில்லை என்றே கூறலாம். இவ்வாறு உள்நாட்டுச் செயல்முறைகளில் சென்னைக்கும் பம்பாய்க்கும் இருந்துவந்த உள்துறை அதிகார உரிமைகள் கணிசமான அளவிற்குப் பறிக்கப்பட்டன. ஆனல், அதேசமயத்தில் கல்கத்தாவில் இருந்துவந்த கவர்னர்-ஜெனரலின் அதிகாரம் வளர்ச்சியுற்றதோடு, மற்ற மாநிலங்களின் ஆட்சியினைக் கண்காணிக்கும் பொறுப்பையும் பெற்ருர்.

நாம் முன்பு கண்டதைப்போன்று, கவர்னர்-ஜெனரல் அவருடைய மாநிலமாகிய கல்கத்தாவில் பேராற்றல்மிக்க தலைவராக விளங்கத் தொடங்கினர். பிட் இந்தியச் சட்டத்தின்படி, அவருடைய கவுன்சில் உறுப்பினர்களின் எண்ணிக்கை மூன்ருகக் குறைக்கப்பட்டதாலும், 1786ஆம் ஆண்டு இயற்றப்பட்ட சட்டத்தின்மூலம் கவுன்சிலின் கருத்தினைப் புறக்கணித்துத் தம்முடைய கருத்தினையே கவுன்சில் ஏற்றுக்கொள்ளுமாறு வற்புறுத்தும் உரிமையை அவர் பெற்றமையாலும், கவர்னர்-ஜெனரல் பதவி பேராற்றலும் பெருமதிப்பும் உடைய சிறப்புமிக்க பதவியாகப் போற்றப்பட்டது. இவ் அதிகாரம், அவருடைய கவுன்சில் தனிப்பட்ட வகையில் அவர் பேராதிக்கம் உடையவராக விளங்குவதற்கு வழிகோலியதோடு, அக் கவுன்சில் இல்லாமலேயே செயலாற்றவும் உதவியாக இருந்தது. கவர்னர்-ஜெனரல் தம்

விருப்பம்போல உள்நாட்டின் பல்வேறு பகுதிகளுக்குச் சென்று நிலைமையை நேரில் கண்டு, அதைப்பற்றித் தம்முடைய தீர்மானங்களை அனுப்பிவைக்கும் உரிமையை இவ் அதிகாரத்தினுல் பெற்ருர். அவர் இவ்வாறு அனுப்பிவைக்கின்ற தீர்மானங்களைக் கவுன்சிலில் உள்ள உறுப்பினர்கள் எதிர்க்கலாமேயொழிய, அத் தீர்மானங்களைத் தலைகீழாக மாற்றும் உரிமை அவர்களுக்குக் கிடையாது. மிகப் பரந்தொரு நாட்டில், போக்குவரத்து மிகப் பையவே நடைபெற்று வரும் நாட்டில், எல்லைப்புறங்களிலிருந்து மிக நெடுந் தொலைவில் தலைநகரம் அமைந்திருக்கும் நாட்டில், கல்கத்தாவிற்குத் தேவையான எல்லா வகையான செய்திகளையும் அறிவித்து, அவற்றைக் கவுன்சிலில் ஆராய்ந்து முடிவு காண்பதற்கு முன்பே தீர்மானத்திற்கு கவர்னர்-ஜெனரல் வர வேண்டிய நெருக்கடியும் தேவையும் அடிக்கடி இருந்துவந்தன என்றே சொல்லலாம். 'குதிரையேறும் படிக்கட்டிலிருந்து' ஆட்சி செய்யும் முறை என்று அதனை எல்லன்பரோ கூறிவந்தார். ஹேஸ்டிங்ஸ் பிரபு பிண்டாரியரை அடக்கியொடுக்க மேற்கொண்ட முயற்சிகளும், 1817-18ஆம் ஆண்டுகளில் நடைபெற்ற இறுதி மராட்டியப் போர்களில் அவர் நேரில் போர்த்துறைச் செயல்முறைகளைக் கண்காணித்தமையும், 1830-3ஆம் ஆண்டுகளில் பென்டிங் உள்நாடு முழுவதும் பயணம் செய்து பல அரிய உண்மைகளைக் கண்டுவந்தமையும் மேற்கண்ட ஆட்சிமுறை மிகச் சிறந்த முறையில் பணிபுரிந்ததற்குத் தக்க சான்றுகளாவன. எளிதில் பிறருடைய கைப்பாவையாக மாறும் அல்லது ஆழ்ந்து சிந்தித்துத் தீர்ப்பு காண முடியாத கவர்னர்-ஜெனரல்கள் அவ் ஆட்சிமுறையைப் பின்பற்றியதனுல், 1838ஆம் ஆண்டில் ஆக்லண்டு பிரபு சிம்லாவில் தற்காலிகமாகத் தங்கியிருந்தபொழுது, இன்னல்களும் இடர்ப்பாடுகளும் தோன்றின. 1838ஆம் ஆண்டு அக்டோபர் முதல் நாள் ஆப்கானியப் படையெடுப்பைப்பற்றி அவர் வெளியிட்ட அறிக்கை, கவுன்சில் உறுப்பினர்களைக் கலக்காமலேயே அறிவிக்கப்பட்டது. அவ் அறிக்கையை வெளியிடுவதற்கு முன்பு தங்களுடைய கருத்துகளையும், எண்ணங்களையும் அதில் தங்களால் பதிவு செய்ய வாய்ப்பளிக்காமையை எதிர்த்து அவர்களால் வன்மையாகக் கண்டிக்க முடிந்ததே தவிர, வேருென்றும் செய்யமுடியாமல் போயிற்று. கட்டுப்பாட்டுக் கழகத்தின் தலைவரால் எத்துணைக் காலம் கவர்னர்-ஜெனரல் ஆதரிக்கப்பட்டுவந்தாரோ, அத்துணைக் காலம்வரையில் இந்தியாவில் எந்தச் சக்தியும் அல்லது எந்த மனிதரும் அவரை எதிர்த்து நிற்க முடியாமல்

போயிற்று. நெடுந்தொலைவில் இருந்துவந்தமையாலும், ஒரு நெருக்கடியான நிலைமையை உருவாக்க விரும்பாமையாலும், தாயகக் கட்டுப்பாட்டிலிருந்தும்கூடக் கணிசமான அளவிற்கு கவர்னர்-ஜெனரல் உரிமைகளைப் பெற நேர்ந்தது. தாயகக் கட்டுப்பாட்டிலிருந்தும் கவர்னர்-ஜெனரல் ஓரளவிற்குத் தனித்தியங்கும் உரிமை பெற்றதற்கு எல்லன்பரோ பிரபுவின் செயல்முறைகளை எடுத்துக்காட்டாகக் கூறலாம். காரன் வாலிஸின் காலம்முதல், கவர்னர்-ஜெனரல் இந்தியாவின் ஆற்றல்மிக்க 'சிறப்புவாய்ந்த முகலாயராக' விளங்கினார் என்று கூறினால், அது மிகையாகாது.

வங்காள மாநிலம் விரிவுபடுத்தப்பட்டதன் விளைவாக கவர்னர்-ஜெனரலின் உள்துறை அதிகாரம் மிகுதிப்பட்டது. திப்புவின் வீழ்ச்சிக்குப் பிறகு சென்னை மாநிலத்தின் எல்லை, நடைமுறையில் நன்கு வரையறுக்கப்பட்டது. 1818ஆம் ஆண்டு பேஷ்வாவின் வீழ்ச்சிக்குப் பிறகு பம்பாய் ஒரு மாநில மாக உருவாக்கப்பட்டது. அதனுடன் 1843ஆம் ஆண்டு சிந்து மாவட்டமும் சேர்க்கப்பட்டது. கல்கத்தாவிலிருந்து வடக்கிலும் மேற்கிலும் உண்டான விரிவுகள் அனைத்தும் கவர்னர்-ஜெனரலின் நேரடியான கட்டுப்பாட்டின்கீழ் வந்தது. இராசபுதனமும், நடு இந்திய அரசுகளும் பிரிட்டிஷாரின் அதிகார வரம்புக்குட்பட்ட காலத்தில், அவற்றை எவ்வாறு அவர் நேரடியாகக் கண்காணித்து வந்தாரோ அதைப் போன்று, மற்ற வட இந்தியப் பகுதிகளையும் கண்காணிக்க வேண்டிய பொறுப்பு அவரைச் சார்ந்ததாயிற்று. ஐதராபாத்தினை நாம் இப் பட்டியலில் சேர்ப்போமானால், அயல்நாட்டுக் கொள்கைகளும் செயல்முறைகளும் மட்டுமல்லாமல், உள் நாட்டில் பிரிட்டிஷாருடைய ஆதரவைப் பெற்று விளங்கிய அரசுகளின் செயல்முறைகளையும், பிரிட்டிஷாருடைய இந்திய இராச்சியத்தின் பெரும் பகுதியின் ஆட்சியையும், கவர்னர்-ஜெனரலே நேரடியாகப் பொறுப்பேற்று நடத்த வேண்டிய இன்றியமையாமை உண்டானதை நாம் காணுகின்றோம். ஆட்சிமுறை அதிகாரத்தினைப்போன்றே அவருடைய சட்டம் இயற்றும் அதிகாரமும் முதலில் அவருடைய மாநில வரம்புக் குட்பட்டதாகக் கட்டுப்படுத்தப்பட்டது. ஆனால், 1833ஆம் ஆண்டு இயற்றப்பட்ட பட்டயச் சட்டம், வங்காளத்திலுள்ள வில்லியம் கோட்டையின் கவர்னர்-ஜெனரலாக இருந்தவரை 'இந்தியாவின் கவர்னர்-ஜெனரலாகப்' பதவியுயர்வு பெற்று விளங்குமாறு செய்தது. மேலும், இந்தியா முழுமைக்கும் தேவையான சட்டங்களை இயற்றுவதற்குரிய அதிகாரத்

தையும் அது அவருக்கு அளித்தது. அவர் அவ்வாறு சட்ட மியற்றுங்கால், கவுன்சிலின் நான்காவது அல்லது சட்டத் துறை உறுப்பினரின்[1] உதவியைப் பெற்றுச் சட்டம் இயற்ற அச் சட்டம் வழிவகுத்தது. காரன்வாலிஸ் முதலில் இவ் அதிகாரத்தைப் பெற்ருர். அத்துடன் வெல்லஸ்லி முகலா யரின் பகட்டுரிமைகள் சிலவற்றைச் சேர்த்தார். இந்தியா வின் தலைவிதியை நிர்ணயிக்கும் முதன்மையான நடுநிலைத் தீர்ப்பாளருக்குரிய தகுதியும் திறமையும் கவர்னர்-ஜெனர லிடத்து அமைந்துகிடப்பதாகக் கருதப்பட்டது. அப்பொது வான உள்ளார்ந்த உணர்வு மிகவும் பொருத்தமாகத் தோன்றியதென்றே நாம் கூறலாம்.

கவர்னர்-ஜெனரலின் விருப்பத்தினையும் கருத்தினையும் நிறைவேற்றும் இன்றியமையாத கருவிகளாக ஆட்சிப் பணியாளர்துறையும் படைத்துறையும் இருந்துவந்தன. இவ் இரு துறைகளின் செயல்முறைகளையும் ஒன்ருகக்கொண்டு, அவர்கள் பிரிட்டிஷாருடைய அரசிற்கு அக்பருடைய மான்சப் தார்கள் (Mansabdars) செய்துவந்த கடமைகளைச் செய்யத் தலைப்பட்டனர். மான்சப்தார்கள் படைத்துறைச் சார்புடைய வர்களாகவே தோன்றினர். பிற்காலத்தில் அவர்களுள் சிலர் படைத்துறைச் சார்பில்லாத கடமைகள் சிலவற்றைச் செய்து வந்தனர். இவ்விரு துறைகளும் முதலிலிருந்தே தனிப்பட்ட இருபெரும் கிளைகளாக இயங்குமாறு செய்துவந்தமை, பிரிட்டி ஷாருடைய ஆட்சிமுறைப் போக்கின் தலைசிறந்த பண்பாகும். படைத்துறை அதிகாரிகளை சிவில்துறைக் கடமைகளைச் செய்யுமாறு பதவியில் அமர்த்தும் பழக்கத்திற்கு, முதலி லிருந்தே மிக வன்மையாக எதிர்ப்புகள் தொடர்ந்து தெரி விக்கப்பட்டுள்ளமையும் இங்குக் குறிப்பிடத்தக்கதாகும். கம்பெனியின் வாணிகத்தைச் செய்வதற்குரிய கூறுகளாக இருந்துவந்தவர்களும், அதனுடைய வருவாய்த்துறைப் பணி களையும், பிற படைத்துறை சாராத செயல்களிலும் ஈடுபட்டு வந்த ஆங்கிலேயர்களே முதன்முதல் ஆட்சித்துறை அதிகாரி களாக அமர்த்தப்பட்டனர். காரன்வாலிஸ் அவர்களே முதன் முதல் ஆட்சிப் பணியாளர் துறையினை உண்மையில் தோற்று வித்தவராவார். அவர் ஆட்சி இயந்திரத்தின் இரு வேறு கிளைகளாக வாணிகத் துறையையும் வருவாய்த் துறையையும்

[1] அவர் கம்பெனியின் பணித்துறையைச் சேர்ந்தவராக இருக்கக்கூடாது. இத்தகைய உறுப்பினர்களுள் முதன் முதலாக அமர்த்தப்பட்டவர் மெக்காலே என்பவராவர்.

வேறு வேருகப் பிரித்தமைத்தார்; பரிசுப்பொருள்களை அதிகாரிகளும் ஊழியர்களும் பெறுவதற்கு எதிராக ஒழுங்கு முறை விதிகளை அவர் செயல்முறைக்குக் கொண்டுவந்தார். அதைப்போன்றே கம்பெனியின் ஊழியர்கள் தனிப்பட்ட முறையில் செய்துவந்த வாணிகத்தையும் அவர் சட்டத்தின் விதிமுறைகளுக்குட்பட்டு நடைபெறச் செய்தார். மேலும், கம்பெனியின் ஊழியர்களுக்குப் போதுமான அளவிற்கு ஊதியம் அளிப்பதற்குரிய வழிவகைகளை வகுத்துத் தந்தார். ஆனுல், அதேசமயத்தில், மிக உயர்ந்த பதவிகளை இந்திய மக்களுக்கு அளிக்கக்கூடாது என்னும் கருத்தினை அவர் பழக்கத்திற்குக் கொண்டுவந்தார்.[1] இந்தப் பழக்கம் 1793ஆம் ஆண்டு இயற்றப்பட்ட பட்டயச் சட்டத்தின் ஒரு சட்ட விதியாக்கப்பட்டது. அவ் விதிப்படி ஆண்டிற்கு 500 பவுன்களுக்கு[2] மேற்பட்ட ஊதியம் அளிக்கப்படும் பதவிகள் எல்லாம், கம்பெனியோடு உடன்படிக்கை செய்துகொண்ட ஊழியர்களுக்கே அளிக்கப்பட வேண்டும் என்று முடிவு செய்யப்பட்டது. இதுவரை கம்பெனியின் ஊழியர்கள் மிகக் குறைந்த அளவு ஊதியம் பெற்றவர்களாகவும், ஊழல் மிகுந்தவர்களாகவும், வாணிகத்தோடு கலந்தவர்களாகவும் இருந்துவந்தனர். ஆனுல், அதேசமயத்தில் பல பொறுப்பு மிக்க பதவிகளை இந்தியர்கள் வகித்துவந்தனர் என்பதும் இங்குக் குறிப்பிடத்தக்கதாகும். இதுமுதல் கம்பெனியில் பணியாற்றுவோருக்கு நல்ல ஊதியமும், நன்மதிப்பும் அளிக்கப்பட்டதோடு, அவர்களுடைய பணித்துறைக் கடமைகள் ஆட்சிமுறையின் வரையறைக்கு உட்பட்டதாகச் செய்யப்பட்டது. இந்தியர்கள் பதிவுபெற்ற பணித்துறைப் பதவிகளில் பணியாற்றச் சேர்த்துக்கொள்ளப்படவில்லை. மேலும், உயர்ந்த பதவிகள் பலவற்றை வகிப்பதற்கு இந்தியர்கள் அனுமதிக்கப்படவில்லை. பணியாளர் துறைக்கு வரையறுக்கப்பட்ட பண்புகளே, கம்பெனியின் மற்றப் பகுதிகளில் பணிபுரிவோருக்குரிய பண்புகளாகப் பொதுவாக வரையறுக்கப்பட்டன.

உலகிலேயே கம்பெனியின் பணியாளர்கள் மிகச் சிறந்த ஊதியம் அளிக்கப்பட்டவர்களாயினர். பணித் துறையில்

[1] காசியின் நீதிபதியாகிய அலி இபுராகீம் கான் இதற்குச் சிறப்புமிக்க ஒரு விதிவிலக்காவார்.

[2] அந்தக் காலத்திய நாணயமாற்று முறைப்படி மாதம் 500 ரூபாய்க்கு இணையாகும்.

பெறும் ஊதியத்தைக்கொண்டே அவர்கள் வாழ்வாங்கு வாழமுடிந்ததோடு, பதவியிலிருந்து ஓய்வு பெறுகின்ற பொழுது உலக வாழ்க்கைக்குப் போதுமான செல்வ வளம் உடையவர்களாக ஓய்வுபெறவும் முடிந்தது. ஆனால், அவர்கள் ஒரு காலத்தில் இதைவிடச் சிறப்பாக வாழ்ந்ததோடு, பெருஞ் செல்வத்தைச் சேர்த்துக்கொள்ள முடிந்ததையும் அவர்கள் என்றுமே மறக்கவில்லை. எனவே, பிரிட்டிஷாரின் ஆட்சிக் காலம் முழுவதிலுமே ஒரு வகையான நெருக்கடி நிலை இருந்து வந்தது. நேர்மையாகவும் நம்பிக்கையுடனும் பணிபுரிவதற்குப் பரிசாகப் படைத் துறையைச் சாராத பணியாளர்கள் தங்களுக்குக் கிடைக்கவேண்டிய துண்டுதுணுக்கு ஊதியத்தின் பெரும்பகுதி அடுத்தடுத்துக் குறைக்கப்படுவதாகக் குறைகூறி வந்தனர். அதேசமயத்தில் ஆங்கிலேய மக்கள் 'கிளைவ் நாட்களிலிருந்தும் நவாபுகளின் காலத்திலிருந்தும், கம்பெனியின் அதிகாரிகள் ஆடம்பர, ஆரவார வாழ்க்கை வாழ்ந்து வருகின்றனர்' என்றும் குற்றம்சாட்டி வந்தனர். பண்டை நாட்களில் பேரளவில் நிலவிய ஊழல் மெல்ல மெல்ல மறைந்துபோயிற்று. பணித்துறை விரைவில் சிறப்புமிக்க கடமையுணர்ச்சியுடையதாகவும், நாணயமுடையதாகவும் விளங்கலாயிற்று. எனினும், ஒழுங்குமுறை விதிகளுக்கு இடையே இருந்து தப்பித்துக்கொள்ளும் வழிகளைக் கண்டறிந்ததனால், மிகக் குறைந்த அளவில் ஊழலும், தவறான வகையில் பரிசுப் பொருள்களையும் நேர்மையற்ற படிகளையும் பெறுவதும், கற்பனையான விற்பனைபோன்ற பிற செயல்களின்மூலம் பணத்தைப் பெருக்கும் பழக்கமும் பென்டிங்கினுடைய ஆட்சிக்காலம் வரையில் நீடித்திருந்தது. ஆனால், அந் நூற்றாண்டு மாறிய பிறகு, பணித் துறையில் சேர்ந்த இளைஞர்கள் மிகுந்த பொறுப்புணர்ச்சியோடு நடந்து கொண்டனர். அதனால், இந்தக் குறைபாடுகள் எல்லாம் நன்மை பயக்கும்வகையில் தாமாகவே மறைந்துபோயின. பாட்ஸ் (Potts), கிராண்ட் என்பவர்களுடைய அல்லது மாக்பர்சன் என்பவருடைய தொழில்தேட்ட ஊழல்களும், கையூட்டு வாங்கும் ஊழல்களும் மறைந்து, ஒரு மெட்காஃப், ஓர் எல்பின்ஸ்டன் அல்லது ஒரு லாரன்சு போன்றவர்களின் உழைப்புத் திறனும், உயர்ந்த சிந்தனைமிக்க ஒருமைப்பாடும் சிறப்புற்று விளங்கத்தொடங்கின. இத்தகைய சீரிய பண்புகளின் வளர்ச்சிக்கு ஆட்சிமுறைத் திருத்தச் சட்டங்கள் மட்டும் காரணமன்று; அல்லது காரன்வாலிஸ், வெல்லஸ்லி போன்றோரின் தூண்டுதலும் எடுத்துக்காட்டும் மட்டும் காரணமாகா. இவற்றோடு அதிகாரிகளை அமர்த்துவதில்

கம்பெனி அதிகப்படியான அக்கறை காட்டியதனுல் உண்டான நன்மையும் இதற்குக் காரணமாகும். இயக்குநர்களால் பெயர் குறிப்பிடப்படுதல் என்னும் முறை தொடர்ந்து பின்பற்றப்பட்டபோதிலும், அம் முறையில் இருந்துவந்த ஒழுங்கின்மை குறைந்த அளவினதாகவும், கடமையைச் செய்வதற்குரிய ஆயத்தம்பற்றி அதிக ஈடுபாடும் காட்டப்பட்டது. இம் முன்னேற்றத்திற்குரிய சூழ்நிலையை வெல்லஸ்லி, 1801ஆம் ஆண்டில் வில்லியம் கோட்டையில் கல்லூரி ஒன்றினை நிறுவியதன்மூலம் விரைவு படுத்தினுர். ஆனுல், அவருடைய திட்டத்தை அடியோடு அழித்தொழிக்க இயக்குநர்கள் முயன்று ஒருவாறு வெற்றியும் பெற்றனர், ஆனுல், அக் கல்லூரிக்குப் பதிலாக, ஹெய்லி பரியில் அவர்கள் கிழக்கு இந்தியக் கல்லூரி ஒன்றினை நிறுவினர். அங்குப் பயிற்சியாளர்கள் பொதுக் கல்விப் பயிற்சியும், சிறிதளவிற்குக் கீழைநாடுகளைப்பற்றிய அறிவினையும் பெற்றனர். பின்னர் அவர்கள் இங்கிலாந்தைவிட்டுப் புறப்பட்டபொழுது இந்தியாவில் தங்கள் வாழ்நாள் முழுவதிலும் பணிபுரிவதற்குரிய அறிவு முதிர்ச்சியும், சிறந்த பயிற்சியும் உடையவர்களாக இருந்தனர்.

ஆட்சிப் பணியாளர் குழுவினருடைய பண்புகளுள் மேலே கண்டவற்றுள் இறுதியாகக் குறிப்பிடப்பட்டவற்றுள், அதனுடைய குடும்ப இயற்கையும் 'ஆங்கிலத்தன்மை'யுமாகும். அதனுடைய குடும்பப் பண்புப் பெயர் நியமனம்செய்யும் பழக்கத்திலிருந்து பெறப்படுவதாயிற்று. இக் காலம்முதல் திறனற்ற நண்பர்களையோ, ஆட்சியாளர்களையோ, இயக்குநர்கள் இந்தியாவிற்கு ஆட்சியாளராக அனுப்பமுடியாமல் போயிற்று. ஏனெனில், ஹெய்லிபரிக் கல்லூரி அதற்குத் தடையாக இருந்தது. ஆனுல், இன்னும் அவர்கள் தங்களுடைய நண்பர்களையும் உறவினர்களையும் இந்தியாவிற்கு அனுப்பி வைத்தனர். இவ் வழக்கத்தினுல் சில நன்மைகளும் சில தீமைகளும் உண்டாயின. மரபுவழிப் பணியாளர் குழு ஒன்றும் வளர்ந்துவரும் வழக்காற்று நெறி ஒன்றும் உண்டாயின. அதனுல், உடல், பொருள், ஆவி அனைத்தையும் பணித்துறைக்கு அர்ப்பணித்து, அறிவிலும், திறனிலும், ஆற்றலிலும் தலைசிறந்த கடமையுணர்ச்சிமிக்கவர்களாய் அயல்நாட்டுப் பணித்துறை ஊழியர்கள் இந்தியாவிற்குப் பணிபுரியக் கிடைத்தனர். அதேசமயத்தில் ஆட்சிப் பணியாளர் குழு ஓர் அடக்கமான கூட்டுக் கழகமாக மாறியது. அது அளவுக்கு மீறிய தன்னுடைமைப் பற்றுடைய போக்கும், பழைமைப்

பற்றுமிக்க மனப்போக்கும் உடையதாக விளங்கலாயிற்று. புதிதாகப் பதவிக்குவந்த ஒவ்வொரு கவர்னர்-ஜெனரலும், கம்பெனியில் பணியாற்றிவந்த வயது முதிர்ந்த ஊழியர்களின் மனப்போக்கிற்குத் தாங்கள் இணங்கிப்போகவேண்டியவர்களாக இருந்தனர். அவர்கள் புதிதாக மாற்றியமைப்பதால் உண்டாகும் குறைபாடுகளை உண்மையென்று நம்புமாறு கவர்னர்-ஜெனரலைச் செய்துவிட்டனர். அப் பணியாளர் குழுவில் நடைமுறையில் இந்தியர்களைச் சேர்த்துக் கொள்ளாமல் ஒதுக்கிவைக்கப்பட்டமையாலேயே, அக் குழுவில் 'ஆங்கிலப் பண்பு' பெருக்கெடுத்தோடியது. மைசூரின் பூரணியன், பூனாவின் நானாபட்னாவிஸ், ஐதராபாத்தின் சலர் ஜங் போன்ற மனிதர்கள் ஒருமைப்பாட்டோடு பேராற்றலும் பெருந்திறனும் இணைந்து விளங்குமாறு அனுமதிக்கப்பட்டனர். ஆனால், அவர்களைப்போன்றே பண்புடையவர்கள்—திறமையுடையவர்கள் கம்பெனியில் பணியாற்றுவதற்குரிய வாய்ப்பு அளிக்கப்படாமல் புறக்கணிக்கப்பட்டனர். பெயர் நியமனம் செய்யும் உரிமை கம்பெனியின் இயக்குநர்களிடமே இருந்துவந்தமையால், இத்தகைய விளைவு உண்டாயிற்று. தனிப்பட்ட இனத்தினருக்கு ஆதரவு தரப்படவில்லை என்னும் குறை மெல்லத் தலையெடுக்கலாயிற்று. இத்தகைய சூழ்நிலை நிலவி வந்தமையால், இந்தியரைக் கம்பெனியின் பணித்துறையில் நுழைப்பதற்கு ஒரேவொரு வழிதான் இருந்தது. இந்திய மக்களுள் யாரையாகிலும் கம்பெனியின் இயக்குநர்களுள் ஒருவராக நியமித்தால்தான் இச்சிக்கலுக்குத் தீர்வு காண முடியும் என்று அறிஞர்கள் கருதினர். எனவே, 1833ஆம் ஆண்டு 'லிபரல்' கட்சியினரின் பாராளுமன்றம் 'சமயம் காரணமாகவோ, பிறப்பிடம் காரணமாகவோ, கால்வழி காரணமாகவோ, நிறம் காரணமாகவோ, வேறு பிற காரணங்களுக்காகவோ.........இந்திய நாட்டு மக்கள் கம்பெனியில் ஓர் இடத்தையோ, பதவியையோ, வேலையையோ பெறவொட்டாமல் தடுக்கக்கூடாது' என்று அறிவித்தது. ஆனால், பெயர் நியமனம் செய்வது இன்னும் இருபது ஆண்டுகளுக்குமேல் தொடர்ந்து நடைமுறையில் இருந்துவந்தது. அம் முறையைத் திருத்தி 1853ஆம் ஆண்டில் திறந்த போட்டிமுறை நடைமுறைக்குக் கொண்டுவரப்பட்டபொழுது, தேர்வுகள் பிரிட்டனிலேயே நடத்தப்பட்டன. ஆயினும், 1864ஆம் ஆண்டுவரையில் இந்திய ஆட்சிப் பணியாளர் குழுவில் ஓர் இந்தியர்கூட நுழையவில்லை. 1864ஆம் ஆண்டில் முதன்முதலாக சத்தியேந்திரநாத் தாகூர் இந்திய ஆட்சித்துறை அதிகாரியாகப் பதவியேற்றார்.

ஆள்நலக் குழு ஈடுபாட்டிற்குக் கொள்கையளவில் எதிர்ப்பு இருந்துவந்தபோதிலும், சிக்கனம், வசதி என்னும் மிக இயல்பான உலகியல் வாழ்க்கைமுறைக் கருத்துகள் எளிதில் இடம்பெறலாயின. இந்தியப் பிரதிநிதித்துவத்தைப் போற்றி வளர்ப்பதில் வெல்லஸ்லியும் ஹேஸ்டிங்ஸ் பிரபுவும் முதன் முதலாக அக்கறை காட்டினர். வில்லியம் பென்டிங் பிரபு, துணைநீதிபதிவரை நீதித் துறையில் இருந்துவந்த மூன்று உயர்ந்த பதவிகளில், இந்தியர்கள் அமர்ந்து பணியாற்றுவ தற்குரிய வாய்ப்பையும் வசதியையும் அளித்தார். மாண்பு மிக்க இந்திய நீதித்துறை முறைக்கு இது உண்மையிலேயே தொடக்க விழாவாக அமைந்தது எனலாம்.

கவர்னர்-ஜெனரலின் வலக் கையாக ஆட்சியாளர் பணித் துறை இருந்ததென்றால், படைத்துறை அவருடைய இடக் கையாக இருந்ததென்றே கூறலாம். படைத்துறை சாராத ஆட்சியமைப்பைப் பொறுத்தவரையில் எவ்வாறு ஒவ்வொரு மாநிலமும் முதலில் தனியுரிமை உடையனவாக இருந் தனவோ அதைப்போன்றே படைகளும் தனியுரிமை யுடையனவாகவே இருந்துவந்தன. தொடக்க காலத்தில் ஐரோப்பியரைக் கொண்ட படைப் பிரிவு ஒன்றும், எடுபிடிகள் குழு ஒன்றும், ஒழுங்கற்ற சேவகர்கள் பலருமே போதுமான வர்களாக இருந்தனர். கம்பெனியின் தோட்டத்தில் நடை பெறும் ஊர்வலங்களை அழகுடையதாக அமைத்தலும், இயன்றபொழுது எல்லாம் வணக்கம் தெரிவித்தலும், உள் ளூரைச் சார்ந்த பெரிய மனிதரோ, முகலாயப் பிரபுவோ வசதியற்ற நிலையில் அவர்கள் தங்கள் அருகில் வந்தால், அவர்களெல்லாம் கண்டு வியக்குமாறு ஆடம்பர ஆரவாரத் தோடு நடந்துகொள்ளுவதே அவர்களுடைய தொழிலாக இருந்தது. ஆங்கிலேயருக்கும் ஃபிரெஞ்சியருக்கும் இடையே போர் நடந்துகொண்டிருந்த காலத்தில்தான் உண்மையாகவே கம்பெனியின் படைகள் திரட்டப்பட்டன எனலாம். அப் பொழுது ஸ்ட்ரிங்கர் லாரென்சு என்பவர் மதராசின் ஐரோப்பியப் படைப் பிரிவை உருவாக்கினார்.[1] அத்துடன் இந்தியப் படைப் பிரிவுகள் பலவற்றையும் அமைத்தார். அந்தக் காலம் முதற்கொண்டு மூன்று மாநிலங்களுக்கும் படைப் பிரிவுகள் தனித்தனியே வளர்ந்துவரலாயின.

[1] பின்னர் மதராசின் முதல் பீரங்கிப் படையினைக் கிளைவ் தம்முடைய படைப் பிரிவில் முதன்முதல் ஆணையமர்வுடைய தாக்கிக் கொண்டார்.

1773ஆம் ஆண்டிலும், 1783ஆம் ஆண்டிலும் இயற்றப்பட்ட சட்டங்கள், கவர்னர்-ஜெனரலுக்கு இப் படைப் பிரிவுகளை முழுமையாகக் கண்காணிப்பதற்குரிய உரிமையை வழங்கின. ஆயினும், சிப்பாய்க்கலகம் வரையில் மூன்று மாநிலப் படைப் பிரிவுகளும் தனிப்பட்ட அமைப்புகளாகவே இயங்கிவந்தன. ஆனால், வங்காள மாநிலம் விரிவடைந்ததற்கேற்ப, அதனுடைய படையும் பெருகிக்கொண்டே வந்தது. நல்ல சமயத்தில் மற்ற மாநிலங்களில் இருந்துவந்த படைப் பிரிவுகளைக் காட்டிலும், அது எண்ணிக்கையாலும், போர்க் கருவிகளையும் பிற பொருள்களையும் பெற்றிருப்பதனாலும் சிறப்புற்று விளங்கியதோடு, கம்பெனிக்கு ஆற்றல்மிக்க படையாகவும் அது உதவி புரியலாயிற்று.

இந்தியாவில் பணிபுரிந்த பிரிட்டிஷ் படைகளைப்பற்றி நாம் ஆராய்கின்றபொழுது, அரசருடைய படைக்கும் கம்பெனியின் படைக்கும் இடையே உள்ள வேற்றுமையை நாம் நன்கு அறிய வேண்டும். குறிப்பிட்ட நெருக்கடிகள் தோன்றியபொழுது, கம்பெனிக்கு உதவி செய்வதற்காகவே அரசருடைய படைகள் இந்தியாவிற்கு அனுப்பப்பட்டன. பின்னர் அவை நிலையாக இந்தியாவில் நிறுத்தப்படலாயின. இந்தியாவிலேயே, அவை மிகுந்த திறமையும், பேரளவிற்கு நம்பிக்கைக்குரிய படையாகவும் இருந்தன. ஏனெனில், வட்டார மனப்போக்கோ, கருத்து மாறுபாடோ அவற்றிடையே உண்டாவதற்கு வாய்ப்பே இல்லை. அப் படைவீரர்களும் அதிகாரிகளும் கம்பெனி ஊழியர்களிடத்துப் பொறாமைத் தீயை மூட்டும் மூலகாரணமாக இருந்தனர். கம்பெனியின் ஒத்த நிலை அதிகாரிகளைவிட, அரசருடைய படைப் பிரிவின் அதிகாரிகள் சிறப்புரிமைகள் பலவற்றையும், தனிச் சலுகைகள் பலவற்றையும் பெற்றிருந்தனர். அத்துடன் அவர்களுடைய பெருமித நிலையினைப்பற்றி அவர்கள் முற்றிலும் நன்கறிந்திருந்தனர். உண்மையில், அவர்கள் கவர்னர்-ஜெனரலின் இறுதி மூலாதாரமாகவே இருந்துவந்தனர். 1857—58ஆம் ஆண்டுகளில் ஆங்கிலேயருடைய ஆதிக்கம் திரும்ப நிலை நாட்டப்படுவதற்கு அவர்களே முதன்மையான காரணமாக அமைந்தனர்.

கம்பெனியின் படைகளில் ஐரோப்பியர்களும் இந்தியர்களுமாகிய இருதிறத்தினரும் இடம்பெற்றிருந்தனர். ஐரோப்பியப் படைப் பிரிவு முதலில் சிறந்த அதிகாரிகளையும் வீரர்களையும் பெறமுடியாத நிலையில் இருந்துவந்தது. ஆயினும்,

அவர்களுள் ஒருசிலர் தந்நிகரற்ற புகழுடையவர்களாக விளங்கியமை விதிவிலக்கேயாகும். ஆனுல், அது காலப் போக்கில் அரசருடைய படைப் பிரிவைக்காட்டிலும் திறமையும் சீரமைப்பும் உடையதாக வளர்ச்சியுற்றது என்று கூறலாம். கலகம் முடிவடைந்தபொழுது, அதில் 16,000 வீரர்கள் பணிபுரிந்து வந்தனர். இவற்றைக் காட்டிலும் பேரளவினையுடையதாக இந்தியப் படைவீரர்களைக்கொண்ட படைப் பிரிவுகள் விளங்கின. அப் படையின் பெரும் பகுதியாக இருந்தவை, இந்தியப் போர்வீரர்களைக்கொண்ட படைப் பிரிவுகளேயாகும். 1830ஆம் ஆண்டு இந்தப் படைப் பிரிவுகளில் 1,87,000 பேர்களும், 1857ஆம் ஆண்டில் 2,00,000 பேர்களும் இருந்தனர். தொடக்க காலம் முதற்கொண்டே, படைத்துறைப் பதவிகள் எல்லாம் ஐரோப்பியர்களுக்கே வழங்கப்பட்டுவந்தன. 1796ஆம் ஆண்டில் படைத்துறை திருத்தி அமைக்கப்பட்டது. அதுமுதல் அரசரின் படைப் பிரிவுகளுள் எத்தனை பிரிவுகளில் ஐரோப்பிய அதிகாரிகள் இருந்துவந்தனரோ, அதற்குச் சமமாகக் கம்பெனியின் படைப் பிரிவுகளிலும் ஐரோப்பிய அதிகாரிகள் அமர்த்தப்பட்டிருந்தனர். அவர்களோடல்லாமல், இந்தியப் படைப் பிரிவின் தலைவர்களும் ஐரோப்பியர்களாக இருந்துவந்தமையால், மற்றக் கடமைகளைச் செய்வதற்கு ஒரு பெரும் குழுவினராக அவ் அதிகாரிகளே பயன்படுத்தப்பட்டனர். அந்தச் சமயத்தில் ஆட்சிப் பணியாளர்துறை, முற்றிலும் வளர்ச்சி பெருத ஒன்ருக இருந்தமையாலும், கம்பெனியின் இராச்சியப் பரப்பு விரைந்து பெருகிக்கொண்டிருந்தமையாலும், பதிவுபெற்ற அதிகாரிகளின் துறைக்குப் புறத்தேயும், வள ஆதாரமும், பேராற்றலும், பெருந்திறனும் உடைய அதிகாரிகள் தேவைப்பட்டனர். எனவே, ஆட்சித்துறைக்கும் அரசியல் சூழ்ச்சித் திறன்மிக்க கடமைகளைச் செய்வதற்கும் இரண்டாம் நிலை அதிகாரிகளை அமர்த்தும் வழக்கம் உண்டாயிற்று. அவ்வாறு எத்தனை இரண்டாம் நிலை அதிகாரிகளைப் பயன்படுத்திக் கொள்ள முடியுமோ, அத்தனை பேரை வெல்லஸ்லி பயன்படுத்திக் கொண்டார்.

கம்பெனியின் பணித்துறையில், ‚படைவீரர்—சிவில் துறை' என்றும், 'படைவீரர்—அரசியல்' என்றும் இரு பெரும் பிரிவுகள் தோன்றி வளர்ந்தன. அவ் இரு பிரிவுகளும் கம்பெனியின் பணித்துறையினுடைய முக்கியக் கூறுகளாக விளங்கின. ஆட்சித்துறைப் பணிகளுக்கு நல்ல முறையில் ஊதியம் அளிக்கப்பட்டது. சிறப்பிற்குரிய

வாய்ப்புகள் அளிக்கப்படுமா என்று ஆவலோடு பலர் அத் துறையைச் சுற்றிவந்தனர். ஆட்சித்துறைப் பணியாளர்கள் பொருமை கொள்ளுவதற்கு இத்தகைய மனிதர்களே காரண மாக இருந்தார்கள். ஆட்சித்துறையைச் சார்ந்த பணிமக்கள் அவர்களைத் தங்கள் துறையில் தந்நலம் காரணமாகத் தலையிட்டுத் தொல்லை கொடுப்பவர்களாகக் கருதினர். அவர்களுடைய படைத்துறையைச் சேர்ந்திருந்த தோழர்கள், பெருஞ் செல்வத்தை ஈட்ட வேண்டும் என்னும் பேரவா காரண மாகத் தங்களைக் கைவிட்டோடியவர்களென்று அவர்களைப் பற்றிக் கருதினர். ஆதாயம்மிக்க வகையில், அவர்கள் படைத் துறைக்கும் ஆட்சித்துறைக்கும் இடையே பயன்மதிப்புமிக்க தொடர்பினை உண்டாக்கினர் என்றும், பயன் மிக்க நெகிழ்ச்சித் தன்மையின் கூறினை அவர்கள் புகுத்திஞர்க ளென்றும் நாம் கூறலாம். ஆனால், படைத்துறை அமைப்பில் அதிகாரிகள் நிலையில் சிறப்புற்று விளங்குவதற்குரிய தகுதி யும் திறமையும் பெற்றவர்கள் அத் துறைக்குப் பயன்பட வொட்டாமல் தடுக்கப்பட்டனர் என்பதும் இங்குக் குறிப்பிடத் தக்கதாகும். ஐரோப்பியப் படைத்துறைத் தலைமையிடத்தில் அருகிய வழக்காகத் தோன்றிய தவறுதல்களுக்கு, அத் துறை சிறந்த மனிதர்களை இழந்தமையும் ஒரு காரணம் என்றே கூறலாம்.

கம்பெனியின் படைக்கு ஐரோப்பியர்களும், இந்தி யர்களும் தேர்ந்தெடுக்கப்பட்டனர். பெரும்பாலும் கம்பெனி யில் எழுத்தர்களாகப் (clerks) பணியாற்றியவர்களே (கிளை வினைப் போன்றவர்களே) படைத்துறைக்குத் தேர்ந்தெடுக்கப் பட்டனர். அவர்களோடு அயல்நாட்டிலிருந்து ஒருசிலரும், அரசருடைய படைப் பிரிவுகளுள் இருந்து ஒருசிலரும் கம்பெனியின் படைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டனர். அப் படை பொருத்தமில்லாத கலவையாக இருந்தது. அரசரின் அதிகாரிகளைக்காட்டிலும் ஒழுங்குமுறையிலும் தொழில் நுட்பத்திலும் தகுதி குறைந்தவர்களாகக் கம்பெனியின் படை யைச் சேர்ந்தவர்கள் இருந்தனர். ஆனால், படை வளர்ச்சி யுற்று முன்னேற்றம் அடைந்தபொழுது, அதனுடைய பண்பும் தரமும் பெரிதும் சிறப்புற்றன. அதனால்தான் சர் ஜான் மால்கம், சர் தாமஸ் மன்ரோபோன்ற தலைவர்களும், நாட் (Nott), பொல்லாக்கு, செலே, ஹாவ்லாக்கு போன்ற தளபதி களும் தோன்ற முடிந்தது. ஒரு படைத் தொகுதியாக அதை முழுமையாகப் பார்க்கின்றபொழுது ஓர் அரசருடைய படை வீரர்களிடத்து இருந்துவந்த நாட்டுப்பற்றுகிய தேசிய

உணர்ச்சி அற்றதாக அது இருந்தது. எனினும், அது முழு மதிப்பு உணர்ச்சியில் எந்தப் பண்பையும் இழந்துவிடவில்லை; தொழில்துறைத் திறமையிலும் பின்னடைந்துவிடவில்லை. அரசரின் அதிகாரிகளுக்கு இந்திய நாட்டைப்பற்றிய அறிவு கிடையாது. ஆனால், கம்பெனியின் அதிகாரிகளுக்கு இந் நாட்டைப்பற்றிய செய்திகளும், நிலவியல் அமைப்பும் நன்கு தெரிந்திருந்தன. அவர்களிடத்து ஒரு வகையான குறுகிய மாநிலப் பற்றும், இயலக்கூடியனவற்றைப்பற்றிய குறுகிய நோக்கமுமே குறைபாடுகளாக அமைந்திருந்தன.

கம்பெனியினுடைய படையின் பெரும்பகுதியாக இந்தியப் படைகளே இருந்துவந்தன. ஒழுங்காக ஊதியமும், மற்றவர்களோடு ஒப்பிட்டுப்பார்க்கும்பொழுது சிறந்த வசதிகளும், கம்பெனியின் பெயருக்கு இருந்துவந்த மதிப்பும் படை திரட்டும் பணியை மிக எளிமையான செயலாக்கியது. கம்பெனியின் படைகள் பொதுவாகப் பெற்ற வெற்றிகளும், வட்டாரப் பழக்க வழக்கங்களிலிருந்து விலகியிருக்க அப் படை கருத்தைச் செலுத்திவந்தமையும், அவர்களுடைய பற்றுறுதியைக் குன்றவொட்டாமல் காத்ததோடு, பெருமைப் படுமாறும் தூண்டியது எனலாம். இந்தியாவில் இருந்த படைகளுள், கம்பெனியின் இந்தியப் படைகள் ஐயுறவுக்கு இடமின்றி மிகத் திறமை வாய்ந்தனவாக இருந்தன. பத்தொன்பதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் அத்தகைய திறமை வாய்ந்ததொரு படை ஆசியாவிலேயே[1] இருந்ததில்லை என்பது இங்குக் குறிப்பிடத்தக்கதாகும். ஓரளவிற்குச் சீக்கியருடைய படைதான் இதற்கு நெருக்கமான ஒப்புமையுடையதாக இருந்தது என்று கூறலாம். ஆனால், அதே சமயத்தில் கூலியாட்களைக்கொண்டு தொகுக்கப்பட்ட படையாக அது இருந்தது என்பதும் மறுக்கமுடியாத உண்மையாகும். அப் படையைச் சேர்ந்தவர்கள், தாங்கள் தின்ற உப்பிற்கு நன்றியறிதல் காட்டக்கூடியவர்களாக இருந்தனர். பொதுவாக அவர்கள் தங்கள் தலைவர்களைப்பற்றிப் பெருமைப்பட்டுக்கொண்டனர். ஆனால், போரிடுவது என்பது அவர்களுக்கு ஒரு தொழிலாக இருந்தது. எனவே, அவர்களிடத்துப் படைகளுக்கு மேம்பட்ட இலட்சிய உணர்வின் அறிவொளியும் சுடர்விட்டுப் பிரகாசிக்கவில்லை; தேசியப் பெருமித வாழ்வின் உணர்ச்சிப்பெருக்கும் ஊற்றெடுக்கவில்லை. மிக

[1] ருஷ்யா ஐரோப்பாவில் இருப்பதாகக் கொண்டால் இவ்வாறு கூறலாம்.

உயர்ந்த பதவிகளுக்குரிய வேலை உயர்வுகள் அனைத்தும் அவர்களுக்கு மறுக்கப்பட்டன. அவர்களுக்கு இடையேயும் அவர்களுக்கும் அவர்களுடைய தலைவர்களுக்கும் இடையேயும், ஒரு மாபெரும் பண்பாட்டுப் பிளவு நிலையாக இருந்து வருமாறு செய்யப்பட்டது. ஆட்சியினைத் தம் கட்டுப்பாட்டிற்குட்படுத்த முடியாதவர்களாக அவர்கள் இருந்தமையால், அவர்கள் ஆட்சி முறையோடு சேர்ந்த ஒரு பகுதியினராகத் தங்களை அவர்கள் இனம்கண்டுகொள்ள முடியவில்லை. எனவே, அவர்கள் தங்களுடைய தன்மானம்பற்றிய உணர்ச்சிகளை அல்லது தற்பெருமைப் பண்பினை வெளிப்படையாக எடுத்துரைக்கத் தலைப்பட்டனர். அத்தகைய பண்புகளை எடுத்துரைப்பதில் அவர்கள் மரபுவழி பழக்க வழக்கங்களிடத்துப் பற்று மிகக்கொண்ட வெறியர்களாகவே இருந்தனர். எனவே, இந்தியப் படைவீரர்களிடத்து ஒரு நொய்ம்மையான பண்பு வளர்ந்துவரலாயிற்று. போரில் அவர்கள் வீரம் மிக்கவர்களாகவும், உள்ள உறுதிமிக்கவர்களாகவும் இருந்தனர்; பாசறைகளில் பற்றுறுதியுடையவர்களாகவும் நல்ல முறையில் நடந்துகொள்பவர்களாகவும் இருந்தனர். ஆனால், மிகச் சிறிய மாற்றங்களைக் கண்டாலும், நன்கு ஆலோசிக்கப்படாத செயல்களைக் கண்டாலும் அவை அவர்களுடைய பழக்கவழக்கங்களை அவமதிப்பதற்காகச் செய்யப்படுகின்றன என்று அவர்கள் கருதினர்; அல்லது அவர்களுடைய ஆழ்ந்த உள்ள உணர்ச்சிகளைப் புண்படுத்தும் நுட்பமான சதித் திட்டங்களாக அவற்றைக் கருதினர். ஆகவே, அவர்களுடைய பற்றுறுதி என்பது நிபந்தனைக்குட்பட்ட ஒன்றாகவே இருந்துவந்தது. புத்தாக்கம் என்னும் காற்று மேலைநாட்டிலிருந்து ஆற்றலுடன் வீசத் தொடங்கியபொழுது, அந்தச் சூழ்நிலையினிடையே அவர்களைக் கட்டிக்காப்பது அரிதாயிற்று. இவ்வாறு கம்பெனிப் படைகளின் வெற்றி மிக்க தொழில்முறை வாழ்க்கை, கலகமெனும் அடிநீரோட்டத்தினால் நடுக்கமுறலாயிற்று. அவ்வாறு உண்டான கலகங்களுள் 1806ஆம் ஆண்டில் உண்டான வேலூர்ப் புரட்சியும், 1824ஆம் ஆண்டில் உண்டான பரக்பூர் (Barrackpore) கலகமும் சிறப்புமிக்கனவாகும். கம்பெனியில் பணியாற்றிய ஐரோப்பியர்களால் உண்டான 'வெள்ளையர் கலகத்தைக்' காட்டிலும், இவை மிகவும் கடுமையானதாகவும் கொடுமையானதாகவும் இருந்தன. பேரெண்ணிக்கையுடைய வீரர்கள், இக் கலகங்களில் கலந்துகொண்டமையும், அத்துடன் அவர்களுக்கும் அவர்கள் வாழ்ந்த நாட்டிற்கும் மிக நெருங்கிய தொடர்பு இருந்துவந்தமையும் இக் கலகங்களை மிகவும்

கடுமையும் கொடுமையும் வாய்ந்தனவாகச் செய்துவிட்டன. கம்பெனியின் இந்தியப் படைகள் கவர்னர்-ஜெனரலுடைய கூர்மையான ஒளிமிக்க வாளாகும். ஆனால், அது இருபுறத்திலும் கூர்மையுடையதாக (இரண்டகமானதாக) இருந்தது என்பதும் இங்குக் குறிப்பிடத்தக்கதாகும்.

ஒழுங்கற்ற படைக் குழுக்கள் பலவற்றைக்கொண்டு படைப் பிரிவுகள் முழுமைத் தன்மையடையுமாறு நிறுவப்பட்டன. பிரிட்டிஷாருடைய இராச்சியப் பரப்பு விரிந்து கொண்டு சென்ற வேகத்திற்கேற்பப் படைத்துறையும் விரிவு படுத்தப்பட்டது. இவற்றுள் முதலாவதாகக் குறிப்பிடத் தக்கது ஸ்கின்னருடைய குதிரைப் (Skinner's Horse) படையாகும். கூர்க்காப் போர்களுக்குப் பிறகு, புதிதாக நிறுவப் பெற்ற கூர்க்காப் படைப் பிரிவுகளும், 'வழிகாட்டிகள்' (தார்ப் படையினர்) என்னும் புகழ்மிக்க படைப் பிரிவினைக் கொண்ட பஞ்சாப் எல்லைப் படையும் சிறப்புமிக்கனவாகும்.

படைக்குத் துணையாக இருந்தது காவலர் (police) படையாகும். முகலாயரின் ஆட்சிக்காலத்தில் வட்டாரப் பாதுகாப்பு, ஊராட்சி மன்றங்களின் பொறுப்பிலே இருந்து வந்தது. ஊர்த் தலைவர்கள் ஊர்க்காவல் படையினைக் கொண்டு ஊர்கள்தோறும் அமைதியையும் ஒழுங்கையும் நிலைநாட்டிவந்தனர். திறமைமிக்க மாவட்டக் காவற்படையினர், அவ் வட்டார ஆளுநர்களுடைய (Governor) படைத் துறையைச் சேர்ந்தவர்களாக இருந்தனர். பிரிட்டிஷார் படையினை இருபெரும் பிரிவாகப் பிரித்தனர். முதற் பிரிவு வீரர்களைக்கொண்ட படைத்துறையாகவும், இரண்டாம் பிரிவு காவலர்களைக் (police) கொண்ட காவல்துறையாகவும் விளங்கலாயிற்று. முன்பு, அவர்கள் பேரரசர் பணித்துறையைச் ஆட்சித்துறை என்றும், படைத்துறை என்றும் பாகுபடுத்தியதைப்போன்று இப் பாகுபாட்டையும் செய்தனர். காரன் வாலிஸினுடைய ஆட்சிக்காலத்தில்தான் காவற்படை முறை உண்மையிலேயே அமைக்கப்பெற்றது. 1791ஆம் ஆண்டு, அவர் கல்கத்தா நகரத்திற்குக் காவற்படைக் கண்காணிப்பாளர் ஒருவரை அமர்த்தினர். அடுத்த ஆண்டில், இம் முறையினை மற்ற மாவட்டங்களுக்கு விரிவுபடுத்தினர். ஒவ்வொரு மாவட்டத்திற்கும் 'டரோகா' (Daroga) எனப்படும் காவல் துறைக் கண்காணிப்பாளர் நியமிக்கப்பட்டார். இதுவரையில் பெருநிலக்கிழார்களாகிய ஜமீன்தார்களிடம் ஒப்படைக்கப்பட்டிருந்த காவலர் கடமைகளைப் பறித்து, அவற்றைக் காவற்

படையினரிடத்து அவர் ஒப்படைத்தார். மரபுவழிப் பணி யாற்றிய ஊர்க்காவல் படையினர் 'சோக்கிதார்கள்' எனப் படும் காவல்காரர்களாயினர். இதனால், ஊராட்சிமன்றத் தலைவர்கள் எதிர்பாராவகையில் தங்களுக்கு இருந்துவந்த மதிப்பில் பெரும்பகுதியை இழக்கலாயினர். புதிய காவல் படையினர் மத்திய அரசின் ஆட்சிக்குட்பட்டிருந்த ஒவ்வொரு பகுதியிலும் தம்முடைய பிரிவு ஒன்றினை நிறுவி, அப் பகுதி களைத் தம்முடைய நேரடிக் கட்டுப்பாட்டிற்குக் கொண்டு வந்தனர். இதனால், மத்திய அரசின் மேலாண்மையும் ஆதிக் கமும் மிகுதிப்படலாயிற்று. ஆனால், அதேசமயத்தில் அக் காவலர் படை மக்களிடத்தில் செல்வாக்கிழக்கவும் தொடங் கியது என்றே கூறலாம். மக்களைக் கசக்கிப் பிழிந்தமை யாலும், கொடுமைப்படுத்தி அச்சுறுத்தியமையாலும் அது தன் செல்வாக்கை இழக்கத் தொடங்கியது. அப் படைவீரர் களுக்கு நல்ல முறையில் ஊதியம் அளிக்கப்படாமையால், அது தன்னுடைய பரந்துபட்ட அதிகாரத்தைக்கொண்டு தன் னுடைய மதிப்பை மீட்கவும், பணவசதி பெறவும் முயன்றதில் வியப்பொன்றுமில்லை. குறிப்பிட்ட ஓர் அளவுவரையில் அக் காவற்படையினர் பற்றுறுதியும் திறமையும் உடையவர்க ளாக விளங்கினர். ஆனால், அதற்கப்பால் அவர்கள் ஊழல் மிக்கவர்களாகவும் கடுமையானவர்களாகவும் இருந்தனர்.

> 'இதுவரையில் மக்களுக்குப் பாதுகாப்பாக இருந்துவந்த காவற்படையினரைப்பற்றிப் பின்வரும் உண்மையைத் தெரிவிப்பதைக்காட்டிலும் வேறு வகையில் விளக்க முடியாதவனாக நான் இருக்கிறேன். ஒரு கொள்ளை நடைபெறுமானால், அதைப்பற்றி விசாரணை செய்யவொட்டாமல் போலீசார் தடுக்கப் படுவர். கொள்ளையடிக்கப்பட்டவர்கள் போலீசாரை வேண்டிக்கொண்டால்தான் போலீசார் விசாரணை நடத்த முன்வருவர் என்று சட்டமொன்று செய்யப் பட்டதைப்போன்று காவற்படையினர் நடந்து கொள்ளுகின்றனர். அதாவது, ஆடுகளை மேய்க்கும் இடையனே ஓநாயைக்காட்டிலும் கடும் பசியுடை யவனாக இருக்கிறான் என்று கூறுவோமானால், அது இந்தியக் காவற்படையினருக்கு மிகவும் பொருத்த மானதாகும்' என்று பென்டிங்[1] எழுதியுள்ளார்.

[1] பென்டிங்கின் கையெழுத்துப் படிகள்—'வில்லியம் பிரபு முதல் சார்லஸ் கிராண்ட் வரை' 21, டிசம்பர், 1832.

அரசினை விரிவுபடுத்துவதற்கும் காப்பதற்கும் கவர்னர்-ஜெனரல் தம்முடைய படையினைப் பயன்படுத்தி வந்தார். அவருடைய காவற்படை நாட்டில் அமைதியை நிலைநாட்டும் பணியைச் செய்துவந்தது. அவருடைய ஆட்சித்துறை அதிகாரிகள் வருவாயினைத் தண்டிவந்ததோடு, ஆட்சிமுறைச் செயல்களைச் செம்மையாகச் செயற்படுத்துவதில் கருத்தைச் செலுத்திவந்தனர். மேலும், அவர் மக்களுக்கு நீதி வழங்கும் நற்பணியினைச் செய்துவந்தனர், கவர்னர்-ஜெனரல் எத்தகைய நீதியை வழங்குவது என்பதைப்பற்றியும், அத்தகைய நீதியை வழங்குவதற்குரிய ஆட்சி இயந்திரத்தைப்பற்றியும் சிந்திக்க வேண்டியவராக இருந்தார். முகலாயர்களுடைய ஆட்சிக்காலத்தில் ஒவ்வொரு சமூகமும் தனித்தனியான சட்டங்களைத் தனக்குரியதாகப் பெற்றிருந்தது. அச் சட்டங்களும் அவ்வவ் சமூகத்தின் பழக்கவழக்கங்களுக்கேற்ற வகையில் செயல்படுத்தப்பட்டு வந்தன. வருவாய்த்துறைச் சிக்கல்களை வருவாய்த்துறை அதிகாரிகளே ஆராய்ந்து அவற்றிற்கு ஒரு முடிவைக் கண்டனர்.

குற்றவியல் நீதித்துறையில் இஸ்லாமிய நீதித்துறைச் சட்டமே எல்லாச் சமூகத்தினரின்மீதும் சுமத்தப்பட்டது; அவ் இஸ்லாமிய சட்டத்தைப் பேரரசரும், மாநில ஆளுநரும் காசிகள் (Qazis) எனப்பட்ட தீர்ப்புச் சான்றோர் குழுக்களை அமர்த்தி நீதி வழங்கிவந்தனர். இது அரசர்களின் உரிமையால் பக்குவப்படுத்தப்பட்டுவந்தது. இவ் உரிமையை முகலாய மன்னர்கள் பொறுமையோடு காத்துவந்தனர். அலிவர்திகான் செய்ததைப்போன்று, தாங்களே நீதி வழங்குவதற்கு அவ் உரிமையைப் பயன்படுத்த அப் பேரரசர்களும் முயன்றனர். முதலில் கம்பெனி இம் முறையினைத் தொடர்ந்து பின்பற்றியது. வங்காளத்தின் தலைவர் அல்லது அவரது துணைவரைப் (பல ஆண்டுகளுக்கு முகமது ரஸாகான்) போன்றவர்கள் நீதி மன்றத்தைக் கண்காணித்து வருமாறு விடப்பட்டார்கள். அதன் பிறகு 1774ஆம் ஆண்டு தலைமை நீதி மன்றம் திடீரென்று தோன்றியது. அது ஆங்கிலச் சட்டத்தைக் கொண்டே நீதி வழங்கிவந்தது. ஏனெனில், அதற்கு வேறெந்த சட்டமும் தெரியாது. மேலும், ஆங்கிலச் சட்டத்தின் எல்லைகளும் நன்கு வரையறுக்கப்படவில்லை. 1781ஆம் ஆண்டு இயற்றப்பட்ட சட்டம், ஆங்கிலச் சட்டவியலை ஆங்கிலேயர்களுக்கு மட்டும்தான் பயன்படுத்த வேண்டும் என்று வரையறை செய்தது. அதுமட்டுமல்லாமல் அச் சட்டம் தலைமை

நீதிமன்றத்தின் அதிகார எல்லையையும் வரையறுத்தது. காரன்வாலிஸ் தம்முடைய ஒழுங்குமுறை விதிகளைக்கொண்டு இஸ்லாமியச் சட்டவியலில் மல்கிக் கிடந்த கடுமையும் கொடுமையும் நிறைந்த பண்புகளை வெட்டித்தள்ளினார்.[1] இவ்வாறு குறிப்பிட்ட சிறிது காலத்திற்கு இந்தியச் சட்டத்தை அதன் ஒத்த பகுதியான பிரிட்டிஷாரின் சட்டத்தைக்காட்டிலும் மிகுந்த மனிதநலக் கோட்பாடுடையதாக விளங்குமாறு அவர் செய்தார். ஆனால், பிரிட்டிஷாராக இருந்துவந்த நீதிபதிகள் பதவியிலிருந்து நீக்கப்பட்டு, இந்திய நீதிபதிகள் அமர்த்தப் பட்டனர். வரையறுக்கப்பட்ட சட்டத் தொகுப்புகள் இல்லாமையும், வட்டார சட்ட இயலில் நிபுணர்களிடத்து நம்பிக்கை கொள்ளவேண்டிய நெருக்கடி உண்டானமையும் நாளடைவில் பெரும் சிக்கலை உண்டாக்கின. 1833ஆம் ஆண்டில்தான் புதிய இந்தியப் பொதுச் சட்டம் தொடங்கப் பெற்றது. அச் சட்டம் தொகுக்கப்படுவதற்காக இந்திய சட்டவியல் ஆணைக்கழகம் ஒன்று நிறுவப்பட்டது. அக் கழகம் உரிய காலத்தில் (1861) இந்தியத் தண்டனை விதித் தொகுப்பு (Indian Penal Code) ஒன்றை வெளியிட்டது. பின்னர் குற்றவியல் (Criminal) சட்ட முறையையும், பொருள் வழக்கு (Civil) சட்ட முறையையும் அக் கழகம் வெளியிட்டது.

சட்டத்தின் பொருளுரையைப்பற்றி ஆராய்ந்து முடிவு செய்த பின்னர், அதைச் செயற்படுத்தும் முறையைப்பற்றிய பிரச்சினை உண்டாயிற்று. 1790ஆம் ஆண்டு முகமது ரஸா கான் வேலையிலிருந்து நீக்கப்பட்டது வரையில், குற்றவியல் நீதி நிர்வாகம் நவாபுகளின் கைகளிலேயே இருந்துவந்தன. இதுமுதல் குற்றவியல் நீதிமன்றங்களையும், பொருள் வழக்கு நீதிமன்றங்களையும் கம்பெனியே தன்னுடைய கட்டுப்பாட்டிற் குட்பட்டு இயங்குமாறு செய்தது. கல்கத்தாவில் மத்திய குற்றவியல் நீதிமன்றம் ஒன்று நிறுவப்பட்டிருந்தது. அது வல்லாமல் நான்கு 'நடமாடும் நீதிமன்றங்களும்' நிறுவப்பட் டிருந்தன. ஆண்டிற்கு இருமுறை கல்கத்தா, மூர்ஷிதாபாத், பாட்னா, டாக்கா, நகரங்களிலிருந்து மாவட்ட நீதிமன்றங் களினால் விசாரணை நடத்த முடியாத கொடிய வழக்குகளை விசாரிக்க, அந் நடமாடும் நீதிமன்றங்கள் சுற்றுப்பயணம் செய்துவந்தன. பொருள் குற்ற வழக்குத் துறையில் 'திவானி

[1] சிறிய குற்றங்களுக்கு மாறுகால் மாறுகை வாங்குதல் போன்ற கொடிய தண்டனைகளை அவர் கழித்துத் தள்ளினார்.

அதலத்து'கள் என்று வழங்கிவந்த நீதிமன்றங்கள் மாவட்ட அல்லது வட்ட நீதிமன்றங்கள் எனும் புதுப் பெயரால் அழைக்கப்பட்டன. அதற்குமேல், மேற்கண்ட நான்கு நகரங்களிலும் மேல்முறையீட்டு நீதிமன்றங்கள் அமைக்கப்பெற்றன. ஒரே அதிகாரிக்கு குற்றவியல் வழக்குகளை விசாரிக்கும் உரிமையையும், பொருள் வழக்குகளை விசாரிக்கும் உரிமையையும் ஒருங்கே வழங்கியதன்மூலம் இவ்விரு முறைகளும் மாவட்ட நிலையில் ஒன்ருகப் பிணைக்கப்பட்டன. அம்முறை ஒழுங்கானதாகவும், தோற்றக் கவர்ச்சியுடையதாகவும் இருந்தது. ஆனுல், அம்முறை இரண்டு குறைகளையுடையதாக இருந்தது. நீதிபதிகள் ஆங்கிலேயர்களாக இருந்தனர்; வழக்கு விசாரணை நடத்தப்படும் மொழியினை நன்கு அறியாதவர்களாகவும், வயதில் இளைஞர்களாகவும் அந்நீதிபதிகள் இருந்துவந்தனர். எனவே, அவர்கள் பெரும்பாலும் தேவையற்ற அளவிற்கு நிபுணர்களாகிய மதியுரைஞர்களின் செல்வாக்கிற்கு அடிமையாக நேர்ந்தது.

புதிய நிலத் தீர்வைத் திட்டங்களும், ஆட்சியாளர்களின் தலையீட்டினுல் உண்டாகும் அச்சம் இல்லாத வகையில் நீதியைப் பெற முடியும் என்ற நம்பிக்கையும் சேர்ந்து நாட்டு மக்களுக்குப் புத்துணர்ச்சியூட்டின. அதனுல் வழக்குகள் பெருகிக்கொண்டிருந்தன. இவ்வாறு அங்கு நீதித்துறைத் தடங்கல் ஒன்று உண்டாயிற்று. அதன் விளைவாக நீதி வழங்குதலே மறுக்கப்பட்டது. 1812ஆம் ஆண்டிற்குள்ளாக வங்காளத்தின் நீதிமன்றங்களில் 1,63,000 வழக்குகள் விசாரணைக்கு எடுத்துக்கொள்ளப்படாமல் தேங்கிக் கிடந்தன. நீதி வழங்க வேண்டும் என்ற நல்லெண்ணம் இருந்தது. ஆனுல், வழக்கு விசாரணை முறை முதலில் ஓர் அளவிற்கு விரைவாக விசாரணை நடத்தித் தீர்ப்பு வழங்குவதற்குத் தடையாக இருந்தது. புதிய முறையின் மற்ருரு விளைவினையும் எளிதில் காண முடிகிறது. பின்பற்றப்பட்ட சட்டங்கள் இந்து அல்லது இஸ்லாமியச் சட்டங்களாக இருந்த பொழுதிலும், புதிய நீதிமன்றங்கள் பின்பற்றிய நடைமுறைகள் பிரிட்டிஷாருடையனவாக இருந்தன. மேலும், சட்ட இயலின் நுட்பமான விளக்கங்களிலிருந்து பெறப்பட்ட தற்கோள்களும் பிரிட்டிஷாருடையனவாக இருந்தன. இவை முன்னரே நீதிபதிகளின் அறியாமையாலும் அனுபவமின்மையாலும் உண்டான சிக்கலைப் பெரும் சிக்கலாக்க உதவின. விரிவான நீதிமன்ற நடவடிக்கைகள் மலைத்துப்போகும் கட்சிக்காரரின் சார்பில் வாதாடுவதற்கும் ஆலோசனை கூறுவதற்கும்

என்று புதியதொரு நடுத்தர வகுப்பினரைத் தோற்றுவித்தன. அவர்கள் நீதித்துறைத் தரகர்களாகச் சிறப்புற்றனர். இவ்வாறு இந்தியாவின் மாண்புமிக்க நீதிமன்றத் தொழில்முறை தோன்றியது. ஆனால், ஒரு பொதுப்படையான வழக்காளி நீதி நிர்வாக இயந்திரத்தில் காணப்படும் சிக்கல்களைக் கண்டு திகைப்புற்றது வியப்பிற்குரிய செய்தியன்று. அப் பாமர மனிதன் நீதிமன்ற நடைமுறைச் செயல்களில் குலுக்குச் சீட்டு முறையினையே கண்டனர். விருப்பு வெறுப்புகளுக்கு அப்பாற்பட்டதும், உணர்ச்சிவயப்படாதது மாகிய நீதிமுறை வழங்கப்படுவது அவர்களுக்குப் புலனாகவே இல்லை.

நாட்டினைத் தற்காத்துக்கொள்ளுதல், அமைதியையும் ஒழுங்கையும் நிலைநாட்டுதல், நீதி வழங்கல் போன்ற கடமைகளைச் செய்துவந்ததோடு அரசு நின்றுவிடவில்லை. அது தன்னுடைய எண்ணத்தைத் தன்னுடைய அரசு முழுவதிலும் ஆற்றல் மிக்க வகையில் செயற்படுத்தவேண்டி இருந்தது. அதனுடைய மிக முக்கிய எண்ணம் நிதிநிலைச் சார்புடையதாக இருந்தது. வருவாயினைத் தண்டுவதே அதனுடைய தலை சிறந்த நேர்முறைச் செயலாக இருந்தது.[1] இந்த வகையில் அதனுடைய பிரதிநிதிகள் வட்டார அதிகாரிகளாகவே இருந்து வந்தனர். முகலாயர்கள் காலத்திய நாட்டுப் பிரிவாக இருந்த சர்க்கார்களோடு ஒப்புமையுடைய வகையில், பிரிட்டிஷ் இந்திய அரசு மாவட்டங்களாகப் பிரிக்கப்பட்டன. வங்காளத்திலும் பீகாரிலும் மட்டும் 35 மாவட்டங்களை மாக்பர்சன் உண்டாக்கினார். அதைக் கார்ன் இருபத்து மூன்றாகக் குறைத்தார். மதராஸ், 20-லிருந்து 26 மாவட்டங்களாகப் பிரிக்கப்பட்டது. பம்பாய் பதின்மூன்று மாவட்டங்களாகவும், சிந்து மூன்று மாவட்டங்களாகவும் பிரிக்கப்பட்டன. ஒவ்வொரு மாவட்டத்திலும் ஒரு தண்டல் நாயகம் இருந்தார். அவருடைய தொழில் வருவாய்களைத் தண்டுவதேயாகும்; மேலும், அவர் நீதி வழங்கும் நீதிபதியாகவும், நாட்டிலே அமைதியையும் ஒழுங்கையும் நிலை நாட்டும் குற்றவியல் நடுவராகவும் (Magistrate) பணியாற்றினார். அக்காலத்திய வங்காளத்தின் மாவட்டங்களில் நீதிபதியே முதன்மையிடம் பெற்றிருந்தார். எனினும், பொதுவாக மாவட்டத்தின் தலைவராகத் தண்டல்நாயகமே பொறுப்

[1] வருவாய் முறையினைப்பற்றி அடுத்த இயலில் விரிவாகக் காணலாம்.

பேற்றுப் பணியாற்றிவந்தார். மாவட்ட அதிகாரிகளைக் கண்காணிக்க பென்டிங் ஆணையர்களை அமர்த்தினர். ஆயினும், ஆட்சிமுறையினை இன்றியமையாத நாட்டின் அடிப்படை அளபாக மாவட்டம் இருந்துவந்தது. அக் காலம் முடிவதற்குள்ளாகவே துணை ஆளுநர் பதவிகள் 'தலைமை ஆணையர்' (Chief Commissioners) என்னும் பட்டப் பெயரோடு தோற்றுவிக்கப்பட்டன. 1853-ல் பஞ்சாபிலும், 1856-ல் அயோத்தியிலும் தலைமை ஆணையர் அலுவலகங்கள் அமைக்கப்பட்டன. அவ்வதிகாரிகள் ஆளுநர்களுக்கு (Governors) அடுத்த கீழ்நிலை அதிகாரிகளாவர். அவர்கள் தங்களுடைய அதிகாரங்களைக் கவர்னர்-ஜெனரலிடமிருந்து நேரடியாகப் பெற்றுச் செயலாற்றி வந்தனர்.

காரன்வாலிஸ் 1793ஆம் ஆண்டு மே முதல் நாள் வெளியிட்ட ஒழுங்குமுறைச் சட்டத் தொகுப்பின்படி. மாவட்ட அதிகாரிகள் ஆளப்பட்டுவந்தனர். காரன்வாலிஸின் பணியினை வரையறுத்து விளக்குவதன்மூலம் அவர் பணியை நிலைபேறுடையதாக்குவதே அவ்வொழுங்குமுறைச் சட்டத் தொகுப்பின் குறிக்கோளாகும். 'அவ்வொழுங்குமுறைச் சட்ட விதிகள் வாணிக முறையினைப்பற்றியும், பொருள் வழக்கு குற்றவியல் வழக்கு நீதி நிர்வாகம்பற்றியும், காவலர்ப் படையின் செயல் பற்றியும், நில வருவாய்பற்றியும் சில அரிய கருத்துகளை வரையறுத்துக் கூறின. அக்காலத்தில் நிலவிய நிலைமையினைத் திரும்ப அது எடுத்துரைத்தபொழுது, மேற்கொண்டு அதில் முன்னேற்றத்திற்குரிய பல மாற்றங்கள் செய்வதற்குப் பயன்படும் பல கருத்துகளையும், அவை எதிர்காலத்தைக் கருத்தில் கொண்டு எடுத்தியம்பின........' ஒழுங்கான ஆட்சி முறையினை நிலைநாட்டுவதற்காகவும் கடந்த காலத்திய குழப்பங்களும் கலவரங்களும் நாட்டில் மீண்டும் உண்டாகாமல் தடுப்பதற்காகவுமே அவ் வொழுங்கு முறை விதிகள் வகுக்கப்பட்டன. இம் முயற்சியில் அவை வெற்றி பெற்றன. ஆனால், மிக எளிதிலேயே புதிய சூழ்நிலைகளில் உண்டாகும் சிக்கல்களைச் சமாளிக்கும் திறனற்ற இறுகிய எஃகு சட்டங்களாக அவை மாறிவிட்டன. புதிதாகப் பெறப் பெற்றதும், திட்டமிட்டு முறைப்படுத்தப்படர்ததுமான இராச்சியப் பகுதிகளின் ஆட்சிமுறையில் அவ் விதிமுறைகள் நுட்பமாகச் செயற்படுத்தப்பட்டபொழுது அவை பொருத்தமற்றனவாகப் போயின. எனவே, ஒழுங்குமுறை விதிக்குட்பட்ட மாநிலங்கள், ஒழுங்குமுறை விதிக்குட்படாத மாநிலங்கள் என்ற வேற்றுமை எழலாயிற்று. யமுனை

ஆற்றங்கரை வரையில் விரிவுபடுத்தப்பட்டிருந்த வங்காள மாநிலம் பொதுவாக இவ் வொழுங்குமுறை விதிகளுக் குட்பட்ட மாநிலமாக விளங்கியது. ஆனால், மற்ற மாநிலங்க ளெல்லாம் குறிப்பிடத்தக்க வகையில் விலக்கிவைக்கப்பட் டிருந்தன. வட்டாரச் சூழ்நிலைகள் ஏற்றதாகவும் இயைந்த தாகவும் எத்துணை அளவிற்கு அமைகிறதோ, அத்துணை யளவிற்கு அவ் வொழுங்குமுறைச் சட்டங்களின் பொது இயல்புகளைச் செயற்படுத்த முயலலாம் என்பது ஆட்சித் துறையின் செயல்முறை விதியாக இருந்துவந்தது. இவ்வாறு 1803ஆம் ஆண்டில் புதிதாகப் பெற்ற தில்லியும், 1824ஆம் ஆண்டு அசாமும், அரக்கானும், தெனசரீமும், சாகர், நருமதை அரசுகள் 1818ஆம் ஆண்டிலும், 1849ஆம் ஆண்டு பஞ்சாபும் ஒழுங்குமுறை விதிக்குட்படாத மாநிலங்களாகத் தோன்றின. இந்தப் பகுதிகளில் பணிபுரிந்த தண்டல் நாயகங்கள் ' துணை ஆணையர் ' என்று அழைக்கப்பெற்றனர். அதனுடைய செயல்முறைக்குகந்த விளைவாகப் படைத்துறை அதிகாரிகளை ஆட்சிப் பணிக்குரிய கடமைகளைச் செய்யுமாறு அமர்த்தும் உரிமையை அத் துணை ஆணையர் பெற்றனர்.

கம்பெனியாரின் ஆதரவில் இருந்துவந்த இந்தியத் தனி யரசு நாடுகளை (Indian States) எவ்வாறு கட்டிக்காப்பது என்ப தைப்பற்றி நேரடியாக உண்டான அதிகாரச் சிக்கலே பிரிட்டி ஷாருக்கு இறுதியாகத் தோன்றிய பிரச்சினையாகும். இந்தியத் தனியரசுகளின் கூட்டத்தில் ஒரு கூறாகக் கம்பெனி விளங்கு வதற்கு மேற்கொண்ட கம்பெனியின் முயற்சிகள் எவ்வாறு செயலற்றுப்போயின என்பதை நாம் முன்னரே கண்டோம். ஒரு வளைய வேலியோடுகூடிய அரசினை நிறுவ வேண்டுமென்ற ஆவல் (என்றுமே மிகுந்த ஆர்வத்தோடு செயற்படுத்தப் படவில்லை) எவ்வாறு மத்திய இந்திய அரசியல் குழப்பமாகிய பாறைகளின்மீது மோதி உடைந்துபோயிற்று என்பதையும் நாம் முன்னரே கண்டோம். ஹேஸ்டிங்ஸ் பிரபு புரிந்த போர்கள், கம்பெனியைச் சூழ்ந்த அதன் ஆதரவை நாடிய தனியரசுகள் பலவற்றிற்கு இடையே கம்பெனியை முதன்மையும் தலைமையும் பெற்று விளங்குமாறு செய்தன. அத் தனியரசுகளை எல்லாம் எவ்வாறு நடத்துவது? துணைப் படைத் திட்டத்தைக் குறிப்பிட்ட சில மராட்டிய அரசுகளிடத்து விரிவுபடுத்துவதும், மிகச் சிறிய அரசுகளின் கலவைக்கு இடையே நிலமானியப் படைமுறை அதிகாரங்களைப் பெறு வதும் ஹேஸ்டிங்ஸ் பிரபு மேற்கொண்ட ஆட்சிமுறையின்

செயல்முறை நோக்கங்களாகும். அத் தனியரசுகள் அடைய விரும்பிய விடுதலையினைப் பெறுவதற்கு இறுதியாகப் பின்நோக்கிப் பார்த்தபொழுது, அவை கல்லினைப்போன்று உணர்ச்சியற்றுப்போயின. ஹேஸ்டிங்ஸ் பிரபு ஆற்றிய அரும்பணியிலிருந்து பிரிட்டிஷாருடைய தலைமைப் பண்பு வெளிப்பட்டது. அக் கோட்பாட்டினை மெட்காஃப் போதித்து வந்தார். உரிமைகளைப்பற்றிச் சட்டத்தின் அடிப்படையில் எழக்கூடிய இடர்ப்பாடான சிக்கல்களைக் கண்டும், முகலாயருடைய போலி உரிமை வாதங்களைக் கண்டும் அவர் அச்சம் கொண்டமையால், அவர் வெளிப்படையாகத் தலைமைசான்ற மேலாண்மையை வற்புறுத்த விரும்பவில்லை. ஆயினும், அக் காலம் முதல் அது ஒரு மெய்ம்மையாகவே இருந்துவந்தது; அரசு அந்த மெய்ம்மையைப்பற்றி அறியாததைப் போன்று, பிரிட்டிஷாருடைய வியத்தகு மேலாண்மையை நிலைநாட்டும் வகையில் செயலாற்றியது. ஆனால், கம்பெனியாருடைய தலைமைசான்ற பண்பும், மேலாண்மையும் மெய்ம்மையென்று சொல்லுவதற்கேற்ப, அரசுகள் அதைச் சார்ந்து நின்றதிலும் பல்வேறு நிலைகள் இருந்தன. முதலில் ஐதராபாத்து அரசும், சிந்தியாவின் அரசும் ஆங்கிலேயருடைய தலைமைசான்ற ஆதரவை நாடின. அவ்விரு அரசுகளும் தனிப்பட்ட வகையில் தோன்றியவை; தமக்கென்று தனிச் சிறப்புகளை உடையவை. 1829ஆம் ஆண்டு நைசாம் தாம் மேற்கொண்ட கடிதத் தொடர்புகளில் பெருமிதத்திற்குரிய 'நாம்' என்னும் சொல்லினைப் பயன்படுத்திய வரையிலும், தம்முடைய தலைமைப் பண்பினைக் குறிப்பாகத் தெளிவுறுத்தும் வகையில் அவர் கம்பெனியாரை விளித்துக் கூறிவந்த வரையில் அந் நைசாமினுடைய அரசாகிய ஐதராபாத்து தனிச் சிறப்புரிமையுடையதாக விளங்கியது. அதன் பிறகு, ஒரே வகையான ஒத்த சூழ்நிலையில் உருவாகிய அரசுகளான அயோத்தியைப் போன்ற தனியரசுகள் ஆங்கிலேயருடைய ஆதரவை நாடி வந்தன. அவை உடன்படிக்கைகள் செய்துகொண்டதன் விளைவாக, சார்ந்திருத்தல் என்னும் பண்பில் மிகவும் தாழ்ந்த நிலையை அடைந்தன. மூன்றாவதாக உடன்படிக்கை அரசுகள் சில இருந்தன. அவை குறிப்பிட்ட ஓர் உடன்படிக்கையின்படி நிறுவப்பட்டனவாகவோ, தொன்றுதொட்டு வரும் பேரரசின் தலைமைசான்ற ஆதிக்கத்திற்குப் பதிலாகக் கம்பெனியின் மேலாண்மையை ஏற்றுக்கொண்டனவாகவோ இருந்தன.

மேலே கண்ட மூன்று உட்பிரிவுகளுள், முதற் பிரிவிற்கு மைசூர் மிகச் சிறந்ததோர் எடுத்துக்காட்டாக விளங்கியது. அதைப் போன்றே இராசபுத்திர அரசுகள் இரண்டாவது உட்பிரிவிற்கு நல்ல எடுத்துக்காட்டுகளாக இருந்தன. அதன் பிறகு, குறுநிலத் தலைவர்கள் கம்பெனியின் கருத்தைக் கவர்ந்தனர். பொதுவான உடன்பாட்டின்மூலம் அவர்கள் தத்தம் குறுநிலப் பகுதிகளின் தலைவர்களாகக் கம்பெனியால் ஏற்றுக்கொள்ளப்பட்டவர்களாவர். அத் தலைவர்களுள் சிலர் கத்தியவாரின் குறுநில மன்னரைப் போன்று தொன்றுதொட்டுத் தனியரசுடையவர்களாக இருந்துவந்தனர்; மற்றும் சிலர் தொன்கிங் நவாபான அமீர் கானைப் போன்று புதிதாகத் தோன்றியவர்களாகவும் இருந் தனர். அமீர்கானைப் போன்றே, பிரோஸ்பூரின் தலைவரும், ஜான்சியின் தலைவரும் புதிதாகக் குறுநில மன்னரின் உரிமை யையும் சிறப்பையும் அடைந்தவர்களாவர். இறுதியாக மிகச் சிறிய குலத்தலைவர்களும் குடித்தலைவர்களும் கம்பெனியின் மேலாண்மையை ஏற்றுக்கொண்டவர்களாவர். அத் தலைவர்கள் தங்களுக்கென்று தனியரசினைப் பெற்றிருக்க வில்லை. தங்களுடைய வட்டாரத்தில் எந்த அரசினுடைய கை, மேம்பட்டு இருக்கிறதோ அந்த அரசினிடத்துப் பற்றுறுதி யுடையவர்களாக அவர்கள் இருந்துவந்தனர். அவர்களுடைய பற்றுறுதி அடிக்கடி இடம்விட்டு இடம் மாறிக்கொண்டே இருந்தது. இவையனைத்திலும் தனியரசாக உரிமையுடன் இருந்தனவற்றுள் ஐதராபாத்தே ஆங்கிலேயருக்கு அவ்வளவு எளிதில் தன்னுடைய உரிமைகளையெல்லாம் விட்டுக்கொடுத்து அடிமையாக முன்வரவில்லை. 1801ஆம் ஆண்டு புதிதாகப் பதவிக்குவந்த நைசாம் தம்முடைய பதவியேற்பினைத் தில்லியி லிருந்த பேரரசினை அங்கீகரிக்குமாறு செய்தார். பின்னர் அவர் 'அரசர்' என்ற பட்டத்தைச் சூட்டிக்கொள்ள மறுத் தார். பேரரசர் தில்லியில் இருக்கின்றபொழுது தம்மைப் போன்றவர்கள் 'அரசர்கள்' என்று பட்டத்தைச் சூட்டிக் கொள்ளுவார்களானால், அச் செயல் ஒய்வூதியம் பெற்றுள்ள பேரரசருக்கு எதிராகச் செய்யப்படும் கலகமாகும் என்று அவர் கருதினார். எனவே, அவர் தம்மை அரசரென்று அறிவித்துக்கொள்ள விரும்பவில்லை. 1926ஆம் ஆண்டு ரீடிங்கு பிரபு வெளிப்படையாக இந்திய அரசின் மேலாண் மையை ஐதராபாத்தின்மீது வன்முறையில் சுமத்தினார். அக் காலம் வரையில் பிரிட்டிஷார் பேரரசின் மேலாண்மையை

முற்றிலும் ஏற்றுக்கொள்ளாத ஒரு தனியரசாகவே ஐதராபாத்து இருந்துவந்தமை இங்குக் குறிப்பிடத்தக்கதாகும்.

தனிப்பட்ட முறையில் செய்துகொள்ளப்பட்ட உடன்படிக்கைகளில் குறிப்பிடப்பட்ட விதிகளின்படியோ, பொதுப்படையான மேலாண்மை உரிமையைக் கொண்டாடும் முறையிலோ இந்த அரசுகளின் அயல்நாட்டு விவகாரங்களை எல்லாம் மேற்பார்வையிடும் பொறுப்பு தனக்கு இருப்பதை இந்திய அரசு செயல்முறையில் நிலைநாட்டிவிட்டது. பெரிய அரசுகள் அனைத்தும் கொள்கையளவில் மட்டுமல்லாமல், செயல்முறையிலும் கம்பெனியினால் அடக்கியொடுக்கப்பட்டன என்று கூறினால் அது தவறாகாது. துணைப்படைத் திட்டத்தின்மூலம் அத் தனியரசுகளில் கம்பெனியின் துணைப்படைகளை நிலையாக நிறுத்தி வைத்ததனால், அவ்வரசுகள் உரிமையுடன் இயங்க முடியாமல் போயிற்று. மேலும், அவை எந்தச் செயலைச் செய்வதென்றாலும் துணைக்காப்பரசின் ஆளுநரின் இசைவைப் பெற்றே செயலாற்றவேண்டிய இக்கட்டான நிலை உண்டாயிற்று. இந்தத் துணைப்படைகளைத் தம்முடைய தனியரசுகளில் நிறுத்திவைப்பதற்குச் செலவாகிய தொகையினை அத் தனியரசுகளே கொடுத்துவந்தன என்பதும் இங்குக் குறிப்பிடத்தக்கது. அரசுரிமைப் போட்டி போன்ற நெருக்கடிகள் உண்டானால், அப்பொழுது அத் தனியரசுகளின் விவகாரங்களில் கம்பெனி தலையிடுவதற்குப் பொதுவாக ஓர் உரிமை கம்பெனி பெற்றிருப்பதை அவ் அரசுகள் அனைத்தும் ஒப்புக்கொண்டிருந்தன. ஆனால், உள்நாட்டு விவகாரங்களில் தலையிடுவது, வெளிநாட்டு விவகாரங்களில் தலையிடுவது ஆகிய இரண்டிற்கும் இடையே உள்ள வேற்றுமைகள் நன்கு புலனாகின்றன. தனியரசுகள் அயல்நாடுகளோடு உறவுகொள்ளுவதற்குக் கம்பெனி உரிமை அளிக்கவில்லை. அதைப்போன்றே அவ்வரசுகளின் உள்நாட்டு விவகாரங்களில் தான் தலையிடவும் விரும்பவில்லை. இதுதான் 'தலையிடாக் கொள்கை' யெனும் ஆட்சிமுறைக் கொள்கையாகும். இக் கொள்கையின் அடிப்படையிலேயே டல்ஹௌசியின் காலம் வரையில் கம்பெனியின் செயல்முறைகள் அமைந்திருந்தன. 1848ஆம் ஆண்டு வரையில் தலையிடாக்கொள்கை மிகச் சிறந்த முறையில் கடைப்பிடிக்கப்பட்டு வந்ததென்றே பொதுவாகக் கூறலாம். ஆனால், இக் கொள்கையைக் கடைப்பிடித்தபொழுது இடையிடையே

உண்டான நெருக்கடியான சூழ்நிலைகள் சிற்சில சமயங்களில் அக் கொள்கையைச் சிறிது விட்டுக்கொடுக்குமாறு செய்தன.

அரசாங்கத்தின் ஆட்சிமுறைக் கொள்கைகளினுடைய ஒருமித்த செயல்களின் விளைவுகளிலிருந்து இத்தகைய சூழ்நிலைகள் உருவாயின. ஒவ்வொரு தனியரசின் மன்னனுக்கும் அயல்நாட்டுப் படையெடுப்பைப்பற்றிய அச்சமும், தம்முடைய அரசினை யாராகிலும் கவிழ்த்துவிடுவார்களோ என்ற அச்சமும் இல்லாமல் வாழுமாறு பாதுகாப்பளித்தமை கம்பெனியினுடைய ஆட்சிமுறைக் கொள்கையின் ஒரு விளைவாகும். கம்பெனியார் அவ்வரசர்களைத் துணைப்படைத் திட்டத்தின் மூலம், கம்பெனியோடு தொடர்புகொள்ளச் செய்தனர். அதன் பிறகு அத் தனியரசுகளின் இராச்சியத்திற்குள் கலகமும் குழப்பமும் உண்டாகாமல் அமைதியை நிலைநாட்டுதலும், கொலைசெய்யப்படுதலைத் தவிர, மற்ற எவ்வகையிலும் அவ்வரசர்களுக்குத் தனிப்பட்ட வகையில் எத்தகைய் இடர்ப்பாடுகளும் உண்டாகாமல் பாதுகாத்தலும் அதையடுத்துத் தோன்றிய விளைவுகளாகும். இதனால், உள்நாட்டிலிருந்தோ, வெளிநாட்டிலிருந்தோ தங்களுடைய ஆட்சிக்குத் தீங்கு வருகிறதென்றால், அதை எதிர்த்துப் போராடுவதற்கும், தங்களைத் தாங்களே தற்காத்துக்கொள்வதற்கும் தேவையான ஊக்கத்தையும் உள்ள வெழுச்சியையும் அவ்வரசர்கள் இழக்கலாயினர். அவர்களுடைய உள்நாட்டுச் செயல்முறைகளில் புதிய (அயலாருடைய) அரசு தலையிடாது, அவர்கள் தனித்து இயங்கியமையால் பேராவல் என்னும் தூண்டுகோல் அவர்களிடையே எழாமல் போயிற்று. முகலாயப் பேரரசர்கள் ஆட்சியில் இராசபுத்திர அரசிளங்குமரர்களும், மற்ற அரசர்களும் மிகவுயர்ந்த பதவிகளை—மாநில ஆளுநர்களாகவும் படைத் தலைவர்களாகவும்—வகிப்பதற்கு மெல்ல மெல்லப் பதவி உயர்வு பெற முடிந்தது. அக்பருடைய உடன் கூட்டத்தாருள் (Inner Council) ஜஸ்வந்த் சிங் என்பவர் சிறந்த பணியாற்றிய இந்து அரசராவர். மற்றொரு முகலாய உயர்நிலை அதிகாரியான அரசர் ஜெய்சிங் அவுரங்கசீபிற்கும் சிவாஜிக்கும் இடையே உடன்பாட்டை உண்டாக்கி வைத்தார். ஆனால், அத் தனியரசுகளின் தலைவர்கள் பிரிட்டிஷாரோடு கொண்ட தொடர்பினால், அத்தகைய மதிப்பிற்குரிய உயர்ந்த பதவிகளை அடைவதற்குரிய வழிகள் இல்லாமல் போயிற்று. அரசர்கள் தத்தம் அரசுகளிலும், நாடுகளிலும் தங்கியிருக்க வேண்டியவர்களானார்கள். தங்கள்

அரசுகளைவிட்டு வெளியே சென்று பட்டமும் பதவியும் பெற்று வாழ்வதற்குரிய வாய்ப்போ, வசதியோ அவர்களுக்குக் கிடைக்கவில்லை. இவ்வாறு சீரும் சிறப்பும் பெற்றுப் புகழுடன் வாழ்வதற்குரிய தூண்டு விசையோ, தற்காப்புடன் வாழவேண்டும் என்ற அச்சத்தைத் தூண்டும் பெயற்காரணமோ அவர்கள் வாழ்க்கையில் தோன்றாமல் போயின. அதனால் அசட்டுத்தன்மை, பொறுப்பற்ற போக்கு, நேர்மைக் கேடு, ஒழுக்கக் கேடு முதலிய தீய இயல்புகள் அவர்களிடையே இயல்பாகத் தோன்றின. அரசினரின் ஆட்சிமுறைக் கொள்கையினால் உண்டான மற்றொரு விளைவு பொருளாதாரச் சீர்கேடாகும். துணைப் படைகள் நிறுத்தப்பட்டிருந்த தனியரசுகள், அப் படைகளைக் கட்டிக் காப்பதற்குத் தேவைப்படும் பொருளினைக் கம்பெனிக்குச் செலுத்தி வந்தன. அப் பொருளில் இருந்தே கம்பெனியார் துணைப்படைகளுக்கு ஊதியம் அளித்து வந்தனர். இவ்வாறு துணைப்படைகள் நிறுத்தப்பட்டிருந்த அரசுகளின் அரசர்கள் தனிப்பட்ட வகையில் தங்களுடைய தற்பெருமைக்காக ஒரு படையினையும் வைத்துக்கொண்டிருந்தனர். இவ்வாறு அவர்கள் இரண்டு படைகளுக்காகச் செலவு செய்ய வேண்டியவர்களானார்கள். அவற்றுள் ஒன்று திறமையுடையதாகவும், பெருஞ் செலவிற்குக் காரணமாகவும் இருந்தது. ஆனால், அது அவர்களுடைய கண்காணிப்பிற்கு உட்படாததாக இருந்தது. மற்றொன்று எண்ணிக்கையில் மிகுதியாகவும், அரசருடைய ஆதரவையே நாடியதாகவும் இருந்தது. ஆனால், அது திறமையற்றதாகவும் பெருஞ் செலவிற்குக் காரணமாகவும் இருந்தது. இத்தகைய படைகளைக் (அயோத்தியில் இருந்ததைப் போன்று) கலைத்து விடலாமென்றால் அதனால் உண்டாகக்கூடிய விளைவுகள் அவ் அரசர்களுக்குப் பேரிடர்ப்பாட்டை உண்டாக்கக்கூடியனவாக இருந்தன. அப்படியானால், அவற்றைக் கட்டிக்காக்கலாமே யென்றால் அதற்காகச் செய்யப்பட்ட செலவு அவ் அரசர்களை ஓட்டாண்டிகளாக ஆக்கிவிடும்போல் இருந்தது. அதன் விளைவாக நிதிநிலைச் சீர்கேடு உண்டாயிற்று. அச் சீர்கேட்டினைத் தனியரசுகளால் சமாளிக்க முடியாமல் போயிற்று. ஐதராபாத்தில் நடந்ததைப்போன்று, சில அரசுகள் கடன் வாங்கிக் காலத்தைக் கழித்தன. அச்செயல் அவ் அரசுகளின் நிலையை மேலும் மேலும் பாழ்படுத்துவதாக அமைந்தது. துணைப் படைத் திட்டத்தின்படி செலுத்த வேண்டிய தொகைக்கு மாற்றாக அவ் அரசுகளுள் பல, தங்கள் ஆட்சிக்குட்பட்டிருந்த சில மாவட்டங்களைக் கொடையாகக் கம்பெனிக்குக்

கொடுத்தன. ஆனால், அத்தகைய செயலும் தற்காலிகமான பரிகாரமாக இருந்ததேயொழிய, நிலையான நன்மையை அளிக்கக்கூடியதாக அது அமையவில்லை. அசட்டுத்தனமான அரசர்களின் போற்றுதலைப் பெற வட்டார அளவில் மிக விரைவில் உண்டான நெருக்கடிகள், மீண்டும் அவ் அரசர்களின் வரவுசெலவுத் திட்டத்தில் துண்டுவிழுமாறு செய்தன.

எனவே, தலையிடாக் கொள்கையினைப் போற்றியாதரித்த பெருமக்கள், புதிய ஆட்சி முறையில் வேரூன்றிப்போன தீய பண்புகளோடு போராட வேண்டியவர்களானார்கள். அவர்கள் தனிப்பட்ட மனிதர்களிடத்தில் காணப்பட்ட குறைபாட்டோடு போராடவேண்டிய தேவை இல்லாமல், புதிய ஆட்சிமுறைக் கொள்கையின் விளைவாகத் தோன்றிய தீய பண்புகளோடு அவர்கள் மோத வேண்டியவர்களாக இருந்தனர். மனச்சான்றினைப் போற்றி வாழ்ந்த துணைக்காப்பரசின் ஆளுநர்கள் சிலர் தனியரசின் அரசர்களுக்கு அறிவு கொளுத்துவதிலும், அவ் அரசுகளைச் சீர்திருத்தம் செய்வதிலும் ஈடுபட்டனர். ஆனால், அவர்களால் நோய்க்குரிய காரணங்களை ஆராய்ந்தறிந்து, அவற்றை மீண்டும் உண்டாகாமல் அடியோடு அகற்ற முடியவில்லை. அதற்குப் பதிலாக அவர்களால் நோயின் அறிகுறிகளைக் கண்டு அந் நோயின் கொடுமையைத் தணிப்பதற்குரிய மருந்தினைத்தான் கொடுக்க முடிந்தது. இக் காரணத்தினால்தான் தலையிடாக் கொள்கையினை உளமாரப் போற்றியாதரித்த பென்டிங் போன்றவர்கள் எல்லாம், பேரளவிற்கு அத் தனியரசுகளின் உள்நாட்டுச் செயல் முறைகளில் தலையிட வேண்டியவர்களானார்கள். செயல் முறையில் குறிப்பிட்ட ஓர் எல்லைக்கு அப்பால் தலையிடாக் கொள்கை செயல்பட முடியாமல் குறைபாடுடைய ஒன்றாகச் செயலற்றுப் போயிற்று. எனவே, தலையிடாக் கொள்கையின் செயலற்ற தன்மை முதலில் கம்பெனியின் பாதுகாப்பிற்கு ஊறு விளைவிப்பதாக அமைந்தமையால், உடனடியாகச் செயலாற்றுமாறு அது ஆட்சியாளர்களைத் தூண்டியது. அதனால்தான் ஹேஸ்டிங்ஸ் பிரபு மராட்டிய அரசுகளின் உள் நாட்டு ஆட்சிமுறையில் தலையிட வேண்டிய நெருக்கடி உண்டாயிற்று. மனித நலக் கோட்பாடுகள் ஆற்றல் மிக்கனவாக வளர்ச்சியுற்றமையால், அவ் அரசுகளிடத்து வெளிப்படையாகத் தோன்றிய தவறுதல்களும், நேர்மையற்ற செயல்களும் கம்பெனியாரைச் செயலில் இறங்குமாறு தூண்டின. பிரிட்டிஷாருடைய ஆட்சியின் மேன்மையைப்

பற்றிய நம்பிக்கை பெருகியபொழுது, திறமையில்லாத ஆட்சிமுறை தவருன நெறியில் செல்லுவதால், நாடு பாழ்படுத்தப்படுவதைக் கண்டாலே, கம்பெனியார் அத் தனியரசுகளின் உள்நாட்டுச் செயல்களில் தலையிடுவதற்கு அதைத் தக்க காரணமாகக் கொண்டனர். 1818ஆம் ஆண்டு நடைபெற்ற அமைதி உடன்பாட்டிற்குப் பிறகு, கம்பெனியின் அரசு ஐதராபாத்தின் உள்துறைச் செயல்முறையில் முதன் முதலாகத் தலையிட்டதே முக்கிய நிகழ்ச்சியாகும். ஐதராபாத்தில் இருந்துவந்த நிதிநிலையமாகிய பாமர் கம்பெனி, ஐதராபாத்தின் நிதி நிலைமையில் ஒரு மாபெரும் நெருக்கடியை உண்டாக்கிற்று. அது அவ் அரசின் நிதித் துறையில் அதிகாரம் செலுத்திவந்தது. அந்நிலையில், சீர் திருத்தம் செய்வதில் பேரார்வம் கொண்டவரான மெட்காஃப், விருப்பமில்லாத கவர்னர்-ஜெனரலை ஐதராபாத்தின் செயல் முறைகளைக் கண்காணிக்குமாறு வற்புறுத்திஞர். 1826ஆம் ஆண்டு பரத்பூரில் அரசுரிமைப் போட்டியும் பூசலும் உண்டானமையால், அதனுடைய உள்நாட்டுச் சிக்கலில் கம்பெனி தலையிடவேண்டிய நெருக்கடி உண்டாயிற்று. ஆனல், இத் தனியரசு பேராதிக்கத்தை எதிர்க்கும் பழைய முறையில், தானே தனக்குண்டான நெருக்கடியைச் சமாளித்துக்கொண்டது. தலையிடாக் கொள்கையில் அசைக்க முடியாத நம்பிக்கை கொண்டிருந்தவர் வில்லியம் பென்டிங் பிரபு என்று கூறினல், அது மிகையாகாது. ஆனல், அவராலேயே அக் கொள்கையினை இறுதிவரை உறுதியாகக் கடைப்பிடிக்க முடியாமல் மைசூரில் உண்டான நெருக்கடிநிலை செய்தது. எனவே, அவர் அம் மைசூரின் அரசருடைய வரம்பிகந்த செயல்களால் உண்டான குழப் பத்தைப் போக்கவேண்டி மைசூரினை ஆட்சி புரியும் பொறுப்பினை அதன் அரசரிடமிருந்து பிடுங்கி, அதனை ஆங்கிலேய அரசுக்கு அளித்தார். அவர் நேரடியாக மைசூரைக் கம்பெனியின் அரசோடு இணைத்துக்கொள்ள முயலவில்லை. அந்த அளவிற்குத்தான், அவரால் தலையிடாக் கொள்கையைப் பின்பற்ற முடிந்தது. அவ்வாறு அவ் அரசினைப் பிரிட்டிஷாருடைய ஆட்சியில் தனித்து இயங்குமாறு அவர் விட்டுவைத்தமையால்தான், 1881ஆம் ஆண்டு அதை மீண்டும் இந்தியருடைய ஆட்சிக்குட்பட்ட தனியரசாகத் தனித்தியங்குமாறு செய்ய முடிந்தது. அவ்வாறு மைசூர் பழைய இந்து அரசரிடத்து ஒப்படைக்கப்பட்டது. அது முதல், பிற்காலத்திய தனியரசுகளுக்கெல்லாம் அவ் அரசு ஓர் எடுத்துக்காட்டாகவும் முன்மாதிரியாகவும் விளங்கத்

தொடங்கியது. 1834ஆம் ஆண்டு கூர்க்கில் வாழ்ந்த மக்களின் வேண்டுகோட்கிணங்க, அது நேரடியாகப் பிரிட்டிஷ் இந்திய அரசோடு இணைத்துக்கொள்ளப்பட்டது. அரச குடும்பத்தைச் சேர்ந்தவர்களுடைய பொறுப்பற்ற கொடுஞ் செயல்களைப் பொறுத்துக்கொள்ள முடியாத ஓர் இக்கட்டான சூழ்நிலை உண்டானமையால் கூர்க்கு மக்கள் பிரிட்டிஷாருக்கு வேண்டுகோள் விடுத்தனர். அதைப் போன்றே அசாமில் இருந்த ஜெயிந்தியா அரசிலும் ஒரு நெருக்கடி நிலை உண்டா யிற்று. அங்கு மூன்று பிரிட்டிஷ் இந்தியக் குடிமக்கள் காளிக்குப் பலியிடப்பட்டதன் விளைவாக, அந்த அரசினைக் கைப்பற்றவேண்டிய நெருக்கடி உண்டாயிற்று. இத்தகைய செயல்களுக்கு மனித நலக் கோட்பாடும், நாட்டைத் திருத்தியமைக்க வேண்டும் என்ற மனவெழுச்சியுமே காரணங்களாகும். மேலே கண்ட செயல்கள் அனைத்தும் குழப்பத்தையும் கலகத்தையும் போக்குவதற்காகவும், அரசர்களின் நேர்மையற்ற முறையினாலும் நீதியற்ற போக்கி னாலும் நாட்டு மக்களின் நல்வாழ்க்கை பாழடைந்து போகாமல் காப்பதற்காகவுமே, நேர்மையான முறையில், யாதொரு வஞ்சனையும் சூழ்ச்சியுமில்லாத நல்ல மனத்துடன் பென்டிங் போன்றவர்கள் இந்தியத் தனியரசுகளின் உள் நாட்டு ஆட்சிமுறையில் தலையிட்டனர். ஐதராபாத், இந்தூர், குவாலியர், ஜெய்ப்பூர், பரோடா போன்ற தனியரசுகளில் நன்முறையில் ஆட்சி நடைபெறவில்லை. 'பல்குழுவும் பாழ் செய்யும் உட்பகையும்', அவ் அரசுகளை அலைக்கழித்தன. ஆனால், மாபெரும் கொடுஞ் செயல்கள் ஒன்றும் அவ் அரசு களில் நடைபெறவில்லை. அயோத்தியில் சீர்திருத்தம் செய்ய வேண்டும் என்று அவர் வற்புறுத்தினார். ஆனால், அதைக் கைப்பற்றிக் கம்பெனியின் அரசோடு அவர் சேர்த்துக் கொள்ளவில்லை. மதராசில் இருந்துவந்த மிகச் சிறிய அரசான கர்நூலைமட்டும் ஆக்லண்டு பிரபு, தம்முடைய இராச்சியத் தோடு இணைத்துக்கொண்டார். 1843ஆம் ஆண்டில் இந்தியாவின் படையினை எல்லன்பரோ பிரபு அடியோடு அழித்தொழித்ததோடு, இந்திய அரசுகளின் உள்நாட்டுச் செயல்முறைகளில் ஆங்கிலேயர் தலையிட்டதைப்பற்றிய கதை ஒரு முடிவிற்கு வந்தது. இந்தப் போரின் விளைவாக மராட்டிய அரசினைக் கைப்பற்றிக்கொள்ளவில்லை. சீக்கியப் போர் நடைபெற்றால், சீக்கியர்களுக்கு அருகே பகைவர் படை ஒன்று இருப்பது தீங்கு விளைவிக்கக் காரணமாகலாம் என்ற நோக்கத்தோடு எல்லன்பரோ இந்தியாவின் படையினைத் தோற்கடித்தார். இவ்வாறு 1818–48ஆம் ஆண்டுகட்கு

இடைப்பட்ட முப்பதாண்டுக் காலம் கம்பெனியார் தலையிடாக் கொள்கையையும், துணைப்படை முறையையும் கருவிகளாகக் கொண்டு நாட்டின் பல பகுதிகளில் பாளையங்களை நிறுவியும், புறத்தே தனித்திருந்தும் இந்தியரின் இந்தியாவை அடக்கி யாள முயன்றனர். அவர்களுடைய ஆட்சிமுறைக் கொள்கையைத் 'தனித்து இருத்தல்', 'தலையிடாதிருத்தல்' என்னும் இரு சொற்றொடர்களில் அடக்கிவிடலாம். ஒற்றுமை யற்றும் சிறப்பற்றுமிருந்த பகைவர்களே பிரிட்டிஷாரின் தனி முதல் ஆதிக்கத்திற்குத் தூண்களாக இருந்தனர். அந்த அளவிற்கு இந்தியத் தனியரசுகள் அதிகப் பொறுப்புடையன வாக விளங்கவில்லை.

## ஆதாரங்கள்

மான்டேகு-செம்ஸ்ஃபோர்ட் அறிக்கையின் *(1918)* முதற் பகுதியில், சட்டவியல் வரலாறு, ஆட்சிமுறை வரலாறு ஆகிய இரண்டின் சுருக்கம் மிகச் சிறந்த முறையில் வரையப் பட்டுள்ளன. இந்தியக் கலகத்திற்கு முற்பட்ட காலத்திய வரலாற்றை அறிவதற்கு, *(1)* J. W. கேயே (Kaye): 'The Administration of East India Co.' (1853); *(2)* G. காம்பெல்: 'புதிய இந்தியா' *(1853)* என்னும் நூல்களைக் காண்க.

சட்டத்துறைச் செய்திகள் சர் சி. இல்பர்ட் (Ilbert) என்பவ ரால் 'இந்திய அரசாங்கம்' என்னும் ஆங்கில நூலில் *(1898, 3ஆம் பதிப்பு 1915)* நல்ல முறையில் எழுதப்பட்டிருக்கிறது. லண்டன் மாநகரத்தார் கண்ணோட்டத்துடன் பி. ஆபர் (Auber) என்பவர் 'கிழக்கிந்தியக் கம்பெனியின் அரசியல் அமைப்பு பற்றிய பகுப்பாராய்ச்சி' *(1826)* என்னும் நூலை ஆங்கிலத் தில் எழுதியுள்ளார்.

ஆட்சிப் பணியாளர் துறையைப்பற்றி அறிய (1) L. S. S. O'Malley: 'The Indian Civil Service' 1601—1930 (1931); (2) P. Woodruff: 'The Founders' (1953) என்னும் நூல்களைக் காண்க. இரண்டாவதாகக் குறிப்பிடப்பட்ட நூல், ஆட்சிப் பணியாளர்கள் ஆற்றியுள்ள அரும்பெருந் தொண்டினை மிக விரிவாக விளக்குகிறது.

படைத்துறையைப் பற்றி அறிய, (1) A. Broome: 'History of the Rise and Progress of Bengal Army' (1850); (2) W. J. Wilson: 'History of the Madras Army' *(5 தொகுதிகள், 1882)*; (3) 'Cambridge History of India' *(தொகுதி 6, இயல் 9)* என்னும் நூல்களைப் பார்க்க.

போலீஸ் துறையைப்பற்றிய நூற்கள் ஒன்றும் எழுதப் படவில்லை. எனினும், 'Report of the Indian Police Commission' (1902) என்னும் அரசினரின் அறிக்கையில் பல செய்திகளைக் காணலாம்.

*சட்டவியல்பற்றி அறிய* (1) H. Cowell: 'History and Constitution of the Legislative Authorities of British India' (1905); (2) 'Cambridge History of India' *(தொகுதி 6)*; (3) L. S. S. O'Malley *(பதிப்பு)*: 'Modern India and the West' (1941) என்னும் நூல்களைப் படிக்கலாம்.

*மாவட்ட ஆட்சிமுறைகளைப்பற்றி அறிவதற்கு 'கேம்பிரிட்ஜ் இந்திய வரலாற்'றின், தொகுதி 5, 6 ஆகியவற்றைக் காண்க.*

*இந்தியத் தனியரசுகளைப்பற்றி அறிய* (1) Sir W. Lee-Warner: 'The Native States of India' (1910); (2) K. M. Panikkar: 'Evolution of Indian Policy towards Indian States, 1774—1858' (1929), (3) C. Aitcheson: 'Collection of Treaties......relating to India' *(14 தொகுதிகள், பதிப்பு 1931)* என்னும் நூல்களைப் பார்க்க.

# 6. மக்களும் அரசும்

## 1. சிற்றூர்கள்

புதிய அரசு பலவகையான செயல்முறைகளைப் பின்பற்றியதன் மூலம், எவ்வாறு தன்னுடைய ஆதிக்கத்தை நாட்டிலே நிலைநாட்டியது என்பதை நாம் கண்டோம். இவ் இயலில் அவ் அரசினுடைய செயல்முறைகளினால் மக்களிடையே உண்டான விளைவுகளைப்பற்றி விரிவாகக் காணலாம். பலதிறப்பட்ட மக்கள் சாதிகளையும், பலதிறப்பட்ட பழக்கவழக்கங்களையுடையவர்களாக இந்திய மக்கள் இருப்பதையும், பழைய கடுவெறுப்புகளினாலும் புதிய காலத்தின் நெருக்கடி நிலையாலும் பல்குழுக்களாகப் பிளவுபட்டுப் பாழ் செய்யும் உட்பகையுடையவர்களாக, அவர்கள் தங்களுக்குள்ளே பூசலிட்டுக்கொண்டிருப்பதையும் கல்கத்தாவில் இருந்துவந்த அதிகாரிகள் கண்டனர். சிற்றூர்களில் இருந்த உழவர்கள் முதலில் புதிய முறையில் வரியினைத் தண்டுவதற்கு வந்திருக்கும் வரிதண்டுவோரைத்தான் கண்டனர். புதிதாக வரி வாங்க வந்திருப்போர், முன்பு இருந்தவர்களைக் காட்டிலும் கொடுங் கொள்ளைக்காரர்களாக இல்லையென்றாலும், தீராத ஆவலை மிகுதியாக உடையவர்களாக இருப்பதை அச் சிற்றூர் மக்கள் நன்கு அறிந்துகொண்டனர். இந்தியாவின் மக்கள்தொகை ஒரே சீரான உழவர்களைக் கொண்ட பெருந்திரளாக இருந்தது என்று கருதுவது ஒரு மாபெரும் தவறாகும். மக்கள்தொகையுள் பெரும் பகுதியினர் சிற்றூர்களிலேயே வாழ்ந்து வந்தனர் என்பது உண்மை. ஆனால், அவர்களுடைய சமுதாயம் சிக்கலான பலதிறப்பட்ட சமூகங்களாகிய இழைகளால் பின்னப்பட்ட ஓர் அமைப்பாக இருந்தது. செல்வத்தை அடிப்படையாகக் கொண்டு உயர்வு தாழ்வு கருதப்பட்டதைப்போலவே, சாதி முறையினை அடிப்படையாகக்கொண்டு அவர்களிடையே

உயர்வு தாழ்வு பாராட்டப்பட்டு வந்தன. நிலத்தைப் பெற்றிருந்தமைக்கேற்ப அவர்கள் சமுதாயத்தில் எத்தகைய சிறப்பும் செல்வாக்கும் பெற்றனரோ, அதைப்போன்றே உயர்ந்த சாதியில் பிறந்தவர்களுக்குத் தனிப்பட்ட வகையில் சிறப்பும் செல்வாக்கும் இருந்து வந்தது. சமுதாயத்தின் அடிப்படைக் கூறுகச் சிற்றூர்கள் இருந்தன. ஐரோப்பாவில் இருந்ததைப்போன்று கூட்டுக் கழகங்களையுடைய பட்டணங்கள் இந்தியாவில் ஒன்றுகூட இக்காலத்தில் இல்லை. இந்திய நகரங்கள், தில்லி, ஐதராபாத் அல்லது லாகூர் போன்ற அரசர்களுடைய தலைநகரங்களாக அல்லது சூரத், சென்னை, பம்பாய் போன்று ஏற்றுமதி செய்யும் துறைமுகப் பட்டினங்களாக அல்லது வாரணசி, வட மதுரை போன்ற யாத்திரை செய்வதற்குரிய புனிதத் தலங்களாக இருந்தன. சிற்றூர் பல சமூகத்தினரையும் நெருக்கமாகக் கொண்ட ஓர் அமைப்பாகவும், தன்னிறைவுடைய பொருளாதார அடிப்படையளபாகவும் இருந்துவந்தது. அது படையெடுப்புக் காலங்களில் எல்லாம் சிறப்புமிக்க முறையில் எதிர்த்துத் தாக்குகின்ற ஆற்றலுடையது என்பதைச் செயலில் காட்டியது. மக்களின்மீது அரசு மோதியது என்று சொன்னல், சிற்றூரின்மீது அரசு மோதியது என்பதுதான் அதனுடைய உயிர்நிலையான கருத்தாகும். அக்காலத்திய சிற்றூர் ஒன்றின் சமுதாய நிலையினை[1] மெட்கா∴ப் என்பவர் பின்வருமாறு வருணித்துள்ளார்.

> ‘சிற்றூர் சமூகங்கள் எல்லாம் சிறு குடியரசுகளாக உள்ளன. ஏறக்குறைய அவர்களுக்குத் தேவையான எல்லாவற்றையும் அவர்கள் தங்களிடையே பெற்றிருக்கின்றனர். வெளியுலகத்தோடு எத்தகைய தொடர்பும் கொள்ளாமல் முழு உரிமையுடன் அச் சிற்றூர் மக்கள் வாழ்ந்து வருகின்றனர். வேறெதுவும் நிலைத்து நிற்காத இடத்தில்கூடச் (அச் சமூகங்களைக் கொண்ட) சிற்றூர் நிலைபேறுடையதாக இருந்து வருகிறது. அரச மரபுகள் பல ஒன்றன்பின் ஒன்ருக வீழ்ச்சியுற்றன. ஒரு

[1] மெட்கா∴ப் வருணிக்கும் சிற்றூர் நிலை, வட இந்தியாவிலும் நடு இந்தியாவிலும் இருந்துவந்த சிற்றூரின் நிலையாகும். ஆனல், அவர் சிற்றூரின் உறுதியானதும் நிலைபேறுனதுமான வாழ்க்கைமுறையை வற்புறுத்திக் கூறுவதனல், அவர் கூறுகின்ற கருத்துகள் பிற பகுதிகளில் உள்ள சிற்றூர்களுக்கும் பொருந்திவரக்கூடியதாகும்.

புரட்சி மற்றொரு புரட்சியைத் தொடர்ந்து தோன்றுகிறது. இந்துக்கள், பட்டாணியர்கள், முகலாயர்கள், மராட்டியர்கள். சீக்கியர்கள், ஆங்கிலேயர்கள் அடுத்தடுத்து இந்த நாட்டின் தலைவிதியை நிர்ணயிக்கும் தலைவர்களானார்கள். ஆனால், சிற்றூர் சமூகங்கள் சிறிதும் மாற்றம் அடையாது என்றைக்கும் ஒரே நிலையில் இருந்துவருகின்றன. இன்னல்களும் இடர்ப்பாடுகளும் உண்டாகின்ற காலத்தில் அச் சிற்றூர் படைக்கலமேந்திப் போரிடவும் ஆயத்தம் செய்துகொள்ளுவதோடு தற்காப்பிற்குரிய அரண்களையும் அமைத்துக்கொள்ளும். அவர்களுடைய நாட்டின் மூலமாகப் பகைவருடைய படைகள் நுழைந்து செல்லுமானால், சிற்றூர் சமூகக் குழுக்கள் தங்களுடைய கால்நடைகளைத் தங்கள் அரண்களுக்கு உள்ளேயே அடைந்து கிடக்குமாறு செய்து விட்டு, வருகின்ற படைகளுக்குச் சீற்றம் உண்டாகாதவாறு தங்கள் ஊரைக் கடந்து செல்லுவதற்குரிய வசதியைச் செய்து கொடுக்கும். அப் படைகள் இச் சமூகங்களுக்கு எதிராகக் கொள்ளையிடுதலிலும் அழிவுச் செயல்களிலும் ஈடுபடுகிறபொழுது அந்தப் படைகளின் முன்னேற்றத்தைத் தடுத்து நிறுத்த முடியாது என்பது தெரியவருமானால், சிறிது தொலைவிலுள்ள நட்புறவுமிக்க சிற்றூர்களுக்கு அச் சிற்றூர் மக்கள் எல்லாரும் ஓடிப்போய்விடுவர். ஆனால், போர்ப் புயல் ஓய்ந்தவுடன், அவர்கள் தங்கள் ஊர்களுக்குத் திரும்பி வந்து தங்கள் தொழிலைத் தொடர்ந்து செய்ய முற்படுவர். ஒரு நாடு பல ஆண்டுகள் தொடர்ந்து கொள்ளைக்கும் கொலைக்கும் நிலைக்களனாக இருக்குமானால், அந் நாட்டிலுள்ள சிற்றூர்களில் மக்கள் வாழ்க்கை நடத்துவது அரிய செயலாகிவிடும். ஆனால், அப் பகுதிகளில் கொடுமையின் கோரதாண்டவம் ஓய்ந்த பின்னர், அமைதியான வாழ்க்கைக்குரிய சூழ்நிலை உருவாகிய பின்னர், சிற்றூர் மக்கள் தத்தம் ஊர்களுக்குத் திரும்பி வருவர். இத்தகைய கொடுமை மிகுந்த காலத்தில் ஒரு தலைமுறையினர் வேண்டுமென்றால் அயலூரில் அண்டிப் பிழைப்பர். ஆனால், அடுத்த தலைமுறையினர் கட்டாயம் தங்களுடைய ஊருக்குத் திரும்பி வந்து புது வாழ்வினைத் தொடங்குவர். தகப்ப

னுடைய இடத்தை மகன் நிறைவு செய்வான். பழைய ஊர் இருந்த இடத்திலேயே அவர்கள் புதிய ஊரினை நிறுவுவர். அவ்வூரில் முன்பு அவர்களுடைய வீடுகள் எங்கெங்கு இருந்தன என்பதைக் கண்டறிந்து அவ் இடங்களிலேயே தங்களுடைய புதிய வீடுகளை அவர்கள் கட்டிக்கொள்ளுவர். தங்கள் மூதாதையர் உழுது பயிரிட்ட நிலங்களையே அவர்களும் உழுது பயிரிட முன்வருவர். மிகச் சிறிய காரணங்களுக்காக அவர்கள் தங்கள் ஊரைவிட்டு ஓடிவிடமாட்டார்கள். மிக நெருக்கடியான போர்க் காலங்களிலும், கொள்ளை கொலை நடைபெறும் கலவரங்களின்பொழுதும் அவர்கள் தங்கள் ஊர்களிலேயே நிலைத்து வாழ முயலுவர். கொள்ளையையும் கொடுஞ் செயல்களையும் வெற்றியோடு எதிர்த்துப் போராடுவதற்குத் தேவையான அளவிற்குத் தங்களுடைய ஆற்றலை அவர்கள் பெருக்கிக்கொள்ளுவார்கள்.'

இக் குறிப்பிலிருந்து அக்காலத்துச் சிற்றூர்களில் வாழ்ந்த மக்களின் மனவுறுதியையும் வாழ்க்கைமுறையையும் நாம் நன்கறிய முடிகின்றது. சிற்றூருக்கும் வெளியுலகிற்கும் இடையே தொடர்பினை உண்டாக்கும் முக்கியக் கருவியாக வரிகளைத் தண்டுவதற்கு வரும் வரிவாங்குவோர் இருந்தனர். அவ் வரி வாங்குவோர் அரசாங்கத்தால் நேரடியாக அமர்த்தப்பட்ட அதிகாரிகளாகவோ, அவ் வட்டாரத்தைச் சேர்ந்த பிரபுவினுடைய பிரதிநிதிகளாகவோ அல்லது குத்தகைப் பணத்தைத் தண்டுபவர்களாகவோ இருந்தனர். அது எவ்வாறாயினும், அரசருடைய தூண்டுதலை அதனுடைய பிரதிநிதியின்மூலம் ஊர் மக்கள் உணர்ந்துவிடுவர். இதற்கு அடுத்து மிகக் கொடிய குற்றங்கள் எப்பொழுதாகிலும் அவ்வூர்ப் பகுதிகளில் செய்யப்படுமானல், நீதி நிர்வாகத்தைச் சேர்ந்த அதிகாரிகள் அப்பொழுது அந்த ஊர்களின் ஆட்சி முறையில் தலையிடுவர். பிரிட்டிஷார் ஆட்சிக் காலத்திற்கு முன்பு இவ்வாறு சிற்றூர் ஆட்சிமுறையில் நீதித் துறையினர் தலையிடுவது மிகவும் அருகிய வழக்கு மட்டுமன்று; நெடுங்கால இடையீட்டுக்கு இடையே நடைபெறுவதுமாகும். பொருள் வழக்குகள் அனைத்தும் பொதுவாகச் சிற்றூரின் மூதறிஞர்களால் விசாரணை செய்யப்பட்டும் தீர்ப்பளிக்கப்பட்டும் வந்தன. தனிப்பட்ட பிரச்சினைகளைப் பேரளவிற்குச் சாதிக் குழுக்களே ஆராய்ந்து, சிக்கல்களையும் பூசல்களையும்

போக்கிவந்தன. நேரடியாகப் பெரிய கொடுங் குற்றங்கள் செய்யப்படுவதற்குப் பெரியோர்களே பொறுப்பேற்க லாயினர். கால்நடைகளைக் கடத்திச்செல்லுதல் போன்ற வன்முறைத் தாக்குதல்களுக்கும் அவர்களே பொறுப்பாளி களாக இருந்தனர். ஆனால், பேரளவிற்கு அவர்களே தங்க ளுடைய காவல் படையினராகப் பணியாற்றினர். அவர்கள் குற்றம் செய்தவர்களைக் கண்டுபிடித்து, அவரவர்களுடைய ஊர்களின் பழக்கவழக்கங்களுக்கேற்பத் தண்டனை விதித்தும் வந்தனர். இவ்வாறு அவர்கள் சிற்றூர்களிலெல்லாம் அமைதியையும் ஒழுங்கையும் நிலைநாட்டி வந்தனர். பிரிட்டி ஷாரின் ஆட்சிக் காலத்திற்கு முந்திய சிற்றூர்களுக்குச் சென்றுவந்த மூன்றாவது முக்கிய ஆட்கள் வட்டார ஆளுந ருடைய படைவீரர்கள் அல்லது அவ் வட்டாரத்தைச் சேர்ந்த கொள்ளைக் கூட்டத் தலைவர்கள் அல்லது கலகக்காரர்களின் தலைவர்களே ஆவர். முகலாயப் பேரரசு சீரும் சிறப்பும் பெற்று விளங்கிய காலத்தில், இதற்கு மாறாகப் பெரும்படை களின் அணிவகுப்பு ஓயாது சிற்றூர்களின் வழியாகச் சென்று கொண்டிருக்கும். அப் படைகள் அழிவு வேலையில் ஈடுபடுமானால் அதைத் தட்டிக் கேட்பது கிடையாது. பிற் காலத்தில் குழப்பமும் கொந்தளிப்பும் மிகுதிப்பட்டபொழுது, அப் படைகளின் அளவு குறைந்துவிட்டாலும், அப் படைக் குழுக்கள் பெருகிக்கொண்டு வந்தன. அவை பெரிய இராச்சியப் பகுதியில் அழிவு வேலைகளில் ஈடுபட்டுவந்தன. அவை இறுதியில் அணிவகுத்துச் செல்லும் நோக்கம் பேரளவிற்கு ஊர்களிடத்தும் மக்களிடத்தும் பணத்தைப் பறிப்பதாகவே இருந்தது. இப் பணத்தைக்கொண்டு இன்னும் சில மாதங்களுக்குக் கூடுதலாகக் கலகக்காரப் படையினை வேலைவாங்க அப் படைத் தலைவர்கள் முயன்றனர். அக் கொள்ளைக் கூட்டத்தாரின் அல்லது படைகளின் தாக்கு தல்களைத் தவிர்க்க முடியாது என்று ஊர் மக்களுக்குத் தோன்றினால், அச் சிற்றூர்கள் உடனே அடிபணிந்துவிடும்; சிறிது காலத்திற்குத்தான் அவர்கள் தாக்குவார்கள் என்பது தெரிந்தால், மக்களெல்லாம் ஊரைவிட்டு வெளியூர்களுக்கு ஓடிப்போய்விடுவார்கள்; எதிர்த்துப் போரிட இயலுமென்றால் சிற்றூர் மக்கள் அவர்களை எதிர்த்துக் கடும் போர் புரிந்து விரட்டியடிப்பார்கள். அக்காலம் வட இந்தியாவிலும் தக்கணத்திலும் கோட்டைகொத்தளங்களைக் கொண்ட ஊர்கள் நிலவிய காலம். பழைய மதில்களையும் அகழிகளையும் கொண்ட கோட்டைகளையும், மதில்களையும் தோட்டங்களையு முடைய அரண்களையும் கொண்ட ஊர்களே அக்காலத்தில்

பெருவழக்காக இருந்தன. அல்லது வேறுவகையான அரண்கள் நிறுவப்பட்டிருந்தன. தற்காப்புக்காகக் களி மண்ணாலான சுவர்கள் சிற்றூர்களைச் சுற்றிக் கட்டப்பட்டிருந்தன.

பிரிட்டிஷார் ஆட்சி நிலைபெறத் தொடங்கியதன் முதல் விளைவு நாடு முழுவதிலும் அழிவு வேலைகளைச் செய்துவந்த இந்திய படைத்துறைச் சக்திகளையும், அதனால் உண்டான விளைவுகளையும் அடியோடு நாட்டிலே இருந்து அப்புறப்படுத்தியமையாகும். அதைப்போன்றே கொள்ளைக் கூட்டத்தினரையும் கலகக்காரர்களையும் கம்பெனியார் அடக்கியொடுக்கினர். பிண்டாரியரின் கொள்ளைக் கூட்டமும், சீக்கியரின் குறும்புகளும் சிற்றூர்களை இறுதியாக அலைக்கழித்து வந்த கொள்ளைக் கூட்டங்களாகும். இவையனைத்தும் ஒரு முறை அடக்கியொடுக்கப்பட்ட பிறகு, அவர்களுடைய மரபு வழியினராக எஞ்சியிருந்த சிறிய கொள்ளைக் கூட்டத்தினரைக் கம்பெனியின் அதிகாரிகள் தங்களுடைய ஆட்சிக்குட்பட்ட பகுதிகளிலெல்லாம் அவர்களை எதிர்த்து உறுதியாகப் போராடி, அவர்களை அடியோடு அழித்தொழித்தனர். தில்லி மாவட்டத்தில் நாடு மிகுந்த சீர்கேடுற்றிருந்தது. தில்லி நகரினைச் சூழ்ந்திருந்த கொள்ளைக் கூட்டத்தினர், அந் நகரினைத் தாங்கள் கொள்ளையடிப்பதற்குப் பல குடும்புகளாகப் பிரித்துக்கொண்டிருந்தனர். வருவாய்த்துறை அதிகாரிகள் வெளியில் செல்லுவதென்றால், தங்களுடன் துப்பாக்கியேந்திய காலாட்படையினரை உடன் அழைத்துச்செல்ல வேண்டியிருந்தது; அப்படி வெளியே சென்றபொழுது அக் கொள்ளைக் கூட்டத்தினரை எதிர்த்துத் தற்காலிகமாகப் போரிடவும் நேரிட்டது. நாட்டிலே அமைதியும் பாதுகாப்பும் திரும்ப நிலைநாட்டப்பட்டமை சிற்றூர் மக்களுக்கு முற்றிலும் நன்மை பயப்பதாக அமைந்தது எனலாம்.

## 2. நிலம்

பிரிட்டிஷாருடைய ஆட்சியினால், சிற்றூர் மக்களுடைய வாழ்க்கையில் உண்டான இரண்டாவது பயன் இங்குக் குறிப்பிடத்தக்கது. வெளியிலிருந்து பலர் அவர்கள் வாழ்க்கையில் நிலையாகத் தொடர்ந்து தலையிடத் தொடங்கியமையாகும். இத் தலையீடு வருவாய்த்துறைச் செயல்களினாலும் நீதி

நிர்வாகத்துறை செயல்களிலும் ஒருங்கே உண்டாயிற்று.[1] முதலில் பழைய நிலவரி முறையில் சிறிது மாற்றமும் செய்யப்படாமல் அப்படியே பின்பற்றப்பட்டது. அக்காலத்து நடைமுறையில் இருந்துவந்த தீர்வை முறையினையும் வரிகளைத் தண்டும் முறையையும் அப்படியே பின்பற்றுவதன்மூலம், ஆண்டிற்குச் சேரவேண்டிய நிலவரியைக் கம்பெனியார் தண்டிவந்தனர். அதன் பிறகு உண்மை நிலையினைக் கண்டு ஆராய்வதற்காக அதிகாரிகள் அமர்த்தப்பட்டனர். அவர்களையடுத்துப் பரிசோதனை முறையில் அமைந்த தீர்வைத் திட்டம் செயல்முறைக்குக் கொண்டுவரப்பட்டது. இறுதியாக நிலங்கள் எல்லாம் அளக்கப்பட்டுக் கணக்கிடப்பட்டன. சேகரிக்கப்பட்ட செய்திகளை அடிப்படையாகக்கொண்டு தீர்வை செலுத்தவேண்டிய தொகை இவ்வளவு என்று முடிவு செய்யப்பட்டது. இத்தகைய செயல்முறைகளின் முடிவான பயனாகச் சிற்றூர்களுக்குள்ளேயே அதிகார மாற்றம் பையப்பையச் செய்யப்பட்டது. சிற்றூர்களின் மூதறிஞர்களிடம் இருந்துவந்த அதிகாரம் மெல்ல அரசாங்கத்தின் பிரதிநிதிகளிடத்து மாற்றப்பட்டது. எடுத்துக்காட்டாக, வடமேற்கு எல்லைப்புறத்தில் சிற்றூரைச் சேர்ந்த மூதறிஞர்கள் தங்கள் உரிமையை விட்டுக்கொடுக்க அரசாங்கப் பிரதிநிதியிடமோ, வட்டாரத் தலைவரின் பிரதிநிதியிடமோ பேரம் பேசினர். மொத்தம் செலுத்த வேண்டிய தீர்வையைப்பற்றி அவர்கள் ஒரு முடிவிற்கு வந்தவுடன், உழவர்களுள் தலைக்கு இவ்வளவு ரூபாய் தீர்வை செலுத்த வேண்டும் என்று அறிவித்து, தேவைக்கு மேற்பட்ட அளவிற்கு அவர்கள் வரிப் பொருளைத் தண்டிவரலாயினர். இதன் விளைவாக வருவாய்த்துறை அதிகாரிகள் சிற்றூர்களின் நிலங்களை அளந்து மொத்தத் தீர்வையை நிர்ணயம் செய்ததோடு அமையாது, உழவர்கள் ஒவ்வொருவரும் செலுத்தவேண்டிய நிலவரி எவ்வளவு என்பதை ஓர் ஊரில் உள்ள உழவர்களின் மொத்த எண்ணிக்கையினுல் வகுத்துத் தனியொருவர் செலுத்த வேண்டியது எவ்வளவு என்பதையும் அறிவித்தனர்.

[1] அந்த மாற்றம் வங்காளத்தைப் பொறுத்தவரையில் மிகுதியான வேறுபாடுடையதாகத் தோன்றவில்லை. ஏனெனில், அங்கு ஜமீன்தாரி முறை தொடர்ந்து இருந்துவந்தமையாலாகும். மாற்றம் அரசாங்க அதிகாரிகளின் நிலையில் தான் காணப்பட்டது. புதிய மனிதர்கள் பலர் ஜமீன்தாரர்களாக்கப்பட்டார்கள். இம் முறை நன்மை பயப்பதாக அமையவில்லை.

தீர்வையைப்பற்றி முடிவு செய்யப்பட்ட ஒவ்வொரு நிலையிலும், சிற்றூர்களிலுள்ள மூதறிஞர்களின் அறிவுரையை ஏற்று, அதற்கேற்ப அவர்கள் செயலாற்றி வந்தனர். அதிகாரிகள் அவர்களுடைய கருத்துரைகளைப் பொன்னேபோல் போற்றி ஏற்றுக்கொண்டனர். ஆனால், அவர்களுடைய ஆதிக்கம் கிழறுக்கப்பட்டது. உழவர்கள்மீது அவர்கள் செலுத்திவந்த அதிகாரம் மெல்லப் பறிக்கப்பட்டது. நீதி நிர்வாகத்துறையிலும் இத்தகைய செயல்முறையே பின்பற்றப்பட்டது. மாவட்டங்களில் காவல் படையினர் அமைக்கப்பட்டமையால், இதற்கு முன்பெல்லாம் ஊர்களைச் சேர்ந்த அதிகாரிகள் கவனித்துவந்த குற்றங்களையும் தண்டனைகளையும், காவல் படையைச் சேர்ந்த அதிகாரிகள் தாங்களே ஆராய்ந்து, தண்டனை அளிக்கலாயினர். வருவாய்த்துறை சார்பாகவும், குற்றவியல் சார்பாகவும் எழுந்த வழக்குகளையெல்லாம் மாவட்ட நீதி மன்றங்களே பெரும்பாலும் இளமைமிக்க அயல் நாட்டார்களாகிய அதிகாரிகளைக்கொண்டு விசாரணை செய்து தீர்ப்பளித்துவந்தன. அவ் வழக்கு விசாரணைக்குப் பின்பற்றப்பட்ட முறையோ, புதுமையானதாகவும் பெருஞ் சிக்கலுடையதாகவும் இருந்தது. உள்ளூரைச் சார்ந்த வழக்குமன்றங்களில் ஒரு வழக்கின் தீர்ப்பாக எது வேண்டுமானாலும் அறிவிக்கப்படலாம் என்பது மக்களின் நம்பிக்கையாக இருந்தது. இடைக்கால இங்கிலாந்தில் நிலப்பிரபுக்களின் நீதி மன்றங்களைக்காட்டிலும் அரசரின் நீதிமன்றங்கள் பெரும் கவர்ச்சியுடையனவாக இருந்தன. எனவே, அங்கு வழக்குகள் பேரளவிற்குச் சென்று குவிந்தன. நிலப்பிரபுக்களின் (Baronial) நீதிமன்றங்களைக்காட்டிலும் அரசரின் நீதி மன்றத்தில் வழக்குகள் சிறந்த முறையில் ஆராயப்பட்டு, நேர்மையான முறையில் தீர்ப்புகள் வழங்கப்பட்டதாக மக்கள் நம்பியமையே இதற்குக் காரணமாகும். கம்பெனியாட்சி நடைபெற்ற இந்தியாவில், புதிய நீதிமன்றங்கள் மக்களைப் பெரிதும் கவர்ந்தன. தவறான வழக்குகள்கூடப் புதிய நீதிமன்றங்களில் வெற்றிபெற வாய்ப்பு மிகுதியாக இருப்பதாக மக்கள் கருதியதனால், புதிய நீதிமன்றங்களில் வழக்குகள் வந்து குவிந்தன. நீதி நிர்வாகமே ஏதோ ஒரு வகையான குலுக்குச் சீட்டு முறையைப் போன்றது என்று மக்கள் கருதினர். தவறான வழக்குகளைத் தொடுக்க விரும்பியவர்களும், தங்களை நன்கு அறிந்தவர்கள் இருக்கின்ற அண்மையிலுள்ள நீதிமன்றங்களில் வழக்கினைத் தொடுப்பதைக் காட்டிலும், நெடுந்தொலைவிலுள்ள மாவட்ட நீதி மன்றங்களில் வழக்கினைத் தொடுத்தால் தாங்கள் வெற்றி

பெறுவதற்குரிய வாய்ப்பு மிகுதியாக இருப்பதாக நம்பினர். இந்தத் துறையிலும்கூடச் சிற்றூரின் மூதறிஞர்களுடைய ஆதிக்கமும் செல்வாக்கும் கீழறுக்கப்பட்டன.

பத்தொன்பதாம் நூற்றுண்டின் முற்பகுதியில் பிரிட்டிஷ் ஆட்சியாளர்கள் ஒரே எண்ணத்துடன் நேர்மையாகப் பணியாற்றி, சிற்றூர்ச் சமூகங்களைத் திரும்பவும் புத்தூக்கமும் புத்துயிரும் பெற்று விளங்குமாறு செய்ய விரும்பியபொழுதுதான், இவ்வாறு அரசு மேற்கொண்ட திட்டங்கள் நன்முறையில் செயற்படுத்தப்பட்டபோதிலும், மக்களுக்கு மனச் சோர்வையளிப்பதாக இருந்தமை புலனாகியது. இந்தியாவின் சில பகுதிகளில் சிற்றூர்களின் தன்னாட்சி முறை இதற்கு முன்பே மறைந்து போய் விட்டிருந்தது. மற்றும் சிலவற்றில் அதனுடைய சிதைந்து போன பண்புகள் சிலவே எஞ்சிநின்றன. எங்கு அது நல்ல முறையில் செயற்பட்டுவந்ததோ, அங்கு அது மெல்ல நலிந்து கொண்டே வந்தது. எங்கு அம்முறை மறைந்துவிட்டதோ, ஆற்றல் குன்றிக்கிடந்ததோ அங்கு அது மீண்டும் புத்துயிர்ப்புப் பெறமுடியாமல் தோல்வியுற்றது. நன்முறையில் இருந்த சிற்றூர்களில், புதிதாக அமர்த்தப்பட்ட மத்திய அரசின் அதிகாரிகளிடத்து அதிகாரம் மாற்றப்பட்டமையும், எங்கு அவ் ஊராட்சிமுறை நலிந்து இருந்ததோ, அங்கெல்லாம் சிற்றூர் மூதறிஞர்களின் சார்பாக அல்லாமல், அதே மத்திய அரசின் அதிகாரிகள் சார்பில், வன்முறையில் அதிகாரத்தைப் பறித்துக்கொண்டவர்களிடமிருந்து அவ் அதிகாரம் பிடுங்கப் பட்டமையும் அவ் ஊராட்சிமுறை புத்துயிர்பெற முடியாமல் போனமைக்குரிய முதன்மையான காரணங்களாகும். இவ்வாறு சென்னை மாநிலத்தில் ஜமீன்தார்களும் பாளையக் காரர்களும் தங்களுடைய ஆதிக்கத்தை இழந்தனர். அவர் களால் இழக்கப்பட்ட ஆதிக்கம் ஊராட்சி மன்றங்களைப் புதுப்பிப்பதற்குப் பயன்படுத்தப்படாமல் வருவாய்த்துறை அதிகாரிகளுக்கும், நீதி நிர்வாகத்துறை அதிகாரிகளுக்கும், காவல்துறை அதிகாரிகளுக்கும் பகிர்ந்தளிக்கப்பட்டது. பண்டைய பஞ்சாயத்து ஆட்சிமுறையைவிடத் தங்களுடைய ஊராட்சிமுறையே சிறந்தது என்று பிரிட்டிஷார் எழுப்பிய புகழிசை, இழவுப் பண்ணாக மாறியது. ஊராட்சி முறையினை அழித்தொழித்ததன்மூலம் திறமையான ஆட்சி வெற்றி பெற்றது; உயிர்போன்ற சிற்றூர் வாழ்க்கைமுறையைப் பலிகொடுத்ததன்மூலம் அதிகாரவர்க்கத்தினரின் திறமை யான ஆட்சி வாகை சூடியது.

ஆனால், இந்திய சிற்றூர் வாழ்க்கை முறையின் ஒருபக்கத் தோற்றமே சிற்றூர்களின் மூதறிஞர் நிலையும், அவர்களுடைய பஞ்சாயத்து ஆட்சிமுறையுமாகும் என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது. பொதுவாக உழவர்கள் ஊராட்சி முறைக்காலத்திலும்தான் இருந்தனர்; மத்தியக் குவிமுக ஆட்சி தோன்றத் தொடங்கிய காலத்திலும்தான் இருந்து வந்தனர். அவ் உழவர்கள் இப்பொழுது கொடுமையிலிருந்தும் போரிலிருந்தும் விடுதலை பெற்றமையால் மகிழ்ச்சியுற்றனர். ஆனால், இன்னும் அவர்கள் தங்களுடைய நிலவுரிமைப் பாதுகாப்பின் நீடிப்புக் காலத்தைப்பற்றியும் அரசாங்கத்திற்குச் செலுத்த வேண்டிய தொகையைப்பற்றியும், எம்முறையில் செலுத்த வேண்டும் என்பதைப்பற்றியுமே அதிகமாகக் கவலைப்பட்டு வந்தனர். இந்திய அரசாங்கத்தினுடைய நிதி நிலையின் முக்கிய ஆதாரமாக நில வரியே இருந்துவருவது வழக்கமாகும். ஆண்டு விளைச்சலில் ஒரு பகுதியை அரசாங்கம் தனக்கு வரியாகச் செலுத்தவேண்டும் என்று உழவர்களைக் கேட்பது, உலகத்தில் எல்லா நாடுகளிலும் இருந்துவந்த வழக்காறாகும். மௌரியப் பேரரசர்கள் காலத்திலும் குப்த பேரரசர்களின் ஆட்சிக் காலத்திலும் மொத்த விளைச்சலில் ஆறில் ஒரு பங்கு[1] நிலவரியை தண்டப்பட்டதாகக் கூறப்படுகிறது. அக்பருடைய ஆட்சிக்காலத்தில் நிலவரி மூன்றில் ஒரு பங்காக நிர்ணயிக்கப்பட்டது. தக்கணத்தில் அது அரைப் பகுதிக்கு மேலாகவும் தண்டப்பட்டு வந்ததாகத் தெரிகிறது. இந்தத் தொகைகளை மிகப் பரந்துகிடந்த நிலப்பகுதியில் சிதறுண்டுகிடந்த சமூகத்தினரிடமிருந்து தண்டுவது மிகக் கடினமான வேலையாகத் தோன்றியது. அதனால் வரிவிதிப்புக்கும், வரி செலுத்தப்பட்டமைக்கும் இடையே நிலையானதும் நன்கு அறியப்பட்டதுமான பெரும் பிளவு இருந்துவருமாறு நேர்ந்தது. வரிகளைத் தண்டும் பழக்கவழக்கங்களில் முடிவில்லாத பலதிறப்பட்ட வேற்றுமைகள் இருந்துவந்தன. எப்பொழுதும் எல்லாவற்றிற்கும் பொருந்தி வருமாறு எத்தகைய வீத எண்ணையும் நிர்ணயிக்க முடியவில்லை. வங்காளத்தில் தொடக்க காலத்தில் பிரிட்டிஷார் செய்த பரிசோதனைக்குப் பிறகு, அவர்கள் நேர்மையானதும் மிகவும் திறமை வாய்ந்ததுமான ஒரு முறையினை உருவாக்க முயன்

[1] மனுதரும சாத்திரத்தில் ஆறில் ஒரு பங்கு வரி வாங்குவதைப் பற்றியும், போர் அல்லது பிற நெருக்கடி உண்டாகின்ற பொழுது நான்கில் ஒரு பங்கு வரி வாங்குவதைப்பற்றியும் குறிப்பிடப்பட்டுள்ளன.

33

றனர். அம் முயற்சி முதன்மையானதாகவும், இறுதி முடிவான தாகவும், தெளிவாக வெற்றி பயப்பதாகவும் அமைந்தது. அவர்கள் உருவாக்கிய வருவாய்த்துறை வரி விதிப்பு முறை இன்றும் முழுமையாக நிலைபெற்று விளங்குகிறது. வங்காளத்தில் நிலவிய நிலையான நிலவரித் திட்டத்தையும், அத்துடன் ஜமீன்தாரி முறையையும் ஒழித்தமையே, இந்தியாவில் அதன் விடுதலைக்குப் பின்னர் உண்டான மாபெரும் மாற்றமாகும். இவ்விரு முறைகளும் 1947ஆம் ஆண்டிற்கு முன்பே வரிசையாகப் பின்பற்றப்பட்ட பலவகைத் திட்டங்களினால் சிற்சில மாற்றங்கள் பெற்றிருந்தன. அவற்றுள் ஒன்று நிலையான நிலவரித் திட்டத்தை மாற்றியமைப்பதற்கு 1947 அளவில் நடைபெற்றுக்கொண்டிருந்த முயற்சியாகும்.

முதன்முதலில் நிலவரித் திட்ட முறை, செயற்படுத்தப்பட்ட மிகப் பெரிய பகுதி வங்காளமும் பீகாருமாகும். அங்கு மரபுவழி ஜமீன்தார்கள் அரசாங்கத்திற்கும் உழவர்களுக்கும் இடையே தரகர்களைப்போன்று பணியாற்றி வந்தனர். வட நாட்டில் 'ஜமீந்தார்' என்ற சொல்லுக்கு வழங்கப்படும் பொருளில் சொல்லுவதென்றால், இந்த ஜமீன்தார்கள் நிலக்கிழார்கள் அல்லர். ஆனால், பெரும்பாலும் பரம்பரை வரி தண்டுவோராகவே வட இந்திய மக்கள் அவர்களைக் கருதி வந்தனர். வாரன் ஹேஸ்டிங்ஸ் நிலவரித் தீர்வை முறையைப் பற்றிப் பல வகையான பரிசோதனைகள் நடத்தினர். அம் முயற்சிகளில் அவர் தோல்வியுற்றார் என்றே கூறலாம். அவருடைய பரிசோதனைகளுக்குப் பின்னர், 1793ஆம் ஆண்டில் இப் பிரச்சினைக்குக் காரன்வாலிஸ் ஒரு முடிவு கண்டார். அவர் நிலையான நிலவரித் திட்டத்தைச் செயல்முறைக்குக் கொண்டுவந்ததன்மூலம், அப் பிரச்சினைக்கு ஒரு முடிவு கண்டார். இந்தத் திட்டத்தை நாம் ஏழாம் பகுதியின் ஏழாம் இயலில் விரிவாகக் கண்டோம். எனவே, இங்கு அதைப் பற்றிச் சுருக்கமாகக் கூறுதல் போதுமானது என்று நான் கருதுகிறேன். நிலவரி தண்டும் ஜமீன்தார்கள் ஆங்கிலேய நாட்டுக் கருத்துப்படி நிலக்கிழார்களாகிய ஜமீன்தார்களாக ஏற்றுக்கொள்ளப்பட்டனர். அவர்கள் ஆண்டுதோறும் செலுத்தவேண்டிய நிலத் தீர்வை நிலையாக வரையறுக்கப்பட்டது. அவர்கள் தண்டுகின்ற வரித் தொகைக்கும் செலுத்துகின்ற வரித் தொகைக்கும் இடையே எஞ்சுகின்ற உபரித் தொகையைத் தாங்களே அனுபவிப்பதற்குத் தங்களிடம் நிறுத்திக்கொள்ள அவர்கள் அனுமதிக்கப்பட்டனர். அதன் விளைவாக விளைச்சல் பெருகிய காலத்தில் அதனால் கிடைத்த

ஆதாயம் அனைத்தையும் அவர்களே அனுபவிக்கும் உரிமையைப் பெற்றனர். அவ்வுரிமை 1770ஆம் ஆண்டு முதல் அளிக்கப் பட்ட பாதுகாப்பின் விளைவாகத் தோன்றியதாகும். முதலில் அவர்களுள் பலருக்கு, தாங்கள் செலுத்தவேண்டிய தொகை மிக அதிகமாக இருந்ததாகத் தோன்றியது. நாடு சீரழிந்து கிடந்ததே அவர்கள், அவ்வாறு கருதியதற்குக் காரணமாகும். செலுத்தவேண்டிய நிலுவைக்காக அடித்தலும் பேரம் பேசுதலுமாகிய பழைய முறைகளுக்குப் பதிலாக, இப் புதிய அரசு பண்ணைகளை விற்பதையே அதற்குரிய மாற்றுமுறை யாகக் கையாண்டது. இதன் விளைவாக ஜமீன்தார்களான அதிகாரிகளுள் மிகப் பெரிய மாற்றங்கள் எல்லாம் தோன்றின. நெடுங்காலமாக நிலைத்து வாழ்ந்து வந்த குடும்பங்களுக்குப் பதிலாக கல்கத்தாவில் காசுக்கடை வைத் திருந்தவர்கள் புதிய ஜமீன்தார்களாகச் சிறப்புற்றனர். நிலையான நிலவரித் திட்டம் இவ்வாறு நிலையாக வாழ்ந்த ஜமீன்தாரர்களுக்குப் பதிலாக ஊரில் இல்லா நிலக் கிழார்களை (absentee land-lords) மிகப் பலராகப் பெருகுமாறு செய்தது. அதுமட்டுமல்லாமல், நிலக்கிழார்களுக்கும் உழவர் களுக்கும் இடையே இருந்துவந்த நேரடியான தொடர்பினை அப் புதிய நிலவரித் திட்டம் முரித்துவிட்டது. சிற்றூர் வாழ்க்கையில் ஒருவகையான கடுமைப் பண்பு பரவலாயிற்று. விளைச்சல் பேரளவில் செய்யப்பட்டபொழுதும், அதனால் உழவர்கள் ஒருவகைப் பயனையும் அடைய முடியாமல் போயிற்று. அவர்களுக்குக் கிடைத்ததெல்லாம் அவர் களுடைய பெரிய குடும்பத்தின் வயிற்றை நிரப்புவதற்கே போதியதாக அமையவில்லை. பதினாறும் நூற்றாண்டுக் காலத்திய இங்கிலாந்தில் உண்டான மாற்றங்களின் பழைய நிகழ்ச்சிகளை நினைவூட்டுகின்ற வகையில், இந்தியாவில் நிலை யான நிலவரித் திட்டத்தினாலுண்டான மாற்றங்கள் அமைந்தன. இங்கிலாந்தில் கவலையற்று சொகுசான வாழ்க்கை வாழ்ந்துவந்த மடாலய நிலக்கிழார்கள் மெல்ல மறைந்தொழிய, எட்டாம் ஹென்றியால் சமுதாயத்தில் முனைப்பியல்புடையவர்களாக விளங்குமாறு செய்யப்பட்ட பெருநிலக்கிழார்கள் தோன்றியதைப்போன்று, இந்தியா விலும் இக்காலத்தில் இவ் அரிய மாற்றம் உண்டாயிற்று. பத்தொன்பதாம் நூற்றாண்டு முழுவதிலும் நிலக்கிழார்களிட மிருந்து நிலம் பயிரிடுகின்றவர்களைக் காப்பதற்குரிய முயற்சிகள் தொடர்ந்து நடைபெற்றன. அவற்றால் பயன் விளையாமல் போகவில்லை. ஆனால், அம்முறை பிரிட்டிஷார் ஆட்சிக்காலம் முழுவதிலும் சேதமுறாது இருந்துவந்தது.

அம் முறை செயற்படுத்தப்பட்ட தொடக்க காலத்தில், சிறப்பாகக் கிடைத்த அதனுடைய அரசியல் நன்மைகள் போற்றத்தக்கனவாகும். ஆனால், சமுதாய அளவில் அதனால் உண்டான இழப்பு பேரளவினதாகும்.

1802ஆம் ஆண்டிற்கும் 1805ஆம் ஆண்டிற்கும் இடைப் பட்ட காலத்தில் நிலையான நிலவரித் திட்டமும் ஜமீன்தாரி முறையும் வாரணவாசிக்கும், ஒரிசாவிற்கும், வட சர்க்கார் மாநிலங்களுக்கும் விரிவுபடுத்தப்பட்டன. ஆனால், அதற் குள்ளாக நடைமுறையிலுள்ள அத் திட்டத்தில் வெளிப்படை யாகக் காணப்படும் குறைகள் ஐயங்களை எழுப்பத் தொடங்கி விட்டன. அதன் விளைவாகச் சென்னை மாநிலத்தில் அத் திட்டத்தினைப் பின்பற்றாது, முற்றிலும் வேறான மற்றொரு முறையினை வகுத்தனர். 1799-1801ஆம் ஆண்டுகளில் மைசூரும் கருநாடகமும் கைப்பற்றப்பட்டபொழுதுதான், தமிழகத்தில் எத்தகைய நிலவரித் திட்டத்தைச் செயற் படுத்துவது என்ற சிக்கல் உண்டாயிற்று. எனவே, அங்கு முற்றிலும் மாறான புதியதொரு முறையைப் பின்பற்றத் தொடங்கினர். இம் முறைக்கு 'இரயத்துவாரி முறை' (**Ryotwari System**) என்பது பெயராகும். 'இரயத்துவாரி' எனும் சொல்லிற்கு 'அரசுக் குடிமுறை' என்பது பொரு ளாகும். நிலத்தினை உழுகின்றவர்களோடு நேரடியாகத் தொடர்பு கொண்டு நிலவரித் தீர்வையை நிர்ணயிக்கும் முறையே அரசுக் குடிமுறை என்பதாகும். இச் சிறப்புமிக்க 'அரசுக் குடிமுறை'த் திட்டத்தைத் தீட்டித் தந்த பெருமை சர் தாமஸ் மன்ரோ அவர்களுக்கு உரியதாகும். சென்ற நூற் றாண்டின் தொடக்க ஆண்டுகளில் அவர் நிலத் தீர்வைமுறைத் திட்ட ஆராய்ச்சியில் ஈடுபட்டிருந்ததன் விளைவாக இம் முறையே சிறந்ததென்று அவர் போற்றியாதரித்தார். அவர் சிற்றூர்களின் வாழ்க்கை முறையையும், அவற்றின் பிரச்சினை களையும் நன்குணர்ந்திருந்தார். மேலும், கண்காணிப் பில்லாமல் விடப்படுகின்ற நிலக்கிழார்களால் உண்டாகக் கூடிய தீமைகளையும், என்றைக்கும் மாற்றமுடியாத வகையில் நிலையான நிலவரித் திட்டத்தைச் செயற்படுத்து வதனால் உண்டாகும் தீமைகளையும் குறைகளையும் அவர் நன்கு அறிந்திருந்தார். அந்தச் சமயத்தில் மதராஸ் மாநிலத்திற்குள் ஜமீன்தாரிமுறையும், அரசுக் குடிமுறையும், ஊராட்சிமன்ற நிலவரித் திட்ட முறையும் நடைமுறையில் இருந்துவந்தன. அவர் சென்னையின் ஆளுநராகப் (Governor) பொறுப்பேற்ற பொழுது 'அரசுக் குடிமுறை'யே நாடெங்கும் பின்பற்றப்

படுமாறு சட்டம் இயற்றப்பட்டது. ஆனால், புதுமைக் காலத்தின் தற்கால முறைகளின் வடிவத்தினை அது 1855ஆம் ஆண்டு முதற்கொண்டுதான் பெற்றது என்பர். நிலத்தை உழுது பயிரிடும் உழவர்களிடத்து நேரடியாக நிலவரித் திட்டம்பற்றிய உடன்படிக்கை செய்துகொள்ளப் பட்டது. அத் திட்டம் தற்காலிகமானதேயொழிய நிலை பேறுடைய ஒன்றன்று. இது இரயத்துவாரி முறையின் சாரமாகும். இவ்விரு இயல்புகளுக்கு இடையே உள்ள தொடர்பு செயல் முறையில் இருந்துவந்த தொடர்பே யொழியே, அளவை நூல் முறைப்படி அமைந்த தொடர்பன்று. அத் திட்டத்தின் தற்காலிகத் தன்மை 1883ஆம் ஆண்டில் தான் முடிவாக ஏற்றுக்கொள்ளப்பட்டது. மண் வளத் தினையும், பயிரிடப்படும் தானிய வகையின் இயல்பையும் கருத்தில் கொண்டு நிலங்களை எல்லாம் அளந்த பின்னர், ஒவ் வொன்றுக்கும் விதிக்கவேண்டிய தீர்வை எவ்வளவு என்று முடிவு செய்தனர். அதன் பிறகு நிலத்தை உழுகின்ற ஒவ்வோர் உழவனிடத்தும் குறிப்பிட்ட சில ஆண்டுக் காலத் திற்கு ஓர் உடன்படிக்கை செய்துகொள்ளப்பட்டது. குறிப் பிட்ட ஆண்டுக்காலம் என்பது முப்பதாண்டுகளென்று வரை யறுக்கப்பட்டது. இதனால் நிலவுடைமை இன்றியமையாத வகையில் குறைந்த அளவினதாக இருக்கவேண்டிய தேவை ஏற்பட்டது. அண்மைக் காலத்திய சராசரி நிலவுடைமை $6\frac{1}{2}$ ஏக்கர்கள் என்பது இங்குக் குறிப்பிடத் தக்கதாகும். ஒரு முறை இவ் உடன்படிக்கை செய்துகொள்ளப்படுமானால், எத் துணைக் காலம்வரை சட்டப்படி செலுத்தவேண்டிய வரிப் பணத்தைக் கட்டிவருகின்றனரோ, அது வரையில் நிலக் கிழார்கள் அந் நிலம் தங்களுக்கே கட்டுப்பாடற்ற உரிமை யுடையதாக அனுபவித்து வந்தனர். வரையறுத்துக் குறிப்பிடப்பட்ட காலம் முடிகின்ற வரையில் அரசு விதித்த தீர்வைக் கட்டணத்தை மாற்றமுடியாது. எனவே, உழவுத் தொழிலில் உண்டான முன்னேற்றங்களும், பெருவிளைச்சலும், தானியங்களின் விலை உயர்வும் உழவர்களுக்கு நேரடியான நன்மைகளை விளைவிப்பனவாக அமைந்தன. உழவன் தன்னுடைய நிலத்தை விற்கவோ, பிறருக்கு உரிமைப் படுத்தவோ முடியும். அவன் அரசிற்குக் கட்டவேண்டிய நிலவரியைக் கட்டவில்லையானால், அவனுடைய நிலம் ஏலத் திற்கு விடப்பட்டு, வரித்தொகை தண்டப்படும். ஆனால், பஞ்சமோ, வரட்சியோ உண்டான சமயங்களில் வரிகளைச் செலுத்துவது தள்ளுபடி செய்யப்படவேண்டும் என்று மக்கள் வேண்டியபொழுது, நிலவரி தள்ளிக் கொடுக்கப்பட்டது.

சட்டத்தின் நெறிமுறைப்படி அல்லாமல் வேறுவகையில் வரி செலுத்தாத உழவர்கள்மீது எத்தகைய நடவடிக்கையும் எடுக்க முடியாது. விளைச்சலாகும் தானியத்தின் அடக்க விலையாக மதிப்பிடப்படுவதில், செம்பாதி நிலவரித் தீர்வையாக நிர்ணயம் செய்யப்பட்டது. அதாவது, நிலத்தைப் பயிரிடுவதற்குச் செலவாகும் தொகையையும், வேறு எதிர்பாராத செலவினங்களையும் மொத்த வருமானத்தில் கழித்தபிறகு, எஞ்சியுள்ள தானியத்தின் நிகர விலையில் பாதியை அரசுக் குடிமுறை நிலவரியாகச் செலுத்தவேண்டும் என்று வரையறுத்தனர். நிலத்தை உழுபவருக்கும் அரசாங்கத்திற்கும் இடையே இருந்துவந்த 'ஜமீன்தாரி' எனப்படும் தரகர்களை நீக்கியதனால் 'இரயத்துவாரி' முறை மாபெரும் நன்மை பயப்பதாக அமைந்தது. ஜமீன்தாரிகள் திரைக்குப்பின் உழவர்களைக் கொடுமைப்படுத்தி வந்தனர். அதை வெளிப்படையாகக் கண்டறிய முடியாமல் போயிற்று. இத் தீமைகளெல்லாம் இரயத்துவாரி முறை செயற்படுத்தப்பட்டதனால் அடியோடு நீக்கப்பட்டன. ஆனால், உழவர்கள் அரசாங்க அதிகாரிகளின் கருணையை எதிர்நோக்கிக் காத்திருக்க வேண்டிய இக்கட்டான நிலை இந் நிலவரி முறையினால் உண்டாயிற்று. நிலவரி முழுவதையும் சிறிதுகூட விட்டுவைக்காமல் தண்டிவிட வேண்டும் என்னும் ஆர்வத்தோடு வருகின்ற அதிகாரிகள், சிறிதும் அருளுணர்ச்சி இல்லாமல் உழவர்களைக் கசக்கிப் பிழியக்கூடிய சூழ்நிலையும் இதனால் உருவாயிற்று என்பதை நாம் மறைப்பதற்கு இல்லை. அல்லது அதிகாரிகளின் அறியாமையினாலோ, முழு நிர்ணய வரிவிதிப்பைக் குறைப்பதற்குரிய வழிமுறைகளைப் புறக்கணிப்பதனாலோ உழவர்கள் அல்லற்பட வேண்டிய அவல நிலை உண்டாயிற்று. சென்ற நூற்றாண்டின் முதற்பாதியில் உழவர்கள் கொடுமைக்காளாவதிலிருந்து உரிமையும் பாதுகாப்பும் பெற்றனர். ஆனால், மிகையாக விதிக்கப்பெற்ற வரிச்சுமையைத் தாளமுடியாமல் அவர்கள் அல்லற்பட்டனர் என்று நாம் பொதுவாகச் சொல்லலாம். சென்ற நூற்றாண்டின் பிற்பகுதியில் ஆட்சிமுறையை நன்கு புரிந்துகொள்ளுவதன்மூலம் இக் குறை நீக்கப்பட்டது. அதனால், உழவர்கள் மேன்மேலும் வளம்மிக்க வாழ்க்கையைப் பெற்றதோடு நிலையான பாதுகாப்பையும் பெற்றனர். தனி மனிதனுக்கு நேர்மையான முறையில் நீதி வழங்கப்பட்டது. ஆனால், சிற்றூர்களின் சமூகங்களுக்கு எத்தகைய இடமும் ஊராட்சி முறையில் இல்லாமல் போயிற்று.

பம்பாயிலும், அப் பகுதிக்குத் தேவைப்பட்ட சிற்சில மாற்றங்களோடு இரயத்துவாரி முறையே பின்பற்றப்பட்டது. குஜராத்திலும் தக்கணத்திலும் அழிந்துகொண்டிருந்த மராட்டிய அரசிடமிருந்து கம்பெனியார் பேரளவிற்கு நிலங்களைத் தங்களுடையதாக்கிக் கொண்டிருந்தனர். முதலில் அங்கு நடைமுறையில் இருந்துவந்த முறைகளையே தொடர்ந்து அவர்கள் செயற்படுத்திவந்தனர். பின்னர் படிப்படியாக அம் முறைகளை இரயத்துவாரி முறைக்கேற்ப மாற்றியும் திருத்தியும் அவர்கள் அமைக்கலாயினர். குஜராத் மாநிலத்தில் மாம்லத்தார்கள் (Mamlatdars) எனப்படும் வட்டார அதிகாரிகள், சிற்றூர் தலைவர்களான 'தேசாய்'களிடமும், 'பட்டேல்'களிடமும் நிலத்தீர்வையைப்பற்றி பேரம் பேசி வந்தனர். சிற்றூர் அதிகாரிகள் பிறருடைய தலையீடின்றித் தாங்கள் செலுத்துவதற்கு ஒப்புக்கொண்ட தொகையைத் தாங்களே உழவர்களிடத்துத் திரட்டும் உரிமையும் ஆற்றலும் உடையவர்களாக விளங்கினர். 1816ஆம் ஆண்டு முதல் இரயத்துவாரி முறை படிப்படியாகப் புகுத்தப்பட்டது. 'பட்டேல்' என்னும் அதிகாரி, நிலவரியைத் தண்டுவதில் பெற்றிருந்த பொறுப்பு பையப்பையப் பறிக்கப்பட்டது. அவருடைய இடத்தைச் சிற்றூரின் 'கணக்கர்' பெற்றார். அக் கணக்கர் பம்பாயின் அரசினரால் நேரடியாகப் பதவியில் அமர்த்தப்பட்டார். தக்கணத்தில் மராட்டிய ஆட்சிமுறையின் சிறப்புமிக்க நிலவரித் தீர்வை முறையைத் தொடர்ந்து கடைப்பிடிக்க எல்ஃபின்ஸ்டன் அரிதின் முயன்றார். அதே சமயத்தில் அவர் 'சௌத்' என்று சுமத்தப்பட்ட வரியை நீக்கினார். வட்டாரத் தலைவரின்கீழ் 'பட்டேல்' என்னும் அதிகாரியைத் தொடர்ந்து இருக்குமாறு அவர் செய்தார். ஆனால், வட்டார அதிகாரிகளைக் கண்காணிக்க பிரிட்டிஷாராகிய மாவட்ட அதிகாரிகளை அவர் அமர்த்தினார். சிற்றூர்களிலிருந்து வந்த பொருள் வழக்குகள் பஞ்சாயத்துக் குழுவினரிடத்து ஒப்படைக்கப்பட்டன. குற்றவியல் வழக்குகள் நேரடியாகத் தண்டல்நாயகத்திடம் அனுப்பப்பட்டன. நல்ல சமயத்தில் ஒவ்வொருவருடைய நிலமும் அளந்து மதிப்பீடு செய்யப்பட்டது. இருந்தபோதிலும் செலுத்தப்படவேண்டிய தீர்வை ஒரு மாவட்டத்தையடுத்து மற்றொரு மாவட்டமாக நிர்ணயிக்கப்பட்டது. அதன் பிறகு மண்வளத்திற்கும், பயிரிடப்படும் தானியங்களுக்குமேற்ப நிலக்கிழார்கள் செலுத்தவேண்டிய வரித் தொகை மிகச் சிக்கலான ஓர் அட்டவணைப்படி பங்கிட்டு அறிவிக்கப்பட்டது. சென்னையில் வரையறுக்கப் பட்டதைப்போன்றே முப்பதாண்டிற்கு ஒருமுறை நிலத்

தீர்வை நிர்ணயிக்கப்பட வேண்டும் என்று இங்கும் முடிவு செய்யப்பட்டது. அங்கு உழவனுக்குச் சிற்சில உரிமை வாய்ப்புகள் அளிக்கப்பட்டது. ஆனால், 'பட்டேலுக்குச்' சிந்திப்பதற்கே இடமளிக்கப்படவில்லை. இவ்விரு மாநிலங்களிலும் நிலத்தீர்வை முறையின் பொது விளைவு, உழவர்களின் நிலையை உறுதிப்படுத்துவதாகச் செயல்முறையில் அமைந்தது என்று கூறினால், அது மிகையாகாது. உழவர்களின் முன்னேற்றத்திற்கு இயலும் வழிகளும் ஆதாயம் அளிக்கக்கூடிய வழிகளும் வகுத்துக் கொடுக்கப்பட்டன. ஆனால், அத் திட்டத்தினால் சிற்றூர் அதிகாரிகளும் சமூக ஆட்சிக் குழுக்களும் ஊக்க மிழந்து சோர்வுற்றுப் போயின. குஜராத் மாநிலத்தில் 'பட்டேல்' என்னும் அதிகாரி அடியோடு புகழ்குன்றி மங்கிப் போய்விட்டார். ஆனால், தக்கணத்தில் அவர் வட்ட அதிகாரியினால் கண்காணிக்கப்பட்டு வந்தார். தேவையான வரிவிதிப்பைத் தம்முடைய ஊர்மக்களிடையே பகுத்துக் கொடுத்து, வரித் தண்டுவதற்குத் தன் விருப்பம்போல நடந்துகொள்ளும் உரிமையை அவர் இழந்துவிட்டார். மதராசில் நடைபெற்றதைப் போன்று, சிற்றூர் சமூகங்களின் உரிமை வாழ்க்கையைப் பலியிட்டதன்மூலம் தனி மனிதருக்கு நேர்மையான வகையில் நீதி வழங்கப்பட்டது. எல்ஃபின்ஸ்டனால் இன்னும் பஞ்சாயத்து ஆட்சிக் குழுவிடம் விட்டுவைக்கப்பட்ட செயல் முறைகள், வருவாய்த் துறையில் சிற்றூர்களின் அதிகாரிகள் இழந்துவிட்ட தன் விருப்பு உரிமையினை ஈடு செய்யக்கூடிய அளவிற்குப் போதியதாக இல்லை. சிந்துவில் நிலவரியை நிர்ணயிக்க வேண்டிய நெருக்கடி உண்டானபொழுது, அம் மாநிலத்தின் பழக்கவழக்கங்களுக்கேற்பச் சிற்சில மாற்றங்களோடு இரயத்துவாரி முறைத் திட்டம் செயற்படுத்தப் பட்டது.

மிகப்பெரிய வடமேற்கு-எல்லைப் பகுதியிலும், வங்காளத்திற்கும் பீகாருக்கும் அப்பாலும், அயோத்தியில் ஒழுங்கற்ற ஆட்சி முறைக்குப்பிறகும், தில்லிப்பகுதியில் குழப்ப நிலைக்குப் பிறகும் பிரிட்டிஷார் தங்களுடைய ஆட்சியை அவ் இடங்களில் எல்லாம் நிறுவுவதில் வெற்றி பெற்றனர். வாரணவாசி நிலையாக ஷோரினால் நிலைநிறுத்தப்பட்டது. எனவே, அம் மாநிலத்தில் இருந்த அயோத்தியின் கொடை மாவட்டங்களிலும், மராட்டியரிடமிருந்து கைப்பற்றப்பட்ட கங்கை, யமுனை ஆறுகளுக்கு இடைப்பட்ட மாவட்டங்களிலும், தில்லியரசிலும், பின்னர் பஞ்சாப் முழுவதிலும் நிலையான நிலவரித் திட்ட முறையே செயற்படுத்தப்பட்டது. இங்கே இருவகை

யான நிலவுடைமைகள் இருந்துவந்தன. பெருநிலக்கிழார்கள் அல்லது 'தாலுக்தாரர்களின்' பெரும் பண்ணைகளும் சிற்றூர் சமூகக் குழுக்களும் நிலவுடைமைகளையுடையனவாக இருந்தன. பண்டைக்கால அரச மரபுகளின் வழியில் வந்தவர்களே பெரும் பண்ணைக்காரர்களாக இருந்தனர். முதலில் பேரளவிற்குக் குழப்பம் நிலவியது. குறைந்தகால வரையறைக்கே நிலவரித் திட்டம் நிர்ணயிக்கப்பட்டமையும் பொதுவாக மிகையான தீர்வை முறையும் அக் கலவரத் திற்கும் குழப்பத்திற்கும் காரணங்களாகும். 1811ஆம் ஆண்டு நிலையான நிலவரி முறையைத் தொடர்ந்து பின் பற்றுவது இல்லை என்று செய்யப்பட்ட முடிவே முன் னேற்றத்தை நோக்கி எடுத்து வைக்கப்பட்ட முதற்படியாகும். அடுத்து, 1819ஆம் ஆண்டில் ஹோல்ட் மக்கன்சி வெளியிட்ட செயல்முறைக் குறிப்புகள் முன்னேற்றத்தை நோக்கி எடுத்து வைக்கப்பட்ட அடுத்த அடியாகும். அவருடைய செயல்முறைக் குறிப்புகளே 1822ஆம் ஆண்டு இயற்றப் பட்ட ஏழாவது ஒழுங்கு விதியின் அடிப்படையாக அமைந்தன. வில்லியம் பென்டிங் பிரபு புகழ்மிக்க தம்முடைய வட இந்தியப் பயணத்தின்பொழுது இந்தப் பகுதி முழுவதிலும் அறிவியல் முறைப்படி நிலத்தீர்வைத் திட்டம் செயற் படுத்தப்படும் திட்டத்தைத் தொடங்கி வைத்தார். 1833ஆம் ஆண்டிற்கும் 1853ஆம் ஆண்டிற்கும் இடைப்பட்ட காலத்தில் R.M. பர்டு (Bird) என்பவரும், ஜேம்ஸ் தாம்ஸன் என்பவரும், பொறுமையான உழைப்பிற்கும் விரிவான அலசியாராய் தலுக்கும் மாபெரும் சின்னமாக இருக்கின்ற பணியின் மூலம் அப் பகுதியில் அம் முறையைச் செயற்படுத்தினார்கள். நிலத் தீர்வைத் திட்டம் தற்காலிகமானதாக இருந்தது. முப்ப தாண்டுக்கால நீடிப்பு என்பது பொதுவாக ஒப்புக்கொள்ளப் பட்டது. நிலத் தீர்வையை நிர்ணயிப்பதற்கு முன்பு, எப்பொழுதும் நிலங்களை முறையாக அளந்து பார்ப்பதைப் போன்று இங்கும் முதல் முயற்சி நடைபெற்றது. ஆனால், சிற்றூர் சமூகங்களோடு இங்கு உடன்படிக்கை செய்து கொள்ளப்பட்டது. தில்லியிலும் இவ்வாறுதான் நிலத் தீர்வைத் திட்டம் செயற்படுத்தப்பட்டது. அல்லது தனியா ருடைய 'மகல்' (Mahals) எனப்படும் பண்ணைகளோடும் உடன்படிக்கை செய்துகொள்ளப்பட்டது. இவ்வாறு பண்ணைகளுடன் உடன்படிக்கை செய்துகொள்ளுவது பிற் காலத்தில் ஐக்கிய மாநிலங்களில் (United Provinces) செயற் படுத்தப்பட்டது. எனவே, அம் முறைக்கு 'மகல்வாரி' முறை

என்ற பெயர் உண்டாயிற்று. சிற்றூர்களின் தலைவர்கள் தங்கள் ஊர்கள் செலுத்தவேண்டியதாக அறிவிக்கப்பட்ட மொத்தத் தொகையினைத் தங்களுக்குள்ளே பகிர்ந்து கொண்டனர். தாங்கள் செலுத்தவேண்டிய தொகையைப் பற்றி மூதறிஞர்கள் அனைவரும் ஒப்புக்கொண்ட பிறகு, நுட்பமாக நிலவுடைமைப் பேராய்வு நடைபெற்றதனை அடிப்படையாகக்கொண்டு நிலங்களைப் பயிரிடும் உழவர்களுக்கு இடையே அத்தொகையினைப் பகிர்ந்து அளித்து, ஒவ்வொருவரும் செலுத்தவேண்டிய வரிப் பணம் எவ்வளவு என்பது முடிவு செய்யப்பட்டது. இதே வகையான விரிவான உடன்பாட்டு முறையினால் பஞ்சாப் மாநிலத்தில் நிலவரி நிர்ணயம் செய்யப்பட்டது. இந்த உடன்பாட்டில் அல்லது தொடர்ந்து வரிசையாக நடைபெற்றுவந்த உடன்பாடுகளுள் சிற்றூர் சமூகங்களின் நலன்களைக் காப்பதற்கும் பேரார்வம் காட்டப்பட்டது. இந்தியாவின் பிற பகுதிகளில் இருந்துவந்த சிற்றூர் சமூகங்களைக்காட்டிலும், இப் பகுதியில் இருந்து வந்தவை உரம்வாய்ந்தனவாக இருந்தன. ஆயினும், சிற்றூர் சமூகங்கள் உயிர்க் களையற்றுக் காணப்பட்டன. 'பட்டாவாரி' எனப்படும் சிற்றூர் ஆவணக்-காப்பாளர் ஊதியம் பெறும் அதிகாரியாக மாற்றப்பட்டமை பொதுவாகவும் சிறப்பாகத் தீர்வை விதிப்பதற்கு அறிவியல் முறைப்படி செய்யப்படும் நில உடைமைப் பேராய்வு முறையினைப் பெரிதும் நம்பியிருந்தமையும், நீதித்துறை வழக்குகளைப் புதிய நீதிமன்றங்களுக்குத் திருப்பிவிட்டமையும் சிற்றூர் சமூகங்கள், தங்கள் உயிராற்றலை இழக்கக் காரணமாயின. பிற பகுதிகளில் இருந்தவர்களைப்போன்றே வட நாட்டில் இருந்துவந்த சிற்றூர் மக்களும் தங்களுடைய நலவாழ்வைப் பெரிதும் பாதித்தவற்றிற்கெல்லாம் தங்கள் சிற்றூர்களிலுள்ள மூதறிஞர்களை எதிர்பார்க்காது ஊருக்கு வெளியே இருக்கின்ற அதிகாரிகளின் அருளினை வேண்டிநின்றனர். மற்ற இடங்களைக் காட்டிலும் இம் முறை மெல்லவே நடைபெற்று வந்தது. திடீரென்று அல்லது விரைவில் மறைந்துவிடாமல், அங்கு ஊராட்சிமுறை மெல்ல வாடி வதங்கி, உலர்ந்து உதிர்ந்து போயிற்று என்று கூறலாம். 1853ஆம் ஆண்டு நாகபுரித் தனியரசு கைப்பற்றப்பட்டதற்குப் பின்னர் மத்திய மாநிலங்களிலும் நிலத்தீர்வைத் திட்டம் செயற்படுத்தப்பட்டது.

நாம் இப்பொழுது பிரிட்டிஷாரின் நில வருவாய்த்துறைச் செயல்முறைகளினால் உண்டான விளைவுகளைத் தொகுத்

துரைக்கலாம். நிலையான நிலவரித் திட்டம் செயற்படுத்தப் பட்ட பகுதிகளில் பெரிய நிலவுடைமைப் பண்ணைகள் தோன்றின. தனிப்பட்ட வகையிலும், அவர்கள் காட்டிய அக்கறையிலும் பெருநிலக் கிழார்களுக்கும் உழுபவர்களுக்கும் இடையே இருந்துவந்த தொடர்பு மெலிந்துகொண்டே போயிற்று. குத்தகைக்காரர்கள் தம் நலத்திற்காகச் சுரண்டப்படுவதைத் தடுப்பதற்கு எடுத்துக்கொள்ளப்பட்ட நடவடிக்கைகள் முழு வெற்றியை அளிக்கவில்லை. பேரள விற்குக் குத்தகைக்காரர்கள் உண்டாக்கப்பட்டமையாலும், நிலமற்ற மக்களின் கூட்டம் அன்றடம் பெருகிக்கொண்டு வந்தமையாலும் உண்டான தீமைகள் மிகப்பலவாக இருந்தன. மற்றப் பகுதிகளில் மாற்றம் செய்யக் கோரும் பெரிய இயக்கங்கள் ஒன்றும் தோன்ருமையால் நிலவரித் திட்டம் நேர்மையானது என்று கருதப்பட்டது. நிலவரி விதிக்கும் முறையும், அவ் வரியைத் தண்டும் முறையும் நன்கு பழக்கத்திற்கு வந்துவிட்டன. மீண்டும் வரி நிர்ணயிக்கப் பட்டது. விரைவில் அது வழக்காற்று நெறியென்று புகழ் பெறலாயிற்று. அக்பருடைய ஆட்சிக் காலத்தில் தோடர் மாலினுடைய 'பந்தோபஸ்து' என்னும் முறை பெற்றிருந்த சிறப்பினை, நிலவரித் திட்டமுறை இக் காலத்தில் பெற லாயிற்று. எனவே, அது அக்கால நிலையான வாழ்க்கை முறையின் ஒரு பகுதியாகவே கருதப்பட்டது. புதிய திட்டம் முதலில் பலவகையான தீமைகளையுடையதைப்போன்று தோன்றியது. பெரிதும் நேர்மையானவர்கள் என்று பெயர் பெற்ற மெட்கா:ப், மன்ரோ போன்ற அதிகாரிகள்கூட மிகையாகத் தீர்வையை நிர்ணயித்துவிட்டனர் என்ற பொது வான ஒரு மனப்பான்மை மக்களிடையே நிலவிற்று. மிகையான நிலத் தீர்வை நிர்ணயம் செய்யப்பட்டதற்குப் பல்வேறு காரணங்களைக் கூறலாம். தவருன செய்திகள், முதலில் நிலத்தீர்வை நிர்ணயிக்கப்பட்ட பகுதியில் நடை முறையில் உண்டான சிக்கல்களை அறிந்துகொள்ளத் தவறியமை, மரபுவழியாகத் தீர்வை செலுத்துமாறு குறிப் பிடப்பட்டிருந்த தொகையளவு தற்காலிகமானவை என்பதை அறிந்து போற்ருமை, வருவாய்த் துறையின் மேலதிகாரி களுடைய பாராட்டுதலைப் பெறுவதற்காக வருவாய்க்குரிய வரித் தொகையை உயர்த்தியமை போன்ற பல காரணங் களினல் மக்கள் தாங்கள் மிகையாகத் தீர்வை செலுத்து மாறு அச்சுறுத்தப்படுவதாகக் கருதலாயினர். மிகையாகத் தீர்வை விதிக்கப்பட்டதோடு, மிகையாகத் தீர்வை தண்டப் படும் வழக்கமும் தோன்றியது. அல்லது செலுத்தவேண்டிய

முழுத் தொகையையும் ஒரே சமயத்தில் செலுத்திவிடுமாறு வற்புறுத்தப்பட்டது. நுட்பமான கற்பனையற்ற மனநிலையை உடையவர்களாக இருந்த ஆங்கிலேயத் தண்டல்நாயகங்களுக்கு, அறிவியலும் திருத்தப்பாடும் பெரியனவென்று போற்றப்பட்ட காலத்தின் செல்வாக்கினால் உந்தப்பட்ட அவ் அதிகாரிகளுக்குப் பண்டைக் காலத்தில் வழங்கிய நில வரித் தொகையெல்லாம் வெறும் விருப்பத்தின் அளவினதே, கட்டாயத்திற்கும் வற்புறுத்தலுக்கும் அடிபணிந்து ஒப்புக்கொள்ளப்பட்டதே அன்றி உண்மையான வரிவிதிப்பன்று என்பது புரியவில்லை. அதனால் அவர்கள் பெரும் துன்பப்பட்டனர். மேலும், இறையிலியாக வழங்கப்பட்டிருந்த மானியங்கள் நாடெங்கும் பேரளவில் காணப்பட்டன. அதனாலும் பல சிக்கல்களும் தப்பெண்ணங்களும் உண்டாயின. சமயம், கல்வி முதலிய தொண்டுகளுக்குப் பொதுவாகப் பண்பாடு ஆகியவற்றைப் பண்டைக்காலம் முதற்கொண்டு போற்றியாதரிக்கும் முகத்தான் வழங்கப்பட்ட அறக் கட்டளைகளே மானியங்களாகும். பதினெட்டாம் நூற்றாண்டில் அவை விரைவாகப் பெருகின. அவை பண்டைக் காலத்திலேயே வழங்கப்பட்டவை என்பதற்குரிய சான்றுகள் காட்டி உரிமை கொண்டாடப்படவில்லை. அல்லது தற்காலத்தில் அவற்றை அனுபவிப்பவர்களாலும் அவை தங்களுக்குச் சேர்ந்தவை என்பதைத் தக்க சான்றுகள் காட்டி நிறுவ முடியவில்லை. ஆயினும், அம் மானியங்களினால் ஆதாரமான பயன் மதிப்பு இருந்துவந்ததென்றே சொல்லலாம். எனவே, அவை அனைத்தும் வீணானவை அல்லது தீமையானவை என்று கருதி ஒருங்கே ஒழித்துவிட வேண்டும் என்ற எண்ணம் தோன்றிய பொழுது, அவ் எண்ணம் கடுந்துன்பத்திற்கும், சீற்றத்திற்கும், எதிர்ப்புணர்ச்சிக்கும் காரணமாக இருந்தது. ஆனால், அரசினுடைய வருவாய்த்துறை ஆட்சிச் செயல்முறைத் திட்டத்தில் நீதி, மீட்பிக்கும் இழையைப் போன்று ஓடிக்கொண்டிருந்தது. இந்தத் தூற்றுதல்கள் எல்லாம் தீர்ப்பளிப்பதிலும் பெற்றிருந்த அறிவிலும் உண்டான குறைகளாகுமேயொழிய, நேர்மையற்ற போக்கினால் உண்டானவை அல்ல. அறிவும் அனுபவமும் மேலும்மேலும் பெற்றதன் விளைவாக அக் குறைபாடுகள் எல்லாம் நிலையாக மறைந்துகொண்டே போயின. வடக்கில் பெண்டிங்கினுடைய ஆட்சிக்காலம் முதற்கொண்டும், மேற்கில் எல்ஃபின்ஸ்டன் ஆளுநராகப் பதவியேற்ற காலம் முதற்கொண்டும், தெற்கில் ஆளுநர் மன்ரோவின் ஆட்சி தொடங்கியது முதற்கொண்டும் அக் குறைபாடுகளும் தவறுகளும் பையப்பையக் குறைந்துவந்ததோடு மெல்ல

மெல்ல மறைந்தும் போயின.[1] நிலவரி என்பது வேளாண்மைத் தொழிலுக்குப் பெரும் சுமையாக இருந்துவந்த நிலை, நாளடைவில் பையப்பையக் குறைந்துபோனமை அதனுடைய பொதுவான விளைவாகும். நிகர விளைச்சலில் மூன்றிலொரு பங்கு வரி என்ற நிலையிலிருந்து, ½ பங்கு அல்லது அதற்கும் குறைந்த அளவினது நிலவரி என்று கருதக்கூடிய அளவிற்குக் குறைந்துபோயிற்று. 1903ஆம் ஆண்டிற்கும் 1924ஆம் ஆண்டிற்கும் இடையே 117 சதவீதம் விலைவாசிகள் உயர்ந்து விட்டன என்பதை 1925ஆம் ஆண்டு கணித்துப்பார்த்து அறிவித்தனர். அக் காலத்திலும் நிலவரி 20 விழுக்காட்டிற்கு மேல் உயரவில்லை என்று மதிப்பிட்டுள்ளனர். இவ் உண்மையை 1931ஆம் ஆண்டு காங்கிரஸ் அமைத்த ஆய்வுக் குழுவொன்றும் ஒப்புக்கொண்டுள்ளமை இங்குக் குறிப்பிடத் தக்க செய்தியாகும்.[2] பேரளவிற்கு மக்கள்தொகை பெருகி வந்ததற்கேற்ப, பயிர்த்தொழிலும் நிலையாகப் பெருகிக் கொண்டு வந்திருப்பதை நாம் காணுகின்றோம்.

ஆனால், ஆழ வேரூன்றிவிட்ட வேறு சில குறைகள் இந்தத் திட்டத்தில் இடம்பெற்றிருந்தன. நிலுவையாகப் போகும் வரிப் பணத்தைப் பெறுவதற்காக அந் நிலத்திற்குரியவருடைய நிலத்தை விற்பது என்னும் கொள்கையை நிலையாக ஆதரித்துவந்தமை ஒரு குறையாகும். பழைய முறையில் உழவர்களைக் கசக்கிப் பிழிந்தும் அல்லது கசையடி கொடுத்தும் அச்சுறுத்தியும் கொடுமைப்படுத்தியும் வந்தனர். அதற்கு மாற்றாக இப் புதிய முறை பின்பற்றப்பட்டது. இது மனிதப் பண்பினை மதித்துப் போற்றும் இரக்கமுள்ள முறையாகக் கருதப்பட்டது. ஆனால், உண்மையில் இம் முறை கொடுமை மிக்க கருவியாக இருந்தது. இம் முறையினால் பல நிலக்கிழார்கள் தங்கள் நிலத்தைப் பறிகொடுத்ததன்மூலம் தங்கள் உடலைக் காப்பாற்றிக்கொண்டனர். இத் திட்டத்தின் விளைவாக வங்காளத்தில் ஜமீன்தார்கள் இடம்பெயர்க்கப் பட்டமையைக் கண்டோம். எல்லா இடங்களிலும் இம் முறை பின்பற்றப்பட்டது. நெருக்கடி உண்டாகிற சமயங்கள் தோறும் நிலமற்ற நிலக்கிழார்களையும், கடன்காரர்களாகி விட்ட நிலக்கிழார்களையும் இம் முறை பேரளவில் பெருகுமாறு

[1] டல்ஹௌசியின் ஆட்சிக்காலத்தில் அமைக்கப்பெற்ற 'இனும் கமிஷனின்' செயல் இவ் விதிக்கு விதிவிலக்கானவை என்று கூறலாம்.

[2] 1925ஆம் ஆண்டில் 'வரி ஆய்வுக் குழு' நிறுவப்பெற்றது.

செய்தது. தங்கள் நிலத்தை மொத்தமாக இழந்துவிடுவதைக் காட்டிலும் காசுக்கடைக்காரர்களுக்குப் பலர் நிலச்சார்புடைய அடிமை ஊழியர்களாக (Serfs) மாறுவதே மேலென்று கருதினர். அதனால் பெருந் தொகையைக் கடனாகப் பெற்று வரிகளைக் கட்டிவிட்டு, அவர்கள் அடிமை ஊழியம் செய்து வரலாயினர். இரயத்துவாரி முறையில் காணப்பட்ட மற்றொரு குறைபாடும் இங்குக் குறிப்பிடத்தக்கது. சிறிதளவு நிலங்களையே உடைமையாகப் பெற்றிருந்த நிலக்கிழார்களின் நிலங்கள் எல்லாம் பல சிறு துண்டுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தன. இம் முறை, மக்கள்தொகை பெருகிக்கொண்டே வந்தமையாலும் குடும்பத்தைப் பாதுகாக்க ஆதாரம் வேறொன்றும் இல்லாமற்போயினமையாலும், சிதறுண்டு போனதல்லாமல் ஒரு குடும்பத்தில் பிறந்துள்ள கால்வழியினருக்கு அக் குடும்பத்தைச் சேர்ந்த நிலம் சரிசமமாகப் பங்கிட்டுக் கொடுப்பது வழக்கமாக இருந்துவந்தமையாலும் நிலங்களெல்லாம் நாளடைவில் பல துண்டுகளாகச் சிதறுண்டு போயின. இச் சீர்கேட்டை எவ்வாறு முற்றிலும் தடுத்து நிறுத்துவது என்பது ஒரு பெரும் பிரச்சினையாயிற்று. ஆனால், எங்கு ஒரு குடும்பத்திற்குத் தேவையான உணவுப்பொருளை உற்பத்தி செய்ய முடியாத அளவிற்கு நிலங்கள் மிகமிகச் சிறியதாகப் போயிற்றோ, அங்கெல்லாம் நிலத்தை முழுவதும் இழந்துவிட்டால் உண்டாகக்கூடியதைப்போன்ற தீய விளைவுகளே உண்டாயின.

'நீதியும் நேர்மையும்' என்னும் உணர்வு மக்கள் உள்ளத்தில் இடம் பெற்றமை, இதனால் உண்டான முதற்பயனாகும். இப் புதிய முறை படிப்படியாக நாட்டுப்புறப் பகுதிகளிலும் நேர்மையான செயல்முறைகளைப் புகுத்தியமை சிறப்பு மிக்க செய்தியாகும். இத்துடன் புதிய பாதுகாப்பு முறையும், செலுத்தவேண்டிய தொகை வரையறுக்கப்பட்டமையும் சேர்ந்து சிற்றூர் மக்களுக்கு மனத் தெம்பினை அளித்தன. மேலும், படிப்படியாக உழவர்கள் செலுத்தவேண்டிய தீர்வைத் தொகை மிதமானதாகவும் பொருத்தமானதாகவும் வரையறுக்கப்பட்டமையும், அறிவியல் முறைப்படி பலதிறப்பட்ட மண்வளமும், தட்பவெப்ப நிலையும், பயிர் வகைகளும் பரிசோதனை செய்யப்பட்டு அதற்கேற்ப வரி விதிக்கப்பட்டமை வேளாண்மைத் தொழிலில் ஈடுபட்டிருந்த பல்லாயிரக்கணக்கான மக்களுக்குப் பொதுவாக மன நிறைவையும், தொழிலில் புதிய ஊக்கத்தையும் அளித்தது. இதற்கு அடுத்தாற்போல் நிலத்தைப் பயிரிடுதல் பேரளவில் பெருகிக்கொண்டேவந்தது.

நெடுந்தொலைவிற்கு நிலக்கிழார்கள் பயணம் செய்து குத்தகைக்காரர்களை நிலத்தை உழுது பயிரிடுமாறு ஆர்வமொழிகள் கூறிவந்தமைக்கு மாறாக, தரிசு நிலங்களைப் பயிரிடுவதற்கு அனுமதிக்குமாறு குத்தகைக்காரர்கள் நிலக்கிழார்களை வேண்டும் பழக்கமும் அல்லது வாழ்க்கைக்குத் தேவையான வசதிகளைப் பெறக் கருதி நெடுந்தொலைவிற்கப்பால் இருக்கக்கூடிய புதிய நிலங்களை உழவர்கள் தேடிச் சென்று பயிரிட்டு வாழும் வழக்கமும் பெருகலாயின. 1880ஆம் ஆண்டிற்குள் நிலத்தை உழுவோர் போதிய அளவிற்கு இல்லை என்ற நிலைமாறி, உழுவதற்குத் தேவையான அளவிற்கு நிலம் நாட்டிலே இல்லை என்ற இக்கட்டான நிலை உண்டாயிற்று. பயிர்த்தொழில் பெருகிக்கொண்டு சென்றதற்கேற்ப அத்துடன் மக்கள்தொகைப் பெருக்கமும் பெருகிக்கொண்டே போயிற்று. அக்பருடைய ஆட்சிக்காலத்திய இந்தியாவில் பத்துக் கோடி மக்களே இருந்தனர் என்பர். 1800ஆம் ஆண்டு பதின்மூன்று கோடியாக இருந்த மக்கள், முதன் முதலாக 1872ஆம் ஆண்டு மக்கள்தொகைக் கணிப்பு நடைபெற்றபொழுது இருபது கோடியே அறுபது இலட்சமாகப் பெருகிவிட்டனர்.[1] மிகுதியான மக்கள், மிகுதியான விளைநிலங்கள் என்று சொல்லுமாறு ஒன்று மற்றொன்றுக்குக் காரணமாகவும் விளைவாகவும் அமைந்தது. ஆனால், நிலத்தீர்வை முறை நேர்மையானதாகவும், நெகிழ்ச்சியுடையதாகவும் நிர்ணயிக்கப்படவில்லை என்றால், இவை இரண்டுமே பெருகியிருக்க இயலாது.

### 3. வாணிகம்

இந்தியா வேளாண்மைத் தொழிலையே பெரிதும் நம்பி வாழும் நாடாக இருந்தபோதிலும், அதைத் தவிர வேறு தொழில்கள் இந்தியாவில் செய்யப்படுவதில்லை என்பது முற்றிலும் பொருந்தாது. தொழிற் கலைஞரும் (artisan), கைத்தொழில் வினைஞரும் (craftsmen), சிறு வாணிகரும் பெரு வாணிகரும் பலர் வாழ்ந்து வந்தனர். இங்கு அவர்களைப் பற்றி அரசாங்கம் கொண்ட கொள்கைகளை ஆராய்ந்தறிய

[1] இது குறைந்த மதிப்பீடு என்று பொதுவாகக் கருதப்படுகிறது. அக்பர் கால இந்தியாவின் மக்கள்தொகையை மதிப்பீடு செய்தவர் W. H. மோரிலண்டு என்பவராவர். நான் 1800ஆண்டு மக்கள்தொகையைக் மதிப்பிட்டுரைத்திருக்கிறேன்.

வேண்டியது நமது கடமையாகும். சிற்றூர் தொழில் நிலையங்கள் சிற்றூருக்குத் தேவையான பொருள்களைச் செய்து கொடுத்தன; பெரும் செல்வர்களாக இருந்த சிலருடைய சொகுசுமிக்க இன்ப வாழ்க்கைக்குத் தேவையான பொருள்களையும் அவை ஓரளவிற்கு உற்பத்தி செய்து கொடுத்தன. இவற்றை ஒருபுறம் ஒதுக்கிவிடுவோமானால், இந்தியாவின் தொன்மைச் சிறப்புடைய தொழில்துறைச் செயல்கள் அனைத்தும் 'பருத்தி' என்னும் சொல்லில் அடங்கிவிடும். பதினெட்டாம் நூற்றாண்டின் பெரும் பகுதிவரையில் பருத்தித் துணிமணிகளின் வாணிகம், முகலாயப் பேரரசர்கள் காலத்தில் நடைபெற்றதைப்போன்று செழிப்பாக நடைபெற்று வந்த தென்றே நாம் கூறலாம். பெருவாரியான அளவிற்குப் பருத்தி ஏற்றுமதி, கிழக்கிந்தியக் கம்பெனியின்மூலமாகவே நடைபெற்று வந்தது. வாணிகப் பொறாமை காரணமாக இங்கிலாந்தில் இருந்த தாயகச் சந்தைகள் இந்தியாவின் பருத்தி இறக்குமதியை எதிர்த்தபொழுது,[1] அக் கம்பெனி ஐரோப்பிய நாடுகளுக்கு எளிதில், பருத்தியைத் திரும்ப ஏற்றுமதி செய்து வாணிகச் சந்தைகளைப் பிடித்தது. ஆனால், அந் நூற்றாண்டின் இறுதியில் இக் காட்சியும் மாறலாயிற்று. 1740ஆம் ஆண்டு இங்கிலாந்து, தான் கையினால் உற்பத்தி செய்த பருத்தித் துணிமணிகளை ஐரோப்பாவிற்கு ஏற்றுமதி செய்யத் தொடங்கியது. அதேசமயத்தில், நெடுங்காலம் தொடர்ந்து நடைபெற்று வந்த ஃபிரஞ்சுப் போர்களினால், இந்தியப் பருத்திகளைத் திரும்ப ஐரோப்பாவிற்கு ஏற்றுமதி செய்யும் வாணிகம் தடைப்பட்டுவிட்டது. 1800ஆம் ஆண்டளவில் இங்கிலாந்தின் இயந்திரங்களின்மூலம் உற்பத்தி செய்யப்பட்ட பருத்தித் துணிகளை இந்தியாவிற்கு ஏற்றுமதி செய்யத் தொடங்கியது. இவ்வாறு இந்தியாவிற்குக் கிடைத்திருந்த ஐரோப்பிய வாணிகச் சந்தைகளெல்லாம் மூடப்பட்டதோடு லங்காஷையரில் இயந்திரங்களில் உற்பத்தி செய்யப்பட்ட பருத்தித் துணிகள் இந்தியச் சந்தைகளில் இடம்பிடிக்கப் படையெடுத்து வந்தன. இந்தியக் கைத் தொழில் வினைஞர்களுடைய தொழில்முறையைக் காப்பதற்கு நடவடிக்கை எடுத்துக்கொள்ளவொட்டாமல் 'தடையிலா வாணிகம்' (free trade) என்னும் கொள்கை அதற்குத் தடையாக இருந்துவந்தது. இவ்வாறு அங்கே பழைய இந்தியக் கைத்தொழில் நெசவு முறை நெடுங்காலத்திற்குத் தலை

[1] பதினெட்டாம் நூற்றாண்டின் தொடக்க காலத்தில் நடைபெற்றது.

யெடுக்க முடியாமல் வீழ்ச்சியுறத் தொடங்கியது. நெசவாளிகள் பெருந்துன்பத்திற்கு ஆளானார்கள். எனவே, அவர்கள் நிலத்தை உழுது பயிரிடும் தொழிலைச் செய்வதற்கு நிலங்களை நாடிச் சென்றனர். சிப்பாய் கலகம் நடைபெற்ற காலத்திற்குள்ளாக இந்தியாவின் பழமைச் சிறப்பு வாய்ந்த புகழ்மிக்க பருத்தித் தொழில் பேரழிவுற்று, வீடுகளில் நூல் நூற்றல் அல்லது 'கதர்' போன்ற ஆடைகளை நெய்தல் போன்ற தொழிலினைச் செய்யும் அளவிற்குச் சீரழிந்தும் சிறப்புக் குன்றியும் போய்விட்டது. அக் காலத்தில் நேர்த்தியான, மென்மை வாய்ந்த 'துகிலினை' நெய்வது மிகமிக அருகிய வழக்காகவே போய்விட்டது. லங்காஷையரின் இயந்திரங்களில் உற்பத்தி செய்யப்பட்ட துணிமணிகளும், தடையிலா வாணிகக் கோட்பாடும் இந்தியாவின் பருத்தித் தொழிற்சாலைகளை அடியோடு அழித்துவிட்டன. அந்தக் காலம் முதற்கொண்டு இந்தியாவின் ஏற்றுமதிப் பொருள்களின் பண்புகளில் மாற்றம் உண்டாயின. முழு நிறைவு பெற்ற பருத்தித் துணிகளையும், பட்டுத் துணிமணிகளையும் தரம் உயர்ந்த அவுரி நீலத்தையும் ஏற்றுமதி செய்வதற்குப் பதிலாக மூலப் பொருள்களைப் (Raw materials) பேரளவில் ஏற்றுமதி செய்யவேண்டிய நிலையுண்டாயிற்று. ஏற்றுமதி செய்யும் முறைகளில் பலவகை மாற்றங்கள் உண்டாயின. நீராவிக் கப்பல்களும் ரெயில்களும் புதிய போக்குவரத்து வசதிக்குரிய ஊர்திகளாகப் பயன்படுத்தப்பட்டன. மேலும், 1869ஆம் ஆண்டு சூயஸ் கால்வாய் திறக்கப்பட்டதன் விளைவாக இங்கிலாந்திற்குச் செல்ல நல்லதொரு குறுக்கு வழி கிடைத்தது. இத்தகைய புதிய வசதிகள் இந்தியாவின் ஏற்றுமதியில் புதிதாக உண்டான வளர்ச்சிக்குப் பேருதவி புரிவனவாக அமைந்தன.

கைத்தொழில் வினைஞர்கள் கொடியதொரு காலத்திற்குப் பலியாயினரென்றாலும், அக் காலம் எல்லாவகையான மற்றத் தொழில் வினைஞர்களுக்கும் வாணிகர்களுக்கும் தத்தம் தொழிலைப் பெருக்கிக்கொள்ளுவதற்கு வாய்ப்பளித்த ஒரு நற்காலம் என்றே கூறலாம். புதிய பாதுகாப்பும், ஐரோப்பாவோடு தொடர்பு கொள்வதற்குக் கிடைத்த மிகுதியான வாய்ப்பு வசதிகளும், உள்நாட்டு வெளிநாட்டு வாணிகத்திற்குப் பேராதரவும் பேரூக்கமும் அளித்தன. உள்நாட்டைப் பொறுத்தவரையில் புதிய பொருளாதாரக் கோட்பாடுகள் குறைந்த அளவிலேனும் நன்மை பயப்பனவாக அமைந்தன எனலாம். 1835ஆம் ஆண்டு உள்நாட்டில் சரக்குகளின்

புடைபெயர்ச்சி வரிகள் (Transit duties) நீக்கப்பட்டன. அதனால், எல்லா வணிகர்களுக்கும் பெரு நன்மை உண்டா யிற்று. புதிய உற்பத்தியாளர்கள் தங்களுடைய வாணிகப் பொருள்களுக்கு நிறைய சந்தைகள் வேண்டும் என்று வேண்டிக்கொண்டமையாலும், நெடுங்காலமாக வாணிகம் செய்வோர் தங்களுக்கு உரிமையளிக்குமாறு வேண்டிக் கொண்டமையாலும், அவர்கள் கருத்திற்கிணங்க இப் புடை பெயர்ச்சி வரி நீக்கப்பட்டது. 1813ஆம் ஆண்டு இயற்றப் பட்ட பட்டயச் சட்டம் வாணிக வளர்ச்சியில், ஒரு திருப்பு மையமாக அமைந்தது எனலாம். அச் சட்டம் இதுவரை இந்தியாவில் கிழக்கிந்தியக் கம்பெனிக்கு இருந்துவந்த முழு உரிமையை அடியோடு ஒழித்தது. புதிய தனிப்பட்ட வாணிகர்கள் இப்பொழுது இந்தியா-பிரிட்டிஷ் வாணிக அமைப்பில் கம்பெனியின் இடத்தைப் பெற்றனர். ஆனால், எதிர்பார்த்ததைப்போன்று வாணிக வளர்ச்சி முதலில் விரைந்து முன்னேற்றம் அடையவில்லை. புதிய வாணிகர்கள் தங்களிடம் போதிய அளவிற்கு மூலதனம் இல்லாமல் அல்லற் பட்டனர். ஃபிரெஞ்சுப் போர்கள் முடிவடைந்த பிறகும், பேரளவில் இந்தியாவில் முதலீடு செய்யமுடியாத நிலையில் புதிய வாணிகர்கள் இருந்தனர். இந்தியாவைக்காட்டிலும் கவர்ச்சிமிக்க வாணிகச் சந்தைகள் ஐரோப்பாவிலும் அமெரிக் காவிலும் கிடைத்திருந்தமையால் கீழைநாடுகளில் முதலீடு செய்ய அவர்கள் தயங்கினர். எனவே, 1813ஆம் ஆண்டிற் கும் 1858ஆம் ஆண்டிற்கும் இடைப்பட்ட காலம் தனிப்பட்ட வாணிகர்களுக்கும், இந்திய அரசிற்கும் தங்களைத் தாங்களே தகுதியுடையவர்களாக ஆயத்தம் செய்துகொள்ளுவதற் குரிய 'ஆயத்த காலமாக' அமைந்தது எனலாம்.

தனிப்பட்ட வாணிகர்கள் கம்பெனியின் கட்டுப்பாட்டி லிருந்து தாங்கள் விடுதலை பெற்றிருப்பதைக் கண்டனர். ஆனால், இந்தியாவின் வாணிகத் தீமைகளுக்கெல்லாம் கம் பெனியே காரணமாக இருக்கவில்லை என்பதை அவர்கள் விரைவில் உணர்ந்தனர். அவர்கள், வாணிக வளர்ச்சி தேவையான அளவிற்கு மூலதனம் இல்லாமல் துன்பப் பட்டனர்; மேலும், நாட்டின் பரந்துபட்ட நிலைக்கேற்ப, மிகப் பேரளவினதாகிய வாணிகச் செயல்முறைகளில் ஈடுபடு வதற்குத் தேவையான வசதிகளும் வாய்ப்புகளும் இல்லாமல் அவர்கள் அல்லற்பட்டனர். அவர்களுடைய நடப்பு முதல் (Working Capital) பெரும்பாலும் கம்பெனியின் அதிகாரிகளுடைய சேமிப்புகளிலிருந்து திரட்டப்பட்டதாகும்.

அவர்களுடைய செயல் முறைகளைக் கவனிப்பதற்கு வாணிகர்கள் நிருவாகப் பதிலாளி முறையினைத் (Managing Agency System) தோற்றுவித்தனர். அதன்மூலம் ஒரு வாணிக நிறுவனம் பல்வேறு வகையான வாணிகச் செயல்களில் ஈடுபட முடிந்தது. இதனால் உண்டான தற்செயல் நிகழ்ச்சிகள் பல. யாதாகிலும் ஒரு வாணிக நிறுவன முறிவோ, முதலீட்டுச் சரிவோ சென்ற நூற்றாண்டின் முப்பதுகளில் நடைபெற்ற பொழுது, ஐரோப்பியச் சமூகம் முழுவதுமே அதனால் பாதிக்கப்பட்டது. இந்த வரையறுத்த சிறு முதலினைக் கொண்டு தனி வாணிகர்கள் வாணிகம் செய்ய முடிந்தது. ஆனால், அவர்களால் புதிய வாணிக வழிகளில் புகுவதற்கு முடியவில்லை. அல்லது பேரளவு வளர்ச்சிக்கு இடையூறாக இருக்கின்ற முட்டுக்கட்டைகளைக் கடந்து செல்லுவதற்குரிய வழிவகைகளைக் காண முடியாமல் அவர்கள் திகைப்புற்றனர். எனவே, வாணிகச் செயல்களுக்குத் தடங்கலாக இருக்கின்றவற்றை நீக்குவதற்கு அரசினர் உதவியளிக்க வேண்டும் என்ற கூக்குரல் எழுந்தது. எங்களுக்குத் தேவையான சூழ்நிலையை உண்டாக்கிக் கொடுங்கள். நாங்கள் ஆதாயத்தைப் பெருக்கித் தருகிறோம் என்பது அவர்களுடைய வாதமாக இருந்தது. இதுவரை கம்பெனி தனியுரிமையோடு செயலாற்றிய நிலையிலிருந்து, தொழில் முறை உதவியளிக்கும் நிறுவனமாகத் தன்னைத்தானே மாற்றிக்கொள்ள வேண்டிய நெருக்கடி இப்பொழுது அதற்கு உண்டாயிற்று.

1813ஆம் ஆண்டு இந்தியாவினை ஆட்சி புரியும் அமைப்பாக இருந்த கம்பெனியிடத்து, பொருளாதார ஆட்சிமுறைக் கொள்கை ஒன்றும் இருந்ததாகத் தெரியவில்லை என்று கூறினால், அது மிகையாகாது. இதுவரை அதனிடம் ஒரேவொரு திட்டம்தான் இருந்தது. எத்தகைய ஆட்சிமுறைக் கொள்கையையும் பின்பற்றாமல் இருப்பது என்பதுதான் அதனிடத்து இருந்துவந்த ஒரே ஒரு திட்டம் எனலாம். ஏனெனில், அது அரசியல் கட்டுப்பாடற்ற வாணிகக் (Laissez-faire) கோட்பாட்டினால் பெரிதும் கவரப்பட்டு வந்தது. ஆனால், இந்தியாவிலும் தாயகத்திலும் தோன்றிய நெருக்கடி, பொருளாதார உரிமையென்னும் பெயரால், பொருளாதாரச் செயல்முறைகளில் இறங்குமாறு விரட்டியது. அது மேற்கொண்ட திட்டங்களை நாம் பொதுவாக, 'செயல்முறைகளைத் தூண்டுவன' என்று கூறலாம். தனி வாணிகர்கள் தங்கள் செயல்முறைகளை வளர்ச்சியுறுமாறு செய்வதற்கேற்ற வகையில் அத்திட்டங்கள் வகுக்கப்பட்டன. அக்காலத்தைப் பரி

சோதனைக் காலம் என்றும், நேரடிச் 'செயற் காலம்' என்றும் இரண்டாகப் பகுத்துரைக்கலாம். முதலில் குறிப்பிட்ட பரிசோதனைக் காலம் பதினெட்டாம் நூற்றாண்டின் இடை முப்பதுகள் வரையிலும், இரண்டாவதாகக் குறிப்பிட்ட காலம் படை வீரர்களின் கலகம்வரையிலும், அதன் பின்னரும் நிலவியது எனலாம். ஆயினும், இக் காலங்களுக்கு இடையே கணிசமான அளவிற்கு அவை கலந்திருப்பதையும் காணுகின்றோம். முகலாயரின் நீர்ப்பாசனக் கால்வாய்களைத் திரும்பத் திறப்பதன்மூலம் ஹேஸ்டிங்ஸ் பிரபு முதல் தாற்காலிகச் செயல் முறைகளில் இறங்கினார். 1825ஆம் ஆண்டு இரும்புத் தொழிற்சாலை அமைப்பதற்குக் கம்பெனி உதவியது.[3] வில்லியம் பென்டிங் பிரபு எண்ணற்ற பரிசோதனை முறைகளில் ஈடுபட்டார். நல்ல போக்குவரத்து வசதிகள் நாட்டின் வளத்திற்கு இன்றியமையாத தேவை என்பதில் அசைக்கமுடியாத நம்பிக்கை வைத்திருந்த அவர், 'நல்லதொரு சாலையைப்பற்றிய எண்ணமே இல்லாதவராக' மெட்காஃப் இருந்ததைக் குறித்து வருத்தப்பட்டார். பம்பாயிலிருந்து பூனாவரையில் 1830ஆம் ஆண்டு நல்லதொரு சாலை போடப்பட்டமை, இத் துறையில் செய்யப்பட்ட முதல் முயற்சியாகும். ஆறுகளில் நீராவிப் படகுகளைச் செலுத்துவதற்குப் பென்டிங் வசதிகள் செய்து கொடுத்தார். அதன் மூலம் ஆற்றுப் போக்குவரத்திற்கு அசாம் வரை ஆறுகளை அவர் திறந்துவிட்டார். மேலும், நீர்ப்பாசனத் திட்டங்களுக்கு அவர் பேராதரவு அளித்தார்; வங்காளத்தில் வடிகால் வசதித் திட்டத்தைச் செயற்படுத்த அவர் முனைந்தார். 1834-ஆம் ஆண்டு சீனாவிலிருந்து தேயிலை விதைகளைக் கொண்டுவர ஏற்பாடு செய்தார். அதன்பிறகு அரசாங்கத் தேயிலைத் தோட்டங்களை அவர் அமைக்கத் தொடங்கியதோடு, காப்பிப் பயிரிடுவதையும் அவர் போற்றி யாதரித்தார்; அதற்குத் தேவையான வகையில் பலரை அவர் ஊக்குவித்தார்.

ஆனால், பெரிய முன்னேற்றங்களுக்குத் தடையாக இயற்கை இடையூறுகள் சில இருந்துவந்தன. இந்தியாவில் இத் தடைகளில் ஒரு பகுதி போதிய நிதி வசதி இல்லாமையாக இருந்தது. ஆனால், பெரிதும் போக்குவரத்து வசதியின்மையே பெருந்தடையாக இருந்தது. மூன்று மாநில நிதி நிலையங்களை நிறுவியதன் மூலம் உள்நாட்டு நிதியனைத்தும் ஒருங்கு திரட்டப்பட்டு வலிமையுடையதாக்கப்பட்டது. ஆனால், நல்ல ஆதாயத்தைத் திருப்பித் தருகின்றவரையில், மேலும், மூலதனம் திரட்டமுடியாமல்போயிற்று. மேலும், நல்லதொரு துறையில்

முதலீடு செய்வதற்குரிய வழி தெரியாத நிலையில் மேலும் முதலீடு செய்வதற்கு வாணிகர்கள், தொழில் நிபுணர்கள் முன்வரவில்லை என்றே கூறலாம். நல்ல போக்குவரத்து வசதிகள் செய்து கொடுக்கப்படுமானால், வாணிகத்திற்குத் தேவையான முதலீட்டை அது மீண்டும் தேடித் தரும் என்று அவர்கள் நம்பினர். எனவே, வழிமுறைகளை வகுத்துத்தந்தால், தொழிற்சாலையில் முதலீடு செய்ய விரும்புகின்றவர்களுக்கு, நல்லதொரு நிலைக்களத்தை அமைத்துத் தரமுடியும் என்றும் அவர்கள் கருதினர். எனவே, புதிய இந்தியாவின் பொருளாதார வளர்ச்சிக்குத் தடையாக இருக்கும் போக்குவரத்துச் சிக்கலைத் தீர்ப்பதே சிறந்த வழியென்று அவர்களுக்குத் தோன்றியது. அச் சிக்கல் எக்காலம் வரையில் தீர்க்கப் படாமல் இருந்ததோ, அக்காலம் வரையில் முன்னேற்றத்திற்கான திட்டங்களை வெற்றிபெறவொட்டாமல் நாட்டின் பரந்து பட்ட நிலையே செய்துவிட்டது. பெருந் தொழிற்சாலைகளுக்குத் தேவையான பொருள்களை மாட்டு வண்டிகளில் கொண்டுவந்து கொடுத்துக் கட்டாது. அல்லது பேரளவில் உற்பத்தி செய்யப்பட்ட பொருள்களைக் கட்டை வண்டிகளில் ஏற்றிச்சென்று நாடு முழுவதிலும் பகிர்ந்து வழங்குவதென்பது இயலாத செயலாகும். அல்லது தற்காலத் தொழிற்சாலையை ஒட்டகத்தைப்போன்று ஆடியசைந்து செல்லுமாறு செய்வதென்பதும் பொருளற்ற செயலாகும். எனவே, அரசாங்கம் முன்னேற்றத்திற்குதவி செய்யக் கருதி, முதலாவதாக மேற்கொண்ட திட்டம் போக்குவரத்து வசதிகளைப் பெருக்குவதாகும். ஆறுகளில் நீராவிப் படகுகளைச் செலுத்தும் முறை பழக்கத்திற்குக் கொண்டுவரப்பட்டது. அடுத்து நல்ல சாலைகளை அமைக்கும் திட்டம் செயற்படுத்தப்பட்டது. 1839ஆம் ஆண்டு கல்கத்தாவிலிருந்து தில்லிக்குப் பெரு நெடுஞ்சாலை அமைக்கும் திட்டம் தொடங்கப்பெற்றது. இதைத் தொடர்ந்து பிரிட்டிஷ் இந்தியாவிலிருந்த முக்கிய நகரங்களிலிருந்து நெடுஞ்சாலைத் தொடர்புகள் தில்லிக்கு அமைக்கப்பட்டன. இப்பொழுது வாணிகப் பொருள்கள் ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்கு எடுத்துச் செல்லுவது இயலக்கூடிய செயலாயிற்று. ஆனால், இன்னும் அவற்றை எடுத்துச்செல்ல மாட்டு வண்டிகளே பயன்படுத்தப்பட்டு வந்தன. மூன்றாவது மிக முக்கியமான திட்டம், ரெயில் வண்டிகளை இந்தியாவில் புகுத்தியமையாகும். டல்ஹௌசி பிரபு இவ் அரும்பெருஞ் செயலைச் செய்தார். சில வகைகளில் அவருடைய செயல்முறைகளுள், இச் செயல் மாபெருஞ் சிறப்பு வாய்ந்தது என்று கூறலாம். 1849ஆம் ஆண்டில், முதல் ஒப்பந்தம் செய்யப்பட்டது.

1853ஆம் ஆண்டு டல்ஹௌசி வெளியிட்ட புகழ்மிக்க செயல் முறைக் குறிப்பில், ரெயில் வண்டிப் போக்குவரத்துப்பற்றிய முழுத் திட்டமும் வரையறுக்கப்பட்டது. சிப்பாய் கலகம் நடைபெற்ற காலத்தில் சற்றேறக்குறைய 200 கல் நீளமான இருப்புப் பாதை அமைக்கப்பட்டிருந்தது. கலகக் காலத்தில் பெற்ற அனுபவங்கள் அவ் இருப்புப் பாதையின் படையியல் பயன்மதிப்பையும், வணிகத்துறைப் பயன்மதிப்பையும் சிறப்பாக எடுத்துரைத்தன. அதற்குப் பிறகு மிக விரைவில் நாடெங்கும் இருப்புப்பாதை அமைக்கும் பணி தொடர்ந்து நடைபெறலாயிற்று.

பல வழிகளில் இருப்புப்பாதை அமைத்தமை இந்தியப் பொருளாதார முன்னேற்றத்திற்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்தது எனலாம். சரக்குகளைக் கொண்டு செல்லுவதற்கு அது ஒரு போக்குவரத்து வழியை முதலாவதாக அமைத்துக் கொடுத்ததுமட்டும் அல்லாமல், அவற்றை எடுத்துச் செல்லுவதற்கு வண்டிகளை (பெட்டிகளை)யும் தந்துதவியது. இது முதல் எரிபொருள்களை அதிக அளவில் உற்பத்தி செய்யும் இடங்களுக்கும் கொண்டு வருவது எளிதாயிற்று. அந்தத் தலங்களிலிருந்து பெற்ற பண்டங்களை நாடு முழுவதிலும் எடுத்துச் சென்று, மலிவாகவும் பரவலாகவும் வழங்கவும் முடிந்தது. இந்தியத் தொழிற்சாலையின் முன்னேற்றத்திற்கு நிலைத்த தடையாக இருந்துவந்த போக்குவரத்து வசதியின்மை யென்னும் தடை இதனால் உடைத்தெறியப்பட்டது. இவ்வாறு பெரிய தொழிற்சாலைத் திட்டங்களுக்கு வழி வகுத்துக் கொடுக்கப்பட்டது. சணல் தொழிற்சாலைகளும், பருத்தித் தொழிற்சாலைகளும், நிலக்கரித் தொழிற்சாலைகளும், இரும்புத் தொழிற்சாலைகளும், காப்பி, தேயிலைத் தோட்டத் தொழில்களும் 1850ஆம் ஆண்டிற்கு முன்பு பையவே முன்னேற்றம் அடைந்ததும், அதற்குப் பிறகு மிக விரைந்து அடுத்தடுத்து மாபெரு முன்னேற்றம் அடைந்ததும் வெறும் தற்செயல் நிகழ்ச்சிகளல்ல. போக்குவரத்து வசதியென்பது தொழிற்சாலையின் உயிர் நாடியாகும். இருப்புப் பாதைகள் இல்லையென்றால், அத் தொழிற்சாலைக்குத் தேவையான இரத்தத்தை எடுத்துச்சென்று வழங்கும் இரத்தக் குழாய்கள் இல்லை யென்பதே பொருளாகும். இரண்டாவதாக, நாட்டிலே உண்டான பஞ்சங்களைப் போக்குவதற்கு இதற்கு முன்பு என்றுமே நாடு கண்டறியாத புதிய வழிகளில் செயலாற்ற இருப்புப் பாதைகள் பேருதவி புரிந்தன. பஞ்சத்தால் பாதிக்கப்பட்ட பகுதிகளுக்கு நாட்டின் பல பகுதிகளிலிருந்து

உணவுப் பொருள்களைக் கொண்டுசென்று தக்க காலத்தில் உதவி செய்வது பஞ்ச நிவாரண வேலைகளில் முக்கியமான தாகும். அப் பணிக்குப் பேரளவில் இருப்புப் பாதைகள் பயன்பட்டன. மூன்றாவதாக, இருப்புப்பாதை இந்தியாவில் நிறுவப்பட்டதன் விளைவாகப் புதிய முதலீடு பேரளவிற்கு இந்தியாவில் இடம்பெறுவதற்குரிய புதியதொரு 'முதலீட்டு இறக்குமதி' பருவ காலம் தொடங்கியது. வாணிகத்தையும் நிதியையும் கூட்டுப்பங்கு கம்பெனிகள் (Joint Stock Companies) மூலம் திட்டமிட்டு அமைப்பதற்குரிய வழி வகைகளை அது நாடு முழுவதிலும் பரப்பியது. இறுதியாகப் புதிய இந்தியாவினை உருவாக்கும் அரும்பணியில் இருப்புப் பாதைகள் புதியதொரு இயங்குமாற்றலையளித்தது. அதை முற்றிலும் நன் முறையில் பயன்படுத்திக்கொள்ளுமாறு இந்தியர்களைச் செய்ததோடு, புதிய பாரதத்தினை உருவாக்கும் அரும்பணியில் இருப்புப் பாதையும் ஒரு முக்கிய பங்கினைப் பெற்றுச் சிறப் புற்றது. சிற்றூர்ச் சமூகங்களின் இதயத்தில் பாய்ந்த மரமுளையாக இரும்புத் தண்டவாளங்களைக் கூறுவர். அம் மர முளைகள் சிற்றூர்ச் சமூகங்களின் உயிர்ப் பண்பாக இருந்த இரத்தத்தை மெல்ல வெளியே வடித்துவிட்டன[9] என்றும் கூறுவர். நிலைபேறுற்ற சமூகச் சேற்றினுள் அடிக்கப்பெற்ற முளையினைப் போன்றும் அது தோன்றியது. புதியதொரு சமுதாயத்தை—முன்னேற்றப் பாதையை நோக்கி முன் னேறிச் செல்லும் சமுதாயத்தை நிறுவுவதற்கு இருப்புப் பாதை அடிப்படையாக அமைந்ததென்று கூறலாம்.

## ஆதாரங்கள்

1750ஆம் ஆண்டிற்கு முற்பட்ட காலத்திய நிலைமையினை அறிய W. H. மோரிலண்டு அவர்கள் எழுதியுள்ள 'India at the death of Akbar (1920)' என்னும் நூலையும், 'Agrarian System of Muslim India (1929)' என்னும் நூலையும் பார்க்க. ஊராட்சி முறையினைப்பற்றித் தெரிந்துகொள்ளுவதற்கு B. H. பேடன் பௌல் (Baden Powell) என்பவர் எழுதியுள்ள 'The Indian Village Community' (1896) என்னும் நூலைப் படிக்கலாம். சிற்றூர்கள் அரசாங்கத்தோடு கொண்டிருந்த தொடர்புகளைப் பின்வரும் நூல்கள் தெளிவாக விளக்குகின்றன :

(1) J. W. கேயே (Kaye): 'Papers of Lord Metcalfe (1855)'. (2) சர் ஜி. பாரஸ்ட் (Sir G. Forrest): 'Selections From .. Mountstuart Elphinstone' (1884). (3) சர் ஏ. ஜே. ஆர்பத்னட்

[9] J. Buchanan : Development of Industrial Enterprise in India.

(A. T. Arbuthnot): 'Sir T. Munro' (2 தொகுதிகள், 1881). (4) டி. ஜி. பி. ஸ்பியர்: 'Twilight of the Moghuls' (1951). இறுதியாகக் குறிப்பிடப்பட்ட நூல், தில்லி அரசுக்குட்பட்டிருந்த பகுதிகளின் சிற்றூர்களில் நிலவிய வாழ்க்கை முறையை மிக விரிவாக விளக்குகிறது.

நிலம், அரசிறையாகிய வருவாய் ஆகியவற்றைப்பற்றி B. H. பேடன் பௌல் எழுதியுள்ள 'Land Systems of British India' (3 தொகுதிகள், 1892) என்னும் நூல் தலைசிறந்த ஆதாரங்களையுடையதாகும். அதற்கு 1894ஆம் ஆண்டில் ஒரு 'சுருக்கம்' வெளியிடப்பட்டிருக்கிறது. மேலும், W. K. பிர்மிங்கர் (Firminger) பதிப்பித்துள்ள 'Fifth Report...to the House of Commons, 1812' (3 தொகுதிகள், 1917) என்னும் நூலையும் பார்க்க.

வாணிகம், தொழில் வளர்ச்சி முதலியவற்றைக் கீழ்வரும் நூல்களில் காண்க:

(1) பாலகிருஷ்ணன்: 'Commercial Relations between India and England' 1601—1757 (1924). (2) S. C. சின்ஹா: 'Economic Annals of Bengal' (1927). (3) N. K. சின்ஹா: 'Economic History of Bengal' (1956). (4) H. பர்பர் (Furber): 'John Company at Work' (1948). (5) V. ஆன்ஸ்டே (Anstey): 'Economic Development of India' (1949). (6) L. H. ஜெங்ஸ் (Jenks): 'Migration of British Capital 1815—1875' (லண்டன் 1938).

இருப்புப் பாதைகளைப்பற்றிய நூற்களை ஒன்பதாம் பிரிவில் நான்காம் இயலில் காண்க.

# 7. சமுதாயக் கொள்கையும் பண்பாட்டுத் தொடர்புகளும்

இந்தியாவின் வாழ்வியல் முன்னேற்றத்திற்கும் அறயியல் முன்னேற்றத்திற்கும் கம்பெனி, வருங்காலத்தில் பொறுப்பாளியாகக் கருதப்படும் என்று யாராகிலும் கிழக்கிந்தியக் கம்பெனியைத் தோற்றுவித்தவர்களிடம் கூறியிருந்தால், இதைவிட வேறொன்றும் அவர்களுக்கு வியப்பை அளித்திருக்க முடியாது. வாணிகர்களாகப் பிரிட்டிஷார் அந்நாட்டிற்குச் சென்றனர். அவர்களுள் சிலர் (சர் தாமஸ் ரோ போன்றவர்கள்) அதனுடைய வாழ்க்கை முறையைக் கூர்ந்து கவனிப்பதில் பேரீடுபாடு கொண்டனர். ஆனால், அந்நாட்டினுடைய உள்துறை அரசியலிலும் செயல்முறைகளிலும் அவர்கள் கலந்துகொண்டபொழுதும், தங்களுடைய ஆதிக்கத்திற்கு அழிவு நேரக்கூடாது என்ற நோக்கத்தின் அடிப்படையிலேயே செயலாற்றினர். வங்காளத்தினைத் தங்களுடைய உடைமையாக்கியபொழுது அரசிறையாகிய வருவாயைப்பற்றித் தங்கள் கருத்தைச் செலுத்தினர். ஆனால், அவர்கள் கம்பெனியின் ஆதிக்கத்தைப் பெருக்குவதற்குரிய வழியாகவே அவர்கள் அதைக் கருதினர். மேலும், தனிப்பட்டவர்கள் செல்வர்களாவதற்குச் சிறந்ததொரு வழியாக அவர்கள் அதைக் கருதினர். கம்பெனியின் ஊழியர்கள் தனிப்பட்ட வகையில் இந்தியர்களிடத்துக் கடுமையாக நடந்துகொண்டு கொடுமைகள் புரிகின்றனர் என்ற செய்தியும், தவறான வழிகளில் செல்வத்தைச் சேர்த்துக் குவித்துக்கொண்டிருப்பவர்கள்மீது உண்டான வெறுப்பும் சீற்றமுமே, முதன் முதலாக இந்தியாவின் நல்வாழ்விலே கருத்தைச் செலுத்துமாறு இங்கிலாந்தினைத் தூண்டியது. ஒழுங்குமுறைச் சட்டம் இயற்றப்படுவதற்கு முன்பு, பாராளுமன்றத்தில் நடைபெற்ற சொற்போர்களில் கலந்துகொண்ட பர்க்கு (Burke) முதன்முத

லாக ஆளப்படுவோருடைய நலவாழ்வில் நாட்டம் செலுத்துவது அரசாங்கத்தினுடைய குறிக்கோளாக இருக்க வேண்டும் என்று குறிப்பிட்டார். மேலும், அவர் பிரிட்டிஷ் அரசாங்கத்தின் ஆட்சிமுறைக் கொள்கை வருங்காலத்தில் எவ்வாறு இருக்க வேண்டும் என்பதை இதன்மூலம் மிகத் தெளிவாகச் சுட்டிக்காட்டினர். அக் கொள்கை, 1784ஆம் ஆண்டில் இயற்றப்பட்ட பிட் இந்தியச் சட்டத்தில், சட்டப்படி ஏற்றுக் கொள்ளப்பட்டது என்பது இங்குக் குறிப்பிடத்தக்கதாகும். அக் கொள்கை வெளிப்படையாக வற்புறுத்தப்பட்டமையும், அதற்கு ஆளுகின்றவர்களே பொறுப்பாளிகள் என்பதும் வாரன் ஹேஸ்டிங்ஸினுடைய துரோகக் குற்ற விசாரணை நடவடிக்கைகளால் உலகம் உணர்ந்து போற்ற முடிந்தது.

ஆனல், அரசாங்கத்தின் செயல்முறைகளில் இந் நலவாழ்வுக் கொள்கை, நாட்டுமக்களுடைய மகிழ்ச்சியைப் பெருக்குவதற்குரிய வழிவகைகளில் ஈடுபடுவதும், நலவாழ்வினை அளிப்பதற்குரிய திட்டங்களைச் செயற்படுத்துவதுமாக அமையாது, நேர்மையான முறையில் நீதி வழங்குவது என்னும் ஒரு துறையைச் சார்ந்ததாகவே இருந்துவரலாயிற்று. 1793ஆம் ஆண்டு வில்பர் போர்சுவின் திட்டத்தில் நாம் இதனுடைய முதல் அறிகுறிகளைக் காணுகின்றோம். அத் திட்டத்தில் கிறித்துவ சமயத்தினரின் அன்புப் பணிக்கு அரசினரின் உதவித் தொகையை அளிக்குமாறு வேண்டியிருந்தனர். ஆனல், 1807ஆம் ஆண்டு, நலவாழ்வு என்னும் பொருளைப்பற்றிக் குறிப்பிடாமலேயே இந்திய அரசாங்கத்தின் குறிக்கோள்களை சர் ஜான் பார்லோவால் நன்கு வரையறுத்துக் கூறமுடிந்தது. பொருளாதாரச் செயல்முறைகளில் உண்டானதைப்போலவே இத் துறையிலும் 1813ஆம் ஆண்டு இயற்றப்பட்ட பட்டயச் சட்டத்தினல் ஒரு திருப்பு மையம் உண்டாயிற்று. அச் சட்டத்தின் ஒரு விதி இந்தியாவில் கலைகளையும், அறிவியற் கலைகளையும் போற்றி வளர்ப்பதற்கு ஒவ்வோராண்டும் ஓர் இலட்சம் ஒதுக்கப்பட்டுள்ளதை எடுத்துரைத்தது. போர்கள் இதற்கு இடையூருக இடையில் தோன்றின. இருபதுகளில் புதிய 'லிபரல்' கட்சியின் நறுங்காற்று வீசத்தொடங்கிய பிறகுதான், இக் கொள்கையைச் செயற்படுத்தும் திட்டம் முதன்மையான இடத்தைப் பெற்றது; அரசாங்கத்தின் பெரிய திட்டமாகவும் அது கருதப்பெற்றது. 1828ஆம் ஆண்டு, கட்டுப்பாட்டுக் கழகத்தின் தலைவராகவும் டோரி கட்சியினராகவும் இருந்த எல்லன்பரோ பிரபு, 'நாம் இந்தியாவின் மக்களுக்கு அறநெறிப்படி ஆற்றவேண்டிய

பெருங் கடப்பாடுடையவர்களாக இருக்கின்றோம்' என்று பென்டிங் பிரபுவிற்கு எழுதினார். விக்குக் கட்சியினைச் சேர்ந்தவராகிய கவர்னர்-ஜெனரல் பென்டிங்கும், எல்லன் பரோவினுடைய உணர்ச்சிமிக்க உள்ளக் கருத்தினை மதித்துப் போற்றிப் பல வழிகளில் அக் கருத்தினைச் செயற்படுத்திக் காட்ட முயன்றார்.

இத்தகைய ஆண்டுகளில்தான் மக்களுடைய நலவாழ்வினைப் போற்றி வளர்க்கவேண்டியது அரசாங்கத்தின் அறநெறிக் கடமை என்றும் அரசாங்கத்தின் கொள்கையை இங்கிலாந்தின் ஆட்சியாளர்களால் ஒப்புக்கொள்ளப்பட்டது. ஆனால், எத்தகைய நலவாழ்வை இந்திய மக்களுக்கு அளிப்பது என்பதைப்பற்றி முடிவு செய்வது மிக அரிய செயலாக இருந்தது. 'அது இந்து அல்லது இஸ்லாமிய அல்லது பிரிட்டிஷ் நலவாழ்வு முறையாக இருக்க வேண்டுமா? பழைய, பண்பாட்டினை அடிப்படையாகக் கொண்டதாக இருக்க வேண்டுமா? அல்லது புதிய வாழ்க்கை முறைகளைப் புகுத்தும் நலவாழ்வாக அமைய வேண்டுமா?' என்பது குறித்துப் பிரச்சினைகள் தோன்றின. பழைய சமுதாய நிலையினைப் புதுப்பித்துச் சீரமைப்பதே அரசாங்கத்தின் முதல் கடமையாக இருக்க வேண்டும் என்று முதலாவதாக ஒரு கருத்துத் தெரிவிக்கப்பட்டது. அச்சீரமைப்பும் பழைய நெறிமுறைகளைப் பின்பற்றியமைக்கப்படும் முன்னேற்றமாக இருக்க வேண்டும் என்றும் அக் கருத்துடையோர் குறிப்பிட்டனர். கீழைநாட்டுக் கல்வி முறையிலும் பண்பாட்டிலும் சுவைகண்ட கம்பெனி ஊழியர்களுள் பலர், இக் கருத்திற்குப் பேராதரவு தந்தனர். மேன்மேலும் கீழைநாட்டுப் பண்பாட்டில், மேலைநாட்டு மக்களுக்கு ஆர்வமும் ஈடுபாடும் பெருகிக்கொண்டு வந்தமையால் அவ் ஆதரவு நன்கு வலுப்பெற்றது. பதினெட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியில், மேலைநாட்டு மக்களிடையே இந்து, இஸ்லாமியப் பண்பாடுகளை அறிய வேண்டும் என்ற ஆர்வம் பெருகிக் கொண்டே வந்தது என்று சொல்லலாம். சர் வில்லியம் ஜோன்ஸ் சமஸ்கிருதத்திற்கும் ஆரிய மொழிகளுக்கும் இடையே உள்ள தொடர்பினைக் கண்டறிந்தார். அவரும், பாரசீக மொழி அறிஞரான வில்லியம் வில்கின்சும், ஹோரேசு ஹேமன் வில்லியமும் இவ் இயக்கத்தின் தலைவர்களாவர். அவர்களுடைய கருத்துகள் அமைதியையும் பாதுகாப்பையும் அளிப்பனவாக இருந்தன; நீதியையும், நேர்மையையும், இரக்கத்தையும் மக்களிடைக் காட்டுவனவாக இருந்தன. ஆனால், சிறிதுகூட உள்நாட்டுச் சமூகத்தில் தலையிடுவன

வாகவும், அதன் வழிதுறைகளைப் பின்பற்றுமாறு செய்வன வாகவும் இல்லை. பண்டைக் காலத்திய வாழ்க்கை முறை களில் சிறந்த பண்புகள் மிகுதியாக இருப்பதாகவும், அதைப் போன்றே பண்டைய இந்தியச் சிந்தனை சிறப்புமிக்கதாக விளங்குவதாகவும் அப்பே ரேநால் (Abbe Raynal), ஜேம்ஸ் போர்பஸ் போன்றவர்கள் எடுத்தியம்பினர்.

இந்தப் பழமைப் பற்றுமிக்க கொள்கைக்கும், நிலை யமைதியான நோக்கங்களுக்கும் எதிராக முன்னேற்றமான கருத்துகளைக்கொண்ட புரட்சி நோக்குடைய குழுவினர், இந்தியாவின் முன்னேற்றத்திற்குத் தேவைப்படுவது 'தீவிரமான சீர்திருத்தங்களே' என்று அறிவித்தனர். மேலைநாட்டு மக்களால், நெடுங்காலமாகக் கீழைநாட்டு நாகரிகங்கள் மதிப்புடன் போற்றப்பட்டுவந்தன. ஆனால், அவை சிறந்தவை என்று ஒப்புக்கொள்ளுவதில் வேண்டு மானால் அவர்களிடையே கருத்து வேற்றுமை இருந் திருக்கலாம். அந் நாகரிகங்கள் சிற்சில சமயங்களில் குறைபாடுடையனவாக இருந்தபோதிலும், பகைமையுணர்வு உடையனவாக இருந்தபோதிலும், அவை பேராற்றலும் செயல்திறமும் வாய்ந்தவை என்பதை அனைவரும் ஒப்புக் கொண்டனர். இயேசு சங்கத்தின் அறிக்கைகள் கீழை நாட்டின் ராஜரிஷியாக (Philosopher King) அக்பரைப் போற்றிப் பாராட்டின. அதே ஊற்றிலிருந்து பதினெட்டாம் நூற்றுண்டில் சீனப் பண்பாட்டு அலையொன்று வீசலாயிற்று. சிறிது காலம்வரை சீனு, தலைசிறந்த நாகரிக நாடாகப் பொதுவாகக் கருதப்பட்டது. ஆனுல், இது என்றும் பெரும்பான்மையோர் கருத்தாக இருந்ததில்லை. ஆனுல், அது நாகரிகத்தில் மிகவும் முன்னேற்றமடைந்த நாடு என்று ஐரோப்பியர்கள் கருதினுர்கள் என்றுல், அக் கருத்து சமநிலைக் குழுவின் பிரதிநிதியாகச் சீனுவைக் கருதியமையால் தோன்றியதாக இருக்கலாம். ஆனுல், பதினெட்டாம் நூற்றுண்டில் தோன்றிய பகுத்தறிவு இயக்கம் இத்தகைய கருத்துகள் எல்லாவற்றையும் மாற்றிவிட்டன. பகுத்தறிவே ஐரோப்பாவிற்கு வரம்பற்ற முன்னேற்றத்தை அளித்தது என்று அவ் இயக்கத்தைச் சேர்ந்தவர்கள் நம்பினர். இக் கொள்கையும், அதிலிருந்து தோன்றி வளர்ந்த அறிவியல் களும் மற்ற நாகரிகங்களிலிருந்து ஐரோப்பிய நாகரிகத்தைப் பண்பிலும், முறையிலும், அளவிலும் வேறுபட்டு விளங்குமாறு செய்தன. இவ்வாறு பத்தொன்பதாம் நூற்றுண்டில் தலையெடுக்கத் தொடங்கிய 'ஐரோப்பியரின் உயர்வு மனப்

பான்மை' என்னும் மனக்கோட்டத்திற்கு அறிவாற்றல் அடிப்படையினை இவ்வாறு அமைத்தனர். இங்கிலாந்தில் இந்தக் கருத்துகள் மிக விரைவில் வளர்ந்து ஆற்றல்மிக்க பயன்மதிப்புக் கொள்கையினரின் (Utilitarian School) கோட்பாடுகளாக உருப்பெற்றன. பொருளாதாரத் துறையில் ஆடம் ஸ்மித்தும், அறவியலிலும் சட்டவியலிலும் ஜெரிமி பெந்தாமும், தருக்கத்திலும் மெய்யறிவுத் துறையிலும் ஜேம்ஸ் மில்லும் பயன்மதிப்புக் கொள்கைகளைப் போற்றிப் பின்பற்றியவர்களாவர். அவர்கள் பழைய பழக்கவழக்கங்களையும் நிலைமைகளையும் வன்மையாகத் தாக்கினர். புதிதாகத் தோன்றிய நம்பிக்கையினாலுண்டான போராற்றலுடன் அவர்கள் அக் குறைகளைப் போக்குவதற்குரிய பரிகாரங்களைக் கூறிவந்தனர். அவர்கள் முன்னேற்ற சக்திகள் அனைத்தும் தங்களை ஆதரிக்கின்றன என்ற நம்பிக்கை கொண்டிருந்தமையால், அவர்கள் தீவிரமான சீர்திருத்தப் பணிகளைச் செய்யவேண்டும் என்று நாடெங்கும் முழங்கிவந்தனர். ஜேம்ஸ் 1808ஆம் ஆண்டில் எழுதத் தொடங்கிய 'வரலாறு' என்னும் நூலினை[1] 1817ஆம் ஆண்டு, அவர் புத்தகமாக வெளியிட்டார். அந் நூலில் பயன்மதிப்புக் கொள்கையினர் இந்தியாவைப்பற்றிக் கொண்டிருந்த கருத்துகள் தெளிவாக விளக்கப்பட்டிருந்தன. இந்திய நிலையங்களில் எத்தகைய சிறு நன்மையும் இருப்பதாக ஸ்மித் நினைக்கவில்லை. அதற்குரிய காரணங்கள் நூற்றுண்டுகளென்னும் குப்பைக் கூளங்களுக்கு அடியில் உறங்கிக் கொண்டிருப்பதாக அவர் கூறினார். இந்தியச் சிந்தனை சிறுபிள்ளைத்தனமானது என்றும், அதனுடைய சமயம் மூடநம்பிக்கை நிறைந்தது என்றும், அதனுடைய பழக்க வழக்கங்கள் முரட்டுப் பிடிவாதமும் குறுகிய மனப்பான்மையும் தீமை விளைவிக்கும் இயல்பும் உடையன என்றும் மில் தம்முடைய நூலில் தெளிவாக விளக்கியிருந்தார். இத் தீய நோய்களைப் போக்குவதற்கு ஒரேவொரு வழிதான் உண்டு என்று அவர் திட்டவட்டமாகக் கூறியுள்ளார். பகுத்தறிவையும், ஐரோப்பியரின் அறிவு விளக்கத்தையும் இந்தியாவிற்குக் கொண்டுசென்று புகுத்துவதைத் தவிர வேறு வழி கிடையாது என்பது அவருடைய அசைக்கமுடியாத நம்பிக்கையாகும். அப்படிச் செய்தால் இந்தியர்கள் ஒளியைக் காண்பார்கள்; தங்களைத் தாங்களே திருத்திக்கொள்ளுவார்கள் என்று மில் அழுத்தம் திருத்தமாக அறைந்துள்ளார்.

[1] J. Mill: History of British India, Books II and III.

கிறித்துவ நற்செய்திக் (Evangelical Christians) குழுவின ருடைய செல்வாக்கும் பகுத்தறிவு இயக்கத்தினரின் கருத்து களை வலிமை பெறுமாறு செய்தன. நற்செய்திப் பரப்புக் குழுவினர், பகுத்தறிவு இயக்கத்தினரின் ஐயுறவு மனப் பான்மையினை இழித்தும் பழித்தும் பேசினர். ஆயினும், இவர்களும் அவர்களுடைய கொள்கையாகிய மனித இனத் திற்கு அன்புப் பணிபுரிய வேண்டும் என்னும் கருத்தில் உடன்பாடுடையவர்களாக இருந்தனர். 'கிறித்துவ சமயம் தனி மனிதன் கடைத்தேறுவதற்குமட்டும் வழிகாட்டவில்லை; கொடுமைக்கு ஆளாகி அல்லற்பட்டு ஆற்ருது அழுது கண்ணீர் வடிக்கும் மக்களுக்கும், நீடிய பிணியால் வருந்துகின்ருேருக்கும் இரக்கத்தோடு அன்புப் பணிபுரியுமாறு அது அழைக்கிறது' என்னும் கருத்துடையவர்களாக அவர்கள் இருந்தனர். நற்செய்திப் பரப்புக் குழுவினருக்கு வில்பர்போர்சு தலைவராக இருந்தார். அடிமை முறையை ஒழித்தல், சிறைச்சாலையைச் சீர்திருத்துதல் போன்ற சமூகப் பணி புரிவதில் அவர்கள் தலைசிறந்து விளங்கினர். அவர்கள் கிறித்துவ சமயத்தைச் சாராத நாடுகளில் சமூகப் பணிபுரியத் தொடங்கியபொழுது, கிறித்துவ சமயத்தைப் போற்றியாதரிப்பவர்களாக மாறினர்; அப் பணிக்கு இந்தியாவில் மிகுதியான வாய்ப்பு இருப்பதாக அவர்கள் கருதினர். இந்தியச் சமயம் மூடநம்பிக்கைகளை அடிப்படையாகக் கொண்டிருந்ததோடு, மூர்க்கமான உருவ வழிபாட்டு நெறியையுடையதாகவும் இருந்தது. உண்மை யைப்பற்றிய அறியாமையே நிறைந்து இருந்ததோடு பேரள விற்குத் தீமையும் அதனுடன் நிலைபெற்றிருந்தது. அவர்கள் ஆன்மாக்கள் கடைத்தேற வேண்டும் என்பதில் கொண்டிருந்த பேரார்வமே அவர்களைச் செயல்புரியுமாறு தூண்டியது. எனவே, அவர்கள் பகுத்தறிவு இயக்கத்தினரோடு சேர்ந்து கொண்டு மேலைநாட்டுப் பாணியில் புதிதாக இந்திய மக்களுக் குத் தொண்டுபுரியும் அரும்பணியில் ஈடுபட்டனர்.

பிரிட்டிஷார் செயலாற்றுவதற்குரிய வழியின் இடையே ஒரு பக்கம் பழமைப் பற்ருளர்களும், மற்ருெரு பக்கம் புரட்சிக்காரர்களும் நின்றுகொண்டிருந்தனர். அதனுடன் இந்தியாவிலும் பிரிட்டனிலும் பெருந்திரளான மக்கள் தங்க ளுடைய அடிகளில் ஒன்றை இங்கும் மற்ருென்றை அங்கும் வைத்துக்கொண்டு இருந்தனர். இம் மனிதர்கள் லிபரல் கட்சியினர் கொள்கையையோ, கிறித்துவ சமயத்தினரின் அறிவுரைகளையோ பல படிநிலைகளில் ஒப்புக்கொண்டவர்க ளாக இருந்தனர். அவர்கள் இந்தியாவிற்குள் மேலைநாட்டுப்

பண்பாட்டையும் நாகரிகத்தையும் கொண்டுவந்து புகுத்த வேண்டும் என்பதை விரும்பினர். ஆனால், முன்னெச்சரிக்கையுடனும் பொறுமையுடனும் புகுத்த வேண்டும் என்று அவர்கள் அறிவுரை வழங்கிவந்தனர். மாண்புமிக்க ஆட்சியாளர்கள் எல்லாரும் இக் குழுவைச் சேர்ந்தவர்களாகவே இருந்தனர். 1828ஆம் ஆண்டிற்கு முன்பு அவர்கள் படிப்படியான மாற்றங்களைச் செய்ய முன்னேக்கிக் காத்துக்கொண்டிருந்தனர். அவ் ஆண்டிற்குப் பிறகு அவர்கள் எச்சரிக்கையுடன் எதையும் செய்ய வேண்டும் என்று அறிவுரை கூறத் தொடங்கிவிட்டனர். 'ஆகவே நாம் படிப்படியான திருத்தத்தை நோக்கி அமைதியான மனநிலையோடு செல்லுவோமாக' என்று மால்கோம் அறிவுறுத்திய பொன்மொழியே இத்தகைய மனிதர்களின் மேற்கோளுரையாகி இருந்தது எனலாம்.

இத்தகைய சூழ்நிலைகளின் செல்வாக்கினை அடிப்படையாகக்கொண்டே இந்தியாவில் பிரிட்டிஷாரின் சமுதாயக் கொள்கை உருவாக்கப்பெற்றது. 1813ஆம் ஆண்டிற்கு முன்பு பழமைப் பற்றுளர்களுடைய (கன்சர்வெடிவினர்) கருத்தே செல்வாக்குப்பெற்றிருந்தது. 1813ஆம் ஆண்டிற்கும் 1828ஆம் ஆண்டிற்கும் இடையே பழமைப் பற்றுளர்களின் கொள்கையும் தாராள மனப்பான்மையினராகிய (லிபரல்களின்) கொள்கையும் எதிர்த்துப் போர்புரியலாயின. எனவே, செயல்முறையில் கடைப்பிடிப்பதைக்காட்டிலும் வாய்ச்சொல்லாகிய கட்டளைகள்தாம் முனைப்புடையனவாக இருந்தன. 1828ஆம் ஆண்டிற்குப்பிறகு லிபரல் கட்சியினரின் கொள்கை மக்களிடையே பேராதரவைப் பெறத் தொடங்கியது. அதன் செயல்முறைகள் வள ஆதாரத்திற்குக் கட்டுப்பட்டதாகவும், முன்னெச்சரிக்கைகளால் பக்குவப்படுத்தப்பட்டதாகவும் இருந்தன. நாம் அதனைப் பின்வருமாறு தெளிவாக வரையறுத்துக் கூறலாம். அனைத்துலக அறவியல் சட்டத்தினைப் புறக்கணிக்கக்கூடிய பழிப்புக்குரிய பழக்க வழக்கங்கள் அவர்களுடைய முதல் தாக்குதலுக்கு இலக்காயின. இத்தகைய செயல்களில், சமயத்தின் வேண்டுகோளுக்கு அவர்கள் செவிசாய்க்கவில்லை. சமய நம்பிக்கைகள் இச் செயலைக் கட்டுப்படுத்துவது பொருத்தமற்றது என்றே அவர்கள் கருதினர். என்ன விளைவுகள் உண்டாகுமோ என்ற அச்சத்தை அறிவுரை கூறியவர்கள் கிளப்பிவிட்டமையால் இவற்றைச் செயலாற்றுவதில் கால தாமதமே உண்டாயிற்று. அதன் பிறகு ஐரோப்பிய நிலையங்கள், அறிவியல்,

ஐரோப்பிய அறிவு விளக்கம், ஐரோப்பியச் சிந்தனை, முதலியன இந்தியாவிற்குள் புகுத்தப்பட்டன. ஒரே சொல்லில் சொல்லுவதென்றால், மேலைநாட்டுப் பண்பாட்டை இந்தியாவிற்கு மாற்றும் நற்பணியாற்றப்பட்டதெனலாம். நிலைத்துள்ள நிலையங்களின் செயல்களில் வெளிப்படையாக வேண்டுமென்றே தலையிடுதலை அனுபவத்தின் குரலும், எச்சரிக்கையின் குரலும் தடுத்து நிறுத்தின. இதற்கு விதி விலக்காக முதலில் குறிப்பிடப்பட்ட அனைத்துலக அறவியல் சட்டத்திற்கு மாறான செயல்கள் மட்டும் சீர்திருத்தம் செய்வதற்குரியனவாகக் கொள்ளப்பட்டன. ஆனால், வாழ்வியல் முன்னேற்றமாக இருந்தாலும் சரி, அறவியல் முன்னேற்றமாக இருந்தாலும் சரி, அறிவுத்துறை முன்னேற்றமாய் இருந்தாலும் சரி, இவையனைத்தையும் சீர்திருத்தியமைப்பதற்குத் தேவையான ஊற்றத்தையும் ஊக்கத்தையும் மேற்கிலிருந்தே பெறவேண்டியிருந்தது. கிழக்கத்திய வாழ்க்கைமுறைக்குப் பக்கத்திலே மேற்கத்திய வாழ்க்கை முறையினை அருகருகே வைக்கவேண்டி நேரிட்டது. கிழக்கு, பழைய வாழ்க்கை முறையைக் காட்டிலும், புதிய வாழ்க்கை முறையையே விரும்பி எடுத்துக்கொள்ளும் என்பது உறுதியாகவும் உண்மையாகவும் நம்பப்பட்டது.

இப்பொழுது இப் பொதுப் போக்கு எவ்வாறு செயற்படுத்தப்பட்டது என்பதைக் காண்போம். அனைத்துலக அறச் சட்டத்தை மீறிய வன்முறைச் செயல்களை, முதன் முதலாக வெல்லெஸ்லி பிரபு தாக்கத் தொடங்கினர். 1803ஆம் ஆண்டு ஊக்ளி ஆற்றின் கழிமுகத்தில் உள்ள சாகர் தீவில் குழந்தைகள் தெய்வத்திற்குப் பலி கொடுக்கப்படுவதை அவர் அடக்கியொடுக்கினர். இவ்வாறு முதன் முதலாக அவர் தாக்குதலைத் தொடங்கிவைத்தார். இச் செயல் இந்து சமயப் பழக்கவழக்கங்களில் தலையிடும் நேர்மையற்ற கொடுஞ்செயலென்று அக்காலத்திய மக்களால் குறைகூறப்பட்டதும் கண்டிக்கப்பட்டதும் சுவைமிக்க செய்திகளாகும். கணவனேடு மனைவியர் உடன்கட்டை ஏறும் கொடிய வழக்கமும் வெல்லெஸ்லியின் கருத்தைக் கவர்ந்திருக்க வேண்டும். ஆனல், யாதாகிலும் நடவடிக்கை எடுத்தால் அது இந்து மக்களுடைய கருத்திற்கு மாருக இருக்குமே என்ற அச்சம், அவரை அதைப்பற்றி யாதொரு செயலிலும் ஈடுபடவொட்டாமல் தடுத்ததுபோலும். அடுத்த இருபத்தைந்து ஆண்டுகளுக்கு அவ் வழக்கம் அரசினரால் ஆராயப்பட்டு வந்தது. ஆனல், ஒவ்வொரு கவர்னர்-

ஜெனரலும் அதைக் குறித்துச் செயலில் இறங்குவதை ஒத்திப்போட்டுக்கொண்டே வந்தனர். வலுக்கட்டாயப் படுத்தி, மனைவியரைக் கணவனோடு எரிக்கக்கூடாது என்ற ஒரு திருத்தத்தைக் கொண்டுவந்ததன் மூலம் மின்டோ பிரபு விதிமுறைகள் சிலவற்றை வகுத்தளித்தார்.[2] ஆனால், இதை அரசாங்கமே 'உடன்கட்டை' ஏறும் வழக்கத்திற்கு உடன்பாடு தெரிவித்துவிட்டது என்று நாட்டுமக்களால் திரித்துக் கூறப்பட்டது. அதன் விளைவாக வங்காளத்தில் மட்டும் அரசாங்கத்திற்குத் தெரிந்து உடன்கட்டையேறும் நிகழ்ச்சிகள் பேரளவில் பெருகின. இவ் வழக்கம் மிகுதிப் பட்டது, பஞ்சாபில் சீக்கியரிடத்திலும், இராசபுதனத்தில் இராசபுத்திரர்களிடத்திலுமாகும். இவையல்லாமல், மதுரையிலும் கங்கைச் சமவெளியிலும் வாழ்ந்துவந்த பிராமணர்களிடத்தும் இவ் வழக்கம் காட்டுத் தீயைப்போலப் பரவலாயிற்று. பஞ்சாபிலும் இராசபுதனத்திலும் 'உடன்கட்டையேறுதல்' என்பது பெருங்குடி மக்களின் வழக்கமாக இருந்து வந்தது. ஆனால், பிராமணர்களிடை, அது எல்லாரிடத்திலும் பரவியிருந்த வழக்கமாகும். 1817ஆம் ஆண்டிற்கும் 1826ஆம் ஆண்டிற்கும் இடைப்பட்ட பத்தாண்டு காலத்தில் வங்காளத்தில் உடன்கட்டையேறிய நிகழ்ச்சிகளாக ஆண்டிற்கு 500-க்குமேல் 850-க்குள் பதிவு செய்யப்பட்டுள்ளன. அதற்குப் பலியான பெண்களுள் தானாகவே விரும்பி உடன் பட்டவள் என்று எப் பெண்ணையும் சொல்லுவதற்கில்லை. அவர்கள் உடன்கட்டையேற்றப்பட்ட சூழ்நிலைகளும் பொதுவாக மோசமானதாகவும் தீமை நிறைந்ததாகவும் இருந்து வந்தன. மற்றவர்கள் எல்லாம் அதைப்பற்றிய அறிக்கைகளை வரவழைத்துப் பார்த்துக்கொண்டிருந்தனர்.[3] ஆனால், பென்டிங் பிரபு 1829ஆம் ஆண்டு 'சதி'யினை ஒழிப்பதற்குச் செயலாற்றத் தொடங்கினார். 1829ஆம் ஆண்டு, பதினேழாம் ஒழுங்குமுறை விதியினைச் சட்டமாக அவர் இயற்றினார். அச் சட்டத்தின் மூலம் அவர் உடன்கட்டையேறுதலாகிய சதியென்னும் வழக்கினை அடியோடு அடக்கி

[2] 1812ஆம் ஆண்டு டிசம்பர் 5ஆம் நாளில் வெளியிடப்பட்ட கட்டளை.

[3] மெட்காஃப் தில்லியினுடைய காப்பரசின் ஆளுநராக இருந்த பொழுது (1809—1818) தில்லித் தனியரசிற்குள் 'சதி'யினை நடைபெறவொட்டாமல் ஆட்சிமுறைக் கட்டளையின் மூலம் தடுத்து நிறுத்தினார் என்பது இங்கு நினைவுகூரத் தக்கதாகும்.

யொடுக்கினர். குழந்தைப் பலியினைப் போன்றல்லாமல், 'சதி' பண்டைக்காலம் முதல் தரும சாத்திரங்களினாலும், நீதி நூல்களினாலும் ஒப்புக்கொள்ளப்பட்டதும், தொன்று தொட்டு நடைமுறையில் இருந்து வருவதுமான வழக்கமாகும். சாத்திரங்களினால் சிறந்ததாக ஏற்றுக்கொள்ளப்படவில்லை என்று ஒருசாரார் கூறுவர். எவ்வாறாயினும் பண்டைக்காலம் முதல், தரும சாத்திரங்களினால் ஒருவாறு ஒப்புக்கொள்ளப் பட்டது சதி என்பது மறுக்க முடியாத உண்மை. எனவே, அத்தகைய ஒரு வழக்கத்தை அடக்கியொடுக்குவது வைதிக இந்துக்களின் உள்ளத்தைப் புண்படுத்தும் என்றும், அவர்களை அவமானப்படுத்துவதாகும் என்றும் அவர்கள் கருதிவிடுவார்களோ என்ற அச்சம் கவர்னர்-ஜெனரலுக்கு இருந்துவந்தது. ஆனால், சதியொழிப்பிற்குத் தோன்றிய எதிர்ப்பு அணிக்கு, அரசர் இராதகாந்த்தேப் தலைமை தாங்கினார். அவர் எதிர்ப்பைத் தெரிவிக்கும் ஒரு மனுவைத் தயாரித்தார். அதன் பிறகு, பிரிவி கவுன்சிலில் அவர் முறை யிட்டுக்கொண்டார். 1833ஆம் ஆண்டு, பிரிவி கவுன்சில் அவ் வழக்கினை ஆராய்ந்து, வழக்குப் பொருத்தமற்றதென்று அதைத் தள்ளிவிட்டது. பென்டிங் காட்டிய வழியினைச் சென்னை, பம்பாய் அரசுகளும் பின்பற்றின. இந்தியத் தனி அரசுகளைத் தொடர்ந்து நிலையாக வற்புறுத்திக்கொண்டே வந்தமையால், உடன்கட்டையேறுதலை அவ் அரசுகளிலும் அடியோடு தடுத்து நிறுத்த முடிந்தது. 1861ஆம் ஆண்டு உதயபுரியின் அரசர் இறந்தபொழுது, அவருடைய மனைவி அவருடன் உடன்கட்டையேறினார் என்பதுதான் இறுதியாக அரசினரால் பதிவு செய்யப்பட்டுள்ள 'சதி' நிகழ்ச்சி யாகும்.

அங்கு இதையடுத்து, நடு இந்தியாவிலும் மேல் இந்தியா விலும் சமயத்தின் பெயரால் செய்யப்பட்டுவந்த படுகொலைகள் விரைவில் தடுத்து நிறுத்தப்பட்டன. இத்தகைய கொலைகளுக்குத் 'தகி' (Thagi) என்னும் பெயர் வழங்கிவந்தது. படைக்கலம் ஏந்திய சிலர் அக்கம்பக்கத்தி லுள்ள ஊர்களில் நுழைந்து, அங்குள்ள பொருள்களைச் சூறை யிடுவதோடு அமையாது, பல மக்களையும் சிறைப்படுத்திக் கொண்டுசென்று, காடுகளிலும் மலைகளிலும் சமயத்தின் பேரால் கொலை செய்துவந்தனர். இந்த அரும்பணியைச் செய்துவந்தவர்கள், தக்கர்கள் (Thags) என்னும் கொள்ளைக் கூட்டத்தினராவர். அவர்கள் காளி வழிபாட்டில் செய்யப்பட்டு வந்த சடங்கே நரபலியாக இருந்தது. இவ்வாறு காளிக்கு

நரபலி கொடுப்பதனுல், அவர்கள் அத்தெய்வத்திற்குத் தொண்டு செய்வதாக நம்பிவந்தனர். இப் பழக்கம் நெடுங் காலமாக இருந்துவந்ததாகத் தெரிகிறது. ஆயினும், அரசியல் ஆதிக்கம் குன்றிய காலத்தில் அது சமுதாயத்திற்குப் பேரச்சத்தை உண்டாக்கும் நிலேயில் வளர்ந்துவிட்டது. பதினெட்டாம் நூற்ருண்டு முடிவடைந்தபொழுது, நடு இந்தியாவில் ஆற்றல்மிக்க அரசுகள் ஒன்றுகூட நிலேபெற்று விளங்காமல் அழிந்துபோயின. எனவே, தட்டிக்கேட்பதற்கு ஆள் இல்லாமல் போனமையால், தக்கர்கள் என்ற கொள்ளேக் கூட்டத்தினர், சமயத்தின்பெயரால் கொலே செய்வதைப் பேரளவில் பின்பற்றிவந்தனர். 1830ஆம் ஆண்டு பென்டிங் அவர்களே அடக்கி யொடுக்குவதற்குரிய செயல் முறைகளில் ஈடுபட்டார். இந்தப் பணியினே மெடோஸ் டெய்லர் (Meadows Taylor) போன்ற மனிதர்களின் உதவியால், சர் வில்லியம் சிலீமென் மூலம் நாடெங்கும் அவர் செயற்படுத்திஞர். இதனுல் உண்டாகக்கூடிய நன்மைகள் வெளிப்படையாகத் தோன்றினமையால், இத் தடைக்கு எதிராக யாரும் வழக்குத் தொடுக்கவில்லே. இத்தகைய சீர்திருத்தங்களோடு தொடர்புடைய செயல், அடிமைமுறையினே நீக்கியமையாகும். 1833ஆம் ஆண்டு, பிரிட்டிஷ் பேரரசிற்குட்பட்ட எல்லா நாடுகளிலும் அடிமைமுறை நீக்கப்பட்டதன் பின்னர், இந்தியாவில் அதை ஒழித்தமை வரலாற்றுக் காலவழுவாகும். சதியினேப் போன்றே, தகியினேப்போன்றே அடிமைமுறை இந்தியாவில் இழிந்ததாகக் கருதப்படவில்லே. மேற்கு இந்தியத் தீவுகளில் இருந்ததைப்போன்ற ஒன்றேடு ஒன்று பின்னிப்பிணேந்த குழுக்களோ, இடைநிலேவழியோ ஒன்றும் அங்கில்லே. ஆனுல், அதனுடைய வழக்கம் எங்கும் பரவியதாகவும், ஆழ வேரூன்றியதாகவும் இருந்தது. அதனுல் உண்டாகக்கூடிய தீமைகள் உண்மையானவையாகவும் இருந்தன. 1843ஆம் ஆண்டு எல்லன்பரோ பிரபுவினுல் அடிமைமுறை ஐந்தாவது சட்டத்தின்மூலம் ஒழிக்கப்பட்டது. அதற்குத் தரப்பட்டுவந்த சட்டவியல் மதிப்பினேத்தர மறுத்ததன்மூலம் அம் முறை தானுகவே செத்துப்போயிற்று.

இனி, பன்னெடுங்காலமாக இந்தியாவில் நிலேபெற்று விளங்கிய பழக்கவழக்கங்களின்மீதும், சட்டங்களின்மீதும் சுமத்தப்பட்ட மேலேநாட்டுப் புதியமுறைகளினுல் உண்டான விளேவுகளே நாம் இப்பொழுது காணலாம். குடிமக்கள் சட்டத்தின் முன்னுல் சமத்துவம் உடையவர்கள் என்னும் கொள்கை ஆங்கிலேயச் சட்டத்தின் உயிர்நாடியாக அமைந்

திருக்கிறது எனலாம். ஆனால், அக் கொள்கை இந்து சட்ட முறைப் பழக்கவழக்கங்களில் அடியோடு காணப்படவில்லை. அது பிராமணர்களுக்குச் சிறப்புரிமைகளை அளிக்கின்றது. ஆனால், அதேசமயத்தில் தாழ்த்தப்பட்ட இனத்தைச் சேர்ந்த மக்களுக்கு அல்லது தீண்டத்தகாதவர்கள் என்று ஒதுக்கி வைக்கப்பட்ட மக்களுக்குப் பலவகை இன்னல்களையும் இடர்ப்பாடுகளையும் அது உண்டாக்கியிருக்கிறது. 1833ஆம் ஆண்டு இயற்றப்பட்ட பட்டயச் சட்டத்தில் அரசாங்க ஊழியர்களாகத் தேர்ந்தெடுக்கப்பட வேண்டியவர்களின் தகுதி திறமைகள் தெளிவாகக் குறிப்பிடப்பட்டுள்ளன. அதனுடைய விதிகளில் ஒன்று நிறத்தின் காரணமாக ஒருவரைப் பதவியில் அமர்த்த யாதொரு தடையும் இருக்கக் கூடாது என்றும், அப்படித் தடைசெய்யப்படுமானால் அது கண்டிக்கப்படவேண்டிய குற்றம் என்றும், பிற்காலத்தில் பெருவழக்காகப் பெருகப்போகிற நிறத்தடைக்கு அது எதிர்ப்புத் தெரிவித்திருக்கிறது. இது உடனடியாகச் செயல் முறையில் எத்தகைய பயனையும் அளிக்கவில்லை என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது. ஆனால், பென்டிங் இதற்கு மேலாக ஒருபடிசென்று செயலாற்றினார். இந்து சமயத்திலிருந்து பிற சமயங்களுக்கு மாறிவிட்டவர்களுக்குத் தங்கள் குடும்பச்சொத்தில் பங்கு பெறுவதற்குரிய உரிமையை அளிப்பதற்காகப் பென்டிங் இந்து மரபு வழியுரிமைச் (Hindu Law of inheritance) சட்டத்தைத் திருத்தி அமைத்தார். இதன் மூலம், ‘தனிமனிதர் சட்டத்தின்முன் சமத்துவம்’ என்னும் கொள்கை முதன்முதலாக இந்து சட்டத்துறையின்மீது, படையெடுத்துச் சென்றது எனலாம். இத் துறையில் சமத்துவத்தின் மற்றொரு செல்வாக்குமிக்க செயலும் உட்புகுந்தது. இந்தியப் பொதுத்துறைச் சட்டம் இயற்றப்பட்டது. இச் சட்டம் இந்தியர்கள் அனைவரையும் சட்டத்தின் முன்னால் சமத்துவம் வாய்ந்தவர்களாகச் செய்தது. எல்லாவகையான மாற்றங்களுக்கும் ஊக்கம் அளிக்கும் வகையில், பிரிட்டிஷாரின் சட்டதிட்டங்களும் பழக்கவழக்கங்களும் இருந்துவந்தன. நீதிமன்ற நிர்வாக இயந்திரமும், வழக்கு விசாரணை முறையும், சட்டங்களைச் செயற்படுத்துவதும் போன்ற எல்லாம், அதே மூலாதாரத்திலிருந்தே கொண்டு வரப்பட்டன.

இந்தப் புத்தாக்கங்கள் மிகநுட்பமான இயல்புடையன. ஆயினும், அவை மிக்க முக்கியத்துவம் வாய்ந்தன. அந் நுட்பமான திருத்தங்களினாலும், ஆக்கப் பணிகளினாலும் உண்டாகக்

கூடிய பயன்கள் மிகப் பையவே உலகிற்குத் தெரியவந்தன. ஆனால், அடுத்து வரிசையாகச் செய்யப்பட்ட ஆக்கப் பணிகள் தெளிவான இயல்புகள் உடையன; உடனடியாகப் பயன் தந்தமையால் அவை நம்முடைய உள்ளத்தைக் கவரத்தக்கன வாகும். அவற்றுள் கிறித்தவ சமயப் பரப்பாளர் குழுக்களை இந்தியாவில் நுழையவிட்டமை சிறப்புமிக்க முதற்செயலாகும். பதினெட்டாம் நூற்றாண்டில் பணிபுரிந்த, தொடக்க காலத்துக் கிறித்தவ சமயக் குழுக்கள் பிரிட்டிஷார் ஆட்சிக்குட்படாத நிலைக்களன்களில் இருந்து வந்தவையாகும். தரங்கம்பாடியி லிருந்த டேனியர்களும், சராம்பூரில் இருந்த பிரிட்டிஷ் பாப் டிஸ்ட் குழுவின் தலைவரான வில்லியம்காரே போன்றவர் களுமே பிரிட்டிஷ் இந்தியாவில் சமயப் பணி புரிந்தனர். அவர்கள் கம்பெனியின் ஆட்சிக்குட்பட்ட பகுதிகளிலேயே வேரூன்ற முடிந்தது. அவர்கள் கம்பெனியைச் சேர்ந்தவர் களின் குடும்ப மதகுருக்களாக விளங்கினர். வங்காளத்தில் அவ்வாறு டேவிட் பிரவுன் என்பவரும், ஹென்றி மார்ட்டின் என்பவரும் சமயப்பணி புரிந்தனர்; ஒரு சிறிது காலத்திற்கு சுவார்ட்ஸ் என்பவர் மதராசில் அத்தகைய பணி புரிந்து வந்தார். 1813ஆம் ஆண்டுமுதல் சமயப் பரப்பாளர்கள் தடையாதும் இன்றி இந்தியாவிற்கு வரலாம் என்று அறிவிக்கப்பட்டது. அதன்பிறகு பிரிட்டிஷாருடைய சமயப் பணியாளர் குழுவின் செயல்முறைத் திட்டம் நெருக்கமாகப் பணிபுரியத் தூண்டியது. அதை விரைவில் அமெரிக்கர்களின் உதவியால் ஆற்றல் மிக்கதாகச் செய்துவிட்டனர். பல நாட்டுப்புறப் பகுதிகளில் கிறித்தவப் பணியாளர்கள் கரிய சட்டையும் தொப்பியும் அணிந்து திருச்சபைகளை நிறுவியும், பலரைத் தங்கள் சமயத்தில் சேர்த்துக்கொண்டு, இங்குமங்கு மாகத் திரிந்துகொண்டிருந்தமை நாட்டுமக்களுக்குப் பழக்கப் பட்ட காட்சியாகப் போயிற்று. அந்தச் சமயப் பணி யாளர்கள் எல்லாரும் கொள்கைப் பரப்புநர்களாகிய 'எவாஞ் சலிகர்கள்' இந்தியாவைப் பற்றிக்கொண்டிருந்த கருத்து களையே தங்களுடையே கருத்துகளாகக் கொண்டிருந்தனர்.[4] அவர்கள் தூய கொள்கைப் பரப்பாளர்களாகப் பணியாற்றியதோடு நின்றுவிடவில்லை. கல்வி மருத்துவப் பணிகளிலும் அவர்கள் ஈடுபட்டனர். பெரிய நகரங்களில் கல்லூரிகளை நிறுவியும், அவர்கள் கல்வி வளர்ச்சிக்குத் தொண்டாற்றினர். அவர்கள் முற்றிலும் அரசாங்கத்தினால்

[4] சமயக் கொள்கையில் அவர்கள் எல்லாரும் 'எவாஞ் சலிகன்கள்' அல்லர்.

ஆதரிக்கப்படாமலேயே சமயப்பணி புரிந்தார்கள் என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது. ஆனால், ஆளும் இனத்தவரோடு இனத் தொடர்பும், தனிப்பட்டவகையில் சமயத் தொடர்பும் கொண்டிருந்தமையால், அவர்களுடைய மதிப்பையும் பாராட்டுதலையும் பெறச் சமயப் பணியாளர்கள் தவறிவிட வில்லை. 1830ஆம் ஆண்டு ஸ்காட்டியத் திருச்சபைகளின் கல்லூரியை அலக்சாண்டர் டஃப் (Alexander Duff) நிறுவினார். அவர் வங்காளத்தின் சமுதாயத்தில் பெருமதிப்பும் பெருஞ் செல்வாக்கும் பெற்று விளங்கினார். அக் கல்லூரியைச் சேர்ந்தவர்கள் வங்காளச் சமுதாயத்தில் குறிப்பிடத்தக்க அளவிற்குச் செல்வாக்குப்பெற்று விளங்கினர். அவர்கள் இந்து சமயத்தையும் இசுலாமியச் சமயத்தையும் ஒளிமறை வில்லாமல் எதிர்த்துச் சமயப் பிரசாரம் செய்துவந்தனர். இதை ஆங்கிலேய அரசு போற்றியாதரிக்கவில்லை யென்றாலும், அவ்வாறு பிரசாரம் செய்வதற்கு தடைவிதிக்க வில்லை என்பதுமட்டும் மறுக்கமுடியாத உண்மை. மக்களைத் தங்கள் சமயக் கருத்துகளை ஏற்றுக்கொள்ள இணங்குமாறு செய்வதைத்தவிர அவர்களால் வேறு வழிகளில் சமுதாயத்தை மாற்ற முடியவில்லை. ஆயினும், மேற்கத்திய நாடுகளின் பயன்மதிப்புகளும், அறிவு விளக்கமும் இந்தியாவினுள் கொண்டுவந்து குவிப்பதற்குரிய வாய்க்காலாக அவர்கள் பயன்பட்டனர். அவை பல சமயப்பணியாளர் குழுக்களினால் நாடு முழுவதிலும் பரவலாகத் தெளிக்கப்பட்டன.

மொழியினைப்பற்றி அரசாங்கம் மேற்கொண்ட செயலே அடுத்த முக்கிய மாற்றமாகும். இந்தியா முழுவதிலும் இது வரையில் பாரசீக மொழியே ஆட்சிமொழியாகவும், நீதி மன்றங்களின் நடைமுறைகளில் பயன்படுத்தப்பட்ட சட்ட மொழியாகவும் இருந்துவந்தது. மீண்டும் இத் துறையில் பென்டிங் புதியதொரு வழியைக் காட்டினார். 1835ஆம் ஆண்டுமுதல் தொடர்ந்து பல சட்டங்களை இயற்றியதன் மூலம் ஆங்கிலமும் வட்டார மொழிகளும் பாரசீக மொழிக்கு அளிக்கப்பட்டிருந்த இடங்களில் அமர்த்தப்பட்டன. பாரசீக மொழி இவ்வாறு பையப்பையச் செல்வாக்கு அற்றுப்போய் விட்டது. அதைப் பதிவேடுகளில் பயன்படுத்திவந்த நிலை மாறியதோடு, வழக்கு மன்ற நடைமுறைகளில் அது பெற்றிருந்த சிறப்பிடத்தையும் இழக்க நேரிட்டது. ஆங்கிலம் அரசாங்கத்தின் அன்றாடச் செயல்முறைகளுக்குப் பயன் படுத்தப்படும் மொழியாகச் சிறப்பிடம் பெற்றது. பாரசீகம் நெடுங்காலம் சிறப்புடையதாகக் கருதப்பட்டமையால்

எவ்வாறு மக்களால் அது விரும்பிக் கற்கப்பட்டுவந்ததோ, அதைப்போன்று ஆங்கிலத்தைக் கற்பதால் உண்டாகக் கூடிய பயன்கருதி இந்திய மக்கள் இதுமுதல் அதைக் கற்கத் தொடங்கினர். சில ஆண்டுகளுக்குள்ளாகப் பொது வாழ்க்கைக்கு ஆங்கில அறிவு இன்றியமையாது தேவைப்பட்டது. ஆங்கில மொழியினைப் பயிலத் தொடங்கியதன் விளைவாக அதனுடைய இலக்கியத்தில் காணப்பட்ட கருத்துகள் சிலவற்றேடாகிலும் இந்திய மக்களுக்கு அறிமுகம் உண்டாயிற்று. எனவே, இச் செயல்களும்கூட ஓரளவிற்கு அவற்றின் விளைவுகளினுல் இந்தியாவை மேலைநாட்டுப் பண்புகளைப் பின்பற்றுமாறு செய்தது எனலாம்.

இத்தகைய மாற்றங்கள் எல்லாவற்றையும்விட முக்கியத்துவம் வாய்ந்தது புதிய கல்விக் கொள்கையாகும். முதலில் கம்பெனி பழைய கல்விமுறையையே போற்றி ஆதரித்தது. 1781ஆம் ஆண்டில் அராபிய, பாரசீக மொழிகளைப் பயிலுவதற்குக் கல்கத்தாவில் வாரன் ஹேஸ்டிங்ஸ் 'மதராசா' ஒன்றை நிறுவினுர். 1794ஆம் ஆண்டில் ஜோனதன் டங்கன், காசியில் ஒரு சமஸ்கிருதக் கல்லூரியை நிறுவினுர். 1813ஆம் ஆண்டில் இயற்றப்பட்ட சட்டத்தில் ஆண்டிற்கு ஓர் இலட்சம் ரூபாய் கல்விக்காக ஒதுக்கப்படுவதாகக் குறிப்பிடப்பட்டிருந்தது. 'இந்தியாவில் பிரிட்டிஷாரின் ஆட்சிக்குட்பட்டுள்ள பகுதிகளில் இலக்கிய வளர்ச்சிக்கும், கல்வியில் வல்லவர்களாக விளங்கிய இந்திய அறிஞர்களைப் போற்றியாதரிப்பதற்கும், அறிவியல் அறிவை இந்தியாவில் புகுத்தி, அதை மக்களிடையே போற்றி வளர்ப்பதற்கும்'[5] அப் பணத்தைப் பயன்படுத்த வேண்டும் என்று அச் சட்டம் அறிவித்தது. பத்தாண்டுகளுக்குப் பிறகு 'பொதுக் கல்விக்குழு' ஒன்று அமைக்கப்பட்டது. அக் குழு, பண்டைக் கல்வியையும், புதிய அறிவியல் கலைகளையும், ஆங்கில மொழியைப் பயிற்றுவிப்பதையும் போற்றியாதரித்தது. படிப்படியாகப் 'பயனுள்ள கல்வியைப்' பயிற்றுவிக்க வேண்டும் என்று இந்தியாவின் மாளிகையிலிருந்து ஊக்குவித்து வந்தவர்களுள், ஜேம்ஸ் மில் முதன்மையான இடத்தைப் பெற்றிருந்தார். அவருடைய செல்வாக்கு நாளுக்குநாள் வளர்ந்துகொண்டு வந்ததோடு, வலியத் தாக்கும் தன்மையும் பெருகிவந்தது. இந்தியக் கல்வி, இலக்கியம் முதலியவற்றால் எத்தகைய நன்மையும் இந்தியர்களுக்குக் கிடைக்காது என்ற கருத்து

[5] சட்டம் 53, மூன்றும் ஜார்ஜ், பிரிவு 155, விதி 43.

அவர்களைத் தன்முனைப்புடையவர்களாகச் செய்தது. இக் கருத்து வேற்றுமை மிகச் சிறிய ஒரு செய்தியைப் பரிசோதிக்கின்றபொழுது முக்கியத்துவம் பெறத் தொடங்கியது.[6] அது மெக்காலேயினுடைய புகழ்மிக்கதும், வரம்புமீறிய பெரும் பாரத்தையுடையதுமான செயல்முறைக் குறிப்பினைத் திட்டமாகத் தீட்டுமாறு தூண்டியது. அதனால் பென்டிங் முக்கியமான ஒரு முடிவிற்கு வரநேர்ந்தது. பென்டிங் 'பிரிட்டிஷ் அரசாங்கத்தின் மாண்புமிக்க குறிக்கோள் ஐரோப்பிய இலக்கியத்தையும் அறிவியலையும் போற்றி வளர்ப்பதாக இருக்கவேண்டும்........' என்று அறிவித்தார். எனவே, அவர், 'இனிமேல் இந்திய நாட்டு மக்களுக்கு ஆங்கில மொழியின்மூலம் ஆங்கில இலக்கியத்தையும் அறிவியலையும் போதிக்கவேண்டும்' என்று கருதியமையால், எளிதில் கிடைக்கக்கூடிய எல்லா நிதிகளையும் அதற்காகவே அவர் பயன்படுத்தினர்.[7] இந்த முடிவு கீழ்த்திசைக் கல்விக்கு அளித்துவந்த ஆதரவினை நிறுத்திக்கொள்ளுமாறு செய்தது. பின்னர் 1840ஆம் ஆண்டு ஆக்லண்டு பிரபுவினால் இம்முடிவு சிறிது திருத்தியமைக்கப்பட்டது.[8] ஆனால், இரண்டு முக்கியமான முடிவுகள் பென்டிங்கால் செய்யப்பட்டன. மேலைநாட்டு இலக்கியத்தையும் அறிவியலையும் பாடத் திட்டமாகக்கொண்ட கல்விமுறையினையே அரசாங்கக் கல்வி முயற்சிகள் போற்றியாதரிக்கவேண்டும் என்பதும், அக் கல்வியை ஆங்கில மொழியின்மூலம்தான் பயிற்றுவிக்க வேண்டும் என்பதும் அரசாங்கத்தின் குறிக்கோள்களாக முடிவு செய்யப்பட்டன. இந்த முடிவுகளின் விளைவாக நாடு முழுவதிலும் பல ஆங்கிலப் பள்ளிகளும் கல்லூரிகளும் தோன்றின. அவற்றை அரசாங்கம் நேரடியாகப் போற்றி ஆதரித்ததோடு, ஒருசில சமயச்சார்புடைய சங்கங்களும் அவற்றிற்குப் பொருளுதவி செய்துவந்தன. அதன் பிறகு,

[6] கல்கத்தாவிலுள்ள அரபிய மொழிக் கல்லூரியில் ஆங்கிலத்தைக் கட்டாயப் பாடமாக்கவேண்டும் என்னும் திட்டத்திற்குப் பலமான எதிர்ப்பு உண்டாயிற்று.

[7] மார்ச்சு 7-ல் 1835ஆம் ஆண்டில் நிறைவேற்றப்பட்ட தீர்மானம்.

[8] செயல்முறைக் குறிப்பு, 1839 நவம்பர் 24.

H. Sharp: Selections from Educational Records of the Govt. of India, I, 170-80.

தனியார் நிறுவனங்கள்மூலம் கல்வி நிலையங்கள் நிறுவப்பட்டன. அதற்கு அரசு உதவித்தொகையினை வழங்கிவந்தது. இவ்வாறு சட்டத்துறையிலும் ஆட்சித்துறையிலும் ஆங்கில மொழி பெற்ற செல்வாக்கினால், உயர்ந்த பதவிகளை அடைய விரும்புகின்றவர் யாராக இருந்தாலும், அவர் ஆங்கில மொழியினையும் மேலைநாட்டுக் கருத்துகளையும் அறிந்திருக்க வேண்டியது இன்றியமையாததாயிற்று. அதைப்போன்றே தனிப்பட்ட வகையில் வாணிகம் செய்வதற்கும் அவை இரண்டும் இன்றியமையாது தேவைப்பட்டன. இவ்வாறு புதிய கல்விமுறை மேலைநாட்டுக் கருத்துகளை வழங்கும் ஆற்றல்மிக்க பிரதிநிதியாக விளங்கத் தொடங்கியது. இவ்வாறு இந்தியாவில், பென்டிங் மேலைநாடுகளின் முதன்மையான திருத்தூதுவராகப் பொன்றுப் புகழ் பெற்றார்.

இத்தகைய திட்டங்களையும் செயல்களையும் இந்தியர்கள் எவ்வாறு வரவேற்றனர் என்பதை இப்பொழுது பார்க்கலாம். இதுவரையில் இந்தியரின் வாழ்க்கையிலும் சிந்தனையிலும் ஐரோப்பியச் செல்வாக்குகளின் விளைவுகள் மேற்போக்கானவையாகவும் நிலைபேறற்றனவாகவும் இருந்தன. போர்ச்சுகீசிய இயேசு சங்கத்தினரின் மூலமாக ஐரோப்பியக் கலைப் பண்புகள் முகலாயர் காலத்திய மக்களுக்குச் சிறிதளவு தெரிந்திருந்தமையால், அவர்கள் அதனிடத்து ஓரளவிற்கு ஆர்வம் கொண்டிருந்தனர். அதன்மூலம் ஐரோப்பியச் சிந்தனையினால், சிறிதளவிற்குக் கவரப்பட்டும் இருந்தனர்.[9] ஆனால், அவுரங்கசீபு காலத்துத் தனித்திருக்கும் கொள்கையின் செல்வாக்கினால், அவை செழித்தோங்காது பட்டுப்போயின. பதினெட்டாம் நூற்றாண்டில் இந்தியப் பெருங்குடி மக்கள் அமைதியளிக்கும் கலைகளைப் போற்றியாதரிப்பதற்குப் போதிய ஓய்வினை நெடுங்காலம் பெற்றிருக்கவில்லை. ஐரோப்பாவிடத்து அதுகொண்டிருந்த முக்கிய ஈடுபாடு அரசியல் சார்புடையதாக இருந்தது; அதுபெற்ற கடன்களும் படையியல் சார்புடையனவாக இருந்தன. துப்பாக்கிகளும், பீரங்கிகளும், தந்திரங்களும், கட்டுப்பாடான ஒழுங்குமுறையுமே அவர்களுடைய உள்ளத்தைக் கவருவனவாக

[9] முகலாயர் காலத்துச் சிற்றோவியங்கள் சில இன்றும் உள்ளன. அவற்றில் ஐரோப்பிய ஓவியக்கலை மரபுகளின் செல்வாக்கு ஓரளவிற்கு இடம்பெற்றிருக்கிறது. ஐரோப்பியக் கைத்தொழில் வினைஞர்கள் பயன்படுத்தப்பட்டுள்ளனர்.

இருந்தன. ஐரோப்பிய மதுக்களும், குதிரைகளும், ஊர்திகளும், இவற்றைப்போன்ற புறவாழ்க்கையின் சிறப்புமிக்க பொருள்களுமே அவர்களைக் கவர்ந்த பிற பொருள்களாகும். அக்காலத்தில் கட்டடக் கலைவடிவங்களில் சிறிதளவு கடன் வாங்கப்பட்டிருந்தது எனலாம். கல்கத்தாவின் நகர மாளிகைகளிலும், லக்னோ அரண்மனைகளிலும் மேலைநாட்டுக் கலைமுறைப் பண்புகளும் கீழைநாட்டுக் கலைமுறைப் பண்புகளும் கலந்து உருவாக்கப்பட்ட, புதியதொரு கலவைக் கட்டடக் கலை வடிவமுறை பின்பற்றப்பட்டிருப்பதைக் காணுகின்றோம். அவற்றில் கொரிந்தியன் தூண்களும், சாரசேனியரின் வளைவுகளும் பொருத்தமில்லாது நெருக்கப்பட்டிருந்தன. டேனியல் என்பவர் வரைந்துள்ள மகாதுஜி சிந்தியாவின் உருவப்பட ஓவியத்திலிருந்து, ஐரோப்பிய ஓவியக் கலைஞர்களுக்கு இத்தகைய ஓவியம் வரைவதில் ஏதோ சிறிது நாட்டம் இருந்துவந்தமை புலனாகின்றது. ஆனால், அங்கு அறிவுத்துறைத் தொடர்புகளோ, கலைத்துறைச் செல்வாக்கோ மிக அருகிய வழக்கினதாகக் காணப்படுகிறது. திப்புவின் 'விடுதலை மரம்' ஓர் அரசியல் விளம்பரப் பகட்டு வித்தையாகும். வாரன்ஹேஸ்டிங்சும் கர்னல் பாமரும் (Colonel Palmer) பெனிராம் பண்டிதருடனும், துப்பசல் உசேய்ன் கானுடனும் முறையே கொண்டிருந்த நட்புத்தான் உண்மையான தொடர்பு என்று கூறத்தக்கனவாகும். ஆனால், இச் செய்தி சுவையுடையதாக இருந்தாலும், பயனளிப்பதாக அமையவில்லை; சில ஆண்டுகட்கெல்லாம் அந் நட்புத் தேய்பிறையாயிற்று. இந்தியாவின் மேன்மக்கள், மேலைநாட்டுச் செல்வாக்குகளைக் கனிவோடு வரவேற்றுப் போற்றவில்லை. அதற்கு மாறாக அவை தங்கள் உள்ளத்தில் ஊடுருவிப் பாய முடியாத இரும்புள்ளம் வாய்ந்தவர்களாக அவர்கள் இருந்து வந்தனர்.

ஒரு மாற்றம் உண்டாவதனால் அது இந்தியப் பிரிட்டிஷ் உலகங்களுக்கு இடைப்பட்ட ஓரிடத்திலிருந்து தோன்றியது; பழைய மேன்மக்களுக்கும் புதிய நடுத்தர வகுப்பினருக்கும் இடையே ஓரிடத்திலிருந்து தோன்றியது என்று கூறலாம். புதிய நடுத்தர வகுப்பினர் பிரிட்டிஷாரைச் சுற்றிச்சூழ்ந்து வாழத் தலைப்பட்டமை இதற்கு ஒரு காரணமாகும். வங்காளத்தில் பிரிட்டிஷாருக்கும் நாட்டு மக்களுக்கும் இடையே பழகிவந்த மக்கள் கூட்டத்தினரால் எத்தகைய மாற்றமும் வரவேற்கப்பட்டது. அவர்கள் பெரும்பாலும் வாணிகத்தில் ஈடுபட்டவர்களாக இருந்தனர். எனினும்,

அவர்களுள் பெரும்பாலோர் நல்ல குடும்பத்தைச் சார்ந்தவர் களாகவும், சிறந்த கலையுணர்வு உடையவர்களாகவும் இருந்தனர். இந்த மக்கள் இந்தியாவிலிருந்த திறமைமிக்க ஐரோப்பியர்களோடு நெருங்கிய தொடர்புகொண்டிருந்தனர். அவர்களுக்கு ஐரோப்பியப் படைக்கருவிகளிடத்தோ, உண்டி வகைகளிடத்தோ, வாழ்க்கை முறைகளிடத்தோ அதிகமாக ஆர்வம் உண்டாகவில்லை. ஆனல், மேலைநாட்டுச் சிந்தனை யிடத்தும் கருத்துகளிடத்தும் அவர்கள் அளவுகடந்த ஈடு பாடுகொண்டனர். இவ் ஈடுபாடு முற்றிலும் பண்பாட்டுத் தொடர்புடையன என்று சொல்லுவதற்கு இல்லை. அது ஒரேசமயத்தில் செயல்முறைக்குகந்ததாகவும் கொள்கைச் சார்புடையதாகவும் இருந்தது. ஆங்கில மொழியில் சிறந்த புலமை பெற்ருல் அதனல் உலகியல் நன்மைகள் மிகப்பல உண்டாகும் என்று அவர்கள் நம்பினர். எனவே, அவர்கள் ஆங்கில மொழித் தேர்ச்சியில் பெருவிருப்பம் கொண்டு இருந் தனர். மேலைநாட்டு மக்களின் மறைபொருள் என்ன வென்பதை அறியவேண்டும் என்ற அவா அவர்களை ஆட்டிப் படைத்தது. இந்தியாவில் மிகவிரைவில் முடிவாக அரசினை நிறுவியதற்குக் காரணமாக இருந்த ஐரோப்பியருடைய ஆற்றலின் மறைபொருளை அறிவதில் அவர்கள் பேரவா உடையவர்களாக இருந்து வந்தனர். பத்தொன்பதாம் நூற் ருண்டின் தொடக்ககாலத்திய வங்காளத்தில் இவ்விரு இயக்கங்களும் கண்ணுக்கு நன்கு புலனுகும் வகையில் இயங் கத் தொடங்கின. அவற்றுள் ஒன்று மற்றென்றைப் போற்றி வளர்த்தது என்றே கூறலாம். அவ்விரு இயக்கங்களும் தங்கள் கொள்கையைப் போற்றி ஆதரிக்கும் தலைவர் ஒரு வரைத் தேர்ந்தெடுத்துக்கொண்டன. அவரே இராஜாராம் மோகன்ராய் என்பவராவர். அவர் கிருஷ்ணகாரைச் சேர்ந்த ஒரு பிராமணராவர். பிரிட்டிஷார் பக்கம் ஒரு புதிய இனத்தவர் தோன்றிக்கொண்டிருந்தனர். அவர்கள் அதிகார உலகத்திற்கும் புதிய நடுத்தர மக்களினத்திற்கும் இடைப் பட்ட நடுமையமாக இருந்து செயலாற்றி வந்தார்கள். உச்ச நீதிமன்றத்தோடு தொடர்புடைய நீதிபதிகளும் வழக்குரைஞர் களும் அப் பிரிவைச் சேர்ந்தவர்களாக இருந்தனர். அவர்களுள் சமஸ்கிருத அறிஞர் சர் வில்லியம் ஜோன்சு மாண்புமிக்க சான்ரோராவார். வில்லியம் காரேயின் தலைமையின்கீழ், பணியாற்றிய சமயப் பணியாளர் குழுக்கள் பல இருந்தன. சராம்பூரில் அவருடைய குழுவைச் சேர்ந்த பாப்டிஸ்ட் குழு ஒன்று இருந்தது. மேலும், டேவிட் ஹார் என்ற கைக்கடிகாரம் செய்யும் 'கட்டற்ற பகுத்தறிவாளர்' ஒருவர் இருந்தார்.

அவர்மூலம் பகுத்தறிவு இயக்கத்தின் செல்வாக்கு வங்காளத்தில் பரவலாயிற்று.

இந்தச் சக்திகள் அனைத்தும் சேர்ந்து படைப்பாற்றல் மிக்க இயக்கம் ஒன்றை உருவாக்குவதற்குரிய கூறுகளைத் தந்துதவின. அத்தகைய சூழ்நிலையில் உருவாக்கப்பட்ட மனிதரே இராஜாராம் மோகன்ராய் என்பவராவர். அவர் 1770ஆம் ஆண்டில் பிறந்தார். அவர் தம்முடைய குடும்பத்தில் 'உடன்கட்டையேறுதல்' என்னும் சடங்கு ஒன்று (அவருடைய அண்ணிக்குச்) செய்யப்பட்டபொழுது, அதைக் கண்டு வெறுப்புற்று, அவர் வீட்டைவிட்டு ஓடிவிட்டார். பழைய மரபுப்படி துறவியாக ஏழாண்டுகள் மெய்ப் பொருளைக் கண்டறிய, காடுமேடுகளிலும் மலைகளிலும் சோலைகளிலும் அவர் அலைந்து திரிந்தார். அவருடைய யாத்திரை அவரைத் திபெத்து வரையில் கொண்டுசென்றது. அவர் உபநிடதங்களில் பொதிந்துள்ள கொள்கைகளையும் கருத்துகளையும் கற்றறிந்ததோடு, பௌத்த, இசுலாமிய, கிறித்துவ சமயக் கருத்துகளையும் நன்கு கற்றுத்தேர்ந்தார். காலப் போக்கில் பத்து மொழிகளில் அவர் தேர்ச்சிபெற்றார். சமஸ்கிருதம், அராபியமொழி (குரானைக் கற்க), எபிரேயம் (விவிலியத்தின் பழைய ஏற்பாட்டைக் கற்க), கிரேக்கம் (புதிய ஏற்பாட்டைக் கற்க), பாரசீக மொழி, ஆங்கிலம் ஆகிய மொழிகள் அவர் கற்றுத் தேர்ந்தவற்றுள் முதன்மையானவை. அதன் பிறகு, அவர் அரசாங்க ஊழியராகப் பணியாற்றினார். அரங்கபூரில் திக்பி (Digby) என்பவருக்குச் செயலராகப் பணிபுரிந்தார். அப்பொழுது ஐரோப்பியச் சிந்தனையைப்பற்றி அறிந்து கொண்டார். 1814ஆம் ஆண்டில் அவர் கல்கத்தாவிற்குத் திரும்பிவந்து வாழத் தொடங்கினார். அடுத்த பதினாறு ஆண்டுகள், அவர் ஓய்வு ஒழிவின்றிப் பலவகைச் செயல்களில் ஈடுபட்டிருந்தார். அவர் ஆங்கில மொழியையும், மேலைநாட்டு அறிவினையும், சிந்தனையையும் கற்கவேண்டும் என்பதை வெளிப்படையாகப் பரிந்துரைத்துப் போற்றினார். அவர் இந்துக்கள் உருவ வழிபாடு செய்வதை வன்மையாகக் கண்டித்தார். அதைப் போன்றே மூடப் பழக்க வழக்கங்களான 'சதி' 'சாதி வேற்றுமை முறை' முதலியவற்றையும் அவர் சாடினார். அவர், கருத்து வேற்றுமைக்கு மதிப்பு அளிக்க வேண்டும் என்று கூறிவந்ததோடு அமையாமல், 'கருத்துரிமை' அளிக்க வேண்டும் என்பதை வற்புறுத்திக் கூறிவந்தார். மேலும், மோகன்ராய் இந்தியப் பத்திரிகையுலகத்தின் முன்னோடி

யாகவும் விளங்கினர். அவருடைய அரியதொண்டின் முடிமணியாக விளங்குவது அவர் 1830ஆம் ஆண்டு இங்கிலாந்திற்குச் சென்றமையாகும். அங்கு அவர் ஓய்வூதியம் பெற்றுள்ள முகலாய அரசரின் சார்பில் வழக்குரைத்தார்;[10] பிரிவி கவுன்சிலில் 'சதி'யொழிப்பிற்கு எதிராகச் செய்யப்பட்ட விண்ணப்பத்தை அவர் எதிர்த்துப் பேசினர். அங்கு அவர் 1833ஆம் ஆண்டில் இயற்கையெய்தினர்.[11] 1816ஆம் ஆண்டில் வித்தியாலயம் (இந்துக் கல்லூரி) ஒன்றை நிறுவியதும், தற்கால இந்தியச் செய்தித்தாள் ஒன்றைத் தொடங்கி நடத்தியமையும், சீர்திருத்த நோக்கம்வாய்ந்த சமயக் குழுவாகிய 'பிரமசமாஜம்' எனப்படும் தெய்வீகச் சங்கத்தைத் தொடங்கியமையும் அவருடைய செயற்கருஞ் செயல்களாகும். அவர், பாப்டிஸ்ட் சமயப் பணியாளர் ஒருவரை சமயக் கருத்துகளைத் தெளிவாக விளக்கிக் கூறி இறைவகையில் தனிஒருமைக் கோட்பாட்டிற்கு (Unitarianism) இணங்கச் செய்துவிட்டார். அவர் தம்முடைய நயமான சொல்லாற்றலால், இந்து சமயத்தின் மாபெரும் பழமைக் கோட்டையை முதன் முதலாகத் தாக்கினர்; அதுவும் அக் கோட்டைக்குள்ளிருந்துகொண்டே அவர் முதன் முதலாகத் தாக்கினர். அத் தாக்குதலில் அவர் வெற்றியும் பெற்ருர்.

இராஜாராம் மோகன்ராய் இறப்பதற்குள், கல்கத்தாவில் இந்து சமயத்தைச் சீர்திருத்த வேண்டும் என்னும் நோக்கத்தோடு பல இயக்கங்கள் தோன்றிவிட்டன. அவை அனைத்தும் இந்து சமயத்திற்குள்ளிருந்தே அதைச் சீர்திருத்தம் செய்ய வேண்டும் என்னும் நோக்கமுடையனவாக இருந்தன. அவையல்லாமல் கீழைநாட்டுப் பண்புகளுடன் மேலைநாட்டுப் பண்புகள் கலந்த கூட்டிணைப்பு முறையொன்றை உண்டாக்க வேண்டும் என்ற இயக்கங்களும், முற்றிலும் இந்து சமயத்தைத் தேவையற்றது என்று மறுத்தொதுக்கும் இயக்கங்கள் சிலவும் தோன்றிவிட்டன. சீர்திருத்த இயக்கத்திற்குத் தலைவராகத் தேவேந்திரநாத்

10 பேரரசர் இரண்டாம் அக்பரே அவருக்கு 'இராஜா' என்னும் பட்டத்தையளித்துப் பாராட்டியவராவார்.

11 1833ஆம் ஆண்டு, செப்டம்பர் 27ஆம் நாள் பிரிஸ்டலுக்கு அருகில் ஸ்டேபிள்டன் என்னும் இடத்தில் அவர் காலமானர். ஆர்னோ வேலி (Arno's Vale) கல்லறையின் வாயிலுக்கு அண்மையில் அவருடைய சமாதி ஒன்று இந்து சமயப் பாணியில் கட்டப்பட்டிருக்கிறது.

தாகூர் விளங்கினர். புரட்சிகரமான போக்குகளை டெரோசியோ (Derozio) தூண்டிவிட, திருச்சபை, பொது ஆட்சிக்குழுவின் உறுப்பினரான அலக்சாண்டர் டஃப் முன்னேற்றத்தை நாடி அழைத்துச் செல்ல, குறிப்பிடத்தக்க அளவிற்குப் பலர் கிறித்தவ சமயத்திற்கு மாற்றப்பட்டனர்.[12] 1820ஆம் ஆண்டிற்குப் பின்னர் அதே போக்கு, மிகக் குறைந்த வேகத்தில் பம்பாயிலும் அதன் பின்னர் தமிழகத்திலும் இயங்கியதன் தடையங்களை நாம் காண முடிகிறது. ஆனல், கல்கத்தாவிற்கு வெளியே உண்டான சுவைமிக்க வளர்ச்சியும் மாற்றமும் கலகத்திற்கு முற்பட்ட தில்லியில் உருவாயிற்று. அங்கு மௌலி நாசிர் அகமது, அல்தாப்பு உசேய்ன், ஹாலி என்னும் தலைவர்களின்கீழ் இஸ்லாமிய அறிஞர்கள் தில்லிக் கல்லூரியில் கூடி, மேலைநாட்டுச் சிந்தனைகளையும் தத்துவங்களையும் பேரார்வத்தோடு கற்றுக்கொண்டிருந்தனர். இவ்வாறு புதிய இந்தியாவிற்கு விதை விதைக்கப்பெற்றது; அதனுடைய முதல் நாற்றுத் தளிர்விட்டு முளைக்கத் தொடங்கின.

## ஆதாரங்கள்

இந்தப் பொருள்பற்றிய பொதுவான விளக்கத்தை L. S. S. O'Malley பதிப்பித்த 'Modern India and the West' (1941) என்னும் நூலில் காணலாம். டி. ஜி. பி. ஸ்பியர் எழுதியுள்ள 'இந்தியாவும், பாகிஸ்தானும், மேலைநாடுகளும்' (ஆங்கிலம்) என்னும் நூல் இப்பொருளுக்குரிய சிறந்ததொரு முன்னுரையாக அமைந்திருக்கிறது எனலாம். ஏ. யூசுப் அலி என்பவர் எழுதியுள்ள 'இந்தியாவின் பண்பாட்டு வரலாறு' (ஆங்கிலம்) என்னும் நூல் (தார்ப்போர்வாலா, 1940), குழப்பமுடையது என்றாலும், விரும்பத்தக்க கருத்துகளை நிறைய அதில் காணலாம். கே. எம். பணிக்கர் எழுதியுள்ள 'ஆசியாவும் மேற்கத்திய ஆதிக்கமும்' (ஆங்கிலம்) என்னும் நூல் (1953), இப் பொருளை ஆராய்ச்சிக் கண்கொண்டு அலசுகிறது.

தொடக்க காலத்திய பண்பாட்டு நோக்குடன் படிப்பதற்கு Lord Teignmonth: 'Life of Sir Jones' (1805). J. Forbes: 'Oriental Memoirs' (4 தொகு. 1813) என்னும் நூல்கள் பயன்படும்.

மக்களின் அன்புப் பணி நோக்கைப்பற்றி அறிவதற்கு பர்க்கின் நூல்களைப் பார்க்க. எவாஞ்சலிகன் கிறித்தவ

[12] கிறித்தவ சமயத்திற்கு மாற்றப்பட்டவர்களுள் குறிப்பிடத் தக்கவர் மதுசூதன் தத்தர் என்பவராவர்.

சமயத்தைப்பற்றி சர். ஆர். கூப்லண்டு, வில்பர்ஃபோர்சு (2 பதிப். 1945) ஆகியோர் நூல்களிலும் காணலாம். பென்டிங்கினுடைய ஆட்சிகாலத்தில் மேற்கொள்ளப்பட்ட சமுதாயச் சீர்திருத்தங்கள் மில்லின் 'வரலாற்றில்', தொகுதி ஒன்பதிலும், வில்சனுடைய வரலாற்றிலும், சி. போல்கர் (Boulger) என்பவர் எழுதியுள்ள 'வில்லியம் பென்டிங் பிரபு' (ஆங்கிலம்) என்னும் நூலிலும் (1897) விரிவாக விளக்கப் பட்டுள்ளன. 'சதி'யினைப்பற்றி அறிய இ. தாம்ப்சன் எழுதியுள்ள 'சதி' (1928) (ஆங்கிலம்) என்னும் நூலைப் பார்க்க. தக்கர்களைப்பற்றி, சர். W. சிலீமன்னும், மெடோஸ் டேய்லரும் சிறந்த நூல்களை எழுதியுள்ளனர். குழந்தைக் கொலையைப் பற்றி R. W. மூர் என்பவர் 'இந்துக் குழந்தைக் கொலை' (ஆங்.) என்னும் நூலினை (1860) எழுதியுள்ளார். அடிமை நிலையைப்பற்றியறிய 'பாராளுமன்ற நடவடிக்கைத் தாள் களை'ப் பார்க்க.

கல்வியைப்பற்றி எழுதப்பட்டுள்ள நூல்களில் A. Mayhew என்பவர் எழுதியுள்ள 'இந்தியாவின் கல்விமுறை' (ஆங்.) என்னும் நூலைப் பயன்படுத்திக்கொள்ளலாம். மேலும், 'Adam's Reports' (பதிப்பு. ஏ. பாசு. 1941) வங்காளத்தில் நிலவிய பழைய கல்விமுறையைப்பற்றிய விளக்கத்தைத் தருகிறது. சீர்திருத்தக்காரர்களின் நோக்கத்தில் சி. இ. டிரெவெலியன் எழுதியுள்ள 'The Education of the People of India' (1838) என்னும் நூல் அமைந்திருக்கிறது. கிறித்தவ சமயப்பணிக் குழுக்கள் செய்த தொண்டுகளை K. S. Latqourette என்பவர் எழுதியுள்ள 'History of Expansion of Christianity' (7 தொகு. 1938—45) என்னும் நூலில் பரக்கக் காணலாம். அப் பொருள்பற்றி K. Ingham என்பவர் 'Reformers in India' (1956) புதியதோர் ஆராய்ச்சி நூலை எழுதியுள்ளார்.

இந்திய மக்களின் எதிர்ச்செயல்கள்பற்றி அறிய முன்னர்க் குறிப்பிடப்பட்ட ஓமல்லே, யூசுப் அலி ஆகியோருடைய நூல் களைப் பார்க்க. இராம் மோகன் ராயின் ஆராய்ச்சி நூல் களையும், N. C. கங்கூலி எழுதியுள்ள 'Studies of Ram Mohan Roy' என்னும் நூலையும் (1936) பார்க்க. அதே தலைப்பில் அமல் ஹோம் (Amal Home) என்பவர் 1833-ல் ஒரு நூலினை எழுதியுள்ளார். சி. சி. கோஸ் என்பவர் பதிப்பித்துள்ள இராம் மோகன் ராயின் ஆங்கில நூல்களையும் (2 தொகு. கல்கத்தா, 1885) படிக்கலாம். மேலும், K. Ballhatchet எழுதி யுள்ள 'Social Policy and Social Change in Western India, 1817 to 1830' என்னும் நூலையும் (1957) பார்க்க.

# 8. டல்ஹௌசி

டல்ஹௌசி ஆட்சிக்கு வந்தது, பிரிட்டிஷ் இந்தியாவின் வரலாற்றில் புதியதொரு சகாப்தத்தைத் தொடங்கிவைத்தது. பத்து ஆண்டுகளுக்கு ஆப்கானியப் படையெடுப்பும், அதனுடைய விளைவுகளுமே முதன்மைபெற்று விளங்கின. இப்பொழுது பஞ்சாபின்மீது, இறுதியாகச் சிறிய படையெடுப்பு நடைபெற்றது. அதன் பிறகு, நெடுந்தொலைவிலுள்ள பர்மாவுடன் போரிட நேரிட்டது. இவ்விரு போர்களுக்குப் பின்னர், மீண்டும் இந்தியாவில் அமைதி நிலவியது. ஆனால், அது நிலைத்த இயல்பினையுடையதாக விளங்காது; இயங்கும் தன்மையுடைய செயல்முறைகளையுடையதாக இருந்தது. நாட்டிலே வாழ்ந்த மக்களுக்குப் போர்க்காலமே அமைதியுடையதாகத் தோன்றியது; தாங்கள் வாழுகின்ற காலம் அமைதியற்றுப் பல்வேறு வகையான இன்னல்களை இழைப்பதாக அவர்கள் கருதினர். இதற்கு முற்பட்ட அமைதிமிக்க பென்டிங், மெட்காஃப் ஆகியோரின் ஆட்சிகாலம் செயல் முறைகள் நிறைந்ததாகவும், முன்னேற்றப் பாதையில் விரைந்து செல்லுவதாகவும் இருந்தது என்பது மறுக்க முடியாத உண்மை. அக்காலத்தில் செய்யப்பட்ட புதிய மாறுதல்கள், டல்ஹௌசியின் ஆட்சிகாலத்தில் செய்யப்பட்டனவற்றைக்காட்டிலும் புரட்சிகரமானவை; தீவிரமானவை. ஆனால், மொத்தமாகப் பார்க்கிறபொழுது மக்களை மிகக் குறைந்த அளவிலேயே அவை பாதித்தன. அக்காலம் (பென்டிங்) செயல்கள் முற்றுப்பெற்ற காலமன்று; செயல்கள் பல தொடங்கப்பட்ட காலம். அக்காலம் பலவற்றைச் செய்யவேண்டும் என்ற நோக்கத்தோடு செயலில் இறங்கிய காலமேயொழிய, செயற்கரும் பெருஞ்செயல்களைச் சாதித்துவிட்ட சாதனைக் காலம் அன்று. ஏதோ ஒருவகையான நன்னிலையை நாடு திரும்பப் பெற்றுக்கொண்டிருக்கின்ற காலமாக அக்காலத்தைப்பற்றிய ஒருவகை எண்ணம் மக்க

ளிடையே ஊடாடிக்கொண்டிருந்தது. ஏனெனில், 1818ஆம் ஆண்டில் உண்டான அரசழிவிற்கும், அரசியல் குழப்பத்திற்கும் பின்னர், பென்டிங் ஆட்சிக்கு வந்தமையால் அவருடைய ஆட்சிக்காலத்தை மக்கள் அவ்வாறு கருதினர். டல்ஹௌசி யின் ஆட்சி தொடங்குவதற்குள் இந்த நினைவுகள் எல்லாம் மக்களுடைய மனத்திரையிலிருந்து மெல்ல மறைந்துவிட்டன. இன்னதென்று அறிந்துகொள்ள முடியாத குறிக்கோள்களை நோக்கி, அரசாங்கம் புதிய பாதையில் அவசரமாக முன்னேறிக்கொண்டு போகிறது என்பதுமட்டும் டல்ஹௌசி யின் ஆட்சிக்காலத்தில் தெளிவாகப் புலனாயிற்று.

மேலைநாட்டுப் பாணியில் அல்லது மேலைநாட்டுப் போக்கிலேதான் இந்தியாவில் செய்யப்படும் புதிய மாற்றங் களும் சீர்திருத்தங்களும் அமைந்திருக்கும் என்பதைப் பென்டிங்கினுடைய ஆட்சி தெளிவுபடுத்தியது. ஆனால், பண்டை இந்திய மரபுகளுக்குச் சலுகைகள் வழங்குவதன் மூலம், மேலைநாட்டிலிருந்து வீசிய சீர்திருத்தக் காற்றின் வேகத்தை ஆக்லண்டு சிறிது குறைத்தார். அப்பொழுது அரசினுடைய ஆற்றலையெல்லாம் உறிஞ்சுவதற்குப் போர் ஒன்று மூண்டது. ஆயினும், நீர்ப்பாசனத் திட்டங்கள், நிலவுடைமைத் திட்டம் போன்றவை தொடர்ந்து செயற் படுத்தப்பட்டன. ஆனால், வேறெங்கேயோ கருத்துக் கொள்கை வன்முறைப்போரில் ஈடுபடுவதற்கு உரிய சூழ் நிலையை உருவாக்குவதில் பெரிதும் இந்திய ஆட்சியாளர்கள் ஈடுபட்டிருந்தனர். இந்தியாவிற்கு வருகிறபொழுதே, டல்ஹௌசி, இந்தியாவை மேலைநாட்டு நாகரிகப் பாங்கின தாக மாற்றவேண்டும் என்னும் நோக்கத்தோடு வந்தவராவர். 'நீங்கள் மிகவும் ஆர்வத்தோடு போற்றி வளர்க்கும் உள் நாட்டின் முன்னேற்றத்திற்குரிய திட்டங்களைச் செயற் படுத்துவதும், அவற்றைப்பற்றி அறிவுரை கூறுவதுமே' தம்முடைய தலையாய கடமைகளாக இருக்குமென்ற நம்பிக்கையுடன் அவர் இந்தியாவிற்கு வந்தார். இந்தத் திட்டங்களெல்லாம் மேலைநாட்டுப் பிரதிநிதிகளின்மூலம் செயற்படுத்தக்கூடிய மேலைநாட்டு நாகரிகப் போக்கில் அமைந்தனவாக இருக்கும். டல்ஹௌசி என்றுமே தன்னைப் பயன்வழிக் கொள்கையினர் கூட்டத்தைச் சேர்ந்தவன் என்று சொல்லிக்கொள்ளவில்லை. எனினும், பொங்கியெழும் பேரலை யாகிய பயன்வழிக் கொள்கையினரின் உலோகாயதத்தி னுடைய கொள்கைகள் நிறைந்தவராகவே டல்ஹௌசி காணப்பட்டார். உண்மையில் அவர் பொது ஆட்சிமுறைத்

திருச்சபையின் உறுப்பினராக இருந்தார். நாகரிகத்தினைப் போற்றி வளர்க்க வேண்டுமானால், மேலைநாட்டுச் சீர்திருத்தங்கள், மேலைநாட்டு ஆட்சிமுறை, மேலைநாட்டு நிலையங்கள் ஆகியவற்றையே போற்றியாதரிப்பதாகும் என்று அவர் நம்பினார். எவ்வாறு மேலைநாட்டு படைக் கலன்கள் இந்தியாவினுடைய போர்க் கருவிகளைக் காட்டிலும், ஆற்றலும் திறமையும் உடையவை என்பதை மெய்ப்பித் தனவோ, அதைப்போன்றே இவையெல்லாம் இந்தியாவி னுடைய ஆட்சிமுறை, நிலையங்கள் முதலியவற்றைக் காட்டிலும் உயர்ந்தனவாகவும் சிறந்தவையாகவும் இருக்கு மென்று அவர் கருதினார். இந்தியாவினுள் உள்ளார்ந்த புத்துயிர்ப்பை உண்டாக்குவதில் மெக்காலே கொண்டிருந்த நம்பிக்கையில், டல்ஹௌசிக்கு ஐயமிருந்து வந்தபோதிலும், அவர் மேலைநாட்டு முன்மாதிரிகளை அமைக்கவேண்டும் என்று கூறிய கருத்தில் டல்ஹௌசிக்கு முழு நம்பிக்கை இருந்து வந்தது. அவருடைய மனநிலை அவருடைய நம்பிக்கைகளுக்கு ஏற்றவண்ணம் அமைந்திருந்தது. அதனுடன் அதிகாரத் துறையில் நன்மை செய்யப்போகிறோம் என்ற ஒருவகை யான செருக்கும், இந்தியாவிலுள்ள பிரிட்டிஷாரிடத்து வளர்ந்துவந்த தன்னம்பிக்கையும், அரசின் செயல்முறை களில் ஒருவகையான கடினத் தன்மையைப் புகுத்தப் போகிறோம் என்ற எண்ணமும் அவரிடத்து நிறைந்து காணப் பட்டன. புதிதாக நாடுகளைக் கைப்பற்றவேண்டும் என்ற தன்னுணர்வோடு, அறநெறிச் சார்புடைய அன்புப்பணி செய்யப்போகிறோம் என்ற உணர்ச்சியும் போட்டிபோட்டுக் கொண்டு அவரிடத்து வளர்ந்தன. இந்த அறவியல் உணர்ச்சி மிகுதியாகச் சேர்ந்திருந்தமையால் உயர்வு மனப்பான்மை பேரளவிற்கு அவருடைய உள்ளத்தில் ஆழப் பதிந்திருந்தது. எச்சரிக்கையுடன் நடந்துகொள்ளவேண்டும் என்ற பழைய உணர்ச்சியும், ஒரு துணைக்கண்டத்தின் பிரச்சினைகளுக்கு முன்னர்ப் பணிவுடன் நடந்துகொள்ளுதலாகிய மனப்போக்கும் இவருடைய காலத்திற்குள் படைத்துறை வெற்றியென்னும் வெள்ளத்திற்குள் மூழ்கிப்போய்விட்டன. செயல்முறைச் சாதனைகள் அனைத்திலும் தங்களுடைய நாகரிகமே தலைசிறந்தது என்ற நம்பிக்கை கொண்டிருந்த மக்களுடைய தன்னம்பிக்கையாகிய வெள்ளத்திற்குள் அத் துணைக்கண்டத் தின் பிரச்சினைகள் மூழ்கிப்போய்விட்டன. முன்னேற்றத்திற் கான மறைபொருளைக் கண்டுபிடித்துவிட்டதன் சிறப்புத் தகுதியால், ஆண்டிற்காண்டு கம்பெனியின் தலைமைப் பண்பு பெருகிக்கொண்டே போயிற்று.

கல்கத்தாவிற்குள் காலெடுத்து வைத்தபொழுது, டல்ஹெளசிக்கு முப்பத்தாறு வயதுகூட நிறையவில்லை. அவர் தோற்றத்தில் குள்ளமாகவும் கட்டமைப்புவாய்ந்த உடலினை யுடையவராகவும் இருந்தார். ஆனால், பிறரை அடக்கியாளும் ஆற்றல் உடையவராக அவர் தோன்றினார். வற்றாத பேரூக்க மும், செயலாற்றும் திறனும், ஆதிக்கம் செலுத்தும் மனப் பான்மையும் உடையவராக அவர் விளங்கினார். அவர் இந்தியாவிலிருந்து திரும்பிவந்தபொழுது, அவருக்கு இங்கி லாந்தின் அமைச்சரவையில் ஓரிடம் கொடுக்கப்பட்டது. ஆனால், அவர் அதை ஏற்றுக்கொள்ளாமல் மறுத்துவிட்டார். தன்னுடன் பணியாற்றும் ஒத்தநிலை அதிகாரிகளோடு, இணங்கிப் பணியாற்ற முடியாத அளவிற்கு உடல்நலம் கெட்டு விட்டிருப்பதை அதற்கு ஒரு காரணமாக அவர் காட்டி யுள்ளார். வாணிகக் கழகத்தின் துணைத்தலைவராகப் பதவி யேற்று, பீலின் அமைச்சரவை ஆட்சிபுரிந்தபொழுது ரெயில் வேக்களின் கட்டணங்கள் திடீரென்று உயர்ந்துவிட்டபொழுது அவர் அரும்பாடுபட்டமையால் அவர் தனிப்பெரும் சிறப் பினைப் பெற்றார். ஸ்காட்லாந்து மொழியில் வழங்கும் 'பெருங் குடிமகன்' என்னும் சொல்லுக்குச் செயல்முறையிலும், கண்டிப்பான பொருளிலும் கூறப்படும் பொருள் விளக்கத்திற் கேற்ப அவர் பெருங்குடிமக்களுக்கே இயல்பாக உரிய இறுமாப்புடையவராக விளங்கலானார். அவருக்கு வாழ்க்கை யில் கிடைக்காத பேறு ஒன்றே ஒன்றுதான். உடல்நல மில்லாக் குறையே அவருடைய வாழ்வின் பெருங்குறை. ஆயினும், அவருடைய உடம்பினைத் தேய்ந்துபோகுமாறு செய்த பேரளவினதாகிய உழைப்பின் சாதனைகளை அவர் தம்முடைய சளைக்காத மனவுறுதியினால்தான் சாதிக்க முடிந் தது. அவர் 1860ஆம் ஆண்டில், தம்முடைய நாற்பத் தெட்டாம் வயதில் காலமானார்.

அவர் இந்தியாவிற்கு வந்த மூன்று மாதங்களுக்குள் பஞ்சாபில் புதியதொரு நெருக்கடி உண்டாயிற்று. முல்தானிய திவான் முல்ராஜ் என்பவர் கலகம் செய்தார். அக் கலகத்தினை அடக்கியொடுக்கவேண்டிய பொறுப்பு டல்ஹெளசிக்கு உண்டாயிற்று. 1848ஆம் ஆண்டு வேனிற் காலத்தில் உடனடியாக நடவடிக்கையெடுக்கத் தவறியதனால், தற்காப்பிற்காகத் தனிமனிதர் ஒருவரால் நம்பிக்கையற்ற நிலையில் செய்யப்பட்ட அக் கலகம் தேசிய எழுச்சியாக மாறியது. அவ் எழுச்சியை அடக்குவதற்கு மேற்கொள்ளப் பட்ட படையெடுப்பு, 1849ஆம் ஆண்டு மார்ச்சு மாதம்

குஜராத்தில் முடிவுற்றது. அந் நாட்டினைக் கம்பெனியின் அரசோடு சேர்த்துக்கொள்ளுவது குறித்து ஒரு முடிவிற்கு வந்ததை, இப் பிரிவின் நான்காம் இயலில் கண்டோம். ஆனல், டல்ஹௌசி நாட்டினைக் கைப்பற்றியதனுலும் அதை இணைத்துக்கொண்டதனுலும் அதற்கு எத்தகைய குறையும் உண்டாகாதவாறு பார்த்துக்கொண்டார். புதியதாகச் சேர்த்துக்கொள்ளப்பட்ட மாநிலத்தின் ஆட்சிமுறை அமைப்பினை அவரே நேரடியாகக் கண்காணித்துவந்தார். 1849ஆம் ஆண்டுமுதல் 1947ஆம் ஆண்டுவரை நிலைபெற்று விளங்கிய பிரிட்டிஷாரின் பஞ்சாப் மாநிலத்திற்கு அவரே எல்லா வகையிலும் உண்மையான தந்தையாக விளங்கினர். அவர் அம் மாநிலத்தினை நிர்வகிக்க ஆட்சிமுறைக் கழகத்தினை நிறுவினர். அக் கழகத்திற்கு ஹென்றி லாரென்சு தலைவராக நியமிக்கப் பட்டார். ஜான் லாரென்சும், மான்செலும் அக் கழகத்தின் இளைய உறுப்பினர்களாக அமர்த்தப்பட்டனர். 1851ஆம் ஆண்டில் ஹென்றியின் இடத்தில் இராபர்ட் மான்ட் கோமெரி என்பவர் அமர்த்தப்பட்டார். ஜானே தம்முடன் இணங்கிப் போகக்கூடியவர் என்று டல்ஹௌசிக்குத் தெரிந்தது. ஹென்றி கற்பனையுள்ளம் படைத்தவராகவும் நெறிமுறைகளில் குறைபாடுடையவராகவும் டல்ஹௌசியால் கருதப்பட்டார். ஆனல், மூத்த சகோதரனைப் புறக்கணிக்க முடியாத நிலையில் இருந்தமையால், அவர் ஹென்றிக்கு உதவியாக ஒரு கழகத்தை அமைத்து, உறுப்பினர்களுக்கு அதிகாரத்தைப் பகிர்ந்து அளித்தார். பஞ்சாபின் தலைவர்களோடு கலந்து ஆலோசிப்பதும், நாட்டில் உள்ள படைகளைக் கலைப்பதுமாகிய அரசியல் பணியை டல்ஹௌசி அவருக்கு அளித்து இருந்தார். ஜானிடத்து நிலத்தீர்வைத் திட்டத்தை கவர்னர்-ஜெனரல் ஒப்படைத்து இருந்தார். நீதி நிருவாகத் துறையை அமைக்கும் பணியை மான்செலிடம் அவர் பகிர்ந்தளித்திருந்தார். புத்தாக்கப் பணியில் காட்டிய ஆர்வத்தினுலும், பலவகையான சிறப்புமிக்க பிரச்சினைகளையும் வழக்குகளையும் எதிர்த்துச் சமாளித்தமையாலும் இரண்டாண்டுகளுக்கு அக் கழகம் பேரும் புகழும் பெற்று விளங்கியது. 1851ஆம் ஆண்டு ஒன்றுகச் சேர்ந்து ஓரிடத்தில் சகோதரர்கள் இருவரும் பயன் உண்டாகுமாறு வேலை செய்யமுடியாது என்பதை அவர்களிருவரும் தங்களுக்குள்ளே முடிவுசெய்து கொண்டனர். அந்த வாய்ப்பினைப் பயன்படுத்திக்கொள்ள விரும்பிய டல்ஹௌசி, ஹென்றியை இராசபுதனத்திற்கு அரசியல் பேராள் தலைவராக (Agent General) அனுப்பிவைத்தார். பஞ்சாபின் தலைமை

ஆணையராக (Chief Commissioner) ஜானினை அமர்த்தி, அவரிடத்து டல்ஹௌசி எல்லா அதிகாரங்களையும் ஒப்படைத்தார்.

ஜான் 'தம்மை முழுவதிலும் புரிந்துகொண்டுள்ளார்... எனவே, அவர்தாம் அச் சகோதரர்கள் இருவருள் சிறந்தவர்' என்று டல்ஹௌசி கருதினர். இந்தப் புகழ்மிக்க பிரிட்டிஷ்-இந்திய அதிகாரிகளுக்கு இடையே நடந்த பூசலுக்கு, இரு சகோதரர்களின் மனப்பாங்குமட்டும் காரணமன்று; அதற்கு மேலும் சில சக்திகள் வேலைசெய்து இருக்கின்றன. ஜான் தம்முடைய தொடக்க காலத்தில், தில்லி அரசிற்குட்பட்ட பகுதியில் அதிகாரியாகப் பணிபுரிந்துள்ளார். அப் பகுதியில் ஊராட்சி சமூகங்கள் ஆற்றல்மிக்கனவாக இருந்தன; மிதமான வருவாயும் முரட்டியல்புமுடைய ஜமீன்தார்கள் பலர் அங்கு இருந்தனர். அவர்கள் அரசாங்கத்தோடு நேரடியாகத் தொடர்பு கொண்டிருந்தனர். அத்தகையவர்களோடு நெருங்கிப் பழகியும், சிக்கலான பிரச்சினைகளைத் தீர்ப்பதில் அறிவையும் ஆற்றலையும் பயன்படுத்தி ஜான் நல்ல அனுபவம் பெற்றிருந்தார். அவர் உழவர்களின் நண்பராக விளங்கினர். பஞ்சாபின் சீக்கியத் தலைவர்களினுல் உழவர்கள் சிறு பயன் கூடப் பெறவில்லை. மேலும், அத் தலைவர்கள் தங்களுடைய மக்களையே கொடுமைப்படுத்துகிறவர்கள் என்றும், புதுப் பணக்காரர்கள் என்றும், அரசர் ஸ்டீபனின் ஆட்சிக்காலத்தில் இங்கிலாந்தில் இருந்த நிலப்பிரபுக்களாகிய கொடுங்கோலர்களைக்காட்டிலும் இவர்கள் சிறந்தவர்கள் அல்லர் என்றும் அவர் கருதினர். மற்றொரு பக்கம் வடமேற்கு எல்லைப்புற மாநிலங்களிலேயே ஹென்றி தம்முடைய தொடக்க காலத்திய பணியினை ஆற்றினர். அங்கு வட்டாரத் தலைவர்களோடும் நிலக்கிழார்களோடும் தொடர்புகொள்ள வேண்டியவரானர். அத் தலைவர்களும் நிலக்கிழார்களும் ஆயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட அரசமரபு ஒன்றின் கால் வழியிலே வந்தவர்கள் தாங்கள் என்னும் குடிப்பெருமை பாராட்டுபவர்களாக இருந்தனர். எனவே, அவர் பண்டை மரபினைப் போற்றியதோடு அமையாமல், இயலுமானல் அதைப் போற்றிக் காக்கவும் விரும்பினர். இவ்வாறு ஹென்றி, நாட்டின் தலைவர்கள்மூலம் பணிபுரிய விரும்பினர்; ஜான் அதேசமயத்தில் அத் தலைவர்கள் இல்லாமலேயே அல்லது அவர்களுடைய ஆதரவைப் பெருமலேயே பணிபுரிய விரும்பினர். பெருங்குடி மக்களின் இசைவைப் பெற்றும், அவர்களுடைய ஆதரவைக் கொண்டும் உள்ளிருந்தே

சீர்திருத்தம் செய்யவேண்டுமா? அல்லது நேர்முறையான ஆட்சிமுறைச் செயல்களினாலும் அதிகாரத்தினாலும் அவர்களை அடக்கியொடுக்கி, சீர்திருத்தம் செய்யவேண்டுமா? என்பதே அவர்களுக்கிடையே எழுந்த பிரச்சினையாகும். தம்முடைய கொள்கைகளுக்கேற்ப ஹென்றி நாட்டைக் கைப்பற்றி, பிரிட்டிஷ் இந்தியாவோடு இணைத்துக்கொள்ளுவதை வன்மையாக எதிர்த்தார். ஜான் பஞ்சாபைக் கைப்பற்றி பிரிட்டிஷ் அரசோடு இணைத்துக்கொள்ளவேண்டும் என்னும் கருத்துடையவராக இருந்தார். ஆனால், ஹென்றி பத்தாம் பசலிக் கொள்கையுடையவர் என்றோ, பஞ்சாப் எந்நிலையில் இருந்ததோ அந்நிலையிலேயே அதை விட்டுவைக்கவேண்டும் என்றோ கருதுகின்றவர் என்று நாம் அவரைப்பற்றி நினைப் போமானால் அது தவறாகும். அவரும் அவருடைய தம்பியைப் போன்றே சீர்திருத்தங்களைச் செய்யவேண்டும் என்பதில் அசைக்கமுடியாத நம்பிக்கை கொண்டிருந்தார். அவர்களிருவருமே சீர்திருத்தவாதிகளாக இருந்ததோடு, மேலைநாட்டு நாகரிகப் பண்பாட்டினைப் பஞ்சாபில் புகுத்துவதில் பேரார்வம் கொண்டவர்களாகவும் இருந்தனர். இரண்டு போர்களுக்கிடையே சீர்திருத்தம் செய்வதில் முனைந்து நிற்குமாறு தூண்டிய ஹென்றியின் ஆர்வமே, சீக்கியரின் எதிர்ப்புக்குக் காரணமாக இருந்தது என்று கூறலாம். அவ்வார்வமே இரண்டாவது போர் மூளுவதற்குரிய சூழ் நிலையை உருவாக்கியதோடு, பஞ்சாபை பிரிட்டிஷ் அரசோடு சேர்த்துக்கொள்ளுமாறு தூண்டியது எனலாம். இரு சகோதரர்களையும் இணைக்கும் சங்கிலியாகச் சீர்திருத்த நோக்கம் இருந்தது என்றால், அது தவறாகாது. இறுதியில் அவர்களுக்கு இடையே பிளவு உண்டானதற்குப் பின்பற்ற வேண்டிய முறைகள் பற்றித் தோன்றிய கருத்து வேற்றுமையே காரணமாகும்; செயலாற்றவேண்டும் என்று அவர்கள் தீட்டிய திட்டங்கள் அவர்களுடைய பிரிவிற்குக் காரணமாகா.

இவ்வாறு ஜான் லாரென்சு பஞ்சாப் மாநிலத்தைப் புதிதாகத் திருத்தியமைத்தார். அவரால் தேர்ந்தெடுக்கப்பட்ட ஐம்பத்தாறு துணையதிகாரிகள் அவருக்கு உதவியாக இருந்து, ஓயாது பணிபுரிந்தனர். இவ்வாறு அவர் 'பஞ்சாப் ஆட்சிமுறைக் குழுவின்' தலைவராகத் தந்நிகரற்று விளங்கலானார். திரைக்குப் பின்னால் அதைத் தோற்றுவித்து நெறிப்படுத்திவந்தவர் டல்ஹௌசி என்பதும் இங்குக் குறிப்பிடத்தக்கதாகும். ஹென்றி லாரென்சு பஞ்சாப்

ஆட்சிமுறைக் குழுவினை உருவாக்கியபொழுது உண்டான 'துன்பத்தைப் பொறுத்துக்கொண்டு பணியாற்றிய ஊழியராவர்.' அவரைப் போற்றினர்களேயொழிய யாரும் பின்பற்றவில்லை. பிற்காலத்தில் தோன்றிய கிப்லிங் (Kipling) அதனுடைய புகழுரையாளரும் கவிஞருமாவார்.[1] அது தொடக்கத்திலேயே தனக்கென்று அமைப்புமுறைத் தனியியல்புக் கூறுடையதாக (Ethos) விளங்கத் தொடங்கியது. அதனை ஒரு கவர்னர்-ஜெனரல் முதன்முதலில் நிறுவினர் என்னும் உண்மைக்கேற்ப அதனுடைய முதல் தலைவராகப் பதவி உயர்வு தரப்பட்டவர் அதனை உருவாக்கிய காலத்தில் தலைவராக இல்லாத மற்றொருவர் என்பதும் இங்குக் குறிப்பிடத்தக்கது. அதற்கு ஆர்வத்தோடு கொடுக்கப்பட்ட விளம்பரம், அம் மாநிலம் பெற்றிருந்த போரியல் முக்கியத்துவம், வேனிற்காலத் தலைநகருடன் அது நிலவியல் அடிப்படையில் கொண்டிருந்த 'நெருங்கிய தொடர்பும், அவற்றின் எண்ணிக்கைக்கு இயைந்துவர இயலாத பெரும் வீதத்தில் செல்வாக்கினையும் புகழினையும் பெற்றுச் சிறந்தது. வெல்லெஸ்லி அல்லது ஹேஸ்டிங்ஸ் பிரபு காலத்திய மனிதர்கள் புகழினைப் பெறுவதற்குரிய வழியாக, அரசியல் பணியினை விரும்பி மேற்கொண்டதைப்போன்று, பிற்காலத்தில் இந்திய ஆட்சிப் பணியாளர் குழுவில் பஞ்சாபிலுள்ள கிளையில் பணியாற்றுவதையே குறிக்கோளாகக் கொண்டிருந்தனர். அதைப் பெருமையாகவும் கருதினர். பஞ்சாப் குழுவினரின் முதல் விதி நேரடியாக ஆட்சிபுரிவது என்பதாகும். அரசாங்கம் எச் செயலைச் செய்வதாக இருந்தாலும் மக்களோடு நேரடியாகத் தொடர்புகொள்ள வேண்டுமேயொழிய, அரசுக்கும் மக்களுக்கும் இடையே தரகர்களுக்கு இடம் கிடையாது. மக்களுக்கும் அரசுக்கும் இடையே தலைவர்களோ, வரித்தண்டுவோரோ, நகரத்துப் பஞ்சாபியரோ வருவார்களானல் அவர்களை ஐயுறவோடு அதிகாரிகள் நோக்கியதோடு அமையாமல் மீண்டும் அவர்கள் திரும்ப ஒருமுறை வரவொட்டாமல் செய்துவிடுவர். இம்முறையோடு 'நேரடித் தொடர்பு' என்னும் கொள்கையை அவர்கள் கடைப்பிடித்து வந்தனர். மக்களுடைய நல்லியல்புகளையும் தீய பண்புகளையும் அறிந்துகொண்டு, அதிகாரிகள் மக்களோடு

[1] கிப்ளிங் எழுதியுள்ள 'இந்திய கதைகளுள்' வருகின்ற கதைத் தலைவர்கள் பெரும்பாலும் பஞ்சாபிலும், எல்லைப் புறப் பகுதிகளிலும் பணியாற்றிய அதிகாரிகளாகவே காணப்படுகின்றனர்.

நெருங்கிப் பழகவேண்டும். அப்படிப் பழகுகின்றபொழுது அவர்களுடைய நேர்மைப் பண்பில் பிறழாமலும், அவர்களுடைய ஆற்றலினல் மக்களைத் தொந்தரவுபடுத்தாமலும் இருக்க அதிகாரிகள் பயிற்சி பெற்றனர். இப் பண்புகளையெல்லாம் ஜான் லாரன்சு தில்லி இராச்சியத்தில் அதிகாரியாக இருந்தபொழுதே நன்கு அனுபவத்தின்மூலம் பெற்றிருந்தார். அந் நற்பண்புகளை அவர் என்றுமே இழந்துவிடவில்லை. இத்தகைய நேரடித் தொடர்போடு, மிக உயர்ந்த கடமையுணர்ச்சியும் சேர்ந்து அவர்களுடைய தொழிலை ஓர் அன்புப் பணியாகத் திருத்தொண்டாகக் கருதுமாறு செய்தது. மெட்காஃப் காலத்திலிருந்த மிகச்சிறந்த மனிதர்கள் எல்லாம் தங்களைத் தாங்களே கடவுளின் கையிலுள்ள விளையாட்டுப் பொம்மைகளாகக் கருதிக்கொண்டனர். ஆனல், அவர்களுக்குக் கடவுளின் திருவுள்ளக் குறிப்பு புரியாத புதிராக இருந்தது. எனவே, அது தங்களை எங்கே அழைத்துச் செல்லும் என்பதைப்பற்றி உறுதியாகச் சொல்லமுடியாதவர்களாக அவர்கள் இருந்தனர். பஞ்சாப் ஆட்சியாளர் குழுவைச் சேர்ந்தவர்களுக்கு அத்தகைய ஐயப்பாடுகள் ஒன்றும் கிடையாது. அவர்கள் பணிபுரிந்த இறைவனின் நோக்கங்களை அவர்கள் தெய்வீகத் தன்மையுடையதாக்கினர். மேலைநாட்டுப் பாணியில் ஆளுதல், நாகரிகம் அடையச் செய்தல், புதிய வாழ்க்கை முறையைப் புகுத்துதல் என்னும் அவர்களுடைய திருத்தொண்டினைத் தன்னம்பிக்கையோடு செய்துகொண்டே அவர்கள் முன்னேறிச் சென்றார்கள். பஞ்சாபியரையும், அவர்களுடைய உளம்கனிந்த ஒழுகலாற்று முறையையும், அவர்கள் வீர விளையாட்டுகளில் கொண்டிருந்த நாட்டத்தையும், அவர்களுடைய எளிய 'மனிதனுடைய மனிதன்' என்னும் தோற்றத்தையும் பஞ்சாபின் அதிகாரிகள் உளமார நேசித்தனர். எனவே, அப் பஞ்சாபியர் கடவுளே தம்முடைய நன்மைக்காக அவர்களை ஆட்சிபுரியுமாறு அனுப்பியுள்ளார் என்னும் உறுதியான எண்ணம் உடையவர்களாக வாழ்ந்தனர்.

இந்த ஒழுக்கநெறிப் பண்போடும், ஆற்றலைச் செயல்படுத்தும் முறைப் பண்போடும் சேர்ந்து மற்றப் பண்புகளும் இயங்கின. பஞ்சாபின் அதிகாரிகளிடத்து ஒரு சிறிது இரக்கமற்ற பண்பு இருந்துவந்ததை, 'முன்னிகழ்ச்சியாகிய எச்சரிக்கை இல்லாமல், எடுத்துக்காட்டுகளினல் மனம் நெகிழாமல் சீக்கிய இனம் போருக்கு அழைத்துவிட்டது. ஐயன்மீர், என்னுடைய சொல்லின்படி, அவர்கள் செயல்களுக்காகப்

போரினைப் பெறவேண்டும். அப்போர் பழிவாங்கும் எண்ணத்துடன் நடைபெற வேண்டும்' என்று டல்ஹௌசியின் சொற்களே தெரிவிக்கின்றன. அப் பண்பினை 1919ஆம் ஆண்டு அமிர்தசரசில் நடைபெற்ற சுவைமிக்க கிளைக்கதை நிகழ்ச்சி (ஜாலியன்வாலாபாக் படுகொலை) வரையில் பஞ்சாபில் தோன்றிய கலகங்களையும் கலகக்காரர்களையும் இரக்கமற்ற போக்கில் மிகக் கடுமையாகவே பிரிட்டிஷார் தண்டித்துவந்துள்ளனர். பஞ்சாபின் ஆட்சிக்குழு தன்னுடைய திருத்தொண்டில் நம்பிக்கையுடையதாகவும், செயல்முறையில் மெய்ப்பித்துக்காட்டி நம்பவைப்பதாகவும் இருந்தது. ஆனால், என்றுமே அது தன்னுடைய நிலையைப்பற்றி—பதவியைப் பற்றி உறுதியான எண்ணம்கொண்டிருந்ததில்லை. அதனுடைய பணி சிறிது நுட்பமாக இருந்தது. அப் பண்பு ஓரளவிற்கு அதனுடைய பெரும் புகழிற்குக் காரணமாக அமைந்தது எனலாம். ஆனால், நெருக்கடி உண்டாகின்றபொழுது அதனுடைய நிலை உறுதியற்றதாகப்போனதோடு, அதனுடைய நிலையான வாழ்க்கைக்கு எதிராகவும் அப் பண்பு செயற்பட்டது. பஞ்சாபினைத் தற்காலப் பண்பினையுடையதாக மாற்றியமையே அந்த நுட்பமான பண்பின் மாபெரும் சாதனையாகும். மேலும், இந்தியாவில் மிகுந்த வளம் கொழிக்கும் நாடாகப் பஞ்சாபை மாற்றிய பெருமையும் ஆட்சிப்பணியாளர் குழுவினருக்கேயுரியதாகும். அதனுடைய மக்களிடையே, ஒருமைப்பாடுடைய பன்முகச் சமுதாயத்தினை வளர்ப்பதற்கு வித்திடத் தவறியமை, அதனுடைய தவறுகளில் ஒன்றாகும். அவற்றின் நல்லியல்புகளின் பயனாக பஞ்சாப் இந்தியாவின் தலைமை இடத்தைப் பெற்றது. அதனுடைய குறைகளுக்குத் தண்டனையாகக் கொடுக்கப்பட்டதாக அமைந்தது 'இந்தியப் பாகிஸ்தான்' பிரிவினை.

நாட்டில் அமைதி நிலவிய பகுதிகளுக்கென்று வளர்ந்து வந்த விதிமுறைகள், 1859ஆம் ஆண்டுவரை ஜான் லாரன்சு தலைமையில் செயலாற்றிய குழுவினருக்குத் தடையாக இல்லை. ஒழுங்குமுறை விதிகளுக்குட்படாத மாநிலங்களுக்குப் பஞ்சாப் சிறந்ததோர் எடுத்துக்காட்டாகும். மிக எளிய பொருள் வழக்கு விதிமுறைத் தொகுப்பும், குற்றவியல் வழக்குமுறைத் தொகுப்பும் நடைமுறைக்கேற்ப அங்கு வகுக்கப்பட்டன. அவற்றைச் செயற்படுத்திய அதிகாரிகள் ஒவ்வொருவருக்கும் அவர்களுடைய விருப்பத்திற்கேற்ற வகையில் செயலாற்றுவதற்கு, மிகப் பரந்தவகையில் உரிமைகள் வழங்கப்பட்டன. இத்தகைய நெறிமுறைகளோடு பணியாற்றியதனால், விரை

விலேயே மாபெரும் முன்னேற்றத்தை அங்குக் காண முடிந்தது. மக்களிடம் இருந்துவந்த படைக்கலன்கள் எல்லாம் பறிக்கப்பட்டன. வடமேற்கு எல்லைப்புறம் தக்கமுறையில் பாதுகாப்பிற்குரிய அரண்களையுடையதாக அமைக்கப்பட்டது. எங்குப் பார்த்தாலும் சாலைகள் அமைக்கப்பட்டன. அவற்றுள் தலைசிறந்தது லாகூரிலிருந்து பெஷாவர் வரையிலும் அமைக்கப்பட்ட பெருவழி நெடுஞ்சாலையாகும். அதன் பிறகு மக்களுடைய நலவாழ்வு விறுவிறுப்புடன் பேணப்பட்டது. நிலவரி பாதியாகக் குறைக்கப்பட்டது. பக்கத்தில் உள்ள தில்லியரசில் பின்பற்றப்பட்ட முறைகளை ஒட்டி, சிற்றூர் நிலத் தீர்வைத் திட்டம் செயற்படுத்தப்பட்டது. அடிமை முறை' 'தகி', கொள்ளையிடுதல் போன்ற பழங்காலக் கொடுமைகளெல்லாம் அடக்கியொடுக்கப்பட்டன. உள்நாட்டிற்குள் சரக்குகளின் புடைபெயர்ச்சிக்கு விதிக்கப்பட்டுவந்த வரி நீக்கப்பட்டதன் மூலம், வாணிகம் போற்றியாதரிக்கப்பட்டது. இறுதியாகப் பெரிய நீர்ப்பாசனத் திட்டங்கள் தொடங்கப் பட்டன. அத் திட்டங்களே பஞ்சாபினை இந்தியாவின் சோலை வனமாக்கியது. அமைதியான தொழில்களைப் பின்பற்றிச் செய்வதற்கு ஆற்றலினைப் பயன்படுத்தியமையே அதனுடைய விளைவாகும். அல்லது சிறப்புமிக்க பஞ்சாபியப் பொருள்கள் போரிலிருந்து அமைதிக்கு மாற்றப்பட்டதென்றே நாம் சொல்லலாம். குறுகிய காலத்தில் கிடைத்த பரிசு மிகச் சிறந்ததாக இருந்தது. 1857ஆம் ஆண்டிற்குள் அந்தப் புதிய முறை, படையியல் வீரவுணர்ச்சிமிக்க மக்களின் உள்ளத்தைக் கவர்ந்துவிட்டது. படைவீரர்கள் கலகம் உண்டானபொழுது இம் மாநிலம் அமைதியாக இருந்தது; பற்றுறுதியுடைய தாகவும் இருந்தது. அச் சமயத்தில் கலகத்தினை அடக்கி யொடுக்க சீக்கியர்கள் அரசிற்குப் பேருதவி புரிந்தனர்.

டல்ஹௌசி பேரளவில் ஈடுபட்ட மற்றொரு போர் பர்மீயப் போராகும். இப் போரைப்பற்றி மூன்றும் இயலில் விரிவாக விளக்கியுள்ளேன். இங்கு அதனுடைய விளைவுகளை மட்டும் குறிப்பிட்டால் போதும். அப் போரை நடத்துவதில் டல்ஹௌசி மிகுதியான பொறுமையுடனும் முன்னெச்சரிக்கை யுடனும் நடந்துகொண்டார். கீழைப்பர்மா வரையில் உள்ள பகுதிகளை மட்டும், பிரிட்டிஷ் அரசோடு இணைத்துக்கொள்ளும் மதிநுட்பத்தோடு தம்முடைய செயல்களை அவர் குறைத்துக் கொண்டார். பஞ்சாபில் ஆட்சிமுறையை நிறுவுவதில் அவர் எத்துணை அளவிற்கு அக்கறையும் ஈடுபாடும் கொண்டிருந் தாரோ, அதைப்போன்றே இம் மாநிலத்தைக் கட்டிக்காப்ப

திலும் அவர் கருத்தைச் செலுத்திவந்தார். சர் ஆர்தர் பயர் (Sir Arthur Phayre) என்பவரிடத்து அவர் 'கீழைப்பகுதி லாரன்சைக்' கண்டார். அவ் ஆர்தரின் புதிய திட்டங்களைச் செயற்படுத்தும் செயல்கள் அனைத்திலும், கவர்னர்-ஜெனரல் லாரென்சுடன் கொண்டிருந்ததைப்போன்றே நெருங்கிய தொடர்பினையுடையவராக இருந்துவந்தார்.

டல்ஹௌசியின் அடுத்த சிறப்புமிக்க செயல்களுக்கு உரிய அரங்கமாக இந்தியத் தனியரசுகள் பயன்படுத்தப் பட்டன. பிரிட்டிஷாருக்கும் இவ் இந்தியத் தனியரசுகளுக்கும் இடையே தொடக்க காலத்தில் இருந்துவந்த தொடர்பினை சர் W. லீவார்னர் என்பவர் 'வன்முறை வட்டமாக இருந்தது' என்று குறிப்பிட்டுள்ளார். அத் தொடர்பு 1813—18ஆம் ஆண்டுகளில் ஹேஸ்டிங்சின் திட்டம் செயற்படுத்தப்பட்ட வரையில், தொடர்ந்து நடைமுறையில் இருந்துவந்தது. தனியரசுகள் அனைத்தும் அயல்நாடுகளாகவே கருதப்பட்டு மதிப்புக் கொடுக்கப்பட்டன. அவற்றின் உள்நாட்டு செயல் முறைகளில் பிரிட்டிஷார் தலையிடவே இல்லை. அத் தனியரசு களுக்கும் ஆங்கிலேய அரசிற்கும் இடையே இருந்துவந்த தொடர்பின் இரண்டாவது பருவம் டல்ஹௌசியின் ஆட்சியின் தொடக்கம் வரை நிலவியிருந்தது. அதனை நாம் 'கீழ்ப்பட்ட தனிமை'க்காலம் என்று கூறலாம். மூன்ருவது பருவத்தினைக் 'கீழ்ப்பட்ட கூட்டரசின்' காலம் எனலாம். இக் காலம் டல்ஹௌசியின் திட்டங்களாலும், அவற்றின் விளைவுகளி ஞலும் உருவாக்கப்பட்டவையாகும். இரண்டாவது பருவத்தில் பிரிட்டிஷ் அரசு உயர்தலைமைப் பண்பினைக் கொண்டாடியது. அதாவது, அத் தனியரசுகள் ஒன்றையொன்று வன்முறையில் தாக்க முடியாதனவாக இருந்ததைப்போன்றே, வெளிநாட்டுத் தாக்குதல்களிலிருந்தும் பாதுகாக்கப்பட்டுவந்தன. இதன் விளைவாக அரசர்கள் எல்லாம் உள்நாட்டு அரசப் பகைமைக்கு ஆளாகாமல் காப்பாற்றப்பட்டனர். மேலும், இந்தியாவின் செயல்முறைகள் எதிலுமே தலையிடுவதற்குரிய பங்கினைப் பெருதவர்களாய்த் தனித்து நிற்குமாறு அவர்கள் விடப் பட்டனர். பல அரசர்கள் அன்ருட ஆட்சித்துறை விவகாரங் களைக் கவனிப்பதில் வெறுப்புற்றனர். அதனுல் பலவகைத் தீமைகள் பெருகின. அவற்ருல் குடிமக்கள் அல்லற்பட்டனர். அவர்களுடைய துன்பத்தைப் போக்குவதற்கு யாதொரு பரிகாரமும் செய்யப்படவில்லை. ஆங்கிலேய அரசோ, அவர்க ளுடைய உள்நாட்டுச் செயல்முறைகளில் தலையிட விரும்ப வில்லை. ஆனுல், மக்களினத்தின் நல்வாழ்வில் கருத்தைச்

செலுத்த வேண்டும் என்னும் கொள்கை அவர்களை வற்புறுத்தியதனுல், அவர்கள் அத் தனியரசுகளின் உள்நாட்டுச் செயல்களில் தலையிடவேண்டிய நெருக்கடி உண்டாயிற்று. எல்லை மீறிய குறைபாடுடைய ஆட்சியைத் திருத்துவதற்கு வேறு வழி இல்லாமல்போயிற்று. தலையிடாக் கொள்கையினுல் பக்குவப்படுத்தப்பட்ட கம்பெனி சிற்சில சமயங்களில் தனியரசுகளின் வரம்பற்ற கொடுஞ்செயல்களைக் கண்காணிக்க நேரிட்டது. அதன் விளைவாக அவ் அரசுகளுள் சிலவற்றைக் கைப்பற்றித் தங்களுடைய இராச்சியத்தோடு இணைத்துக் கொள்ள நேரிட்டது. இதற்கு எடுத்துக்காட்டாகப் பெண்டிங் கூர்க்கினையும் மைசூரையும் இணைத்துக்கொண்டதையும், 1831 ஆம் ஆண்டில் அயோத்தியை அவர் அச்சுறுத்தியதையும் நாம் குறிப்பிடலாம்.

டல்ஹௌசி இந்தியாவிற்கு வந்தபொழுது குற்றங்களும் கொடுமையும் நிறைந்த ஆட்சி, பல தனியரசுகளில் பரவிக் கிடந்தன. அதேசமயத்தில் மக்களினத்தின் துன்பத்தைத் துடைத்து அன்புப் பணிசெய்ய வேண்டும் என்னும் கொள்கையும் பேராற்றல் உடையதாக விளங்கிற்று. இந் நிலையில் அவர் தம்முடைய சமநிலைக் கூற்று ஒன்றைக் கூடுதலாகச் சேர்த்தார். அதன் விளைவாக நாடுகளைக் கைப்பற்றித் தம்முடைய அரசுடன் இணைத்துக்கொள்ளும் ஆட்சிமுறைக் கொள்கை உருவாயிற்று. அக் கொள்கையின் ஒரு பகுதியே புகழ்மிக்க 'நாடிழக்கும் கொள்கை' (Doctrine of Lapse) என்பதாகும். அக்காலத்திய இந்திய அரசுகளின் ஆட்சிமுறையினைக் காட்டிலும் பிரிட்டிஷாரின் ஆட்சி பலவகையில் சிறப்புடையதாகும் என்று டல்ஹௌசி மனமார நம்பினுர். அவர் புதிதாக உருவாக்கிய இந்தியாவில் தனியரசுகள் எல்லாம் வழக்கிறந்தனவாகப் போய்விட்டன வென்று அவர் கருதினுர். அரசர்களின் ஆட்சிமுறைக் கேடுகள்பற்றி அவரிடத்தில் குறைகள் கூறப்பட்டபொழுதெல்லாம், அதை அவர் மிகுந்த வருத்தத்தோடு கேட்டுக்கொண்டார். இத்தகைய முறைகேடான அரசுகள் இருப்பது இந்தியாவில் நடைபெறும் பிரிட்டிஷார் ஆட்சிக்குக் களங்கத்தை உண்டாக்குவதாகும் என்று அவர் கருதினுர். பண்டைய உரிமைகளைப் பற்றி அவர் கவலைப்படாதவராகவும் இல்லை; இரக்கம் காட்டாதவராகவும் இல்லை. ஆனுல், மற்றச் சூழ்நிலைகள் இவ் உரிமைக்கு ஈடாகவோ, மிகுதிப்பட்டோ இருக்கும்பொழுது இயலுமானுல் அவ் அரசுகளைக் கைப்பற்றிக்கொள்ளுவதே சாலச் சிறந்தது என்று அவர் எண்ணினுர். 'அவருடைய

முன்னோர்களெல்லாம் தவிர்க்க முடியுமானால் தனியரசுகளைக் கைப்பற்றுவதைத் தவிர்க்கவேண்டும்' என்னும் கொள்கையுடன் செயலாற்றினர். தனியரசுகளைக் கைப்பற்றி, அவற்றைத்தம் அரசோடு இணைத்துக் கொள்ளுவதற்குச் சட்டம் இடம் தருமானால், அவற்றைக் கைப்பற்றிக்கொள்ளுவதே மிகவும் பொருத்தம் உடையதாகும் என்னும் பொதுவான ஒரு கொள்கையுடன் அவர் பணியாற்றினார்.

இவ்வாறு நாடுகளைக் கைப்பற்றும் ஆட்சிமுறைக் கொள்கையின் ஒரு பகுதியே 'நாடிழக்கும் கொள்கை' என்பதாகும். அத்தகைய சூழ்நிலைகளில் எந்த அரசும், தான் பொதுவாகத் தனிப்பெரும் தலைமை பெற்றிருக்கிறது என்று கருதுமானால், அந்நாட்டின் தனியரசுகளின் செயல்முறைகளில் தலையிட முயலுவது இயற்கை. அதைப்போன்றே டல்ஹௌசியும் செயல்படத் தொடங்கினார். இத்தகைய சூழ்நிலைகளில் ஒன்றுதான் 'அரசுரிமைபற்றி' எழுந்த கிளர்ச்சிகளாகும். தனிப்பெரும் தலைமையுடையதாக இருந்து வந்த பிரிட்டிஷ் அரசு, ஓர் அரசருக்கு அடுத்து ஆட்சிக்கு வர வேண்டியவர்களுக்கு இளவரசுப் பட்டம் கட்டிச் சிறப்புச் செய்வதை வரவேற்றது. 'அரசுரிமை' வரையறுக்கப்பட வேண்டும் என்பது அதனுடைய கொள்கையாகும். அக் கொள்கையின் துணைவிதியாக ஒரு கருத்தினை பிரிட்டிஷ் அரசாங்கம் போற்றிப் பின்பற்றியது. எந்தெந்த அரசுகளில் 'அரசுரிமைக்குரியவர்களைத்' தேர்ந்தெடுக்க முடியவில்லையோ, அதன் காரணமாக எந்தெந்த அரசுகளில் குழப்பமும் கொந்தளிப்பும் உண்டாகின்றதோ, அந்தந்த அரசுகளின் விவகாரங்களில் ஆங்கிலேய அரசு தலையிட்டு அமைதியை நிலைநாட்டுவதை அவர் போற்றிப் பின்பற்றினார். அம் முறையின் விளைவாகத்தான் அவர் பரத்பூர், குவாலியர் அரசுகளின் உள்நாட்டுச் செயல்முறைகளில் தலையிட்டார். ஆனால், மக்களால் ஏற்றுக்கொள்ளத்தக்க அரசுரிமையுடையவர் இல்லாமற்போனால் என்செய்வது? இத்தகைய நெருக்கடியைப் போக்கிக்கொள்ளுவதற்கு இந்துச் சட்டம் 'மகண்மை' கொள்ளுதலை ஓர் உபாயமாகக் கூறிவந்தது. இவ்வாறு 'மகண்மை' கொள்ளப்பட்டவர்கள் சட்டப்படி தங்களை மகண்மை எடுத்துக்கொண்ட தந்தையர் சொத்தில் பங்குபெறும் உரிமை பெற்றிருந்தனர். இந்தப் பழக்கத்தினை மேற்கொள்ளுகிற தனியரசுகள், கவர்னர்-ஜெனரலுடைய அங்கீகாரத்தைப் பெறவேண்டும் என்று டல்ஹௌசி வற்புறுத்தினார். கவர்னர்-ஜெனரல் அதற்குத் தம்முடைய

இசைவினை அளிக்கவில்லையென்றால், அவ்வரசு 'நாடிழக்கும் கொள்கையின்' மூலம் தனிப்பெரும் தலைமையுடைய அரசிற்கு உரியதாகிவிடும் என்று அவர் அறிவித்தார். இந்த விதிக்கு இரண்டு கட்டுப்பாடுகள் இருந்தன. அவற்றுள் ஒன்று மகண்மையை வழக்காற்று நெறிப்படி ஒப்புக்கொள்ளும் இந்து அரசகுடிக்குப் பின்பற்றப்பட்ட செயல்முறை. இரண்டாவதாக, நேரடியாக பிரிட்டிஷாருக்குக் கீழ்ப் பட்டிருக்கும் அரசுகள், உரிமையுடைய தனியரசுகள் என்று இரண்டுவகையாகத் தனியரசுகள் பாகுபாடு செய்யப் பட்டமையாகும். பிரிட்டிஷாரால் நேரடியாக உண்டாக்கப் பட்டனவாகவோ, அங்கீகரிக்கப்பட்டனவாகவோ உள்ள அரசுகளே 'கீழ்ப்பட்டிருக்கும் அரசுகள்' என்று கருதப் பட்டன. அவற்றுள் மதிப்பும் உரிமையும் உடன்படிக்கை களின்மூலம் வரையறுக்கப்பட்டிருந்தன. அல்லது இதற்கு முன்பு அவை வேறோர் அரசிற்குக் கீழ்ப்பட்டிருந்தன. அவ் வரசினை பிரிட்டிஷார் தங்களுடைய அரசோடு இணைத்துக் கொண்டும் இருக்கலாம்.[1] ஆனால், செயல்முறையில் அவ் வளவு எளிதில் இவற்றை வேறுபடுத்திக் காட்டுவது இயலாத செயலாகும். நாடிழக்கும் கொள்கையினை மிகத் தீவிரமாகச் செயற்படுத்தியமையும் இந்து அரசர்களினுடைய இந்தியாவை அடியோடு அழித்தொழித்துவிட்டிருக்காது. எனினும், அவற் றிற்கு இடையே இருந்துவந்த வேறுபாடு உண்மையானதாக இருந்தது. நாடிழக்கும் கொள்கையை டல்ஹௌசி செயல் படுத்தியது, இந்து அரசர்கள் அனைவரும் நம்பிக்கையை இழப்பதற்குப் போதிய அடிப்படையை அளித்தது. வேறு சாக்குபோக்குகளை அடிப்படையாகக்கொண்டு அவர் செய லாற்றியது இஸ்லாமிய அரசர்களிடையேயும் அமைதி யின்மையை உண்டாக்கின.

இச்செயல்முறைகளினால் அல்லற்பட்ட தனியரசுகள் பல. 1848ஆம் ஆண்டில் சதாராவும், 1849ஆம் ஆண்டில் ஜெயபுரியும் சம்பல்புரியும், 1850ஆம் ஆண்டில் பகத்தும், 1852ஆம் ஆண்டில் உதயபுரியும், 1853ஆம் ஆண்டில்

[1] முதலாவதற்கு எடுத்துக்காட்டு, தொங்கு, பிரோஸ்பூர், சதாரா, மைசூர் ஆகியவை.

இரண்டாவதற்கு எடுத்துக்காட்டு, ஜான்சி.

உரிமையுடைய தனியரசு எடுத்துக்காட்டு, குவாலியரும் பொதுவாக இராசபுத்திர அரசுகளும்.

ஜான்சியும், 1854ஆம் ஆண்டில் நாகபுரியும் டல்ஹௌசியின்
புரட்சிகரமான கொள்கைகளாலும் செயல்முறைகளாலும்
அல்லற்பட்டன. கரௌலியைக் (Karauli) கைப்பற்ற
வேண்டும் என்ற திட்டத்தைத் தாயகத்தின் அரசினர் அனு
மதிக்கவில்லை. கானிங் பிரபுவின் ஆட்சிக்காலத்தில்
பகத்தும், உதயபுரியும் பழைய அரசமரபினரிடத்துத் திருப்பி
ஒப்படைக்கப்பட்டன. 165 சதுரக் கற்களைக் கொண்ட
மிகச்சிறிய அரசு ஜெயபுரியாகும். தற்காலத்திய மத்தியப்
பிரதேசத்தில் மகாநதியாற்றங்கரையில் ஒழுங்கற்றுக்
கிடந்தது சம்பல்புரி. சதாரா, ஜான்சி, நாகபுரி ஆகியவையே
முக்கியமாக நாடிழக்கும் கொள்கையில் சிறப்பிடம்
பெற்றனவாகும். சிவாஜியின் மரபிலே நேரடியாக
வந்தவர்களுடைய நன்மைக்காக, 1818ஆம் ஆண்டில்
ஹேஸ்டிங்ஸ் பிரபுவினால் சதாரா அரசு புதுப்பிக்கப்பட்டது.
அது 'கீழ்ப்படிந்த அரசுக்குள்' ஒன்றாகச் சிறப்புறத் தொடங்
கியது. ஆனால், அதைக் கைப்பற்றித் தங்களரசுடன்
சேர்த்துக்கொண்டமை மராட்டியரிடையே வெறுப்புணர்ச்சி
யெழக் காரணமாயிற்று. பந்தல்கண்டிலுள்ள ஜான்சி
தனியரசு முதலில் பேஷ்வாக்களின் ஆதிக்கத்திற்குட்
பட்டிருந்தது; பின்னர் பிரிட்டிஷாருடைய ஆதிக்கத்திற்குட்
பட்டு விளங்கலாயிற்று. அதனுடைய அரசர் தாம் இறப்
பதற்குச் சற்று முன்னர் 'மகண்மை' எடுத்துக்கொண்டார்.
அம் மகனைப் பிரிட்டிஷார் அவருடைய மரபுவழி மகனாகவும்,
அரசராகவும் ஒப்புக்கொள்ள மறுத்தபொழுது, வீரவுணர்வு
மிக்க அரசிக்கு அது எரிச்சலையுண்டாக்கிற்று. பின்னர்,
அவ்வரசி சிறிது விருப்பமில்லாதிருந்தாள். பின்னர் படை
வீரர் கலகத்தின்பொழுது அவள் முதன்மையான பங்கினை
ஏற்று பிரிட்டிஷாருக்கு எதிராகப் பல வீரதீரச் செயல்களைப்
புரிந்தாள். முற்றிலும் அழிந்தொழியாது எஞ்சிநின்ற மூன்று
பெரிய மராட்டியத் தனியரசுகளுள் நாகபுரி ஒன்று. அதில்
நான்கு இலட்சத்துக்கு மேற்பட்ட எண்ணிக்கையுடைய
மக்கள் வாழ்ந்து வந்தனர். இந்த அரசும் மறுக்கமுடியாத
அளவிற்குக் 'கீழ்ப்படிந்த' ஒன்றாக இருந்து வந்தது.
அதைக் கைப்பற்றியமை மராட்டியருடைய உள்ளத்தைப்
புண்படுத்தியதோடு, ஆட்சிபுரியும் தகுதிவாய்ந்த ஒரு பெரிய
அரச வகுப்பினரின் நன்மைகளுக்கு ஊறு விளைவித்தது. இந்த
அரசுகளின் விவகாரங்களில் செய்யப்பட்ட செயல்கள்
அனைத்தும் டல்ஹௌசியின் நோக்கத்தில் நேர்மையானவை
யாகவே தோன்றின. ஆனால், உடனடியாகப் பாதிக்கப்
பட்டவர்களுக்கு ஆழமான மனநிறைவின்மையை அது

உண்டாக்கிற்று; மிகப் பரந்த வட்டாரங்களில் எதிர்ப் புணர்ச்சியை வளர்த்தது.

டல்ஹௌசியின் கைப்பற்றுதல் திட்டத்தின் இரண்டாவது முக்கியப் பகுதி, கொடுங்கோலாட்சி புரியும் தனியரசுகளின் உள்நாட்டு விவகாரங்களில் தலையிடல் வேண்டும் என்பதாகும். நாடிழக்கும் கொள்கையினால் கைப்பற்றப்பட்டதுபோக, எஞ்சியிருந்த தனியரசுகளுள் சிலவற்றை, அவற்றின் கொடுங்கோலாட்சி காரணமாகக் கைப்பற்றிக்கொண்டதை டல்ஹௌசி நேர்மையான செயலென்றே எண்ணித்தார். முற்றிலும் வலிவிழந்து ஊக்கங் குலைந்துபோன ஆளும் இனத்தினருக்குத் தீங்கு செய்வதனால் உண்டாகும் தீமைகளைக் காட்டிலும், பெருந்திரளான மக்களுக்கு நேரடியான நல்லதோர் ஆட்சியை அமைத்துத் தருவதனால் உண்டாகக்கூடிய நன்மைகள் மிகப்பலவாக இருந்தமையால், டல்ஹௌசியின் இச் செயல் தவறாகாது என்று கருதப்பட்டது. எனவே, அரசர்களின் வெறுப்புணர்ச்சி, அவர்களுக்குக் கொடுக்கப்பட்ட நல்லதொரு தண்டனையாகவே கருதப்பட்டது. கொடுங்கோலாட்சி கணிசமான காலத்திற்கு ஆழ்ந்து வேரூன்றிய ஒன்றாக ஓரரசில் இருந்துவருகிறதென்றால், உடனே, டல்ஹௌசி அதன் விவகாரத்தில் தலையிடுவதைத் தம்முடைய குறிக்கோளாகக் கொண்டிருந்தார். அயோத்தி இந்தக் கொள்கைக்குப் பொருந்திவந்த காரணத்தினாலேயே, அது கைப்பற்றப்பட்டது. 1813ஆம் ஆண்டில் சாதட் அலி இறந்தது முதல், அவ் அரசின் ஆட்சிமுறை நிலையாக நலிவுற்றுக் கொண்டே வந்தது. 1818ஆம் ஆண்டுமுதல் அயோத்தியின் அரசர்களும் நவாபுகளும் அசைக்கமுடியாத பற்றுறுதியுடையவர்களாக இருந்துவந்தமையால் 1831ஆம் ஆண்டில் பென்டிங் மிகவும் கடுமையாக எச்சரித்தமையும், 1847ஆம் ஆண்டு ஹார்டிஞ்சு எச்சரித்தமையும் செயலில் ஈடுபடாமல் தடுத்து வந்தது எனலாம். இராசபுத்திர வட்டத்தின் தலைவர்கள் (Taluqdars) ஒழுங்கற்றவர்களாகவும், கீழ்ப்படியாத முரடர்களாகவும் இருந்தனர். அவர்களுடைய அவைகள் ஊதாரித்தனமானவையாகவும், ஒழுக்கக்கேடானவையாகவும், திறமையற்றவையாகவும் இருந்தன. 1851ஆம் ஆண்டில் அவற்றின் நிலையைப்பற்றி சிலீமென் படைத்த அறிக்கையில் அவர் ஒழுங்கின்மையையும், நிலைத்த கொடுங்கோலாட்சியையும் சிறந்த சொற்சித்திரங்களாகத் தீட்டியுள்ளார்.[1]

[1] W. H. சிலிமென், 'Diary of a Journey through Oudh'.

டல்ஹௌசியே அதனுடைய ஆட்சிமுறைப் பொறுப்பைத் தாமே எடுத்துக்கொள்ள வேண்டும் என்ற எண்ணத்தைத் தெரிவித்தார். ஆனால், இறைமாட்சிக்குரிய பட்டப் பெயரினை அரசரிடத்திலேயே விட்டுவைக்கவேண்டும் என்றும் அவர் கருதினார். ஆனால், கம்பெனியின் இயக்குநர்கள் அவருடைய கருத்தினைப் புறக்கணித்தனர். அவர்கள் நேரடியாக அதைக் கைப்பற்றி, கம்பெனியின் அரசோடு இணைத்துக்கொள்ளுமாறு கட்டளையிட்டனர். ஆட்சியினை எடுத்துக்கொண்டமை பாராட்டத் தக்கதாகும். ஆனால், அதை எடுத்துக்கொண்ட முறை—சாதித்த முறை—இந்து அரசர்களிடையே எத்தகைய வெறுப்பையும் மனக்கசப்பையும் வளர்த்ததோ, அதைப்போன்ற நிலையினையே இஸ்லாமிய அரசர்களிடத்திலும் உண்டாக்கியது. அரசுகளை மறைமுகமாகக் கைப்பற்றும் இச்செயல்கள், அவர்களுடைய நம்பிக்கையின்மையைப் பெருக்குமாறு செய்தது. 1853ஆம் ஆண்டில் ஐதராபாத்தில் நிறுத்திவைக்கப்பட்டிருந்த கம்பெனியின் துணைப் படைக்காகச் செலுத்தவேண்டிய ஆண்டுக் கட்டணத்தை நைசாம் செலுத்தவில்லை. அப் படையைக் கட்டிக்காப்பதற்காகும் செலவிற்குரிய தொகையைப் பேராரின் வருவாயிலிருந்து கம்பெனி பெறுமாறு செய்வதற்கு, அப் பேராரைக் கம்பெனியிடத்து ஒப்படைக்கவேண்டிய நெருக்கடி நிலை, நைசாமுக்கு உண்டாயிற்று.

அத் திட்டத்தின் மூன்றாவது பகுதியாக அரசர்களுக்குப் பெயரளவில் இருந்துவந்த இறைமாட்சியை அழித்தொழித்தமையாகும். டல்ஹௌசி அப் பட்டப் பெயர்கள் எல்லாம் வழக்கிறந்து போய்விட்டன என்று கருதினமையால், இவ்வாறு செய்யத் துணிந்தார். கருநாடக நவாபிற்குரிய பட்டப் பெயரினை நீக்கிவிட்டார். அப் பட்டப் பெயர் தனி மனிதருக்கு உரியதேயன்றி, மரபுவழிப் பெயரன்று என்பது டல்ஹௌசி காட்டிய காரணமாகும்.[1] 1855-ல் தஞ்சாவூரின் அரசர் என்ற பட்டமும் அவ் அரசமரபினரிடமிருந்து பறிக்கப்பட்டது. அந்த மரபைச் சேர்ந்த கடைசி அரசர் ஆண் மகவு இன்றி இறந்தபொழுது டல்ஹௌசி இச் செயலைச் செய்தார்.

[1] குடும்பத்தின் தலைவர் 1867ஆம் ஆண்டில் 'ஆர்க்காட்டின் அரசர்' என்னும் பட்டம் வழங்கப்பட்டார்.

---

டல்ஹௌசியின் தனிமுறைக் கடிதங்களால், அவருடைய உண்மையான ஆவல்களையே இயக்குநர்கள் முடிவுகளாகத் தீர்மானித்தனர் என்பது தெரிகிறது.

1853ஆம் ஆண்டில் முந்நாளைய பேஷ்வா பாஜிராவ் காலமானர். அப்பொழுது இதுவரையில் அவருக்குக் கொடுக்கப் பட்டுவந்த (கொடுக்குமாறு செய்தவர் மால்கோம்) ஓய்வூதியத்தை அவருடைய வளர்ப்பு மகனுகிய நானு சாகிபிற்குக் கொடுக்க அவர் மறுத்தார். இறுதியாகத் தில்லியில் உள்ள அரசருக்கு வழங்கப்பட்டுவரும் 'பேரரசர்' என்னும் பட்டத்தை நீக்க அவர் விரும்பினர். இவ் விருப்பத்திற்கெதிராகத் தாயகத்தின் அதிகாரிகள் அவரைக் கடிந்துரைத்தனர். ஆனல், வயது முதிர்ந்த பகதூர் ஷாவின் மரபுரிமையை அடுத்துப் பெறப்போகும் அரசிளங்குமாரரிடத்து டல்ஹௌசி ஓர் உடன்படிக்கை செய்துகொண்டார். அதன்படி அவர் மரபுரிமையேற்றவுடன் பேரரசர் என்ற பட்டத்தை விலக்கிவிட வேண்டும் என்றும், பேரரசருடைய அரண்மனையிலே அவர் குடியிருக்கக்கூடாது என்றும் வற்புறுத்தப்பட்டார். இவ்வாறு 'வாரிசுகள்' இல்லாதபொழுது டல்ஹௌசி பட்டங்களை ஒழித்தார்; கால்வழியினர் மிகப்பலராக இருந்தபொழுது அவர்களுக்கு இடையே போட்டியும் பொருமையும் உண்டானபொழுது, மற்றவர்களுக்கு எதிராக ஒருவரைத் தலைமைப் பதவியில் அமர்த்துவதன் மூலம், அரசர்களுடைய பட்டங்களை ஒழிப்பதை அவர் ஒரு நிபந்தனையாக்கினர்.

இரண்டு மாநிலங்களைக் கைப்பற்றி, அவற்றில் நல்லதோர் ஆட்சிமுறையினை நிறுவியதோடு, பேரளவிற்குப் புதிதாகப் பல அரசின் பகுதிகளைத் தம்முடைய அரசோடு டல்ஹௌசி இணைத்துக்கொண்டார். கடந்த காலத்தின் மூலாம் பூசப்பெற்ற எச்சங்களை எல்லாம் அழித்தொழித்தார். இவற்றோடு நின்றுவிடாமல், அவர் எப்பொழுதும் ஓயாது சீர்திருத்தங்கள் செய்வதிலும், ஆக்கப் பணிகள் புரிவதிலும் ஈடுபட்டிருந்தார். பல வகையில் அவர் புதிய இந்தியாவைத் தோற்றுவித்தவராவார். முதலில் அவர் தற்காலப் பண்புகளில் மூழ்கிய மேலைநாட்டு பாணியைப் பின்பற்றும் இந்தியா உருவாவது வெறுங் கனவு என்ற நிலை மாறி, செயல் முறையில் இந்திய நாட்டை மாற்றியமைத்தார். தன்னுட்சியுரிமைபெற்ற இந்தியாவும் மிக விரைவில் உருவாகப்போவது அவர் காட்சிக்குட்பட்டதாகவே இருந்தது.[1] அதனல் உண்டாகக்கூடிய நன்மைகள் மெக்காலே கருதியதைக்காட்டிலும் மிக நெடுந்தொலைவில் இருந்தன என்றே கூறலாம். முதன்

[1] பார்க்க: W. Lee-Warner, 'Life of the Marquis of Dalhousie', Vol. I. p. 124.

முதலாக அவர் கல்கத்தாவின் செயலகத்தில் மாபெரும் திருத்த அமைப்புகளைச் செய்தார். எல்லைமீறி வளர்ந்து விட்ட வங்காளத்தினை கவர்னர்-ஜெனரல் நேரடியாக ஆட்சி புரிவதற்கு பதிலாகத் துணை ஆளுநர் ஒருவரைப் பதவியில் அமர்த்த, இயக்குநர்களின் இசைவை அவர் பெற்றூர். பழைய படையியல் கழகத்தை அவர் அடக்கியொடுக்கினூர். டல்ஹௌசி பொதுப்பணித்துறையை (Public Works Department) நிறுவினூர். அவர் தம்முடைய பொதுப்பணித் திட்டங்களைச் செயலாற்றுவதற்கு அதைச் சிறந்த கருவியாகப் பயன்படுத்திக்கொண்டார். முன்னரே தொடங்கப்பெற்ற கங்கைக் கால்வாய்[1] போன்ற நீர்ப்பாசனத் திட்டங்களை விரிவுபடுத்தும் பணியில் அவர் ஈடுபட்டார். அப் பொதுப்பணித் திட்டத்தில் நெடுஞ்சாலைகளை அமைத்தலும், ரெயில் பாதைகளை அமைத்தலும்போன்ற பலவகைத் திட்டங்கள் இடம் பெற்றன. நெடுஞ்சாலைகளை அமைக்கும் திட்டம் பென்டிங்கினுடைய அவாவினை நிறைவேற்றுவதாக அமைந்தது. அந் நெடுஞ்சாலைகளுள் தலைசிறந்தது என்று குறிப்பிடத்தக்கது, கல்கத்தாவிலிருந்து பெஷாவருக்கு அமைக்கப்பட்ட பெரும் நெடுஞ்சாலையாகும். இவை யாவற்றையும்விட, அவருக்குப் பொன்றூப் புகழைத் தேடிக் கொடுத்தது ரெயில் பாதைகளை நிறுவினமையாகும். அவரை இந்திய இருப்புப்பாதைத் திட்டத்தின் தந்தை என்பர். நாற்பதுகளில் பிரிட்டிஷ் ரெயில்பாதை நிருவாகத்தில் உண்டான குறைகளைப் போக்குவதற்கு இரவும் பகலும் ஓயாது பாடுபட்ட டல்ஹௌசி, இந்தியாவில் இருப்புப் பாதைத் திட்டத்தை அவர் கொண்டுவந்து புகுத்தியமை முற்றிலும் பொருத்தமுடையதாகும். 1844ஆம் ஆண்டு முதற்கொண்டு இந்தியாவில் இருப்புப்பாதை அமைப்பதைப் பற்றிய பேச்சும், திட்டங்களைப்பற்றிய ஆராய்ச்சியும் இருந்து வந்தது. ஆனால், சில போக்குவரத்துக்குரிய வழிகளில் பரிசோதனை செய்யுமுகத்தான் இரண்டோர் இருப்புப் பாதைகள் அமைக்கப்பட்டன. இதுவரையில் மற்றப் பகுதிகளில் அப் பாதையை அமைப்பதற்குத் தடங்கல்களும், முன்னெச்சரிக்கைகளும் வெற்றிபெற்று வந்தன. இந் நாட்டு தட்ப வெப்ப நிலை அவர்களுக்கு எதிராக இருப்பதாகவும், இருப்புப் பாதை அமைப்பதற்குப் பொறியியல்வல்லுநர்கள் இந்தியாவில் இல்லை என்றும், இந்துக்கள் ரெயில்களில் பயணம் செய்ய மாட்டார்கள் என்றும், அப்படிப் பயணம் செய்தாலும் அதற்குக் கட்டணம் செலுத்தமாட்டார்கள் என்றும் பல வகை

[1] 1854ஆம் ஆண்டில் அது முடிக்கப்பெற்றது.

யாகப் பேசப்பட்டுவந்தன. 1853ஆம் ஆண்டு டல்ஹௌசி அனுப்பிய செயல்முறைக் குறிப்பில், தாயக அதிகாரிகளுக்கு ரெயில் பாதையின் இன்றியமையாமையைப்பற்றியும், செயல்முறையில் செய்துமுடிப்பதற்குரிய வழிவகைகளைப் பற்றியும் நிறுவவேண்டிய இருப்புப்பாதை வழிகளைப்பற்றியும் குறிப்பிட்டிருந்தார். அக் குறிப்புகள் தாயக அதிகாரிகளுக்கு ஒரு வகையாக நம்பிக்கையை ஊட்டின. தம்முடைய குறிப்பில் உள்நாட்டுத் துறைமுகங்களை இணைப்பதற்கும், படைத் துறைத் தேவைகளை நிறைவேற்றுவதற்கும், வாணிக வளர்ச்சியைப் பெருக்குவதற்கும் இருப்புப்பாதைகள் எவ்வாறு பயன்படும் என்பதை அவர் விரிவாக விளக்கியிருந்தார். அவர் இந்தியாவைவிட்டுத் திரும்பிச் செல்லும்பொழுது 200 கற்கள் நீளமுடைய இருப்புப்பாதை அமைக்கப்பட்டிருந்ததோடு, அத் திட்டம் பெருவெற்றி பெற்றதைச் செயல்முறையில் கண்டு மகிழ்ந்தார். இந்தியப் போக்குவரத்து வசதிகளில் ஒரு பெரும் புரட்சியை உண்டாக்கிய இருப்புப்பாதையோடு, அவர் அஞ்சல் துறையினைச் சீர்திருத்தினார். மேலும், தந்திமூலம் செய்தியனுப்பும் முறையினையும் அவர் புகுத்தினார். 1854ஆம் ஆண்டு, 800 கற்கள் நீளமான தந்திவழிச் செய்திப் போக்குவரத்து கல்கத்தாவிலிருந்து ஆக்ரா வரையில் அமைக்கப்பட்டது. 1857ஆம் ஆண்டில் இத் திட்டம் லாகூருக்கும் பெஷாவருக்கும் விரிவுபடுத்தப்பட்டது. அஞ்சல் முறை சீர்திருத்தம் செய்யப்பட்டது. எல்லாக் கடிதங்களுக்கும் ஒரே வகையாக அரை அணா கட்டணமுறை செயலுக்குக் கொண்டு வரப்பட்டது. கட்டணத்தைக் காசாகக் கொடுப்பதற்குப் பதிலாக அஞ்சல் வில்லைகளை ஒட்டும் முறை நடைமுறைக்கு முதன்முதலாகக் கொண்டுவரப்பட்டது. டல்ஹௌசியினுடைய ஆட்சிக்காலத்திற்கு முன்பு கல்கத்தாவிலிருந்து பம்பாய்க்குக் கடிதம் அனுப்புவதென்றால் ஒரு ரூபாய் செலவாயிற்று என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது.

இறுதியாக டல்ஹௌசியின் ஆட்சி கல்வித்துறையில் மாபெரும் முன்னேற்றத்தைக் கண்டது. இதுவரையில் வங்காள அரசு, உயர்நிலைக் கல்வியை வளர்ப்பதிலும், பம்பாய் அரசு தொடக்கநிலைக் கல்வியை வளர்ப்பதிலும் கருத்தைச் செலுத்திவந்தன. 1854ஆம் ஆண்டில் அனுப்பப்பட்ட அனுப்புகையினை, சர் சார்லஸ் உட்டின் பணியென்று சொல்லுவார்கள். ஆனால், அது டல்ஹௌசியினுடைய முழு ஆதரவையும் பெற்றிருந்ததோடு, பெரிய முன்னேற்றத் திட்டங்களுக்கு அடிப்படையாகவும் அமைந்திருந்தது.

தொடக்கக் கல்வியின் முக்கியத்துவம் குறித்து அதில் புதிய தாக வற்புறுத்திக் கூறப்பட்டிருந்தது. அதேசமயத்தில், உதவித்தொகை அளிக்கும் திட்டத்தின்மூலம் பள்ளிகளையும் கல்லூரிகளையும் போற்றியாதரிக்க அவர் ஏற்பாடுகள் செய்தார். இத் திட்டத்தினல் தனியார் தங்களுடைய விதி முறைகளுக்கும் வசதிக்கும் ஏற்ப கல்விப் பணியில் ஈடுபடுவது ஊக்குவிக்கப்பட்டது. இத்திட்டத்தின் தனிப்பெரும் சிறப்பியல் பாகப் பல பல்கலைக் கழகங்கள் நிறுவப்பட்டன. அவற்றுள் மூன்று, படைவீரர் கலகம் நடைபெற்ற 1857ஆம் ஆண்டில் கல்கத்தா, சென்னை, பம்பாய் மாநிலங்களில் அமைக்கப் பட்டன. ரூர்க்கியில் (Roorkee) ஒரு பொறியியல் கல்லூரியை (Engineering College) டல்ஹௌசி நிறுவியமை அவருடைய மாண்புமிக்க மாபெரும் தொண்டாகும். இதனல் இந்தியாவில் தொழிற்கல்வித் துறையில், சிறப்புமிக்க தொழில்நுட்பக் கல்விக்குத் தனிச்சிறப்புக் கொடுத்தமையால், அவர் தொழில் நுட்பக் கல்வியின் தந்தையாக விளங்குகின்றார்.[1] அவருடைய கைகளினல் சீர்திருத்தப்படாத ஆட்சித்துறையே இல்லை எனலாம். காட்டுவளப் பாதுகாப்புமுதல் சிறைச்சாலை சீரமைப்புவரையில் டல்ஹௌசி பற்பல துறைகளிலும் முன்னேற்றத்திற்குரிய சீர்திருத்தங்களைச் செய்து இருக்கின்றார்.

டல்ஹௌசியின் ஆட்சிக்காலத்தின் சாதனைகள் அனைத்தையும் நாம் சீர்தூக்கிப் பார்ப்போமானல், அக்காலம் பல துறைகளில் முன்னேற்றம் கண்ட திறமைமிக்க ஆட்சிக் காலம் என்பதையும், வீறுமிக்க அறிவாற்றல்மிக்க தலைவர் ஒருவரின் ஆட்சிக்காலம் என்பதையும் நாம் தவருமல் உணர முடியும். சில வகைகளில் டல்ஹௌசி கவர்ச்சிமிக்க ஆளுமை உடையவர் என்று கூறமுடியாது. அவர் சிலரிடத்து உணர்ச்சி யற்றவராகவும் இரக்கமற்றவராகவும் நடந்துகொண்டிருக் கிருர். மற்றும் பலரிடத்துக் கடுமையானவராகவும், தன் முனைப்புடையவராகவும் நடந்துகொண்டிருப்பதாகத் தெரி கிறது. சீர்திருத்தம் செய்யவேண்டும் என்னும் பேரவாவாகிய உணர்ச்சி, ஒரு மனிதனிடத்தில் உள்ள அருளுணர்ச்சியையும் கொன்றுவிடும் என்பதை அவரோடு நெருங்கிப் பழகியவர் களும், அவருடைய நம்பிக்கைக்குரியவர்களும் அறிந்து கொள்ளுவது என்பதே அரிய செயலாம். குறை கூறுவதை

[1] இந்தச் சமயத்தில் கல்கத்தாவிலுள்ள மருத்துவக் கல்லூரியை மறந்துவிடக்கூடாது.

யும், பிறர் தம்முடைய செயல்களில் குற்றம் காண்பதையும் கேட்டு அவர் மிகவும் கலங்கிய உள்ளத்தோடு உணர்ச்சிவயப் பட்டுவிடுவார். பிறரை அடக்கியாளவேண்டும் என்னும் தன் முனைப்பும், கடுமையான நடத்தையும் உடையவராக அவர் இருந்தார். அவர் இந்திய மக்களுடைய மனப்பான்மையை அறிந்துகொள்ளவேண்டும் என்ற அருளுணர்வும், மரபுகளைப் போற்றி மதிக்கும் பண்புமற்றவராக இருந்ததோடு பொதுக் கற்பனைமிக்க இரக்கவுணர்ச்சியற்றவராகவும் இருந்தார். ஆனால், அவை எல்லாம் இருக்கவேண்டிய அவருடைய உள்ளத்தில் புதிய இந்தியா எவ்வாறிருக்கவேண்டும் என்ற மனக் காட்சி நிறைந்து கிடந்தது. அந்த இந்தியாவை உருவாக்கும் அரும்பணியில், அவர் தம்முடைய அறிவையும் ஆற்றலையும் பயன்படுத்திச் செயற்கருஞ் செயல்களைச் செய்துள்ளார். தனியொரு மனிதனால் செய்யமுடியாத அளவிற்கும், சாதிக்க முடியாத அளவிற்கும் மேம்பட்ட வகையில் அவர் அரும் பெருந்தொண்டாற்றியிருக்கிறார். வெல்லெஸ்லி போரளவிற்கு அரசுகளைக் கைப்பற்றிக் கம்பெனியின் இராச்சியப் பரப்பினை விரிவுபடுத்தினார். அவர் அச்செயல் ஒன்றையே குறிக்கோளாகக்கொண்டு தம் ஆட்சிக்காலம் முழுவதிலும் அரும்பணியாற்றிவந்தார். ஆனால், டல்ஹௌசி புதிதாகச் சேர்க்காமல், சேர்க்கப்பட்டவற்றைச் சிறந்த முறையில் திட்டமிட்டு அமைப்பதில் தம்முடைய அதிகப்படியான ஆற்றலைப் பயன்படுத்தினார். வெல்லெஸ்லி, வழிகாட்டி மரங்களை நிறுத்தியதற்குமேல் சிறிதளவு வேலை செய் துள்ளார் என்று சொன்னால், டல்ஹௌசி முன்னேற்றமாகிய சாலைகள் பலவற்றை அமைத்தார் எனலாம். முறைப்படுத்து வதில் மாபெரும் வல்லுநர் கர்சன். ஆனால், டல்ஹௌசி படைத்தவற்றைத்தான், கர்சன் முழுமைத் தன்மையுடையன வாகச் செய்தார் என்று கூறலாம். பத்தொன்பதாம் நூற்றாண்டுக் காலத்தில் அவருடன் ஒப்ப மதித்துப் போற்றத் தக்க பெருமக்களுள், இவரைப்போன்று புதிதாகப் படைத்தவர்களோ, பலதிறப்பட்ட பெரும் பணியைச் செய்தவர்களோ இவருக்கு ஒப்பாக யாருமே இல்லை எனலாம். இந்தியாவின் பிரிட்டிஷ் ஆட்சியாளர்களில் மாண்புமிக்க அறிவுத்திறன் வாய்ந்தவர்களுள் மதிநுட்பத் தோடு, புரிந்துகொள்ள முடியாத புதிராக விளங்கியவருமான வாரன் ஹேஸ்டிங்சைதான் இவருக்கு ஒப்பாக நாம் கூறலாம், மிக விரைவாகச் செல்லுவது அல்லது நெடுந்தொலைவிற்குச் செல்லுவது என்பது வாரன்ஹேஸ்டிங்ஸிடத்துக் காணப்பட்ட குறையாகும். டல்ஹௌசி பரபரப்புமிக்க நோயாளியாவார்.

திருத்தொண்டர்கள் (Apostles) அனைவரிடத்திலும் காணப் படும் நம்பிக்கையும் பேரார்வமும் உடையவராக டல்ஹௌசி இருந்தார். மேலைநாட்டு நாகரிகப் பண்பாட்டில் தோய்ந்த இந்தியாவை உருவாக்கும் திருத்தொண்டராக அவர் விளங்கினார் என்றால், அது மிகையாகாது. தம்முடைய திட்டங்கள் மற்றவர்களை எப்படிப் பாதிக்கும் என்பதை கற்பனை செய்துபார்க்கும் உள்ளுணர்வு அற்றவராக அவர் இருந்தார். மேலும், அருளுணர்வோடு பிறருடைய இன்ப துன்பங்களைப் புரிந்துகொள்ளும் ஆற்றலற்றவராகவும் அவர் விளங்கினார். இக் குறைபாட்டிற்குத் தண்டனையாக அவர் கலகத்தினாலுண்டான பேரழிவினை ஏற்கவேண்டியவரானார். ஆனால், அக் குறைபாட்டிற்கு மாற்று மருந்தாகத் தன்னிறைவுபெற்ற பஞ்சாபையும், இருப்புப்பாதைகளையும், தந்திவழி செய்திப் போக்குவரத்து முறையையும் அவர் இந்தியாவிற்கு வழங்கிவிட்டுச் சென்றார்.

## ஆதாரங்கள்

டல்ஹௌசியைப்பற்றிச் சிறிய, ஆனால், சிறந்ததோர்
ஆராய்ச்சி நூலை 'டல்ஹௌசி' என்னும் பெயரில் W. W.
ஹன்ட்டர் என்பவர் 'இந்திய ஆட்சியாளர் வரிசை'யில்
(1905) எழுதியுள்ளார். அவரைப்பற்றி விரிவாகப் பேரள
வில் 'வாழ்க்கை' என்னும் பெயரில் சர் W. லீ-வார்னர்
(2 தொகுதிகள் 1904) என்பவர் எழுதியுள்ளார். பயன்
மதிப்புள்ள, பல அரிய செய்திகளைத் தெரிவிக்கும் 'Private
Letters of the Marquis of Dalhousie' (1910) என்னும் நூலை
J. A. பார்ட் பதிப்பித்துள்ளார். இதைப்போன்றே D. G. E.
ஹால் பதிப்பித்துள்ள 'The Dalhousie-Phayre Correspon-
dence 1852—56' என்னும் நூல் (1932) பர்மாவோடு
டல்ஹௌசி கொண்டிருந்த தொடர்புகளை அறியப் பயன்படுவ
தாகும். டல்ஹௌசியின் காலத்திலேயே அவருடைய செயல்
முறைகளை ஆராய்ந்து இ. ஆர்னல்டு என்பவர் 'பிரிட்டிஷ்
இந்தியாவில் டல்ஹௌசியின் ஆட்சி' (Dalhousie's Administ-
ration of British India) என்னும் நூலினை (2 தொகுதிகள்,
1861) எழுதியுள்ளார்.

பஞ்சாபினைப்பற்றி அறிவதற்கு இதற்கு முன்பே குறிப்
பிடப்பட்ட பாஸ்வொர்த் ஸ்மித்து, S. E. மாரிசன் (Morrison)
என்பவர்கள் 'லாரென்சு' பற்றி எழுதியுள்ள நூல்களைக்
காண்க. தனியரசுகளைப்பற்றி சர் W. லீ-வார்னர், K. M.
பணிக்கர் ஆகியோர் எழுதியுள்ள நூல்களைப்பற்றி இந்நூலின்
எட்டாம் பகுதியில், ஐந்தாம் இயலின் இறுதியில் குறிப்பிடப்
பட்டுள்ளன. அயோத்தியைப்பற்றி அறிவதற்கு W. H.
சிலீமென் எழுதியுள்ள 'Journey through the Kingdom of Oudh'

(2 தொகுதிகள், 1858) என்னும் நூலினைப் பார்க்க. கல்வி நிலையைப்பற்றி அறிவதற்கு A. மேயூ (Mayhew) என்பவர் எழுதியுள்ள 'The Education of India' (1926) என்னும் நூலினைக் காண்க. வி. ஆன்ஸ்டே (Anstey) என்பவர் எழுதியுள்ள 'Economic Development of India' (3ஆம் பதிப்பு, 1949) என்னும் நூல் விரிவாக இருப்புப்பாதைகளின் அமைப்பைப்பற்றிப் பேசுகிறது.

## 9. படைவீரர் கலகம்

படைவீரர் கலகம் உண்டானதற்குரிய காரணங்களும், அக் கலகத்தின் இயல்புகளும் எழுச்சி மிக்க வாதத்திற்குரிய பொருளாகவே இன்றும் இருந்துவருகின்றன. தேசிய எழுச்சியாகவும், 'இந்தியர்கள் தொகுத்த முதல் விடுதலைப் போராகவும்' அதனை இந்திய வரலாற்று அறிஞர்களும், பிறநாட்டுப் பேராசிரியர்களும் கருதிவருகின்றனர். இந்து சமயத்தைச் சேர்ந்த மக்களின் துன்பத்தையும் குறைகளையும், இசுலாமியர் தங்களுடைய தந்நலத்திற்குப் பயன்படுத்திக் கொண்ட சதித்திட்டமே, 'படை வீரர்களின் கலகம்' என்பது அவுட்ராமின் (Outram) கருத்தாகும். அரச மரபுகளைச் சேர்ந்த சில கோமான்கள் ஒன்ருகச் சேர்ந்து செய்த சதியே, படைவீரர் கலகம் என்றும், அது நல்லதொரு திட்டமாக முழு வடிவம் பெறுவதற்குள் எதிர்பாரா வகையில் மீரட்டில் உண்டான எழுச்சியினுல் வெளிப்பட்டுவிட்டது என்றும் சில அறிஞர்கள் கருதுகின்றனர். இந்தியப் படைவீரர்களுடைய மனக் குறைகளோடும் ஒழுங்கின்மையோடும் பிரிட்டிஷ் படைத்துறை அதிகாரிகளின் தவறுகளும் சேர்ந்து திடீரென்று தோன்றியதே படைவீரர் கலகம் என்பது நன்கு நிலைநாட்டப் பட்டுவிட்ட கருத்தாகும். தற்கால இந்திய விடுதலைப் போராட்டத்தின் முதல் போராக அதனைக் கருதுவது, உண்மையில் வரலாற்று வழுவாகும். பழமைப் பற்றுமிக்க பழைய இந்தியாவின் கடைசி முயற்சியே 'படைவீரர் கலகம்' என்று, அதனுடைய அரசியல் நோக்கங்களை ஆராய்ந்தவர்கள் கூறுவர். அரசர்கள் கம்பெனியை மிக வன்மையாக எதிர்த்தனர். அவர்கள் தங்களுடைய நெடுநாளைய மரபுவழி முறைகளைப் பின்பற்றி கம்பெனியை எதிர்த்தனர். மற்றும் சிந்தியா, சீக்கியர்களைப் போன்ற சிலர் மேலைநாட்டுப் படைத் துறைத் தொழில் நுட்பங்களைப் பின்பற்றியும் கம்பெனியை எதிர்த்துப் போராடினர். ஆனல், அவர்கள் தங்கள்

முயற்சியில் தோல்வியே கண்டனர். அதன்பிறகு, அவர்கள் தனித்திருந்து, ஆழ்ந்த சிந்தனையில் மூழ்கிவிட்டனர். தனி அரசுகளின் ஆட்சிக்குட்பட்ட பகுதிகளில், அரசர்களின் ஆட்சியின்கீழ், பழமைப்பற்று மிக்க இந்தியா தனித்து வாழ விரும்பியது; அத்தனியரசுகளுக்கு வெளியே பிரிட்டிஷ் தண்டல் நாயகங்களின் கீழ் அது தனித்து வாழ முயன்றது. 1818ஆம் ஆண்டிற்குப் பிற்பட்ட சில ஆண்டுகளில், அவை அரசியலில் மலடாக மாறிவிடுமானால், கம்பெனியாரின் தலையீடுமின்றித் தொடர்ந்து தனித்து இருக்கமுடியும் என்று தோன்றியது. ஆனால், பிரிட்டிஷ் இந்தியாவில் இருந்த வைதீகமான மக்களுக்கு, மேலைநாட்டு நாகரிகப் பண்பாட்டினைப் புகுத்தும் முதல் முயற்சியே கிலியூட்டத் தொடங்கியது. அதையடுத்து ஆங்கிலேயர் தனியரசுகளைக் கைப்பற்றத் தொடங்கியமை, அரசர்களை உறுதியாகச் செயலாற்றத் தூண்டியது. எதிர் மறையான மனப்போக்குடன் பழைமைப்பற்றுடைய இந்தியா எச்சரிக்கையுடன் எவ்வளவுதான் செயற்பட்டபோதிலும், அதனால், மேலைநாட்டு அறைகூவலை ஏற்றுக்கொள்ளாமல் தப்பி வாழ முடியவில்லை. அவ்வறைகூவல் எத்துணையளவிற்கு நேர்மையானதாகவும், உண்மையானதாகவும் இருந்ததோ, அத்துணையளவிற்கு அது தவிர்க்கமுடியாததாகவும் இருந்தது. நெடுங்காலமாக இருந்துவரும் வாழ்க்கை முறைகளில் பெரும் பற்றுதல் கொண்டுள்ள ஒரு சமூகத்தினருக்கு, அது எரிச்சலை ஊட்டவும், திகைப்பூட்டவும்தான் செய்யும். புதிய திட்டங் களும் செயல்முறைகளும், பழைய பண்பாட்டையும் வாழ்க்கை முறையையும் அழிப்பதற்கு வெளிப்படையாகச் செய்யப்படும் சதியாகும் என்ற ஐயத்தினை அவை மக்கள் உள்ளத்தில் வளர்ச்சியுறுமாறு செய்துவிட்டன. அவை இந்திய மக்களுக்கு உண்டாகப்போகிற அழிவையும் மானக் கேட்டையும் முன்கூட்டியே அறிவிக்கின்றன என்று சிலர் கருதினர். 1848ஆம் ஆண்டிற்குப் பின்னர் இத் திட்டங்களை விரைவாகப் புகுத்தியமையால் வெறுப்புணர்ச்சி மிகுதிப் பட்டது. அதனுடன் அது படைத்துறைக் குறைகளைக் காரணமாகக் கொண்டு நாடு முழுவதையும் நடுக்கத்தால் அதிர்ச்சியடையச் செய்யும் எழுச்சியை உண்டாக்கியது. அதற்குரிய சமுதாய அரசியல் சூழ்நிலைகளாகிய அடிப் படையையும் அது அமைத்துத் தந்தது. அத்தகைய சூழ்நிலை நாட்டிலே உருவாகாமல் இருந்திருந்தால், படைவீரர்களும் வெறிபிடித்து அலைந்திருக்கமாட்டார்கள். அப்படி வெறி உணர்வை அவர்கள் பெற்றிருந்தாலும் அது மிகக் குறைந்த அளவிலேயே இருந்திருக்கும். படைவீரர்களைப் போற்றி

ஆதரித்த இனத்தினர்—பிரிவினர்—தங்கள் உடைமையுள் சில வற்றை இழந்தவர்களாகவோ, பழங்கால வாழ்க்கையில் பற்றும் பாசமும், ஆர்வமும், ஈடுபாடும் கொண்டவர்களாகவோ இருந்தனர் எனலாம். அயோத்தியின் வட்ட ஆட்சியாளர்கள் (தாலுக்தாரர்) ஜான்சியின் தலைவர்கள் (சர்தார்கள்), நாளுவின் கூட்டத்தினர், முகலாய அரசிளங் குமரர்கள் அல்லது பைசாபாத்தினைச் சேர்ந்த இசுலாமிய குருமார்களைப் (மௌல்வி) போன்றவர்களை நாம் இதற்குச் சான்றுகக் குறிப்பிடலாம். மேலைநாட்டுச் செல்வாக்கினுல் உருவாக்கப் பட்ட புதிய குழுவினர்[1] அமைதியாக இருந்ததோடு மட்டு மல்லாமல், சுறுசுறுப்பான பற்றுறுதியுடையவர்களாகவும் இருந்து வந்தனர். நாட்டிலே அமைதியின்மையைத் தோற்றுவிக்கக் காரணமாக இருந்த மூலக் கூறுகள் பல. அவ்வமைதியின்மை நாட்டில் தோன்றியமையே படைவீரர்களின் கலகத்தைப் பேரளவில் நடைபெறச் செய்தது எனலாம். பழைய அரச மரபினர்களைப் பெரிதும் பாதித்தது அரசியல் தொடர்பான காரணங்களாகும். ஆனல், பொதுவாக இந்திய மக்களின் உள்ளுணர்ச்சிப்பாங்கும் அதற்குக் காரணமாக இருந்தது என்றே கூறலாம். மனிதர்கள் இந்துக்களாக இருந்தாலும், முஸ்லீம்களாக இருந்தாலும் அவர்கள் தங்களுடைய பண்டைச் சிறப்புமிக்க நிலையங்களையே பெரிதும் போற்றி வளர்த்தனர்; தங்களுடைய சமூகத்தின் தன்மானத்தின் ஒரு பகுதியாகவே பெயரளவிற்கு விடுதலையும் உரிமையும் இருக்கவேண்டும் என்று அவர்கள் கருதினர். பொதுவாக மக்களுடைய உள்ளுணர்வில், தங்கள் அரசுகளால் உண்டாகும் இடர்ப்பாடுகளைக் காட்டிலும் தேசிய தன்மதிப்புணர்வினுல் உண்டாகும் நலமே அவர்களால் பெரிதாகப் போற்றப்பட்டது. அயோத்தி அரசு நாடறிய தீய செயல்களைச் செய்தபோதும், மக்கள் தேசிய தன்மதிப் புணர்வினுலேயே அக் கொடுமைகளைப் பொறுத்துக் கொண்டிருந்தனர். 1838ஆம் ஆண்டுமுதல், தங்கள் அரசினை விரிவுபடுத்தும் திட்டத்தில் கம்பெனியார் ஈடுபடலாயினர். அதை பிரிட்டிஷார் 'எங்கே நிறுத்துவார்கள்? எவ்வாறு நிறுத்துவார்கள்?' என்று மக்கள் திகைப்புடன் கூர்ந்து கவனித்து வந்தனர். இரண்டாவது சீக்கியப் போருக்குப் பிறகு அதற்கு ஒரு முடிவிற்கு வந்துவிட்டதைப் போன்ற சூழ்நிலை உருவான சமயத்தில், டல்ஹௌசியின் நாடுகளைக்

[1] தேவேந்திரநாத் தாகூரின் வாழ்க்கை வரலாற்றைப் பார்க்க.

கைப்பற்றிச் சேர்க்கும் செயல்கள் அச் சூழ்நிலையைக் கெடுத்துவிட்டன. இச் செயல்கள் மீண்டும் அரசர்களேயும், அவர்களேச் சார்ந்திருந்த பிறரையும் மீண்டும் பீதியடையச் செய்தன. ஒவ்வோர் அரசும் கைப்பற்றப்பட்டது என்ருல், ஒவ்வோர் அவைக்களமும் அழிக்கப்பட்டது என்ருல், கொடுமையின் மைய நிலேயங்களும், ஊழல்களின் வளர்ப்புப் பண்ணேகளும் அழிக்கப்பட்டன என்று நாம் கூறலாம். ஆனல், இது இவ்வாறிருப்பினும், இந்தியர்கள் உயர்ந்த பதவிகளில் அமருவதற்கு வாய்ப்பளிக்கும் இடங்களாக அவை மாறின; பொதுப் பணியில் நல்ல குடும்பத்தைச் சேர்ந்த மக்கள் மதிப்பிற்குரிய உயர்ந்த பணிகளேச் செய்வதற்குரிய வாய்ப்புகளே, ஆவலோடு எதிர்பார்ப்பதற் குரிய சூழ்நிலே உருவாயிற்று. அதே சமயத்தில் வெறுப் புணர்ச்சிமிக்க, நம்பிக்கையற்றுப்போன மக்களே அத் திட்டம் உருவாக்கிற்று. அவர்கள் தங்களுக்கு வாய்ப்புக் கிடைக்கு மாஞல், தங்களுடைய உணர்ச்சியை வெளிப்படுத்துவதற்கு ஆயத்தமாக இருந்தனர். இத்தகைய மக்களுள் ஜான்சியின் அரசியும், அவளுடைய குழுவினரும் குறிப்பிடத்தக்கவர் களாவர். நாடு போற்றும் இந்து சட்டத்திற்கு எதிராகத் தம்முடைய ஆட்சியுரிமையை ஆங்கிலேயர்கள் திருடிக் கொண்டனர் என்னும் நம்பிக்கையுடையவராக ஜான்சி அரசியிருந்தாள். இவரைப் போன்றே பித்தூரிலிருந்த நாஞ சாகிபும் கருதிஞர். அவர் தனக்கு அளிக்குமாறு கேட்டதில், அதிக உரிமை அவருக்கு இல்லேயென்றே கூறலாம். ஏனெனில், அவர் பேஷ்வா எனும் பட்டம் சூட்டிக்கொள்ளவும், பாஜிராவின் ஓய்வு ஊதியத் தொகையினேப் பெறுவதற்கும் தமக்கு உரிமை இருப்பதாக அவர் நினேத்தார். இதைப் போன்ற உணர்ச்சிகளே தில்லியிலிருந்த தனியரசுகளின் வட்டாரத்திலும் நிலவிவந்தன. பேரரசர் என்னும் பட்டம் பறிக்கப்படும் என்று எதிர்பார்த்தமையாலும், பேரரசர் குடும்பத்தைத் தில்லியிலிருந்து மக்ரௌலிக்குச் சென்று வாழுமாறு செய்யப்பட்டமையாலும், இத்தகைய உணர்ச்சிகள் தில்லியிலும் தலேதூக்கின. குவாலியரின் தலேவர்களுக்கு இடையே அமைதியில்லாமற் போயிற்று. அதன் விளேவாக இந்தியாவின் படையிலே கலகம் உண்டாயிற்று. இதற்கும் முன்பு கூறிய காரணங்களே பொருத்தமாகும். ஏனெனில், அவர்களுடைய கலகத்திற்குத் தனிப்பட்ட காரணங்கள் ஒன்றும் கிடையாது. ஆனல், அவர்களேச் சூழ்ந்திருந்த நாடுகளில் நடைபெற்ற நிகழ்ச்சிகளிஞல் உண்டான அமைதியின்மையெனும் காய்ச்சலால் அவர்களும் பீடிக்கப்

பட்டனர். அயோத்தியைச் சேர்ந்த வட்டாரத் தலைவர்கள் தங்களுடைய அரசியல் பதவிக்கும், பண்ணைகளுக்கும் ஏதோ இடர்ப்பாடு உண்டாகப்போகிறது என்பதை எதிர்பார்த்துக் கொண்டிருந்தனர். அயோத்தி அரசரின் படையினைக் கலைத்ததன்மூலமும், 'தாலுக்தாரர்' பட்டத்தினைப் பெறும் உரிமைகளைப்பற்றி ஆய்வு நடத்தியதன்மூலமும் குற்ற மற்ற ஆனால் குருட்டுத் தன்மையுடைய கவர்லி ஜாக்சன் அவர்களுடைய அச்சத்தையும், வெறுப்பையும் மேன்மேலும் பெருகச் செய்தார்.

இத்தகைய அரசியல் அச்சங்களோடு, பண்டைக்காலத்திய ஜாகீர்தார்களான பெருநிலக்கிழார்கள் அனைவரும் பெரும்பீதி அடைந்திருந்தனர். வங்காளத்தில் செயற்படுத்தப் பட்ட நிலையான நிலவரித் திட்டத்தின் விளைவாகப் பண்டைக் காலம் முதல் சிறப்புற்று விளங்கிய பல ஜமீன்தார்களின் குடும்பங்கள், தங்களுடைய பதவியை இழந்தன; அதனால் அவை வறுமையால் வாடின. ஆனால், இதற்குள் முதன்மையான வெளியேற்றம் நடைபெற்று இரண்டு தலைமுறைகள் கழிந்துவிட்டன. புதிய குடும்பங்கள் இப்பொழுது நன்கு தங்கள் வாழ்க்கையை நிறுவிக்கொண்டன. அக்குடும்பங்களைச் சேர்ந்தவர்கள் புதிய அரசினை உறுதியாக ஆதரிக்கும் பண்புடையவர்களாக இருந்துவந்தனர். ஆனால், தீர்வை செலுத்தவேண்டாத நிலவுடைமை முறையை மீண்டும் பென்டிங் செயற்படுத்தியமை அரசிற்கு ஆதாயம் கிடைப்பதாகவும், பல வகையில் போற்றத்தக்கதாகவும் அமைந்தது. எனினும், உரிமைப் பட்டயத்தை இழக்கவேண்டி நேரிட்டமையால் பல நிலக்கிழார்கள் தங்கள் உரிமையை இழந்துவிட்டனர். இத் திட்டத்தினால் தங்கள் உரிமையை இழந்து அல்லற்பட்டவர்கள் எல்லாரும், கம்பெனியின் அரசிடத்துச் சீற்றமும் வெறுப்பும் கொண்டனர். முப்பதுகளில் பம்பாய் மாநிலத்தில் அமைக்கப் பட்ட பள்ளிவாசல் ஆணைக் கழகமும் (Imam Commission) இத்தகைய ஓர் ஆய்வுமுறையையே மேற்கொண்டது. அதன் விளைவாக 20,000 பண்ணைகள் பறிமுதல் செய்யப்பட்டன. 'நாட்டைக் கைப்பற்றுவதற்கு ஒரு முடிவே கிடையாதா?' எதனுடன் அவர்கள் நிற்கப்போகிறார்கள்? என்பனவற்றைப் போன்ற எண்ணங்கள் இந்திய மக்களின் உள்ளங்களில் கொந்தளித்துக்கொண்டிருந்தன. வெற்றிமேல் வெற்றியைப் பெற்றுக்கொண்டிருந்த ஆங்கிலேயர்களுக்கு, வன்முறைச் செயல்களைப் புரியும் மனப்போக்கும், உயர்வு மனப்பான்மையால் உண்டான செருக்கும் நாளுக்குநாள் பெருகிக்கொண்டே

வந்தன. அவை இந்திய மக்களுக்குக் கிலியை உண்டாக்கிய தோடு, வெறுப்பை ஊட்டியும் வந்தன. ஆங்கிலேயர்களின் சொல்லும் செயலும் எவ்வாறிருந்தன என்பதை அறிய சர் சார்லஸ் நேப்பியர் திடீரென்று வெளியிட்ட 'நான் பன்னிரண்டு ஆண்டுகளுக்கு இந்தியாவின் பேரரசராக இருப்பேனுல், அந் நாடெங்கும் இருப்புப் பாதைகளை அமைப்பேன்; ஆறுகளில் எல்லாம் பாலங்கள் கட்டுவேன்.... ஓர் இந்திய அரசன்கூட இருக்கமாட்டான். நைசாம் என்னும் பெயரே இனி நம் காதில் விழாமல் போய்விடும்....நேப்பாளம் நம்முடைய ஆட்சிக்குட்பட்ட ஒருபகுதியாகப் போய்விடும்...' என்னும் கருத்து இங்குக் குறிப்பிடத்தக்கதாகும்.

பொதுவாக, மேலைநாட்டுப் புத்தாக்கங்களின் தாக்குதல்கள் இந்து, முஸ்லீம் ஆகியோருடைய சமய உணர்ச்சியைப் பாதிப்பதாகக் கருதப்பட்டன; சிறப்பாகச் சமயத் தொடர்பாகத் தொழில்புரிந்துவந்தவர்களின் வாயில் அவை மண்ணைத் தூவுவதாகக் கருதப்பட்டது. சதியினை ஒழித்தமையும், குழந்தைக் கொலையைத் தடுத்தமையும் போன்ற சீர்திருத்தங்களுக்கு எதிராக இந்துக்களுக்கு இடையே உள்ளூர ஓர் ஆற்றல்மிக்க வெறுப்பு ஓடை ஓடிக்கொண்டிருந்தது. மேலும், ஐரோப்பிய அறிவியல், மருத்துவம் ஆகியவற்றைக் கற்பிப்பதையும், கீழைநாட்டுக் கல்வியைச் சாகடிக்கும் வகையில் மேலைநாட்டுக் கல்வியைப் போற்றி ஆதரிப்பதையும், இருப்புப் பாதைகளும், தந்திப் போக்குவரத்தும் ஆகிய புத்தாக்கங்கள் செய்யப்படுவதையும் அவர்கள் வெறுப்புணர்ச்சியுடனும், ஐயுறவோடும் நோக்கிவந்தனர். இந்துக் கல்வி வெளிப்படையாகவே இழித்துப் பேசப்பட்டது. இதற்கு மெக்காலே என்பவர், கல்வியைப்பற்றி எழுதிய செயல்முறைக் குறிப்பே சிறந்த எடுத்துக்காட்டாகும். அதே சமயத்தில் கிறித்துவ சமயத் தொண்டர் குழுவினர் அரசினரால் ஆதரிக்கப்படவில்லையென்றாலும், பணிபுரிய அவர்களுக்கு அரசு இசைவு அளித்தமை வெறுப்பை வளர்த்தது. விதவைகள் சட்டப்படி மறுமணம் செய்துகொள்ளுவதற்கு அனுமதிக்கப்பட்டார்கள். இந்து மதத்திலிருந்து கிறித்துவ சமயத்திற்கு மாறியவர்களுக்குக் குடும்பச் சொத்தில் பங்கு பெறுவதற்கு உரிமை அளிக்கப்பட்டது. இவையனைத்தும் பண்டைச் சமயத்தின் செல்வாக்கைக் குறைக்கப் போதாதா? இவை வாழ்க்கையை மதிப்புடையதாக்கிவிடவில்லையா? மனத்தால் உணர முடியாத மேலைநாட்டுக் கருத்துகள், இந்து சமூகத்தினர் அனைவரையும் ஒரு வகையாகத் தங்களை உணருமாறு செய்தன.

இந்த உணர்வுகள் முஸ்லீம் சமூகத்தைக் காட்டிலும் இந்து சமூகத்திடத்து ஒருகால் பேராற்றல் உடையதாக இருந்திருக்கவேண்டும். ஆயினும், அவ்வுணர்வுகள் முஸ்லீம் களிடத்து முற்றிலும் காணப்படவில்லை என்று சொல்ல முடியாது. இதுவரையில் குற்றவியல் நீதிமன்றங்களில்பெரும் செல்வாக்குப் பெற்றிருந்த 'மௌல்விகள்' எனப்படும் இஸ்லா மிய குருமார்கள் தங்கள்செல்வாக்கினை இக்காலத்தில் இழந்து விட்டனர். பொதுவாக இந்துக்களின் ஆட்சிக்குட்பட்டிருப் பதைவிட, முஸ்லீம்கள் பிரிட்டிஷாரின் ஆட்சிக்குட்பட்டிருக்க விரும்பினர். எத்துணைக் காலம் வரையில் தங்களுடைய வழக்காற்று நெறிமுறைகளும், மரபுகளும் மதிக்கப் படுகின்றனவோ அத்துணைக் காலம் வரையில்தான், அவர்கள் பிரிட்டிஷாரின் ஆட்சிக்குட்பட்டிருக்க விரும்பினர். இல்லை யென்றால், அவர்கள் தங்களுடைய ஆட்சியே சிறந்ததென்று கருதினர். எனவே, மேலைநாட்டுக் கல்விமுறையும், கிறித்துவச் சமயத் தொண்டர்களின் பணியும், இருப்புப் பாதைகள் அமைப்பு, தந்திவழிச் செய்திப் போக்குவரத்து போன்றவையும் இந்துக்களால் எவ்வாறு வெறுப்புணர்ச்சி யுடன் நோக்கப்பட்டதோ, அதைப்போன்றே இஸ்லா மியருள் பழமைக்குக் கட்டுப்பட்டவர்களும் உள்ளூர வெறுப்புணர்ச்சியுடையவர்களாகவே இருந்துவந்தனர். அயோத்தியைக் கைப்பற்றியபொழுது புறச் சமயத் தவர்களின் ஆதிக்கம் இஸ்லாமியர்கள்மீது சுமத்தப் படுவதாக அவர்கள் உணர்ந்தனர். அயோத்தியின் அரசருடைய வீழ்ச்சி, முஸ்லீம் சமயத்தின் ஒரு பிரிவினரான ஷியாக்களுக்குப் பெருஞ் சீற்றத்தை உண்டாக்கியது. தொடர்ந்து, நிலையாக முகலாயப் பேரரசருக்குரிய சீரையும் சிறப்பையும், மதிப்பையும் மாண்பையும் கம்பெனி குறைத்துக்கொண்டே வந்தமை சுன்னிகளுக்குப் பெருந் துன்பமாக இருந்துவந்தது. அயோத்தியில் படைவீரர்களின் கலகத்தில் கலந்துகொண்ட தலைவர்களுள், பியாசாபாத்தின் மதகுரு ஒரு தலைவராக இருந்தமை வெறும் தற்செயல் நிகழ்ச்சியன்று. இஸ்லாமியப் பழைமைப் பற்றுளர்களாகிய சமய வெறியர்களுக்கு, விக்டோரியா அரசியின் காலத்திய சீர்திருத்தக்காரர்கள் பழைய புறச் சமயத்தவர்களே பேரளவில் இப்பொழுது தோன்றியிருப்பதாகத் தோன்றியது.

இத்தகைய காரணங்கள் அனைத்தும் ஒன்றாகச் சேர்ந்து வங்காளத்திற்கு வெளியே வட இந்தியாவிலும், நடு இந்தி யாவிலும் பொதுவாக அமைதியின்மையையும் வெறுப்பு

உணர்ச்சியையும் பரப்பின. அது நன்கு பழக்கப்பட்ட பழைய யுகத்தின் தவிர்க்கமுடியாத இறுதிக்கட்டமாகத் தோன்றியது. ஒன்றும் அறியப்படாத எதிர்காலத்தைப்பற்றிய அச்சமும் அக்காலத்திய மக்களுடைய உள்ளங்களை ஆட்டிப்படைத்தது. ஆனால், அது உணர்ச்சியைத் தூண்டிவிடும் நிலையாகவோ, சீற்றத்தை ஊட்டும் நிலையாகவோ (ஒருசில தனிப்பட்ட பகுதிகளைத் தவிர) இருக்கவில்லை என்பது மட்டும் உறுதி. ஆனால், மக்களுடைய ஆதரவைப் பெற்ற கலகத்தைச் செய்வதற்குத் தூண்டுதலாகச் சில நிகழ்ச்சிகள் மட்டும் தேவைப்பட்டன. மனக்குறையுடைய படைவீரர்களின் எதிர்ப்பு இயக்கம் முளைத்து வளருவதற்குரிய சமூக மண் வளத்தினை அது அமைத்துத் தந்தது என்று நாம் கூறினால், அது மிகையாகாது. சமுதாயம் முழுவதும் தங்களிடத்து இரக்கம் கொண்டுள்ளதைப் படைவீரர்கள் நன்கறிந்தனர். படைவீரர்கள் எத்தகைய இன்னல்களையும் இடர்ப்பாடு களையும் அனுபவிக்க நேரிட்டதோ, அத்தகைய அனுபவத்தை ஏதோ ஒருவகையாக நாட்டு மக்களும் பெற்றிருந்தமை யால்தான் அவர்கள் படைவீரர்களிடத்துப் பரிவு காட்டினர். 1745ஆம் ஆண்டு யாகோபியர்களிடத்து (Jacobites) டோரிகளின் ஆட்சிக் காலத்திய நாட்டுப்புற இங்கிலாந்து எத்தகைய தொடர்பு கொண்டிருந்ததோ, அத்தகைய அல்லது ஓரளவிற்கு அதைப்போன்ற தொடர்பினை இந்தியாவின் பொதுமக்கள் படைவீரர்களுடன் கொண்டிருந் தனர் என்று கூறலாம். படைவீரர்களின் நிலையைக் கண்டு அவர்கள் இரக்கம் கொண்டனர்; அப் படைவீரர்கள் வெற்றி பெறவேண்டும் என்று அவர்கள் ஓரளவிற்கு விழைந்தனர். ஆனால், அவர்கள் மிகப் பலராகவும் பலதிறப்பட்ட வேற்றுமைகளும் பூசல்களும் நிறைந்தவர்களாகவும் இருந் தமையால், எப் பக்கம் சேர்ந்தால் ஆதாயம் கிடைக்கும் என்பதை நன்குணரும் வகையில் அவ்வளவு எளிதில் அவர்கள் தூண்டுதலுக்கு இரையாகாமல் இருந்துவந்தனர். யாகோபியர்களைப் போன்றே இந்தியப் படைவீரர்களும் தங்களிடத்து நாட்டு மக்கள் இரக்கம் காட்டுவதை உணர்ந் தனர். அந்த இரக்க உணர்ச்சியையே பேராதரவாகக் கருதி அவர்கள் செயலில் ஈடுபட முனைந்தனர். படைவீரர்களின் கலகம் தொடங்கப்பட்ட முதல் கட்டத்தில், சிற்றூர்ப்புறங் களில் இருந்த மக்கள் பொதுவாக அமைதியாகவே இருந் ததை இதற்குச் சிறந்ததொரு சான்றாகக் கூறலாம். பிற் பகுதியில் அயோத்தி போன்ற பகுதிகளில் நடைபெற்ற நிகழ்ச்சிகளை விதிவிலக்காகக் கொள்ளுவோமானால்

மக்களுக்குப் புரட்சிக்காரர்களிடத்து ஒரு வகை அசட்டுத் தன்மையே இருந்துவந்தது இங்குக் குறிப்பிடத்தக்கதாகும். தெற்கிலும் மேற்கிலும் மன்ரோ, எல்ஃபின்ஸ்டன் ஆகியோர் செயற்படுத்திய புதிய நிலத்தீர்வைத் திட்டங்களும், வடக்கில் பென்டிங்கும் பேர்டும் செயற்படுத்திய திட்டங்களும் படைவீரர்களுக்கு இரக்கம் காட்டுவதோடு, தங்களுடைய ஆதரவை நிறுத்திக்கொள்ளுமாறு பொதுமக்களைத் தூண்டியது என்றும் நாம் கூறலாம். புரட்சியினால் புதிதாகப் பெறக்கூடிய ஆதாயங்களைக் காட்டிலும் மிகுதியான நன்மைகளை இழக்க நேரிடும் என்ற அச்சத்தினால் உழவர்கள் செயலற்ற மனநிறைவோடு இருந்துவிட்டனர்.

மேலும் இரண்டு முக்கியமான கருத்துகள் இங்குக் குறிப்பிடத்தக்கனவாகும். படைவீரர்களின் கலகம் தோன்றிப் பரவிய பகுதிகள் நடு இந்தியாவும் வட இந்தியாவுமேயாகும். சென்னை, பம்பாய் மாநிலங்களில் அக் கலகம் சிறிதுகூடப் பரவவே இல்லை. அதைப்போன்றே இத் தொத்து நோயினால் இவ்விரு மாநிலங்களிலும் இருந்துவந்த படைப்பிரிவுகள் பீடிக்கப்படவில்லை என்பதும் இங்கு நினைவுகூரத்தக்கதாகும். மேலும், வடநாட்டிலும் வெளிப்படையான சதித்திட்டம் உருவாகவில்லை யென்றே சொல்லலாம். சர் ஜான் லாரன்சு கலகம் உண்டாவதற்குச் சதித்திட்டம் ஒன்றும் உருவாகவில்லை என்று உறுதியாகக் குறிப்பிட்டுள்ளார். ஆனால், இந்தக் கருத்தினை நாம் முற்றிலும் ஒப்புக்கொள்ள முடியவில்லை. ஏனெனில், கலகம் தோன்றுவதற்கு முன்னர் வீரர்களுக்கு இடையே 'சப்பாத்திகளை'ச் சுற்றிவருமாறு செய்தமையும், அச் சூழ்நிலையைக் கைப்பற்றிக்கொள்ள நானாசாகிபு ஆயத்தமாக இருந்த செய்தியும் நன்கு நிலைநாட்டப்பட்ட உண்மைகளானமையால், நாம் லாரன்சு கூற்றை முற்றிலும் உண்மை என்று ஒப்புக்கொள்ள முடியாத நிலையில் இருக்கிறோம். ஆனால், கலகக்காரர்கள் தில்லிக்கு வந்தபொழுது, தில்லியில் தெளிவாகத் திட்டமிட்டுச் செயலாற்றுவதற்குத் தேவையான ஒழுங்குமுறைகள் கடைப்பிடிக்கப்படாமையால், புரட்சியை எத்திசை நோக்கித் திருப்புவது என்பதே பெரும் பிரச்சினையாகப் போயிற்று என்பதும் மறுக்கமுடியாத உண்மை. இரண்டு கருவிலிருந்து கலகம் தோன்றியது. அதை நடத்த மாறுபட்ட இரண்டு அரசர்கள் தலைவர்களாக அமர்த்தப்பட்டனர். ஆனால், அவர்களுக்கு இடையே ஒருமுகமான தொடர்பும் செயல்முறைகளுமிருந்துவந்தன என்பதற்குச் சான்றுகளே இல்லை.

இப்பொழுது நாம் படைகளைக் காணலாம். 1857ஆம் ஆண்டு கம்பெனியின் படைகளில் இருந்த மொத்த வீரர்கள் 2,38,000 பேர்களாவர். அவர்களுள் 38,000 பேர் ஐரோப்பியர்களாவர். ஒவ்வொரு மாநிலமும் தனக்கெனத் தனிப் படையினை உடையதாக இருந்தது. அவற்றுள் வங்காளத்தில் இருந்த படைதான் பெரிதும் பாதிக்கப்பட்டிருந்தது. வங்காளத்தின் படையில்மட்டும் 1,51,000 பேர் இருந்தனர். அவர்களுள் சற்றேறக்குறைய 23,000 பேர்கள் ஐரோப்பியர்களாவர். இவ்விருபத்து மூவாயிரம் பேர்களுள் 13,000 பேருக்குமேல் பஞ்சாபில் சட்லஜ் ஆற்றுக்கப்பால் அல்லது சிஸ்-சட்லெஜ் மாவட்டத்தில் இருந்தனர். மீரட்டுக்கும் வங்காளத்துக்கும் இடையே ஐரோப்பியப் படைகளே இருக்கவில்லை என்று கூறலாம். பூனாவிற்கு அருகில் தினப்பூரில் மட்டும் ஐரோப்பியப் படை இருந்தது. கிரிமியாப் போருக்காகவும் பாரசீகப் போருக்காகவும் பெரும் படைப்பகுதி இந்தியாவிலிருந்து அனுப்பப்பட்டிருந்தமையால், ஐரோப்பியரின் படைவீதம் மிகக் குறைந்த அளவினதாக இருக்க நேரிட்டது.

மதராஸ், பம்பாய் படைப்பிரிவுகளைப் போன்றில்லாமல், வங்காளப் படை பேரளவில் பிராமணர்கள், இராசபுத்திரர்களைப் போன்ற உயர்ந்த சாதிக்காரர்களை உடையதாக இருந்தது. இக் காரணத்தினால் எப்பொழுதுமே அப் படையினைக் கட்டுக்கு அடங்கியிருக்குமாறு அடக்கியாளுவது என்பது பெரும் பிரச்சினையாகவே இருந்து வந்தது. வங்காளப் படையின் மொத்த மதிப்பில் மூன்றில் ஒரு பங்கிற்கு மேற்பட்ட 40,000 வீரர்கள் அயோத்தியிலிருந்து வந்தவர்களாக இருந்தனர். அவர்கள் அப் படைப்பிரிவுக்குள்ளே அடக்கமானவரும் நெருக்கமானவருமான ஒரு குழுவினராகவும், தங்களுக்கென்று தனிப்பட்ட அதிகார நலக்குழுவினராகவும் இருந்துவந்தனர். அவர்களுள் பிராமணர்களே பெரும்பான்மையோராக இருந்தனர். தற்காலத்தில் பிராமணர்களிடையே காணப்படும் வெறுப்புகளும் அச்சங்களும் அக்காலத்திலும் அவர்களிடத்து இருந்தன. 1806ஆம் ஆண்டு வேலூரில் நடைபெற்ற படைவீரர்கள் கலகத்திற்குப் பிறகு, சென்னையில் கலகமும் குழப்பமும் தோன்றவில்லை. ஆனால், 1857ஆம் ஆண்டிற்கு முற்பட்ட பதின்மூன்றாண்டுகளில் வங்காளத்தில் நான்கு முறை படைவீரர்கள் கலகம் செய்ததாகத் தெரிகிறது. நெடுங்காலமாக அடுத்தடுத்து வரிசையாகப் படைத்துறை வெற்றிகளை

அவர்கள் பெற்றுக்கொண்டிருந்தமையால், அப் படைவீரர்களுக்குச் செருக்கும் ஆணவமும் அதிகரித்துக்கொண்டே வந்தன. ஆப்கானியப் படையெடுப்புகளின்பொழுது அவர்கள் பெருந்துன்பத்திற்கு ஆளாகி அல்லற்பட்டமையால், அவர்களுடைய உணர்ச்சிகள் எல்லாம் காரணம் இல்லாமலேயே கிளியூட்டுவனவாக அமைந்துவிட்டன. உள்நாட்டுப் படைவீரர்களிடத்தில் காணப்படும் பிளவும் பூசலும், சிந்து ஆற்றிற்கு அப்பால் சென்று போர்புரிந்த அவர்களிடத்தில் இடம்பெறவில்லை. சாதி வேற்றுமையோ, சமய வேற்றுமையோ அவர்களுடைய ஒற்றுமையைக் குலைக்கவில்லை. படையின் ஒழுங்குமுறை மறுக்கமுடியாத அளவிற்குக் கண்டிப்பில்லாமல் நெகிழ்ச்சியுற்றுக் கிடந்தது. கவர்னர்-ஜெனரலாகவும் சேனாதிபதியாகவும் இருந்த பென்டிங்கின் ஆட்சிக்கு நெடுங்காலத்திற்கு முன்பே படைத்துறை, ஒழுங்கும் கட்டுப்பாடும் குலைந்த ஒன்றாக இருந்து வருவதை அவர் கண்டார். அதனால்தான் அவர் வங்காளப் படையினை, உலகிலேயே மிகத் திறமையற்றதும் மிகப் பெருஞ் செலவிற்குக் காரணமாக இருப்பதுமான படை என்று குறிப்பிட்டார். அந்த நெருக்கடியான சூழ்நிலை கண்டிப்பாகவும் தந்திரமாகவும் செயலாற்றும் திறனை வேண்டி நின்றது. ஆனால், நேப்பியருக்குப் பிறகு கருத்துகளைத் தெளிவாகப் புரிந்துகொள்ளக்கூடிய திறமையும் நெருக்கடிகளைச் சமாளிப்பதற்குரிய முக்கியமான சூழ்ச்சித் திறனும் வாய்ந்த படைத் தலைவர்கள் கிடைக்கவில்லை.

இந்தப் பொதுவான காட்சியுடன் இன்னும் இரண்டு செய்திகளைச் சேர்த்துக்கொள்ளலாம். 1856ஆம் ஆண்டு பொதுப்பணிப் பதிவுச் சட்டம் (General Service Enlistment Act) நிறைவேற்றப்பட்டது. அதன்படி, ஒரு வட்டாரத்திலுள்ள படை, இந்தியாவின் எப் பகுதியிலேனும், இந்தியாவிற்கு வெளியே எந் நாடுகளிலேனும் நெருக்கடி உண்டாகின்றபொழுது சென்று போரிடவேண்டும் என்னும் கருத்தினை வலியுறுத்தியது. ஆனால், இதற்கு முன்பு அவை இந்தியாவில் மட்டும்தான் பணிபுரியவேண்டும் என்னும் வரையறை இருந்துவந்தது. கடல்கடந்து பயணம் செய்வது என்னும் செயல் சாதி உணர்ச்சிகளோடும் சமய நம்பிக்கைகளோடும் மோதுவதாக அமைந்தது. அதற்குப் பிறகு கொழுப்புப் பூசப்பெற்ற துப்பாக்கிக் குண்டுகள் நெருக்கடியை உண்டாக்கின. புதிய என்ஃபீல்டு துப்பாக்கிகளின் குண்டுகளில் பசுவினுடைய கொழுப்பும் பன்றியினுடைய

கொழுப்பும் பூசப்பட்டிருந்ததாகச் சொல்லப்பட்டது. இதனால் பசுவினைப் புனிதமாகப் போற்றும் இந்துக்களுக்குச் சீற்றம் உண்டாகியது; பன்றியைத் தூய்மையற்றது என்று அருவருப்புடன் நோக்கிய இஸ்லாமியருக்குச் சீற்றத்தோடு மனவுளைச்சலும் உண்டாகியது.[1] இக்கதை காட்டுத்தீப்போல எங்கும் பரவியது. அதிகாரிகளால் அக்கதை தவறானது என்று நல்லெண்ணத்துடன் வன்மையாக மறுக்கப்பட்டது. ஆனால், உண்மையில் விலங்குகளின் கொழுப்பு உல்விச்சு படைக்கலச் சாலையில் தயாரிக்கப்பெற்ற துப்பாக்கிகளிலேயே பூசப்பட்டிருந்தன. எனவே, அதிகாரிகளின் மறுப்பு ஏதோ சதிச் செயல்கள் நடைபெறுகின்றன என்ற நம்பிக்கையை இந்தியப் படைவீரர்களுக்கு உண்டாக்கியது. உண்மையை உணர்ந்தவுடன், அப்படைக்கலன்களை வீரர்களிடமிருந்து திரும்ப அதிகாரிகள் பெற்றுக்கொண்டனர். ஆனால், இம் முயற்சி மிகவும் காலம் கடந்த ஒன்றாகப் போயிற்று. எனவே, அச் செயல் வீரர்களுக்கு இடையே ஐயுறவை வளர்த்ததோடு, வெறுப்பையும் உண்டாக்கியது. அது அவர்களுடைய பலவீனத்தைப் பிரதிபலிக்கும் அறிகுறியாகவும், கயமைத் தன்மை வாய்ந்த கொடுஞ்செயலாகவும் கருதப்பட்டது. அதனால் அவர்களுக்குப் பீதியுண்டாயிற்று. அச் சமயத்தில் நாட்டில் பொதுவாக அமைதி நிலவியிருக்குமானால், மக்களுடைய உள்ளங்கள் கலக்கமுறாமல் இருந்திருக்குமானால், பொதுவாக எத்தகைய கலகமும் தோன்றியிருக்கவே முடியாது. ஆனால், அக்காலமோ வீரர்கள் எல்லாம் ஆழ்ந்த நினைவினாலும், அவாவினாலும், ஐயுறவினாலும் மனக்கலக்கம் அடைந்திருந்த காலம். 'நாங்கள் இதுவரை பேசப்பட்டுவந்ததை ஏதோ ஒருவகையாகக் கேள்விப்பட்டிருந்தோம். ஆனால், இப்பொழுது அவ் வதந்திகளையெல்லாம் உறுதிப்படுத்துகின்ற வகையில் தக்க சான்று கிடைத்திருக்கிறது' என்று படைவீரர்கள் கருதலாயினர். அவர்களுடைய உணர்ச்சிகளை உள்ளார்ந்த குழுநல நோக்குடையவர்கள் தங்களுக்குப் பயன்படத்தக்க வகையில் தூண்டிவிட்டனர் என்பதில் சிறிதும் ஐயமில்லை. ஆனால், அவர்கள் கொண்டிருந்த உணர்ச்சிகளே, இறுதியில்—

[1] துப்பாக்கிக் குண்டுகளுக்குக் கொழுப்புப் பூசப்பட்டிருக்கும். அதைத் துப்பாக்கியுள் நுழைப்பதற்கு முன்பு வாயினால் கடிக்கவேண்டும். கடிப்பதை நீக்கிவிட்டு, வீரர்கள் தங்கள் விருப்பம்போல எண்ணெயைப் பூசிக்கொள்ளலாம் என்று கட்டளையிடப்பட்டது.

நம்பிக்கையற்ற வகையில் செயலில் ஈடுபடும்படி தூண்டியது எனலாம்.

1856ஆம் ஆண்டு பிப்ரவரி மாதத்தில் டல்ஹௌசி பதவியிலிருந்து விலகி ஓய்வு பெற்றார். கடந்த எட்டாண்டுகளில் அவர் ஆர்வத்தோடு உருவாக்க விரும்பிய புதிய இந்தியா எத்தகைய கலக்கமும் இன்றி அமைதியான முன்னேற்றத்தை அடைந்திருப்பதாகக் கருதிக்கொண்டு, அவர் தாயகத்திற்குத் திரும்பிச் சென்றார். அவருக்குப் பின்னர் கவர்னர்-ஜெனரல் பதவிக்கு வந்த கானிங் பிரபு, பிரிட்டனுடைய புகழ்மிக்க துணைப்படைத் தலைவரின் மகனாவார். அத் துணைப்படைத் தலைவர் அயல்நாட்டு அலுவலகச் செயலாளராகவும், ஆபர்டீனின் அஞ்சலகத் தனிப்பெருந் தலைவராகவும் (Post-master General) விளங்கியவர். மேலும், பாமர்ஸ்டனின் அமைச்சரவையிலும் அவர் பணிபுரிந்தவராவர். கானிங் தம்முடைய தந்தையின் பெருந்தன்மையை உடையவராக இருந்தார். ஆனால், அவருடைய அறிவாற்றலை இவர் பெற்றிருக்கவில்லை. பேராவல் இல்லாத தம் தந்தையின் கடுமையான உழைப்பையும், திடீரென்று தோன்றும் உள்ளார்ந்த உணர்வையும் உடையவராகக் கானிங் விளங்கினார். அவர் நேர்மையான மனநிலையுடையவராக இருந்தார்; ஆனால், முடிவிற்கு வருவதில் தன்னம்பிக்கையற்றவராக இருந்தார். அவர் முடிவிற்கு வருவதற்குக் காலதாமதம் ஆயிற்றென்றாலும், அவற்றைக் கடைப்பிடிப்பதில் அவர் உறுதியாக இருந்தார். அவரிடத்து நேர்மையுணர்வாகிய ஆற்றல் சேமித்துவைக்கப்பட்டிருந்தது. அதனால் அவருடைய பண்புநலன் முழுவதிலும் அவ் அறவுணர்வு மேம்பட்டு விளங்கலாயிற்று. உடனடியாக ஒரு முடிவிற்கு வரவேண்டிய நெருக்கடியான நேரங்களில், ஆழ்ந்து சிந்தனை செய்துகொண்டிருக்கும் அவருடைய இயல்பு பலருடைய தாக்குதல்களுக்கு ஆளாயிற்று. அவருடைய நேர்மையுணர்வாகிய உறுதி, விரைந்து முடிவிற்கு வருவதைக் கட்டுப்படுத்திவந்தது. உணர்ச்சியினால் எளிதில் தூண்டப்பட்ட மக்களுக்கு, அவருடைய பற்றற்ற மனப்போக்குச் சீற்றத்தை உண்டாக்கியது. ஆனால், அப் பண்பே, இறுதிவரையில் அவர் தம்முடைய தனி வழியில்சென்று செயலாற்றுவதற்கு உறுதுணையாக இருந்தது. அவருக்கு, 'அருளிரக்கப் பண்பாளர்' (Clemency) என்னும் செல்வப் பெயர் முதலில் ஏளனப் பொருளில் வழங்கப்பட்டது. பின்னர், அப் பெயர் அவருடைய பெருந்தன்மையை அறிவுறுத்தும் சிறப்புமிக்க பெயராகப் போற்றப்பட்டது. 'விரைந்து

அஞ்சா நெஞ்சத்துடன் முடிவிற்கு வரும் பண்பு அவரிடத்து இல்லையென்றாலும், ஆதிக்க மனப்பான்மையும் டல்ஹௌசியின் ஆளுமைச் சக்தியும் அவரிடத்து இல்லையென்றாலும், குற்றங் கூறப்பட்டபொழுதும், தவறாகச் செயல்களைத் திரித்துக் கூறியபொழுதும் அவரிடத்து மாண்புமிக்க பெருந்தன்மையும் உள்ள உறுதியும் இருந்துவந்தமை போற்றத் தக்கனவாகும். சிக்கலான பிரச்சினைகளுக்குத் தீர்வு காணுகின்றபொழுது அந்நேரத்திய உணர்ச்சிகளுக்கும் செல்வாக்கிற்கும் அடிமையாகாது, தம்மைப் பற்றற்ற நிலையில் வேறுபடுத்தி வைத்துக்கொள்ளக்கூடிய ஒரு புதுமையான ஆற்றலையுடையவராகவும் அவர் விளங்கினார்.'[1]

பாரசீகத்தில் உண்டான நெருக்கடியைக் கவனிக்க வேண்டியதே கானிங்கின் முதல் கடமையாயிற்று. 1856ஆம் ஆண்டில் ஹெராட்டு பாரசீகர்களால் கைப்பற்றப்பட்டது. அப்பொழுது அது தோஸ்து முகமதின் ஆட்சிக்குட்பட்டிருந்தது. அந்நிலையில் ஆப்கனிஸ்தானம் கம்பெனியோடு நட்புறவு கொண்டிருந்த எல்லைப்புற அரசாக இருந்துவந்தது. எனவே, பாரசீக வளைகுடாவிற்குக் கம்பெனியின் படையொன்று அனுப்பப்பட்டது. அப்படை பாரசீகர்களைச் சமாதான உடன்படிக்கையைச் செய்துகொள்ளுமாறு தூண்டியதோடு, ஹெராட்டைவிட்டு வெளியேறவும் செய்தது. இந்திய, ஆப்கானியர் நட்பினை இந்நிகழ்ச்சி உறுதிப்படுமாறு செய்தமையால், இது முக்கியத்துவம் வாய்ந்ததாயிற்று. மேலும், இதையடுத்து உண்டான நெருக்கடியின்பொழுது ஆப்கனிஸ்தானம் நடுநிலை வகிப்பதற்குக் காரணமாக இருந்ததும் இந்நிகழ்ச்சியேயாகும். அடுத்து அயோத்தியின் செயல்முறைகளில் கானிங் கருத்தைச் செலுத்தினார். அங்கு, அவுட்ராமுக்குப் பிறகு தலைமை ஆணையராகப் பதவியேற்ற கவர்லி ஜாக்சனின் செயல்முறைகள் அமைதியின்மையைப் பெருகச் செய்வதற்குக் காரணமாக இருந்தன. எனவே, 1857ஆம் ஆண்டு, மார்ச்சு மாதத்தில் ஜாக்சன் பதவியிலிருந்து மாற்றப்பட்டு, சர் ஹென்றி லாரென்சு அப்பதவியில் அமர்த்தப்பட்டார். இச்செயல் மிகவும் காலம் தாழ்த்திச் செய்யப்பட்ட ஒன்றாகும். அதனால் புரட்சியைத் தடுக்க முடியவில்லை. எனினும், அயோத்தியில் உண்டான கலகத்தை அடக்கி

[1] P. E. Roberts: 'History of British India,' மூன்றாம் பதிப்பு; பக். 359.

யொடுக்கி வெற்றி பெறுவதற்கு அச்செயல் பேருதவியாக இருந்தது.

1857ஆம் ஆண்டின் தொடக்கம் முதல் படைவீரர்களுக்கு இடையே அமைதியின்மை நாளுக்கு நாள் பெருகிக்கொண்டே வந்தது. ஜனவரி மாதத்தில் கல்கத்தாவிற்கு அருகிலுள்ள டம்டம்மில் இருந்த படைவீரர்கள் துப்பாக்கிக் குண்டுகளைப் (இப்பொழுது கொழுப்புப் பூசப்படாதவை; வீரர்களின் விருப்பம்போல் எண்ணெய் பூசிக்கொள்ள அனுமதியளிக்கப் பட்டவை) பெற்றுக்கொள்ள மறுத்தனர். மார்ச்சு மாதத்தில் பாரக்பூரில் ஒரு படைப்பகுதி கலைக்கப்பட்டது. கலகத்தைத் தூண்டிவிடுகிற நிகழ்ச்சிகள் பல திடீரென்று நடைபெற்றன. அவற்றைப்பற்றிய வதந்திகள் நாடெங்கும் பறந்துசென்றன. ஆனால், உண்மையான திடீர் எழுச்சி, மே மாதம் 10ஆம் நாள் மீரட்டில் உண்டாயிற்று. சில படைவீரர்கள் துப்பாக்கிக் குண்டுகளைக் கைகளால் தொடமாட்டோம் என்று மறுத்தனர். எனவே, அதற்காக அவர்கள் சிறையில் அடைக்கப்பட்டனர். மூன்று படைப்பிரிவுகளைச் சேர்ந்த அவர்களுடைய தோழர்கள் ஒரு ஞாயிற்றுக்கிழமை மாலையில், வழிபாடு நடைபெறும் சமயத்தில் சிறைச்சாலையைத் தகர்த்தெறிந்து அவர்களைச் சிறைமீட்டனர். அத்தோழர்கள் தங்களுடைய அதிகாரிகளைச் சுட்டுக் கொன்ற பிறகே, சிறைச்சாலையைத் தாக்கினர். பின்னர், அவர்கள் தில்லிக்குத் தப்பியோடினர். அப்பொழுது மீரட்டில் 2,000 ஐரோப்பியர்களைக்கொண்ட படையொன்று இருந்தது. ஆயினும், அப் படை இவ் விடுதலை வீரர்களைத் தடுத்து நிறுத்தவில்லை. தில்லியில் ஐரோப்பியப் படைகள் இல்லை. அங்கிருந்த இந்தியராக இருந்துவந்த கோட்டைப் பாதுகாப்புப் படையினர் கலகக்காரர்களோடு சேர்ந்து கொண்டனர். தில்லி நகரம் அவர்களால் கைப்பற்றப்பட்டது. கதிரவன் மறைந்து காரிருள் சூழுவதற்கு முன்பே, விருப்ப மில்லாத நிலையில் மனக்குழப்பம் அடைந்திருந்த பேரரசர் பகதூர்ஷா அக் கலகக்காரர்களின் தலைவரானார்.[1]

கலகம் நடைபெற்ற காலத்தை நாம் மூன்று பிரிவுகளாகப் பிரிக்கலாம். முதல் பிரிவு 1857ஆம் ஆண்டின் கொடிய வேனிற்காலமாகும். அப்பொழுது புரட்சித் தீ நாடெங்கும் பரவவொட்டாமல் தடுப்பதும், போதிய படைகள் வருகின்ற வரையில், அதைத் தாக்குப்பிடிப்பதுமே பிரச்சினையாக

[1] அவருக்கு அப்பொழுது எண்பத்திரண்டு வயது என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது.

இருந்தது. அவ் ஆண்டின் கூதிர்ப் பருவத்தில் லக்னோவை மீட்கும் வேலையில் கருத்தைச் செலுத்தவேண்டியதாயிற்று. 1858ஆம் ஆண்டின் முதற் பகுதியில் சர் ஜான் காம்பெல்லும், சர் ஹக்ரோசும் படையெடுத்துச் சென்று, பல இடங்களில் கலகக்காரர்களை எதிர்த்துப் போரிட்டனர். இப் போர் நிகழ்ச்சிகளே மூன்றாவது கால கட்டத்தைச் சேர்ந்தனவாகும். இப் போர்கள் இறுதியில் கலகக்காரர்களின் ஆற்றலை யெல்லாம் அழித்தொழித்தன. 'படைவீரர்களை எதிர்த்து அழித்த' இறுதிச் செயலாக 1859ஆம் ஆண்டில் ஏப்ரல் மாதத்தில் ஒரு நிகழ்ச்சி நடைபெற்றது. தாந்தியா தோப்பி கைப்பற்றப்பட்டதோடு, அப் புரட்சி ஒரு முடிவிற்கு வந்தது. அரசாங்கத்தின் படைகளுக்கு வீர தீரச் செயல் புரிவதற்கும், அஞ்சா நெஞ்சத்தையும் உள்ள உரத்தையும் காட்டுவதற்கும் தக்கதொரு வாய்ப்பு மிகுந்த காலமாக அது விளங்கியது. அரசாங்கப் படையிலிருந்த வீரர்கள் முழுவதும் பிரிட்டிஷார்கள் அல்லர்; அவர்களைப் போன்றே மனச் சோர்வுற்ற, ஆனால் நன்முறையில் நெறிப்படுத்தப்படாத கலகக்காரர்களின் படைவீரர்களும் வீரத்தோடும் அஞ்சா நெஞ்சத்தோடும் போர் புரிந்தனர். இரு திறத்தினரும் இழிந்த செயல்களிலும், அருவருக்கத்தக்க செயல்களிலும் ஈடுபட்டனர். ஒருபக்கத்தில் நெடுங்காலமாக அடக்கியொடுக்கப்பட்டிருந்த உணர்ச்சிகள் தடைகளை யெல்லாம் தகர்த்தெறிந்து பெருக்கெடுத்தமையால், பல இழிந்த செயல்கள் செய்யப் பட்டன. மற்றொரு பக்கம் தங்களுக்குண்டான பேரழிவையும், பெருந்துன்பத்தையும், மானக்கேட்டையும் போக்கிக் கொள்ளக் குருட்டுத்தனமான 'பழிக்குப் பழி வாங்கும்' உணர்ச்சி கோர தாண்டவம் புரிந்தது எனலாம். இரு திறத்தினரும் செய்த கொடுஞ் செயல்களை இங்கு விரிவாக எடுத்துரைப்பதனால் உண்டாகக்கூடிய பயன் ஒன்றும் இல்லை. இருதிறப் படைகளிலும் சிறந்தவர்களாக இருந்தவர்கள், கொடுஞ் செயல்களைப் புரிந்தவர்களைப் போன்று இல்லாமல் பெருந்தன்மை யுடையவர்களாகவும் பண்பாடுடையவர்களாகவும் நடந்துகொண்டனர். வெறுப்பும் அச்சமும் கலந்த அக் காய்ச்சல் தணிந்த பிறகு, அவர்கள் நடந்தவற்றைக் குறித்துப் பெரிதும் வருத்தப்பட்டனர். அந்தக் கொடுஞ் செயல்களைப் பற்றிய நினைவு இருதிறத்தாரிடத்தும் நெடுங் காலம் அழியாமல் இருந்து வந்தது. அவ்விரு திறத்தினருக்கும் இடையே இணக்கமான தொடர்பினைத் திரும்பப் புதுப்பிப்பதற்குப் பெருந்தடையாக அது இருந்து வந்தது.

மே மாதம் 11ஆம் நாள் தில்லி வீழ்ச்சியுற்றது. அம்பாலாவில் படைத்தலைவர் ஆன்ஸ்டன் படைகளைத் திரட்டிக்கொண்டிருந்தார். அப்பொழுது சிறிது காலம் செயல் முறைகளில் தயக்கம் உண்டாயிற்று. அவருடைய படைகள் தில்லியை அடைவதற்குள், பந்தல்கண்டில் ஜான்சி ராணியுடன், இராசபுதனத்தில் நசிராபாத்தில் இருந்த படைகளும் குவாலியரில் நிமாக்கில் இருந்த படைகளும், லக்னோவிலும் கான்பூரிலும் இருந்த படைகளும், வாரணாசியில் இருந்த படைகளும் சேர்ந்துகொண்டு புரட்சி செய்தன. நாடெங்கும் அதிகாரிகள் சுட்டுக் கொல்லப்பட்டனர்; ஐரோப்பியர் படுகொலை செய்யப்பட்டனர்; 'அடுத்து என்ன செய்வது?' என்ற ஊசலாட்டம் எங்குப் பார்த்தாலும் தலையெடுத்தது. புரட்சிக்காரர்களைத் திட்டமிட்டுச் செயலாற்றுமாறு நெறிப்படுத்த, நன்கு ஆயத்தம் செய்யப்பட்ட தலைவர்கள் இல்லாமல் போயினர். இவை நன்கு திட்டமிட்டு, சதிச் செயல்கள் உருவாகவில்லை என்பதைத் தெளிவாக்கின. கான்பூரிலும் ஜான்சியிலும்தான் நானாசாகிபும் அரசியும் உடனடியாகத் தலைமையேற்ற மேன்மக்கள் குடியைச் சேர்ந்த தலைவர்களாவர். எனவே, ஜூன் மாதத்தின் நடுப்பகுதியில் இராசபுதனத்தின் எல்லைப்புறத்தில் இருந்து, பீகாரில் பாட்னாவின் சுற்றுப்பக்கம் வரையில் பரவியிருந்த பெரு நிலப்பரப்பில் பிரிட்டிஷாருடைய அதிகாரம் துண்டிக்கப்பட்டது. ஆக்ரா கோட்டையும், லக்னோவிலிருந்த காப்பரசும், கான்பூரிலிருந்த அரண்களும் தவிர, மற்றவை எல்லாம் கலகக்காரர்களின் ஆதிக்கத்திற்கு உட்பட்டிருந்தன. அம்பாலாவிலிருந்து தில்லிக்குக் கம்பெனியாருடைய இயங்கும் படை ஒன்று வந்துகொண்டிருந்தபொழுது மேலே குறிப்பிட்ட பகுதிகள் தவிர, மற்றவையெல்லாம் கலகக்காரர்களின் செல்வாக்கிற்குட்பட்டிருந்தன. எப்பக்கத்தையும் சாராமல், யாரை ஆதரிக்கிறோம் என்பது புலனாகாமல், எஞ்சிய நாட்டுப்புறப் பகுதிகள் அனைத்தும் அந் நிகழ்ச்சிகளின் போக்கினைக் கூர்ந்து அமைதியாகக் கவனித்துக்கொண்டிருந்தன. பஞ்சாபிலும் வங்காளத்திலும் இரண்டு காவலரண்களையுடைய ஆற்றல் மிக்க படையினை பிரிட்டிஷார் பெற்றிருந்தனர். ஐரோப்பாவிலிருந்து படைகளும் போர்க் கருவிகளும் உதவிக்கு வரும் வரையில், இந்தக் காவலரண்களைக் காத்துக்கொள்ளுவதும், கைப்பற்றப்பட்ட காவல் படைகளை மீட்பதும், அக் கலகம் மேலும் பல இடங்களில் பரவவொட்டாமல் தடுப்பதுமே பெரிய பிரச்சினையாகப்போயிற்று. வங்காளத்தைப் பொறுத்த வரையில் எத்தகைய இடர்ப்பாடும் இல்லை; சர் ஜான்

லாரன்சின் மிகக் கண்டிப்பான செயல் முறைகளாலும், தேர்ந்தெடுக்கப்பட்ட ஆற்றல் மிக்க அவருடைய ஆட்சியாளர்களாலும் பஞ்சாபு அக் கொடிய நோயிலிருந்து காப்பாற்றப்பட்டது. ஆப்கானியர் தலையீடு, சீக்கியர் எழுச்சி, படை வீரர் கலகம் என்னும் மூவகை இடர்ப்பாடுகள் இங்கு இதற்கு இருந்தபோதிலும், பஞ்சாபு காப்பாற்றப்பட்டமை சிறப்பு மிக்க செய்தியாகும். முதலாவது ஆப்கானியப் போரின் விளைவாகக் காலம் தாழ்த்தி, தோஸ்து முகமது பிரிட்டிஷ் படைக்கலன்களுக்கு மதிப்புக் கொடுக்கக் கற்ருர். அதனுல், அவர் தாம் செய்துகொண்ட உடன்படிக்கைக் கேற்ப, கம்பெனியிடத்துப் பற்றுறுதியுடையவராகவே இருந்தார். சீக்கியர்கள் அமைதியாக இருந்ததோடு, கலகத்தை அடக்கியொடுக்குவதற்குப் பேருதவி புரிந்தனர். தில்லியில் முகலாயப் பேரரசைப் புதுப்பிப்பதனுல், அவர்கள் புதிதாகப் பெறக்கூடிய ஆதாயம் ஒன்றுமே இல்லை. அவர்களுக்கு டல்ஹௌசியின் ஆட்சி காலத்தில் அனுபவித்த துன்பங்களைக் காட்டிலும், அவுரங்கசீப்பின் ஆட்சி காலத்திலும், அவருக்குப் பின் வந்த பேரரசர்கள் காலத்திலும் பட்ட துன்பங்களே பேரளவிற்குக் கொடுமை நிறைந்தனவாகத் தோன்றின. புதிய அரசு அவர்களுடைய உரிமைகளைப் பறித்துக்கொண்டது. எனினும், அதனுடைய திட்டங்களினுல் அவர்களுடைய வாழ்க்கையில் அவர்கள் அமைதியையும் மனநிறைவையும் பெற்றனர். எனவே, அவர்கள் அவ்வரசிடத்து வெறுப்புக் கொள்ளவில்லை. படைவீரர்களால் உண்டாகக்கூடிய இடர்ப்பாடு, தக்க சமயத்தில் அவர்களிடமிருந்து படைக்கலன்களைப் பறித்துக்கொண்டமையால் தவிர்க்கப்பட்டது. இவ்வாறு இயங்கும் பெரும்படையொன்றைத் தோல்வி காணுப் பேராற்றல் வாய்ந்த ஜான் நிக்கல்சன் தலைமையில் நிறுவுவதற்கு வழி வகுத்துத் தந்தனர்.

தில்லி கைப்பற்றப்பட்டது என்ற செய்தியைக் கேட்ட பொழுதே, கானிங்கும் லாரன்சும் அங்குத்தான் வெற்றிக்குரிய திறவுகோல் இருப்பதாகக் கருதினர். புரட்சியை அடக்கியொடுக்குவதற்குத் தில்லி திரும்பக் கைப்பற்றப்பட்டமை முதன்மையான தொடக்கநிலைச் செயலாக அமைந்தது. இந்துக்களின் பழக்கவழக்கத் தொடர்புகளையும் இசுலாமியப் பழக்கவழக்கத் தொடர்புகளையும் ஒருங்கே கொண்ட பழைய பேரரசின் மதிப்பே தில்லியை எல்லோரும் சூழ்ந்துகொண்டு தாக்குவதற்குரிய நிலைக்களனுக்கிற்று.

இன்னும் இந்தியாவில் இருந்த பலர், பெயரளவிற்குப் பேரரசராக இருந்த அவரையே அந் நாடு முழுவதற்கும் இறைமாட்சி மிக்க பேரரசராகக் கருதிக்கொண்டிருந்தனர். அந்தப் புரட்சி இயக்கத்திற்கு அவர் பெயரளவில் தலைமை தாங்கியது பொதுவாக எல்லா மக்களுக்கும் சிறப்பாக இசுலாமியருக்கும் பெருந் தூண்டுகோலாக அமைந்தது. உடனே படைத் தலைவர் ஆன்ஸ்டன் தில்லிக்கு அருகே ஜூன் மாத இறுதியில் ஒரு பெரும் படையைத் திரட்டிக்கொண்டு போரிடத் தொடங்கினார்.[1] ஆனால், அது தில்லியை முற்றுகையிட்டுத் தாக்குவதற்குத் தேவையான ஆற்றலற்றதாக இருந்தது. ஒரு சிறிது காலத்திற்கு அது முற்றுகையிடுவதற்கு மாறாக, அதையே முற்றுகை இட்டிருந்தனர். ஜூலை, ஆகஸ்டு மாதங்களில் அப்படை மிகக் கடுமையான நிலையில் ஒருவாறு வீரத்தோடு போர் புரிந்தது. அதனால் மேன்மேலும் தன்னம்பிக்கை பெற்றுவந்தது. அதற்குள் பஞ்சாபில் லாரன்சு தம்முடைய நிலையைப் பாதுகாப்பு உடையதாக்கிக்கொண்டார். தில்லிக்கு நிக்கல்சனையும், முற்றுகையிடுவதற்குரிய படைகளைக்கொண்ட இரயில் வண்டி ஒன்றையும் அனுப்பிவைக்கும் தற்செயல் இடர் நிகழ்ச்சி ஒன்றை ஏற்றுக்கொண்டார். ஒரு முறை பெஷாவரை வேண்டுமானாலும் கைவிட்டுவிடலாம் என்று லாரன்சு கருதினார் என்றால், அத் தற்செயல் இடர்நிகழ்ச்சியைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமோ? கானிங்கின் கட்டளைக்கும், ஹெர்பர்ட் எட்வர்ட்சின் வேண்டுகோளுக்கும் இணங்கியே, அவர் பெஷாவரைக் கைவிடவில்லை. செப்டம்பரில் தில்லி நகரம் வலிமையாகத் தாக்கப்பெற்றது. ஆறு நாட்கள் தொடர்ந்து தெருவெல்லாம் கொடிய போர் நடந்தது. இறுதியில் அந் நகரை ஆங்கிலேயர் திரும்பக் கைப்பற்றினர். தம்முடைய உயிருக்கு இடர்ப்பாடு ஒன்றும் வராது என்று உறுதியளித்த பின்னரே, பகதூர்ஷா ஆங்கிலேயரிடம் சரண் அடைந்தார். உடனே 30,000 பேர்களுக்கு மேற்பட்டிருந்த கலகக்காரர்கள் சிற்றூர்களுக்குச் சிதறியோடினர் அல்லது லக்னோவிற்குத் திரும்பி ஓடினர். பிரிட்டிஷா

[1] கார்நலில் படைத் தலைவர் ஆன்ஸ்டன் வாந்திபேதியினால் காலமானார். அவருக்குப் பிறகு படைத்தலைவராக நியமிக்கப்பட்ட பர்னார்ட் விரைவில் அவரைத் தொடர்ந்து, ஜூலை மாதம் ஐந்தாம் நாள் காலமானார். நோயின் காரணமாக ரீட் பதவியிலிருந்து விலகினார். இறுதியில் படைத்தலைமை சர் ஆர்ச்டேல் வில்சனிடம் ஒப்படைக்கப் பட்டது.

ருடைய படையினருள் கால்பகுதியினர் போரில் அழிந்தொழிந்தனர். நிக்கல்சன் போரில் கொல்லப்பட்டார். ஆனால், மரபுவழிச் சிறப்புமிக்க தலைநகராகிய தில்லியை, இந்தியாவில் இருந்த படைவீரர்களே திரும்பக் கைப்பற்றினர். கடல் கடந்த இங்கிலாந்திலிருந்து துணைப்படை ஒன்று வருவதற்கு முன்பே அது கைப்பற்றப்பட்டமை கம்பெனியின் படைகளுக்குப் பொன்னுப் புகழைத் தேடிக் கொடுத்தது. அதற்குப் பிறகு, கலகத்தினை முழுவதும் அடக்கியொடுக்குவது என்பது வெறும் காலத்தை அடிப்படையாகவே கொண்டிருந்தது. ஒன்றும் அறியாத பொதுமக்கள் பெரும்பான்மையோருக்கு, புரட்சிக்காரர்களின் தாக்குதல், மராட்டியர்களாலும் ஆப்கானியர்களாலும் தாக்கப்பட்ட போது உண்டான பேரிடர்களைப் போன்றே தோன்றியது. அவர்கள் தாக்குதல்களாலும் எதிர்த் தாக்குதல்களாலும் பெருந் துன்பத்திற்கு ஆளாயினர். தொடர்ந்து தண்டனைகள் அளிக்கப்பட்டமையாலும் அவர்கள் அல்லற்பட்டனர்.

ஆனால், லக்னோவிலும் அதைச் சுற்றிய பகுதிகளிலும் கலகக்காரர்களின் படை சுற்றிவளைக்கப்பட்டு, அடக்கியொடுக்கப்படவில்லையென்றால், இந்த வெற்றியினை எளிதாக அடைந்திருக்க முடியாது. லக்னோவில் மாபெருந் தாக்குதல்களைக் காப்பியச் சுவை நலம் கனிந்த எதிர்ப்புச் செயல்களின் மூலம் சமாளித்தனர். மூன்று வாரங்கள் தீரத்தோடு எதிர்த்துப் போரிட்டுவந்த வீலர், கான்பூரில் ஜூன், 26ஆம் நாள் சரணடைந்தார். தம்முடைய உறுதிமொழியைக் காற்றில் பறக்கவிட்டதன் மூலம், நானா சாகிபு தம்முடைய பெயருக்கும் மராட்டியருடைய புகழிற்கும் களங்கம் உண்டாகுமாறு செய்துவிட்டார். அவர் சிறைபிடிக்கப்பட்டவர்கள் பலரைக் கொன்று குவித்தார். அவ்வாறு கொன்று குவிக்கப்பட்டவர்களுள் 125 பேர் பெண்களும் குழந்தைகளும் என்பது இங்குக் குறிப்பிடத்தக்கதாகும். ஜூலை மாதம் முதல் நாள் முதல், லக்னோவில் சர் ஹென்றி லாரன்சு காப்பரசின் ஆளுநர் மாளிகையில் முற்றுகையிடப்பட்டார். மூன்று நாட்களுக்குப் பிறகு, போரில் உண்டான புண்களினால் அவர் இறந்துவிட்டார். அவர் இறந்த பின்னர், அவருடைய காவல் படையினரை அவருடைய ஆன்மா புத்தூக்கம் கொள்ளுமாறு செய்தது; அவருடைய அறிவுநலம் வாய்ந்த திறமையான திட்டங்கள், தங்களுக்கு உதவியாகப் படை வருகின்ற வரையில் முற்றுகையைத் திறமையாக எதிர்த்துத் தற்காத்துக்கொள்ளுமாறு செய்தது. ஜூன் மாதம் 11ஆம் நாள், அலகாபாத்

கோட்டையை நீல் (Neill) கைப்பற்றினர். அவர் நிக்கல்சனைப் போன்று பேராற்றலும் பெருந்திறனும் வாய்க்கப்பெற்றிருந் தார். ஆனால், அவர் பழிக்குப் பழிவாங்கும் கொடிய உள்ளத் தோடு மிகக் கொடிய செயல்களில் ஈடுபட்டதன்மூலம் தம் முடைய பெயரைக் கெடுத்துக்கொண்டார். ஜூலை, 7 ஆம் நாள், அலகாபாத்திலிருந்து 2,000 வீரர்களுடன் படைத் தலைவர் ஹாவ்லக்கு லக்னோவிற்குத் துணைபுரியப் புறப்பட்டுச் சென்றார். அவர் கான்பூரை அடைந்தபொழுது, ஏமாற்றத் தினல் கடுஞ்சீற்றமடைந்த நானா சாகிபின் கட்டளையின்படி சிறைபிடிக்கப்பட்ட ஐரோப்பியர்கள் எல்லாரும் படுகொலை செய்யப்பட்டதைக் கண்டார். ஜூலை 7 ஆம் நாள் முதல், செப்டம்பர் 25 ஆம் நாள் வரையில் பன்னிரண்டு கடுமையான போர்கள் நடைபெற்றன. இறுதியில், காப்பரசு ஆளுநரின் ஆட்சிக்குட்பட்ட அந்நாட்டின் பகுதியை அவர் கைப்பற்றினர். பிரிட்டனிலிருந்து எத்தகைய உதவியும் வருவதற்கு முன்பே புரட்சிக்காரர்களின் முதுகெலும்பு முறிக்கப்பட்டது.

ஆயினும், புரட்சி முடிவடைந்துவிட்டது என்று சொல்லு வதற்கு இல்லை. தோல்வியடைவோம் என்ற சோர்வினல்— நம்பிக்கையற்ற போக்கினல் கொடுஞ் செயல்களில் ஈடுபட்ட புரட்சிக்காரர்களை அடக்கியொடுக்குவதற்கும், தகுதியான தண்டனைகள் கொடுப்பதற்கும் பெரு முயற்சிகள் தேவைப் பட்டன. மேலும், அவர்கள் இறுதியில் சிதறிப்போனமை யால், அவர்களைத் தேடிக் கண்டுபிடிப்பது என்பதே பெரிய பிரச்சினையாகப் போயிற்று. இரண்டாவது மீட்புப் படை லக்னோவிற்கு அனுப்பப்பட்டமை, கலகத்தை அடக்குவதற்கு எடுத்துக்கொள்ளப்பட்ட நடவடிக்கைகளின் இரண்டாவது நிலையாகும். மீட்கப்பட்ட கோட்டைப் பாதுகாப்புப் படைக்கு அவுட்ராம் தலைவராக இருந்தார். ஆயினும், லக்னோவைத் தாக்குவதற்கு அது இன்னும் போதிய ஆற்றலற்றதாகவே இருந்தது. எனவே, அது மீண்டும் முற்றுகையிடப்பட்டது. நவம்பர் மாதத்தில் சர் கோலின் காம்பெல் இறுதியாக அதை விடுவித்தார். அதன் பிறகு, குவாலியரில் தாந்தியா தோப்பி யின் தலைமையின்கீழ் கலகம் செய்த 20,000 மனிதர்களைத் தோற்கடிக்க அப் படை சென்றது. அவர் இதுவரையில் கல்பியில் செயலற்றுக் கிடந்தார். மார்ச்சு மாதம் முதல் நாள் அவுட்ராமுடைய படைகளோடு காம்பெல் சேர்ந்து கொண்டார். அவர் லக்னோவை மீட்டார். எஞ்சியிருந்த கலகக் காரர்களை நேப்பாளத்தின் எல்லைப்புறத்திலுள்ள 'தரெய்'

காடுகளுக்கு ஓடி மறையுமாறு விரட்டியடித்தார்.[1] நானு சாகிபும் தப்பியோடியவர்களுடன் சென்றார். எல்லைப்புறக் காடுகளுக்குள்ளே சென்ற அவர், மறைந்தேபோய்விட்டார்.

நடு இந்தியாவில் நடத்திய போராட்டங்களே மூன்றாவது நிலையெனலாம். பலவகையில் புரட்சிக்காரர்கள் தலை சிறந்தவர்களாக இருந்தனர். ஆனால், அச்சமயத்தில் அவர்கள் எந்தக் காரணத்திற்காகக் கலகம் செய்தார்களோ, அந்தக் காரணம் பயனற்றுப் போயிற்று. எதைப்பற்றியும் கவலைப்படாத ஜான்சி அரசியின் அஞ்சா நெஞ்சமும், தாந்தியாவின் திறமையும், பழிமிக்க ஒரு காரணத்திற்காக நடைபெற்ற நம்பிக்கையற்ற போராட்டத்தின் இருளைப் போக்கின. 1858ஆம் ஆண்டு மார்ச்சு மாதத்தில் ஹக்கு ரோஸ், தாந்தியாவின் துணைப்படையைப் படுதோல்வி அடையச்செய்து, பின்னர் ஜான்சியைக் கைப்பற்றினார். மே மாதத்தில், குஞ்சில் (Kunch) போர் நடைபெற்றது. அப் போரில் அரசியையும் தாந்தியாவையும் குவாலியருக்குத் திரும்பியோடுமாறு செய்தனர். அவ் வெற்றியோடு இப் போராட்டம் முடிவடைந்ததைப் போன்று தோன்றியது. அரச ருடைய தனிப் படைகளை வென்று, கோட்டைத் தலைநகரை அவர்கள் பிடித்துக்கொண்டனர். இந்தச் சக்தியை அழித் தொழிப்பதற்கு இரண்டு போர்கள் நடைபெறவேண்டி இருந் தன. ஒரு போரில் ஜான்சின் அரசி, வீரனுடைய உடை அணிந்து, வீர தீரத்துடன் கடுமையாகப் போர்புரிந்து, இறுதியில் வீரமரணம் அடைந்தாள். ஜூன் மாதம், 20ஆம் நாள் குவாலியர் வீழ்ந்தது. அதனுடன் புரட்சி உண்மையிலேயே முடிவுற்றது. அதன் பிறகு சில சிறிய போர்களே நடைபெற்றன.[2] 1858ஆம் ஆண்டு, ஜூலை மாதம் 8ஆம் நாள் கானிங்கு நாட்டிலே அமைதி நிலைநாட்டப்பட்டு விட்டதாக அறிவித்தார்.

[1] இந்நிலை நெடுங்காலம் நீடிக்கப்பட்டது. சிறப்பாகக் குறிப்பிடப்பட்ட ஆறுபேர்களைத்தவிர, மற்ற தாலுக்கா தலைவர்களுடைய நிலங்களையும் பறித்துக்கொண்டதாக கானிங்கு அறிவித்தமையால், அப்பொழுது பலர் கலகம் செய்ய எழுந்தனர். பல மாதங்களுக்கு அவர்கள் கொரில்லாப் போர்முறையின் மூலம் எதிர்த்து வந்தனர்.

[2] 1859ஆம் ஆண்டில் ஏப்ரல் மாதத்தில், தாந்தியா தோப்பி நம்பிக்கைத் துரோகம் செய்யப்பட்டார். கான்பூர் படுகொலைக் குற்றத்தில் அவருக்குப் பங்கு இருந்த காரணத்திற்காக அவர் தூக்கிலிடப்பட்டார்.

நம்பிக்கையற்ற பேராற்றலுடனும் அஞ்சா நெஞ்சத்துடனும் போரிட்ட எண்ணிக்கையால் மிகப் பேரளவினரான பகைவரை, ஆங்கிலேயருடைய மிகச் சிறிய படைகள் மிகக் குறுகிய காலத்தில் தோல்வியுறச் செய்தமை என்றும் வியப்பிற்குரிய செய்தியாகும். ஆனால், இருதிறத்திலும் திரட்டப் பட்ட படைகளினாற்றல் ஒத்த மதிப்பில்லாததைப்போன்று முதற் பார்வைக்குத் தோன்றினாலும், உண்மையில் அவை பேராற்றலும் பெருந்திறனும் வாய்ந்த ஒத்த மதிப்புடையன வாகவே விளங்கின. புரட்சிக்காரர்களின் பக்கம் பருப் பொருள் சார்புடைய கருத்துகள் பெரிதும் சாதகமாக இருந்தபோதிலும், பிரிட்டிஷாரிடம் அறவுணர்வே அவர்களுக்கு ஆதரவாக இருந்தது. அவர்களுடைய அறவுணர்வுச் செல்வத்தை, பருப்பொருள் செல்வமாக மாற்றுவதற்கு அவர்களுக்குச் சிறிது காலம்தான் தேவைப்பட்டது. இவ்வாறு தங்களிடத்துக் கொண்ட தன்னம்பிக்கையும் உறுதிப்பாடும், அவர்களுடைய வீரவுணர்வும் செயற்கருஞ் செயல்களைச் செய்யுமாறு அவர்களைத் தூண்டின. கலகக் காரர்களின் உணர்ச்சிகள் எல்லாம் தங்களுடைய மனக்குறைகளை மையமாகக்கொண்டிருந்தன. அவர்களிடத்து விரிந்ததும் பரந்ததுமான குறிக்கோள்கள் ஒன்றும் இல்லாமற் போயின. அவர்கள் தங்களுக்கு என்ன பிடிக்கவில்லை என்பதை நன்கறிந் திருந்தனர். ஆனால், தாங்கள் அழிக்கும் ஒன்றனிடத்து எதை அமர்த்த விரும்பினார்கள் என்பதைப்பற்றி அவர்கள் அறிந்திருக்கவில்லை. எனவே, வெற்றி பெற்றபொழுது, அதனால் அவர்கள் ஒரு சிறு பயனும் அடைய முடியாமல் போயிற்று. தோல்வியினால் மனக்கலக்கமும் பெருந்துன்பத் தையும் அடைந்ததைத் தவிர, அவர்கள் வேறொன்றையும் அடையவில்லை. மன்னிக்க முடியாத படைத்துறைக் கொடுஞ் செயல்களைச் செய்து இருப்பதை, அவர்கள் தற்காப் பிற்காக எதிர்த்துப் போரிடும்பொழுது உணர்ந்தனர். அதனால், அவர்கள் வெற்றி பெறுவோம் என்ற நம்பிக்கை யற்றவர்களாயினர். எனினும், அவர்களுடைய எதிர்ப்பு மாவீரம் நிறைந்ததாக இருந்தது. ஆனால், அது குறிக்கோள் நோக்குடையதாக இல்லாமல், மனமுறிவை உண்டாக்கு வதாக இருந்தது. மற்றொரு நாளைக்குப் போரிடுவதற்கு அவர் களுக்கு வேறொன்றும் இல்லாமையால், அவர்கள் இறுதி வரை போரிட்டனர்; சரண் அடைந்தாலும் தங்களுக்குத் தூக்குத் தண்டனையே கிடைக்கும் என்று அவர்கள் அஞ்சிய காரணத்தினால், அவர்கள் இறுதிவரையில் வீரத்துடன் போர்புரிந்து உயிர்விட்டனர். சகரன்பூர், பரெய்லி

ஆகிய இடங்களில் கலகக்காரர்களோடு நாட்டு மக்களும் சேர்ந்து கொண்டனர். புதியதோர் இந்தியாவினைப் படைக்கவேண்டும் என்னும் அவர்களுடைய நோக்கம் அதற்குக் காரணமன்று, தனிப்பட்ட வகையில் அவர்களுக்கு இருந்துவந்த மனக்குறைகளே அதற்குக் காரணமாகும். சில முஸ்லிம்களும், நானா சாகிப்பின் குழுவினரும் சிறிதளவு அத்தகைய நோக்கமுடையவர்களாக இருந்தனர். ஆயினும், அவர்கள் முற்போக்கான கொள்கையுடையவர்களாக முன் நோக்கிச் செல்லாமல், கடந்த காலத்தைப்பற்றிக் கனவு கண்டமையால், அவர்களுடைய நிகழ்ச்சித் திட்டங்கள் ஒன்றோடொன்று மோதின. பிரிட்டிஷார் உறுதியான நற்பேறு வாய்ந்த தலைவர்களையுடையவர்களாக இருந்தனர். விறுமிக்க தேசியச் செருக்குடன், அடக்கமான ஒழுங்கு முறைகளுக்குக் கட்டுப்பட்டவர்களாக அவர்கள் இருந்தனர். நீண்ட வெற்றிப் பட்டியலையும், அவ் வெற்றியை நிலைநாட்டிப் பயன் பெறுவதற்குத் தேவையான ஆற்றலையும் அவர்கள் பெற்றிருந்தனர். மேலும் இவை யாவற்றையும்விட, தற்கால உலகில், எதிர்த்தொழிக்க முடியாத முன்னேற்றச் சக்திகளின் பிரதிநிதிகள் தாங்கள் என்ற எண்ணத்தினால், அவர்களுடைய உள்ளத்தில் ஒருவகையான நம்பிக்கை வேரூன்றி வளர்ந்து இருந்தது. இத்தகைய காரணங்களை அடிப்படையாகக் கொண்டு ஆராய்ந்து பார்ப்போமானால், அதன் முடிவினைப் புரிந்துகொள்ளுவது சிறிதும் கடினம் இல்லை. போரின் மூலமாகத்தான் ' இதற்கு முடிவு காணவேண்டும் என்ற அவல நிலை உண்டாகவேண்டுமா? பேரளவிற்குக் குருதியைக் கொட்டித்தான் இம்முடிவினைக் காணவேண்டுமா? பலருடைய கண்ணீரை ஆறுகப் பெருக்கிய பிறகுதான் இம் முடிவினைக் காணவேண்டுமா?' என்பதே இங்குக் குறிப்பிடத் தக்க கேள்விகளாகும்.

1858ஆம் ஆண்டு, வேனிற் காலத்தில், வட இந்தியா செயலற்றும் மனப்புண்களோடும் இருந்தது. படைவீரர்களின் கலகத்திற்குப் பிறகு, பழிக்குப் பழி வாங்கவேண்டும், கொடிய தண்டனைகள் கொடுக்கவேண்டும் என்ற கூப்பாட்டினைக் கானிங்கின் மதிநுட்பமும், சர் ஜான் லாரன்சின் ஆற்றலும் கட்டுப்படுத்தின. ஆனால், செய்யவேண்டியவை மிகுதியாக இருந்தன. ஜான்சி அரசியைப்போன்று, பெரும்பான்மையான கலகத்தலைவர்கள் கொலை செய்யப்பட்டனர். அல்லது நானாவைப்போலவும் தில்லியின் பகத்கானைப் போலவும் நாட்டை விட்டு மறைந்துபோயினர்; அல்லது

தாந்தியா தோப்பியைப்போல் தூக்கிலிடப்பட்டனர். பேரரசர் பகதூர்ஷா ஒருவர்தான் உயிருடன் விட்டுவைக்கப்பட்டார். ஐயுறத்தக்க சட்ட முறைப்படி, வழக்கு விசாரணை செய்யப் பட்ட பிறகு அவர் ரங்கூனுக்கு நாடு கடத்தப்பட்டார் அங்கு அவர் தம்முடைய எண்பத்தேழாம் வயதில், 1862ஆம் ஆண்டில் இயற்கையெய்தினர். முகலாயரின் குடும்பம், தன் னுடைய அரசுக்குரிய மதிப்பினை இழந்தது. தில்லியும் லக்னோவும் பையப்பைய அமைதியான அன்றாட வாழ்க்கையை நோக்கிச் சென்றுகொண்டிருந்தன. ஆனால், தில்லி, தன் னுடைய அரசோடு இதுவரை பெற்றிருந்த அரைகுறையான சுதந்தரத்தையும் இழந்தது. பஞ்சாபு மாநிலத்தோடு தில்லி இணைக்கப்பட்டது. எண்ணற்ற அரசிளங்குமரர்கள் தங்க ளுடைய உயிரையும் அரசையும் இழந்தனர். அயோத்தியைப் பறிமுதல் செய்யவேண்டும் என்னும் கானிங்கின் ஆட்சி முறைக் கொள்கை கைவிடப்படவில்லை. ஆனால், அதைச் செயற்படுத்துவதைப் புதிதாக அமர்த்தப்பட்ட, அதனுடைய தலைமை ஆணையரான மான்ட் கோமெரியின் விருப்பத்திற்கு விடப்பட்டது. திரும்ப மானியங்களை வழங்குவதன் மூலம் அதனுடைய வேகம் கட்டுப்படுத்தப்பட்டது.

இவை அனைத்தும் உடனடியாக அவ்வப் பகுதிகளில் உண்டான விளைவுகளாகும். இவற்றையடுத்துப் பெரும் முக்கியத்துவம் வாய்ந்த பல சட்டமன்றச் செயல்முறைகள் தோன்றின. இந்தியாவில் நெடுங்காலமாக ஆட்சி புரிந்து வந்த கிழக்கிந்தியக் கம்பெனியின் ஆட்சி முடிவுற்றது. இந்திய நாட்டு அரசர்களிடத்துப் புதியதொரு நோக்கோடு அரசாங்கம் தொடர்புகொள்ளத் தொடங்கியது. படைகள் திருத்திப் புதியமுறையில் அமைக்கப்பட்டன. இந்திய நாட்டின் மேன்மைமிக்க அரசுக்கும் இந்தியருக்கும் இடையே நெருங்கிய தொடர்பு உண்டாவதற்குரிய நெறிமுறைகள் பல பின்பற்றப்பட்டன. புதிய யுகம் மெல்ல இந்தியாவில் நுழையத் தொடங்கியது. அதை வரவேற்றுக் கட்டியங் கூறும் வகையில் பேரரசி விக்டோரியாவின் ஆட்சி இந்தியா விலும் நிலைநாட்டப்பட்டது. 1858ஆம் ஆண்டில், நவம்பர் மாதம் முதல் நாள் பேரரசியார் வெளியிட்ட அறிவிப்பில் புது யுகத்தினைப் புகுத்துவதற்குரிய நெறிமுறைகள் வரையறுத்துக் குறிப்பிடப்பட்டிருந்தன. தீமையிலிருந்து நன்மை தோன்ற முடியும் என்றால், இத்தகைய திட்டங்கள் அனைத்திற்கும் படை வீரர் கலகமே மூலகாரணம் எனலாம். இந்தியாவின் மக் களுக்கும் இங்கிலாந்தின் மக்களுக்குமிடையே மனவியல்பு

களில் பெரும்பிளவு தொடர்ந்து இருந்து வரலாயிற்று. இப் பிளவு கலகத்திஞல் உண்டாக்கப்படவில்லை என்பதை நாம் முன்னரே கண்டோம். இதற்கு முற்பட்ட இருபதாண்டுகளாக மனவொற்றுமையை வளர்ப்பதற்குப் பாடுபட்டோரின் முயற்சிகளைக் காட்டிலும், பிரிவினையைப் போற்றிவளர்த்த சக்திகளே மிகப் பலவாக இருந்தன. கூட்டுறவுத் தொடர்பையும் தன்ஞட்சி முறைக்குரிய அரசைப்பற்றிய நம்பிக்கையையும்விட, தாங்கள் மேம்பட்டவர்கள் என்ற உணர்வும், சமுதாயச் செருக்கும் மிகுதியாக ஆங்கிலேயரிடையே இருந்து வந்தமையால் உண்மையான நட்புறவு வளரமுடியாமல் போயிற்று. பிரிட்டிஷாரிடத்து இந்த உணர்ச்சி, கலகத்திஞல் உண்டான அச்சத்திஞல் வலிமையுற்று விளங்கியது. தாங்கள் புரட்சியில் தோல்வியுற்றமையாலும் பழிவாங்கப்பட்டமையாலும் இந்தியர்கள் உள்ளங்களில் அதஞல் உண்டான வெறுப்புணர்ச்சி ஆழ வேரூன்றிவிட்டது. இந்தப் பொருளில் புரட்சி ஒரு பேரழிவை உண்டாக்கியது என்றே கூறலாம். அதஞல் உண்டான மனப் புண்ணினைக் காலம்தான் ஆற்ற வேண்டும். முன்னேற்றச் சக்திகளாகிய சீர்திருத்தமும் கூட்டுறவும் முற்றிலும் அழிந்தொழியாமை மகிழ்ச்சிக்குரிய செய்தியாகும். ஆஞல், அவை உணர்ச்சியெனும் புகையிஞல் மங்கலாகத் தோன்றின. அவற்றிற்குக் கடுமையான தடையுண்டாயிற்று. ஆஞல், அது ஒரு கடைசியாகத் தங்கும் இடமாக அமையவில்லை ; அதன் வேகத்தைச் சிறிது தடுத்து நிறுத்துவதாக அது அமைந்தது. அப் புரட்சிக்குப் பின்னர் ஐம்பதாண்டுகள் நடைபெற்ற நிகழ்ச்சிகளால் இவ்வுண்மை தெரியவருகிறது.

## ஆதாரங்கள்

இந்தியப் படைவீரர்களின் கலகத்தைப் பற்றிய ஒப்பற்ற ஒரே தொகுதியாக வெளிவந்துள்ள நூல் T. R. E. ஹோல்ம்ஸ் என்பவர் எழுதியுள்ள 'History of the Indian Mutiny' *(1883, 5ஆம் பதிப்பு; 1904)* என்பதாகும். மிகப் பேரளவில் **J. W. Kaye and G. B. Malleson** ஆகிய இருவரும் சேர்ந்து 'History of Indian Mutiny' என்னும் *(பதி. லாங்குமென்ஸ், 6 தொகுதி; 1897)* நூலை எழுதியுள்ளனர். முதலிரண்டு தொகுதிகளை **J. W.** கேயேவும், அடுத்த மூன்று தொகுதிகளை **G. B.** மல்லீசனும் எழுதியுள்ளனர். ஆருவது தொகுதி அந் நூலினை முற்றுப்பெறச் செய்யும் வகையில் பொருளடக்கம் முதலியவற்ருேடு முடிவுறுகிறது. இதற்கு முன்பு பல நூல்களில் பதிப்பிக்கப்பட்ட செய்திகள் அனைத்தையும் திரட்டி, Sri G. W. Forrest என்பவர், 'History of Indian Mutiny'

(3 தொகுதிகள், 1904—12) என்னும் நூலாக வெளியிட்டுள்ளார். பதிப்பிக்கப்பட்ட பத்திரங்களை கேம்பிரிட்ஜ் இந்திய வரலாற்றில் காணலாம்.

புரட்சியைப்பற்றி எழுதப்பட்ட எண்ணற்ற ஆராய்ச்சி நூல்கள், தனிவரைவு நூல்கள் முதலியவற்றுள் மிக முக்கியமான சிலவற்றைமட்டும் நான் இங்குக் குறிப்பிடுகிறேன். அவற்றுள் முக்கியமானவை இந்திய ஆட்சியாளர் வரிசையில் வெளிவந்துள்ள (1) Sir S. H. Cunnigham: 'Cauning' (1903), (2) Sir C. V. Aitcheson: 'Lord Lawrence' (1905), (3) Sir A. Colvin: 'Colvin' (1912) என்னும் நூல்களாகும்.

படைத்துறைச் செய்திகளை அறிவதற்கு கர்னல் G. B. மல்லீசனுடைய நூல் சிறந்த ஆதாரங்கள் நிறைந்ததாகும். எல்லைமீறிய கொடுஞ்செயல்களைப்பற்றி இ. தாம்ப்சன் எழுதியுள்ள, 'The Other Side of the Medal' (1925) என்னும் நூலில் விரிவாகக் காணலாம். புரட்சிக்குரிய காரணங்களை சையத்து அகமது கான் என்பவர், 'The Causes of the Indian Revolt' (காசி, 1873) என்னும் நூலில் தெளிவாக வரையறுத்துள்ளார்.

கான்பூரைப்பற்றி அறிவதற்கு G. O. டிரெவெலியன் எழுதியுள்ள 'Cawnpore' என்னும் நூலைக் (1905) காண்க. இந்திய மக்கள் பக்கம் தில்லியைப்பற்றி அறிய இந் நூலாசிரியரின் (T. G. P. Spear) 'Twilight of the Mughuls' என்னும் நூலையும் (1951), லக்னௌவினைப்பற்றி அறிய, M. Joyce எழுதியுள்ள 'Ordeal at Luchnow' என்னும் நூலையும் (1938), பஞ்சாபைப்பற்றி அறிய Bosworth Smith எழுதியுள்ள 'Life of Lord Lawrence' என்னும் நூலையும் பார்க்க. 1957ஆம் ஆண்டில் தரமான மறுமதிப்பீடு ஒன்றை S. N சென் என்பவர் '1857' என்னும் தலைப்பில் (ஓர் ஆராய்ச்சி நூல்) எழுதியுள்ளார். ஆர். சி. மஜூம்தார் என்பவர் எழுதியுள்ள, 'The Sepoy Mutiny and Revolt of 1857' என்னும் நூலில் சில சுவைமிக்க நிகழ்ச்சிகளுக்குப் பல புதிய ஆதாரங்களை அவர் கையாண்டுள்ளார்.

# கலைச் சொற்கள்

## (ஆங்கிலம் — தமிழ்)

Administrative Law — ஆட்சித்துறைச் சட்டம்
Agent General — அரசியல் பேராள் தலைவர்
Anarchy — அரசழிவு
Annals — ஆண்டு வரலாறு
Artisan — கம்மியர், தொழிற்கலைஞர்
Authoritarianism — ஆட்சி ஆதிக்கக் கொள்கை
Buffer State — இடைப்படு நாடு
Casting Vote — முடிவு வாக்கு
Circuit Court — சுற்றுலா நீதிமன்றம்
Civil Court — பொருள் வழக்கு நீதிமன்றம்
Civil Liberty — மக்களுரிமை
Clemency — அருளிரக்கப் பண்பாளர்
Confederation — நாடுகளின் கூட்டிணைப்பு
Craftsman — கைத்தொழில் வினைஞர்
Criminal Court — குற்றவியல் நீதிமன்றம்
Crown Colony — அரசாள் குடியேற்ற நாடு
Doctrine of Lapse — நாடிழக்கும் கொள்கை
Esprit de Corpse — குழு மதிப்புணர்ச்சி
Formative Period — உருவாகி வளர்ச்சியுறும் காலம்
Free trade — தடையிலா வாணிகம்
Geopolitics — நிலத்தத்துவ அரசியல்
Hierarchy — படிநிலை அமைப்பு
Humanism — மனிதம்
Humanitarianism — மக்களினநலக் கோட்பாடு
Indian Penal Code — இந்தியத் தண்டனை விதித் தொகுப்பு
Inner Council — உடன்கூட்டத்தார்
Isolationism — தனித்தன்மைக் கோட்பாடு
Laissez-faire — அரசியல் கட்டுப்பாடற்ற வாணிகக் கோட்பாடு

| | | |
|---|---|---|
| Licence | — | உரிமம் |
| Loyalty | — | அரசப்பற்று |
| Managing Agency System | — | நிருவாகப் பதிலாளி முறை |
| Mandates | — | அதிகாரக் கட்டளைகள் |
| Martyrdom | — | உயிர்த்தியாகம் |
| Optimism | — | இன்மகிழ்நலக் கொள்கை |
| Permanent Settlement | — | நிலையான நிலவரித் திட்டம் |
| Quit-rent | — | விடுவரி |
| Realism | — | செயல்முறைக் கோட்பாடு |
| Regency | — | ஆட்பேராட்சி |
| Regent | — | பகர ஆட்சியாளர் |
| Regulating Act | — | ஒழுங்குமுறைச் சட்டம் |
| Resident | — | துணைக்காப்பரசின் ஆளுநர் |
| Resources | — | வள ஆதாரம் |
| Revenue | — | அரசிறை, வருவாய் |
| Rule of Law | — | சட்ட நீதி |
| Ryotwari System | — | அரசிறைக் குடிமுறை |
| Separation of Powers | — | அதிகாரப் பிரிவினை |
| Serfs | — | நிலச்சார்புடைய அடிமை ஊழியர் |
| States | — | தனியரசுகள் |
| Subsidiary Treaty | — | துணைப்படைத் திட்ட உடன்படிக்கை |
| Supreme Court | — | உச்ச நீதிமன்றம் |
| Transit duties | — | சரக்குகளின் புடைபெயர்ச்சி வரி |
| Unitarianism | — | இறைவகையில் தனி ஒருமைக் கோட்பாடு |
| Viceroy | — | அரசப் பிரதிநிதி |
| Working Capital | — | நடப்பு முதல் |

# கலைச் சொற்கள்

## (தமிழ் — ஆங்கிலம்)

| | | |
|---|---|---|
| அதிகாரக் கட்டளைகள் | — | Mandates |
| அதிகாரப் பிரிவினை | — | Separation of Powers |
| அரசப்பற்று | — | Loyalty |
| அரசப் பிரதிநிதி | — | Viceroy |
| அரசழிவு | — | Anarchy |
| அரசியல் பேராள் தலைவர் | — | Agent General |
| அரசியல் கட்டுப்பாடற்ற வாணிகம் | — | Laissez-faire |
| அரசிறை | — | Revenue |
| அரசிறைக் குடிமுறை | — | Ryotwari System |
| அரசாள் குடியேற்ற நாடு | — | Crown Colony |
| அருளிரக்கப் பண்பாளர் | — | Clemency |
| ஆட்சி ஆதிக்கக் கொள்கை | — | Authoritarianism |
| ஆட்சித்துறைச் சட்டம் | — | Administrative Law |
| ஆட்பேராட்சி | — | Regency |
| ஆண்டு வரலாறு | — | Annals |
| இடைப்படு நாடு | — | Buffer State |
| இந்தியத் தண்டனை விதித் தொகுப்பு | — | Indian Penal Code |
| இறைவகையில் தனி ஒருமைக் கோட்பாடு | — | Unitarianism |
| இன்மகிழ்நலக் கொள்கை | — | Optimism |
| உச்ச நீதிமன்றம் | — | Supreme Court |
| உடன்கூட்டத்தார் | — | Inner Council |
| உயிர்த்தியாகம் | — | Martyrdom |
| உரிமம் | — | Licence |
| உருவாகி வளர்ச்சியுறும் காலம் | — | Formative Period |
| ஒழுங்குமுறைச் சட்டம் | — | Regulating Act |
| முழு மதிப்புணர்ச்சி | — | Esprit de Corpse |
| குற்றவியல் நீதிமன்றம் | — | Criminal Court |

| | | |
|---|---|---|
| கைத்தொழில் வினைஞர் | — | Craftsman |
| சட்டநீதி | — | Rule of Law |
| சரக்குகளின் புடைபெயர்ச்சி வரி | — | Transit duties |
| சுற்றுலா நீதிமன்றம் | — | Circuit Court |
| செயல்முறைக் கோட்பாடு | — | Realism |
| தனித்தன்மைக் கோட்பாடு | — | Isolationism |
| தனியரசுகள் | — | States |
| துணைக்காப்பரசின் ஆளுநர் | — | Resident |
| துணைப்படைத் திட்ட உடன்படிக்கை | — | Subsidiary Treaty |
| தொழிற்கலைஞர் | — | Artisan |
| நடப்பு முதல் | — | Working Capital |
| நாடிழக்கும் கொள்கை | — | Doctrine of Lapse |
| நாடுகளின் கூட்டிணைப்பு | — | Confederation |
| நிருவாகப் பதிலாளிமுறை | — | Managing Agency System |
| நிலச்சார்புடைய அடிமை ஊழியர் | — | Serfs |
| நிலத்தத்துவ அரசியல் | — | Geopolitics |
| நிலையான நிலவரித் திட்டம் | — | Permanent Settlement |
| பகர ஆட்சியாளர் | — | Regent |
| படிநிலை அமைப்பு | — | Hierarchy |
| பொருள்வழக்கு நீதிமன்றம் | — | Civil Court |
| மக்களினலக் கோட்பாடு | — | Humanitarianism |
| மக்களுரிமை | — | Civil Liberties |
| மனிதம் | — | Humanism |
| முடிவு வாக்கு | — | Casting Vote |
| வருவாய் | — | Revenue |
| வள ஆதாரம் | — | Resources |
| விடுவரி | — | Quit Rent |

# பொருட்குறிப்பு அகராதி

ச

ம

**ய**



**ர**



**ல**

## தமிழ் வெளியீட்டுக் கழகம்

சென்னை - 9

**1966வரை வெளியிட்டுள்ள நூல்கள்**

**பொருளாதாரம்**

| | | | |
|---|---|---|---|
| *1. | பொருளாதாரம்-II | சி. வேலாயுதம் | 9—00 |
| 2. | புதுமைப் பொருளாதாரக் கூறுகள் | திருமதி ஆர். தாமரஜாட்சி | 12—00 |
| 3. | பொருளாதாரம் ஓர் அறிமுகம்-I | தி. சி. மோகன் | 12—00 |
| 4. | ,, II | எம். ஏ. அபூர்வசாமி, பி. வி. ஸ்ரீநிவாசன் | 10—75 |
| 5. | பொருளாதாரக் கோட்பாடு வளர்ந்த வரலாறு | க. முத்தையன் | 7—00 |
| *6. | பணவியலும் பாங்கியலும்-II | சி. வேலாயுதம் | 11—50 |
| 7. | நவீன பாங்கு இயல் | க. வெற்றிவேல் | 7—50 |
| *8. | இந்தியச் செலாவணியும் பாங்கு முறையும் | பி. வி. ஸ்ரீநிவாசன் | 5—50 |
| *9. | அரசாங்க நிதி இயல் | அர. சேஷாசலம் | 4—75 |
| 10. | இந்தியப் பொருளியல்-I | எம். பாலசுப்பிரமணியன் | 10—00 |
| 11. | ,, II | எம். லூர்துநாதன் | 4—25 |
| 12. | நமது பொருளாதாரப் பிரச்சினை-I | சி. சுந்தரராஜன் | 10—75 |
| 13. | ,, II | எஸ். குழந்தைநாதன் | 10—50 |
| 14. | இங்கிலாந்தின் பொருளாதார வரலாறு-I | கி. சீ. இராமசாமி | 6—00 |
| 15. | ,, II | ,, | 6—00 |

* மூல நூல் (Original Book)

**பொருளாதாரம்—தொடர்ச்சி**

| | | | |
|---|---|---|---|
| 16. | அமெரிக்காவின் நவீன பொருளாதார வளர்ச்சி | தி. சி. மோகன் | 5—00 |
| 17. | அமெரிக்கப் பொருளாதார வரலாறு-I | மு. க. சுப்பிரமணியம் | 11—00 |
| 18. | ,, II | பி. வி. சீனிவாசன் | 6—00 |
| 19. | ,, III | ,, | 6—50 |
| 20. | அரசாங்க நிதியியலின் பொருளாதாரம்-I | மா. குமாரசாமி | 10—00 |
| 21. | ,, II | அர. சேஷாசலம் | 9—50 |
| 22. | இந்தியாவின் பொருளாதார வளர்ச்சி-I | தே. வேலப்பன் | 10—00 |
| 23. | ,, II | ஜி. சிதம்பரம் | 8—00 |
| 24. | பணம்—சிறு விளக்கம் | கோ. இராதாகிருஷ்ணன் | 10—00 |
| *25. | வணிக இயலின் தத்துவங்கள் | கு. ஆளுடைய பிள்ளை | 9—50 |
| 26. | பத்தொன்பதாம் நூற்றுண்டில் கிரேட் பிரிட்டனில் தொழில் வாணிபப் புரட்சி | சு. ரா. கறுப்பண்ணன் | 11—00 |
| 27. | பென்ஹாம் பொருளாதாரம்-I | ஏ. குழந்தை | 11—00 |
| 28. | ,, II | எஸ். குழந்தைநாதன் | 7—00 |
| *29. | வரவுசெலவுத் திட்டம் | ஆர். ரங்காச்சாரி | 6—00 |

**வரலாறு**

| | | | |
|---|---|---|---|
| *30. | பிரிட்டன் வரலாறு-I | கி. ர. அனுமந்தன் | 10—00 |
| *31. | ,, II | ,, | 9—75 |
| *32. | ஐரோப்பிய வரலாறு-I | டி. வி. சொக்கப்பா | 4—50 |
| 33. | ஐரோப்பா—கடந்த ஐந்து நூற்றுண்டு காலச் சரித்திரம் | வை. விருத்தகிரீசன் | 15—00 |
| 34. | இங்கிலாந்து வரலாறு-I | இரா. அண்ணுமலை | 13—00 |

| | | | |
|---|---|---|---|
| 35. | ,, II | பா. மாணிக்கவேலு | 13—00 |
| 36. | ,, III | என். ஜே. ராஜகோபால் | 8—00 |
| 37. | ,, IV | ,, | 8—00 |
| 38. | இங்கிலாந்தின் வரலாறு-I | க. த. திருநாவுக்கரசு | 15—00 |
| 39. | ,, II | எம். எக்ஸ். மிராண்டா | 8—00 |
| 40. | ,, III | ,, | 5—00 |
| 41. | இந்தியாவின் சிறப்பு வரலாறு-I | தி. வெ. குப்புசாமி | 7—50 |
| 42. | ,, II | ஏ. உஸ்மான் ஷெரீப் | 9—00 |
| 43. | ,, III | அ. பாண்டுரங்கன் | 11—00 |
| 44. | கிரேக்க நாட்டு வரலாறு-I | சைமன் ஐ. எஸ். பாக்கியநாதன் | 7—50 |
| 45. | ,, II | ,, | 7—00 |
| 46. | ,, III | பி. இராமானுஜம் தேவதாஸ் | 7—75 |

## அரசியல்

| | | | |
|---|---|---|---|
| *47. | இந்திய அரசியலமைப்பு | வீ. கண்ணையா | 4—75 |
| 48. | அரசியலுக்கு ஓர் அறிமுகம் | டி. செல்லப்பா | 8—50 |
| 49. | தற்கால அரசியலமைப்புகள் | மோ. வள்ளுவன் கிளாரன்சு | 8—50 |
| 50. | பன்னாட்டு அரசியல்-I | திருமதி நூர்ஜஹான் பாவா | 16—00 |
| 51. | பொதுத்துறை ஆட்சி இயல்-I | வீ. கண்ணையா | 9—00 |
| 52. | ,, II | அ. ஜெகதீசன் | 7—25 |
| 53. | பொதுத்துறை ஆட்சியியலுக்கு ஓர் அறிமுகம்-I | வீ. கண்ணையா | 7—50 |
| 54. | ,, II | டி. செல்லப்பா | 7—50 |

*மூல நூல் (Original Book)

**உளவியல்**

55. குழந்தை உளவியல்-I ... ... கி. ர. அப்புள்ளாச்சாரி ... 8—00
56. ,, II ... ... ,, ... 7—00
57. உட்கவர் மனம் ... ... சி. ந, வைத்தீஸ்வரன் ... 7—00
58. இளையோர் உளவியல்-I ... ... தி. இரா. அரங்கராசன் ... 12—00
59. ,, II ... ,, .... 9—00
60. சமூக உளவியல் ... ... என். வேதமணி மானுவேல் ... 9—25
61. பிறழ்நிலை உளவியல் ... ... அ. பெசன்ட் கிரிப்பர்ராஜ் ... 11—00
62. பித்தரின் உள்ளம் ... ... ,, ... 3—00
*63. குமர உள்ளம் ... ... டாக்டர் மு. அறம் ... 6—25

**தத்துவம்**

64. இந்து சமயத் தத்துவம் ... ... ஞா. ராஜாபகதூர் ... 5—50
*65. அறிவு ஆராய்ச்சி இயல் ... ... ஆர். இராமானுஜாச்சாரி ... 3—50
*66. மேலைநாட்டுத் தத்துவம் ... ... ஆர். எஸ். தேசிகன ... 3—50
67. அத்துவித தத்துவம் ... ... ஜி. எம். காந்தி ... 6—50
68. ஆங்கிலேயப் பயன்வழிக் கொள்கையினர் ... மோ. வள்ளுவன் கிளாரன்சு ... 5—50
69. இந்தியத் தத்துவம் ... ... வ. அ. தேவசேனபதி, பா. நா. சண்முகசுந்தரம் ... 3—50

**அறவியல்**

70. அறவியல்—ஓர் அறிமுகம் ... ... கோ. மோ. காந்தி ... 8—50

**அளவையியல்**

71. அளவை இயல்—தொடக்க நூல் ... கி, ர. அப்புள்ளாச்சாரி ... 2—50

**மானிடவியல்**

| | | | |
|---|---|---|---|
| *72. | மானிடவியல் | ம. சு. கோபாலகிருஷ்ணன் | 4—75 |
| 73. | பண்பாட்டுக் கோலங்கள் | கி. பூ. சுப்பிரமணியன் | 5—50 |
| 74. | இந்தியாவில் குடியானவர் வாழ்க்கை | எஸ். இலட்சுமி | 3—50 |

**சமூகவியல்**

| | | | |
|---|---|---|---|
| 75. | சமூகவியலின் அடிப்படைக் கோட்பாடுகள் | ஜெ. நாராயணன் | 10—00 |

**புவியியல்**

| | | | |
|---|---|---|---|
| 76. | ஆசியா-I | கொ. சேஷ. நரசிம்மன் | 9—50 |
| 77. | ,, II | ,, | 8—75 |
| 78. | ஐரோப்பாக் கண்டத்தின் புவியியல் | ஏ. எஸ். நாராயணன் | 8—50 |
| *79. | தென்கிழக்கு ஆசியா | ஜி. கிருஷ்ணமூர்த்தி | 8—50 |
| *80. | வட அமெரிக்கா | குமாரி இரா. அலமேலு | 8—25 |
| *81. | தென் அமெரிக்கா | எம். என். பத்மநாபன் | 9—00 |
| *82. | தென் கண்டங்கள்—ஆஸ்திரேலியா | திருமதி எச். நியூமன் | 4—00 |
| *83. | ,, —ஆஃபிரிக்கா | எஸ். முத்துக்கிருஷ்ணக் கரையாளர் | 3—25 |
| *84. | புவிப்புறவியல்–II | கா. அனந்தபத்மநாபன் | 6—00 |
| *85. | செய்முறைப் புவியியல் | சு. ஜெயச்சந்திரன் | 9—00 |
| *86. | மக்கட் பரப்பியல் | வி. எஸ். அனந்தபத்மநாபன் | 6—25 |
| *87. | சமுத்திரவியல் | கோ. இராமசாமி | 6—50 |
| 88. | காலநிலை இயல்–I | கொ. சேஷ. நரசிம்மன் | 10—00 |
| 89. | ,, II | ,, | 5—00 |
| 90. | வளியியலுக்கு ஓர் அறிமுகம் | கோ. இராமசாமி | 11—00 |
| *91. | புவி அமைப்பு இயல் | சி. விசுவநாதன் | 4—75 |

*மூல நூல் (Original Book)

**புள்ளியியல்**



**உயர் கணிதம்**



**விலங்கியல்**



**பௌதிகவியல்**



**விஞ்ஞானம்**

| | | | |
|---|---|---|---|
| *105. | தாவரம்—வாழ்வும் வரலாறும் ... | ... டாக்டர் கு. சீனிவாசன் | ... 8—00 |
| *106. | கரும்பு ... | ... கு. பெரியசாமி | ... 4—00 |

**மருத்துவம்**

| | | | |
|---|---|---|---|
| *107. | நீரிழிவு-க்ஷயரோகம் ... | ... டாக்டர் ஜி. வேங்கடசாமி, டாக்டர் ஏ. கதிரேசன் | ... 2—50 |
| 108. | மகப்பேறும் மாதர் நோயும் ... | ... டாக்டர் (குமாரி) மணிமேகலை | ... 8—25 |
| *109. | பாக்டீரியா ... | ... சு. சுந்தரம் | ... 2—50 |

**பொறியியல்**

| | | | |
|---|---|---|---|
| 110. | நீங்களே வீட்டைக் கட்டலாம் ... | ... கே. வி. கிருஷ்ணராஜ், சி. ஆர். சுப்பிரமணியம், ஆர். இராமசாமி, கே. வேணுகோபால் | ... 8—50 |

**சட்டம்**

| | | | |
|---|---|---|---|
| *111. | குற்றவியல் சட்டம் ... | ... எம். சண்முகசுப்பிரமணியம் | ... 10—00 |

**பொது நூல்கள்**

| | | | |
|---|---|---|---|
| 112. | மகாத்மா காந்தி ... | ... சரஸ்வதி தங்கையன் | ... 3—25 |
| 113. | விவசாயப் புரட்சி ... | ... வி. கார்த்திகேயன் | ... 8—00 |
| 114. | சேமக் கை-நூல் ... | ... ஆ. சுப்பிரமணியம் | ... 2—50 |
| *115. | முற்காலச் சோழர் கலையும் சிற்பமும் | ... எஸ். ஆர். பாலசுப்பிரமணியம் | ... 9—00 |
| *116. | உணவும் ஊட்டமும் ... | ... தி. வேங்கடகிருஷ்ணய்யங்கார் | ... 4—50 |

*மூல நூல் (Original Book)

